# வளர்ச்சிப் பொருளாதாரம்

தமிழாக்கம் :

N. S. பாலசுப்பிரமணியன்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# வளர்ச்சிப் பொருளாதாரம்

ஆசிரியர் :

டாக்டர். டி. பிரைட்சிங்

தமிழாக்கம் :

ந. சி. பாலசுப்பிரமணியன்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ.) வரிசை எண் — 670

# வளர்ச்சிப் பொருளாதாரம்

ஆசிரியர் :
டாக்டர் டி. பிரைட்சிங்

தமிழாக்கம் :
ந. சி. பாலசுப்பிரமணியன், எம்.ஏ.,
பொருளாதாரப் பேராசிரியர்,
நாடார் மகாசன சங்கம் ச. வெள்ளைச்சாமி
நாடார் கல்லூரி,
மதுரை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—December, 1975

T.N.T.B.S. (C.P.) No. 670



# ECONOMICS OF DEVELOPMENT

D. BRIGHT SINGH

*Translated by*

N. S. BALASUBRAMANIAM

**Price Rs. 14-70**

This Adoptation is published dy arrangement with M/s. Asia Publishing House, Calicut Street, Ballard Estate, Bombay.

Published by the Tamilnadu Text-book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by*

ERIEETI ACHAGAM,
32/1, Murugappa Mudali Street,
Madras-600007.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந்தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்புவகுப்புவரை மாணவர்கள் தங்கள்பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம் பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும், சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், மெய்ப்பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள் மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'வளர்ச்சிப் பொருளாதாரம்' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 670 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 05 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், இவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ் எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும்நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# தோற்றுவாய்

ஆடம் ஸ்மித் காலத்திலிருந்தே பொருளாதார வளர்ச்சி, தேக்கம், நாட்டுப் பொருளாதாரங்களின் வீழ்ச்சி ஆகியவைகளைப்பற்றிய சிக்கல்கள் பொருளியற் புலவர்களின் சிந்தனையைக் கவர்ந்தவைகளாகவே இருந்தாலும், பொருளாதார முன்னேற்றத்தைப்பற்றிப் புரிந்துகொள்ளுதல், அதனுடைய பலவிதமான பகுதிகளைப்பற்றிய பகுத்தாய்வுகளைப் புரிந்துகொள்ளுதல் என்பதற்கு அண்மைக் காலத்தில் கவனமும் திறமையும் செலுத்தப்படுவது போன்று வேறு எப்போதுமே செலுத்தப்பட்டதில்லை. பொருளாதாரப் பெருக்கத்தின் போக்குகளையும் சிக்கல்களையும் பற்றி ஆராய்தல், கோட்பாடுகள், நடைமுறை ஆகியவைகளின் மகிழ்ச்சியானதொரு கலவையையும், பொருளாதார இயல், கைகோள், பொருளாதாரம் ஆகியவைகளின் மகிழ்ச்சியானதொரு கலவையையும் உள்ளார்ந்திருக்கிறது. இயலின் நுணுக்கங்களும், அதனுல் விளையும் மிகப்பரந்த பகுத்தாய்விற்கான வாய்ப்புகளும் கோட்பாட்டு நிபுணர்களை மிகவும் கவர்ந்திருக்கின்றன. அதே நேரத்தில் எண்ணிக்கையின்பாற்பட்ட பகுதியில் ஆராய்சிச்க்கான பரந்த பெரும் வாய்ப்புகள் ஆராய்ச்சிப் பகுதிகளுக்கும் முதன்மைப் புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதற்கும் அதிகமான ஆராய்ச்சியாளர்களைக் கவர்ந்திருக்கின்றன. அதே நேரத்தில் பொருளாதார வளர்ச்சித் திட்டங்களுக்கு அடிப்படையாக விளங்கக் கூடிய அறிவியலடிப்படையிலான அறிவு வளர்ச்சியைப் பெறுவதில் பொருளாதாரத்திட்டமிடுபவர்களும், கொள்கை வகுப்போரும்பொருளியற் புலவர்களின் முடிவுகளின் மீதும், கண்டுபிடிப்புகளின் மீதும் மென்மேலும் அதிகரித்துவரும் ஆர்வத்துடன் கவனம் செலுத்துகிறார்கள்.

பொருளாதார முன்னேற்றம் என்பதைப் பற்றியும் பொருளாதார வளர்ச்சி என்பதைப் பற்றியும் பேரளவிலான அறிவுத்

தொகுதித் திரட்சியைப் பொருளியற் புலவர்கள், புள்ளியியல் நிபுணர்கள் ஆகியோரின் உழைப்புத் தோற்றுவித்திருக்கிறது. இந்த இயலில் தோன்றக்கூடிய அண்மைக்காலக் கருத்துகள் எல்லாவற்றையும் முழு அளவில் தெரிந்துகொள்ளுதல் அல்லது மிகவும் முக்கியமானவைகளை மட்டுமாவது தெரிந்துகொள்ளுதல் என்பது யாருக்குமே முடியாமல் போகுமளவிற்கு இவ்வியலில் புதியபுதிய நூல்கள் மிகவும் விரைவாக வெளிவந்துகொண்டே இருக்கின்றன புகழும், பெரும் புலமையும் பெற்றுள்ள தற்காலப் பொருளாதாரப் புலவர்களின் கோட்பாட்டியலான பகுத் தாய்வுகள் ஒருபுறம் பெருமளவில் கிடைக்கின்றன. அதே நேரத்தில் நாட்டுவருமானம், சேமிப்பு, முதலீடு, மக்கள்தொகை, வேலைநிலை, வணிகம், போக்குவரத்து வியாபாரம், தொழில் உற்பத்தி, வேளாண்மை உற்பத்தி மற்றும் இவைபோன்ற பல் வேறு கருத்துகளையும்பற்றி நாட்டு அரசாங்கத்தின் ஆதரவாலும், பொதுக்கழகங்களின் ஆதரவாலும் நடைபெற்றுவரும் பல நிலையங்களில் பணிபுரியும் நிபுணர்கள் மூலமும், உலக வங்கி, ஐக்கிய நாடுகள் சபை போன்ற பன்னாட்டு நிலையங்களின் ஆதரவால் நடைபெற்றுவரும் பல நிலையங்களில் பணிபுரியும் நிபுணர்கள் மூலமும் ஏராளமான புள்ளிவிவரச்செய்திகள் கிடைக் கின்றன. இது தவிர, அண்மை ஆண்டுகளில் சமுதாய இயல் நிபுணர்களும் இத் துறையில் புகுந்து, உலகில் உள்ள ஏழ்மை நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடைகளாக இருக்கும் சமுதாய, நிலையக் காரணிகளைப்பற்றிய நமது அறிவு விரிவடைவதற்கு மிகவும் முக்கியமான பங்காற்றியிருக்கிறார்கள்.

நிபுணர் ஒருவர் குறிப்பிட்டதொரு நாட்டைப்பற்றி ஆர்வம் உள்ளவராக இருக்கும்போது அந்த நாட்டின் பொருளாதார வளர்ச்சிச்சிக்கலை மிக நல்ல முறையில் ஆராய்வதற்குப் பொருளா தார முன்னேற்றம் என்ற இயலில் கோட்பாட்டு அறிவில் தோன்றி யுள்ள குறிப்பிடத்தக்க வளர்ச்சியும், உலகில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய பல பகுதிகளைப் பற்றியும் கிடைக்கும் ஏராளமான புள்ளிவிவரச் செய்திகளும் அவருக்குப் பெரிதும் உதவுகின்றன. சிக்கலின் எல்லா விவரங்களையும் நன்கு புரிந்துகொள்வதில் ஏறத்தாழ 15 ஆண்டுகளுக்கு முன்பிருந்த நிபுணர் ஒருவரைக் காட்டிலும் இன்றுள்ள நிபுணர் மிகவும் சாதகமானதொரு நிலையில் இருக்கிறார் மேலும், உள்ளார்ந்திருக்கும் சிக்கல்களை ஊடுருவிப் பார்ப்பதிலும் அவைகளின் உண்மையான அடிப் படையில் அவைகளை ஆராய்ந்துபார்ப்பதிலும் பொருளாதாரப் பின்தங்கிய நிலையின் உண்மையான காரணங்களை விளக்குவதிலும் பொருளாதாரத் தேக்க நிலையிலிருந்து ஒரு நாடு விடுபடுவதற்குத்

தேவையான வழிமுறைகளை யெல்லாம் வகுத்துத் தருவதிலும் அவர் மிகுதியான தகுதி படைத்தவராக இருக்கிறார். தங்கள் நாடுகளின் பொருளாதாரச் சிக்கல்களைப்பற்றியும் பொருளாதார நன்னிலையைப் பெறுவதற்காக வகுக்கப்படும் கொள்கைகளையும் அறிந்துகொள்வதில் மாணவர்களும் ஒரு சில பொதுமக்களும் பேரார்வம் உள்ளவர்களாக இருக்கிறார்கள். ஆனால், இத்தகைய வர்களுக்கு ஏராளமாகக் கிடைக்கும் இத்தகைய வெளியிடப்பட்ட செய்திகளைப் படித்தறிந்துகொள்வதற்கு முடிவதும் இல்லை; காலமும் இல்லை. அத்தகைய வகையைச் சார்ந்த மக்களுக்காகவே இந்நூல் அமைக்கப்பட்டிருக்கிறது. பொருளாதார இயலை நுணுகிக் கற்றறிந்த நிபுணர்களான தற்கால ஆசிரியர்களின் நூல்களி லிருந்து பெரும் பகுதியை நான் பயன்படுத்தியிருக்கிறேன். ஆனால், முடிந்த வரையில் அவர்களின் கருத்துகளையும் முடிவு களையும் இந்தியப் பொருளாதாரத்தின் பின்னணியிலேயே ஆராய்வதற்கு நான் முயன்றிருக்கிறேன். குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த நாடுகளின் பொருளாதாரச் சிக்கல்களில் ஓரளவுக்கான ஒருமைத் தன்மை இருந்தாலும்கூட, அடிப்படைச் சிக்கல் களிலும் குறிக்கோள்களிலும் அதிகமான அளவிலான ஒற்றுமை யும் காணப்படுகிறது. மற்றக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் எதிர்நோக்கியுள்ள முன்னேற்றச் சிக்கல்களையும் அத்தகைய சிக்கல்களைத் தீர்ப்பதற்கு அவைகள் கையாளும் முறைகளையும் எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் நான் ஒப்பிட்டு மதிப் பிட்டிருக்கிறேன்.

இந் நூல் நான்கு பகுதிகளைக் கொண்டிருக்கிறது. முதல் இரு அத்தியாயங்கள் முன்னுரைபோல் அமைந்திருக்கின்றன. வளர்ச்சியடைந்த பொருளாதாரங்களென்றும், குறைந்த வளர்ச்சி யுடைய பொருளாதாரங்கள் என்றும் குறிப்பிடப்படுபவை களுக்கிடையேயுள்ள வேறுபாடுகளை முதல் அத்தியாயம் விளக்கு கிறது. இரண்டாம் அத்தியாயம் இப் பொருளாதார வளர்ச்சிக் கான கோட்பாடுகளின் தொகுப்புரையைக் கொடுக்கிறது. மூன்றும் நான்காம் அத்தியாயங்கள் சமுதாய, நிலையத் தடைகள், மக்கள் அழுத்தம், மூலதனத் திரட்சிச் சிக்கல்கள், சேமிப்பின் சிக்கல்கள், முதலீட்டு முறைத் தேர்வு போன்ற பொருளாதார முன்னேற்றத்தின் சில முக்கியமான சிக்கல்களை விளக்குகின்றன. மூன்றுவது பகுதி, பணவாக்கக் கொள்கை, வரிக் கொள்கை, அயல் வணிகக் கொள்கை, பற்றுக்குறை நிதியாக்கம், அந்நிய மூலதனத்தின் பங்கு ஆகியவற்றைப் பற்றி விளக்குகிறது. வேளாண்மையின் சிறப்பையும், வளர்ந்து வரும் பொருளாதாரம் ஒன்றில் உறுதியின்மைக்கான இயல்பையும் காரணங்களையும்

அத்தியாயம் 14-ம், 15-ம் விளக்குகின்றன. நான்காவது பகுதியில் இறுதியாக உள்ள மூன்று அத்தியாயங்களும் இருக்கின்றன. பொருளாதார முன்னேற்றத்தில் அரசாங்கத்தின் பங்கையும் மிக விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெறுவதற்குப் பொருளாதாரத் திட்டமிடுதலின் அவசியத்தையும் அவைகள் விளக்குகின்றன. இந்தியாவின் திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தின் மதிப்புரையாக முடிவுரை அத்தியாயம் அமைந்துள்ளது. தன்னைத் தானே வளர்த்துக்கொள்ளும் நிலையை இந்தியப் பொருளாதாரம் எந்த அளவுக்குப் பெற்றிருக்கிறது என்பதை விளக்குவதற்கு இவ் வத்தியாயத்தில் கவனம் செலுத்தப் பட்டிருக்கிறது.

இந் நூலை எழுதுவதில் எனது நண்பர்கள் சிலருடைய உதவியையும் உடன் பணியாற்றும் ஆசிரியர்களின் உதவியையும் பெற்றிருக்கிறேன். மிகச் சிறந்த நூல்களையும், புள்ளிவிவரச் செய்திகளையும் எனக்குக் கொடுப்பதில் சிரமம் பாராமல் எனக்கு உதவிய பேராசிரியர் வி. சண்முகசுந்தரம் அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இதைப் போன்ற உதவியைச் சென்னையில் உள்ள இந்துப் பத்திரிகை உதவி ஆசிரியர் திரு. வி. கே. நரசிம்மன் அவர்களிடமிருந்தும் நான் பெற்றிருக்கிறேன். பொருளாதார வளர்ச்சிபற்றிய சில முக்கியமான கட்டுரைகளில் உள்ள கணிதவியல் சார்ந்த மொழியை விளக்கி வகுக்கச் சென்னைப் பல்கலைக்கழகக் கணிதப் பேராசிரியர் டாக்டர் எம். வெங்கடராமன் அவர்கள் தமது நேரத்தை ஒதுக்கி எனக்கு உதவிசெய்திருக்கிறார்கள். பொருளாதார முன்னேற்றத்தில் வேளாண்மைத் துறையின் முன்னேற்றத்தைப்பற்றி எனக்கு முன்பு பணியாற்றிய ஆசிரியராகவும், தற்போது கேரளாப் பல்கலைக்கழகத்தின் பொருளாதாரத்துறையில் இருப்பவராகவும் உள்ள டாக்டர் பி. ஜி. கே. பணிக்கர் அவர்களோடு நடத்திய தர்க்க வாதங்களினால் நான் பெரும் பலனைப் பெற்றிருக்கிறேன். நான் நன்றிக்கடன் பட்டுள்ள எனது இத்தகைய நண்பர்களோடு மிகச் சிறப்பான முறையிலும் மிகவும் அன்பான முறையிலும் பணியாற்றிய சென்னைப் பல்கலைக்கழக விரிவு நூலகத்தின் நூலகருக்கும் அவரது உதவியாளர்களுக்கும் நான் நன்றியுடையவனாக இருக்கிறேன்.

இந் நூலை வெளியிட அனுமதியளித்தமைக்குச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு நான் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னைப் பல்கலைக்கழகம்,
8-7-1963

**டி. பிரைட் சிங்**

# பொருளடக்கம்

பக்கம்

## அட்டவணைகளின் பட்டியல்

பக்கம்

# 1. குறைவான பொருளாதார வளர்ச்சியின் தன்மையும் பொருளும்

## (The Nature and Meaning of Economic Underdevelopment)

வாழ்க்கைக்கு இன்றியமையாத பண்டங்களையெல்லாம் ஆதி மனிதன் நிலத்திலிருந்தே பெற்முன். நாளடைவில் அவனது திறமையும் அறிவாற்றலும் வளர்ச்சியடைந்தன. அப்போது புதிய பல முறைகளையும் தொழில் நுட்பங்களையும் அமைத்தான். அதன் வழியாகக் குறைந்த உழைப்பில் நிறைந்த அளவு பண்டங்களை நிலத்திலிருந்து அவனால் பெறமுடிந்தது. நாளடைவில் மக்கள்தொகை பெருகியது. இனக் குழுக்கள் சமூகங்களாகவும் நாடுகளாகவும் மாறின. இத்தகைய மாற்றங்கள் தனியொரு மனிதனுக்கு அல்லது மக்கள் கூட்டத்திற்குக் கிடைத்துவந்து இயற்கை வளமூலங்களைக் கட்டுப்படுத்தின. இதனால் மேலும் சிறந்த, திறமையான முறைகளை நிலத்தில் பயன்படுத்த வேண்டிய கட்டாயம் தோன்றியது. உழைப்பாளர்களின் உற்பத்தித் திறனை அதிகரிக்கவல்ல மூலதன ஆக்கத்திற்கு இது வழிகோலியது, இவ்வழியாகப் பார்க்கும்போது, புதிய பல நல்ல முறைகளைத் தோற்றுவிப்பதன் மூலமும், மனிதனின் திறமை, உரம் முதலியவற்றை அதிகரித்து, மூலதன வளங்களை மிகுதியாகப் பெற்று, அவைகளை நல்ல முறையில் அமைத்து உற்பத்தியின் அளவை அதிகரிப்பதன் மூலமும் ஒரு சமுதாயம் முன்னேறுவதே பொருளாதார முன்னேற்றம் என்கிறது. இவ்வழியில் முன்னேற்றமடைந்த நாடுகள் பொருளாதார வளர்ச்சி பெற்றவைகளாகவும், செல்வம் மிகுந்தவைகளாகவும் இருக்கின்றன. இப்படியில்லாமல் மிகக் குறைவான அளவே முன்னேற்றம் அடைந்துள்ள அல்லது தேக்கமடைந்துள்ள

நாடுகள் பொருளாதார வளர்ச்சியில் பின்னணியில் உள்ளவை களாகவும், ஏழ்மை மிகுந்துள்ளவைகளாவும் இருக்கின்றன.

பொருளாதாரம் முன்னேறும்போது மிக அடிப்படையான சமுதாய, நிறுவன, அமைப்பு மாற்றங்கள் நிகழுகின்றன. அப்போது நாட்டு உற்பத்தியும் தனிநபர் உற்பத்தி அளவும் அதிகரிக்கின்றன. பொறிநுட்பத் துறை (Technology), மூலதன ஆக்கம் (Capital formation) ஆகியவற்றின் அதிகரிப்பானது நாட்டு உற்பத்தி, தனிநபர் உற்பத்தி அளவு ஆகியவற்றின் அதிகரிப்புக்குக் காரணமானவைகளாக விளங்குவதோடு, இவற்றின் வளர்ச்சிக்கும் உறுதுணையாக அமைகின்றன. தலா நபருக்குக் கிடைக்கும் மூலதன மூலவளத்தில் அதிகரிப்பு, தொழிலாளரின் திறமை, செயல்திட்டம், சம்பாதிக்கும் சக்தி ஆகியவற்றில் முன்னேற்றம், சிறந்த உற்பத்தி முறை அமைப்பு, போக்குவரத்து, செய்தித் தொடர்பு சாதனங்களில் வளர்ச்சி, நிதிக் கழகங்களின் பெருக்கம், நகர்களில் மக்களின் குடியேற்றம், சராசரி ஆயுட்கால அளவு, கல்வி நிலை, சுகாதார நிலை ஆகிய வற்றில் முன்னேற்றம், ஓய்வுக்கால அளவு, பொழுதுபோக்கும் வசதிகள் ஆகியவற்றில் அதிகரிப்பு, மக்களின் மனப்போக்கு விரிவானதாக இருத்தல் ஆகிய இவைகளெல்லாம் பொருளாதார முன்னேற்றத்தின் சிறப்பு இயல்புகளாகும். இவற்றில் பெறப்பட் பட்டுள்ள உயர்நிலைகள் பொருளாதாரத் துறையில் முன்னேற்ற மடைந்துள்ள சமுதாயத்தைக் காட்டுகின்றன. மேற் குறிப்பிடப் பட்டுள்ளவைகளில் வருமானம், தனிநபர் வருமானம், தொழிலாளர் உற்பத்தித்திறன் போன்ற சிலவற்றை எண்ணிக்கை அளவில் மதிப்பிட்டுவிடலாம். ஆனால், இவற்றைப் போலவே முக்கியமாக உள்ள வேறு ஒரு சில காரணிகளைத் தராதர அளவிலேயே குறிப்பிட இயலுகிறது. எனவே, இத்தகைய காரணிகள் தொடர்புள்ள நாடுகளில் அவற்றின் இன்றியமையாத பங்கின் அளவை நேரிடையாக மதிப்பிட முடிவ தில்லை. ஆதலால், எண்ணிக்கை அளவில் அளவிடுவதற்குப் பொருத்தமான சில கருவிகளை நாம் பயன்படுத்த வேண்டும். அஃது இயலாவிட்டால் குறிப்பிட்டதொரு கால எல்லையில் ஒரு நாட்டின் அல்லது சமூகத்தின் பொருளாதார முன்னேற்றத் திற்கு உதவக்கூடிய அல்லது பிற நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்க உதவக்கூடிய சக்திகளைப் பற்றிய சரியானதொரு கருத்தை உருவாக்க முடியாது. எனவே, வருமானம், தலா மூல தனக் கருவிகள், இயற்கை மூல வளங்கள், தொழிலாளர் உற் பத்தித் திறன், சேமிப்பு விகிதம், நாட்டு வருமானப் பகிர்வு, மக்கள் பெருக்க விகிதம் ஆகிய பிறவற்றைப் பற்றிய புள்ளி

விவரங்கள், பொருளாதார முன்னேற்றத்திற்கான காரணங்களையும், தன்மைகளையும் நுணுகி ஆராய உதவும் அடிப்படைக் காரணிகளாக இருக்கின்றன.

## பொருளாதார வளர்ச்சியை மதிப்பிடுதல்—வருமானப் புள்ளி விவரங்களின் பயன்

(Measuring Economic Growth—Use of Income Data)

ஒரு நாடு பெற்றுள்ள பொருளாதார நன்னிலைத் தரத்தைக் காட்டும் கருவியாக அந்நாடு பெற்றுள்ள உற்பத்திச் செல்வ நிலையின் அளவு இருக்கிறது. ஒரு பொருளாதாரம் முன்னேற்ற மடையும்போது புதிய உற்பத்தி மூலவளங்கள் கண்டுபிடிக்கப் படுகின்றன; ஏற்கெனவேயுள்ள மூலவளங்கள் நன்முறையில் பயன் படுத்தப்படுகின்றன; அந் நாட்டின் நாட்டு மக்களின் செல்வ நிலைக் கையிருப்புகள் அதிகரிக்கப்படுகின்றன. மூல வளங்களை ஒரு நாடு அதிக அளவில் பெற்றிருக்குமானால், பொருளாதார நிலையில் அந் நாடு மிகச் சாதகமான சூழலில் இருப்பதாகச் சொல் லலாம். ஆனால், பலவிதமான மூலவளங்களை ஒருவகைப்படுத்து வதற்கேற்ற பொதுப்படையானதோர் அடிப்படை இல்லாதிருப் பதால் நாடுகளின் இம் மூலவளங்களைச் சரியாக மதிப்பிட முடி யாமலிருக்கிறது. மூலதன ஆக்கத்தைப் பொறுத்த நிலையிலும் கணக்கிடுதல் எளிதாக இல்லை. நாட்டுக் கணக்குகளில் (National Accounts) மூலதனம் என்ற சொல் ஓர் எல்லைக்கு உட்படுத்தப் பட்ட பொருளிலேயே பயன்படுத்தப்படுகிறது. பரந்த அளவில் பார்த்தால் இச் சொல்லானது, நீண்டகால, குறுகியகால முதலீட்டு வகைகளையும் பொருளாதாரத்தின் உற்பத்தித்திறனையும் மிகுதிப் படுத்தவல்லதும், பல வடிவங்களில் உள்ளதுமான சமுதாய மனித மூலதனங்களை (Social and human capital) உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். நாட்டு விளைவு அல்லது நாட்டு வருமான வடிவில் உற்பத்தியின் மொத்தப் பெருக்கம் பொருளாதார முன்னேற்றத்தின் பொதுவானதோர் ஒப்பளவுக் கருவியாகும் (Common criterion). இங்கு மொத்த வருமானம், தனிநபர் வருமானம் ஆகிய இவற்றில் எதைச் சரியான கருவியாகக் கொள்வது என்ற கேள்வி தோன்றுகிறது. பொருளாதாரத்தின் உற்பத்தித் துறையில் உள்ள அமைப்பு மாற்றங்கள் (Structural changes) அப் பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கான மிக முக்கிய மானவையாக இருக்குமானால், தலா விளைவு (Per capita output) அளவைக் காட்டிலும் நாட்டு உற்பத்தி அளவே பொருளாதார முன்னேற்றத்தைக் காட்டும் சிறந்த அளவையாகக் கருதப்

படுகிறது.[1] பொருளாதார வளர்ச்சியைக் காட்டும் கருவியாகப் பயன்படுத்தத் தனிநபர் வருமானத்தைக் காட்டிலும் நிகர நாட்டு விளைவே (Net National product) மிகவும் விரும்பத்தக்கதாகும் என்பது மேயர், பால்டுவின் (Meier and Baldwin) என்பவர்களின் கருத்து. ஏனெனில், நாட்டு உண்மை வருவாய் உயர்ந்திருப்பது தனிநபர் உண்மை வருவாய் உயர்வாக இருப்பதற்குரிய பொதுவானதொரு முதல்நிலைத் தேவையாகும் (Prerequisite). தவிர ஒரு சில நிலைகளில் தனிநபர் உற்பத்தி அளவு தவறான பாதைகளிலும் அழைத்துச்செலுத்தலாம். சான்றாகக் குறிப்பிட்டதொரு காலத் தொடக்கத்தில் மக்கள்தொகை, மூல வளங்கள் ஆகியவைகளில் ஒரே அளவைப் பெற்றிருக்கும் இரு நாடுகளை எடுத்துக்கொள்ளலாம். ஒரு நாட்டில் மக்கள் பெருக்க விகிதமும் பொருட்பெருக்க விகிதமும் ஒரே அளவில் மிக வேகமாக அதிகரிக்கின்றன எனக்கொண்டால் அந் நாட்டில் தனிநபர் உற்பத்தி முன்பிருந்ததைப்போல் அதே அளவிலேயே இருக்கும். மற்றொரு நாட்டில் மக்கள் பெருக்க விகிதம் மிகமிகக் குறைவானதாக இருந்து பொருட்பெருக்க விகிதம் அதைக்காட்டிலும் கொஞ்சம் அதிகமானதாக இருப்பின் அந் நாட்டில் தனிநபர் உற்பத்தி முன்பிருந்ததைக் காட்டிலும் மிகுதியானதாக இருக்கும். இதை வைத்துக்கொண்டு பின்னர்க் குறிப்பிடப்பட்ட நாட்டில் வேகமானபொருளாதாரவளர்ச்சி இருக்கிறது எனக் கூறிவிடமுடியாது. மாறாக, முன்னர்க் குறிப்பிடப்பட்ட நாட்டில் ஏற்கெனவே அமித மக்கள் இருப்பின் தனிநபர் உற்பத்தி அளவை நிலைநிறுத்தலும் அதிக விகித வருமானம் பெறுதலும் நல்ல வெற்றிகளாகக் கருதப்பட வேண்டும்.

ஒரு சமுதாயத்தின் உறுப்பினர்களின் பொருள்சார் நன்னிலையை உயர்த்தாவிட்டால் பொருளாதார வளர்ச்சி என்ற கூற்று பொருளற்றதொன்றாகக் கருதப்படலாம். அந்நிலையில் பொருளாதார முன்னேற்றத்தைக் காட்டும் நல்லதொரு கருவியாகத் தலா வருமான மாற்றம் பயன்படுத்தப்படலாம். இத் தலா வருமானப் புள்ளிவிவரங்களை ஒப்பீட்டு நோக்கங்களுக்குப் பயன்படுத்தும் போது, வருமானத்தில் உற்பத்திக் கூற்றில் (Production aspect) அல்லது நுகர்வுக் கூற்றில் அழுத்தம் தரப்பட வேண்டும். ஆனல், சமுதாயத்தின் உற்பத்தி முயற்சி மிக (முக்கியமானவோர் ஆய்வாகவும்) முக்கியமானதொன்றாகவும், மொத்த உற்பத்தியில் தனிநபர்களின் பங்கு அதிகரிக்கப்பட வேண்டுமென்ற எண்ணம் இருப்பதாகவும் இருந்தால், நாட்டின் பொருளாதார

[1] Kuznets, Simon and Others (Eds.), *Economic Growth of Brazil, India and Japan,* Duke University Press; Durham, N. C., 1955, p. 13.

வளர்ச்சியை மதிப்பிட நாட்டு உற்பத்தியை உழைப்பாளர்களின் எண்ணிக்கையால் வகுக்கும் முறை சிறந்ததாக இருக்கும். ஒரு மனிதமணி உழைப்புத் திறனைப் பயன்படுத்துவது (Use of an index of the productivity per man hour) இதைவிட இன்னும் சிறந்த முறையாக இருக்கும். ஆனால், பின்தங்கிய நாடுகளில் உழைப்பாளர்கள், வேலைபார்க்கும் மனித மணிகள் (Man hours worked) ஆகியவற்றைப்பற்றிய புள்ளிவிவரங்கள் மக்கள் தொகைப் புள்ளிவிவரங்களைக் காட்டிலும் மிகக் குறைவான அளவிலேயே நம்பகமாக இருக்கின்றன. எனவே, இப் புள்ளி விவரங்களின் அடிப்படையில் கணக்கிடுவது பெருந்தவறுதல்களாக அமையும். மாறாக, பொருளாதார வளர்ச்சியின் விளைவுகளாக, மக்களின் வாழ்க்கைத் தரத்தில் முன்னேற்றமும், வருவாய் நன்முறையில் பகிரப்படுவதும் கருதப்படுமானால், தனிநபர் செலவுக்கான புள்ளிவிவரங்கள் பயன்படுத்தப்பட வேண்டும்.

## வருமானப் புள்ளி விவரங்களின் வரையறைகள்
## (Limitation of Income Data)

வருமானப் புள்ளி விவரங்களின் வரையறைகளை, குறிப்பாக அவைகள் பல நாடுகளைப் பற்றிய ஒப்பீட்டு நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படும்போது மனத்திலிருத்திக்கொள்ளுதல் மிக முக்கியமானதாகும். எந்தெந்த இனங்கள் சேர்க்கப்பட வேண்டும், எந்தெந்த இனங்கள் சேர்க்கப்படக் கூடாது என்ற நாட்டு வருமானத்தின் உறுப்புகளைப்பற்றிய வினாவிலும், நாட்டு வருமானத்தின் இலக்கண வரையறைகளிலும் பல அடிப்படை இடர்ப்பாடுகள் இருக்கின்றன. இவைகள் தவிர, பல நாடுகளுக்கிடையே ஏற்பட்டுள்ள அல்லது குறிப்பிட்ட காலப் போக்கில் ஒரே நாட்டில் ஏற்பட்டுள்ள தராதரச் சாதனைகளை மதிப்பிடுவதிலும் நாட்டு வருமானப் புள்ளி விவரங்களை மிக விழிப்புடன் பயன்படுத்த வேண்டும். மக்களின் நல முன்னேற்றம், உணவுப் பழக்கங்கள் போன்ற பலவும் பணம்சார் (Monetary) கணக்கீடுகளிலிருந்து தவிர்க்கப்படுகின்றன. இராணுவப் பாதுகாப்பு, நாட்டின் பாதுகாப்பு ஆகியவைகள் மூலம் அரசு ஆற்றும் பணி எந்த அளவுக்கு நாட்டு வருமானத்தை அதிகரிக்கச் செய்கிறது என்பதை மதிப்பிட முடியாது. பெறப்படும் ஆதாயம் அல்லது வட்டியைக் கொண்டு தனியார் மூலதனம் நாட்டு விளைவில் ஆற்றிய பங்கைக் கணக்கிடலாம், ஆனால் அரசு கடனுக்கும், அரசு மூலதனத்திற்கும் தொடர்பு இல்லாமலிருக்கும் போது, ஹைடிராலிக் திட்டங்கள் (Hydrolic Projects), சாலைகள் அல்லது நீர்ப்பாசன வேலைகளில் முதலீடு செய்யப்பட்ட அரசு

மூலதனத்தில் 'அத்தகைய கணக்கீடு செய்ய இயலாது. மேலும், குறைந்த வருமானம் உள்ள நாடுகளில் கிடைக்கும் புள்ளி விவரங்கள் மிகக் குறைவானவையாகவும், முற்றிலும் நம்ப இயலாதவைகளாகவும் இருக்கின்றன. அந்த நாடுகளில் நிலவும் சமுதாயச் சூழ்நிலைகளாலும், புள்ளி விவரங்களைச் சேகரிப்பதில் பயன்படுத்தத் தக்க வழிமுறைகள் இல்லாததாலும் இச் சூழ்நிலை ஏற்படுகின்றது. இங்குக் காலத்தின் மதிப்புச் சரியாக உணரப் படுவதில்லை. மேலும் உற்பத்தி, விற்பனை, நுகர்வு போன்றவற்றிற் கான பதிவேடுகள் வைக்கப்படுவதில்லை. மேலும் பருமன், எடை ஆகியவற்றின் அலகுகளும் துல்லியமாகவும், நிலையாகவும் வைக்கப்படுவதில்லை. நாட்டு வருமானத்தில், பதிவு செய்யப் பட்ட வருமானங்கள் மட்டுமே சேர்க்கப்படுகின்றன. பணம் செலுத்தப்படாத சமுதாயப் பணிகள், மனைவிமார்களின் பணிகள் போன்ற பணிகள் பலவும் சமுதாயத்தின் உண்மை வருமானத்தைப் பெருக்கினும், நாட்டு வருமானக் கணக்கீடு களில் சேர்க்கப்படுவதில்லை. பணம்சார் துறையோடு (Monetized sector) பிழைப்பூழியத் துறை (Subsistence sector) பேரளவிலும் வேளாண்மைத் துறை மிக முக்கியமானதாகவும் உள்ள ஏழ்மையும் குறைந்த வருவாயும் உள்ள நாடுகளில் உற்பத்தியில் ஒரு கணிசமான பகுதி பரிமாற்றத்திற்கு வராததால் நாட்டு வருமானக் கணக்கீடுகளில் அவை தவிர்க்கப்படுகின்றன. எனவே, இந்த அளவிற்கு இந் நாடுகளின் வருமானப் புள்ளி விவரங்கள் குறைந்த மதிப்பீடுகளாகவே அமைகின்றன. இந் நிலையில் பிழைப் பூழியத் துறையின் அளவு சுருங்கும்போது, மெய்யாகவே தோன்றும் பருப்பொருள்சார் உற்பத்தி அதிகரிப்பின் அளவைக் காட்டிலும், நாட்டுவருமானப் புள்ளி விவரங்கள் பெரிதுபடுத்தப்படுகின்றன. மறுபுறத்தில் ஏழ்மை நாடுகளோடு ஒப்பிடும்போது, பொருளாதாரத் துறையில் முன்னேற்றமடைந் துள்ள நாடுகளின் வருமானப் புள்ளி விவரங்கள் மிகைப்படுத்தப் படும் போக்கு காணப்படுகின்றது. போதுமான அளவிலும், பலவற்றையும் உட்கொண்டுள்ள (Comprehensive) அளவிலும் புள்ளி விவரங்கள் கிடைத்தல் என்ற ஒன்றே மொத்த எண்களைப் பெரிதுபடுத்தப் போதுமானவையாக இருக்கின்றன அதிக அளவு வணிகச் சார்புள்ளதாக்குதல், (Commercialisation) உண்மை வருமானத்தைவிட அதிக வேகத்தில் பணவருவாய் அதிகரிக்கும் போக்கு (Tendency), குடும்பத்திற்குள்ளேயே இலவசமாகக் கொடுத்துக் கொள்ளப்படும் பண்டங்களின் முக்கியத்துவத்தில் இறக்கம், இவைகளெல்லாம் வருமானப் புள்ளி விவரங்கள் மேல்நோக்கிய (Upward) ஒருபுறச் சார்பைத் (Bias) தோற்றுவிக்கின்றன.

ஒரு சில இனங்களை மதிப்பிடுவதன் முறைகளில் உள்ள வேறுபாடுகள் காரணமாக, நாட்டுவருமானக் கணக்கீடுகளில் இன்னோர் இடர்ப்பாடு தோன்றுகிறது. கணக்கில் எடுத்துக்கொள்ளப்படும் ஏற்றுமதி விலை, மொத்த விலை, சில்லறை விலை, காரணிகளின் செலவு போன்றவற்றிற்கேற்ப ஒரு சில பண்டங்களின் மதிப்பீடு மாறுபடுகிறது. மேலும், பற்றாக்குறையான செய்தித் தொடர்பு, போக்குவரத்து வசதிகள் கொண்ட இந்தியா போன்றதொரு பெரிய நாட்டில் ஒரே வகையான பண்டங்களின் விலைகள், பகுதிக்குப் பகுதி பேரளவில் வேறுபட்டிருக்கலாம். நிகர நிலப் பகுதிகள் விளைவுக்கும் (Geographical product) நிகர நாட்டு விளைவுக்கும் உள்ள வேறுபாட்டைப் பேராசிரியர் கிண்டில்பெர்கர் (Prof. Kindleberger) கவனத்திற்குக் கொண்டுவருகிறார். ஒரு நாட்டில் நிறுவப்பட்டிருப்பதும், ஆனால், அதே நேரத்தில் அயல்நாட்டுக்கு உரிமையுடையதுமான உற்பத்திக் காரணிகளால் உற்பத்தி செய்யப்படும் வருவாய் நிலப் பகுதிகள் விளைவில் (Geographical income) ஒரு பகுதியாகும். ஆனால், இது நாட்டு வருவாயில் சேராததாகும். இது தவறான பாதையில் விடுக்கலாம். ஏனெனில் விளைவு ஏற்றுமதியை உள்ளடக்கியும் இறக்குமதியை உள்ளடக்காமலும் இருக்கின்றது. இவ் விரண்டும் சமநிலையில் இருக்குமானால் வருமானக் கணக்கீட்டில் தவறெதுவும் தோன்றாது. ஆனால் பொதுவாக இருப்பது போல அயல்நாட்டுச் செலுத்துநிலை (Balance of payments) சுன்ன நிலையிலிருந்து (From zero) வேறுபட்டிருக்குமானால் தவறு இருக்கும்.[1]

பொருளாதார முன்னேற்றத்தின் அளவுகோலாக மொத்த விளைவை எடுத்துக்கொண்டாலும் சரி, தலா விளைவை எடுத்துக் கொண்டாலும் சரி, அளவுமட்டத்தில் தோன்றும் அதிகரிப்பு மட்டும் முன்னேற்றத்திற்கான தவறில்லாத அறிகுறியாகாது. வருமானக் கணக்கின் இழப்புப் பக்கத்தையும் (Cost side) நன்மைப் பக்கத்தையும் (Benefit side). நாட்டு வருமானப் புள்ளி விவரங்கள் முழுமையாகக் கணக்கில் கொள்வதில்லை. பண வருவாயில் தோன்றும் அதிகரிப்பு ஒரு சில சமுதாய இழப்புகளையும் உள்ளடக்கியிருக்கலாம். சமுதாயத்தின் உண்மை வருமானத்திலேற்படும் அதிகரிப்பைப் பற்றிச் சரியாக மதிப்பீடு செய்ய இவைகளையும் கருத்தில் கொள்ள வேண்டும். குறிப்பிட்ட கால எல்லையில் ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றம் பற்றிய மதிப்பீடு செய்வதிலும், அல்லது பல நாடுகளின் பொருளாதார முன்னேற்ற விகிதங்களை ஒப்பீடு செய்வதிலும்

[1] Kindleberger, Charles F., *Economic Development*, McGraw-Hill New York, 1958. p. 6 (f.n ).

பணவருவாய் அதிகரிப்பின் பொதுநலக் கூற்றை (Welfare aspect) முழுமையாக ஒதுக்கிவிட முடியாது. பணவருவாயில் தோன்றும் அதிகரிப்பு மட்டும் பொருளாதார முன்னேற்றத்திற் கானவோர் அளவையாக இருக்க முடியாது. ஏனெனில், நகர்ப் பகுதிகளில் அதிகமான மக்கள் பெருக்கம், சமுதாயப் பழக்க வழக்கங்களில் அடிப்படை மாற்றங்கள், வேலையில் அதிகரிக்கும் கருத்து வேற்றுமைகள், கிராமப் பகுதிகளில் நுழைவுரிமையில் தடைகள் போன்ற பல சமுதாய இழப்புகளும், பணவருவாய் அதிகரிக்கும்போது சேர்ந்தே நிகழலாம். மேலும் மிகுந்த வருமானமானது, நாட்டின் மதிப்பு மிக்க இயற்கை வளங்களை இழப்பதன் மூலமாகக்கூட நிகழலாம். ஒருபுறம் வருமானம் அதிகரிக்க, மறுபுறம் அது நாட்டின் வளர்ச்சிக்குத் தேவையான உள்ளாற்றல்களை (Potentialities) வெகுவாகப் பாதித்துவிடலாம். மேற்கு ஆசியாவின் சிறிய சில நாடுகளில் எண்ணெய் வளப் பயனரிப்பு (Exploitation) நாட்டு வருவாயைப் பெருக்கியது உண்மை. ஆனால், அந்த உயர்வு மக்களின் நலனைப் பேரளவில் பிரதிபலிக்கவில்லை. வருமான உயர்வினால் தோற்றுவிக்கப்படும் வருமான மறுபகிர்வின் (Redistribution) சமுதாயப் பொருளாதார விளைவுகளை மிக எளிதாகக் கருதிவிடவும் முடியாது. தனிநபர் வருமான உயர்வானது, வருமானம், செல்வம் ஆகியவற்றில் ஏற்றத்தாழ்வையும் ஏற்படுத்தலாம். பொருளாதார முன்னேற்றம் ஒரு புறம் வசதி படைத்த ஒரு சில வகுப் பாரிடையே மட்டு மிஞ்சிய அளவுக்கு வருமானம் உயர்வை ஏற்படுத்தலாம். எனவே, மறுபுறத்தில் வருமானக் குறைவாயுள்ள ஏழை மக்களின் அளவையும் அதிகப்படுத்திவிடலாம். 1846 ஆம் ஆண்டில் இங்கிலாந்து நாடு தானிய விதிகளைத் (Corn Laws) திரும்பப் பெற்றபோது, நாட்டு வருவாய் அதிகரித்தது. ஆனால், அதே நேரத்தில் இயந்திரத் தொழில் உற்பத்தியாளர்களுக்குச் சாதக மாகவும் நிலக்கிழார்களுக்குப் பாதகமாகவும் வருமானப் பகிர்வு அமைந்துவிட்டது. ஒரு பிரிவினரின் இடர்ப்பாடுகளையும் மற்றொரு பிரிவினரின் நன்மைகளையும் அளவிட்டு நிகர முடிவை அளந்து கண்டுபிடித்தல் மிகக் கடினமானதாகும்.[1] வருமானம் அதிகரிக்கும்போது பலரின் வறுமையும் அதிகரிக்கலாமென்றால் அப்போது பொருளாதாரம் வளருகிறது என்ற கூற்றுப் பொது அறிவுக்கு முரணானதாகும். அதிகப்படியான அளவு மக்களின் வாழ்க்கைத் தரத்தைக் குறைந்த அளவு ஏற்கெனவே இருந்த நிலையிலாவது நிலைநிறுத்த உதவினால்தான் அல்லது ஏற்கெனவே

[1] Youngson, A. J., *Possibilities of Economic Progress*, The University Press; Cambridge, 1959, p. 10.

யுள்ள அளவு மக்களின் வருமான, வாழ்க்கைத்தர நிலைகளை உயர்த்துவதற்கு உதவினால்தான் நாட்டு மொத்த விளைவில் தோன்றும் உயர்வானது முன்னேற்றத்தைத் தெரிவிக்கும் கருவி யாகக் கருதப்படவேண்டும் என்று பேராசிரியர் வைனர் (Prof. Viner) என்பவர் குறிப்பிட்டுள்ளார்.[1] மேலும், ஒரு நாட்டில் உற்பத்தி செய்யப்படும் பண்டத்தின் அமைப்பும் மாற்ற மடையலாம்; உற்பத்தி செய்யப்படும் பண்டத்தின் அளவும் பணமதிப்பும் அதிகரிக்கலாம். ஆனால், அப்பண்டங்களின் வகையும் தரமும் மோசமானவையாகலாம். நுகர்வோரின் சுவை, விருப்பு, வெறுப்பு முதலியவை மாற்றமடையலாம். விளைவு அதிகமாகி யிருக்கிறது என்பதனால் மட்டும் உண்மை வருவாய் அதே அளவுக்கு அதிகரித்திருக்கிறது என்று சொல்லிவிட முடியாது. பொருளாதார வளர்ச்சியென்பது பல பரும நிகழ்ச்சியாகும் (Multi dimensional phenomenon). பணவருவாய் உயர்வை மட்டு மல்லாமல், இது முழுமையானதும், மகிழ்ச்சியானதுமான நல்ல வாழ்வை உருவாக்கத் தேவையான சமுதாயப் பழக்க வழக்கங்கள், கல்வி நிலை, பொதுச் சுகாதாரம், மிகுதியான ஓய்வு போன்ற சமுதாயப் பொருளாதாரச் சூழ்நிலைகளிலும் உயர்வை ஏற்படுத்த வேண்டும். பொருளாதார வாழ்வைச் சீர்குலைத்துப் பலருக்குத் துன்பத்தைத் தரத்தக்க பல ஏற்றத்தாழ்வுகள் வருமான உயர்வோடு சேர்ந்தே நிகழலாம். மொத்தத்தில் பார்க்கும்போது, தொடர்ச்சியான தனிநபர் வருமான உயர்வை யும் மக்களின் வாழ்க்கைத்தர முன்னேற்றத்தையும் விளைவிக் கின்ற அளவுக்குத் தேசிய வருவாய் உயர்வு உறுதியாகவும், வலிமை யுடன் தொடர்வதாகவும், மக்கள் பெருக்க விகிதத்தைக் காட்டிலும் அதிக வேகமானதாகவும் இருந்தால்தான் நாட்டு விளைவுப் புள்ளிவிவரங்கள் பொருளாதார முன்னேற்றத்தைப் பிரதிபலிப்பவையாக இருக்கும்.

பல நாடுகளில் உள்ள தராதர வளர்ச்சி விகிதங்களை ஒப்பிட்டுப் பார்க்க, பன்னாட்டுக் கணக்கியலுக்கேற்றதொரு பன்னாட்டு அலகை நாம் பெற்றிருக்க வேண்டும். அல்லது வருமானம், வேலை, விளைவு ஆகியவற்றைப் பற்றிய குறியெண் களைப் (Index numbers) பெற்றிருக்க வேண்டும். மிகுந்த புகழ் பெற்ற தமது நூலின் முதற்பதிப்பில் பேராசிரியர் காலின் கிளார்க் (Prof. Colin Clark) என்பவர் I. U. எனப்படும். பன்னாட்டு அலகைப் புகுத்தினார். 1925-34 ஆகிய பத்தாண்டு களின் சராசரி அமெரிக்க டாலர் ஒன்று எந்த அளவுக்குப்

[1] Viner, J., *International Trade and Economic Development*, Oxford University Press, London, 1957, p. 98.

பண்டங்களையும் பணிகளையும் வாங்கும் சக்தியைப் பெற்றிருந்ததோ, எந்த அளவோடு பரிமாற்றச் சக்தியைப் பெற்றிருந்ததோ அதுவே I. U. என்று அதற்கு இலக்கணமும் வகுத்தார். ஆனால், இத்தகைய I. U. பொருளாதார வளர்ச்சி பெற்ற நாடுகளை ஒப்பிட்டுப் பார்ப்பதில் மட்டுமே பொருத்தமாக இருப்பதையும், குறைந்த வருமானம் பெற்றுள்ள நாடுகளைப் பொறுத்த மட்டில் பொருத்தமாக இல்லாமலிருப்பதையும் உணர்ந்த அவர் கீழ்த்திசை நாடுகளின் அலகு என்று O. U. என்பதைப் புகுத்தினார். 1948-49 ஆம் ஆண்டின் இந்திய ரூபாய் ஒன்றிற்கு, நேரிடையாக அல்லது மறைமுகமாகப் பரிமாற்ற மதிப்புள்ள பண்டங்கள் அல்லது பணிகளின் அளவு என்று O. U. விற்கு இலக்கணமும் வகுத்தார்.[1] பொதுவாக, அந்தந்த நாடுகளின் சார்புள்ள குறியெண்களின் அடிப்படையில் வருமான மாற்றத்தின் பன்னாட்டு ஒப்பீடுகள் மேற்கொள்ளப்படுகின்றன.

ஆனால், ஒவ்வொரு பொருளாதார வளர்ச்சி மாணவரையும் தடுமாறச் செய்யும் இக் குறியெண்கள் பல அடிப்படையான குறைகளைக் கொண்டுள்ளவையாகும். உற்பத்தி செய்யப்படும் பண்டங்களின் தன்மையும் தரமும் கால ஓட்டத்தில் மாறாமலிருப்பதாகவும், பிற வாய்ப்புச் செலவுகள் (Opportunity costs) மாறாமல் நிலையாக இருப்பதாகவும் உற்பத்திக் குறியெண் அமைப்பில் கருதப்படுகிறது. புதிய பண்டமொன்று உற்பத்தி செய்யப்படலாம் அல்லது அதே பண்டத்தின் தரம் மாற்றப்படலாம். குறிப்பிட்ட பண்டங்களின் பட்டியல் நிலையாக இருப்பதை அடிப்படையாகக் கொண்டிருக்கும் உற்பத்திக் குறியெண்கள் இருக்கும்வரை இம் மாற்றங்கள் கணக்கில் கொள்ளப்பட மாட்டா. ஒரு நாட்டுக்கும் இன்னொரு நாட்டுக்கும் இடையே இப் பட்டியலில் உள்ள பண்டங்களில் பொருளாதார முக்கியத்துவம் பேரளவில் மாறிக்கொண்டிருக்கும்போது, இரு நாடுகளுக்கிடையேயுள்ள பொருள் உற்பத்தியைப் பற்றிய ஒப்பீட்டில் அதிகமான அளவு இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. எனவே, இரு நாடுகளின் வளர்ச்சி விகிதங்களைக் குறியெண்களின் வாயிலாக ஒப்பிட்டுப் பார்க்கும்போது, உற்பத்தி அமைப்பில் தோன்றும் மாற்றங்களைக் கருத்தில் கொள்ளாவிட்டால், அது மிகவும் குறைவான பொருளையே (meaning) தரும். சான்றாக, ஒரு நாட்டின் வளர்ச்சி விகிதம் 2% என்றால், அஃது இன்னொரு நாட்டினைக்

[1] Clark, Colin, *The Conditions of Economic Progress*, 3rd edition, Macmillan, London, 1957, p. 20.

காட்டிலும் அதிகம் என்று குறிப்பிடுதல் பொருளில்லாத (Without meaning) ஒன்ருகவே அமையும். இன்பம் தவிர்க்கும் முறைகளை மேற்கொள்ளும்போது வளர்ச்சி விகிதம் அதிகரிக்கப் படலாம். ஆனால், அந் நாட்டில் தோன்றும் இடர்ப்பாடுகளைக் குறியெண்கள் எவ்விதத்திலும் உள்ளடக்கிக் காட்டுவதில்லை. குறைகள் பல இருப்பினும் குறியெண்களில் மேல்நோக்கிய போக்குகள் அல்லது கீழிறங்கும் போக்குகள் பொருளாதார வளர்ச்சிப் பாதையையாவது சுட்டிக் காட்டுகின்றன. பொருளாதார முன்னேற்றம் அல்லது தடை இருப்பதை இக் குறியெண்களின் மாற்றம் தெளிவாகக் காட்டுகிறது. மேலும், இயந்திரத் தொழில் உற்பத்தி, வேளாண்மை மற்றும் சுரங்கத் தொழில்கள், பணிகள் போன்றவைகளுக்குத் தனித் தனியாகக் குறியெண்களைப் பயன்படுத்துவதன் மூலமாகக் குறியெண்களின் குறைகளை ஓரளவுக்குத் தவிர்க்கலாம்[1]. எனினும், இரு நாடு களுக்கான பொருளாதார வளர்ச்சியைக் குறியெண்களினுல் மட்டும் ஒப்பிட்டுப் பார்க்க இயலாது. அடிப்படை ஆண்டின் (Base year) விலை நிலவரங்களின் அடிப்படையிலேயே மதிப்பு களின் உயர்வு மதிப்பிடப்படுகிறது. இரண்டாவது காலத்தில் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களை அக்காலத்தில் நிலவிய விலைகளால் பெருக்கி வருவதையும் முதற்காலத்தில் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களை இரண்டாவது காலத்தில் நிலவிய விலைகளால் பெருக்கி வருவதையும் ஒப்பிட்டுப் பார்ப்பதே பொதுவாகப் பயன்படுத்தப்படும் முறையாகும். எனவே, தேர்ந்தெடுக்கப்படும் அடிப்படை ஆண்டு மிக மிக முக்கியத் துவம் வாய்ந்ததாகும். வெகு வேகமாக ஏறுமுகத்தில் அல்லது இறங்குமுகத்தில் உள்ள விலைகளைக் கொண்ட ஆண்டு அல்லது ஆண்டுகளை அடிப்படை ஆண்டாகத் தேர்ந்தெடுத்தால் அது, பின் வருகின்ற ஆண்டுகளில் உள்ள போக்குகளைப் பற்றி, உண்மைக்குப் புறம்பான நிலையைக் காட்டலாம். மேலும், மொத்தமாக்குதல் என்ற அடிபட்டலுத்த (vexed) சிக்கலும் இருக்கிறது. பல பண்டங்களின் தராதர முக்கியத்துவத்தை ஒருங்கிணைப்பதற்காகப் பலவகைப் பண்டங்களும் நிறுக்கப்படுகின் றன. ஆனால் இதிலும், புதிய பண்டங்களைப் புகுத்துதல் என்பது போன்று நாட்டு உற்பத்தி உருவமைப்பில் (composition) அடிப்படை மாற்றங்கள் நிகழுமாதலால், முன்னர்ச் செய்யப் பட்ட நிறுவை அளவுகள் பயனற்றுப்போகின்றன. குறுகிய கால ஒப்பீடுகள் நிகழ்த்தப்பெறும்போது இவ் வேறுபாடுகள் அதிக

[1] Mutter, Warren G., 'On Measuring Economic Growth' *Journal of Political Economy,* February, 1957 pp. 51—63.

அளவில் இல்லாமலிருக்கலாம். ஆனால், பொருளியல் வளர்ச்சி என்பது நீண்ட காலத்தில் பெறப்படுபவைகளைப் பொறுத்து அமையுமாதலால், இஃது உண்மையிலேயே பெரியதொரு சிக்கலைத் தோற்றுவிக்கலாம்.

செல்வ மிகுந்த நாடுகள், ஏழ்மை மிகுந்த நாடுகள் ஆகிய வற்றிடையேயுள்ள வளர்ச்சி விகித நிலைகளை ஒப்பிட்டுப் பார்ப் பதற்கு வருமானப் புள்ளி விவரங்கள் பயன்படுத்தப்படுமானால் இவைகளின் குறைகள் பேரளவில் தோன்றுகின்றன. இத்தகைய ஒப்பிடுதல்களுக்காக, அந்தந்த நாட்டுச் செலாவணி அளவையில் மதிப்பிடப்படும் நாட்டு வருமானம் ஐக்கிய அமெரிக்க நாடுகளின் டாலர் போன்ற பன்னாட்டுச் செலாவணி அளவுகளுக்கு நிலவும் சட்டரீதியான பரிமாற்ற விகிதங்களின் அடிப்படையில் மாற்றப் படுகின்றன. ஆனால் பங்குவீதமுறை (Quoto system), சுங்கவரி கள், அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடுகள் போன்று பன்னாட்டு வணிகத்தில் வரையறைகள் இருக்கின்ற காரணத்தினால், பல வகைச் செலாவணிகளின் உண்மையான சரி ஒப்பு (parity) மதிப்பை இம்முறை எப்போதாவதுதான் பிரதிபலிக்கும். குறைந்த வருவாய் நாடுகளின் வருவாயை, அந்நியச் செலா வணியில் மாற்றிப்பார்த்தால், அவைகளின் உண்மையான அளவு களை விடக் குறைவானவையாகவே தோற்றமளிக்கின்றன. உண்மையில் ஒரு நாடு எவ்வளவுக் கெவ்வளவு பின்தங்கியதாக இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு இத்தகைய குறைவாக மதிப்பிடப்படுதல் அதிகமான அளவில் தோன்றுகிறது. கில் பெர்ட், கிராவிஸ் (Gilbert and Kravis) ஆகியோரால் சில OEEC நாடுகளைப் பற்றிய அந் நாடுகளின் தனிநபர் விளைவுகள் ஐக்கிய அமெரிக்க நாடுகளின் தலா விளைவுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கப்பட்டன. அந் நாடுகளின் தலா விளைவுகளை முதலில் அந்தந்த நாடுகளின் செலாவணியின் அடிப்படையில் கணக்கெடுத் துப் பின்னர் பரிமாற்ற விகிதங்களைப்பயன்படுத்திமாற்றியமைத்து இவ் விரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தல் ஒரு முறை. அந்த நாடு களின் தனிநபர் விளைவை நேரிடையாக அந்தந்த நாடுகளின் செலாவணியையும், ஐக்கிய அமெரிக்க நாட்டின் செலாவணியை யும் பயன்படுத்திக் கணக்கெடுத்து அவற்றை ஒப்பிட்டுப்பார்த்தல் இரண்டாவது முறை. இம் முறைகளில் இரண்டாவது முறையில் தான் வேறுபாடுகள் குறைவானவையாக இருப்பது கண்டுபிடிக்கப் பட்டது. முதல் முறையில் கணக்கிடப்பட்டபோது (மத்திய கிழக்கு நீங்கலாக உள்ள) ஆசிய நாடுகளின் உண்மை வருவாய் 1950 ஆம் ஆண்டில் 58 டாலராக மதிப்பிடப்பட்டது என்றும், ஆனால் இம்முறையில் உள்ள தவறுதல்களுக்காகத் தள்ளிக்கணிப்பு

(Allowance) செய்யப்படும்போது இந்த வருவாய் 58 டாலரைப் போன்று மூன்றரை மடங்கு அதிகமாக இருக்கும் என்றும் M. F. மில்லிக்கன் (M. F. Millikan) அவர்கள் குறிப்பிடுகிருர். இவ் வடிப்படையில் பார்த்தால் ஐ. நா. வின் பன்னுட்டுப் புள்ளி விவரங்களான (United Nations International Statistics) 100-க்குக் குறைவான தலா வருமானங்களே 3 ஆலும், $ 100 முதல் $ 300 வரை உள்ள தலா வருமானங்களே $2\frac{1}{2}$ ஆலும், $ 300 முதல் $ 600 வரை உள்ள தலா வருமானங்களே 2 ஆலும், $ 600 முதல் $ 1600 வரை உள்ள தலா வருமானங்களே $1\frac{1}{3}$ ஆலும் பெருக்கிஞல் பல நாடுகளுக் கிடையே நிலவும் தனிநபர் வருமான நிலேகளேப் பற்றிய உண்மை யான நிலேகளேப் பற்றித் தெரிந்துகொள்ள முடியும் என்று பேராசிரியர் E. E. ஹேகன் (Prof. E. E. Hagen) அவர்கள் கருதுகிருர்.[1]

குறைந்த வருமான நாடுகளின் ஏற்றுமதிப் பண்டங்கள் அந்நாடுகளில் நுகரப்படும் பண்டங்களேக் காட்டிலும் தொழிலாளர் செறிவு (Labour intensive) மிகுதியாக இல்லாதவைகளாக இருப் பதால்தான் இத்தகைய குறைவான மதிப்பீடுகள் தோன்றுகின்றன என்று ஹேகன் அவர்கள் கருதுகிருர். எனவே, இந் நாடுகளில் உள் நாட்டு நுகர்வுப் பாண்டங்கள் மிகவும் மலிவானவைகளாக இருக் கின்றன. பன்னுட்டு வணிகத்தில் ஈடுபடுத்தப்படும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் விலேகளோடு கூடிய தராதர விகிதத்தையே அந்நியச் செலாவணி விகிதமானது தெரிவிக்கிறது. அதாவது ஏழ்மை நாடுகளில் உற்பத்தியாகிப் பன்னுட்டு வணிகத்தில் பயன் படுத்தப்படாமல், அங்கேயே நுகரப்படும் அதிகமான அளவு பண்டங்களுக்கு ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்களேப்போல் அதிகமான விலே தரப்படுவதில்லே. எனவே, இத்தகைய பண்டங்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான அளவுக்கு இருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு மேற்குறிப்பிடப்பட்ட குறைவான மதிப் பீடும் இருக்கும். மற்ருெரு நோக்கில் பார்க்கும்போது, ஏழ்மை நாடுகளின் வருமானத்தைக் குறைவாக மதிப்பிடுவதும், செல்வ நாடுகளின் வருமானத்தை அதிகமாக மதிப்பிடுவதும், தொழி லாளர்கள் பெறும் ஊதிய வேறுபாட்டின் அடிப்படையில் அதாவது தொழிலாளரின் உற்பத்தித் திறன் வேறுபாட்டின் அடிப் படையில் தோன்றுகிறது. பொறியியல் துறையிலும் வேளாண் மைத் துறையிலும் உற்பத்தி செய்யப்பட்டு விற்பனேயாகும் பண்டங்களின் உற்பத்தியில் பன்னுட்டு உற்பத்தித்திறன் வேறுபாடு

[1]Hagen, E, Everett 'Some Facts about Income Levels and Economic Growth', *Review of Economics and Statistics*, February, 1960; pp. 62-67.

களும் பல நாடுகளுக்கிடையேயுள்ள கூலி வேறுபாடுகளும் சமமாயிருக்கும்.

பொருளாதார வேறுபாடுகள் உள்ள நாடுகளுக்கிடையேயுள்ள உற்பத்தித் திறனில் உள்ள வேறுபாடுகள் மூன்ருவதான துறையைச் (Tertiary sector) சார்ந்த பணிகளைப் பொறுத்தமட்டிலும் குறைவாகவே இருக்கும். மூன்ருவதான துறையில் ஏற்படுத்தப்படும் கூலி உயர்வையொட்டி, பருப்பொருள் உற்பத்தியில் குறிப்பாகப் பொறிவழித்துறையில் கூலிமாற்றம் தொடருகிறது. ஆனல், இத்தகைய பணிகள் பன்னுட்டு வணிகத்தில் ஈடுபடுத்தப்பட முடியாதவை. இதனுலும், செல்வ நாடுகளைக் காட்டிலும், ஏழ்மை நாடுகளில் பொறிவழித் துறையிலும், வேளாண்மைத் துறையிலும் நிலவும் கூலிமட்டம் குறைவாக இருப்பதாலும், இப் பணிகளுக்கான ஊதியங்களும் குறைவானவையாகவே இருக்கின்றன. பொருளாதாரம் முன்னேற்றப் பாதையில் செல்லும்போது, பிற இரு துறைகளோடு ஒப்பிடும்போது, மூன்ருவதான துறை மிக வேகமாக விரிவடையத் தொடங்கும். எனவே, செல்வ மிகு நாடுகளில் பொருளாதாரம் வளர்ச்சிப் பாதையில் தொடர்ச்சியாகச் செல்லும்போது வணிகத்தில் ஈடுபடுத்தப்பட முடியாதவைகளாகிய பணிகள் மிகுந்த விலையுள்ளவைகளாகிக்கொண்டே செல்லும், ஏனெனில் பொறிவழிப் பண்டங்கள், வேளாண்மைப் பண்டங்கள் ஆகியவற்றின் விலையுயர்வோடு பணிகளின் விலைகளும் அதிகரித்துக் கொண்டே செல்லும். ஆகவே, உற்பத்தித்திறன் வேறுபாடுகளில் தோன்றும் அதிகரிப்புடன் செல்வ மிகு நாடுகளில் தனிநபர் வருமான அமித மதிப்பீட்டு விகிதமும் அதிகரித்துக் கொண்டே செல்லும்.[1]

இவ்விதமான வரையறைகள் பல இருப்பினும், பல நாடுகள் பெற்றுள்ள பொருளாதார வளர்ச்சி நிலைகளைத் தனிநபர் வருமானப் புள்ளி விவரங்கள் ஓரளவு சுட்டிக்காட்டுகின்றன. ஒரு நாடு அல்லது சமுதாயத்தை ஒட்டு மொத்தமாக நோக்கும்போது அங்கு மக்கள் பெருக்க விகிதத்தைக் காட்டிலும் உண்மை வருமான அதிகரிப்பு விகிதம் வேகமாக உயர்ந்து, அதன் வழியாகத் தனிநபர் வருவாய் உறுதியாக அதிகரித்துக்கொண்டே செல்லுமாஞல் ஐயத்திற்கிடமின்றி அத்தகைய அதிகரிப்பு பொருளாதார முன்னேற்றத்திற்கான அறிகுறியேயாகும். புள்ளிவிவரக் கணக்கெடுப்பிலும்

[1] Bela Balassa, 'Patterns of Industrial Growth : Comment,' *American Economic Review,* June, 1961, p. 395.

பிறவற்றிலும் தோன்றக் கூடிய தவறுதல்கள் திருத்தப்படுமானல் நாட்டு வருவாய்க் கணக்கீடுகளில் தரப்பட்டிருக்கும் உலக நாடுகளின் தனிநபர் வருமானப் புள்ளி விவரங்களில் காணப்படும் அதிகமான வேறுபாடுகள் ஓரளவுக்குக் குறையலாம். ஆனல், அதற்குப் பிறகு பார்த்தாலும் அவ் வேறுபாடுகள் மிகமிக அதிகமாகவும், மற்ற நாடுகளைக் காட்டிலும் ஒரு சில நாடுகள் எவ்வளவு பின்தங்கிய நிலையிலிருக்கின்றன என்பதைக் காட்டுபவைகளாகவும் இருக்கின்றன. அதுபோலவே, வருமான அதிகரிப்பின் ஆண்டு விகிதமானது பொருளாதார முன்னேற்ற வேகத்தைக் காட்டுவதற்கு முதற்படியாகவும் அதே நேரத்தில் நம்பிக்கை கொள்ளக் கூடியதாக உள்ளதொரு கருவியாகவும் இருக்கிறது. பொருளாதார வளர்ச்சியானது பலபருமச் செய்முறைகளினுல் (Multi Dimensional Process) ஆனதாக இருக்கும் வரை, நாட்டு வருமானம் அல்லது தனிநபர் வருமானம் போன்ற ஒருபரும (Uni- dimensional) அளவு முறையைக்கொண்டு அப் பொருளாதார வளர்ச்சியை அளவிட முற்படின் முடிவுகள் முற்றிலும் சரியானவையாக இருக்க முடியாது. எனினும், பல நாடுகளின் தராதரச் செயல்முறைகளை நுட்பமாகத் தெரிந்து கொள்வதற்கு அல்லது குறிப்பிட்ட கால அளவில் ஒரு நாடு அடைந்துள்ள வெற்றிகளை மதிப்பிடுவதற்கு நாட்டு வருமானப் புள்ளி விவரங்கள் மிக முக்கியமானதொரு சான்ருக விளங்குகின்றன. மேலும், வளர்ச்சிக் காரணிகளை ஊக்குவிக்கும் சக்திகளைப் பற்றிச் சரியாகத் தெரிந்துகொள்வதற்கும், பொருளாதார வளர்ச்சியோடு சேர்ந்தே தோன்றக் கூடிய அமைப்பு (structure), அமைப்பு முறை (Organisation) மாற்றங்கள் எந்த அளவுக்குத் தோன்றியுள்ளன என்பதை மதிப்பிடுவதற்கும், சுகாதாரம், கல்வி, எதிர்பார்க்கப்படும் ஆயுட்கால அளவு, கிடைக்கப்படும் சமுதாய நல்வாழ்வு வசதிகள் போன்ற, பொருளாதாரத் தொடர்பில்லாத காரணிகளைப் பற்றியும் கருத்தில் கொள்ள வேண்டும். எப்படி இருப்பினும், பொருளாதார வளர்ச்சி நிலைகளின் அடிப்படையில் நாடுகளை வரிசைப்படுத்துவதில் தலா வருமானப் புள்ளிவிவரங்கள் மிகவும் பயனுள்ளவைகளாக இருக்கின்றன.

## வளர்ச்சியடைந்த நாடுகளும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளும் (Developed and Underdeveloped Countries)

உலகின் பல நாடுகளின் தலா வருமானப் புள்ளி விவரங்களை ஆழ்ந்து ஆராய்ந்தார், பேராசிரியர் எவரெட். E. ஹேகன்

என்பவர். பன்னாட்டு வணிகக் குவிப்பு அதிக அளவில் இருப்பதையும், பல நாடுகளுக்கிடையுள்ள தனிநபர் வருமான வேறுபாடுகள் பேரளவில் இருப்பதையும் அவருடைய புள்ளி விவரங்கள் தெளிவாக்குகின்றன. அதாவது மொத்த உலக வருமானத்தில் 8.7 % அளவைத்தான் உலக மக்களில் 50% அளவு மக்கள் பகிர்ந்து கொள்கின்றனர். ஆனால், அதே நேரத்தில் உலக மக்களில் 7.7% அளவினர் மொத்த வருவாயில் 44.2% ஐப் பெற்றிருக்கின்றனர். ஆண்டுச் சராசரி வருவாய் முதற் பிரிவில் $ 73 ஆகவும் ஐந்தாவது பிரிவில் $2387 ஆகவும் இருக்கிறது. உலக மொத்த மக்கள் தொகையான 2,790 கோடிமக்களில் 2,000 கோடிமக்களின் அதாவது உலக மக்களில் 70 விழுக்காட்டுக்கும் அதிகமான அளவு மக்களின் தனிநபர் வருவாய் உலகச் சராசரித் தனிநபர் வருமானமான $414-க்குக் குறைவாகவே இருக்கிறது. 1958ஆம் ஆண்டு ஐ. நா. வின் நாட்டு வருமானப் புள்ளிவிவர ஆண்டு நூலில் (Year Book of National Accounts Statistics), 1953ஆம் ஆண்டிற்குரிய வருமானப் புள்ளிவிவரங்களின்படி ஐக்கிய அமெரிக்க நாடு, நியூசிலாந்து, கனடா, இங்கிலாந்து (U.K.), ஆஸ்திரேலியா, சுவீடன், சுவிட்சர்லாந்து ஆகிய ஏழு நாடுகள் மட்டுமே $1000-க்கு மேல் தனிநபர் வருமானம் பெறுபவைகளாக இருந்திருக்கின்றன. தாய்லாந்து, பொலிவியா, பெல்ஜியன் காங்கோ, சீனு, இந்தியா, பாக்கிஸ்தான், இந்தோனேசியா, பர்மா ஆகிய நாடுகளில் தனிநபர் வருமானம், $100-க்குக் குறைவாகவே இருந்திருக்கிறது. பட்டியலின் இறுதியில்தான் இந்தியா ($57), பாக்கிஸ்தான் ($51), பர்மா ($48) ஆகிய நாடுகள் வருகின்றன. இன்றைய செல்வமிகு நாடுகள் யாவும் மிதமான தட்பவெப்பமுள்ள நிலப் பகுதிகளில் அமைந்துள்ளதும், ஏழ்மை நாடுகளில் பலவும் வெப்ப நிலப் பகுதிகளிலும் மித வெப்பநிலப் பகுதிகளிலும் இயற்கையாகவே அமைந்திருக்கின்றன என்பதும் இங்குக் குறிப்பிடத் தக்கதொன்றாகும்.

ஏற்கெனவேயுள்ள வருமான நிலைகளில் உள்ள வேறுபாடுகள் மட்டுமல்லாமல் அண்மை ஆண்டுகளில் நிலவிவரும் தனிநபர் வருவாய் விளைவு வளர்ச்சி விகிதத்திலும் மிக அதிகமான வேறுபாடுகள் இருக்கின்றன. செல்வமிகு நாடுகளில் மொத்தஉற்பத்தியின் ஆண்டு அதிகரிப்பு விகிதமானது 2.5-லிருந்து 3% வரை உள்ளது. ஆனால், இஃது ஏழ்மை நாடுகளில் 1.5% ஆக மட்டுமேயுள்ளது. ஐக்கிய அமெரிக்க நாடுகள், ஜப்பான், ஆஸ்திரேலியா, சுவீடன், நார்வே போன்ற நாடுகளில் பத்து ஆண்டுகளில் 20% விகிதத்திற்கும் அதிகமாகவே தனிநபர் வருவாய் விளைவு அதிகரித்திருக்கிறது. பருப்பொருள் உற்பத்தி குறைவாகவும், மக்கள் உற்பத்தி அதிகமாகவும்

உள்ள ஏழ்மைமிகு நாடுகளில் தனிநபர் வருவாய் அதிகமாகவே இல்லை, அல்லது தனிநபர் வருவாய் அதிகரிப்பு புறக்கணிக்கத்தக்க அளவில் மிகக் குறைவாகவே இருந்திருக்கிறது.[1] இவ் வேழ்மை நாடுகள் பலவற்றில் இப்போதுள்ள தனிநபர் வருவாய் பிழைப் பூழிய மட்டத்திலேயே இருப்பதால், ஏறத்தாழ 100 ஆண்டுகட்கு முன்னும் இதைவிடக் குறைவான நிலையில் இருந்திருக்க முடியாது. அதாவது இந் நாடுகளில் இக் கால அளவில் மிக மிகச் சிறிய அளவிலேயே தனிநபர் வருவாய் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பது தெளிவாகிறது. இப்போதுள்ள வளர்ச்சி விகிதங்களின் அடிப்படையில் பின்னோக்கிப் பார்த்தால், 18ஆம் நூற்றுண்டின் இறுதி ஆண்டுகளிலும் 19ஆம் நூற்றுண்டின் தொடக்க ஆண்டுகளிலும் இன்றைய செல்வமிகு நாடுகளின் தனிநபர் வருமானம் $10(ஆக இருந்திருக்கலாம். ஆனால் உண்மை நிலை வேருக இருந்திருக்கிறது. 1?ஆம் நூற்றுண்டின் இறுதி ஆண்டுகளில் ஐக்கிய அமெரிக்க நாட்டிலும், இங்கிலாந்திலும் (U.K.,) தனிநபர் வருமானம் அவ்வளவு கீழ் மட்டத்தில் இருந்திருக்கவில்லை. ஆதலால் கடந்த நீண்ட கால அளவில் இந்நாடுகளில் இப்போதுள்ள வளர்ச்சி 'விகிதங்கள் நிலையாக இருந்திருக்க முடியாது. என்றும், வெகு அண்மைக் காலத்தில்தான் இவ் விகிதம் மிக வேகமாக வளர்ந்திருக்க வேண்டுமென்றும் பேராசிரியர் சைமன் குஸ்னெட் அவர்கள் முடிவு செய்திருக்கிருர்.[2]

உற்பத்தி, பகிர்வு, நுகர்வு, சமுதாயப் பொருளாதாரக் கூறு என்ற வருமானத்தின் நான்கு கூறுகளையும் நுணுகி ஆராய்ந்தால் ஏழ்மைமிகு நாடுகளின் தராதர நிலைகளைப் பற்றிய மிகத் தெளிவான கருத்துக்களைப் பெற முடியும்.

1 According to Dr. K. Mukerji of the Gokhale Institute of Politics and Economics, Poona, the per capita income of India stagnated at about Rs. 270 (at 1948-49 constant prices) for thirty years from 1921-22 till national planning movement started. *Papers on National Income and Allied Topics,* Vol. 11, Edited by Dr. V. K. R. V. Rao and others; Indian Conference on Research in National Income, Asia Publishing House, Bombay, 1962, p. 24.

2 Kuznets, Simon, *Six Lectures on Economic Growth,* Free Press; Illinois, 1959; pp. 25-28. Data relating to the U. S A. illustrate the rapid growth of income in that country since the last quarter of the 19th century. U. S. A. in 1875 had a population of 46 million and an annual income of about $ 16 billion which works out to a per capita income of $350. In 1950 population increased to 150 million, annual income to $ 240 billion and income perhead to $ 1600, i. e. in 75 years per capita income increased by four and a half times—Villard, Henry H., *Economic Development,* Rinehart; New York, 1959, p 7.

## 1. வருமானம் : உற்பத்திக் கூறு
(Income : Production Aspect)

நிலம், இயற்கை மூல வளங்கள், மூலதனம் ஆகிய கூட்டு இயக்கக் காரணிகளின் (Co-operant Factors) கிடைப்பருமை தான் ஏழ்மை நாடுகளில் தொழிலாளரின் தனிநபர் விளைவும் தனிநபர் வருமானமும் குறைவாக இருப்பதற்கான முக்கியமான காரணமாக இருக்கிறது. உலக நிலப் பரப்பளவான 35. 7 பில்லியன் ஏக்கரில் 2. 6 பில்லியன் ஏக்கர் மட்டுமே அதாவது மொத்த நிலப்பரப்பில் 7% அளவு மட்டுமே வேளாண்மைக்கு ஏற்றதாக இருக்கிறது. தூரக் கிழக்கிலும் ஆசியாவிலும் உள்ள குறைந்த வருமான நாடுகள் பலவும் அமித மக்கள் தொகையைப் பெற்றிருக்கின்றன. அதோடு இப் பகுதிகளில் வேளாண்மைக்கேற்ற சராசரி விளைநிலங்களின் அளவு மிகக் குறைவாகவே இருக்கின்றது. ஆசியாவில் தனிநபர் விளைநில அளவு 0. 52 ஏக்கர் என்றும், வட அமெரிக்காவில் இது 3. 1 ஏக்கர் என்றும், அதாவது ஆறு மடங்கு அதிகமானதாக இருக்கின்றது என்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இத்தகைய ஏழ்மைமிகு நாடுகளில் வேளாண்மைக்குகந்த நிலங்களில் பெரும்பான்மையானவை ஏற்கெனவே பயன்படுத்தப்பட்டுவருகின்றன. அதாவது வேளாண்மைக்கு உகந்ததாகவும் பயன்படுத்தப் படாமலும் இருக்கும் விளை நிலங்கள் இந் நாடுகளில் அதிக அளவில் இல்லை. மாறாக, ஆஸ்திரேலியா, கனடா போன்ற செல்வமிகு நாடுகள் சிலவற்றிலும், இலத்தீன் அமெரிக்கா போன்ற வருவாய் குறைந்த நாடுகள் சிலவற்றிலும் பயன்படுத்தபடாமலிருக்கும் வேளாண்மைக்குகந்த நிலங்களின் வடிவத்தில் கிடைக்கும் மூல வளங்கள் ஏராளமாக இருக்கின்றன.

எனவே பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாயிருக்கும் காரணிகளில் ஐயத்திற்கிடமில்லாத வகையில் நிலத்தின் கிடைப்பருமையும் முக்கியமான தொன்றாக இருக்கிறது. மக்கள் மிகவும் விரும்பும் பருப்பொருள் உற்பத்தியின் அதிகரிப்பை இந் நாடுகளில் நிலத்தின் அளவை அதிகரிப்பதன் மூலமாகப் பெற முடியாது என்பது இதன் மூலம் தெளிவாகின்றது. அதாவது ஏற்கெனவேயுள்ள நிலங்களை மிகச் சிறந்த முறையில் பயன்படுத்துவதன் மூலமே விளைவு அதிகரிப்பை இந் நாடுகளில் பெற முடியும் என்பது தெளிவாகிறது. ஆனால் அதே நேரத்தில் இந் நாடுகளில் உள்ள சிறந்த நிலங்களின் உள்ளார்ந்த உற்பத்தித் திறனை முழு அளவில் பயன்படுத்துவதிலும் எவ்விதமான மாற்றங்களைப் புகுத்துவதிலும்,

தரம் குறைந்த நிலங்களின் குறைகளை அடக்கி ஆள்வதிலும் பொருளாதாரப் பின் தங்கிய நிலை தடையாய் நிற்கின்றது.[1]

இந் நாடுகளில் கிடைக்கும் கனிப் பொருள்கள் மற்றும் பிற மூலவளங்களைச் சார்ந்த புள்ளி விவரங்கள் மிகக் குறைவானவை யாகவே இருக்கின்றன. மேலும் இந்நாடுகள் பலவற்றில் உள்ள கனிப் பொருள்களின் வளம் மற்றும் நீர் மூலவளங்களின் உள்ளாற்றலைப் பற்றிய அறிவியல் அடிப்படையில் அமைந்த ஆய்வுகள் நடத்தப்பெறவில்லை. பெரும்பாலும் பொருளாதாரத் தில் பின் தங்கிய நிலை இருப்பதற்கு மூலவளங்கள் இல்லை யென்பது காரணமாக இல்லை. மாருக இம் மூலவளங்களைப் பயன் கொள்ளாமல் இருப்பதே காரணமாக அமைகிறது. செல்வ மிகு நாடுகளில் பொறிநுட்பத் துறையில் தோன்றியுள்ள வளர்ச்சியானது பல புதிய மூல வளங்களைக் கண்டுபிடிப்பதில் உதவியுள்ளது. அம் மூல வளங்களின் வணிக மதிப்பை முந்திய காலத்தில் எண்ணிப் பார்த்திருக்கக்கூட முடியாது. வருமானம் குறைவாயுள்ள நாடுகள் சிலவற்றில் இயற்கை மூலவளங்கள் பல பயன்படுத்தபடாமலிருப்பதும் குறிப்பிடத்தக்தாகும். கிடைக்கும் நீர்ச் சக்தியில் ஐரோப்பிய நாடுகள் 60% அளவைப் பயன்படுத்து கின்றன. அதே நேரத்தில் ஆசியாவில் 13% அளவும், மத்திய அமெரிக்காவில் 5% அளவும், தென் அமெரிக்காவில் 3% அளவும், ஆப்பிரிக்காவில் 0.1%-க்குக் கொஞ்சம் அதிகமான அளவும்தான் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.[2]

நிலக்கரி, பெட்ரோலியம், இரும்புத்தாது ஆகியவற்றின் உலக அளிப்பில் ஐக்கிய அமெரிக்க நாடுகள் முறையே 30.2%, 42.1% 27.3% அளவைப் பெற்றிருக்கிறது. நிலக்கரி அளிப்பில் 19.2% ஐயும் பெட்ரோலிய அளிப்பில் 9.9% இரும்புத்தாது அளிப்பில் 24.1% ஐ ரஷ்யா (U.S.S.R.,) பெற்றிருக்கிறது. உலக உற்பத்தியில் இந்தியா 2.5% நிலக்கரியும், 0.03% பெட்ரோலியமும், 1. 5% இரும்புத் தாதும் அளிக்கிறது. நிலக்கரி, பெட்ரோலியம், ஆகியவற்றில் ஜப்பானின் நிலை இந்திய நிலையைப் போன்றதே. ஆனல் இரும்புத் தாதுவைப் பொறுத்தமட்டில் இந்தியாவைக் காட் டிலும் ஜப்பானின் உற்பத்தி மூன்றில் ஒரு பங்கே. ஆனலும்

[1] Buchanan, Norman S. and S. Ellis Howard, *Approaches to Economic Development*, Twentieth Century Fund, New York 1958, pp. 33 37.

[2] Banks, A. L. (Ed.), *The Development fo Tropical and Subtropical Countries*, Edward Arnold Ltd., London, 1954; p. xiv, 70: quoted in Meier; G. M. and R E. Baldwin, *Economic Development*, Asia Publishing House, Bombay; 1957, p. 293.

நாட்டின் நில அளவைக் கருத்தில் கொள்ளும்போது இத்தகைய அடிப்படையான பருப் பொருள்களின் உற்பத்தி மிகக் குறைவான தாகவும், பற்றுக்குறையாகவும் இருப்பது தெளிவாகிறது.

குறைவான சேமிப்பு விகிதத்திற்கும், மூலதன ஆக்கவிகிதத் திற்கும் குறைந்த தனிநபர் வருவாய் காரணமாக அமைகிறது. பொருளாதார வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளில் நிகர மூலதன ஆக்கமானது நாட்டு வருமானத்தில் 12% முதல் 15% அல்லது அதற்கும் அதிகமான அளவினதாக இருக்கிறது. ஆனால் பின் தங்கிய பொருளாதாரங்களில் இது 5% அல்லது அதற்கும் குறை வானதாகவே இருக்கிறது. இது, 1949-ல் மத்திய கிழக்கு நாடுகளில் 6% எனவும், ஆசிய ஆப்பிரிக்க நாடுகளில் 4. 4% எனவும் ஐ. நா. வின் நிபுணர் குழு மதிப்பிட்டுள்ளது.[1] அண்மைக் காலத்தில் ஓரளவுக்கு முன்னேற்றம் தோன்றியிருக்கிற தென்றாலும், வேறுபாடு இன்னும் அதிகமான அளவிலேயே இருக்கிறது.

தொழில் துறையில் மிகவும் முன்னேறியுள்ள நாடுகளோடு ஒப்பிடும்போது குறைந்த வருமான நாடுகளில் உள்ள மூலதனக் கிடைப்பருமையானது அந் நாடுகளில் உள்ள குறைவான மூலதன உழைப்பு விகிதத்தின் (Capital Labour Ratio) மூலம் பிரதிபலிக்கப் படுகிறது. சில நாடுகளில் பொறிவழித் தொழில்களில் பணி ஆற்றும் தலா மனிதனின் மூலதன அளவு பற்றிப் பேராசிரியர் காலின் கிளார்க் (Prof. Colin Clark) அவர்கள் மதிப்பிட் டுள்ளார்.

1949 ஆம் ஆண்டில் ஐ. நா. வின் பொருளாதாரத் துறை யினரால் எடுக்கப்பட்ட கணக்கின்படி ஆசியாவிலும், ஜப்பான் நீங்கலான தூரக்கிழக்கிலும் தலா உழைப்பாளியின் உண்மை மூலதனம் ஐக்கிய அமெரிக்க நாட்டில் உள்ளதில் 10% அளவுதான்[2] சக்தியின் வணிக மூலங்களின் நுகர்வு பல நாடுகளிலும் உள்ள தலா தொழிலாளர் மூலதன (Per worker capital) அளவைக் காட்டும் முதற்படி அளவையாகும்.

1956-ஆம் ஆண்டில் மதிப்பிடப்பட்ட நிலக்கரியின் அடிப் படையில் (மெட்ரிக் டன்கள் அளவில்) பயன்படுத்தப்பட்ட வணிக மூலச் சக்திகளினுடைய நுகர்வின் அளவுகள் கனடாவில் 8.25 ஆகவும் ஐக்கிய அமெரிக்காவில் 8.58 ஆகவும், இங்கிலாந்தில்

[1] *Measures for the Economic Development of Underdeveloped Countries* United Nations, 1951 pp. 35 and 76.

[2] U.N. Department of Economic Affairs, *Econcmic Survey of Asia and the Far East, 1949,* New York, 1950, p. 296.

(U.K.) 5.03 ஆகவும், நார்வேயில் 5.66 ஆகவும், சுவீடனில் 4.59 ஆகவும், மேற்கு ஜெர்மனியில் 3.6 ஆகவும் இருந்தன. ஆனால் சீனாவில் இது 0.18 ஆகவும் பாக்கிஸ்தானில் 0.05 ஆகவும், இந்தியாவில் 0.12 ஆகவும், சிலோனில் 0.08 ஆகவும், பர்மாவில் 0.04 ஆகவும் இருந்தது. சராசரி நுகர்வின் அளவு வட அமெரிக்காவில் 0.59 ஆகவும், தென் அமெரிக்காவில் 0.59 ஆகவும், ஆசியாவில் 0.23 ஆகவும் இருந்தது.

இந்தியாவில் தனி ஒரு நபருக்குக் கிடைக்கும் மூலதனத்தின் அளவு குறைவாக இருப்பதோடு மூலதன ஆக்கமும் மிகவும் குறைவாகவே காணப்படுகிறது. 1968–ஆம் ஆண்டில் சராசரி இந்தியர் ஒருவர் உற்பத்தி செய்ததைப் போன்று 49 மடங்கு அதிகமாக உருக்கையும், 76 மடங்கு அதிகமாக மின்சாரத்தையும் சராசரி அமெரிக்கர் ஒருவர் உற்பத்தி செய்திருப்பதை அட்டவணை காட்டுகிறது.

அட்டவணை 1

1968–ல் உருக்கு, மின்சாரம் ஆகியவைகளின் தலா உற்பத்தி

| நாடு | தலா நபர் உற்பத்தி அளவு | |
|---|---|---|
| | சுத்தம் செய்யப்படாத உருக்கு (கிலோ கணக்கில்) | மின்சாரம் (கிலோவாட்ஸ் கணக்கில்) |
| ஐக்கிய அமெரிக்க நாடு | 593 | 7,141 |
| இங்கிலாந்து | 478 | 4,060 |
| சோவியத் ரஷ்யா | 447 | 2,683 |
| ஜப்பான் | 662 | 2,679 |
| இந்தியா | 12 | 94 |

மூலம் : United Nations Statistical Year Book, 1969.

வருமானம் குறைந்த நாடுகளில் மூலதனப் பற்றுக்குறையும் அமித மக்கள் தொகையுமாகச் சேர்ந்து அங்குள்ள வேலை வாய்ப்புக்களை மிகக் குறுகியதாக்கியிருக்கின்றன. இதன் காரணமாகத் தொழிலாளர்களின் பெரும் பகுதியினர் வேளாண்மை

யையும், பிற வளம்பறித் தொழில்களையும் (Extractive industries) சார்ந்தே இருக்க நேரிடுகிறது. வேளாண்மைத்துறை, தொழில் துறை, மற்றும் மூன்றாவதான துறையில் உள்ள உழைக்கும் மக்களின் மிக உறுதியான அல்லது நெகிழ்வுள்ள உற்பத்தி அமைப்பும் பகிர்வு அமைப்பும் சேர்ந்து ஒரு நாடு அடைந்துள்ள பொருளாதார வளர்ச்சியினைச் சுட்டிக் காட்டும் கருவியாக அமைகிறது. தொழில் மயமாக்குதலில் முன்னேற்றம், பொருளாதார முன்னேற்றம் ஆகியவை நிகழும்போது வேளாண்மைத் துறையிலிருந்து தொழில் துறைக்கு மக்களின் மாற்றமும் சேர்ந்தே நிகழுகின்றது. அதே நேரத்தில் மூன்றாவதான துறையில் இருக்கும் மக்களின் விகிதாச்சார அளவிலும் அதிகரிப்பு தோன்றுகிறது. இவ் வழியில் குறைந்த வருமானமுள்ள நாடுகளின் நிலைகளும் வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளின் நிலைகளும் அட்டவணை 4-ல் ஒப்பிட்டுக் காட்டப்பட்டிருக்கின்றன.

$100-க்குக் குறைவான தனிநபர் வருமானம் பெற்றுள்ள நாடுகளில் உள்ள தொழிலாளர்களில் 60% அளவுக்கும் அதிகமானோர் வேளாண்மைத்துறை, மீன்பிடித் துறை, மற்றும் காட்டுத் துறையில் ஈடுபட்டிருக்கின்றனர்; 15% அளவுக்கும் குறைவானவர்கள்தான் பொறிவழித் துறையில் ஈடுபட்டிருக்கின்றனர். தனிநபர் வருமானம் $600-க்கும் அதிகமாக உள்ள நாடுகளின் நிலை இதற்கு நேர்மாறாக இருக்கின்றது. 40% அளவுக்கும் அதிகமானவர்கள் பொறிவழித் துறையிலும் 15% அல்லது அதற்கும் குறைவான அளவு மக்களே வேளாண்மையிலும் ஈடுபட்டிருக்கின்றனர். பொதுவாகப் பெறப்பட்டிருக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கு உகந்தவாறு மூன்றாவதான துறையில் ஈடுபட்டிருக்கும் மக்களின் விகிதம் அமைந்திருக்கிறது. உலக மக்களில் 60% அளவினர், அதாவது 1.3 பில்லியன் மக்கள் வேளாண்மைத்துறையைச் சார்ந்திருப்பதாக மதிப்பிடப்பட்டுள்ளது இதில் ஆசியா, ஆப்பிரிக்கா, மத்திய அமெரிக்கா, தென் அமெரிக்கா ஆகிய நாடுகளில் மட்டும் ஒரு பில்லியனுக்கும் அதிகமான மக்கள் அதாவது 77% அளவு மக்கள் வாழ்கின்றனர். எல்லா இடத்திலும் பொருளாதாரம் வளரும்போது, தொழிற் பெருக்கமும் ஏற்படுகிறது என்பதை வரலாற்று ஆய்வுகளும் அண்மையில் சைமன் குஸ்னெட், L. H, பீன் (L. H. Bean) காலின் கிளார்க் போன்றோரின் ஆய்வுமுடிவுகளும் உறுதிப்படுத்துகின்றன.[1] தனிநபர் வருவாய் $ 100 ஆக உள்ள நிலையில் நாட்டு வருவாயில்

[1] Kuznets, S.; 'Quantitative Aspects of the Economic Growth of Nations,' *Economic Development and Cultural Change*, July, 1957 Supplement.

பொறிவழித் துறையின் விளைவுகளின் பங்கு 17%-லிருந்து தலா வருவாய் $ 1000 என்ற நிலையில் அது 38 ஆக உயருவதை ஹோலிஸ் B செனரி (Hollis B. Chenery) குறிப்பிடுகிறார். இந் நிலையில் போக்குவரத்து, செய்தித் தொடர்பு ஆகியவற்றின் பங்கு இரட்டிப்பாகின்றது. அதே நேரத்தில் வேளாண்மைத் துறையின் பங்கு 45%லிருந்து 15%ஆகக் குறைகிறது. மேலும் அதே நேரத்தில் பொறிவழி உற்பத்திப் பண்டங்களின் உள்ளமைப்புகளும் மாறுபடு கின்றன. வருமானம் உயரும்போது, முதலீடு செய்யப்பட்டவையும் அதோடு தொடர்புடையவையுமான பண்டங்களின் அளவு அதிகரிக் கின்றது. நுகர்வோர் பண்டங்களின் அளவு குறைகின்றது வருமானம் அதிகரிக்கும்போது உணவுத் தேவையிலும் பிற வேளாண்மைப் பண்டங்களின் தேவையிலும் தோன்றும் அதிகரிப்பு பொறிவழி உற்பத்தி செய்யப்படும் பண்டங்களின் தேவை அதிகரிப்பைக் காட்டிலும் குறைந்த வேகத்திலேயே இருக்கிறது. தொழில்களின் வளர்ச்சி விகிதம் அதிகமாக இருப் பதற்குக் காரணம் தேவை நிலைகள் மட்டுமல்ல; அளிப்பு நிலை களும்தான் என்பது செனரியின் கருத்து.[1]

அதிகமான அளவு மக்கள் செறிந்திருப்பதாலும், தனிநபர் மூலதனம் மிகவும் குறைவாக இருப்பதாலும்தான் நிலத்தைப் பயன்படுத்துவதில் உழைப்பின் உற்பத்தித் திறன் மிகக் குறை வாக இருக்கிறது. 1954-ல் இந்தியாவில் மொத்த உழைப்பாளர் களில் ஏறத்தாழ 70% அளவினர் வேளாண்மைத் தொழிலிலும் அதனோடு தொடர்புடைய பிற தொழில்களிலும் ஈடுபட்டிருந் தாலும், வேளாண்மைத்துறை, மீன்பிடித் துறை மற்றும் காட்டுத் துறை ஆகியவற்றிலிருந்து பெறப்பட்ட பங்கு நாட்டு மொத்த வருவாயில் 48.7% தான். நிலம் உழைப்புவிகிதம் (Land Labour Rate) மிக அதிகமாக உள்ள கனடா போன்ற செல்வமிகு நாடுகள் மக்கள் செறிவு நிறைந்த, குறைந்த வருமான நாடுகள் ஆகிய வற்றை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, உழைப்பின் உற்பத்தித் திறனில் உள்ள வேறுபாடுகளை தனி மனித உற்பத்தி அளவிட்டுக் காட்ட இயலாது. நிலம், மூலதனம் ஆகியவற்றின் தனிநபர் அளவு, தனிநபர் உற்பத்தி அளவின் வேறுபாட்டைப் பெரும் பாலும் விளக்குகிறது. ஆனால் மக்கள் செறிவு மிகுதியாயுள்ள

---

Bean, L. H., ' Internationa\ Industrializatrion and pet capit Income *Studies in Income and Wealth*, Vol. 8, National Bureau of Economic Research, New York, 1946.

Clark, C., *Conditions of Economic Progress*, 3rd edn., Macmillan London 1957.

[1] Chenery, B. Hollis, 'Problems of Industrial Growth,' *American Economic Review*; September, 1960, pp. 624-54.

நெதர்லாந்து, பெல்ஜியம், போன்றவருவாய் மிகுந்த நாடுகளையும் துருக்கி, இலங்கை, தாய்லாந்து போன்ற வருவாய் குறைந்த நாடுகளையும் ஒப்பிட்டுப் பார்த்தாலும் வேளாண்மைத் துறையில் தனிநபர் உற்பத்தி அளவில் பேரளவு வேறுபாடு இருப்பதைக் காட்டுகின்றன. வேளாண்மைத் துறை மட்டுமே முக்கியமானதாக உள்ள ஏழ்மைமிகு நாடுகளில் அவ் வேளாண்மைத் துறையில் கூட மிகுந்த முன்னேற்றமில்லாமலிருப்பதை உலகின் சில நாடுகளில் தனி ஒரு ஏக்கரில் விளையும் நெல்லின் அளவுகளில் உள்ள வேறுபாடுகள் தெளிவாக்குகின்றன.

அட்டவணை 2

பல நாடுகளில் நெல் விளைவுகள்

| நாடு | | 1955-ல் ஒரு ஹெக்டேரில் விளைவு (100 கிலோகிராமில்) |
|---|---|---|
| பிலிப்பைன்ஸ் | ... | 11.9 |
| வியட்நாம் | ... | 12.3 |
| இந்தியா | ... | 12.6 |
| தாய்லாந்து | ... | 14.3 |
| பர்மா | ... | 14.8 |
| பிரேசில் | ... | 15.0 |
| ஐக்கிய அமெரிக்கா | ... | 34.3 |
| ஆஸ்திரேலியா | ... | 45.9 |
| ஜப்பான் | ... | 48.1 |
| இத்தாலி | ... | 51.0 |

மூலம்: Benjamin Higgins, Economic Development Principles' Problems and Policies, Constable. London. 1959, p. 16

கிழக்கு நாடுகளில் நெல் விளையும் நாடுகளில் மிகப் பெரிய நாடுகளான தாய்லாந்து, பர்மா ஆகியவற்றில் உள்ள நெல் விளைவு ஜப்பான், இத்தாலி, ஆஸ்திரேலியா ஆகியவற்றின் விளைவில் $\frac{1}{4}$ பங்காக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பொறிவழித் தொழிலிலும்கூட இத்தகைய வேறுபாடுகள் இருப்பதைக் கவனிக்கலாம்.

## அட்டவணை 3

### 1950–ல் பொறிவழித் துறையில் ஒரு மனித மணியளவில் உற்பத்தி செய்யப்பட்ட நிகர வருமானம் (I. U. வில்)

### Net Income Produced per Man-Hour in Manufacturing in 1950 (In I. U. S.)

| நாடு | I.U.க்கள் | நாடு | I.U.க்கள் |
|---|---|---|---|
| ஐக்கிய அமெரிக்கா ... | 1.404 | இங்கிலாந்து (U.K.) | 0.412 |
| கனடா ... | 1.231 | சில்லி | 0.403 |
| சுவீடன் ... | 0.879 | ஜெர்மனி | 0.395 |
| நியூசிலாந்து ... | 0.806 | பெல்ஜியம் | 0.381 |
| ஆஸ்திரேலியா ... | 0.594 | இஸ்ரேல் | 0.346 |
| டென்மார்க் ... | 0.575 | அர்ஜெண்டைனு | 0.317 |
| பிரேஜில் (1948) ... | 0.547 | பிலிப்பைன்ஸ் (1948) | 0.300 |
| நார்வே ... | 0.497 | பிரான்ஸ் | 0.296 |
| நெதர்லாண்டு ... | 0.459 | ஜப்பான் | 0.236 |
| துருக்கி ... | 0.416 | இந்தியா | 0.174 |

மூலம்: Colin Clark, *Conditions of Economic Progress*, Macmillan London, 3rd edn., pp.336-37

பொதுவாக ஒரு பொருளாதாரம் முன்னேறும்போது மூன்றாவதான துறையில் அல்லது பணித்துறையில் (Service Sector) ஈடுபடும் தொழிலாளர்களின் விகிதம் அதிகமாவதையும் மொத்த வருவாயில், மூன்றாவதான துறையில் உற்பத்தி செய்யப்படும் வருமானத்தின் பங்கு அதிகமாகிக்கொண்டே செல்வதையும் காணலாம். எனவே ஒரு நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்தைக் காட்டும் பரவலானதொரு அளவையாக ஒரு நபருக்குக் கிடைக்கும் அளவு இருக்கிறது பணிகளின் உற்பத்தித்திறன் பல நாடுகளுக்கிடையே வேறுபட இயலாது. என்று பொதுப்படையாகக் கருதப்படுவதுண்டு. ஆனால் அட்டவணை 2-ல் உள்ள புள்ளிவிவரங்கள் தலா நபர் பெறும் பணிகளின் அளவும், பணித் தொழில்களில் தலா மனித மணி யளவின் (Per Capita Man-Hour) உண்மை விளைவும் அந்த நாட்டில் உள்ள வருமான நிலையோடு மிக நெருங்கிய தொடர்புடையவையாக இருப்பதையே காட்டுகின்றன.

அட்டவணை 4
பல நாடுகளில் பணிகளின் தலா அளிப்பும், உற்பத்தித்திறனும்
Productivity and Supply of Services per head in Different Countries

| நாடு | ஆண்டு | பணித்தொழில் களில் தலா-மனித மணியில் உண்மை விளைவு (I.U.வில்) | தலா ஆண்டிற்குத் தலா மனிதனுக்குக் கிடைக்கும் பணிகளின் அளிப்பு (I.U.வில்) |
|---|---|---|---|
| ஐக்கிய அமெரிக்கா | 1950–52 | 1.477 | 721 |
| கனடா | 1950–52 | 1.442 | 637 |
| நியூசிலாந்து | 1950 | 1.214 | 627 |
| ஆஸ்திரேலியா | 1951–52 | 0.850 | 412 |
| பிரான்ஸ் | 1950–52 | 0.781 | 372 |
| இங்கிலாந்து (U.K.) | 1950-52 | 0.697 | 423 |
| அயர்லாந்து | 1950–51 | 0.667 | 308 |
| யூனியன் ஆப் தென் ஆப்பிரிக்கா | 1950 | 0.555 | 192 |
| அர்ஜெண்டைனு | 1951 | 0.475 | 225 |
| சில்லி | 1950 | 0.409 | 190 |
| ஜப்பான் | 1950–52 | 0.391 | 147 |
| இத்தாலி | 1935–38 | 0.347 | 98 |
| பெரு | 1950–51 | 0.247 | 100 |
| கொலம்பியா | 1944–45 | 0.156 | 50 |

மூலம்: Colin Clark, *Condition of Economic Progress*, Macmillan, London, 3rd edn., 1957, p. 377

உற்பத்தித் திறனில் உள்ள வேறுபாடுகள் உழைப்பாளர்களின் தர வேறுபாடுகளின் அடிப்படையில் ஓரளவுக்கு விளக்கப்படவேண்டும். பொது சுகாதாரம், உயிர்நிலை, கல்விநிலை போன்றவற்றில் குறைந்த தரம் இருப்பதும், இடம் பெயரும் தன்மை இல்லாதிருப்பதும் சில நாடுகளில் உள்ள குறைவான உழைப்பின் திறனை ஓரளவுக்கு விளக்குகின்றன. ஆனால் இக்குறைந்த தரங்கள் குறைந்த வருமானங்களின் காரணங்களாக இருப்பதோடு இக் குறைந்த வருமானங்களின் விளைவுகளாகவும் இருக்கின்றன. இவ்வாறு, ஒரு தொழிலாளருக்குக் கிடைக்கும் முதற் கருவிப் பொருள்களின் அளவில் உள்ள வேறுபாடும், வருமான மிகு நாடுகளில் பொறிநுட்பத் துறையில் தோன்றும் மிக வேகமான வளர்ச்சி இருப்பதும், குறைந்த வருமான நாடுகளில் அஃது இல்லாமலிருப்பதுமே, பொறிவழித் தொழில்களில் உள்ள வேறுபாடுகளுக்குக் காரணமாக விளங்கும் காரணிகளில் முக்கியமானவையாகும். தரம் மிகுந்த வேளாண்மை முறைகள் வளர்ச்சி பெற்ற நாடுகளில் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் பின் தங்கிய நாடுகளில் மக்கள் தொகை அதிகமாக இருப்பதன் விளைவாக மேலும் மேலும் தரம் குறைந்த நிலங்களையே நாடவேண்டியிருக்கிறது. இவ்வாறு, வேளாண்மைத் துறையில் உள்ள வேறுபாடுகள் தொடர்ந்து அமைகின்றன. வருவாய் குறைந்த நாடுகளில் உழைப்பின் விலை குறைவாக இருப்பதால், குறைந்த வளமுள்ளவைகளாக இருப்பினும் அந்நிலங்களில் செறிந்த வேளாண்மை முறை பயன்படுத்தப்படுகின்றது. தேவையோடு ஒப்பிடுகையில் பொறிவழித் தொழில்சார் மூலதனம் (Industrial capital) கிடைத்தற்கு அரியதாயிருத்தல், தொழிலாளர்களில் பெரும் பான்மையோர் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டிருத்தல் ஆகிய இந் நிலைகளில் தொழிலாளர்களைப் பொறுத்த மட்டிலும் (குறைந்த அளவு தொடக்க நிலைகளிலாவது) அப் பொருளாதாரம் குறைந்துசெல் விளைவில் செயல்பட்டுக் கொண்டிக்கிறது என்ற எடுகோளை அமைத்துக் கொள்வது நலமாகும் என்று ஹார்வி லீபென்ஸ்டைன் (Harvey Leibenstein) அவர்கள் கருதுகிறார்.[1] குறைவான மூலதன-உழைப்பு விகிதம், நிலம்-உழைப்பு விகிதம் ஆகியவை குறைந்த வருவாய் நாடுகளின் இயல்புகளில் ஒன்றான வேளாண்மைத் துறையில் உள்ள குறைந்த வேலைக்கும் (Under employment in agriculture) மாற்றுருக் காண்ட (Disguised) வேலையின்மை நிலவுவதற்கும் காரணங்களாக அமைகின்றன.

[1] Leibenste in Harvey, *Economic Backwardness and Economic Growth*; Wiley, New York, 1960, p. 56.

உற்பத்தியானது பெரும்பாலும் வெளிநாட்டு வணிக நோக்குடையதாகவே அமைந்திருப்பது குறைந்த வருவாய் நாடுகளின் குறிப்பாகத் தென் அமெரிக்க நாடுகள், கீழ்த்திசையில் மலேயா, இலங்கை போன்ற நாடுகள் ஆகியவற்றின் பொருளாதாரங்களின் சிறப்பு இயல்புகளில் ஒன்றாகும். இந்நாடுகள் சிலவற்றில் நாட்டின் மொத்த உற்பத்தியில் (Gross National-Product) வெளிநாட்டு வணிகம் 30% அளவுக்கு அமைவதாக இருக்கிறது. இலங்கையில் இது40%-க்கும் அதிகமாகவே இருக்கிறது. தவிர, ஏற்றுமதிப் பண்டங்கள் யாவும் பெரும்பாலும் ஒரேயொரு பொருளாகவும் அல்லது ஒருசில மூலப் பொருட்களாகவும் வேளாண்மை உற்பத்திப் பொருள்களாகவுமே இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, போலியாவில் (Bolivia) தகரத் தாதுக்களும், எகிப்தில் பஞ்சும், சில்லியில் (Chile) தாமிரமும், எல்சால்வடோரில் (El Salvador) காப்பியும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. எனவே இப் பண்டங்களுக்குப் பன்னாட்டுச் சந்தையில் தோன்றும் மாறுபாட்டுப் போக்குகளுக்குத் தக்கவாறு ஏற்ற இறக்கங்களை ஏற்கும் தன்மையுடையவையாக இந் நாடுகளின் நாட்டு வருமானங்கள் அமைகின்றன. இப்பண்டங்களை இறக்குமதி செய்யும் நாடுகளில் இம் மூலவளங்களைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் சர்வாதீன உரிமைகள் பெற்ற நிறுவனங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றதாலும், வேளாண்மைப் பொருட்களுக்கு எதிரான வணிக நிபந்தனைகள் தோன்றுகின்றதாலும், ஏற்றுமதி செய்யும் நாடுகளால் இவ்வியற்கை மூலவளங்களை நன்கு பயன்படுத்திக் கொள்ள இயலவில்லை

## 2. வருமானம்: பகிர்வுக்கூறு

(Income : Distribution Aspect)

ஏழ்மை நாடுகளில் பெறப்படும் குறைந்த வருவாயானது செல்வமிகு நாடுகளைவிடச் சமமில்லாமல் பங்கிடப்படுகின்றது. பொருளாதார வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் தொழில் முயல்வோர் அதிகமான அளவு ஆதாயம் அடைய வாய்ப்புக்கள் தோன்றுமாதலால், வருமானம், செல்வம் ஆகியவற்றில் உள்ள வேறுபாடுகளின் போக்கு அதிகரித்துக்கொண்டே செல்லுகின்றது. பொதுவாக, பொருளாதாரத்தில் வளர்ச்சி பெற்ற நாடுகளைக் காட்டிலும் வருமானம் குறைவாயுள்ள நாடுகளில் மொத்த வருமானத்தில் கூலி வருவாய் குறைந்த அளவிலேயே அமைகின்றது. காலின் கிளார்க் அவர்களின் மதிப்பீட்டின்படி ஏறத்தாழ 1950 ஆம் ஆண்டில் ஐக்கிய அமெரிக்கா, இங்கிலாந்து (U.K.) கனடா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, சுவிட்சர்லாந்து போன்ற, வருவாய்

மிகுந்த நாடுகளில் உழைப்பின் பங்கு 70% கும் அதிகமானதாக இருந்திருக்கிறது. ஆனால் சில்லியிலும் மெக்சிகோவிலும் இது 60%-க்கும் குறைவாகவே இருந்திருக்கிறது.[1] ஆனால் மறுபுறத்தில் இவ் வேழ்மை மிகு நாடுகளில் வாரம் என்ற வடிவத்தில் நிலக்கிழார்கள் பெறும் உழைப்பில்லா ஊதியத்தின் (Un earnedI ncome) அளவு மிக அதிகமான அளவாக அமைக்கின்றது. ஒரு மதிப்பீட்டின்படி 1939-40 ஆண்டில் எகிப்தின் வேளாண்மை விளையின் மதிப்பில் 52% அல்லது நாட்டு வருமானத்தில் $\frac{1}{5}$ வாரமாக இருந்திருப்பது தெரிகிறது.[2] வார விகிதங்களில் தோன்றும் ஏற்றங்களைக் காட்டிலும் அதிக வேகமாக வேளாண்மைப் பொருள்களில் விலைகள் உயரும் போது இந்த அளவு ஒரளவுக்குக் குறையுமென்றாலும், அதன் பங்கு இன்னும் மிக அதிகமான அளவிலேயே இருந்துவருகிறது. இக் கருத்து, மத்தியக்கிழக்கு, தெற்கு ஆசியா, தென்கிழக்கு ஆசியா போன்ற பகுதிகளில் உள்ள குறைந்த வருமான நாடுகள் பலவற்றிற்கும் பொருந்துவதாக இருக்கும் என்று பேராசிரியர் போனி (Prof. Bonne) கருதுகிறார். நீர்ப்பாசனம் இல்லாத நிலங்களின் மொத்த விளைவில் $\frac{1}{3}$ லிருந்து $\frac{1}{2}$ பங்கு வரை வாரமாகப் பெறப்படுகிறது என்றும், நீர்ப்பாசன நிலங்களின் மொத்த விளைவில் ஏறத்தாழ $\frac{1}{3}$ பங்கு வாரமாகப் பெறப்படுகிறது என்றும் அவர் கருதுகிறார்.[3] இதைப்பற்றித் திட்டவட்டமான கருத்துக்கள் எவையும் தெரிவிக்கப்பட முடியாது. எனினும், ஐக்கிய அமெரிக்கா, கனடா, போன்ற நாடுகளில் உள்ள வருமானப் பிரிவு வேறுபாடுகள் ஏழ்மை மிகு நாடுகளைக் காட்டிலும் குறைவானவைகளாகவே இருப்பதைப் புள்ளிவிவரங்கள் தெளிவுபடுத்துகின்றன. அமெரிக்காவில் 1946-50 ஆண்டுகளில் மிக அதிகமான அளவு செல்வம் பெற்றிருந்தவர்களில் 10% அளவினர் நாட்டின் மொத்த வருமானத்தில் 30% அளவு தான் பெற்றிருந்தனர். ஆனால் இவ் விழுக்காடு இத்தாலியிலும் இலங்கையிலும் ஏறத்தாழ 35 ஆகவும், எல்சால்டாரில் ஏறத்தாழ 45 ஆகவும் இருந்தது.[4]

[1] Clark, Colin, *Conditions of Economic Progress*, 3rd edn., Macmillan London, 1957; pp. 618-19. According to a recent estimate, the share of wages & income of the self employed persons in India is 24·/. of total national income, Moni Mukerjei; *Papers on National Income and Allied Topics*, Vol. II, Ed. by Dr. V. K. R. V. Rao and others, Asia Publishing House, Bombay; 1962.

[2] Mahmoud, Anis, *National Icome of Egypt*, Cairo. 1950 p. 752, quoted in Alfred Bonne' *Studies in Economic Development*, Routledge and Kegan Paul, London, 1957, p. 40.

[3] Alfred Bonne' *Studies in Economic Development*, Routledge and Kegan Paul, London, 1957, p. 41.

[4] Kindleberger, C.F., *Economic Development*, McGraw Hill, New-York, 1958, p. 8.

வளர்ச்சியடைந்த பொருளாதாரம் உள்ள நாடுகளில் சொத்து வருமானச்செலுத்தல்களில்(Property income payments)தோன்றும் குறைவு காரணமாக மிக உயர்ந்த வருமானம் பெறுபவர்களின் வருமானப் பங்கு குறைந்து செல்லும் போக்கு காணப்படுகிறது. உற்பத்தித்திறன் வேறுபாடுகளில் குறை தோன்றுவதாலும் (அதன் வழியாக ஆதாய விகித வேறுபாடுகள் குறைவதாலும்) வணிகக் கூட்டமைப்புக்கள் தங்களின் வருமானக் கையிருப்பை அதிக அளவில் வைத்துக்கொள்வதாலும் சொத்து வருமானத்தின் பங்கு குறைகிறது. அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் (U.K.,) செல்வமானது சமமில்லாமல் பகிரப்படும் போக்கு மிகவும் குறைந்து வருவதாக அண்மைக்கால ஆய்வுகள் தெளிவுபடுத்துகின்றன.[1] பேரளவு உற்பத்திச் சாதனங்கள் பரவுதல், குறைந்த வருமான மக்கள் வாங்கும் நீண்டகாலநுகர்வுப் பொருள்களின் விலைகள் சரிவடைதல், ஆகியவற்றோடு இந்நாடுகளில் தோன்றும் பணவருவாய் வேறுபாடுகளைக்காட்டிலும் வெகுவேகமாக உண்மை வருவாயில் தோன்றும் வேறுபாடுகள் குறைக்கப்படுகின்றன. சொத்துவருமானத்தின் பங்கு குறையும்போது, நாட்டு வருமானத்தில் கூலியின்பங்கு அதிகரிக்கிறது என்ற இக்கருத்துக்குச் சாலமோன் பேஃபிரிகண்ட் மற்றும் ஜோன் கென்டிரிக் (Solomon Fabricann and John Kendrickt) ஆகியோரின் ஆய்வு முடிவுகளும் ஆதரவு தருகின்றன.

குறைந்த வருமான நாடுகளில் உள்ள வருமானப் பகிர்வில் உள்ள மிகுதியான ஏற்றத்தாழ்வுகள் அந் நாடுகளில் சேமிப்பு விகிதத்தை (Savings ratio) அதிகரிக்க உதவவில்லை. வருமானமானது உண்மையிலேயே ஒரு சிலரிடையே மட்டும் குவிந்திருந்தாலும், தன்னியல்பான மதிப்பில் (in absolute terms) அவ் வருமானத்தைப் பார்த்தால், அது, நாட்டின் வருமானத் தேவையோடு ஒப்பிடுகையில் மிகமிகக் குறைவானதாகவே இருக்கிறது என்பதே இதற்குக் காரணமாகும். மேலும், அவ்வருமானங்களில் பெரும்பகுதி நாட்டின் உண்மை வருவாயைப் பெருக்குவதில் பயன்படுத்தப்படுவதில்லை. மாறாக, பொருளாதாரத் தொடர்பற்ற (Non-economic) முதலீடுகளில் பயன்படுத்தப்படுகின்றன. அல்லது உற்பத்தியில் ஈடுபடுத்தப்படாத வீணான செலவுகளுக்காகச் சிதறடிக்கப்படுகின்றன.

[1] Oshima, Harry. T., 'Consumer Asset Formation and the Future of Capitalism,' *Economic Journal* March, 1961, pp. 23-24.

## 3. வருமானம் : நுகர்வுக் கூறு
(Income : Consumption Aspect)

ஏழ்மைமிகு நாடுகளில் உள்ள குறைந்த அளவு செலவுகளின் நிலை அந் நாடுகளின் குறைந்த அளவு வருமான நிலையைத் தெளிவாகப் பிரதிபலிக்கின்றது. இந் நாடுகளின் செலவின் பெரும்பகுதி இன்றியமையாத பண்டங்களுக்காகவே, குறிப்பாக உணவுப் பொருள்களுக்காகவே செலவிடப்படுகின்றது. பொதுவாகக் குறைந்த வருமானமுள்ள நாடுகளில் மொத்தக் குடும்பச் செலவில் சராசரியாக 50% உணவிற்காகவே செலவிடப்படுகிறது. ஆனால் செல்வமிகு நாடுகளில் இது 50%க்குக் குறைவாகத்தான் இருக்கிறது. சுவீடன், இஸ்ரேல், நார்வே போன்ற நாடுகளில் இது 40%க்குக் குறைவாகவும், சீனு, இந்தியா, பாக்கிஸ்தான், போன்ற நாடுகளில் இது 60%க்குக் அதிகமானதாகவும் இருக்கிறது. மேலும் நுகரப்படும் உணவின் தரத்திலும் பேரளவு வேறுபாடுகள் இருக்கின்றன. ஏழ்மை நாடுகளின் நுகர்வில் தானியங்களே முக்கியமானவையாக இருக்கின்றன. ஆனால் தொழில் மயமான வளர்ச்சி பெற்ற நாடுகளில் உணவு வகைகள் பலவாக இருப்பதோடு மட்டுமல்லாமல், பழம், இறைச்சி, பால், கொழுப்பு, சர்க்கரை போன்றவற்றின் நுகர்வின் அளவு ஏழ்மை நாடுகளைவிட மிக அதிகமாக இருக்கின்றது. ஒவ்வொரு நாளும் ஒரு நபருக்குக் கிடைக்கும் கலோரி அளிப்பின் அடிப்படையில் பார்க்கும்போது (In terms of Suppy of Colorie) தோன்றும் வேறுபாடுகள் வருமானமிகு நாடுகளில் இது 3000-க்கு அதிகமானதாகவும் பின் தங்கிய நாடுகளில் இது 2000 அல்லது அதற்குக் குறைவானதாகவும் இருக்கிறது. இவ்வேறுபாடுகள் அட்டவணை 5-ல் காட்டப்பட்டுள்ளன.

புள்ளி விவரங்கள் சுட்டிக் காட்டுவதைக் காட்டிலும் உண்மையான உணவின் நுகர்வின் அளவு சிறிதளவு அதிகமாகக்கூட இருக்கலாம். அதே நேரத்தில், உண்மை நுகர்வு அளவைச் சரியாகத் தெரிந்து கொள்வதற்கு, அமெரிக்கா போன்ற செல்வமிகு நாடுகளில் கழிவாக எறியப்படும் உணவின் அளவுகளையும் கணக்கில் கொள்ள வேண்டும்.[1]

ஏழ்மை நாடுகளில் பெறப்படும் ஒரு சில சிறப்பான சூழ்நிலைகளையும் கருத்தில் கொள்வது அவசியமாகும். இந்நாடுகளில் குழந்தைகளின் அளவு அதிகமாக இருப்பதால் சராசரி மனிதனின் உணவுத் தேவையும் குறைவானதாகவே இருக்கிறது. தட்ட

[1] Bonne' Alfred, *Studies in Economic Development*, Routledge and Kegan Paul, London, 1957, p. 44.

அட்டவணை 5. உலகில் பல நாடுகளிலும் உணவின் நுகர்வு : (Consumption of food in different countries of the world

தலா நிகர உணவின் அளிப்பு (Net Food Supplies per capita.)

தலா ஆண்டுக்கு கிலோ கிராம் எடையில் (Kilogram per year)

| நாடு | ஆண்டு | தானியங்கள் (மாவாக) | சுத்தப்படுத்தப் பட்ட சர்க்கரை | இறைச்சி | பால் | | கலோரி நாள் ஒன்றுக்கு |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | கொழுப்பு | புரதம் | |
| இங்கிலாந்து | 1959–60 | 84 | 50 | 71 | 7 | 7 | 3290 |
| ஆஸ்திரேலியா | 1959-60 | 88 | 50 | 114 | 7 | 7 | 3260 |
| கனடா | 1959–60 | 71 | 45 | 82 | 8 | 9 | 3150 |
| அமெரிக்கா | 1960 | 66 | 41 | 95 | 8 | 9 | 3120 |
| அர்ஜென்டைனா | 1957–59 | 115 | 34 | 109 | 4 | 4 | 3090 |
| சுவிட்சர்லாந்து | 1959–60 | 83 | 41 | 54 | 10 | 10 | 2980 |
| நெதர்லாந்து | 1959–60 | 86 | 40 | 44 | 8 | 9 | 2970 |
| பிரான்ஸ் | 1959–60 | 107 | 32 | 74 | 6 | 7 | 2940 |
| ஜெர்மனி (பெடரல் ரிபப்ளிக்) | 1960–61 | 83 | 29 | 57 | 6 | 7 | 2940 |
| துருக்கி | 1958–59 | 199 | 10 | 13 | 3 | 3 | 2850 |
| இஸ்ரேல் | 1957–59 | 123 | 29 | 29 | 4 | 5 | 2780 |
| இத்தாலி | 1960–61 | 142 | 21 | 27 | 4 | 4 | 2740 |
| பிரேசில் | 1957 | 106 | 31 | 29 | 2 | 2 | 2640 |
| தென் அமெரிக்கா | 1959 | 140 | 41 | 43 | 3 | 3 | 2580 |
| சில்லி | 1957 | 129 | 37 | 31 | 3 | 3 | 2570 |
| ஜப்பான் | 1959 | 151 | 14 | 6 | 1 | 1 | 2210 |
| சிலோன் | 1960 | 138 | 19 | 3 | 1 | 1 | 2150 |
| பிலிப்பைன்ஸ் | 1958 | 127 | 13 | 10 | — | 1 | 2100 |
| இந்தியா | 1 58-5 | 136 | 14 | 2 | 3 | 2 | 1980 |
| பாக்கிஸ்தான் | 1957-59 | 153 | 15 | 4 | 2 | 2 | 1970 |

மூலம் : Statistical Year Books 1961, U. N,

வெப்ப வேறுபாடுகளும் உடல் வலிமை வேறுபாடுகளும் நல்ல சுகாதார நிலையை நிலை நிறுத்துவதற்கான தேவைகளைக் குறைக்கிறது. மேலும், வேளாண்மையையே முக்கியமான தொழிலாகக் கொண்டுள்ள பல நாடுகளில் உணவின் பல இனங்கள் அவைகள் விளைவிக்கப்படும் பண்ணைகளிலேயே நுகரப்பட்டுவிடுவதால், அளவைப்படுத்துதல், மதிப்பீடுகள் செய்தல் போன்றவற்றிற்கு அவைகள் உட்படுவதில்லை. ஆனால் இக் குறைகளுக்கெல்லாம் தள்ளிக் கணிப்பு செய்யப்பட்டாலும்கூட வளர்ச்சி பெற்ற நாடுகளைவிட ஏழ்மைமிகு நாடுகளில் உணவு நுகர்வின் அளவு மிக மிகக் குறைவானதாகவே இருக்கிறது. பிழைப்பூழிய நிலைக்குத் தேவையான 1800 கலோரியைக் காட்டிலும் சிறிதளவே அதிகமாக உள்ள 2000 கலோரி அளவு சராசரி அளிப்பாக உள்ள நாடுகளில் தனிநபர் வருமானம் $100 அல்லது அதற்குக் குறைவாகவே இருக்கிறது என்ற கருத்து உறுதியானதாகத் தென்படுகின்றது. இந்த 2000 கலோரி அளவு என்பது சராசரி அளவாக இருப்பதால், இப் பின்தங்கிய நாடுகள் பலவற்றிலும் பிழைப்பூழிய நிலைக்கு மிகவும் குறைந்த நிலையிலேயே பெரும்பான்மையான மக்கள் பெறுகின்றனர் என்பது தெளிவாகிறது.

குறைவான கலோரி மதிப்புள்ள பண்டங்களில் அதிகமான அளவு செலவிடப்படுகின்றது. இதிலிருந்து சராசரி ஒரு குடும்பத்தின் வருவாயில் பெரும் பங்கு உயிர் உடலில் ஒட்டியிருப்பதற்கான நிலையை உண்டுபண்ணுவதற்காகவே செலவிடப்படுகிறது என்பது தெளிவாகிறது. பிற இன்றியமையாத பண்டங்களுக்காகவும், வாழ்க்கைக்குத் தேவைப்படும் சாதாரணமான வசதிப் பண்டங்களுக்காகவும் மேற்கொள்ளப்படும் செலவுகள் இதனால் வெகுவாகக் குறைக்கப்படுகின்றன, அல்லது முழுவதுமாகத் தவிர்க்கப்படுகின்றன. மொத்தச் செலவில் வீடு, துணி ஆகியவற்றிற்காகச் செலவிடப்படும் பகுதி ஏழ்மை நாடுகளில் 20% ஆகவும், நார்வே, சுவீடன், அமெரிக்கா போன்றவற்றில் 40% அல்லது அதற்கு அதிகமானதாகவும் இருக்கின்றது. இங்கு எவைஎவை இன்றியமையாதவை, எவைஎவை அப்படியில்லாதவை என்பதை நிருணயிருப்பதில் தட்ப வெப்ப நிலை மிகவும் முக்கியமான பங்கு வகிக்கிறது. ஆனாலும் இந்நாடுகளில் நிலவும் மிகக் குறைந்த வீட்டு வசதிகளைத் தட்பவெப்ப நிலைகள் மட்டும் விளக்க முடியாது. மிகவும் வருந்தத்தக்க முறையில் வழிமுறைகளின் இல்லாமையே இதை நன்கு விளக்குகிறது. 1946ஆம் ஆண்டின் தொழிலாளர் ஆய்வுக்குழுவின் அறிக்கை (Report of the Labour Investigation Committee, 1946)

மக்கள் தொகை அறிக்கைகள் ஆகியவற்றில் இந்திய ஆலைத் தொழில் நிறுவனங்களின் தொழிலாளர்கள் மலைக்கத் தக்க வாழ்க்கை நிலைகளைப் பெற்றிருக்கும் மலைத்தோட்டப் பண்ணைத் (Plantation) தொழிலாளர்கள் ஆகியவர்களின் வாழ்க்கைச் சூழ்நிலைகள் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் யாவும், நாட்டின் சமூகப் பொருளாதாரப் பின் தங்கிய நிலையைச் சுட்டிக் காட்டுபவைகளாக அமைந்திருக்கின்றன. மேலும் பணிகள், பொறி வழித் தொழில் பண்டங்களின் மிக மிகக் குறைவான அளவு நுகர்வு, ஆகியவை பொதுவான ஏழ்மை நிலையை நன்கு பிரதிபலிப்பனவாக அமைந்துள்ளன. முற்றுப் பெற்ற ஆலைப் பண்டங்களின் ஆண்டுத் தனிநபர் அளிப்பின் அளவு (Annual Per capiia Supply) மதிப்பு அமெரிக்காவில் $254 ஆகவும், இங்கிலாந்து (U.K.,) ஜெர்மனி மற்றும் சில தொழில் மயமான நாடுகளில் 164 ஆகவும், ஜப்பானில் $28 ஆகவும், சீனு, இந்தியா ஆகிய நாடுகளில் $3 ஆகவும் 1926-29 ஆண்டுகளில் இருந்ததாக 1945-ல் வெளியிடப்பட்ட சர்வதேசச் சங்கத்தின் (League of Nations) வெளியீடொன்றிலிருந்து பேராசிரியர் போனி சுட்டிக் காட்டுகிறுர்.[1] முன்னேற்றங்கள் பல தோன்றியிருப்பினும் வளமிக்க நாடுகளுக்கும், ஏழ்மை மிகு நாடுகளுக்கும் இடையே இதைச் சார்ந்துள்ள வேறுபாடுகள் அதிகமான அளவில் மாறுபட்டிருக்க முடியாது. 1953-57-ல் அமெரிக்காவில் வியாபாரத்திஞல் வாங்கப்பட்ட கட்டமைப்புக்கள், சாதனங்கள் ஆகியவைகளில் 120% அளவை வீட்டுக்காரர்கள் வாங்கியுள்ளனர். ஆனல் இவ் விழுக்காடு ஜப்பானில் 1955-ல் 35தான்.[2] ஜப்பானைவிடக் குறைந்த நிலையிலிருக்கும் இந்தியா போன்ற நாடுகளில் இது 35-க்கும் குறைவாகவே இருக்கும். செய்தித் தாள்களின் நுகர்வு, வானெலிப் பெட்டி, பயணிகள் உந்து, நீண்டகால ஆடம்பரப் பொருள்கள். நீண்டகாலப் போலி ஆடம்பரப் பொருட்கள் ஆகியவற்றின் நுகர்வு போன்றவைகள் ஒரு நாடு பெற்றிருக்கும் வாழ்க்கைத் தரத்தைச் சுட்டிக் காட்டுகின்றன. செல்வ மிகு நாடுகளிலும் ஏழ்மை மிகு நாடுகளிலும் இவ் வகையில் உள்ள பேரளவு வேறுபாடுகள் அட்டவணை 6-ல் காட்டப்பட்டுள்ளன.

செய்தித் தாள்களின் ஆண்டு நுகர்வின் தலா அளவு பிரான்ஸ் நீங்கலான பிற வளர்ச்சியடைந்த நாடுகளில் 20 கிலோ கிராம்

[1] *Industrialization and Foreign Trade*, League of Nations, 1945, p. 22, quoted in Alfred Bonne *Economic Development*, Routledge and Kogan Paul, London, 1957, p. 50.

[2] Oshima, Harry T., 'Consumer Asset Formation and the Future of Capitalism,' *Economic Journal*; March; 1961, p. 20.

## அட்டவணை-6

### செய்தித்தாள், வானொலிப்பெட்டி, பயணிகள் உந்து ஆகியவற்றில் சில நாடுகளின் நுகர்வு

### Consumption of Newsprint and the number of Radios and Passenger Cars in Some Countries

| நாடு | மக்கள் தொகை (1000-ல்) | செய்தித்தாள் நுகர்வு தலா அளவு (கிலோ கிராம்) | வானொலிப் பெட்டிகள் (1000-ல்) | வானொலிப் பெட்டிக்கு மக்களின் விகிதம் | பயணிலிருக்கும் பயணிகள் உந்து (1000-ல்) | பயணிகள் உந்துக்கு மக்களின் விகிதம் |
|---|---|---|---|---|---|---|
| அமெரிக்கா | 180,676 | 36.6 | 170,000 | 1.1 | 61,431 | 2.9 |
| கனடா | 17,814 | 27.9 | 8,050 | 2.2 | 4,104 | 4.3 |
| ஆஸ்திரேலியா | 10,275 | 30.2 | 2,284 | 4.5 | 1,924 | 5.3 |
| சுவீடன் | 7,480 | 26.0 | 2,744 | 3.1 | 1,088 | 6.9 |
| பிரான்ஸ் | 45, 542 | 10.4 | 10,981 | 4.2 | 5,550 | 8.2 |
| இங்கிலாந்து (U.K.,) | 52, 383 | 24.9 | 15,163 | 3.5 | 5,542 | 9.5 |
| அர்ஜென்டைனு | 20, 006 | 7.5 | 3,350 | 5.9 | 402 | 49.8 |
| சிலோன் | 9,896 | 1.0 | 279 | 35.5 | 83 | 119.2 |
| ஜப்பான் | 93, 200 | 7.7 | 14,635 | 6.4 | 420 | 221.9 |
| துருக்கி | 27, 829 | 0.8 | 1,341 | 20.7 | 46 | 604.9 |
| பர்மா | 20, 662 | 0.5 | 115 | 179.9 | 18 | 1,147.9 |
| இந்தியா | 432, 567 | 0.2 | 2,148 | 201.4 | 280 | 1,544.9 |
| பாக்கிஸ்தான் | 92. 727 | 0.1 | 250 | 370.9 | 52 | 17,83.2 |

**Data relate mostly to 1960. Source:** ***Statistical year Book*** **1961, U.N.**

அளவுக்கு அதிகமாகவும், இந்தியாவில் 0.2 ஆகவும், பாக்கிஸ்தானில் 0.1 ஆகவும் இருந்திருக்கிறது. அமெரிக்காவில் சராசரி மூன்று நபர்களுக்கு ஒரு பயணிகள் உந்தும், கனடாவில் நால்வருக்கொரு பயணிகள் உந்துமாக இருந்திருக்கின்றன. ஆனால், இருக்கும் உந்துகளின் எண்ணிக்கைக்கும் மக்கள் தொகைக்கும் உள்ள விகிதம் இந்தியாவில் 1545 ஆகவும், பாக்கிஸ்தானில் 1783 ஆகவும் இருந்திருக்கிறது.

## 4. வருமானம் : சமுதாயப் பொருளாதாரக் கூறு (Income: Socio Economic Aspect)

ஏழ்மை மிகு நாடுகளுக்கே உரித்தான சமுதாய, மக்கள் தொகைப் பண்புகளும் குறைந்த வாழ்க்கைத்தரமும் ஒருங் கிணைந்தே செல்லுகின்றன. ஒரு சதுரக் கிலோ மீட்டரின் மக்கள் செறிவு மத்திய அமெரிக்க நாடுகள், தென் அமெரிக்க நாடுகள் ஆகியவற்றில் மிகக் குறைவாக இருக்கிறது. பெல்ஜியம், ஜெர்மனி, நெதர்லாந்து, இங்கிலாந்து (U.K.) ஆகிய தொழில்மயமான ஐரோப்பிய நாடுகளில் உள்ளதைப் போல, அந்த அளவுக்குப் பின் தங்கிய நாடுகளில் மக்கள் அடர்த்தி இல்லாவிட்டாலும் மூல வளங்கள், வேலை வாய்ப்புக்கள் ஆகியவற்றின் அடிப்படையில் பார்க்கும்போது இந்த நாடுகளில் உள்ள அமித மக்கள் தொகை யானது வேகமான பொருளாதார வளர்ச்சிப் பாதையில் முக்கிய மானதொரு இடையூறாக இருக்கிறது. ஒரு சதுரக் கிலோ மீட்டருக்கு 252 நபர்கள் உள்ள ஜப்பான் நாடு ஆசிய நாடுகளுக் குள்ளேயே மிகுந்த மக்கள் அடர்த்தியுள்ளதாக இருக்கிறது. இலங்கையில் மக்கள் அடர்த்தி 151 ஆகவும்.இந்தியாவில் இது 136 ஆகவும் இருக்கிறது. இதற்கு மாறாக, அர்ஜென்டைனா, பிரேசில், சில்லி, கொலம்பியா, வெனிசுலா ஆகிய தென் அமெரிக்காவின் ஐந்து நாடுகளில் ஒரு சதுரக் கிலோ மீட்டருக்கு 9 நபர்களே இருக் கின்றனர். அதோடு உலகின் செல்வம் கொழிக்கும் நாடுகள் சில வற்றில் நிலவும் உழைப்பு விகிதம் மிக அதிகமானதாக இருக்கிறது. இவ்வாறாக ஐக்கிய அமெரிக்காவில் தலா சதுரக் கிலோமீட்டருக்கு மக்கள் அடர்த்தி 19 ஆகவும், நியூசிலாந்தில் இது 9 ஆகவும், கனடா வில் 2 ஆகவும், ஆஸ்திரேலியாவில் ஆகவும், இருக்கின்றது.[1] உலகில் பொருளாதாரத்தில் பின் தங்கியுள்ள நாடுகளில் அண்மை ஆண்டுகளில் தோன்றியுள்ள மக்கள் பெருக்க விகித வளர்ச்சி யானது, மக்கள் தொகைச் சிக்கலை மிகுதிப்படுத்தியிருக்கிறது. இந்த நாடுகள் பலவற்றில் மக்கள் தொகை வளர்ச்சி ஆண்டு

[1] *Statistical Year Book 1961,* U. N.

ஒன்றுக்கு 3% ஆகவும், வளர்ச்சி பெற்ற நாடுகளில் இது 2%-க்குக் குறைவாகவும் இருக்கிறது. வருமானம் குறைந்த நாடுகளில் உள்ள மக்களில் 0-15 வயது எல்லையில் மிகுதியான அளவு மக்களும் 20-60 வயது எல்லையில் வளர்ச்சி பெற்ற நாடுகளில் இருப்பவர் களின் அளவைக் காட்டிலும் குறைவான மக்களும் இருப்பதானது மேலும் ஒரு மக்கள் தொகைச் சிக்கலைத் தோற்றுவித்திருக்கிறது. அதாவது ஏழ்மைமிகு நாடுகளில் உழைக்கும் வயது எல்லையில் உள்ள ஒரு உறுப்பினரைச் சார்ந்திருப்போரின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது.[1] கிராமப் பகுதிகளைக் காட்டிலும் நகர்ப் பகுதிகளில் மக்கள் வளர்ச்சி மிக அதிகமாக இருப்பதானது இந் நாடுகளின் மக்கள் தொகைச் சிக்கலில் உள்ள மற்றுமொரு கூறாகும். இத்தகைய சமநிலையற்ற அதிகரிப்பு, தொழில்மயமாக்கு தலின் தொடக்க நிலைகளில் உள்ள குண இயல்பாகும். வளர்ச்சி பெற நாடுகளிலிருந்து வந்த நகர்த்துறைப் பெருக்கம் இப்போது அதன் வேகத்தை இழந்துவிட்டது. இருபதாம் நூற்றுண்டின் முதற் பகுதியில் எகிப்து, பியூர்டோரிக்கோ, (Puerto Rico) ஜப்பான் ஆகிய நாடுகளின் நகர்வாழ் மக்கள் தொகை இரண்டு மடங்குக்கும் அதிகமாகப் பெருகியது. ஆனால் அதே காலத்தில் இங்கிலாந்து (U.K.,) பிரான்சு போன்ற நாடுகளில் நகர்வாழ் மக்கள் தொகைப் பெருக்கம் புறக்கணிக்கத்தக்க அளவிற்கு மிகக் குறைவாக இருந்திருக்கிறது. இத்தகைய மக்கள் தொகைச் சிக் கலும், நகர்ப் பகுதிகளில் மக்கள் செறிந்து அதிகரிக்கும் போக்கும் சுகாதாரமில்லாத வாழ்க்கை நிலைகள், வேலையின்மை, சுகாதார மின்மை, வறுமை ஆகிய பல பொருளாதாரச் சமுதாயச் சிக்கல் களைத் தோற்றுவிக்கின்றன.

குறைந்த வருமானம், தரம் குறைந்த பேணல், பற்றுக்குறை வீட்டு வசதிகள், மிக மோசமான வாழ்க்கை நிலைகள் ஆகியவைகள் ஒருங்கே திரட்சிக் காரணிகளாகிச் (Cumulative factors) சுகாதாரத்தின் தரத்தை மிக மிகக் குறைவான நிலையிலிருத்தவே உதவியுள்ளன. குழந்தைகள் மரண விகிதமும், எதிர்பார்க்கும் ஆயுட்கால அளவும் பல நாடுகளில் நிலவும் பொதுச் சுகாதாரத் தைப் பரவலாகச் சுட்டிக் காட்டுகின்றதெனலாம்.

தனிநபர் வருமானத்திற்கும் எதிர்பார்க்கும் ஆயுட்கால அளவுக்கும் இடையே நேர்முகத் தொடர்பு இருப்பதும், வருமானத் திற்கும் குழந்தை மரண விகிதத்திற்கும் இடையே தலைகீழ்த் தொடர்பு இருப்பதும் புள்ளிவரங்களிலிருந்து மிகத் தெளிவாகப்

[1] அத்தியாயம் 4-ல் இப்பகுதி விரிவாக ஆராயப்பட்டிருக்கிறது.

பெறப்படுகிறது. $1000–க்கு அதிகமான தனிநபர் வருமானத்தை யுடைய நாடுகளில் எதிர்பார்க்கும் ஆயுட்கால அளவு 68 ஆண்டு களாகவும், குழந்தை மரண விகிதம் 1000-க்கு 32 என்றும் இருக் கிறது. எதிர் பார்க்கும் ஆயுட்காலம் 72 ஆண்டுகளாகவும், குழந்தை மரண விகிதம் 17.0 ஆகவும் உள்ள சுவீடன் நாடு இவ் வட்டவணையில் முதன்மையானதாக விளங்குகிறது. இதற்கு நேர் மாருக, $100–க்கும் குறைவான தனிநபர் வருமானம் உள்ள நாடு களில் எதிர்பார்க்கும் ஆயுட்கால அளவு 50 ஆண்டுகளாகவும் அல்லது அதற்குக் குறைவானதாகவும், குழந்தை மரண விகிதம் 1000–க்கு 70–க்கு மேற்பட்டதாகவும் இருக்கிறது. உருக்கி நோயால் இறப்பவர்களின் விகிதம் 1939–ல் தனிநபர் வருமானம் $200–க்கு அதிகமாக உள்ள நாடுகளில் ஒரு லட்சம் மக்களுக்கு 64 என்றும், ஒரு ஆண்டுக்கு $100–க்குக் குறைவான தனிநபர் வருமானமுள்ள நாடுகளில் இது 333 ஆகவும் இருந்திருக்கிறது.

தரம் குறைந்த மருந்துசார் வசதிகளுக்கும், பொதுச் சுகாதார வசதிகளுக்கும், கல்வி வசதிகளுக்கும் குறைந்த வருமானம் அடிப் படைக் காரணமாக இருக்கிறது. 1945-54 ஆண்டுகளில் 10 வயதிற்குக் குறைவானவர்களில் கல்வியறிவு இல்லாதவர்களின் விழுக்காடு ஆஸ்திரேலியா, கனடா, இங்கிலாந்து (U.K.,) அமெரிக்கா ஆகியவற்றில் 5 ஆக இருந்திருக்கிறது. ஆனல் இது மெக்சிகோவில் 62 ஆகவும், எகிப்தில் 75 ஆகவும், இந்தியாவில் 82 ஆகவும், இந்தோனேசியாவில் 92 ஆகவும் இருந்திருக்கிறது. 1951–53-ல் தலா மருத்துவருக்குரிய குடிமக்களின் எண்ணிக்கை அமெரிக்காவில் 770 ஆகவும், கனடாவில் 950 ஆகவும், ஆஸ்திரேலி யாவில் 1,000 ஆகவும், இங்கிலாந்தில் (U.K.) 12,00 ஆகவும் இருந் திருக்கிறது. ஆனல் குறைந்த வருமான நாடுகளான பிரேசில் நாட்டில் 3,000 நபர்களுக்கும், எகிப்தில் 3,600 நபர்களுக்கும், இந்தியாவில் 5,700 நபர்களுக்கும், இந்தோனேசியாவில் 71,000 நபர் களுக்கும் ஒரேயொரு மருத்துவரே இருந்தனர்.[1]

இப்போது, குறைந்த வருமான நாடுகளுக்கே உரித்தான பொருளாதாரச் சமுதாய நிலைகளைச் சுருக்கமாகக் காணலாம். மொத்த வருமானமும் தனிநபர் வருமானமும் குறைவாயிருத்தல், நிலம், இயற்கை மூலவளங்கள், மூலதன வளங்கள் முதலியவை தலா நபருக்குக் குறைவான அளவிலேயே கிடைத்தல், அதன் வழியாகத் தோன்றக்கூடிய தொழிலாளர்களின் வருவாய்க்

[1] Higgins, Benjamin; *Economic Development*, Norton, New York; 1959, p. 20.

குறைவு, சேமிப்புக் குறைவு, மூலதன ஆக்கக்குறைவு ஆகியவைகளை விளக்கும் தொழிலாளர்களின் உற்பத்தித்திறன் குறைவாக இருத்தல், வாழ்க்கை வருவாய்க்காக வேளாண்மை மற்றும் பிற வளம்பறித் தொழில்களிலேயே (Extractive Industries) மக்களின் பெரும்பான்மையோர் ஈடுபட்டிருத்தல், தனிநபர் நில அலகின் உற்பத்தியும் தலா நபரின் உற்பத்தியும், வேளாண்மைத் துறையின் மிகக் குறைவாக இருத்தல், செல்வம் வருமானம் ஆகியவற்றின் பகிர்வில் மிகுதியான அளவு வேறுபாடுகள் இருத்தல், ஒரு சில சொத்துரிமைக்காரர்களிடம் மட்டுமே செல்வம் செறிந்திருத்தல், நுகர்வின் அளவு மிகக் குறைவாக இருத்தல், உணவுக்காகவே அதிகமான அளவு வருமானத்தைச் செலவிடுதல், மிகவும் மோசமான வீட்டு வசதிகளைப் பெற்றிருத்தல், வாழ்க்கைக்குத் தேவையான மிகச் சாதாரணமான வசதி விருப்பங்களுக்காச் செலவிடப்படும் தொகை புறக்கணிக்கத்தக்க வகையில் மிக அற்பமான அளவாக இருத்தல், மக்கள் அடர்த்தி மிகுதியாயிருத்தல், மக்கள் பெருக்க வீதம் மிக அதிகமாக இருத்தல், குழந்தை மரண விகிதம் அதிகமாக இருந்தல், ஆதாயமில்லாத வகையில் பல வகை வயது எல்லைகளில் மக்கள்பரவலைப் பெற்றிருத்தல், நகர்ப் பகுதிகளில் மக்கள் செறிவு மிகுதியாக இருத்தல், எதிர்பார்க்கும் ஆயுட்கால அளவு, பற்றுக்குறை மருத்துவ வசதி, தரம் குறைந்த பொதுச் சுகாதார நிலை போன்ற பல பாதகமான நிலைகளைப் பெற்றிருத்தல் போன்றவைகள் எல்லாம் இன்றைய உலகில் பின்தங்கிய ஏழ்மைமிகு நாடுகளின் பொதுவான குண இயல்புகளாக இருக்கின்றன. ஏழ்மைமிகு நாடுகளில் இத்தகைய இயல்புகள் எல்லாம் ஒருங்கிணைந்து திரண்டு செயல் படுகின்றன. ஆனல் மறுபுறத்தில் இவைகளுக்கு நேர்மாறுன இயல்புகள் எல்லாம் இருந்து பொருளாதார நடவடிக்கை நிலைகளில் உறுதியான உயர்வைப் பெறுவதற்குகந்த வகையில் ஒருங்கிணைந்து செயல்படுகின்றன. இத்தகைய தீங்கிழைக்கும் காரணிகளின் கெட்ட சுழலிருந்து தப்பித்து, மேம்பட்ட வாழ்க்கைநிலைக்கு முன்னேறுவது என்பதையே பொருளாதார வளர்ச்சி எனலாம். வளர்ச்சிக்கு இடையூறுக இருக்கும் இத்தகைய தடைகளில் சிலவற்றைத் தகர்த்தெறிவதில் பெற்றுள்ள வெற்றியிலிருந்து பிற தடைக் காரணிகளின் பளுவையும் தூக்கி எறிய முடியுமென்பது தெளிவாகிறது எனவே கிடைத்தற்கரிய உள்நாட்டு மூலவளங்களை மிக நல்ல முறையில் பயன்படுத்துவதன் மூலம் அல்லது பேரளவில் பெறப்பட்ட அந்நிய உதவிகளின் மூலம் ஏற்படுத்தப்படும் முதலீட்டு விகித வளர்ச்சியானது, உற்பத்தித் திறன் நிலைகளையும், மொத்த வருமானத்தையும், தனிநபர் வருமானத்தையும் உயர்த்த உதவுவதோடு, முதலீட்டில் மேன்

மேலும் உயர்வு ஏற்பட உதவும். மொத்த வருமானத்திலும் தனிநபர் வருமானத்திலும் தோன்றும் உயர்வானது பருப்பொருள் உற்பத்தித்திறனை அதிகரிக்கவும், கல்வி நிலை மேம்படவும், மேம் பட்ட பொறிநுட்பத் துறையில் வளர்ச்சி பெறவும், பிறப்பு விகிதத்தைக் குறைக்கவும் உதவி செய்து, அதன் வழியாகப் பொருளாதார இயக்க விசையை மேல் நோக்கி நிலைநிறுத்தத் திரண்டு உதவி செய்கிறது. ஒரு பொருளாதாரம் மேற்கூறப் பட்டுள்ள தீங்கிழைக்கும் காரணிகளால் ஆக்கப்படும் கெட்ட சுழலுக்குள்ளேயே சென்றுகொண்டிருக்கும்வரை அஃது ஏழ்மை நாடாகவே தொடர்ந்து இருக்கும். அக் காரணிகளை உடைத் தெறிவதிலும், முன்னேற்றத்தின் தொடக்கநிலைத் தடை களிலிருந்து விடுபடுவதிலும் பெறும் வெற்றியிலுமே ஒரு நாட்டின் பொருளாதார மீட்பு இருக்கிறது. மேற் குறிப்பிடப்பட்ட காரணி களால் கீழ் நிலையில் வைக்கப்பட்டிருக்கும் பொருளாதார முன் னேற்றம் உள்ள நாடுகள் குறைவான வளர்ச்சி பெற்ற நாடுகள் என்றும், இவ் விடர்ப்பாடுகளைத் தவிர்த்து மிக உயர்ந்த உறுதியான வளர்ச்சியை நிலை நிறுத்தத் தேவையான சூழ்நிலைகளை உருவாக்கிக்கொண்ட பிற நாடுகள் வளர்ச்சி பெற்றவை என்றும் குறிப்பிடப்படுகின்றன "வளர்ச்சியடைந்த" ("Developed") "குறைந்த வளர்ச்சியடைந்த" ("Underdeveloped") என்ற சொற்கள் இருபொருள் மயக்க நிலையிலிருந்து விடுபடாமலிருந் தாலும் உலகின் பல நாடுகளைத் திட்டவட்டமாகப் பிரித்தெடுப் பதற்கு நமக்கு அவை உதவாவிட்டாலும், பல நாடுகளின் தராதர வளர்ச்சிப் பருவ நிலைகளைப் பரவலாகச் சுட்டிக் காட்டு வதில் மிகவும் உதவுகின்றன. இம் முறையில் வகைப்படுத்தப்படும் நாடுகளின் பொருளாதார வேறுபாடுகளைப்பற்றிய நமது எண்ணங்கள் தெளிவாக இருக்கவேண்டும். அதற்கு உதவியாக உள்ள 'குறைந்த வளர்ச்சி' என்பதன் சில அடிப்படை இயல்பு களைப் பற்றி இவண் குறிப்பிடுவது அவசியமாகிறது, முதலாவதாகக் குறைந்தவளர்ச்சியுள்ள நாடுகள் பொதுவாகக் குறைவான தனிநபர் வருமானத்தையே பெற்றிருக்கின்றன. இங்குப் 'பொதுவாக' என்ற சொல் மிகவும் இன்றியமையாதது. ஏனெனில் மிக உயர்ந்த தனிநபர் வருமானமுள்ள குவையட் (Kuwait) போன்ற நாடுகள் சிலவும் இருக்கின்றன. அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா, மேற்கு ஐரோப்பா ஆகியவற்றின் தனிநபர் உண்மை வருவாய் களோடு ஒப்பிடும்போது குறைந்த தனிநபர் உண்மை வருவாய் உள்ள நாடுகள் என்ற அடிப்படையில்தான் ஐ. நா. நிபுணர் குழு 'குறைந்த வளர்ச்சி' என்பதைப் பயன்படுத்துகிறது.[1] குறைந்த

[1] *Measures for the Economic Development of Underdeveloped Countries*, U. N., New York, 1951, p. 3.

உண்மை வருவாய் நிலை என்பது, மக்களில் பெரும்பகுதியினருக்கு மிகவும் விரும்பத்தக்க அளவில் வாழ்க்கை நிலையைத் தரத் தவறிய பொருளாதாரத்தையே குறிக்கும். குறிப்பிட்ட தனிநபர் வருமானத்திற்குக் குறைவான வருமானத்தைப் பெறும் நாடுகளைக் குறைந்த வளர்ச்சியுள்ள நாடுகள் என்றும், அதற்கும் அதிகான வருமானத்தைப் பெறும் நாடுகளை வளர்ச்சி பெற்ற நாடுகள் என்றும் குறிப்பிடுவது நுணுகி ஆராயும் நோக்கத்திற்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். பேராசிரியர் ஹிக்கின்ஸ் (Prof. Higgins) என்பவர் இருவகை நாடுகளைப் பிரித்தெடுப்பதற்குரிய அளவாக ஆண்டு ஒன்றுக்குத் தனிநபர் வருமானம் $ 500 என்று நிர்ணயித்திருக்கிறார் இருப்பினும் தனிநபர் வருமானத்தின் அடிப்படையில் மட்டுமே நாடுகளை உறுதியாக வகைப்படுத்துதல் சரியாக அமையாது. இரு பிரிவிலும் உள்ள நாடுகளின் தரம் காட்டும் சிறப்பியல்புகளைத் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், உறுதியாக வளர்ச்சியடைந்திருக்கும் நாடுகள் வரிசையில் உச்ச நிலையிலிருக்கும் ஒரு சில நாடுகளைப் பற்றியும், மிகக் குறைந்த வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளின் வரிசையில் கீழ் மட்டத்திலிருக்கும் ஒரு சில நாடுகளைப் பற்றியும் நமது ஆழ்ந்த கவனத்தைச் செலுத்துதல் நன்று. கீழ் நிலையில் உள்ள நாடுகளில் தோன்றும் உயர்வு நிச்சயமாக மிக மெதுவானதாகவும் தாமதமானதாகவும் இருக்கின்றது. மேலும் பொருளாதாரத்தில் மாற்றம் தோன்றும் கால அளவு மிக நீண்ட இடைநிலைப் பருவமாகக் குறிப்பிடப்படுகிறது. ஆனால் ஐயத்திற்கு இடமின்றித், தனிநபர் உண்மை வருமானத்தில் தோன்றும் உயர்வானது, மொத்தத்தில் பொருளாதார முன்னேற்றத்தைக் காட்டும் ஒரு கருவியாக இருக்கிறது என்பது உறுதியாகும்.

இவ்வாறு குறிப்பிடப்படும் நாடுகள், அவைகளின் முன்னேற்றத்திற்கும், பொருளாதார விரிவுக்கும் தேவையான உள்ளாற்றல்கள் பலவற்றைப் பெற்றுள்ளன என்ற கூற்று பொருளாதாரத்தில் குறைந்த வளர்ச்சி எனப்படுவதின் இரண்டாவது கூறாகும். அதாவது நாட்டில் கிடைக்கும் பொருளாதார உள்ளாற்றல்களை நல்ல முறையில் பயன்படுத்தத் தவறியதால் தோன்றியுள்ள நிலையே குறைந்த பொருளாதார வளர்ச்சி என்பதாகும். பொறிவழித் துறையில் இருக்கும் அறிவைப் பயன்படுத்தி அதன் உதவியோடு அந் நாட்டின் மூலவளங்களைச் சாதகமான முறையில் பயன்படுத்தத் தவறியதற்கு அங்குள்ள சமுதாயம், நிறுவனம், அரசியல் ஆகியவை காரணிகளாக இருக்கலாம். ஆனால் சிக்கலின் இக் கூறு தராதரக் கருத்திலேயே விளக்கப்பட வேண்டும். எனவே, அமெரிக்கா போன்ற

பொருளாதார வளர்ச்சி பெற்ற நாடுகள் மிக உச்ச நிலையில் அதன் பொருளாதார உள்ளாற்றல்களைப் பயன்படுத்தியிருக்கின்றன என்று கூறிவிட முடியாது. இதன் மூலம் குறைந்த வளர்ச்சி என்பதில் உள்ள இடைவெளியைப் (Gap) பற்றித் தெரிந்து கொள்ளலாம். நாடுகளின் உள்ளாற்றல்கள் அதிகமான அளவில் வேறுபடுகின்றன. இவ் வேறுபாடுகளின் அடிப்படையில் பார்த்தால், ஒரு நாடு இயல்பாகப் பெறத்தக்க உச்சநிலை, பிறிதொன்றின் உச்சநிலைக்கு மிகவும் குறைவானதாகக்கூட இருக்கலாம் என்பது தெளிவாகும். இப்போதுள்ள பொறிநுட்பத் துறையில் உள்ள அறிவு நிலையின் அடிப்படையில் பார்க்கும்போது, தட்ப வெப்ப நிலை, நில அமைப்பு ஆகிய காரணிகளால் முன்னேற முடியாத பகுதிகளைப் பற்றி நாம் கருத்தில் கொள்ளத் தேவையில்லை. பொருளாதார நிலைகளில் நல்ல உயர்வை ஏற்படுத்த வல்ல இயற்கை மூலவளங்களை ஏராளமான அளவில் பெற்றிருந்தும் அவற்றைப் பயன்படுத்தத் தவறியதால்தான் இத்தகைய குறைந்த வளர்ச்சி இருப்பதாகக் கொண்டால், அத்தகைய, நாடு குறைந்த வளர்ச்சி பெற்றுள்ளதொரு நாடு எனக் குறிப்பிடப்பட வேண்டும். ஆஸ்திரேலியா அல்லது கனடா ஆகியவற்றோடு ஒப்பிடுகையில் மிகக் குறைவான தனிநபர் வருமானத்தைப் பெற்றுள்ள ஜப்பான் நாடு வளர்ச்சி பெற்ற நாடு என்றுதான் அழைக்கப்பட வேண்டும். நிக்குலெஸ் (Niculescu) என்பார் குறிப்பிட்டுள்ளபடி, குட்டியானை மிகப் பெரியதாக இருக்கும் காரணத்தைக் கொண்டு, வளர்ச்சி பெற்ற முயலைக் குறைந்த வளர்ச்சியடைந்த ஒன்று எனக் கூறினால், அக் கூற்று பொருளுடையதாகாது.[1] இவ் வடிப்படையில் குறைவான வளர்ச்சியைப் பெற்றுள்ள பல நாடுகளை வகைப்படுத்த இயலுகிறது.

மூன்றாவதாக, பிற நாடுகளோடு ஒப்பிடும்போது பொருளாதாரச் செயற்பாடுகளின் நிலை, குண இயல்பு ஆகியவற்றில் குறைந்த வளர்ச்சி பெற்றுள்ள நாடுகள் மிகவும் பின் தங்கியவைகளாகவே இருக்கின்றன.[2] அத்தகைய நாடுகள் பொருளாதாரத் துறையில் மேம்பாடு அடைந்துள்ள பிற நாடுகளில் கிடைக்கும் சிறந்த உற்பத்திச் சாதனங்களைப் பயன்படுத்தாமலிருக்கின்றன. பொருளாதாரம் வளர்ச்சியடையும்போது ஒரு

[1] Niculescu, B. M., 'Underdeveloped, Backward or Low Income,' *Economic Journal*, September, 1955, p. 547.

[2] Kuznets, Simon, Underdeveloped Countries and the Pre-industrial Phase in the Advanced Countries—An Attempt at Comparison,' *Proceedings of the World Population Conference Papers*, Volume V. Reprinted in Agarwala, A. N. and S. P. Singh, *India 1958*, Oxford. p.p 135-53.

தனிநபருக்குப் பண்டங்களும். பணிகளும் அதிகமான அளவில் கிடைக்கின்றன. ஆனால் இத்தகைய உற்பத்திப் பெருக்கத்தால் சமுதாயத்தில் தோன்றும் பொருளாதார விளைவுகளை அதிகமான முயற்சி மேற்கொள்வதாலும், விட்டுக்கொடுப்பதனாலும், தோன்றும் உண்மைச் செலவின் அதிகரிப்பு, உற்பத்தி, நடவடிக்கையில் ஈடுபடுத்தப்பட்டிருக்கும் தொழிலாளர்களின் எண்ணிக்கை அதிகரிப்பு ஆகியவற்றோடு சம நிலைப்படுத்திய பின்னரே சரியாக மதிப்பிட முடியும். மிகவும் விரும்பத்தகாத சூழ்நிலைகளில் அதிகமான அளவு தொழிலாளர்கள் அதிகமான மணி நேரம் உழைப்பதன் மூலம் அதிகமான அளவு பண்டங்களும் பணிகளும் உற்பத்தி செய்யப்படுமானால் அங்கு, உண்மையான பொருளாதார வளர்ச்சி இல்லையென்றே குறிப்பிடலாம் ஆனால் குறைவான அளவு முயற்சி, விட்டுக் கொடுத்தல்கள் ஆகியவற்றின் மூலம் அதிகமான அளவு பண்டங்கள் உற்பத்தி செய்யப்படுமானால் அங்குப் பொருளாதார வளர்ச்சியுள்ளது என்று சொல்வது மிகச் சரியானதாகும்.[1] குறைவான முயற்சி, பண்டத்தின் சராசரிச் செலவு குறைவாக இருத்தல் ஆகிய நிலைகளில் அதிகமான அளவு பண்டங்களும் பணிகளும் உற்பத்தி செய்யப்படும்போது உற்பத்திச் சாதனங்கள் மிகத் திறமையான முறையில் பயன்படுத்தப் படுகின்றன என்பது தெளிவாகிறது. உண்மையிலேயே தொழில் மற்றும் வேளாண்மைத் துறைகளின் உற்பத்தியில் பெறப்பட்டுள்ள பொறிநுட்பத் துறையின் நிலை பொருளாதார வளர்ச்சிக்கான தொரு நம்பகமான சுட்டிக்காட்டும் கருவியாக அமைகிறது. அதிக அளவு மூலதன வளங்கள், அறிவியல் ஆய்வுத்துறையில் தரம் மிக்க வெற்றிகள், தொழிலில் முயல்வோரின் மிகுதியான திறமை அளிப்பு, திறமையும் தகுதியும் பெற்ற தொழிலாளர்களின் மிகுதியான அளிப்பு ஆகியவை மிக உயர்ந்த பொறிநுட்ப அறிவைப் பயன் படுத்தும்போது சேர்ந்தே நிகழுகின்றன.

இறுதியாக, 'குறைந்த வளர்ச்சி பெற்றிருத்தல்' என்பது, நாட்டின் சமுதாய வாழ்வின் ஒரேயொரு கூற்றினைப் பற்றி மட்டுமே குறிப்பிடுவது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அதாவது பொருளாதாரத் துறையில் மட்டுமே செயலாற்றல்கள் மிக மோசமான நிலையில் இருக்கின்றன என்பதே இங்குப் பெறப் படும் கருத்து. பொருளாதார வளர்ச்சியில் மிகப் பின்தங்கிய நிலையிலிருக்கும் ஒரு நாடு, கலை, மதம், இலக்கியம், தத்துவம் போன்றவற்றில் மிகச் சிறந்த பல வெற்றிகளையும்சா தனைகளையும் பெற்றிருக்கலாம். தவிர. பொருளாதார வளர்ச்சி மட்டுமே

[1] Villard, Henry H., *Economic Development*, Rinehart, New York, 1957, pp. 15-16,

மக்களின் நலனையும் மகிழ்ச்சியையும் நன்னிலைப்படுத்திச், சமுதாய நல நிலையை உயர்த்திவிடக் கூடியது அல்ல என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. மக்களின் வருவாய் உயரும்போது அவர்கள் அதிக அளவு மகிழ்ச்சியையும் மனநிறைவையும் பெறுகிறார்களா என்பது, வாழ்க்கை நடத்துவதில் பொதுவான நிலைகள், மக்களின் சமுதாய நோக்கு, அவர்களின் மனநிலை, சிந்தனை அமைப்பு ஆகியவற்றையும் பொறுத்தே அமைகிறது. வருமான உயர்வானது, வாழ்க்கையைத் துய்த்து மகிழ்வதைப் பாதிக்கலாம்; அமைதியைக் குலைக்கலாம்; வாழ்க்கைத் துன்பங்களை மிகுதிப்படுத்திவிடலாம். சுருங்கக் கூறின் பொருளாதார மேம்பாட்டுடன் மக்களின் மகிழ்ச்சியையும், துய்த்துணரும் மகிழ்ச்சியையும் சமமாகக் கருதுவது தவறாகும் இருப்பினும் மனித இனத்தின் முழு அளவினுலான உள்ளாற்றல்களைப் பெருக்குவதற்குப் பேரளவு உற்பத்தியினால் தோற்றுவிக்கப்படும் அடிப்படைத் தேவைகளிலும், மேம்பாடுடைய நல்ல வாழ்க்கை நிலைகளிலும், ஏற்படும் மனநிறைவு முக்கியமானதாக இருக்கிறது என்ற உண்மை மாறாத ஒன்று.

எனவே, குறைந்த வளர்ச்சிநிலையிலிருந்து ஒருநாட்டை அல்லது ஒரு சமுதாயத்தை மிக உயர்ந்த பொருளாதாரச் சாதனைகளையும் வெற்றிகளையும் பெற்றிருக்கும் நிலைக்கு உயர்த்துவது என்பதே பொருளாதார வளர்ச்சி என்பதன் பொருளாக அமைகிறது. பருப்பொருள்சார் உற்பத்தி முன்னேற்றத்திற்குத் தடையாயிருக்கும் சமுதாயத் தடைகளையும் நிறுவனத் தடைகளையும், தகர்த்தெறிந்து, உற்பத்திக் காரணிகளைச் சிறந்த முறையில் பயன்பயத்தி மேம்பாடடைந்த உற்பத்தி முறைகளை மேற்கொள்ளுவதையே இது குறிக்கும். உயர்ந்த சமுதாய நலனையும், மேன்மையான வாழக்கைத் தரத்தையும் இது தோற்றுவிக்கிறது. இத்தகைய மாற்றம் உறுதியான தனிநபர் உண்மை வருவாய் உயர்வினால் பிரதிபலிக்கப்படுகிறது. பன்னாட்டு உறவு, வாழ்க்கை அமைப்பிற்கும், உற்பத்திக்கும் ஆன முறைகளில் மாற்றம், தொழிலாளரின் மிக உயர்ந்த திறமை, அதன் வழித் தோன்றும் மிகுந்த ஓய்வு, அறிவியல் அறிவை உற்பத்திக்குப் பயன்படுத்துதல் ஆகியவற்றைத் தனிநபர் வருவாயின் உயர்வு குறிப்பாலுணர்த்துகிறது.[1]

[1] Kuznets, Simon, *Six Lectures on Economic Growth*, The Free Press of Glencoe, Illinois, 1959; p. 13.

# 2. சமுதாய, நிலையக் காரணிகள்
## (Social and Institutional Factors)

எத்தகைய உற்பத்தி முறையிலும் தெளிவாகத் தெரியக் கூடியது மனித முயற்சியின் முதன்மையான சிறப்புத் தன்மையாகும். மூலதன மூலவளங்கள் மனித முயற்சியால் உண்டாக்கப் பட்டவைகளாகும். இயற்கை மூலவளங்கள் இயற்கையின் கொடையாகும். எந்த ஒரு உற்பத்தித் திட்டத்திலும் இவ்விரண்டு காரணிகளும் கலந்திருக்கும் முறையும், அத்தகைய கலவையினுல் உற்பத்தி எந்த அளவுக்கு அதிகரிக்கப்படும் என்பதும் மனிதனின் புதுப் புனைத்திறன், திறமை, கடும் உழைப்பு, ஊக்கம், முயற்சி ஆகியவைகளைப் பொறுத்திருக்கும். பொருளாதார நடவடிக்கையில் மனித முயற்சி, உழைப்பாளர்களின் உழைப்பு என்றும், அமைப்பாளர்களின் முயற்சி என்றும் இருவகையாக இருக்கின்றது. இவ் விரண்டு வகை முயற்சிகளும் மிக உயர்ந்த தரத்தில் இருக்குமானுல் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறமுடியும். எனவேதான் பொருளாதார வளர்ச்சி பெற்றிருக்கும் எந்த ஒரு நாட்டிலும் தொழிலாளர்கள் திறமையானவர்களாகவும், கடுமையாக உழைப்பவர்களாகவும், நல்ல கட்டுப்பாடு உடையவர்களாகவும், தொழில் முயல்வோர்கள் தேவையான அளவுக்கு ஆர்வத்தையும் சக்தியையும் புதிய முயற்சிகள் புதிய உற்பத்தி முறைகள் ஆகியவற்றைத் தோற்றுவிக்கும் பேரார்வத்தை உடையவர்களாகவும் இருப்பதைக் காண்பதில் வியப்பெதுவுமில்லை.

### பொருளாதார முன்னேற்றத்தில் மனிதக் காரணி
### (The Human Factor in Economic Development)

**குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் சிக்கல்களைப் பற்றிய தீவிரமான கல்வியும், பல நாடுகளிடையே பொருளாதார முன்**

னேற்றத் தரங்களில் உள்ள வேறுபாடுகளை உண்டாக்கும் காரணங்களைப் பற்றிய பகுத்தாய்வும் மனிதக் காரணியின் முக்கியத்துவத்தைப் பற்றி அதிகமான முதன்மைத் தோற்றத்தைத் தோற்றுவித்துள்ளன. கால்டாரின் கருத்துப்படி, பொருளாதார வளர்ச்சியையும் இயங்கு நிலையையும் பற்றிய கல்வி, பொருளாதாரக் காரணிகளின் பகுத்தாய்வையும் மிஞ்சி, இக் காரணிகளின் உளநூல் சார்ந்த கல்விக்கும், மனித சமுதாயத்தின் வளர்ச்சி இயல்புகளைச் சார்ந்த கல்விக்கும் வழி வகுத்தன. முதலாளித்துவத் தொழில் முயல்வோரின் உருமாதிரியான உளப்பாங்கு தோன்றியதுதான் நவீன முதலாளித்துவ முறை தோன்றியதற்குக் காரணமாக இருந்ததே தவிர, நவீன முதலாளித்துவ முறை தோன்றியதால்தான் முதலாளித்துவத் தொழில் முயல்வோரின் உளப்பாங்கு தோன்றியது என்பது சரியல்ல. அத்தகைய முன்னேற்ற நோக்கத்திற்கு முரண்பாடான நோக்கங்கள் தொடர்ந்திருந்ததுதான், குறிப்பாக, வேளாண்மைத் துறை மக்கள் மரபு வழியாகப் பின்பற்றிவரும் நோக்கங்கள் தொடர்ந்து செயல்பட்டதுதான் ஒரு சில நாடுகளில் முதலாளித்துவ முன்னேற்றம் பின்னடைந்துள்ளதற்கு உரிய காரணமாகும்.[1] மனித முயற்சியும் மக்களின் விருப்பு வெறுப்புக்களும் நோக்கங்களும் அவர்களின் உழைப்பதற்கான உறுதியும் பொருளாதார வளர்ச்சியை நிர்ணயிப்பதில் மிக இன்றியமையாத காரணிகளாக இருப்பதால், மனிதனின் மனப்பான்மையை (பொருளாதார முன்னேற்றத்திற்குச்) சாதகமானதாக மாற்றும் உழைப்பாளரின் உடல் அல்லது சிந்தனைத்திறனை அதிகமாகத் தக்க வகையில் செலவிடப்படும் எந்த ஒரு செலவும். முன்னேற்றத்தின் அடிப்படையிலிருந்து பார்க்கும்போது மிகவும் பயனுள்ள சிறந்த முதலீடு ஆகும். பியூர்டோரிக்கோவில் (Puerto Rico) 1930-40 ஆகிய பத்தாண்டுகளில் பேரளவில் மேற்கொள்ளப் பட்ட சமுதாய முதலீடு பொருளாதார முன்னேற்றப் போக்கை மிக வேகமாக்கியதைக் காட்டுகிறது. உழைப்பின் திறமைக் குறைவால் உழைப்பு, (உற்பத்திக் காரணி என்ற அடிப்படையில் பார்க்கும் போது) கவர்ச்சியானதாகத் தொடக்கத்தில் இல்லை. ஆனால் பேரளவில் மேற்கொள்ளப்பட்ட சமுதாய முதலீட்டினால் உயர்ந்த உழைப்பின் தரமானது உழைப்பின் தேவையை அதிகரிக்கச் செய்தது.[2] தொழில்நுட்பம், நிருவாகத் திறன், திறன் மிகுந்த உழைப்பின் அளிப்பு ஆகியவற்றின் வடிவத்தில்

[1] Kaldor, N. *An Expenditure Tax*, George Allen and Unwin, London, 1955, p. 180 f.n.

[2] Nurkse, R., *Patterns of Trade and Development*, Stockholm, 1959, p. 38.

குறை நிரப்பும் காரணிகள் தோன்றுதிருக்கும்வரை வளர்ச்சி பெற்ற நாடுகளிலிருந்து தொழில் மயமாகாத நாடுகளுக்கு மாற்றப் படும் மூலதனச் சாதனங்களின் வருகையானது வளர்ச்சியைத் தோற்றுவிக்க முடியாது என்பது அதிகமான அளவில் இப்போது உணரப்படுகிறது. எனவே மனித மூலதனத்தை ஆக்கும் பணியில் அதிகமான கவனம் செலுத்தப்படுகின்றது. எனவேதான் வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கான ஐக்கிய நாடுகள் தொழில் நுட்ப உதவி நிருவாகக் குழுவில் (United Nations Technical Assistance Administration Missions) சடப் பொருள் சார்ந்த சொத்துக்களை உருவாக்குவதற்கும், மூலவளங்களைப் பகிர்ந்தளிப்பதற்கும் ஆன திட்டங்களை வகுத்துத் தருவதில் துணைபுரிவதற்காக நியமிக்கப் பட்டிருக்கும் பொருளாதார வல்லுநர்கள், பொறியியல் வல்லுநர் கள், தொழில் நுணுக்க வல்லுநர்கள் ஆகியோர் மட்டுமல்லாமல் பொருளாதார மாற்றங்கள் தோன்றும்போது ஏற்படக்கூடிய மோதல்களின் தீய விளைவுகளைக் குறைப்பதற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவி செய்யத்தக்க சமுதாயக் காரணிகளை உருவாக்கி உறுதியானதாக்குவதற்கும் உதவக்கூடிய கல்வி நிபுணர்கள், சமுதாய நலனில் நாட்டங்கொண்டவர்கள், மனித இனத்தின் பண்பாட்டு இயலில் வல்லுநர்கள் ஆகியோரும் சேர்க்கப்பட்டுள்ளனர். தவிர. பருப்பொருள் சார்ந்த முன்னேற் றத்திற்கு உதவக்கூடிய அல்லது தடையாக இருக்கக்கூடிய நிலையக் காரணிகளின் பகுத்தாய்விலும் பொருளாதார வளர்ச்சி பற்றிய நவீனச் சிந்தனைகள் செலுத்தப்படுகின்றன. 1960-ல் நடைபெற்ற அமெரிக்கப் பொருளியல் கழகத்தின் (American Economic Association) வருடாந்திரக் கூட்டத்தில் சொற்பொழி வாற்றிய பேராசிரியர் T. W. சுல்ட்சு (T. W. Schultz) தனது தலைமை உரையில் உற்பத்தித்திறனை அதிகரிப்பதற்காக மனித மூலதனத்தில் மேற்கொள்ளப்படும் முதலீட்டின் தன்மையை வலியுறுத்திக் கூறினர். மேலும், ஐக்கிய அமெரிக்க நாட்டின் உற்பத்தித்திறனில் வியக்கத்தக்க முன்னேற்றம் தோன்றியதற்குக் காரணமாக இருந்தவற்றில் மிகச் சிறப்பு மிக்க பெரிய காரணி இம் முதலீடுதான் என்பதையும் சுட்டிக் காட்டினர். ஐக்கிய அமெரிக்க நாட்டில் நாட்டு வருவாய் வளர்ச்சிகளோடு, மூலதன வெளியீட்டு விகிதம் (Capital - out put Ratio) குறைந்ததற்கு அல்லது குறைந்த அளவு நிலையாக இருந்ததற்கான காரணம், வருடாந்திர மூலதனச் செலவு பற்றிய புள்ளி விவரக் கணக் கெடுப்பில் சேர்க்கப்படாத மனித மூலதன ஆக்கத்தின்மீதான முதலீடுகள் என்ற அடிப்படையில் இருப்பது. உலகப் போரினல் சீரழிவுற்ற சில நாடுகளில் மனிதன் அல்லாத மூலதனத்தில் மேற் கொள்ளப்பட்ட முதலீட்டிற்குத் தகவுப்பொருத்த மற்ற வகையில்

தோன்றியுள்ள பொருளாதார மறுமலர்ச்சியையும் அவர் சுட்டிக் காட்டினர். உடல் நலம் பேணும் பணிகள், வசதிகள், வேலையில் பயிற்சி, முறையாக வகுக்கப்பட்ட தொடக்கநிலை, இடைநிலை, உயர்நிலைக் கல்வி, முதியோர் கல்வித் திட்டங்கள், உழைப்பின் இடப்பெயர்ச்சியை அதிகப்படுத்தும் வழிகள் ஆகியவற்றின் வடிவத்தில் மனித மூலதனத்தின் மீதான முதலீடு மேற்கொள்ளப் படுகிறது.[1]

## முதிர்ச்சிபெற்ற, முதிர்ச்சிகுறைவுடைய பொருளாதாரங்களின் சமுதாய இயல்புகள்
## (Social Characteristics of Developed and Underdeveloped Economics)

வளர்ச்சிடையந்த நாடுகளில் உள்ள மக்களின் மனப்பாங்கு பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவி செய்யத்தக்க வகையில் இருக்கின்றது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள மக்களின் மனப்பாங்கு அவர்களின் பொருளாதாரப் பின் நிலை மையை விளக்குகின்றது. வளர்ச்சியடைந்த நாடுகளிலும் வளர்ச்சி குறைந்த நாடுகளிலும் உள்ள மக்களின் இத்தகைய சில இயல்பு களைச் சமுதாய இயல் வல்லுநர்கள் வேறுபடுத்திக் காட்டியுள் ளனர். வளர்ச்சியடைந்தநாடுகளில் பொருளாதாரப் பண்டங்களின் பகிர்வு, தனி மனிதனின் திறமை, வெற்றிகளின் அடிப்படையில் அமைந்திருக்க, அதற்கு மாருகப் பின்தங்கிய நாடுகளில் தனி மனி தனின் திறமையை நோக்காது உறவினர்கள் பரிந்துரைக்கும் குடும் பச் சூழல்களுக்கும் ஏற்ப 'நிவேதனே' நோக்குடன் அமைகின்றது. அதாவது, வளர்ச்சியடைந்த நாடுகளில் தனிப்பட்டவர்களுக்குத் தரப்படும் பொருளாதாரப் பணிகள் அவர்களது வெற்றிகளின் அடிப்படையிலும் திறமையின் அடிப்படையிலும் தரப்பட்டன. ஆனுல் பின்தங்கிய நாடுகளில் அத்தகைய பணிகள், தனிப்பட்ட வர்களின் சமுதாயநிலை, குருதித் தொடர்புடைய உறவு ஆகிய பலவற்றினுல் தரப்பட்டன. இரண்டாவதாக, சமுதாயத்தின் உறுப்பினர்களுக்கிடையே, பொருளாதாரத் தொடர்புடைய வேலைகளைப் பகிர்ந்தளிப்பதில் மனித இனம் முழுவதற்கும் பொது வானது (Universalism). தனிப்பட்டவர்களுக்கு மட்டும் உரியது (Particularism) என்றழைக்கப்படும் வேறுபட்ட கோட்பாடுகள் பின்பற்றப்பட்டன. அதாவது, பொருளாதாரத்தில் வளர்ச்சி பெற்றுள்ள நாட்டில் தனிப்பட்டவர்களின் தரம், திறமை ஆகிய

[1] Schultz, Theodore W., Investment in Human Capital, *American Economic Review*, March, 1961; pp. 1-16.

வற்றின் அடிப்படையில் மட்டும் கருத்தில் கொண்ட புறப்பொருள் தன்மையிலேயே பொருளாதாரப் பணிகள் ஒதுக்கப்பட்டன ஆனால் ஏழ்மை நாடுகளில் கடைப்பிடிக்கப்பட்ட கொள்கை தனிப்பட்டவர்களுக்கு மட்டும் உரிய கொள்கை. அதாவது தனிப் பட்டவர்களின் குடும்பத் தொடர்பு, சமுதாய நிலை ஆகியவை போன்றவற்றிற்கு அதிக மதிப்பு தரப்பட்டது. மூன்றாவதாகக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதாரத் தொடர்பு டைய பணிகள் எந்தவிதமான குறிப்பிட்ட கொள்கைகளின் அடிப்படையிலும் வகுக்கப்படாதபடி பொதுவானவைகளா கவும் பரவலானவைகளாகவும் இருந்தன. ஆனால் வருமானம் மிகுந்த நாடுகளில் (அப்பணிகள்) மிகுதியான அளவில் குறிப்பிடத் தக்கவைகளாக இருந்தன.[1] இறுதியாக, குறைவாக வளர்ச்சி யடைந்துள்ள பொருளாதாரங்களில் 'நான்' என்னும் முனைப்பு அல்லது தன்னைத்தானே ஆற்றுப்படுத்திக் கொள்ளும் இயல்பு அதிகமான அளவில் இருந்தது. ஆனால் முன்னேற்றமடைந் துள்ள பொருளாதாரங்களில் இது மிகவும் குறைவாக இருந்தது. சமுதாயத்தின் இந்த நான்கு கூறுகளும் பண்புகளும் உண்மை யில் ஒன்றையொன்று சார்ந்திருப்பவைகளாகும். இவ்வாறாக கோவில் வழிபாட்டில் இறைவனுக்குச் சார்த்தும் புகழுரை தனிப் பட்டவர்களுக்கு மட்டும் உரிமையானதாக இருத்தல், பொதுவான தாக இருத்தல் ஆகியவற்றின் கோட்பாடுகள் எல்லாம் பொருளாதார முடிவுகளை எடுப்பதில் தனிமனிதன் அல்லது குடும்பம் அல்லது சாதிப்பிரிவு நோக்கம் என்ற பொதுவான காரணி இருக்கின்றது என்ற அடிப்படையில் ஒரே நேரத்தில் செயல்படும் போக்கினைப் பெற்றிருக்கின்றன. இதற்கு மாறாக, பொருளாதாரச் சிக்கல்களில் முடிவெடுப்பதில் பொதுவானதொரு கருத்தைப் பயன்படுத்தும் வகையில் அல்லது புறப்பொருள் சார்ந்த நோக்கத்தைப் பயன்படுத்தும் வகையில் இருக்கும். நல்ல முறையில் அமைக்கப்பட்ட சமுதாயம், எல்லோருக்கும் பொதுவானதான வெற்றி வகைகள், துல்லியம் ஆகியவைகள் ஒரே நேரத்தில் செயல்படுவதைக் காட்டுகிறது.[2] சுருங்கக் கூறின், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தனிப்பட்ட அல்லது வழியுரிமைக் குழுக் குறிப்பானது பொருளாதாரச் சிக்கல்களில் சிறப்பிடம் வகிக்கிறது. ஆனால் பொருளாதார ரீதியில் வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளில் பொதுவான அல்லது சமுதாயக் குறிப்பு சிறப்பிடம் வகிக்கிறது. ஒரு வழியில் பார்க்கும்போது, சமுதாயப்

1 Parsons, T. and E. A. Shils (Eds.), *Toward a General Theory of Action,* Harvard University Press, Cambridge, Mass., 1951, pp. 81-84

2 Hoselitz, Bert F., *Sociological Aspects of Economic Growth,* Free Perss, Glencoe; Illinois, 1960, pp. 31-45.

படிநிலையிலிருந்து உடன்படிக்கைக்கான படிப்படியான வளர்ச்சி (Evolution from status to Contract) என்று பின்தங்கிய சமுதாயத்தை வளர்ச்சி பெற்ற தொன்ருக மாற்றும் சமுதாய மாற்றத்தைப் பற்றிப் பல காலத்திற்கு முன்பே ஃகென்றி மெயின் (Henry Maine) என்பவர் எதைக் குறிப்பிட்டாரோ அதை விரிவாக்குதல்தான் மேற்கண்ட பகுத்தாய்வாகும்.

பொருளாதார முன்னேற்றத்தின் பல நிலைகளைச் சார்ந்த சமுதாய இயல்புகளின் இக் கூறுகள் பெரும்பாலும் (அச் சமுதாயத்தோடு) உள்ளார்ந்தவைகளாகவே இருக்கின்றன. தவிர இவை இனம், மதம், காலநிலை, அரசியல் நிலை ஆகியவைகளையும் பொதுவாகப் பிரதிபலிக்கின்றன. குணம், நாட்டம் ஆகியவை களின் தொடர்பு ஒரு புறமும் சமுதாய நிலையங்கள் ஒரு புறமும் மிக நெருக்கமாக இருக்கின்ற காரணத்தால் ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிப்பது அல்லது சமுதாய மொன்றின் குணமும் மதிப் புக்களும் சமுதாய நிலையங்களின் இழைகளில் எவ்வளவு தூரம் இயக்க விளைவுடையதாக இருக்கின்றன என்பதைக் குறித்துக் காட்டுவது மிகவும் கடினமானதும் இயலாத தொன்றுமாம். சமுதாய உறுப்பினர்களின் குறிப்பிட்டதொரு நடவடிக்கைப் பாங் கிற்குச் சமுதாய நிலையங்களை மட்டுமே காரணமாகக் காட்டுவதும் இயலாது. இருப்பினும், பாரம்பரிய இயல்புகளாலும் வாழ்க்கை நிலைகளாலும் தோன்றக்கூடிய சில அடிப்படைப் பண்புக் கூறுகள் மாருதிருக்கும்போது குண இயல்புகளின் பின்னணியில் தோன்றத் தக்க வாழ்க்கை மதிப்புகளும், இலக்குகளும் குறிப்பிட்ட வகைச் சமுதாயத் தொடர்புகள். செய்கைகளை மேற்கொள்ளும் விதங்கள் ஆகியவற்றைப் படிப்படியாகத் தோற்றுவிக்கும். நிலையமாக மாறும் போக்கைப் பெறும் என்று கருதிக்கொள்ளலாம். மதம், சமுதாயப் பிரிவுகள், சட்டம், மரபுகள் ஆகியவை களான இச் சமுதாய நிலையங்கள் இவ்வாருக, மனித விருப் பங்கள், மதிப்புகள் ஆகியவற்றின் படிவங்களாக்குதலைச் சுட்டிக் காட்டுகின்றன. இத்தகைய முன்னேற்றம் தோன்றும்போது அந்த நிலையங்களே மக்களின் சமுதாய நடவடிக்கைகளைப் பாதிக் கின்றன. மக்களின் நோக்கங்கள், நடவடிக்கைகள் ஆகியவை ஒரு புறமும் நிலையங்கள் மறுபுறமும் ஒன்றின்மீது மற்ருென்று செயல் பட்டும் எதிர்ச்செயல்பட்டும் அத்தகைய நிலைய அமைப்பு மென் மேலும் இறுக்கமானதாக மாறும்வண்ணம் ஒன்றின்மீது மற்ருென்று செயல்படுகின்றது; ஒன்றிஞல் மற்ருென்று செயல் படுகின்றது. இவ்வாறு ஒருமுறை நிலையங்கள் புதைபடிவமாக்கப் பட்ட பிறகு அச்சமுதாயம் வழிவழி மரபுகளுக்கும், குறிப்பிட்ட பழக்க வழக்கங்களுக்கும் அடிமையாகிவிடுகிறதாகத் தோன்றும்.

பருப்பொருள் சார்ந்த நலவாழ்வு முன்னேற்றத்திற்கு எதிரிடையானவைகளாக இத்தகைய நிலையங்கள் இருந்தால், சமுதாயப் புரட்சி வடிவத்தில் இந்த நிலையத் தடையானது தூக்கி எறியப்பட்டால் ஒழிய எந்த விதமான பொருளாதார முன்னேற்றத்தையும் அச் சமுதாயம் பெறமுடியாது. அத்தகைய தொரு சூழ்நிலையில் பொருளாதார நடிகர் ஒருவரின் நடவடிக்கைகள் எந்த நிலையத்தில் அவர் நடிக்கிருரோ, விரும்புகிருரோ அத்தகைய நிலைய அமைப்புக்கு ஏற்றவாறு உருப்பெறுகிறது. அவரது நடவடிக்கைகளும் இயல்புகளும் அவரைக் கட்டுப்படுத்தும் நிலைய இழைகளின் நோக்கிலிருந்து பார்த்தால்தான் பொருள் பெற்றிருக்கும்.[1]

பரவலான முறையில் (அதாவது தனியார் அமைப்புக்கள், அரசு அமைப்புக்கள், தனியார் கொள்கைகள், அரசினர் கொள்கைகள்) பொருள் தரப்படும் நிலையங்கள் பொருளாதார நடவடிக்கைகளை எவ்வாறு பாதிக்கின்றன என்ற முறை மிக எளிதாக விளக்கப்படலாம். உற்பத்திச் செலவைக் கணிப்பது, வணிகத்தில் பெறும் ஆதாயம் ஆகியவற்றை அரசின் வரிக் கொள்கைகளும் வணிகக் கொள்கைகளும் நேரிடையாகவே பாதிக்கின்றன. நில உரிமை முறையில் பொருளாதாரப் பண்டங்களின் பகிர்வு பாதிக்கப்படுகின்றது. இந்தியாவில் உள்ள சாதிமுறை, கூட்டுக் குடும்ப முறை போன்ற சமுதாய நிலையங்கள், வேலைப்பகுப்பு, முயற்சிக்கான ஆர்வம், தொழில் மயமாதல் ஆகியவைகளைப் பாதிக்கின்றன. திறமை மிக்க, ஆற்றல் மிக்க தொழிலாளர்கள், தொழில் முயல்வோர்கள் ஆகியோரின் அளிப்பைக் கட்டுப்படுத்தும் வகையில் சரியான முறையிலான கல்வி வசதியும் அறிவை வெளிப்படுத்தும் வசதியும் குறைவாக இருப்பதானது, பொருளாதாரத்தைப் பாதிக்கிறது. மத நம்பிக்கைகளும் சமுதாயப் பழக்கங்களும் பருப்பொருள் சார்ந்த நல வாழ்வுக்கான மனித நோக்கங்களால் நேரடியான விளைவைப் பெற்றிருக்கின்றன. தவிர, இவைகள் பொருளாதார நடவடிக்கைகளின் மிகத் தீவிரமான உணர்ச்சியைத் தடை செய்யலாம் அல்லது வளர்க்கலாம்.[2] இவை தவிர, பொருளாதார வளர்ச்சியின் மேல் சமுதாய நிலையங்களின் தாக்குதலைக் காட்டுவதற்கான வரலாற்று எடுத்துக்காட்டுக்கள் ஏராளமாக இருக்கின்றன.

1 Sawyer, John. E., 'Social Structure and Economic Progress: General Propositions and some French Examples,' *American Economic Review*, Proceedings Number, May, 1951, pp. 322 23.

2 Wolf, Charles, 'Institutions and Economic Development, *American Economic Reniew*, December, 1955, pp. 86881.

இவ்வாருக, ஃபிரான்சில் தோன்றிய மிக மெதுவான பொருளாதார வளர்ச்சியைப் பக்கத்து நாடுகளின் வளர்ச்சியோடு ஒப்பிடும்போது, அது கீழ்க்கண்ட காரணங்களால் தோன்றியதைக் காணலாம். உற்பத்தி முயற்சிகளில் மனிதர்கள் மூலவளங்கள் ஆகியவற்றின் தாராள ஓட்டத்தை சமுதாயக் கட்டுத்திட்டங்கள் தடைப்படுத்தின. வணிகத்திற்கு எதிராக, சமய நம்பிக்கைக்கும் பணிகளுக்கும், கிடைத்த சமுதாய மதிப்பும், மரபு வழி வந்த வாழ்க்கை முறைக்குக் கிடைத்த மதிப்பும் உழைப்பின் இடப் பெயர்ச்சியைக் கட்டுப்படுத்தின. வாரிசு உரிமையாகப் பெறப் பட்ட நுகர்வு மாதிரிகள் ஒய்வையும் தனி மனிதனுக்குரிய பணி களையும் வலியுறுத்தின. வேளாண்மைத் துறையில் பேரளவிலான செயல்களுக்கும் புதிய முறைகளுக்கும் இருந்த எதிர்ப்பு முதன்மைத் துறையின் குறைந்த உற்பத்தித் திறனை விளக்கு கின்றன.[1] ஸ்பானிசு அமெரிக்காவின் (Spanish America) தோற்றுவிக்கப்பட்ட இலத்தீன் அமெரிக்க மரபுகளுக்கும் வாழ்க்கை மதிப்புக்களுக்கும் மாருக இருந்த ஆங்கிலோ சாக்சன் அமெரிக்காவில் (Aglow- Sanon America) குடியேறிய மக்களின் சமுதாய மதிப்புக்களின் வேறுபாட்டால் ஆங்கிலேய சாக்சன் அமெரிக்காவிலும் ஸ்பானிசு அமெரிக்காவிலும் தோன்றிய பொருளாதார முன்னேற்றத்தின் வேறுபாட்டை ஃகோசலிட்சு (Hoselitz) விளக்குகிருர். நானூறு ஆண்டுகளுக்கு முன்ஞல் ஸ்பெயினில் புகுத்தப்பட்ட சமுதாய, பண்பாட்டு முறைகளை விடாப்பிடியாகப் பிடித்ததுதான் பெரும்பான்மையான இலத்தீன் அமெரிக்க நாடுகளில் வேகமான பொருளாதார முன்னேற்றத் திற்குப் பெரும் தடையாக இருந்தது. ஆனுல் வளர்ச்சி விகித உணர்ச்சியும் நோக்கங்களும் முன்னர்க் குறிப்பிட்ட (ஆங்கிலோ சாக்சன்) வற்றின் இயல்பாக இருந்தன.[2] பேராசிரியர் நார்மன் ஜேகப்ஸ் (Prof. Norman Jacobs) அவர்களின் சீனு, இந்தியா ஆகிய இரண்டு கிழக்காசிய நாடுகளில் முதலாளித்துவ வளர்ச் சியைப் பற்றிய அண்மைக்கால ஆராய்ச்சியில் இரண்டு நாடு களிலும் இருந்த சமுதாய நிலையங்களின் இயல்புகளை வேறுபடுத்திக் காட்டுகிருர். இவ் விரண்டு நாடுகளிலுமிருந்த பொருளாதார முன்னேற்றங்களில் நிலவிய பெரும் வேறுபாட்டிற்கான காரணமாக இவைகளைக் காட்டுகிருர். பருப்பொருள் சார்ந்த

[1] Sawyer, John E., 'Social Structure and Economic Progress. General Proposition and some French Examples,' *American Economic Review*, Proceedings Number, May, 1951, pp. 325-29.

[2] Hoselitz, Bert F., 'Social Implications of Economic Growth,' *The Economic Weekly*, Annual Number, Bombay, January. 1959, pp. 185-87.

முன்னேற்றத்திற்குச் சப்பானின் சமுதாய அமைப்பு மிகவும் உதவியது. ஆனால், சீனாவில் நிலையக் காரணிகள் பொருளாதார வளர்ச்சியைத் தடை செய்தன. சீன அரசர்களின் ஆதிக்கம் மிகுந்த நிலை, தனியார் சொத்துக்களின்மீதும் பொருளாதார நடவடிக்கைகள்மீதும் அரசர்கள் தலையிடலாம் என்ற அவரின் உரிமை, வணிகத்திற்குத் தரப்பட்ட மிகக் குறைவான மதிப்பு, சமுதாயத்தின் அடுக்கமைவு, இடப்பெயர்ச்சி இன்மை, சொத்தை எல்லா ஆண்மக்களுக்கும் சரி சமமாகப் பிரித்துக் கொடுக்கும் முறை, மதக் கொள்கைகளின் பழமை இவைகள் யாவும் சீனாவின் பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருந்திருக்கின்றன. சப்பானில், தன்னிச்சையாகச் செயல்படும் விவசாயிகள், உள் நாட்டு வெளிநாட்டு, வணிகத்தில் தன்னாட்சி, வணிகத்திற்கும் தொழிலுக்கும் தரப்பட்ட சமுதாயப் பெருமை, சமுதாய அமைப்பில் அடிக்கடி மாற்றம், மயின்முறைக் குலத்துரிமை விதி மதத்திற்குத் தனிப்பட்டவர்களின் நோக்கு, மனித சக்தி என்ற முறையில் உழைப்பைப் பெருமைப்படுத்துதல் ஆகிய காரணிகள் முன்னர்க் குறிப்பிட்ட காரணிகளுக்கு நேர் எதிரான சமுதாய நிலையங்கள் யாவும் மேலை நாடுகளின் வழியில் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவி செய்த காரணிகளாகும்.[1] இதனால் பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதகமாக இல்லாத மரபு வழி வாழ்க்கை முறை, வழக்கம், நடவடிக்கைகள் ஆகியவற்றின் காரணமாகத் தேக்க நிலையடைந்திருக்கும் பொருளாதாரங்கள் இருக்கும் தற்காலக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பல வற்றிலும் ஒருவகையான சமுதாய பொருளாதாரக், குறைந்த அளவுச் சமநிலையை எண்ணிப்பார்க்க முடிகிறது. பொருளாதார வளர்ச்சிக்காக வெடித்துச் சிதறும் சக்தி எதுவும் இல்லாம லிருப்பதும், மரபு வழியிலேயே பொருளாதாரம் சென்றுகொண் டிருக்கும் தன்மையும் ஏற்கெனவேயுள்ள நிலைய அமைப்புக்களை மேலும் வலுவுடையதாகச் செய்து, மாற்றத்திற்கு மிகவும் குறைந்த அளவிலேயே உட்படுவதாக ஆக்கிவிடுகின்றன.

நிலையக் காரணிகளுக்கும் பொருளாதார மாற்றத்திற்கும் உள்ள உடன்தொடர்பை மார்க்சு வலியுறுத்தினார். பொருளாதார மாற்றம் தலைமை வகித்துச் சென்று புதிய பொருளாதார அமைப்புக்கு ஏற்றவாறு நிலைய மாற்றங்களைத் தோற்றுவிக்கும் என்பது அவர் கருத்து. இந்தியா போன்ற குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளில் நிலைய அமைப்பானது, காலந்தொட்டு வந்த மரபுகளாலும் பழக்க வழக்கங்களாலும் மூட நம்பிக்கைகளாலும்

1 Jacobs, Norman, *The Origin of Modern Capitalism and Eastern Asia*, Oxford, London, 1958.

மிகவும் இறுக்கமானதாகவும், நெகிழ்ச்சியற்றதாகவும் அமைந்திருக்கிறது. சமுதாய நிலையங்களின் நெகிழ்ச்சியற்ற தன்மைக்கு மதக் காரணிகளும் தங்கள் பங்கை ஆற்றியுள்ளன. இந்த நிலைய அமைப்பு ஐயத்திற்கிடமின்றிப் பொருளாதார வளர்ச்சியைப் பாதித்திருக்கிறது. அதன் விளைவாகப் பொருளாதார மாற்றத்தினால் தேவைப்படும் அளவிலான சமுதாய மாற்றமும் தோற்றுவிக்கப்பட்டிருக்குமானால் அத்தகைய பொருளாதார மாற்றம் மிகவும் முனைப்புள்ளதாகவும் போதுமான அளவுக்குக் கவர்ச்சியுள்ளதாகவும் இருந்திருக்க வேண்டும். ஆனால் அத்தகைய நிலையிலான பொருளாதாரத் தோற்ற மாற்றத்தைக் காண இயலவில்லை. எனவே இத்தகைய சமுதாயத் தடைகளை நீக்குவதற்கும் அதே நேரத்தில் சமுதாய மாற்றங்களையும் கொண்டு வருவதற்கு உதவும் பொருளாதாரத்தைச் சீர்படுத்துவதற்கான நடவடிக்கைகளை எடுப்பதற்கும் கவனத்தைத் திருப்பும் கொள்கை மிகவும் அறிவுள்ள கொள்கையாகும்.

சமுதாய நிலையங்கள், பொருளாதார முன்னேற்றம் ஆகியவற்றினிடையேயுள்ள மிக நெருக்கமான தொடர்பைப் பற்றிய தான (மேற்கண்ட) சிறிய உருவரையிலிருந்து பொருளாதார மற்ற பிற காரணிகளுக்கும் கொடுக்கப்படவேண்டிய முக்கியத்துவம் கொடுக்கப்பட்டால்தான் பொருளாதார வளர்ச்சிப் போக்கைப் பற்றி மனநிறைவைத் தரத் தக்கதொரு விளக்கத்தைப் பெற இயலும் என்பது தெளிவாகிறது. தொன்மைப் பொருளாதார வல்லுநர்கள், மக்களின் நோக்கங்கள், சமுதாய நிலையங்கள் ஆகியவற்றின் சிறப்புத் தன்மையை அறிந்தவர்களாக இருந்தும்கூட, இக் காரணிகளுக்குத் தரப்படவேண்டிய முதன்மைத் தன்மையைத் தரவில்லை. தொன்மைப் பொருளாதாரக் கருத்தினர், சமுதாயக் காரணிகளைப் பாரமானிகளாகக் கருதினார்கள். ஆனால் இவைகள் மாறிகளாகக் கருதப்பட்டால் தான் வளர்ச்சிக் கோட்பாட்டில் முன்னேற்றம் தோன்ற முடியும் என்று எவரெட் ஃகேகன் (Everett Hagen) குறிப்பிடுகிறார்.[1] இவ் வழியில் ரோஸ்டோ செய்த முயற்சி முந்திய அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், பருப்பொருள் சார்ந்த வாய்ப்புக்களுக்கான மனித சமுதாயத்தின் பிரதிபலிப்பைப் பற்றி ஆழ்ந்த பகுத்தாய்வு ஒன்று மேற்கொள்ளப்பட்டால்தான் வளர்ச்சி பற்றிய சிக்கலில் அதிகமான விளக்கத்தைக் காண முடியும். தவிர இத்தகைய பிரதிபலிப்பானது, ஏன் ஒரு சில

[1] Hagen, Everett, 'Turning Parameters in to Variables in the Theory of Economic Growth,' *American Economic Review*, Proceedings Number, May, 1960, p. 623.

நாடுகளில் ஒரு சில சூழ்நிலைகளில் மட்டும் சாதகமாக இருந்தன என்பதற்கான விளக்கத்தையும் மற்ற நாடுகளில் அறவே இல்லாமலிருந்தன என்பதற்கான விளக்கத்தையும் காணமுடியும். மக்களின் மனஇயல் நோக்கங்கள், நிலைமைக்கேற்றவாறு எந்த அளவுக்கு மக்கள் உயிர்த்துடிப்புடன் இருக்கிறார்கள் என்பதற்கான அளவு, வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்வதற்கான அவர்கள் விருப்பங்களின் கூர்மை ஆகியவைகளைப் பொறுத்துப் பொருளாதார வாய்ப்புக்கள் என்ற வடிவத்திலான தூண்டு விசைக்கான பிரதிபலிப்பு இருக்கிறது என்பது தெளிவானதாகும். இத்தகைய இயல்புள்ளதொரு விசாரணையில், பொருளாதார வல்லுநரின் கடமை எல்லையானது, உளநூல் வல்லுநர், சமுதாய இயல் வல்லுநர், மனித இன இயல் வல்லுநர், ஆகியோரின் கடமை எல்லைகளோடு மிக நெருங்கியிருக்கிறது. பொருளாதார வளர்ச்சிச் சிக்கலின் வேறுபட்ட பல முகப்புக் கூறுகளைப் புரிந்து கொள்வதற்கும் தெளிவுபடுத்துவதற்கும் பல துறைகளிலும் பயிற்சி பெற்ற அறிவாளிகளிடையே கூட்டுறவின் தேவையை இது கோடிட்டுக் காட்டுகிறது. யேல் புரோசன் (Yale Brozen), ஜோசப் ஸ்பெங்லர் (Joseph Spengler), W. W. ரோஸ்டோ (W, W. Rostow), அலெக்சாந்தர் ஜெர்சென் கிரான் (Alexander Gershenkron), மேரியோன் லெவி (Marion Levy), சோல்டாக்ஸ் (Soltax) போன்ற எழுத்தாளர்களால் இவ் வழியில் நல்ல முன்னேற்றம் தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது. காட்பிரே (Godfrey), மோனிகா வில்சன் (Monica Wilson), டானியல் லெர்னர் (Daniel Lerner) ஆகியோர் தங்களின் ஆய்வுகளால் சில சமுதாயக் காரணிகளைப் பற்றிய பொருளாதாரத் தன்மையைப் பொறுத்தமட்டிலுமான நமது அறிவை விரிவாக்கியுள்ளார்கள். வியாபாரத் துறையில் உற்பத்தித்திறன் மிக்க நபர்களின் தோற்றம், பலவகைப்பட்ட சமுதாயங்களில் பலவகைப்பட்ட மதிப்பு அமைப்புக்களைப் பாதிக்கத் தக்க காரணிகள், குறிப்பிட்ட பிரிவுகளில் கூட்டத்தில் உற்பத்தித் திறன் உடைய ஆற்றலின் தோற்றம், சில நேரங்களில் உற்பத்தித் திறனும் முடிவில்லாத சக்தியும் வெடித்துக் கிளம்புதல் போன்ற சில அடிப்படைச் சமுதாய-பொருளாதாரச் சிக்கல்களைத் தெளிவுபடுத்துவதற்குப் பொருளாதார நிபுணர்களாலும் சமுதாய இயல் நிபுணர்களாலும் மேற்கொள்ளப்படும் இத்தகைய ஆய்வுகள் உதவி செய்யும்.

எல்லோராலும் ஏற்றுக் கொள்ளத்தக்கதான பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு ஒன்றை வகுப்பதற்குச் சமுதாய இயலில் இன்னும் பல ஆய்வுகள் தேவைப்படுகின்றன. என்றாலும் பொருளாதார நடவடிக்கைகளைச் சமுதாயக் காரணிகள்

பாதிக்கும் வகையைப் பற்றிய சில கருத்துக்களைக் காண முடியும். அவைகள் கீழ்க்கண்ட தலைப்புக்களில் தரப்படலாம். (a) உழைப்பின் உற்பத்தித் திறன், பொருளாதார முயற்சிக்கான பொதுவான மனப்பான்மை, (b) சேமிப்பு, மூலதன ஆக்கம், (c) தொழில் முயற்சி, (d) தொழில் நுண்ணியல்.

## உழைப்பின் உற்பத்தித்திறனும் வேலையைப் பற்றிய பொதுவான மனப்பான்மையும்

(Labour Productivity and General Attitude to work)

பேரளவில் பாதக விளைவைத்தரும் சமுதாயக் காரணிகள், நிலையக் காரணிகள் ஆகியவற்றினால்தான் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உழைப்பின் உற்பத்தித்திறன் மிகவும் குறைவாக உள்ளது. மேலும், கடுமையான உழைப்பைப் பற்றியும் தன்னைத்தானே வளர்த்துக் கொள்ளத்தக்க பொருளாதார முயற்சிகளைப் பற்றியும் உள்ள மக்களின் மனப் பான்மையை, மதம், சாதி, கூட்டுக் குடும்ப முறை, அரசியல் சூழ்நிலைகள் ஆகியவைகளும் பாதித்திருக்கிருக்கின்றன.

### 1. உழைப்பின் உற்பத்தித் திறன் (Labour Productivity)

நாட்டு விளைவுக்கு உழைப்பு ஆற்றும் பங்கு, உழைப்புச் சக்தியின் அளவு, அதன் தரம், அதன் அமைப்பு ஆகியவற்றையும், எந்த அளவுக்கு அது மூலதனச் சாதனங்களால் உதவி செய்யப் படுகின்றது என்பதையும் பொறுத்தமைகிறது. குறைந்த வயதில் திருமணம் செய்தல் என்ற சமுதாயப் பழக்கம் மக்கள் பெருக்க விகிதத்தைப் பாதித்து, அதன் வழியாக உழைப்புச் சக்தியையும் பாதிக்கின்றது. வேளாண்மை நிலங்களிலும் தொழிற்கூடங்களிலும் குழந்தைகளை வேலைக்கமர்த்துவதைத் தடுப்பதற்கான சமுதாயச் சட்டங்கள் எங்கு இல்லையோ அங்கு உழைப்பின் அளவு, திறன் ஆகிய இரண்டுமே பாதிக்கப்படுகின்றன. குழந்தைகளை வேலைக்கமர்த்துவதானது, குறைந்த கூலி விகிதத்தில் வேலை பார்க்கும் தொழிலாளர்களின் எண்ணிக்கையை நேரடியாக அதிகரிக்கிறது. போட்டியின் சக்திகள் சராசரிக் கூலி அளவைக் குறைக்கின்றன. இவை தவிர இன்னொரு முக்கியமான சமுதாயத் தீங்கும் விளைவிக்கப்படுகிறது. அதாவது குறைந்த கூலி மட்டத்தில் இளம் வயதிலேயே வேலையில் அமர்த்தப்பட்டவர்களுக்குக் கல்வியாலும் பயிற்சியாலும் தங்களைச் சிறந்த முறையில் பேணிக்கொள்ளும் வாய்ப்பு தவிர்க்

கப்படுகிறது. உடல் நலத்தில் தோன்றத்தக்க விளைவும் சேர்ந்து வேறுவிதமாக அவர்கள் வளர்ந்திருப்பார்களானல் எவ்வளவு சம்பாதித்திருப்பார்களோ அவ்வளவையும் சம்பாதிக்க முடியாமல் இது தடை செய்கிறது. இன்னொரு வகையில் நடுத்தரக் குடும்பத்திலும் உயர்ந்த வருமானப் பிரிவுகளைச் சேர்ந்த குடும்பத்திலும் உள்ள பெண்கள் தங்கள் குடும்ப வேலைகளை விட்டு வெளியே சென்று தொழில்களில் ஈடுபடக் கூடாது என்ற சமுதாயப் பழக்கம் பொருளாதாரம் ஒன்றில் கிடைக்கத்தக்க உழைப்பின் அளவைக் குறைத்துவிடுகிறது.

பொருளாதார வளர்ச்சிக்கு அது ஆற்றும் பங்கின் அடிப் படையில் பார்க்கும்போது உழைப்பின் அளவு எவ்வளவு சிறப் பிடத்தை வகிக்கிறதோ அவ்வளவுக்கு அதன் தரமும் சிறப் புடையதாகும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிலும் முயற்சி இன்மை, திறமை இன்மை என்ற இயல்புகளை உழைப்பு பெற்றிருக்கின்றது. தங்களின் பொருளாதார நலனை அதிகரித்துக் கொள்ள வேண்டுமென்ற ஆர்வத் துடிப்பு தொழிலாளர்களிடம் இல்லாவிட்டால், அத்தகைய ஆர்வத் துடிப்பானது, கடுமையாக உழைப்பதற்கான விருப்பம் என்ற வகையில் புதிய சக்தியைப் பெருவிட்டால் முயற்சி வெளிவர இயலாது. வாழ்க்கையைப் பற்றிய அவர்களது மனப்பான்மை மிகவும் உயிர்த்துடிப்புள்ளதாக இருக்க வேண்டும். துடிப்பற்றதாக இருக்கக்கூடாது. குறைந்த வருமானமுடைய நாடுகளில் உள்ள தொழிலாளர்கள், அதிகமான வருவாயைப் பெறத்தக்க வாய்ப்புக்களை அறிந்தவர்களாக இருப்ப தாலும்கூட அவ் வாய்ப்புக்களைப் பயன்படுத்த மனமில்லாதவர் களாக இருக்கிறுர்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்ததொரு உண்மையாகும். உள்ளார்ந்திருக்கும் கிளர்ச்சியின்மை, தன்னைச் செயலில் முனைப்புடன் ஈடுபடுத்தாமை ஆகியவற்றிலிருந்து இம் மனப்பான்மை தோன்றுகிறது. வருமானம் குறைவாக இருப்ப தனுலும் அதன் காரணமாகத் தோன்றியுள்ள நுகர்வில் பல வகைகள் இல்லாமலிருப்பதனுலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடு களில் சந்தைகள் குறிப்பிட்ட அளவிலேயே (சிறியவைகளாகவே) இருக்கின்றன என்பதுஉண்மைதான். ஆனுல் குறைந்த அளவிலான தேவையும் உற்பத்தியாளர்களால் நன்மை தரத்தக்க வழியில் எடுத்துக்கொள்ளப்படுவதில்லை என்பதுதான் உண்மைக் காரணமா கும். ஆப்பிரிக்காவில் உள்ள மேல் ஓல்டா நதி (Upper Volta River) யின் பின்தங்கிய பகுதிகள் சிலவற்றில் புதர்க்கத்திகள், மண் வெட்டிகள், இவை போன்ற வேறுசில இரும்புச் சாதனங்கள் ஆகியவற்றின் தேவை, உள் நாட்டில் உள்ள அளிப்பின் அளவைக் காட்டிலும் அதிகமாக இருப்பதாகவும், இருப்பினும் உள் நாட்டில்

உள்ள உற்பத்தியாளர்கள் இதை முழுநேர வேலையாக எடுத்துக் கொள்ளாமல் இருப்பதாகவும், இப்பண்டங்களின் உற்பத்தியில் கவனம் செலுத்தாமலிருப்பதாகவும் சொல்லப்படுகிறது.[1]

மறைமுக வேலையின்மையும், குறைந்த வேலையும் பெரும்பான்மையான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொதுவான இயல்புகளாக இருக்கின்றன. குறை நிரப்பும் உற்பத்திக் காரணிகளோடு ஒப்பிடுகையில் உழைப்பின் அளிப்பு மிக மிக ஏராளமாக இருப்பதுதான் இதன் காரணம் என்பது தெளிவாகும். எனவே உழைப்பின் இறுதி நிலை உற்பத்தித் திறன் பூஜ்யமாக இருக்கிறது. தேவையோடு ஒப்பிடுகையில் உழைப்பு கிடைப்பருமையாக இருப்பதும், மூலதன மூலவளங்கள் எச்சமாக இருப்பதும் தொழில்துறையில் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் உள்ள சிக்கல்களாக இருக்கின்றன. மூலதனம் ஏன் பயனற்று இருக்கிறது என்பதையும், மூலதனத்தை முழு அளவில் பயன்படுத்துவதற்குத் தேவையான நிலைகள் யாவை என்பதையும் ஆராய வேண்டிய அவசியத்திற்குக் கவனத்தை இது திருப்புகிறது. இந்தியா போன்ற வளர்ச்சியுடைய நாடொன்றில் உழைப்பு எச்சமாக இருப்பதுதான் சிக்கல் என்று கருதிக்கொள்வோம். அப்படியானால் அங்கு, அச் சிக்கலின் உண்மையான இயல்பைப் புரிந்து கொள்வதற்குக் காரணிகள் இருக்கக்கூடிய நடப்பு நிலையில் உழைப்பு எவ்வளவு உற்பத்தியைத் தரத்தக்கதோ அவ்வளவு உற்பத்தியையாவது தருவதற்குத் தக்க வழிகளைக் கண்டுபிடிப்பதற்குத் தேவையான நடவடிக்கைகள் மனப் பூர்வமாக எடுக்கப்படுகின்றன என்று சொல்ல முடியுமா? உழைப்பின் இறுதி நிலை உற்பத்தித் திறன் பூஜ்யத்திற்குச் சமமாக இருக்கிறது என்பது உண்மை என்றே வைத்துக்கொண்டாலும், இருக்கக்கூடிய உழைப்பு அதிகமான முயற்சிகளை மேற்கொண்டால் இறுதிநிலை உற்பத்தித்திறன் ஓரளவுக்குக்கூட அதிகரிக்காது என்பது சரியல்ல.[2] சில ஆண்டுகளுக்கு முன்னால் டில்லியில் உள்ள இந்தியச் சட்டமன்றத்தில் பேராசிரியர் குன்னார் மிர்தல் (Prof. Gunnar Myrdal) சொற்பெருக்காற்றும்போது, இந்தியாவில் உள்ள சாதாரண உழைப்பின் கடுமையான, தன்னைத் தானே உயர்த்திக்கொள்வதற்கான, திறமையான வேலையின் இயல்பு இந்தியாவுக்கு மிகவும் தேவை என்பதை மிகவும் வலியுறுத்திக்

[1] Herskovits, Melwille J., 'The Problem of Adapting Societies to New Tastes,' *The* Progrcsss of Underdeveloped Areas, Ed. by Bert F. Hoselitz, Chicago. 1952. p. 94

[2] Smithies, Arthur, 'Rising Expectations and Economic Developmen *Economic Journal*, June, 1961, p. 258.

கவனத்திற்குக் கொண்டுவந்தார். குறிப்பிட்டதொரு வேலையைச் செய்யும் பணியில் வளர்ச்சி பெற்ற பொருளாதாரத்திலிருப் பதைக் காட்டிலும் அதிகமான தொழிலாளர்கள் இந்தியாவில் ஈடுபட்டிருக்கிறார்கள். குறைந்த கூலியில் கிடைக்கிறார்கள் என்ற கருத்தில் பார்க்கும்போது உழைப்பு மிகவும் செலவு குறைந்த தாக இருக்கிறது. ஆனால், சராசரியாக ஒரு தொழிலாளி உற்பத்திக்கு ஆற்றும் பங்கோடு ஒப்பிடும்போது உழைப்புச் செலவு குறைந்ததாகத் தெரியவில்லை. இந்தியாவின் மக்கள் தொகையில் 2% மக்கள் தொகையைக் கொண்டுள்ள தொழில் துறை நாடாகிய ஸ்வீடன் இந்தியாவின் நாட்டு வருவாயின் 50%-க்கும் அதிகமாக உற்பத்தி செய்கிறதென்றால், இந்தியத் தொழிலாளி எவ்வளவு சம்பாதிக்கிறாரோ அதைப்போல 20 முதல் 25 மடங்கு அளவுக்கு ஸ்வீடனில் சராசரி ஒவ்வொரு தொழிலாளியும் சம்பாதிக்கிறார் என்றால் இதற்கான காரணங்கள் இரண்டு இருக்கின்றன. முதலாவதாக ஸ்வீடனில் சராசரியாக ஒவ்வொரு தொழிலாளிக்கும் ஏராளமான மூலதனச் சாதனங்கள் கிடைக்கின்றன. இஃதொரு காரணந்தான் என்றாலும் இது ஓரளவுக்குத்தான் பொருந்தக்கூடிய காரணமாகும். இரண்டாவது காரணம்தான் மிகவும் பொருத்தமானது. அதாவது சராசரி இந்தியத் தொழிலாளியோடு ஒப்பிடும்போது ஸ்வீடனில் உள்ள சராசரி ஒவ்வொரு தொழிலாளியும் கடும் முயற்சியுடனும், மிகுந்த திறமையுடனும் அதிகமான மணி நேரம் உழைக்கிறார் என்பதுதான் இதற்கான மிக முக்கியமான காரணமாகும். ஏழ்மையான இந்தியா போன்ற நாடொன்றில் சோம்பேறித் தனமாக இருப்பதற்கான ஒரு காரணமாக வேலையின்மை என்பது சொல்லப்படுகிறது. ஆனால், (உண்மையாகப் பார்த்தால்) ஒரு நாடு பின்தங்கிய நிலையில் இருக்கிறது என்ற அதே காரணத் தால் அங்கு அதிகமான வேலைகள் செய்யப்பட வேண்டும்; தொழில் நிலையங்கள் கட்டப்பட்டுச் சாதனங்கள் பொருத்தப் படவேண்டும்; இப்போதிருப்பதைக் காட்டிலும் அதிகமான விளைவைத் தரத்தக்கவைகளாக நிலங்கள் மாற்றப்பட வேண்டும் பழைய வீடுகள் பழுதுபார்க்கப்பட வேண்டும்; புதிய வீடுகள் கட்டப்பட வேண்டும்; சிறுநீர், மலம் கழிக்குமிடங்களும், கழிநீர்ப் பாதைகளும், சுகாதாரமான கிணறுகளும் தோண்டப்பட வேண்டும்; மரங்கள் நடப்பட வேண்டும்; நூல்கள் பல அச்சிடப் படவேண்டும்; கற்கப்பட வேண்டும்; தரைகளும் சாலைகளும் பழுதுபார்க்கப்பட்டுத் தூய்மைப்படுத்தப்பட வேண்டும்; குழந்தைகள் சுகாதாரமான நிலையில் வளர்க்கப்பட வேண்டும்; கல்வி கற்பிக்கப்பட வேண்டும்; நோயுற்றவர்களும் வயதானவர் களும் நன்கு கவனிக்கப்பட வேண்டும். இன்னும் இதைப் போலப்

பலப்பலப் பணிகள் செய்யப்பட வேண்டும் என்ற நிலைமை வேண்டும். இத்தகைய பணிகள் யாவும் நாட்டு வருமானத்தையும் சேமிப்பின் அளவையும் முதலீட்டு அளவையும் அதிகரிக்கத்தக்க வைகளாகும். எனவே, இவற்றின் அடிப்படையில் மிகவும் செறி வான முறையில் வேலைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். இது பொருளாதார முன்னேற் றத்தைத் தோற்றுவிக்கிறது.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உழைப்பின் திறமைக் குறைவுக்கு உடல் நலத்தின் தரம், கல்வியின் தரம் ஆகியவைகள் அந்நாடுகளில் குறைவாக இருப்பதும் ஓரளவுக்குக் காரணமாகும். நவீனத் தொழில் நிறுவனங்களில் வேலை பார்ப்பதற்குத் தொழி லாளர்களிடையே குறிப்பிட்ட அளவுக்குத் திறமைமட்டுமல்லாமல் குறிப்பிட்ட அளவுக்குக் கல்வியின் தரமும் தேவைப்படுகிறது. எழுத்தறிவில்லாவிட்டால் தொழிற்சாலை வாழ்வுக்குத் தக்கவாறு தங்களைச் சரிசெய்துகொள்ளுவதற்கும் நகர்ப்பகுதிகளின் வாழ்க்கை முறைகளை ஈர்த்துக்கொள்ளுவதற்கும் தொழி லாளர்கள் சிரமப்படுவார்கள். குறைவில்லாத தகுதியான உடலும் மிகவும் முக்கியமானதாகும். நலிவுற்ற உடல்நிலை தொழிலாளர் களின் திறமையை நேரடியாகவே பாதிக்கின்றது. எல்லாவிதமான உற்பத்தி நடவடிக்கைக்கும் நோய்களும் உடல்நலம் இன்மையும் பாதகமானவை என்பது மிகவும் தெளிவானதாகும். ஆனால் தொழிலாளர்களிடமிருந்து தொடர்ச்சியானதும் கூட்டுறவு முறையிலானதுமான உழைப்பு தேவைப்படும் தொழில் நிறுவனங்களில் அவைகளின் பாதக விளைவு குறிப்பாக உணரப் படுகிறது. உழைப்பின் திறமைக்கும் அல்லது திறமை இன்மைக்கும் இயற்கைத் தட்பவெப்ப நிலையும் ஐயமற ஒரு துணையுதவி செய்கின்ற காரணியாகும். தொடர்ச்சியான உடல் உழைப்பு, சிந்தனை உழைப்பு ஆகியவற்றிற்குச் சாதகமாக இருப் பதோடு மட்டுமல்லாமல், எப்போதுமே உடலைச் சுறுசுறுப்பாக வைத்துக்கொள்ள வேண்டியதொரு வழியில் மக்களைக் கட்டாயப்படுத்தத் தக்கதாகவும் இருக்கும் இயற்கைத் தட்ப வெப்பநிலை நிலவும் மிதமான வெப்பநிலப் பகுதிகளில் இன்றைய பொருளாதார முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகள் எல்லாம் காணப்படுகின்றன என்பது தற்செயலாக ஏற்பட்டதொன்றல்ல. அதற்கு மாறாக, ஆண்டு ஒன்றுக்கு ஒன்பது மாதங்கள் வெப்ப மானவைகளாகவும் மிஞ்சியுள்ள மூன்று மாதங்கள் கடுமையான வெப்பமானவைகளாகவும் உள்ள வெப்ப நிலப்பகுதிகளில் ஏராளமான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் இருக்கின்றன. (இந் நாடுகளில்) உடல் நலமும் உயிர் வீரியமும் எளிதாக அழிக்கப் படுகின்றன. வெப்ப நிலப் பகுதிக்குரிய பல நோய்களுக்கு அங்கு

வாழும் மக்கள் எளிதாக இரையாகின்றனர்கள். மேலும் வெப்ப நிலப்பகுதியில் வாழும் மக்களுக்கு உணவு, உடை, இருப்பிடம் என்ற வடிவத்திலான பருப்பொருள் தேவைகளின் அளவு, மித வெப்ப நிலப்பகுதிகள் குளிர்ச்சியான பகுதிகள் ஆகிய பகுதிகளில் வாழ்பவர்களின் தேவைகளைக் காட்டிலும் மிக மிகக் குறைவாக இருக்கின்றன. தொழிற்சாலை அமைப்பை நவீனமாக்குதல் அலுவலகங்களில் காற்றுக் கட்டுப்பாடு (குளிர்சாதன) வசதிகளை அமைத்தல் ஆகியவை இயற்கைத் தட்பவெப்ப நிலைகளின் கடுமையை ஓரளவுக்குக் குறைக்கலாம். ஆனால், அத்தகைய அமைப்புக்களினால் நன்மை பெறும் தொழிலாளர்களின் அளவு, மொத்தம் உழைக்கும் மக்களில் இல்லையென்று சொல்லத்தக்க அளவிலிருக்கும் மிக மிகக் குறைந்த ஒரு சிறிய பகுதியாகவே இருக்கும்.[1]

தொழில் மயமாவதற்கு முந்தியுள்ள பொருளாதாரங்களில் திறமை மிக்க தொழிற்சாலைத் தொழிலாளர்கள் இல்லாமலிருந்ததும் இன்னொரு சிக்கலாக அமைந்திருக்கிறது. திறமை மிக்க தொழிற்சாலைத் தொழிலாளர்களை ஆக்கும் உளஇயல் நோக்கங்களும், மனஇயல் இயல்புகளும், நிலம் அல்லது வேளாண்மைத் தொழிலாளர்களுக்குத் தேவைப்படுவனவற்றிலிருந்து வேறுபடுகின்றன. கடுமையான உழைப்பு, குறித்த நேரத்தில் காரியங்களைச் செய்தல், கட்டுப்பாடு, மற்றவர்களோடு கூட்டுறவுடன் உழைக்கும் ஆற்றல் ஆகியவைகள் யாவும் தொழிற்சாலைத் தொழிலாளர்களுக்குத் தேவையானவைகளாகும். ஆப்பிரிக்காவின் ஒரு சில பகுதிகள் போன்ற உலகத்தில் உள்ள சில பின் தங்கிய பகுதிகளில் வாழும் சாதாரணத் தொழிலாளர்கள் குறைந்த அளவிலேயே கல்வி பெற்றவர்களாக இருந்தாலுங்கூட எளிதான இயந்திரத் திறமைகளை விரைவாகத் தெரிந்துகொண்டார்கள் என்பதையும், திறமை, செய்திறன் ஆகியவைகள் தேவைப்படும் வேலைகளில் நல்ல முறையில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டார்கள் என்பதையும் அனுபவம் காட்டுகிறது. ஆனால், தொழில் நிறுவனங்களுக்குத் தேவைப்படும் ஒரே மாதிரியான வேலை, ஒழுக்கம், கட்டுப்பாடு ஆகியவைகளுக்குத் தக்கவாறு தங்களைச் சரிசெய்து கொள்ளுவதுதான் அவர்களுக்கு உண்மையிலேயே மிகவும் சிரமமாக இருந்தது. தொழில் நிறுவனங்கள் நகர்ப்பகுதிகளிலேயே செறிந்திருக்கின்றன. அந்நகரங்களுக்குப் பக்கத்திலேயுள்ள கிராமப் பகுதிகளிலிருந்து அதிகமான தொழிலாளர்கள் வேலைக்கு எடுக்கப்படுகிறார்கள். தொழில் அமைப்புக்கேற்றவாறு தங்களைச்

[1] Lee, Douglas H. K., *Climate and Economic Development in the Tropics*, Harper and Brothers, New York, 1957.

சரிசெய்து கொள்வதில் தொழிலாளர்கள் அடையும் இடர்கள் இரண்டு முக்கியமான காரணிகளிலிருந்து தோன்றுகின்றன. முதலாவதாக, நகர்ப்பகுதிகளின் வேலைமுறை கிராமப் பகுதிகளில் தொழிலாளர்களுக்குப் பழக்கப்பட்ட முறைகளிலிருந்து வேறு பட்டிருக்கிறது. இரண்டாவதாக, புதிய சமுதாய சூழ்நிலைகளில் வாழத் தகுதியாக்கிக்கொள்ள அவர்கள் தவறிவிடுகிறார்கள். தவிர, முழு உழைப்புத் திறனை அளிக்கின்றவர்களாக அவர்கள் எப்போதாவதுதான் மாறுகின்றார்கள். கிராமப் பகுதிகளில் உழைப்பாளர்களுக்குப் பழக்கமாகிவிட்ட தன்னிச்சையாகச் செயல்படுதல், ஓய்வான வாழ்க்கை முறை ஆகியவைகள் தொழிற்சாலைத் தொழிலாளரின் ஒழுங்குமுறை, கட்டுப்பாடுகள் ஒரே வேலையைத் திரும்பத்திரும்பச் செய்தலினால் சலிப்பு, ஆகியவைகளோடு ஒப்பிடும்போது நேர் எதிரானவைகளாக இருக்கின்றன. கிராமங்களில், பருவக்காலக் காரணிகளால், உழைக்கும் காலங்களும், ஓய்வுக் காலங்களும் நிருணயிக்கப்படு கின்றன. ஆனால், தொழிற்சாலைகளில் உழைப்பதற்கு அல்லது உழைக்காமலிருப்பதற்குத் தொழிலாளர்களின் விருப்பு, நாட்டம் ஆகியவற்றைப்பற்றி எதையுமே கருதாமல் வேலை செய்யக் கூடிய காலங்கள் குறிப்பிடப்படுகின்றன. உண்மையாகப் பார்த் தால், வேலையின் சலிப்படையத்தக்க தன்மைக்குத் தொழிலாளர் களுக்குப் பயிற்சி அளிப்பதும் தொடர்ந்து வேலையில் தொழிலாளர் களை தொடர்ச்சியாக இருக்கச் செய்வதும் பின்தங்கிய பொருளா தாரம் ஒன்றைத் தொழில் மயமாக்குதலில் உள்ள சிக்கல்களில் அடிப்படையானதொரு சிக்கலாகும். தொழிலாளர் பெறும் கூலிதான் தொழிலை ஏற்றுக்கொள்ளத் தொழிலாளரைத் தூண்டு விக்கும் ஒரே காரணியாக இருக்கிறது. ஆனால், இதுமட்டுமே தொழிலாளர்களிடையே ஓர் ஒழுங்கைத் தோற்றுவிக்காது. பண அளவைப் பயன்படுத்தாத இயல்புடைய பொருளாதார அமைப் பில் பழகியவர்களுக்கும் ஊதியத்தைப் பண்டங்களாகப் பெற்றுப் பழகியவர்களுக்கும் அதிகக் கூலி என்ற வடிவத்திலான ஊக்கம், குறைந்த அளவிலேயே பயன்தருமானால் அஃது வியக்கத்தக்க தல்ல. கிராமத்திலிருந்து வேலைக்கு எடுக்கப்படும் தொழிலாளி சில காலத்திற்குப் பணக் கூலியால் கவரப்படுகிறார் என்றாலும், சிறிதளவு பணத்தை ஈட்டியவுடன் பெரும்பாலும் நகரத்திலி ருந்து அவர் கிராமத்திற்கே திரும்பிவிடுகிறார்.

தொழிலாளர்களின் சமுதாய நோக்கங்களும் ஏற்கெனவே தீர்ந்ததொரு முடிவைப் பெற்றிருப்பதும் மாறாதிருக்கும்போது, இத்தகைய ஊக்க விசைகள் யாவும் தொழிலாளர்களைக் கவர் வதிலும் நிலைநிறுத்துவதிலும் உண்மையிலேயே உதவி செய்ய

முடியாதவைகளாகும். தொழிலாளர்களை நகரங்களுக்கு வரச் செய்வது மட்டுமல்லாமல் நகர வாழ்வை அவர்கள் ஈர்த்துக் கொள்ளுமாறு செய்வதும் புதிய சுற்றுப்புறச் சூழலில் அவர்கள் தங்கள் வீட்டிலேயே இருப்பது போன்ற உணர்வைப் பெறுமாறு செய்வதும் அப்படைச் சிக்கலாகும். மிகவும் குறைந்த தரத்திலான எழுத்தறிவைப் பெற்றிருப்பவர்களாகவும், குறிப் பிட்ட வகை வாழ்க்கை முறைக்குப் பரம்பரைபரம்பரையாக அவர்கள் பழகியவர்களாகவும் இருக்கும்போது இஃது மிகவும் எளிதானதொன்றல்ல. இந்தியாவின் தொழில் நகரங்களில் உள்ள உழைப்பாளர்கள், இந்திய நாடு முழுவதிலுமுள்ள கிராமங் களிலிருந்து பெறப்படுகிறார்கள். அவர்கள், பலமொழி பேசுபவர் களாகவும், பல மதங்களைச் சார்ந்தவர்களாகவும், பலவகைச் சாதிகள் சமுதாயங்களைச் சேர்ந்தவர்களாகவும், பண்பாடு பழக்க வழக்கங்கள் ஆகியவற்றில் வேறுபட்டவர்களாகவும் இருக்கின்ற காரணத்தால் தங்களுக்குள் தடையில்லாமல் கலந்துறவாடு வதற்குச் சிரமப்படுகிறார்கள். எனவே ஒரே இனம் என்ற பண்பை வளர்க்கத் தவறுகிறார்கள். பெரும்பான்மையான தொழிலாளர்கள் வேலையின்மை, ஏழ்மை, பஞ்சம், கொள்ளை நோய் போன்ற பல காரணிகளின் கலவையால்தான் கிராமப் பகுதிகளிலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறார்களே தவிர (நகர்ப் பகுதிகளில் உள்ள வேலை வாய்ப்புக்களின் காரணமாக) நகரங் களுக்குள் கவரப்பட்டவர்கள் அல்ல. வேலை வாய்ப்புக்களுக்காக அவர்கள் நகரங்களில் சிறிது காலம் அலைந்து திரிகிறார்கள். பெரும்பாலும் நகரங்களிலேயே அவர்கள் தங்கிவிடுவதில்லை. கிராமங்களிலேயே தங்கள் குடும்பங்களை விட்டுவிட்டு வந்து விடுவதால் அவர்களின் கவனம் முழுவதும் பெரும்பாலும் கிராமத்திலுள்ள தங்கள் குடும்பத்தைப் பற்றியதாகவே உள்ளது. நகரங்களில் வாழ்வதை நிலையற்றதாக அவர்கள் கருதுகிறார்கள். வாய்ப்புக் கிடைக்கும் ஒவ்வொரு நேரத்திலும் அவர்கள் தங்களது கிராமங்களுக்குச் சென்று உறவினர்களைப் பார்த்து வருகிறார்கள். இவ்வாறிருப்பதன் காரணமாக, கட்டுப்பாடு உடையவர்களாகவும் நிலைத்திருப்பவர்களாகவும் சக்தி மிக்கவர்களாகவும் உள்ள தொழிற் சாலைத் தொழிலாளர்களாக இம் மக்களைப் பழக்கப்படுத்துவது மிகச் சிரமமானதாக இருக்கிறது. ஃகோஸ்லிட்ஸ் குறிப்பிடுவது போல அவர்கள் தொழிற்சாலைக்கான கையிருப்புப் படையாக (Industrtial army) இருப்பதில்லை. அவர்கள் கட்டுப்பாடற்றவர் களாக, நலமற்ற, இரங்கத்தக்க, வேண்டா வெறுப்புடைய தொழிலாளர் வகுப்பாக இருக்கிறார்கள்.[1] எனவே தொழிற்

[1] Hoselitz, Bert F., 'The City, The Factory and Economic Growth' *Amrican Economic Review*, Proceedings Number, May 1955, p. 178.

சாலைத் தொழிலாளர்களின் திறமை, தரம் ஆகியவற்றை அதிகரிக்கும் வழிகள் மேற்கொள்ளப்படும்போது, தொழிலாளர் களின் சமுதாய நடவடிக்கைகளை மாற்றும் வகையிலும் வழி வழியாக வரும் கிராம வாழ்க்கைப் பழக்க வழக்கங்களிலிருந்து அவர்களை மாற்றும் வகையிலும் அவ் வழிகள் மேற்கொள்ளப் பட்டால்தான் வெற்றி தரத் தக்கவைகளாக இருக்கும். தொழிற் சாலைகளை அமைத்தலில் பரவலாக்கும் முறை, செய்தித் தொடர்புச் சாதனங்களில் முன்னேற்றம், பேரளவில் மேற் கொள்ளப்படும் கல்வி முறை ஆகியவை இத்தகைய சமுதாய மாற்றத்தைத் தோற்றுவிக்கும் என்றாலும் மாறும் போக்கு மிகவும் மெதுவானதாகவே இருக்கும்.

## 2. பொருளாதார முயற்சிக்கான பொதுவான நோக்கு (General Attitude to Economic effort)

தொழிலாளர்களின் உழைப்பினது திறமை, தரம் ஆகியவை களின்மீதான இத்தகைய தீய விளைவுகளுக்கு மேலாக உற்பத்திக் கான மக்களின் பொதுவான நோக்கம், முயற்சி ஆகியவற்றையும், பருப்பொருள் சார்ந்த பொருள் வலி முன்னேற்றத்திற்கான அவர்களின் விருப்பங்களையும் சமுதாய நிலையக் காரணிகள் பாதித் திருக்கின்றன. சமுதாயமொன்று பொருளாதார நிலைகளை உயர்த்திக்கொள்ள விருப்பமுடையதாக இல்லாமல் இருந்தால் கடந்த காலத்தில் நிகழ்ந்த தொடர்ச்சியான தோல்விகள், மனக் கசப்புக்கள் ஆகியவற்றிலிருந்துதான் அது தோன்றியிருப்பதைக் காணலாம். எடுத்துக் காட்டாக, அமெரிக்காவில் உள்ள சிவப் பிந்தியர்களைக் குறிப்பிடலாம். மிகப் பெரிய நாடுகளில் உள்ள காரணிகளுக்கும் இது பொருந்துவதாகும். ஒரு நாட்டின்மீதான இன்னொரு நாட்டின் அரசியல் ஆதிக்கமும், பொருளாதாரச் சுரண்டலும், உள்நாட்டு மக்களின் வேலை, முயற்சி ஆகியவைகளில் ஆர்வமின்மையைத் தோற்றுவித்துள்ளன. தவிர, ஒரு நாட்டில் நிலையானதொரு அரசு இல்லாமலிருக்கும்போதும், தனியார் சொத்துக்குப் பாதுகாப்பு, இடையூறின்மை ஆகியவை இல்லாம லிருக்கும்போதும் கடுமையான உழைப்பு, செல்வத்தைக் குவித்தல் ஆகியவைகளுக்கான உந்துவிசை அழிக்கப்படுகிறது. ஒரே நாட்டினுள்ளும் பலவீனமான சமுதாயப் பிரிவினரை வலுமிக்க பிரிவினர் சுரண்டுதலும், உழைப்பின் பயன்களை உழைப்பாளர்கள் பெறும் வகையில் இருக்கும் நிலைய ஏற்பாடுகள் இல்லாமலிருத்தலும் கட்டுப்பாட்டைக் குலைக்கும் விளைவுகளைத் தோற்றுவிக்கின்றன. இத்தகைய நிலைமை பல தலைமுறை களுக்கும் தொடர்ந்திருக்குமானால் சமுதாயத்தின் உற்பத்தி

முயற்சிகள் எல்லாம் வெகுவாகப் பாதிக்கப்படுவது வியக்கத்தக்கதல்ல. கால ஓட்டத்தில் சோம்பேறித்தனமும், பற்றற்ற நிலையும் ‘இயற்கையான’ சமுதாயப் பண்புகளாக மாறிவிடுகின்றன. இதில் மிகவும் குறிப்பிடத்தக்க நிலையிலானதொரு அமைப்பாக அடிமை முறையைக் குறிப்பிடலாம். இவ்வடிமை முறை, ஆள்பவர்கள், அடிமைகள் ஆகிய இரு வகையினரின் உற்பத்தித்திறனைப் பொறுத்தமட்டிலும் தீய விளைவைத் தோற்றுவித்திருக்கிறது. தவிர, பொருளாதார வளர்ச்சிக்கான சமுதாய இயல்புகள் எல்லாவற்றையும் முழு அளவில் அழித்துவிடுகிறது.[1]

ஆனால், மதத்தின் அடிப்படைத் தத்துவக் கூறுகள் உலக நடவடிக்கைகளில் ஈடுபடும் ஊக்கத்தைக் கெடுக்கத் தக்கதாகவும் சிக்கனமாக இருத்தல், கடும் உழைப்பு, செல்வக் குவிப்பு ஆகியவைகளுக்கான ஊக்கத்தை மிகச் சிறிய அளவிலேயே தரத்தக்கதாகவும் இருக்குமானால், பொருளாதார முன்னேற்றம் நிறுத்தப்படலாம், அல்லது (முன்னேற்ற வேகம்) குறைவுபடலாம். பக்திக்கும் செல்வத்திற்கும் இடையே எந்தவிதமான முரண்பாடும் மேலை நாடுகளில் இருக்கவில்லை என்று சொல்லப்படுகிறது.[2] ஆனால், சீனாவில் இருந்த கன்ஃபியூசியானிசம், எளிய வாழ்க்கை, ஆழ்ந்த சிந்தனை ஆகியவைகளுக்கு முதன்மை இடம் அளித்தது. ஒதுங்கிய துறவற வாழ்வு, கடும் நோன்பு, தவம் ஆகியவற்றை (இந்தியாவின்) இந்து சமயம் விரும்பியது. செல்வக் குவிப்பு, செல்வவள வாழ்வு ஆகியவைகளோடு மதங்களின் நன்மைகளைத் தொடர்புபடுத்திப் பார்க்கமுடியாது என்பது உண்மைதான். ஆனால், வாழ்க்கை, சமுதாயத்தில் நடவடிக்கை ஆகியவை பற்றிய தனி மனிதனின் நோக்கத்தை அடிப்படையிலேயே பாதிப்பவை என்ற அடிப்படையில் பார்க்கும்போது மதத்தின் குறிப்பிட்ட சில அமைப்புக்களும் கொள்கைகளும் பொருளாதார முன்னேற்றத்தை ஊக்குவித்திருக்கின்றன அல்லது பாதித்திருக்கின்றன என்ற உண்மையை மறுக்க முடியாது. சமுதாய நிலையங்கள், சட்ட நிலையங்கள் ஆகியவைகளின் அமைப்புக்களைத் தோற்றுவிப்பதில் அடிப்படையாக பெரும்பான்மையான மதக் கோட்பாடுகள் அமைகின்றன. எடுத்துக் காட்டாக, இசுலாம் மதம் வட்டி வாங்குவதை ஏற்றுக் கொள்வதில்லை என்பதைக் குறிப்பிடலாம். முந்திய பிறவியில் செய்த வினைகளுக்கேற்ப இப்பிறவியில் மனிதனின் சமுதாய நிலையும், நலவாழ்வும் நிருணயிக்கப்

1 Lewis, Arthur; W., *Theory of Economic Growth,* George Allen and Unwin, London, 1955, pp. 107-13

2 Belshaw, Horace, *Population Growth and Levels* of Consumption, George Allen and Unwin, London, 1956, p. 161.

படுகின்றன என்று கூறுவது கர்மா (Karma) என்ற கொள்கை. இந்து சமயத்தில் இக் கொள்கையும் துறவற வாழ்வும் வலியுறுத் தப்பட்டன. பொருளாதார நடவடிக்கையில் தீங்கு விளைவிக்கத் தக்கவற்றை மதம் தோற்றுவிக்கின்றன என்பதற்கு எடுத்துக் காட்டாக மேற்குறிப்பிட்டதைக் குறிப்பிடலாம். மதமானது ஆன்மிக உணர்வினால் தோன்றியிருந்தாலும் அதைப் பின்பற்று கிறவர்களின் சமுதாய நோக்கங்கள், நடவடிக்கைகள் ஆகிய வற்றைப் பாதிக்கத்தக்க வகையிலான நம்பிக்கையின் அடிப்படை யிலான கொள்கைகள், கோட்பாடுகள், வழிபாட்டு முறைகள் சடங்குகள் ஆகியவைகள் உறுதியாகத் தோன்றிவிடுகின்றன, பொருளாதார வளர்ச்சிக்கு மதநம்பிக்கை ஓர் இடையூறாக இல்லாவிட்டாலும் மதத்தின் இத்தகைய செயற்கைப் பகட்டான நடவடிக்கைகள் இடையூறாக இருக்கின்றன. இப் பகட்டுகளில் பெரும்பான்மையானவை மனிதனாலேயே தோற்றுவிக்கப்பட்ட வைகளாகும். தவிர, குறிப்பிட்ட வகைச் சமுதாய வாழ்க்கை முறை, பழக்கங்கள், பண்புகள் ஆகியவைகளுக்கேற்ற வகையில் அவைகள் அமைக்கப்படுகின்றன. இவ்வாறாக, ஏற்கனவே எல்லாம் நிருணயிக்கப்பட்டிருக்கின்றன என்று கருதுவதால் வாழ்க்கையில் தோல்வி மனப்பான்மையை அல்லது துறவு மனப் பான்மையைத் தோற்றுவிப்பதால் அல்லது குறிப்பிட்ட நடவடிக் கைகள்தான் மக்களின் எதிர்கால வாழ்வுக்கு நன்மை தரத்தக்க தாக அமையுமென்று குறிப்பிடுவதன் மூலம் மக்களைக் குறிப்பிட்ட நடவடிக்கைகளை மட்டுமே செய்யுமாறு தூண்டுகின்ற காரணத் தால் கர்மா என்ற கொள்கையானது மிகவும் இயக்க விளைவுடைய பங்கை ஆற்றலாம். இதைப் போலவே நிலையான முக்கியத்துவ மற்ற வாழ்வில் மனமறிந்த ஆர்வமின்மையால் துறவு மனப் பான்மை தூண்டிவிடப்படுகிறது அல்லது வாழ்க்கையின் உண்மை நிலைகளிலிருந்து தப்பித்துக் கொள்வதற்கு வகை செய்கிறது. வாழ்க்கையின் உண்மை நிலைமைகளிலிருந்து தப்பித்துக் கொள்வ தென்றால் அது மதத்தாலும் தனி மனிதனின் நோக்கங்களாலும் தோன்றுவதாகும். அத்தகைய மதமும் தனிமனிதனின் நோக்கங் களும் மரபு வழியாகத் தோன்றும் தோல்விகளாலும் ஏமாற்றங் களாலும் தோன்றுபவைகளாகும்.

பெரும்பான்மையான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பொருளாதார அமைப்பில் வேளாண்மை முதலிடம் வகிக்கிறது. தவறான நில உடைமை முறையாலும், பழமையானதும் திறன் குறைந்ததுமான வேளாண்மை உற்பத்தி முறையாலும் வேளாண் மைத் துறையின் உற்பத்தித் திறன் மிகவும் குறைவாக இருக் கிறது. நில உரிமையுடைமை மிகவும் மதிப்பு மிக்கதாகக்

கருதப்படுகிறது. பெரிய நிலச்சுவான்தார்கள் எல்லாம் மிகப் பெரிய அளவிலான நிலவுடைமைச் சொத்துதான் சமுதாயத்தில் சக்தியையும் செல்வாக்கையும் தருவதற்கான அறிகுறி என்பதை நன்கு உணர்ந்திருக்கிறார்கள். அத்தகைய நிலவுடைமையாளர் உற்பத்திக்கும், வருவாய் தருவதற்கும் ஆன தோற்றுவாயாக அச் செல்வத்தைப் பயன்படுத்துவது மிகவும் அரிதாக இருக்கிறது. நிலத்தை ஓர் உற்பத்திக் காரணியாகப் பயன்படுத்துவதில் உள்ள ஆர்வமின்மையானது நிலத்தைக் கவனிக்காத நில உரிமையாளர் முறையினால் தெளிவாக எடுத்துக் காட்டப்படுகிறது. உரிமையில் உறுதித்தன்மை, நில உடைமையில் பாதுகாப்பு ஆகியவைகள் நிலத்தை மிகத் திறம்பட்ட முறையில் பயன்படுத்துவதற்கு வேண்டப்படும் அடிப்படைத் தேவைகளாகும். இவைகள் எல்லாம் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிலும் மன நிறைவைத் தராத நிலையிலேயே இருக்கின்றன. இந்தியாவில் பெற்றோரின் சொத்துக்களை ஆண்மக்களும் பெண்மக்களும் பகிர்ந்துகொள்ள வகை செய்யும் வாரிசு உரிமை விதிகள் நிலங்களைத் துண்டாடுதல், சிறுசிறு பகுதிகளாகச் சிதறடித்தல் ஆகிய தீய விளைவுகளைத் தோற்றுவித்துள்ளன. இதனால் வேளாண்மையில் இயந்திரங்களைப் புகுத்துதல், பேரளவிலான செய்முறைகளைப் பயன்படுத்துதல் ஆகியவற்றை மேற்கொள்ள இயலாமலிருக்கிறது. இதனால் வேளாண்மைத் துறை, பொருளாதாரத்திற்கான இயக்க விளைவுத் துறையாக இருந்து வளர்ச்சிப் பெருக்கத்திற்கான சக்திகளைத் தோற்றுவிக்காமல் பிழைப்பூழியப் பண்புடையதாகவும் வாழ்க்கைக்குரியதொரு வழியாகவும் மாறிவிடுகின்றது.

## சமுதாயக் காரணிகளும் சேமிப்பும்
(Social Factors and Savings)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள மக்களின் பொருளாதாரப் பின்தங்கிய நிலைகளைப் பிரதிபலிக்கும் பின்தங்கிய நாடுகளின் சமுதாய நிலையங்கள் அவர்களின் நுகர்வு அமைப்பைப் பாதித்து அதன் வழியாக அவர்களின் சேமிப்பையும் மூலதன ஆக்கத்தையும் பாதிக்கின்றன. பொருளாதார வளர்ச்சியால் சேமிப்பின் அளவும் மூலதனக் குவிப்பின் விகிதமும் சிறப்புமிக்க இன்றியமையாத பங்கு வகிக்கின்றன. வளர்ச்சி பெற்ற நாடுகளோடு ஒப்பிடுகையில் வளர்ச்சி குறைந்த நாடுகளில் இவைகள் யாவும் மிகவும் குறைந்த அளவில் இருக்கின்றன. தனிநபர் வருமானத்தின் குறைந்த அளவுதான் இதற்கான முக்கியமான காரணம். ஆனால், மிகக் குறைவான இந்தச்

சேமிப்புங்கூட தகுந்த முறையில் ஒருங்கிணைக்கப்படுவதில்லை என்பதோடு. முதலீட்டுக்காக வழிப்படுத்தப்படுவதும் கிடையாது என்பதும் இந்த நிலைக்கான காரணங்களை ஆராய வேண்டிய அவசியத்தைத் தோற்றுவிக்கிறது. பொருளாதார முன்னேற்றத்தில் நாடுகள் பெற்றிருக்கும் நிலை எவ்வாறு இருப்பினும் எல்லா நாடுகளிலுமே நாட்டு வருமானத்தில் குறிப்பிட்டதொரு பகுதி வீணாக்கப்படுகிறது என்பது மறுக்க முடியாத உண்மை தான். எந்த அளவுக்கு இத்தகைய வீணாக்குதல்கள், சமுதாயக் காரணிகள், மக்களின் பழக்கவழக்கங்கள் ஆகியவற்றினால் தோன்றுகின்றன என்பதைப்பற்றித்தான் நாம் இங்கு ஆராய வேண்டும். மக்களின் நோக்கங்கள், பழக்கங்கள், மரபுகள் ஆகியவைகள் யாவும் அவர்களின் நுகர்வு மாதிரியை அமைப்பதில் பெரும் பங்கு வகிக்கின்றன என்பது மிகவும் தெளிவு. சிக்கனம், கருமித்தனம், எதிர்காலச் சிந்தனை, குடும்பப் பாதுகாப்பின் ஆர்வம், குடும்பத்தின் பொருளாதார நிலையை உயர்த்துவதற்கான விருப்பம் ஆகிய பொருளாதாரப் பழக்கங்கள் யாவும் சாதகமான சமுதாய நிலையங்களால் அதிகப்படுத்தப் படலாம் அல்லது இசைவற்ற சமுதாய அமைப்பால் அழிக்கப்படலாம். ஐரோப்பிய நாடுகளின் பொருளாதார முன்னேற்ற நிலைகளின் தொடக்க நிலைகளில் செல்வக் குவிப்பு, மூலதனக் குவிப்பு ஆகியவற்றில் அடிப்படையான, சிறப்பான பங்கு வகித்த ஐரோப்பிய மக்களின் சமுதாயப் பண்புகளைப் பொருளாதார வரலாற்று நிபுணர்கள் மிகவும் வலியுறுத்திக் குறிப்பிட்டுள்ளார்கள். பதினெட்டாம் நூற்றுண்டு, பத்தொன்பதாம் நூற்றுண்டுகளில் ஐரோப்பாவில் மூலதனத்தில் தோன்றிய மிகுதியான வளர்ச்சி மரபு வழிப்பட்டு இயங்குகின்ற சக்திகளினுல் தோன்றியதல்லவென்றும், சமுதாயத் தொடர்புகளில் தோன்றிய புதியமுறைத் தோற்றங்களினுல் தோன்றியவைகள்தான் என்றும் ஃகெர்பர்ட் ஃபிராங்க்கெல் (Herbert Frankel) குறிப்பிடுகிருர். "சமுதாய நடவடிக்கையில் புதிய முறைகள் தோன்றியதன் காரணமாகவே அவ் வளர்ச்சிதோன்றியது. பழுதுபார்த்தல், நிலைநிறுத்தல் ஆகியவைகள் நிகழ்காலத்தைப்பற்றி மட்டுமல்லாமல் எதிர்காலத்தைப் பற்றியும் சிந்தித்தல், குழந்தைகளுக்குக் கல்வியும் பயிற்சியும் அளித்தல். புதிய நடவடிக்கைகளுக்குத் தன்னைத்தானே உருவாக்கிக்கொள்ளுதல், புதிய திறமைகளை வளர்த்துக்கொள்ளுதல், புதிய தொடர்புகளைத் தேடுதல், தனிமனிதனின் அனுபவ எல்லையை விரிவாக்கிக் கொள்ளுதல், கடந்த காலத்தில் காலத்திற் கொவ்வாத பழக்கங்கள் மரபுகள் ஆகியவற்றைப்பற்றிய வினுக்களை எழுப்பிப் புதிய முறைகளைக் கண்டுபிடித்தல், முன்னேற்றுவித்தல், ஆகிய

இவைகள் எல்லாவற்றிலும்தான் மூலதனக் குவிப்பிற்கான காரணங்கள் இருந்தனவேயன்றி, மரபு வழிப்பட்டு இயங்குகின்ற கணக்குகளினலும், மரபு வழிப்பட்டு இயங்குகின்ற கட்டுப்பாடுகளினலும் இருக்கவில்லை'' [1]

(மேற்குறிப்பிட்ட) இவைகள் யாவும் தற்காலத்திய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளைப்பற்றியவை என்று சொல்ல முடியாது. பொருளாதாரத்தின் மூலதன இருப்போடு சேர்க்கப்படும் அதிகரிப்பு வருமானத்தைக் குறிப்பிட்ட விகிதத்தில் அதிகரிக்கச் செய்கிறது. இதனடிப்படையில் பார்க்கும்போது அத்தகைய வருமானம் மிகவும் குறைவானதாக இருக்கிறது என்பது மறுக்க முடியாத உண்மையாக இருக்கிறது. எனவே, நுகர்வு போக மிஞ்சியதாக சிறிய அளவிலாவது கிடைக்கும் அப் பகுதியானது உற்பத்தி மூலதனமாக மாற்றப்பட வேண்டுமே தவிர நுகர்வில் அல்லது உற்பத்தியல்லாத மூலதன ஆக்கத்தில் வீணகச் செலவிடப்படக்கூடாது. நுகர்வு அளவானது சந்தேகத்திற்கிடமில்லாமல் மிகமிக தாழ்த்தப்பட்ட நிலையிலிருப்பதால் இந்நிலையை மேலும் குறைப்பதற்கான வாய்ப்பு மிகவும் குறைவாக இருக்கிறது. ஆனல், செலவு மிகுந்த வழிபாட்டு முறைகள், சடங்குகள், விமரிசையான விருந்துகளுடன் கூடிய திருமண விழாக்கள் ஆகியவற்றில் மக்களை ஈடுபடச் செய்யத்தக்க சமுதாயப் பழக்கங்களும் மரபுகளும் எங்கெங்கு இருக்கின்றனவோ அங்கெல்லாம் மக்களுக்கு நல்லறிவூட்டுவதன் மூலமும் சிக்கனமற்ற வீணன பல சமுதாயப் பழக்கங்களிலிருந்து அவர்களை விடுபடச் செய்ய உதவுவதன் மூலமும் சேமிப்பை அதிகரிப்பதற்கான வாய்ப்புக்கள் இருக்கின்றன. ஆனல், முக்கியமாக முதலீடு செய்யத்தக்க மூல வளங்களை இவ்வாறு வீணடிப்பது, செல்வந்தர்கள் சிலரின் நுகர்வு மாதிரியால்தான் தோன்றுகிறது. வருமானம், செல்வம் ஆகியவற்றின் பங்கீட்டில் உள்ள வேறுபாடுகள் வளர்ச்சியடைந்த நாடுகளில் இருப்பதைவிட வளர்ச்சி குறைந்த நாடுகளில்தான் அதிகமான அளவில் இருக்கின்றன. குறைவான எண்ணிக்கை உடைய மக்களின் கைகளில் செல்வம் செறிந்திருக்கின்றது என்பதால், குறிப்பாக இத்தகைய செறிந்த செல்வத்தின் பெரும் பகுதி ஆதாயம் தரத்தக்க வழியில் பயன்படுத்தவில்லை என்றிருக்கும் போது சேமிப்பை அதிகரிப்பதற்கான நல்ல வாய்ப்புக்கள் இருக்கின்றன.

[1] Frankel, Herbert, S., *The Economic Impact on Underdeveloped Societies*, Oxford, London, 1953, p. 69

இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாட்டில் நிலம் பொருளாதார மதிப்பை மட்டும் பெற்றிருப்பதில்லை. பொருளாதார மதிப்போடு ஆழ்ந்த உணர்ச்சியுடன் கூடிய அடிப்படை மதிப்பையும் சமுதாய மதிப்பையும் அது பெற்றிருக்கிறது. பெரும் நிலப்பரப்புச் சொத்து மனிதனுக்கு மிகுந்த சமுதாய மதிப்பைத் தருவதாக இருக்கும்போது நிலத்தின்மீது முதலீடு செய்வதற்கான மிகுந்த ஆர்வமிருப்பது இயற்கைதான். இத்தகைய நிலம் என்ற சொத்து தனக்கு சமுதாயத்தில் எந்த அளவுக்கு மதிப்பை ஈட்டித் தருகிறது என்பதைத்தான் செல்வந்தர்கள் கருதுகிறார்களே தவிர, அச் செல்வம் எந்த அளவுக்கு உற்பத்திப் பணியில் பயன்படுத்தப்படுகிறது என்பதை அவர்கள் கருதுவதில்லை என்ற அளவில் பார்க்கும்போது இம் முறையினால் பொருளாதார இழப்புத் தோன்றுகிறது. மேலும் சமுதாயத்தில் கிடைக்கத்தக்க மூலதனத்தின் மிகப் பெரும் பகுதி நிலச் சொத்து சந்தையிலேயே (Real Estates market) சுழன்று கொண்டிருக்கிறது. 'கிடைத்தற்கரிய' பண்டங்களாகிய ('Hard' goods) தங்கம், வெள்ளி. நவரத்தினங்கள் ஆகியவற்றின்மீது முதலீடு செய்வது மூலதனத்தை வீணாக்கும்:இன்னொரு வழியாகும். விரைவில் அழிக்கப்படாதவைகளாகவும் விரைவாகப் பிற இடங்களுக்கு எடுத்துச் செல்லத் தக்கவைகளாகவும் உள்ள இப் பண்டங்களின்மீது முதலீடு செய்வது, அரசியல் பாதுகாப்பின்மை, பஞ்சம், வறட்சி போன்ற பொருளாதாரப் பேரிழப்புகள் ஆகியவைகளுக்கான காப்பீடு போல ஒரு காலத்தில் இருந்தன. ஆனால், இப்பொழுது பொருளாதார நேர்மைக்கு இம் முதலீடுகள் பொருந்தா. ஆனால், மதிப்பு மிகுந்த நவரத்தினங்களாலும் நகைகளாலும் பெண்களையும் குழந்தைகளையும் அலங்கரித்து அழகு பார்க்கும் பழக்கம் சமுதாயத்தில் ஊறிப் போய்விட்டதால் வெறும் பொருளாதார அடிப்படையில் மட்டுமே அமைந்திருக்கும் ஒரு காரணத்தைக் காட்டி அதை நீக்குவதென்பது முடியவே முடியாததாக இருக்கின்றது. இதற்குத் தேவையானதெல்லாம் சமுதாய முனையில் தகுந்த மாற்றம்தான். கல்வி கற்றவர்கள், கல்லாதவர்கள் ஆகியோர்களின் நோக்கங்கள், மனதிற் செறிந்த கருத்துக்கள் ஆகியவைகளிலும் தகுந்த மாற்றங்கள் தோன்ற வேண்டும்.

ஏழ்மை நாடுகளில் முனைப்பான நுகர்வைப்பற்றி அண்மைக் காலத்தில் ஏராளமான நூல்கள் வெளிவந்துள்ளன. இஃது அதிகமான அளவிலும் பேசப்படுகிறது. பொருளாதாரத் தேவைகளை ஈடுகட்டுவதைத் தவிர்த்துப் பகட்டு மனப்பான்மையை நிறைவு செய்துகொள்ளுதல், செல்வச் செருக்கைப்

பிறருக்குக் காட்டுவதற்கான வழியாக நுகர்வைப் பயன்படுத்திக் கொள்ளுதல் போன்ற நோக்கங்களுக்காக மேற்கொள்ளப்படும் நுகர்வுச் செலவுகள் முனைப்பான நுகர்வு எனப்படும். பெரும் விருந்துகள், சடங்குகள் ஆகியவற்றின்போது மேற்கொள்ளப் படும் தேவையற்றதும் செலவும் ஆடம்பரமும் மிகுந்ததுமான விருந்துகள், ஆடம்பரமான கட்டிடங்கள், விலை மிகுந்த ஆடம்பரப் பண்டங்கள் ஆகியவைகளில் மேற்கொள்ளப்படும் செலவுகளின் வடிவத்தில் முனைப்பான நுகர்வுகள் அமைகின்றன. இக் கூறு, சமுதாயத்தின் எல்லாப் பிரிவு மக்களிடையேயும் காணப்படுகின்றது. அமெரிக்காவின் வாழ்க்கை முறைகள் கடைப்பிடிக்கப்படும்போது உற்பத்தி முறைகளைக் காட்டிலும் நுகர்வு அளவு அதிகமாக இருப்பது இதற்கானதோர் எடுத்துக் காட்டாகும். சிறிதுகூடச் சந்தேகமில்லாமல் இவைகள் யாவும் சமுதாயத்தின் பெரும்பான்மையான மக்களிடையே அறிவுக் குறைவுக்கும் சிந்தனையற்ற செயலுக்குமான அறிகுறியாகும். இத்தகைய வாழ்க்கை முறையைக் கடைப்பிடிப்போர், மேலை நாடுகளின் உயர்ந்த வாழ்க்கைத் தரம் மக்களின் கடும் உழைப் பினுல்தான் தோன்றியது என்பதைச் சிந்திக்கத் தவறிவிடு கிறுர்கள் என்ற அடிப்படையில் பார்க்கும்போது இஃது அறிவு குறைந்ததொன்ருகக் கருதப்படுகிறது. வளர்ச்சி பெற்ற நாடு களில் அளிப்பு நிலைகளில் தோன்றிய முன்னேற்றத்தினுல்தான் உண்மை நுகர்வு, வாழ்க்கைத் தரம் ஆகியவற்றில் அதிகரிப்புத் தோன்றின. ஆனுல், இதற்கு மாருக, தொழில் துறையில் முன்னேறிய நிலைக்கு முந்திய நிலைகளிலிருக்கும் இன்றைய நாடுகளில் (பண்டங்கள் பணிகள் ஆகியவற்றின்) அளிப்பு அதிக மாவதற்கு முன்பே நுகர்வை அதிகரிக்கும் பொறுமையின்மை அல்லது அதிக நுகர்வு அளவைப் பெறத்தக்க வகையிலான உற்பத்தி நிலையைப் பெறுவதற்கான முயற்சியை மேற் கொள்ளுதல் காணப்படுகின்றது. கண்ணுக்குக் கவர்ச்சியாகத் தெரிகின்ற மேலை நாட்டுப் பண்பாட்டின் விளைபொருள்களின் பின்னுல் இருந்த கடும் உழைப்பு, முயற்சி ஆகியவற்ருேடு போட்டிபோட எந்தவிதமான முயற்சியும் மேற்கொள்ளப்பட வில்லை.[1]

முனைப்பு நுகர்வுக்கு இணையாக, அதாவது தொழிலாக்கத் திற்கான முன் நிலைகள் நிலவுகின்றனவா இல்லையா என்பதைச் சிறிதும் கவனிக்காமல் பெரும் திட்டங்களை மேற்கொள்வதற் கான ஆர்வமாகிய ‘முனைப்புத் தொழிலாக்கமும்’ (‘Corspicuous

[1] Singer, H. W., ‘Obstacles to Economic Development,’ *Social Research*, Vol. 20, 1953, pp. 27-31.

Industrialisation) இருக்கிறது. வேளாண்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகளில் தொழில் முன்னேற்றத்தைத் தோற்றுவிக்க வேண்டிய அவசியம் இருக்கிறது என்பதில் கருத்து வேறுபாடு எதுவும் கிடையாது. ஆனால், நாட்டின் உண்மையான பொருளாதாரத் தேவைகளைக் காட்டிலும் நாட்டின் வீண் பெருமைகளைப் பாதுகாப்பதற்காக மேற்கொள்ளப்படும் பேரார்வ மிக்க திட்டங்களும் வளர்ச்சியைப் பாதிக்கின்றன. அரசுகளின் முனைப்பான நுகர்வுகளுக்கு எடுத்துக்காட்டாக, வெளிநாட்டுத் தூதரகங்கள், பன்னாட்டுப் பிரதிநிதித்துவம் ஆகியவற்றின் மீதான தகாத செலவுகளைக் குறிப்பிடலாம். நாட்டின் மதிப்பு என்ற பெயரில் பன்னாட்டு மதிப்பைப் பெறுவதற்கான இத்தகைய செலவுகள் பல காலம் அரசியல் அடிமை நிலையின் பிரதிபலிப்பின் விளைவாக இருக்கலாம். உற்பத்தி மூலதன ஆக்கத்தின் நோக்கிலிருந்து பார்க்கும்போது, ஏழ்மை நாடுகளின் இப் பெருஞ் செலவுகள் யாவும் பேரிழப்புத்தான் என்பதை மறுக்க முடியாது. [1]

சமுதாயச் சூழ்நிலையிலும் மதிப்பைப்பற்றிய முறையிலும் குறிப்பிடத்தக்க அளவில் மாற்றத்தைத் தோற்றுவித்தால்தான் பொருளாதார வளர்ச்சியைத் தரத்தக்க வகையிலான நுகர்வு, சேமிப்பு அமைப்புகளில் மாற்றம் ஆகியவைகள் தோன்றும் என்பது மிகவும் தெளிவாக உள்ளது. சமுதாயத்தின் முன்னணிப் பிரிவினரிடம் முன்னேற்ற மனப்பான்மையும், பழங் கொள்கைகளிலிருந்தும் சார்புள்ள விருப்பங்களிலிருந்தும் வெளியேறுவதற்கு ஒப்புதலும் இருக்க வேண்டும். அது சேமிப்பை அதிகரிக்கத்தக்க வகையிலான புதிய சமுதாயத்தையும் பொருளாதார நிலையங்களுக்கான தேவையையும் தோற்றுவிக்க வேண்டும். தொன்மைப் பொருளாதாரக் கருத்துக்களின் அடிப்படையில் சேமிப்பை உச்ச அளவில் கொண்டு வரத்தக்க உச்ச அளவு லாபத்தைப் பெறுவதற்கான வாய்ப்புகள் குறைவாக இருப்பதால் வரியிடுதல், கடன்பெறுதல் ஆகியவற்றின் மூலமாகவும், சேமிப்பு நிலையங்களைத் தோற்றுவிப்பதன் மூலமாகவும், சமுதாய அமைப்பில் தேவையான மாற்றங்களைத் தோற்றுவிப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்ளுவதன் மூலமாகவும் அரசு, சேமிப்புக் குவிப்பிற்கான பொறுப்பை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. [2]

[1] Levy, Marion, J. (Jr.), 'Some Obstacles to Capital Formation in Underdeveloped Areas', *Capital Formation and Economic Growth*, National Bureau of Economic Research, Princeton, 1955, p. 483.

[2] *Economic Bulletin for Asia and the Far East*, U.N., December, 1959, p. 20.

## சமுதாயக் காரணிகளும் தொழில் முயற்சியும்
## (Social Factors and Entrepreneurship)

பொருளாதார முன்னேற்றத்தைத் தோற்றுவித்த சிறிய அளவிலான வணிகர் தலைவர்களின் செயல் ஊக்கம், ஆர்வம் விறுவிறுப்பு கடும் உழைப்பு ஆகியவைகளே மேலைநாடுகளைத் தொழில் மயமாக்கின. உற்பத்தி முறையின் எந்தத் திட்டத்திலும் உற்பத்திக்கான பிற காரணிகளை ஒருங்கிணைக்கும் காரணியாகத் தொழில் முயல்வோர் இருப்பதால் ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்குச் சிறப்பான பங்காற்றுவது இக் காரணிதான் என்பது இயற்கைதான் இது நவீனப் பொருளாதார நிபுணர்கள் எல்லோராலும் வலியுறுத்தப் படுகிறது. இது குறித்துப் பேராசிரியர் கால்டார் (Prof. Kaldor) கீழ்க்கண்டவாறு எழுதுகிறார், "கடந்த 200 ஆண்டுகளில் மிக அதிகமான அளவில் விரைவாக்கப்பட்ட பொருளாதார முன்னேற்றத்தையும் நவீன முதலாளித்துவ முறையின் தோற்றம், ஆபத்தை மேற்கொள்ளுதல், ஆதாயத்தைப் பெறுதல் ஆகியவற்றிற்கான மனித நோக்கங்களின் மாற்றங்களின் அடிப்படையில் மட்டும்தான் விளக்கப்படமுடியும் என்பது எனது கருத்து. உற்பத்தி அலகுகளைக் கட்டுப்படுத்தி வந்த கலைஞர்கள், உழவர்கள் ஆகிய மரபுவழியாகப் பார்ப்பவர்களின் நோக்கங்களிலிருந்து வேறுபட்டு வாழ்க்கையின் சிறப்புமிகு நோக்கங்களாகப் பணம் ஈட்டுவதையும், ஆபத்தை எதிர் நோக்குவதையும் கொண்ட வணிக நிறுவனங்கள், வாழ்க்கைக்குத் தேவையானவற்றை மட்டும் ஈட்டாமல் பெருஞ் செல்வத்தைப் பெறவேண்டுமென்ற பேரார்வம் கொண்ட மக்கள் ஆகியவர்களின் நோக்கங்களாக மாற்றப்பட்டதன் விளைவுதான் அது. நவீன முதலாளித்துவ முறையின் இயல்பான வணிக நிறுவன முயற்சியின் தோற்றம் உற்பத்தி முறை மாற்றத்தின் காரணமாக இருக்கிறதே தவிர அதன் விளைவாகத் தோன்றியதல்ல. பொருளாதார அல்லது பொறிநுட்பக் காரணிகளினால் மட்டும் விளக்கவே முடியாததாக உள்ள சமுதாயக் காரணிகளின் விளைவாகத் தோன்றியதுதான் அது."[1]

தொழில் முயல்வோரை மிக முதன்மையான புது வழியமைப்போராகச் சும்பீட்டர் கருதுகிறார். இயல்பானதென்று நடைமுறைக்கு வந்ததிலிருந்து வேறுபட்டதாக உற்பத்திப் பண்டங்களையும் உற்பத்திச் சக்திகளையும் இணைப்பதன் வாயிலாக நுகர்வு,

[1] Kaldor, N., *Essays on Economic Stability and Growth*, Duckworth, London, 1960, p.236.

உற்பத்தி ஆகியவற்றின் இயல்பான சுழல் ஓட்டத்தை அத் தொழில் முயல்வோர்தான் உடைக்கிருர் எனவும் சும்பீட்டர் கருதுகின்ருர். பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்ட உற்பத்தி அமைப்புகளிலிருந்து வேறுபட்டுச் செல்வதை அவர் நடவடிக்கைகள் காட்டுகின்றன. அந் நடவடிக்கைகள் வளர்ச்சிக்கான சக்திகளைத் தோற்றுவிக்கின்றன. தவிர, எல்லாத் துறைகளிலும் தோன்றத்தக்க பொதுவான முன்னேற்றத்திற்கு உதவி செய்கின்றன. சும்பீட்டரின் கருத்துப்படி பிறவித் தலைவரின் குணங்களையெல்லாம் கொண்டிருப்பவர்தான் உண்மையான தொழில் முயல்வோராவார். (ஒளிமயமான எதிர்காலத்தைப் பற்றிக்) கனவுகளைக் கற்பனையாகக் கண்டுகொண்டிருத்தலும், வாணிகத்தில் தனக்கெனத் தனியொரு அரசாட்சியை அமைத்துக்கொள்ளும் மன உறுதி, போட்டியுடன் கூடிய சண்டையிடும் மனப்பான்மை, மற்றவர்களைக் காட்டிலும் தானே தலை சிறந்தவன் என்று உறுதிப்படுத்தும் துடிப்பு. புதிய பண்டங்களை உற்பத்தி செய்வதிலும் செயல்களை நிறைவேற்றுவதிலும் மகிழ்ச்சியைக் காணும் திறமை ஆகிய பண்புகளைப் பெற்றிருத்தலும் அத்தகைய தொழில் முயல்வோரின் பண்புகளாகும்.[1] தொழில் முயல்வோர் என்ற வீரம் மிகுந்த சொல்லிற்கேற்ற பண்பாளர் இவர்தான். தொழில் முயல்வோரில் சிறந்து விளங்கிய சிலரான ராக்பெல்லர் (Rockfeller) ஃகென்றி ஃபோர்டு (Henry Ford), கிரப் (Krupp) அல்லது லார்டு பீவர் புருக் (Lord Beaver-Brook) ஆகியோர் சும்பீட்டர் குறிப்பிட்ட இத்தகைய பண்புகளில் சிலவற்றை நிச்சயமாகப் பேரளவில் பெற்றுத் தங்களின் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவி, பெருஞ்செல்வம் ஈட்டி வணிகத்தில் தங்களுக்கெனத் தனி அரசுகளைத் தோற்றுவித்துக் கொண்டவர்களாவர். ஆனால், வணிக நிறுவனங்களின் புதிய அமைப்புகள், பொருளாதார, வணிகத் துறைகளில் நவீன அரசுகள் அதிகமான அளவில் தலையிட்டுப் பங்காற்றுதல் ஆகியவைகள் தோன்றிய பிறகு சும்பீட்டரின் கருத்துப்படியான தொழில் முயல்வோரின் வாய்ப்பு வெகுவாகக் குறைந்தவிட்டது. இயற்கையாகவே தோன்றத்தக்க தொழில் முயற்சியின் வளர்ச்சிக்கு குறிப்பிட்ட சமுதாய, நிலையச் சூழ்நிலைகள் மிகவும் அவசியமானவைகளாகும். மிகப் புகழ்பெற்ற, திறன் மிகுந்த போர் வீரர்கள், வெற்றிகள் பல பெற்றுப் புகழ் பெற்ற விஞ்ஞானிகள், அரசியல் தலைவர்கள் ஆகியோர் பெற்றிருப்பதற்குச் சமமான சமுதாயப் புகழைப் பெற்றவர்களாக வெற்றி மிகுந்த வணிகர்கள் திகழ்வார்கள். தொழில் முயற்சி நடவடிக்கைகள் புகழையும் சமுதாயத்தில் நற்

[1] Schumpeter, Joseph, A., *Theory of Economic Development*, Harvard, 1934, pp. 66-70.

பெயரையும் பெறுவதற்கு உதவுமானால்தான் தகுதியும் திறமையும் வாய்ந்த மனிதர்கள், வணிகத்தில் புகுவார்கள். மூலதனம், உழைப்பு அளிப்புக்கள் ஆகியவற்றோடு எளிதான வாய்ப்பை வணிகம் பெற்றிருக்க வேண்டும். பிரான்சு நாட்டில் புதுமையானவைகள் யாவும் கண்டுபிடிக்கப்பட்டபோது அந்நாட்டில் தேவையான அளவுக்கு மூலதன அளிப்பு இல்லாத காரணத்தால் அப் புதுமைகள் யாவும் பிற நாடுகளில் வணிகத் துறையில் ஈடுபடுத்தப்பட்டன. தொழிலாளர்களை வேலைக்கமர்த்துவதற்கு முடியாமற்போனதும். தொழில் முயல்வோரை ஒரு நாட்டிலிருந்து அடுத்த நாட்டிற்கு மாற்றியிருக்கிறது. முன்னணித் தொழில்கள் சிலவற்றிற்கு அனுமதிச்சீட்டு (licence) வழங்குதல் போன்ற தொழிலுக்குப் புகுவதற்கான செயற்கைத் தடைகள், புதுமைகளைப் புகுத்தும் தொழில் முயற்சித் திறமையில் சோர்வடையச் செய்யும் தீய விளைவைப் பெற்றிருக்கிறது. தவிர, நிருவாக மேலாளர்கள், தொழில் முயல்வோர்களின் புதிய அளிப்பு தோன்றத்தக்க முன்னேற்றுவிக்கும் மக்களின் தொகுப்பும் இருக்க வேண்டும்.[1] மக்கள், பருப்பொருள் சார்ந்த முன்னேற்றத்தைப் பெற வேண்டும் என்ற மனநிலை உடையவர்களாகவும் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான தளராத பேரார்வத்தால் ஊக்குவிக்கப்படுவர்களாகவும், கல்வி முறையானது, பொறியியல், தொழில் நுண்ணியல், அறிவியல் ஆகியவைகளைச் சார்ந்துள்ளதாகவும் இருந்தால்தான் இஃது இயலும். இதற்குச் சமமான சிறப்பிடத்தைத் தனியார் முயற்சிக்கும் ஊக்கத்திற்கும் நல்ல பல வாய்ப்புகள், செல்வத்தைச் சேர்ப்பதற்குத் தேவையான ஊக்குவித்தல்கள், ஆபத்துக்களை மேற்கொள்வதற்கும் தனிப்பட்ட முயற்சிகளுக்கும் தகுதியான பண வகையிலான ஊதியங்கள் கிடைக்கும் உறுதி ஆகியவைகளைத் தரத்தக்க வகையில் அமைதியான சட்ட அமைப்பு, நிருவாக அமைப்பு, அரசியல் அமைப்பு ஆகியவைகள் இருப்பதும் பெறுகின்றன.

இந்நிலைகளில் பெரும்பாலானவை, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இல்லை. இதற்கு மாறாக, பொருளாதாரப் பின்தங்கிய நிலையின் பண்பாகிய கடுமையான சமுதாய, நிலைய அமைப்பு முன்னடத்திச் செல்லும் தொழில் முயல்வோர் வகுப்பு தோன்றுவதற்கான வழியில் தடையாக இருக்கின்றது. பெருமுயற்சியும் கடும் உழைப்பும் கொண்ட உழைப்பாளர் வகுப்பின் அளிப்பைத் தடை செய்யத்தக்கவைகளான கூட்டுக் குடும்ப அமைப்பு, சாதி

[1] Brozen, Yale, 'Entrepreneurship and Technological Change,' *Economic Development—Principles and Patterns*, Ed. by Williamson and Buttrick, Prentice-Hall, 1954, pp. 214-21.

முறை ஆகியவைகளும் தொழில் முயற்சித் திறமைகள் வெளி வருவதைத் தீமை விளைவிக்கத்தக்க வகையில் பாதிக்கின்றன. தனிப்பட்ட முயற்சியைக் கூட்டுக் குடும்ப முறை பாதிக்கிறது. சாதி அல்லது வகுப்பு மனப்பான்மை எங்கு வலுவுள்ளதாக இருக்கிறதோ, அங்குச் சாதிப்பிரிவு உறுப்பினர்களிடம் மட்டுமே கடமைப் பொறுப்பு இருக்கும். பெரும் தொழில்களை அமைப்பதற்குத் தேவையான பரந்த கடமைப் பொறுப்பு வலுவற்றதாக இருக்கும். குறைந்த பொருளாதார வளர்ச்சி, சமுதாயப் பின்தங்கிய நிலை ஆகியவைகளின் இயல்புகளான குருதிச் சலுகை பாராட்டுதல், கையூட்டு வாங்கிச் சுரண்டுதல், வலிந்து பறித்தல் ஆகியவைகள் யாவும் குடும்பம் அல்லது வகுப்புகளின் பொறுப்பு அழுத்தத்தினால் தோன்றியவைகளாகும்.[1] சமுதாய நடவடிக்கைகளில் திருக்கோவில் வழிபாட்டுரை, தனியார் புகழுரை ஆகியவைகளும் குறிப்பிட்ட பிரிவு மக்களுக்கான அல்லது சாதிக்கான உணர்வினால் தோன்றுபவைகளாகும். நேர்மை என்பது ஒரு குடும்பம் அல்லது சாதி அளவில் மட்டுமே இருக்கும்போது, பொறுப்புள்ள பதவிகளுக்கான நியமனங்கள் யாவும் குறிப்பிட்ட வகுப்பின் அல்லது சாதியின் உறுப்பினர்களிடம் மட்டுமே அமைக்கப்படுகின்றன. வாணிகத்தில் குடும்பத்தின் கட்டுப்பாடு எங்கெங்கு இருக்கின்றனவோ அங்கெல்லாம் கட்டுப்படுத்தும் குடும்பத்திலிருந்தே நிருவாகிகள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். புரோகித ஆட்சி முறை முன்னேற்றத்தையும் குடும்பப் பொறுப்புக்கள் பெருமளவில் நிருணயிக்கின்றன. தவிர குடும்ப நிறுவனங்களின் நிருவாகம் அதிகமான அளவில் மையப்படுத்தப்பட்டிருக்கும் இயல்பினால், இளையவர்கள் தலைமைப் பொறுப்பு ஏற்றல், முடிவுகளை எடுத்தல் ஆகியவற்றில் நல்ல அனுபவம் பெறுவதற்கான வாய்ப்புக்களும் மிகவும் குறைவாக இருக்கின்றன.[2] சாதி அமைப்பு முறையின் அடிப்படையில் தொழில்களின் அடுக்கமைவுகள் எவ்வாறு கடுமையாக அமைந்துள்ளன என்பதைப்பற்றி ஐக்கிய நாடுகளின் ஆராய்ச்சியில் கீழ்க்கண்டவாறு தொகுத்துரைக் கப்பட்டுள்ளது. "வேலைப் பகுப்பை நிருணயிக்கும் மரபுவழிக் கோட்பாடுகள், கீழ்ச்சாதி மக்களை பெரும் பங்கு வகிக்கும் அளவுக்குச் செல்வதைத் தடை செய்கின்றன; அவர்கள் சாதி நிலைக்கேற்றவாறான தொழில்களைத்தான் தொடர்ந்து செய்ய வேண்டுமென வலியுறுத்துகின்றன. சாதி அடிப்படையில் நிருணயிக்கப்பட்ட

[1] Belshaw, Horace, *Population Growth and Levels of Consumption*, George Allen and Unwin, London, 1956, p. 154.

[2] *Management of Industrial Enterprises in Underdeveloped Countries*, U. N., 1958, pp. 8 and 9.

தொழில்களைத் திறமையாகவும் முழுமையாகவும் செய்வதன் மூலம் மறுபிறவியில் ஆவி மாற்றத்தின் மூலம் மேல் நிலையை அடைய முடியும் என்ற தளராத ஆழ்ந்த நம்பிக்கையும், இதில் நம்பிக்கையில்லாதோர் அதற்கேற்றவாறு மேன்மேலும் கீழ் நிலையை அடைவர் என்ற ஆழமான நம்பிக்கையும் இச் சாதி முறை நிலைத்து நிற்பதற்கான வலுவான காரணியாக இருக்கிறது. இன்னும் இயக்க விளைவுயுடையதாக இருக்கிறது என்ற அடிப் படையில் அத்தகைய மதிப்பு ஆற்றுப்படுத்துதல் புதிய பொருளாதார நடவடிக்கைகளில் முனைந்து மேற்கொள்ளும் தனியார் ; நடவடிக்கைகளுக்குத் தடையாக இருக்கின்றது. குறிப்பாக, தலைமை ஏற்கும் தன்மைகளுக்கு ஏற்றவர்கள் தங்கள் திறமைகளைத் தொழில்துறையில் தொழில் முயல்வோர்களாக மாற்றிக் கொள்வதற்குத் தடையாக இருக்கின்றது.''[1] தங்களுக்குச் சரியான வகையில் நடைமுறையில் உள்ள சமுதாய அமைப்பு களால் இணைக்கப்படாமலும் தங்களின் தகுதிகளையும் திறமைகளை யும் வணிகத்துறையில் மாற்றும் வண்ணம் அவ் வமைப்புகளுக்கு எதிரிடையாகச் செயல்பட்டும் இருக்கின்ற குறிப்பிட்ட வகைப் பிரிவு மக்களின் மூலம்தான் பெரும்பாலும் பொருளாதார முன்னேற்றம் தோன்றியுள்ளது. இவ்வாறாக, தனிப்பட்ட உறுதி யான தன்னம்பிக்கையைப் பேரளவில் கடைப்பிடித்த (1648-ல் ஜார்ஜ் பாக்ஸ் என்பவர் நிறுவிய நண்பர் கழகத்தினராகிய) குவாக்கர்கள் இங்கிலாந்தில் மிகவும் புகழ்பெற்ற சில தொழில் நிறுவனங்கள், பண நிறுவனங்கள் ஆகியவைகள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்த திறன்மிக்க வணிகர்களைத் தோற்றுவித் துள்ளனர். இந்தியாவில் பார்சிகள் அவர்களைப் போன்று இருந் திருக்கிறார்கள்.

சமுதாயப் பழமையைப் போற்றுதல், நகர்ப்புறங்களுக்குக் குடிபெயர்தலின் குறைவான தரம், பழமையில் தோய்ந்த கல்வி முறை, வணிக வெற்றிகளுக்கு எந்த விதமான சமுதாய மதிப்பும் பெருமளவில் இல்லாதிருத்தல் ஆகியவைகளைக் குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளில் தொழில் முயற்சியைத் தடை செய்த பிற காரணிகளாகக் குறிப்பிடலாம். மேலை நாடுகளில் நகர்ப்புறங் களுக்குக் குடிபெயர்தலும் தொழில் மயமாதலும் ஒன்றுக் கொன்று சாதகமான விளைவுகளைத் தோற்றுவித்துள்ளன. புதிய வழிகள், புதிய தொழில் நுண்ணியல்கள், புதிய நுகர்வுகள், புதிய உற்பத்தி அமைப்புக்கள், புதிய சமுதாய நிலையங்கள் ஆகியவைகள் யாவும் வெற்றியான முறையில் பயன்படுத்தப்பட்ட மைய இடங்களாக நகரங்கள் இருக்கின்றன. முன் முனைப்புள்ள தீவிர

[1] *Processes and Problems of Industrialization*, U. N., 1955, p. 19.

உணர்ச்சியுள்ள மக்களை இந்த நகரங்களின் மிக வேகமான மாற்றங்கள் கவர்ந்தன. கல்வி, நகர்வாழ் மக்களின் உயர்ந்த நிலையிலான வருமானம், தேவை, நல்ல முறையிலான தொடர்புகள் ஆகிய பிற வசதிகளும் அவர்களிடையே வணிகம் முன்னேறுவதற்கு ஆக்கம் தந்தன. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பண்பாடுகளின் மையங்களாக ஆசிய நாடுகளின் பல நகரங்கள் இருக்கின்றன. மேலை நாடுகளில் உள்ளவை போன்ற நகரங்களின் எண்ணிக்கை (பின்தங்கிய நாடுகளில்) மிகமிகக் குறைவானதாகும். மரபு வழிப் பண்பாட்டிலிருந்து பல வழிகளில் வெகுதூரம் விலகியவைகளாக அவைகளின் பண்பாட்டு முறைகள் இருக்கின்றன.[1] பொருளாதார நிலைகளில் முன்னேற்றமடைந்துள்ள மேலைநாட்டு நகரங்களோடு ஒப்பிடுகையில் மொத்த மக்கள் தொகையில் நகர்வாழ் மக்கள் தொகையின் எண்ணிக்கை மிகவும் குறைவானதாக இருக்கிறது. கிராம மக்கள் அதிகமான அளவில் இருத்தல், வேளாண்மையே வாழ்க்கையின் முக்கியமான தொழிலாக இருத்தல் ஆகியவைகளும் மக்களின் மரபுவழி நோக்கங்கள், போட்டியிடும் உணர்ச்சியின்மை ஆகியவைகளை விளக்குகின்றன. இது கிராமப் பகுதிகளில் உள்ள நிருவாக அமைப்புக்களோடு தொடர்புடைய பழக்கங்களை தொழில் நோக்கங்களுக்கும் பயன்படுத்தும் விளைவைத் தோற்றுவித்துள்ளது. இவ்வாறாக, நகரங்களில் உள்ள வணிக மேலாளர்களிடையே காணப்படும் தன்னிச்சையான நிலப் பிரபு நோக்கங்கள், தொழிலாளர்—நிருவாக இடர்களுக்கானதொரு காரணமாகக் காட்டப்படுகிறது. வேளாண்மைத்துறைப் பொருளாதாரத்தோடு தொடர்புடைய நோக்கங்கள், எண்ணங்கள் ஆகியவற்றின் செல்வாக்கின் இயக்கவிளைவுதான் தொழில்களில் புதிய உற்பத்தி முறைகளைப் புகுத்துவதில் ஏற்படும் தாமதத்திற்கான காரணமாகும். முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் இருந்ததைப் போலல்லாமல் தொழில்துறை முன்னேற்றத்திற்கு முந்திய நிலையில் உள்ள நாடுகளில் வியாபாரத் திறமையும் வெற்றிகளும் சமுதாயத்தின் பாராட்டுதல்களைப் பெறுவதற்கானதொரு இலக்காக இருக்கவில்லை என்பது உண்மைதான். வணிகத்திற்குக் குறைவான சமுதாய மதிப்பு கிடைத்ததனால் திறமைகளையெல்லாம் மரபு வழிப்பட்ட போர்வீரர் வாழ்க்கைக்கு மாற்றுகிறது. வணிகத்தின் கூர்மதியும் அறிவுத்திறனும் தவறென நம்பப்பட்டது. வணிகத்திறமையானது இரட்டைவேடம் புனைந்துள்ளது என்றும் நேர்மையற்றது என்றும் பெரும்பாலும் கருதப்பட்டது. வணிகர்களிடையேயுள்ள பழக்கங்கள் எந்த அளவுக்குத்

[1] Hoselitz, Bert F., *Sociological Aspects of Economic Growth*, Free Prees, Glencoe, Illinois, 1960, p. 225.

தெரிந்தவைகளோ, அந்த அளவுக்குத் தொழில் முயல்வோர் வகுப்புக்கு எதிரானவைகளினால்தான் வணிகர்களைப் பற்றிய சிறுமையான கருத்து நிலவியது. இந்தியா போன்ற ஏழ்மை நாடுகள் சிலவற்றில் கல்வியின் குறைந்த தரம் தொழில் முயல்வோர் தோன்றுவதற்கு காரணமாக இருந்திருக்கின்றது. ஆசிய நாடுகளில் கல்வி கற்றலும் கல்வியும் மதத்தைச் சார்ந்தவைகளாகவே இருக்கின்றன. வெகு அண்மைக்காலம் வரை அறிவியலுக்குச் சிறப்பிடம் தருவதற்கு எதிராகக் கலையியலுக்கு மிகமிகச் சிறப்பிடத்தைத் தந்ததுதான் இந்தியாவின் கல்வி முறையின் குறையென்று வழக்கமாகக் குறை சொல்லப்பட்டது. தகுதி வாய்ந்த அரசாங்க நிருவாகப் பொறுப்பாளர்களின் அளிப்பு, பயிற்சி ஆகியவைகளுக்காக ஆங்கிலேயர்கள் ஆட்சியில் தரப்பட்ட ஊக்கம்தான் இதற்கான பெரும்பான்மைக் காரணமாகும். தவிர அரசியல் அறிஞர்கள், தொழில் நுண்ணியல் மேதைகள், ஆகியோர்களுக்கான நல்வாய்ப்புக்களையும் தொழில் முன்னேற்ற மின்மை தடை செய்தது. கல்வியில் இத்தகைய குறை இருப்பது ஏற்றுக் கொள்ளப்பட்டாலும்கூட எந்த அளவுக்குத் தொழில் முயற்சித் திறமையை முன்னேற்றமடையச் செய்திருக்குமோ அந்த அளவுக்குக்கூட இந்தியக் கல்விமுறை தனது பங்கை ஆற்றவில்லை என்பது மறுக்கமுடியாத உண்மையாகும். கல்வி கற்றவர்கள் தங்கள் கவனம் முழுவதையும் மேலை நாடுகளில் செலுத்தியதே இதற்கான இன்றியமையாத காரணமாகும். புரோகித அமைப்பிலிருக்கும் சமுதாயத்தில் தங்கள் நிலைக்குக் கீழ்நிலையில் உள்ள மக்களைப்பற்றிய சிந்தனையை மேல் மட்டத்திலிருந்த மக்கள் மிகவும் குறைந்த அளவில் பெற்றிருந்தது தொடர்புகள் இல்லாமையையுடைய மதப் பழக்கங்கள் இருந்தது ஆகியவற்றின் விளைவுதான் இச் சமுதாயக் கண் திரைநோய் என்று எட்வர்டு சில்ஸ் ((Edward Shils) குறிப்பிடுகிறார்.[1]

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வணிகத்தின் இரண்டு சிறப்பான இயல்புகளை இவ்விடர்ப்பாடுகள் விளக்குகின்றன. முதலாவதாக மூலதனத்தை மட்டுமல்லாமல் வணிக உணர்வையும் முன்னேற்றமடைந்த தொழில் நுண்ணியலையும் கொணர்ந்த வெளிநாட்டவர்களால் தொழில்கள் தொடங்கப்பெற்றன. இதற்கான எடுத்துக்காட்டுகளாக இந்தியாவில் ஸ்காட்லாந்து இங்கிலாந்து மக்களையும், எகிப்தில் சிரியா, அமெரிக்கா கிரீசு மற்ற ஐரோப்பிய நாடுகளின் மக்களையும் யூதர்களையும், பிரேசில்,

[1] Shils, Edward, 'The Intellectual, Public Opinion and Economic Development,' *Problems of Economic Growth*, Office for Asian Affairs, Delhi, 1960, p. 55.

கொலம்பியா ஆகிய நாடுகளில் லெபனன், சிரியா நாட்டவர்களையும், மெக்சிகோவில் ஸ்பெயின், பிரான்சு நாட்டு முதலீடு செய்பவர்களையும், மலேயா, பர்மா ஆகிய நாடுகளில் இந்தியர்களையும் குறிப்பிடலாம். இரண்டாவதாகக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மக்களின் குறிப்பிட்ட இயல்புகளோடு இணைந்திருக்கும் மூலதனமின்மை, அதன் விளைவாகத் தோன்றும் திறமையின்மை, ஆபத்தை எதிர்நோக்குவதற்குச் சம்மதமின்மை ஆகியவைகள் இந்நாடுகளில் தொழில்களில் செய்யப்படவேண்டிய முதலீட்டை மாற்றி வணிகம், நிலச் சொத்துக்கள் ஆகியவற்றின் மீது முதலீடு செய்யச் செய்தன அத்தகைய நிருவனங்களில் அதிகமான தொழிலாளர்களை நிருவகித்தல், பொறிநுட்பம், தொழில் நுண்ணியல் அறிவு ஆகியவைகளுக்குத் தேவையான திறமை தேவைப்படுவதில்லை. கைகளால் வேலைபார்ப்பதை மிகவும் அவசியமாக்கும் உடல் உழைப்புக்கு எதிரான சிந்தனை உழைப்பைக் கீழ்த்தரமாக நினைப்பதற்குமான அமைப்பையும் உடையது அது. எல்லாவற்றையும்விடச் சிறந்தது யாதென்றால், இத்தகைய முதலீடுகளில் தொழில்களைவிட ஆபத்து குறைவு. மொத்தப் பண விற்றுமுதலும் மிக விரைவாகத் தோன்றும். தொழில்கள் தொடங்கப்பட்டாலும்கூட, ஆபத்துக்கள் இல்லாத தொழில்களைத் தொடங்கும் போக்குதான் பொதுவாக இருக்கிறது. சில்லியிலும், பிரேசிலிலும் ஒருசில ஏற்றுமதிப் பண்டங்களின் மீதான முதலீடுகளிலும் சீனி உற்பத்திக்கான முதலீடுகளிலும் மட்டும் மிகச் செறிவாக மேற்கொள்ளப்பட்டதை இதற்கு விளக்கமாகக் குறிப்பிடலாம்.

இஃதிவ்வாறிருப்பினும் இவண் குறிப்பிடத்தக்க வகையில் பொருளாதாரத்தின் பின்தங்கிய நாடுகளில் உள்ள ஒரு நன்மையும் உண்டு. அந் நாடுகள் தொழில்துறைக்கு மிகவும் தாமதமாக (இப்போதுதான்) வருகின்றன. எனவே தொழில் துறையில் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளின் அனுபவத்திலிருந்து அவர்கள் பலவற்றைக் கற்றுக்கொள்ளும் நிலையில் இருக்கிறார்கள். தவிர, பலமுறை முயற்சிக்கப்பட்டவைகளாகவும் பிற இடங்களில் வெற்றியைத் தந்தவைகளாகவும் உள்ள தொழில் அமைப்புகளையும், மாதிரிகளையும் புகுத்தும் நிலையிலும் இருக்கிறார்கள். இவை தவிர, இன்றைய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் வணிகர்கள் பிற நாடுகளில் உள்ள தொழில் நகரங்களுக்குச் சென்று பார்க்கவும் தொழில்களைத் தொடங்குதல், நிருவகித்தல் போன்றவை தொடர்பான செய்திகளைப்பற்றித் தொழில் நடக்குமிடங்களிலேயே தெரிந்து கொள்வதற்கும் அவ்வறிவைப் பெறுவதற்கும் வெற்றி தரத்தக்க திறன்மிக்க

வணிக நிருவாகத்தின் வெற்றி வாய்ப்பு ரகசியங்களைப்பற்றி நன்கு தெரிந்து கொள்வதற்கும் நல்ல பல வாய்ப்புகள் உள்ளன, சோதனை, ஆய்வு ஆகியவற்றில் அதிக அளவில் பணத்தைச் செலவிட்டு ஆபத்துகளை எதிர்நோக்கத் தேவையில்லை என்ற அடிப்படையில் குறிப்பிட்ட சிறிய அளவிலான மூலவளங்களைக் கொண்டே அவர் செயல்படமுடியும். எனவே, பிற நாடுகளில், முயற்சிக்கப்பட்ட உற்பத்தி முறைகளைப் புகுத்துதல், அல்லது தனது சொந்தநாட்டின் காரணி அளிப்பு நிலைக்கேற்பவும் பலதரப் பட்ட பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கேற்பவும் அவ் வுற்பத்தி முறைகளை மாற்றியமைத்துப் பயன்படுத்துதல் ஆகியவைகள்தான் பொருளாதார முன்னேற்றத்திற்கு அவர் ஆற்றும் பங்காகும். இந் நன்மைகளுக்கு எதிராக அவைகளை மிஞ்சிச் செல்லத்தக்க நிலைய இயல்புகள் அல்லது பொருளாதார இயல்புகள், இடர் பாடுகள் சிலவும் இருக்கின்றன. பரிசோதனை, புதுமையைப் புகுத்துதல் ஆகியவற்றிற்கான பெரும் செலவுகளைத் தவிர்க்கலா மென்றாலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சமுதாயப் பின்னமைப்புச் செலவுகளை மேற்கொள்ளும் பொறுப்பை அரசு ஏற்றுக்கொண்டாலும்கூட மூலதன ஆக்கத்திற்காகச் செய்ய வேண்டிய பணிகளையெல்லாம் செய்யவேண்டியிருக்கிறது என்ற உண்மையானது பெரிய அளவிலான அடிப்படை முதலீடுகளைச் செய்யவேண்டிய அவசியத்தைத் தோற்றுவிக்கிறது. மிகவும் செலவுமிக்க மூலதனச் சாதனங்கள் இறக்குமதி செய்யப்பட வேண்டியிருக்கின்றன. வெளிநாட்டு அறிவுரைகளுக்காகவும். இடைத் தரகர்களின் பணிகளுக்காகவும் பெருந்தொகைகள் செலுத்தப்பட வேண்டியிருக்கின்றன. சில நேரங்களில் தொழில் அதிபர்கள் தங்களின் சொந்த சக்தியையும் போக்குவரத்து வசதி களையும் தந்துதவ வேண்டியிருக்கிறது. பொறிகளின் பகுதிகள், உதிரிப் பாகங்களின் பட்டியல்கள் போன்றவைகள் அமைக்கப்பட வேண்டியிருக்கின்றன. தொழிலுக்குத் தேவையானவைகளும், கச்சாப் பொருட்களின் அளிப்பும் சீரான முறையில் இல்லாதிருப் பதால் பெரும் அளவுகளில் கச்சாப் பொருட்களை இருப்பு வைக்க வேண்டியிருக்கிறது. பேரளவில் முதலீடு செய்யப்படவேண்டும் என்பதோடு இவைகள் யாவும் சேர்ந்து கொள்கின்றன. இத்தகைய பணப் பொறுப்போடு தொழிற்றுறை முன்னேற்றத்திற்கு முந்திய நிலையில் உள்ள பொருளாதாரங்களில் உள்ள வணிகர்கள் பொருளாதார முன்னேற்றத்தில் குறைந்த தரமுள்ள நாடு களுக்கே உரியவைகளான சில உறுதியின்மைகளிலிருந்து முக்கிய மாகத் தோன்றக்கூடிய இடர்ப்பாடுகள் சிலவற்றையும் எதிர் நோக்க வேண்டியுள்ளது. உற்பத்திச் செலவின் பலதரப்பட்ட இனங்கள், சந்தையின் அளவு, தேவையின் நிலைகள், போட்டியின்

தரம், சமுதாயப் பின்னமைப்பு வசதிகள் போன்ற பல காரணிகளைப்பற்றிய நம்பிக்கையான தகவல்கள் கிடைத்தால்தான் முதலீடு ஒன்றினுல் பெறத்தக்க வருவாயைப்பற்றிச் சரியான மதிப்பீடு செய்யமுடியும்.

முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் பெரும் வணிகங்களால் மேற்கொள்ளப்படும் சந்தை ஆய்வுத் திட்டங்களும், அரசாங்க ஆய்வுக் கழகங்கள், வங்கி நிறுவனங்கள், பண நிலையங்கள் ஆகியவைகளால் சீரான முறையில் வெளியிடப்படும் செய்திகளும் வணிகர்கள் தங்களின் எதிர்கால மதிப்பீட்டைச் செய்வதற்குத் தேவையான புள்ளிவிரங்களைத் தருகின்றன. தவிர, இத்தகைய மதிப்பீடுகளைச் செய்யும்போது இத்துறையில் உள்ள வல்லுநர்களின் பணிகளையும் அவர் பெறமுடிகிறது. ஆனுல், பெருளாதாரத்தில் பின்தங்கிய நிலையில் உள்ள நாடுகளில் இப் புள்ளிவிவரங்கள் யாவும் மிகவும் பற்ருக் குறையாகவும் தவறுனவைகளாகவும் இருக்கின்றன. இதன் காரணமாக வணிகத்தில் தோன்றும் ஆபத்துகள் மிகவும் அதிகமான அளவில் இருக்கின்றன. ஆபத்தின் அளவு ஒரளவுக்குத் தெரிந்தாலும்கூட இவ் வாபத்துகளிலிருந்து தப்பித்துக் கொள்வதற்கு வகைசெய்யும் வாய்ப்புகள் குறைந்த வருமானமுள்ள நாடுகளில் மிகவும் குறைந்த அளவில் இருக்கின்றன. இவை தவிர, குறைந்த வளர்ச்சியுள்ள நாட்டில் சிறிய மாற்றங்களால் தோன்றும் விளைவுகளும் மிக அதிகமானதாகத் தென்படும் போக்கு காணப்படுகிறது. ஒரு பொருளின் குறிப்பிட்ட அளவு இறக்குமதியால் உள்நாட்டுக்குள் வரும் பண்டங்களின் அளவு சிறிதளவு உயர்ந்தாலும் கூட அல்லது புதிய முதலீட்டு விகிதத்தில் சிறிதளவு உயர்வு தோன்றினுலும்கூட அஃது உள்நாட்டு உற்பத்தியாளரின் வாய்ப்புச் சந்தையில் பெரிய அளவு வேறுபாட்டைத் தோற்றுவித்துவிடுகிறது. இந்த நாடுகளில் உள்ள வியாபாரிகள் கோழைத்தனம் உடையவர்களாகவும் குறைவான துணிவுள்ளவர்களாகவும் இருப்பதற்கான பெரும் காரணங்களில் ஐயமற இதுவும் ஒன்ருகும். ஆதலால், புதிய முயற்சிகள் மிகவும் அரிதாக இருக்கின்றன. எனவே, வெற்றியுடைய தொருவணிக நிறுவனத்தை வணிகர்கள் தாங்கள் பின்பற்றவேண்டிய மாதிரி நிறுவனமாகக் கருதுகிருர்கள். அஃதோடு அக் குறிப்பிட்ட மாதிரி நிறுவனத்தின் அளவு, சாதனங்கள், செயல்அளவுபோன்றவைகளைப் போன்றே தங்கள் நிறுவனத்திலும் அமைக்கிருர்கள். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள வணிகர்கள் மற்றவர்களின் மாதிரியைப் பின்பற்றும் இத்தகைய மனநிலையானது அவர் செயல்படவேண்டிய பாதகமான சூழ்நிலைகளினுல் ஒரளவுக்காவது தோன்றியது எனக் குறிப்பிடலாம்

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தொழில் முயற்சியானது மிகவும் அரிதானதொரு காரணியாக ஏன் இருந்து கொண்டே இருக்கிறது என்பதைச் சமுதாய, நிலைய, பொருளாதாரக் காரணங்களால் தோன்றும் இத்தகைய தடைகளும் இடர்ப்பாடுகளும் விளக்குகின்றன. எந்த வழிகளில் முன்னேற்றம் தோற்றுவிக்கப்பட வேண்டுமென்பதற்கான பெரும் வழிகளையும் அவைகள் சுட்டிக் காட்டுகின்றன. முக்கியமாகத் தனியார் முயற்சியையும் வணிகத்தொழில் முயற்சியையும் அதிகரிக்கத்தக்க வழிகள் யாவும் நல்ல முறையிலான கல்வி வசதிகள், கல்வி முறையில் மாற்றம் ஆகியவைகளை அமைத்துத் தருதல் தொழிலாளர்களின் திறமையின் தரத்தையும் தொழிலாளர்களின் தரத்தையும் உயர்த்துதல், சமுதாயப் பழக்கங்களின் கட்டுப்பாடுகளைத் தளர்த்துதல், பணநிலையங்களை அமைத்தல், சமுதாயப் பொருளாதாரப் பின்னமைப்பு வசதிகளை அமைத்துத் தருதல், வணிகம், நாட்டின் பொருளாதாரம் ஆகியவைகளைப்பற்றிய புள்ளிவிவரங்களையும் தகவல்களையும் அளித்தல், சட்ட அமைப்புகள், நிருவாக முறைகள் ஆகியவைகளை முன்னேற்றுவித்தல் ஆகிய பலவற்றையும் அவைகள் உள்ளடக்கியுள்ளன. இவ்வாறு உள்ளார்ந்திருப்பவைகளின் பரும அளவானது அரசு நடவடிக்கைகளின் அவசியத் தேவைகளைச் சுட்டிக்காட்டுகின்றன. சட்ட அமைப்பு, நிருவாக இயந்திரம் ஆகியவற்றைச் சீர்திருத்துவதில் அரசாங்கம் தனக்குத்தானே கட்டுப்பட்ட நிலையில் இருக்கிறது. தொழிற்றுறையில் தேவையான அளவுக்குத் தனியார் தொழில் முயற்சி இல்லாமலிருத்தல், பொதுப் பயன்பாடுகள், அடிப்படைத் தொழில்கள் ஆகியவைகளில் மேற்கொள்ளப்படவேண்டிய இன்றியமையாத முதலீட்டுத் திட்டங்களுக்குத் தேவையான தொடக்க நிலைப் பேரளவுச் செலவுகள், வணிக நோக்கிலிருந்து பார்க்கும் போது அத்தகைய முயற்சிகளின் கவர்ச்சியின்மை ஆகியவைகள் யாவும் தனியார் முயற்சியின் உடனிகழ்வாக அரசு முயற்சியும் மேற்கொள்ளப்படவேண்டிய அவசியத்தைச் சுட்டிக்காட்டுகின்றன. தவிர, இந்திய அரசு வலியுறுத்துவதைப் போன்று தனியார் வணிகத்திற்கு மாதிரியாக திகழத்தக்க புதிய தொழில் முயற்சிகளைத் தோற்றுவிக்கும் பொறுப்பையும் அரசு மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றில் தற்போதுள்ள பொருளாதார சமுதாய அமைப்பில் தனியார் செயல்கள் தொடர்ந்து நடைபெற இத்தகையப் பொதுத்திட்டங்கள் மிகவும் அவசியமானவைகளாகும்.

**தொழில் முயற்சித் துறையில் இவ்வாறு நேரிடையாகப் பங்கு கொள்வதோடு கீழ்க்கண்ட நிருவாக நடவடிக்கைகளாலும் வரிக்**

கொள்கைகளாலும் பொருளாதார வளர்ச்சிக்குச் சாதகமாக இருக்கத்தக்க சமுதாய, பொருளாதார நிலைகளையும் அரசு தோற்றுவிக்கலாம். (i) கல்வியை விரிவாக்குவதன் மூலமும், தொழில் நுண்ணியல் முன்னேற்றத்திற்கும், தொழிற்றுறை வேலைக்கும், நிருவாகத்திற்கும் தேவையானதொரு விருப்பத்தையும், தேவையான திறமைகளைத் தருவதற்குக் கல்வியில் புதிய அமைப்பையும் தருவதன் மூலமும் சமுதாய, நிலைய அமைப்புகள் பொருளாதார முன்னேற்றத்திற்கு இசையானவைகளாக்கப்படலாம். (ii) கிராமப்பகுதிகளில் வங்கி வசதிகளைத் தோற்றுவிக்கும் செயல்களை ஊக்குவிப்பதன் மூலமாகவும். அரசினால் சேகரிக்கப்படும் பண மூலவளங்கள் தனியார் முதலீடுகளில் வழிப்படுத்துவதற்கு ஏதுவான வகையிலான பண நிலையங்களைத் தோற்றுவிப்பதன் மூலமாகவும் பண மூலவளங்கள் சிக்கலை அரசு எளிமையானதாகச் செய்யலாம். (iii) அரசாங்கத்தின் முகவர்கள் மூலம் சேகரிக்கப்படும் புள்ளிவிவரங்கள், சந்தைப் புள்ளிவிவரங்கள் ஆகியவைகளைத் தருவதன் மூலமும் ஆய்வுக் கழகங்களைத் தொடங்கி வைப்பதன் மூலமும் ஏற்றுமதிகள், இறக்குமதிகள், வெளிநாட்டுச் சந்தைகள், உள்நாட்டுச் சந்தை நிலவரம், இவைபோன்ற வணிகத்தோடு தொடர்புடைய மற்றும் பிற தகவல்களைத் தருவதன் மூலமும் வணிகத்தில் உள்ள இடர்கள் ஓரளவுக்குக் குறைக்கப்படலாம். அரசாங்கத்தின் வரிகளும் வரிக் கொள்கைகளும் எந்த அளவுக்குத் தனியார் வணிகத்தின் உறுதியின்மையைச் சேர்க்குமோ அந்த அளவுக்கு வரிகளையும் வரிக் கொள்கைகளையும் எளிமையாக்குவதன் மூலம் அதனைக் குறைக்கலாம். (iv) வேலைகள், படை, நிருவாக வேலை ஆகியவைகளிலிருந்து நிருவாகத்திற்கான பொறுப்பாளர்களைத் தேர்ந்தெடுக்கும் வகைகளை ஊக்குவிக்கும் வழிகளையும் அரசு மேற்கொள்ளுமானால் வணிக நிருவாகத்திற்குத் தேவையான அளவுக்கு பயிற்சி வசதிகளையும் தொழிற்பேட்டைகளில் தரப்படுவதைப் போன்று சிறிய நிறுவனங்களுக்குச் சாதாரணமாகத் தேவைப்படும் உற்பத்தி வசதிகள், பழுதுபார்த்தல் வசதிகள், தொடர்ந்திருக்கச் செய்யும் வசதிகள் ஆகியவைகளையும் அரசு மேற்கொண்டால், விளைவின் தரத்தை உயர்த்தவும், திறன்மிகுந்த புதிய உற்பத்தி முறைகளைப் பிரபலமாக்கவும் தொழில் நுண்ணியல் கழகங்களையும் அரசே அமைத்துத் தொடங்குமானால் தொழில் முயல்வோருக்கான தேவைகள் நிறைவேற்றப்படலாம். (v) வேலைவாய்ப்புத் தரும் பள்ளிகளைத் தொடங்குதல், குறைந்த ஊதியத்திற்கான சட்டங்களை நிறைவேற்றுதல், உழைப்பைத் திறமையான முறையில் (பிற காரணிகளுடன் இணைத்து) அமைத்தல். நல்ல முறையிலான உழைப்பு—நிருவாகத் தொடர்புகளைத் தோற்றுவிப்

பதற்கான வழிகளைக் கண்டுபிடித்துக் கையாளுதல் ஆகியவைகள் மூலமாக உழைப்பின் தரம் உயர்த்தப்படலாம். பலநோக்குத் திட்டங்கள், தொழில் நிறுவனங்கள் ஆகியவை போன்ற அரசாங் கத்தின் பெரும் நிறுவனங்களில் பணிபுரிந்து கொண்டிருக்கும் இவ்வகைத் தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுமானால் தகுதி வாய்ந்த அலுவல் மேலாளர்கள், திறன்மிக்க உழைப்பாளர்கள் ஆகியவர்களின் அளிப்பை உயர்த்த முடியும்.

அண்மையில் அமெரிக்கப் பொருளாதார நிபுணர் ஒருவர் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சிறிய நிறுவனங்களில் உள்ள ஏராளமான வணிகர்களிடம் காணப்படும் உள்ளார்ந்திருக்கும் தொழில் முயற்சியைப்பற்றி நமது கவனத்தைத் திருப்பிக் காட்டுகிறார்.[1] எப்போதாவது தோன்றும் நவீன பெரிய பண்ணை சைக்கிள் கடை, பேருந்துப் போக்குவரத்து, செங்கல் காளவாசல் பானைக் கடை, சிறிய செங்கல் தொழிற்சாலை மற்றும் இவை போன்றவைகளின் வடிவத்தில் ஒரு சில உள்நாட்டு 'புதுமுனைப் பாளர் தீவுகள்' இருக்கின்றன. இத்தகைய நிறுவனங்களின் உரிமையாளர்கள் சிறிய அளவில் அவர்களாகவே வணிகம் செய்து கொண்டிருந்தாலும் அவர்கள் தொழில் முயற்சித் திறனை பெற்றிருக்கிறார்கள் என்றாலும் முன்னேற்றும் மக்களைக் கொண்ட தொரு பிரிவினராக அவர்கள் அமைந்திருக்கிறார்களா இல்லையா என்பதே இங்குள்ள வினாவாகும். எனவே, அவர்களின் வணிகங் களின் பொருளாதாரத்தைப்பற்றியும், அவர்கள் சமாளிக்க வேண்டிய நிருவாகச் சிக்கல்களைப்பற்றியும், பேரளவில் அவர்கள் செயல்படுவதைத் தடைசெய்யும் காரணிகளைப்பற்றியும் இங்கு கருதுவது மிகவும் பொருத்தமானதாகும். அத்தகைய தொழில் முயற்சி நாடெங்கும் பரவிக் கிடப்பதாகக் காணப்படுகிறது. எனவே, அவர்களின் இடர்ப்பாடுகளையும் சிக்கல்களையும்பற்றிய அறிவானது எந்த ஒரு தன்னியல்புப் பொருளாதார அமைப் புக்கும் முக்கியமானவர்களாக அமையும். திறன்மிக்க, முயற்சி மிக்க வணிகர்களின் அளிப்பை அதிகரிக்கவல்ல வழிகளை மேற் கொள்ள உதவும்.

## தொழில் நுண்ணியல் சிக்கல்
(The Problem of Technology)

அறிவியலை உற்பத்தி முறைகளில் பயன்படுத்துவது உற்பத்தித் திறனை அதிகரிக்கும் புதிய முறைகளைத் தோற்றுவிக்கிறது.

[1] Wolf, Charles and Sydney C. Sufrin, *Capital Formation and Foreign Investment in Underdeveloped Areas*, Syracuse, 1958, p. 29.

அறிவியல் அறிவை நிரம்பப் பெறுதல், அடிப்படை அறிவியல், கைகோள் அறிவியல் ஆகியவைகளில் முன்னேற்றம், அறிவியல் முறைகளில் திறமை மிகுந்த தகுதி, சமுதாயத்தில் அறிவியல் ஆர்வம் பரவுதல் ஆகியவைகள் யாவும் தொழில் நுண்ணியல் முன்னேற்றத்திற்கு முன்பு நிகழ்கின்றன. சமுதாயத் தொடர்பு களிலும் நிலையங்களிலும், உடனிகழ்வான மாற்றத்தையும் மக்களின் பழமைப் பழக்கவழக்கங்களிலும் சமுதாயத்தைப்பற்றிய எண்ணங்களிலும் ஒரு தளர்ச்சியையும் இது தோற்றுவிக்கிறது. தொழில் நுண்ணியல் மாற்றம், பொறி இயக்கம்பற்றிய அறிவியல் தோன்றும் வெறும் முன்னேற்றம் அல்ல என்று ஃகெர்பர்ட் ஃபிராங்கெல் (Herbert Frankel) குறிப்பிடுகிறார். இஃது அதைக் காட்டிலும் அதிகமான பொருளுடையதாகும். புதிய உற்பத்தி முறைக்கும் மிக வேகமான பொருளாதார நடவடிக்கைக்கும் தங்களைத் தாங்களே பொருத்தமானவர்களாக மாற்றிக்கொள்ளத் தக்கவகையில் சமுதாய, அரசியல், நிருவாக நிலையங்களை மாற்றி அமைத்துக்கொள்ளச் சமுதாயத்தின் விருப்பமான சமுதாய மாற்றங்களும் அதற்கு முந்தி நிகழ்ந்திருக்க வேண்டும்.[1] தொழில் நிலைக்கு முந்திய நிலையிலிருக்கும் பின்தங்கிய பொருளாதாரங் களின் சமுதாய அமைப்பு குறிப்பிடத்தக்க அளவில் தொழில் நுண்ணியல் முன்னேற்றங்களுக்குப் பொருத்தமானதாக இருக்காது என்பதை இது காட்டுகிறது.

தொழில் நுண்ணியல் தோன்றியதில் குறிப்பிட்டதொரு மாதிரியைக் காணமுடிகிறது; (அ) அறிவியல் அறிவை அல்லது அறிவியல் கண்டுபிடிப்பைத் தோற்றுவித்த அடிப்படை அறிவியல் கைகோள் அறிவியல் ஆகியவற்றின் முன்னேற்றம்; (ஆ) ஏற்கெனவேயுள்ள அறிவை அல்லது புதியதொரு கண்டுபிடிப்பைப் பயனுள்ள இலக்கைப் பெறுவதற்காகப் பயன்படுத்துவது; (இ) புதிய முறைகளைப் புகுத்துதல் அல்லது பொருளாதார உற்பத்திக்குப் புதிய கண்டுபிடிப்புகளைப் பயன்படுத்துதல்; (ஈ) தொழில் விரிவைத் தோற்றுவிக்கத் தக்கவைகளாகவும் நேரிடையாகவோ, மறைமுகமாகவோ மற்ற பல தொழில்களின் வளர்ச்சிக்கு உதவுபவைகளாகவும் உள்ள வகையில் வணிக அளவில் புதிய முறைகளை முன்னேற்றுவித்தலும் விரிவாக்குதலும் இவைகள் பொதுவான பொருளாதார முன்னேற்றத்தைத் தோற்று விக்கின்றன.[2] அறிவியல் முன்னேற்றத்திலிருந்து

[1] Frankel, Herbert S., *Economic Impact on Underdeveloped Countries*. Oxford, London, 1953, pp. 22-23.

[2] Keirstead, B. S., *Theory of Economic Change*, Macmillan, Toronto, 1948, p. 133.

தோன்றும் புதியதொரு கண்டுபிடிப்பை வணிகத்தில் புகுத்துவது பொருளாதாரத் துறையில் புதுமையைப் புகுத்துவதாகும். அதாவது, புதியன கண்டுபிடித்தல் அறிவியல் உண்மை. அதனைப் பொருளாதாரத்தில் பயன்படுத்தல் என்பது பொருளாதார உண்மை.[1] இத்தகைய தொழில் நுண்ணியல் முன்னேற்றம் வெற்றிதரத்தக்க வகையில் நிகழவேண்டுமானால் மூன்று நிபந்தனைகள் அவசியமாகின்றன; (அ) ஒவ்வொரு நிலையிலும் அதற்குப் பேரளவு மூலதனம் தேவைப்படுகிறது; (ஆ) சமுதாயத்தின் பக்கத்தில் அறிவியலைச் சார்ந்திருக்கும் நோக்கமும் போக்கும் மட்டுமல்லாமல் வணிக நோக்கங்களுக்காக அறிவியல் கண்டுபிடிப்புகளைப் பயன்படுத்தும் வாய்ப்புக்களைப் புரிந்துகொள்ளும் தகுதியுடன்கூடிய உயர்ந்த நிலையிலான தொழில் முயற்சித்திறனும் அதற்குத் தேவைப்படுகிறது; (இ) புதிய பண்டத்திற்கான சந்தை வாய்ப்பு மிகவும் விரிவானதாக இருந்தால்தான் வணிக மயமாக்குதல் இயலும். அதாவது, உற்பத்தி அதிகமாகும்போது தேவையும் அதிகரிக்கத்தக்க வகையில், பொதுமக்கள் அப் பண்டத்தை விரும்பி ஏற்றுக் கொண்டால்தான் வணிக மயமாக்குதல் இயலும். பேரளவிலான தொழில் நுண்ணியல் முன்னேற்றம் வளர்ச்சியடைந்த பொருளாதாரங்களில் மட்டும் ஏன் முடிந்தது என்பதை இது தெளிவாக விளக்குகிறது. திறமையானதும், அதிக அளவிலானதுமான உற்பத்தியைத் தோற்றுவிப்பதுடன், புதிய முதலீட்டையும் தொழில் நுண்ணியல் தேவையானதாக்குகிறது. அதோடு நாட்டு வருமானத்தையும் அதிகரிக்கிறது, சிறப்பான புதிய முறையைப் புகுத்துதல், நாட்டு வருமான வளர்ச்சி விகிதத்தைக் காட்டிலும் அதிகமான வேகத்தில் ஒரு சில நிறுவனங்களை வளர்ச்சிபெறச் செய்கிறது. நிறுவனங்கள் யாவும் பின்தங்கிவிடலாம். ஆனால், அடிக்கடி நிகழ்வதைப்போன்று, புதிய முறைகளைப் புகுத்துதல் மூலதனச் செறிவுள்ள தொழில்களில் தோன்றுமானால், மொத்த வணிக முதலீடு மொத்த வணிகச் சேமிப்பைக் காட்டிலும் அதிகமாகும் போக்கு இருக்கும். விலைக் குறைப்புச் செய்ய வழியில்லாதிருக்கும்போது பெரிய நிறுவனங்களிடையே போட்டி நிலவும் நிலைதான் புதிய முறைகளைப் புகுத்துவதற்கேற்ற மிகச் சிறந்த பொருளாதார அமைப்பாகும். விலைக் குறைப்புக்கு வழியில்லாததால் பண்டங்களின் வடிவம் அல்லது குணம் ஆகியவற்றை மாற்றுவதன் மூலம்தான் விற்பனையை அதிகரிக்க இயலும். இவ்வாறு செய்யும்போது முழுமை செய்யப்பட்டுச் சந்தைக்கு வரும் பண்டங்கள் நுகர்வோரைக் கவருவதாக இருக்கின்றன. இதனால் தன்னிச்சையாக இயங்கும் பல

[1] Kuznets, Simon, *Six Lectures on Economic Growth*, Free Press, Glencoe, Illinois, 1959, pp. 30-31.

நிறுவனங்கள் உள்ள தொழில் முழுவதும் விரிவடையும். இது தொழில் நுண்ணியல் முன்னேற்றத்திற்கு உதவி செய்யும். அமெரிக்காவின் மோட்டார் தொழில் இதற்கான சிறந்ததொரு எடுத்துக்காட்டு. இதற்குமாறாக, தொழில்கள் மிகவும் போட்டியுள்ளவைகளாகவும் கட்டுக்கோப்பானவைகளாகவும் குடிசைத் தொழில்கள் போன்று சிறிய அளவிலும் இருந்தால் புதிய முறைகளைப் புகுத்துவதற்கான வாய்ப்புக்கள் மிகவும் குறைந்த அளவில் இருக்கின்றன.[1] சிறிய நிறுவனங்கள் புதிய பொறிநுட்பங்களில் கூட்டுறவு முறையில் ஆராய்ச்சியைத் தொடங்குவதன் மூலமும் அல்லது அரசாங்கமும் அதற்கான பொறுப்பை மேற்கொள்ளுவதன் மூலமும் தொழில்களில் உற்பத்தி முறையை முன்னேற்ற வேண்டும்.

குறைவான தனிநபர் வருமான அளவுகள், அதிகரிக்கும் மக்கள் தொகை அழுத்தம், குறைவான நுகர்வு அளவுகள், குறைவான சேமிப்பு, இறுதிநிலை ஆகியவைகளையுடைய உழைப்பின் உற்பத்தித் திறனை அதிகரித்தல்தான் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மிகவும் முக்கியமான நோக்கமாக இருக்கவேண்டும். உழைப்பு — மூலதனம், உழைப்பு — நிலம் ஆகியவைகளின் விகிதங்கள் மிகவும் அதிகமானவைகளாக இருப்பதால் உற்பத்திக் காரணிகளின் சிறந்த கலவையின் மூலம் உற்பத்தியை அதிகரிப்பதற்குத் தேவையான அளவுக்கு மூலதன மூலவளங்களைக் காணுதல் மிகவும் துன்பம் தருவதாக இருக்கிறது. மேற்குறிப்பிடப்பட்டதுபோல் பின்தங்கிய பொருளாதாரங்கள் இம் முறையில் எந்தவிதமான முன்னேற்றத்தையும் பெற முடிந்ததில்லை. முக்கியமாக, குறைவான அளவிலான மூலவளங்கள், அமிதமான உழைப்பு, ஆகியவைகள் தொழில் நுண்ணியல் முன்னேற்றத்திற்குத் தடையாக இருந்திருக்கின்றன. மூலவளங்கள் இல்லாமையால்தான் ஆராய்ச்சி நிறுவனங்களின் பற்றுக்குறையும், பெரிய அளவிலான நிறுவனங்களின் பற்றுக்குறையும், மிகக்குறைந்த உண்மைத் தேவையும் இருக்கின்றன. முதன் முயற்சி, ஆர்வம், புதியன கண்டுபிடித்தல்கள் ஆகியவைகளைத் தடைசெய்யும் பாதகமான சமுதாயப் பொருளாதாரச் சூழ்நிலைகளை இவற்றோடு சேர்த்துக்கொள்ளவேண்டும்.

தொழிற்றுறையில் இத்தகைய பின்தங்கிய நிலையும் நவீனத் தொழில் நுண்ணியலைப் பின்பற்றுவதற்குத் தவறியதும் தொழில் முன்னேற்றத்திற்கு முந்திய நிலையில் உள்ள நாடுகளின்

[1] Villard, Henry; H., *Economic Development*, Rinehart, New York, 1959, pp. 82-97.

பொருளாதாரங்களை எட்ட இயலாத நிலையில் வைத்திருக்கின்றன. நவீனத் தொழிற்றுறை நாடுகளில் காரணிகள் அளிப்பு நிலைக்கு இசைந்து பொருளாதார முன்னேற்றத்தோடு தொழில் நுண்ணியல் முன்னேற்றமும் சேர்ந்தே நிகழ்ந்தது. 18ஆம் நூற்றுண்டின் இறுதியிலும் 19ஆம் நூற்றுண்டுத் தொடக்கத்திலும் இருந்த நிலக்கரி எரிசக்தியிலிருந்து 19ஆம் நூற்றுண்டின் இறுதியில் மின்சக்திக்கு மாறியதும் 20ஆம் நூற்றுண்டின் மையக் காலத்தில் அணுயுகத்திற்கு மாறியதும் நிகழ்ந்தபோது அவைகளுக்கேற்ப தொழிற்றுறை உற்பத்தியிலும் பொருளாதார நடவடிக்கைகளிலும் மாற்றங்கள் நிகழ்ந்தன. பொருளாதார முன்னேற்றமும் தொழில் நுண்ணியல் முன்னேற்றமும் ஒன்றுக்கொன்று சாதகமான வழியில் துணைசெய்யும் வகையில் செயல்பட்டன. பொருளாதார முன்னேற்றத்திற்குத்தொழில் நுண்ணியல் உதவி செய்தது. அதேநேரத்தில் ஆராய்ச்சிக்கும் அறிவியல் வளர்ச்சிக்கும் அதிகமான மூலவளங்களைப் பயன்படுத்தவும் அதன் வழியாகப் புதியன காணவும் புதிய முறைகளைப் புகுத்தவும் பொருளாதார முன்னேற்றம் வகை செய்தது. தொழில் நுண்ணியலும் பொருளாதார முன்னேற்றமும் பிற நாடுகளில் மிகவும் வளர்ச்சி பெற்றிருக்கும் இக்காலத்தில் பின்தங்கிய நாடுகளில் ஒரு விழிப்புணர்ச்சி தோன்றியுள்ளது. அவைகள் பின்பற்றுகின்ற உற்பத்தி முறைகள், வளர்ச்சியடைந்த நாடுகளில் வேறுபட்ட பொருளாதார அமைப்பில், வேறுபட்ட காரணி அளிப்பு நிலையில் உருவாக்கப்பட்டவை தற்காலப் பொறி நுட்ப அறிவு, பின்தங்கிய நிலையில் உள்ள சமுதாயப் பொருளாதார அமைப்பின் அடிப்படையில் அமைந்துள்ளது. தொழில் நுண்ணியல் தகுதி, தேவையான அளவுக்கான பண மூலவளங்கள் ஆகியவைகள் இல்லாதிருக்கும்போது, தொழில் நுண்ணியலைப் பயன்படுத்துவதானது குறைவான அளவில் உற்பத்தியைத் தரத்தக்கது; அதிகச் செலவுடையது என்பனவற்ருேடு பொருளாதாரத்தில் ஒழுங்கீனத்தையும் ஏற்படுத்தும். மூலதனம் அதிகமாக இருத்தல், தொழிலாளர்களின் இடைப் பருமை, அதிகமான அளவிலான கூலிவிகிதம் ஆகிபவைகள் யாவும் சேர்ந்து மேலை நாடுகளில் தோன்றிய புதிய முறைகளை மூலதனச் செறிவுள்ளவைகளாகவும் உழைப்பின் அளவைக் குறைவாகக் கொண்டவைகளாகவும் ஆக்கியிருக்கின்றன. நாட்டு வருமான உயர்வின் காரணமாக நுகர்வும் தேவையும் பரவலாக்கப்பட்டன. தொழில் நுண்ணியலில் அடிக்கடி மாற்றத்தையும் மூலதனப் பொருட்களை விரைவாக அழிப்பதையும் தூண்டிவிட்டன. இதைக்காட்டிலும் குறிப்பிடத்தக்கது யாதென்ருல் முன்னேற்றமான தொழில் நுண்ணியலைப் பயன்படுத்த வேண்டுமானுல் மிக உயர்ந்த நிலையிலான

பயிற்சி, அறிவியல், அறிவு, புரிந்துகொள்ளுதல் ஆகியவைகளும் தேவைப்படுகின்றன. ஆனால், முன்னேற்றமான தொழில் நுண்ணியலை இறக்குமதி செய்யும் நாடுகளில் இவைகள் யாவும் மிகவும் அரிதானவைகளாக இருக்கின்றன. இதனால் "தொழில் மயமான நாடுகளின் தேவைகளுக்குப் பொருத்தமானவை களாகவும் அதே நேரத்தில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் தொழில் சூழ்நிலைகளின் தேவைகளை அளவிடுவதற்குத் தகுதி யற்றவைகளாகவும் உள்ள உற்பத்திச் சாதனங்கள் சிலவற்றைப்" பற்றி நமக்குச் சொல்லப்படுவது வியப்பில்லை.[1] பருத்தியைப் பறிப் பதற்கும், களை எடுப்பதற்கும் இயந்திரத்தைப் பயன்படுத்துதல் பூமிக்கு அடியில் கிடைக்கும் நிலக்கரியை அங்கேயே அதிகமான அளவுக்குச் சூடாக்கி அதனை வாயுவாக மாற்றுதல் ஆகிய மிக முன்னேற்றமான முறைகளைப் பயன்படுத்தும் முயற்சிகள் ஐக்கிய அமெரிக்க நாடுகளில் மேற்கொள்ளப்படுகின்றன. தொழிலாளர் களின் உழைப்பை மிகுவிக்கும் அத்தகைய முன்னேற்றமான முறைகள் யாவும் இந்தியா போன்ற விவசாய நாடுகளில் மிகவும் குறைவான அளவிலேயே பயன்படுத்தத் தக்கவைகள். இப்போது முன்னேற்றமடைந்துள்ள நாடுகளாக உள்ளவைகளில் சில ஆண்டுகளுக்கு முன்னால், அதாவது ஒரு நூற்றாண்டிற்கு முன்னால், தகுதியானவைகள் என்று கருதப்பட்ட தொழில் நுண்ணியல்கள் இப்போது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குப் பொருந்தும் என்பது போலத் தென்படுகின்றன. ஆனால், அத்தகைய தொழில் நுண்ணியல் நிலையைச் சார்ந்த இயந்திரங்கள் யாவும் முன்னேற்ற மடைந்த நாடுகளில் உள்ள தொழில் பொருட்காட்சிச்சாலைகளில் வைக்கப்பட்டிருக்கின்றன. காலம் கடந்த அத்தகைய இயந்திரங் களைப் பேரளவில் செய்யும்படியாக எந்த ஒரு நிறுவனத்தையும் தூண்டிவிடுவதும் முடியாது. ஜப்பான் போன்ற நாடுகள், தொழில்துறை முன்னேற்ற நிலைக்கு முந்திய நிலையில் உள்ள நாடுகளின் தேவைகளை ஈடுகட்டுவதற்குச் சாதகமான நிலையிலிருக் கலாம். ஆனால், வியாபாரிகள் தங்களிடையே ஒரு விருப்பத்தை பெற்றிருக்கிறார்கள். ஒரு தொழிலை அமைக்க விரும்பும்போது மேலை நாடுகளில் உள்ளதுபோல அவர் அத் தொழிலை அமைக்க விரும்புகிறார். அதற்காக முன்னேற்றமடைந்த நாடுகளில் அமைக்கப்பட்டுத் தோற்றுவிக்கப்பட்ட முன்னேற்றம் அடைந்த பொறி முறைகளை இறக்குமதி செய்கிறார். தொழிலை நிருமாணிப் பதற்காக புளு பிரிண்ட் தயாரிப்பதற்கான பொறுப்புகள் தரப்படும். பொறியியல் நிபுணர்கள் முன்னேற்றமடைந்த

[1] *Management of Industrial Enterprises in Underdeveloped Countries*, 1958, U. N., NewYork, p. 17.

தொழில் நுண்ணியலைப்பற்றிய நூல் அறிவு நிரம்பப் பெற்றவர் களாக இருக்கிறார்கள்.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள பொருளா தாரங்களுக்கு பொருத்தமில்லாததோடு மேலைநாட்டுத் தொழில் நுண்ணியலானது, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதாரக் கழிவுகளையும் தோற்றுவிக்கிறது. தொடக்கத்தில் தேவைப்படும் மிக அதிகமான முதலீட்டுத் தொகையானது பொருளாதாரத்தின் பண மூலவளங்களைப் பொறுத்த மட்டிலும் மிகவும் இடர்ப்பாட்டைத் தோற்றுவிக்கின்றன. இயந்திரங்களை எல்லாம் வளர்ச்சியடைந்த நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வ தால் ஏராளமான அளவு அன்னியச் செலாவணியைப் பயன் படுத்த வேண்டியிருக்கிறது. தவிர, இத்தகைய பொறிகளைப் பாதுகாப்பதற்காக நிறைய அன்னியச் செலாவணி செலவா கின்றது. இத்தகைய ஏற்றுமதி அதிகரிப்பதிலும் உள்நாட்டு விலை அமைப்புகளின் காரணத்தால் பல இடர்ப்பாடுகள் உண்டு. உதவித் தொகைகள் தந்து ஏற்றுமதியை ஊக்குவிப்பதன் மூலம் அல்லது சுங்கவரிகளின் வாயிலாக இறக்குமதியைக் கட்டுப் படுத்துவதன் மூலம் உதவி செய்தால் மட்டுமே பின்தங்கிய நாடுகள் தங்களின் அயல்நாட்டு செலுத்தல் நிலையைச் சாதக மான வழியில் பாதுகாக்க முடியும். மூலதனச் சாதனங்களின் இறக்குமதி. முதலீடு, மூலதனச் சாதனங்களைப் பாதுகாத்தல் ஆகியவைகள் உள்ளார்ந்திருக்கும் உள்நாட்டுச் சேமிப்பின் மீதான அழுத்தம், உள்நாட்டில் கிடைக்கக்கூடிய குறைந்த அளவு மூலவளத்தை மிகவும் சிக்கனமாகவும், உள்நாட்டு நிலைகளுக்கேற்பவும் முதலீடு செய்யும் வாய்ப்புகளையும் குறைத்துவிடுகிறது. ஏழ்மை மிகுந்த நாடுகளில் தொழில் மயமாக்குதலில் மூலதனச் செறிவுள்ள வழியிலேயே கவனத்தைச் செலுத்துவதால் உழைப்பு இடமாற்றப்படுகிறது. அங்கு தொழிலாளர்களுக்கு வேறு வேலைவாய்ப்புகளும் குறைவாகவே உள்ளது. முன்னேற்றமான தொழில் நுண்ணியியலைப் பயன் படுத்துவதால் இன்னொரு வழியிலும் பொருளாதாரத்தில் வீணுதல் நிகழ்கின்றது. பொறிகளைப் பயன்படுத்துவதில் அனுபவ மின்மை, பொறிநுட்ப அறிவின்மை, கவனமின்மை தேவை யான பாதுகாப்பு இன்மை ஆகியவைகளால் இறக்குமதி செய்யப்படும் விலை மதிப்புள்ள சாதனத்தின் உண்மை வாழ் நாட்கள் வளர்ச்சி குறைந்த நாடுகளில் மிகவும் குறைவாகவே இருக்கின்றன. தவிர, இத்தகைய பொறிகள் குளிர் சூழ்நிலை களிலேயே உற்பத்தி செய்யப்பட்டவைகள் ஆதலின், அவைகள் வெப்பச் சூழ்நிலைகளுக்குப் பொருத்தமானவைகளாக இருப்

தில்லை. எனினும், தொழில் மயமாக்குதல் அல்லது முன்னேற்ற மடைந்த தொழில் நுண்ணியலைப் பயன்படுத்துதல் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குப் பொருந்தாது என்ற முடிவிற்கு வருவது சரியல்ல. கனரகத் தொழில்களைத் தோற்றுவிப்பதன் மூலம்தான் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதார வளர்ச்சிச் சக்திகளைத் தோற்றுவிக்கமுடியும். ஆனால், முன்னேற்றமான தொழில் நுண்ணியலை இறக்குமதி செய்வதில் உள்ள இடர்களும் அவைகளோடு தொடர்புடைய சிக்கல் களும் அத்தகைய நவீன உற்பத்தி முறைகளைப் பயன்படுத்து வதில் மிகுந்த கவனத்துடனும் எச்சரிக்கையுடனும் செயல்பட வேண்டுமென்பதை மிகத் தெளிவாகக் காட்டுகின்றன. பெருந் தொழில் நிலைகளைப் பொறுத்தவரை தொழில் நுண்ணியலைத் தேர்ந்தெடுக்கும் சிக்கல் மிகச் சிரமமானதல்ல. ஏனென்றால், இம் மாதிரித் தொழில் நிலைகளில் தொழிற்சாலை அமைப்பு உள்பட எல்லாவிதமான பொறி அமைப்புகளும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியாகத் தரப்படுத்தப்பட்டுவிட்டன. அதனால் மேலை நாடுகளில் நன்மை விளைவிக்கக்கூடியதாக உள்ள அமைப்பு மாதிரி களும் அளவு மாதிரிகளும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கும் நன்மை தரத் தக்கவைகளாக இருக்கின்றன. இங்கும் ஒரு சில துணை செயல்களுக்கான சாதனங்களை அமைப்பதில் குறிப்பிட்ட அளவு நெகிழ்ச்சி இருக்கிறது. இவ் வழியின் மூலம். தொழில் செயல்களை மூலதனத்தைச் சேமிப்பதாகவும் உழைப்புச் செறிவுள்ளவைகளாகவும் மாற்றமுடியும். சிறிய தொழில்களைப் பொறுத்தமட்டிலும்தான் முரண்பாடுகள் தோன்றுகின்றன. இத்தகைய சிறிய தொழில்கள் வேலைவாய்ப்பு நோக்கிலிருந்து பார்க்கின் மிகவும் முக்கியமானவைகளாகும். ஆனால், இவைகளில் மிகவும் உயர்நிலை பொறி ஆக்கமும் உயர்நிலை தொழில் நுண்ணியலைப் பயன்பாடும் இயலாத நிலையும் இருக்கின்றன. இத்தகு தொழில்களுக்கான ஒருசில மாதிரித் தொழிற்சாலைகள் வளர்ச்சியடைந்த நாடுகளில் உள்ளன. குறைந்த வளர்ச்சி நாடு களில் உள்ள பொறியியல், பொறிநுட்ப வல்லுநர்கள் ஆகியவர் களின் திறமையும் அறிவுக் கூர்மையும் பயன்படும் வாய்ப்பும் இதனால் உண்டாகிறது. தங்கள் நாடுகளின் தேவைக்கேற்பத் தொழில் நுண்ணியலை மாற்றியமைத்துக் கொள்ளுதல் அல்லது புதிய உற்பத்தி முறையைக் கண்டுபிடித்தல் தகுந்த பயிற்சியும் தகுதியும் பெற்றவர்களின் சிறப்பான கடமையும் வேலையும் ஆகும். குறிப்பிட்டதொரு உற்பத்தித் துறையில் கிடைக்கத்தக்க பல வகைத் தொழிற்சாலைகள், இயந்திரங்கள் அவைகள் கிடைக்கும் தோற்றுவாய்கள், உற்பத்திச் செலவுகள் மற்றும் இதைப் போன்ற இதரச் செய்திகள் ஆகியவைகளைப்பற்றி நல்ல முறையில்

வியாபாரிகளுக்கும் தொழில் முயல்வோர்களுக்கும் தெரியப் படுத்துவதும் முக்கியம். சிறு தொழில்கள் குறிப்பிட்ட இடங்களில் செறிந்துவிடும்போதும், முயற்சிகள் சாதகமாகத் தேவைப்படு கின்றன. இந்தியாவில் உள்ள தொழில் பேட்டைகளிலும் மற்ற குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளிலும் உள்ளதைப் போன்று பொதுவான வசதிகளைத் தோற்றுவித்துத் தரும் பணியைச் செய்வதன்மூலம் இதற்கான தீர்வைக் காணமுடியும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மூலதனம் கிடைப்பதற்கரிய தொன்ருக இருக்கிறது. எனவே, பொறியொன்றை நிறுவும் போது அப் பொறியைப் பயன்படுத்தும் விகிதம் மிக உயர்ந்த அளவில் நிலைநிறுத்தப்படவேண்டும் என்பதைப் பார்த்துக் கொள்ளவேண்டும் என்பதும் மிகவும் முக்கியமானதாகும். மூலதனத்தைச் சேமிக்கும் முறைகளில் இது ஒரு முறையாகும். வேலை பார்ப்பதைப் பற்றிய கல்வி முறையைப் பயன்படுத்துவதன் மூலம் எந்த அளவுக்கு, 'குறைந்த பயன்பாடு' (Under-utilisation) திருத்தப்படலாம் என மதிப்பிட வேண்டும். பிறகு அதிகநேரம் வேலைப் பார்த்தல், பல முறை மாற்று(Multiple-Shift)தலைப் பயன்படுத்துதல் ஆகிய வழிகளினுல் குறிப்பிட்ட மூலதன அலகிற்கான உழைப்பை அதிகரிக்க வேண்டும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள தொழில் நுண்ணியல் சிக்கலைத் தீர்ப்பதற்குரிய பெரிய வழிக்குப் பதிலாக இவ்வழிகள் இருக்க முடியாது. அதாவது, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள தொழில் நுண்ணியல் சிக்கலைத் தீர்ப்பதற்கு மேற்கொள்ளப்படும் செலவைக் காட்டிலும் அதிகமான விகிதத்தில் உற்பத்தித் திறனை அதிகரிக்கத்தக்க வகையில் புதிய, எளிய செலவு குறைந்த இந்நாடுகளின் காரணிகள் இருப்புக்குப் பொருத்தமான வழிகள் வேண்டியிருக்கின்றன.

## பொருளாதார முன்னேற்றத்திற்கும் சமுதாய முன்னேற்றத்திற்கும் இடையே உள்ள சச்சரவு இரண்டையும் ஒருங்கிணைப்பதற்கான தேவை

(The Conflict between Economic and Social Progress : Need for Integration)

பின்தங்கிய நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்திற் கான திட்டங்கள் பெரும்பாலும் அரசுகளால் தொடங்கியும், நடத் தப்பட்டும் வருகின்றன. அத் திட்டங்கள் யாவும், தாங்கிக் கொள்வதற்குத் தகுதியற்ற சமுதாய அடிப்படையின் மேல் மிக முன்னேற்றமான பொருளாதார அமைப்பைப் புகுத்துவதாகும். இந்த நாடுகளில் பல நூற்றுண்டு காலமாக சமுதாய அமைப்பு

மிகவும் இறுக்கமானதாகவும் நெகிழ்ச்சியற்றதாகவும் அமைந்து இருக்கின்றன. மரபுகள், மக்களின் சமுதாயப் பழக்கங்கள், மதக் கொள்கைகள், சொத்தின் வாரிசு உரிமை விதிகள், சமுதாயப் பிரிவுகள் ஆகிய எல்லாமே பொருளாதார வளர்ச்சியடைந்த நாடுகளில் சாதாரணமாகக் காணப்படுபவைகளுக்கு மாறுபட்டவை களாகவே இருக்கின்றன. இங்கிலாந்து போன்ற நாடுகளில் தோன்றிய தொழிற் புரட்சி, உழைப்பாளர்களை உறிஞ்சுதல், நெருக்கமான நகர்வாழ்க்கை இடர்ப்பாடுகள் ஆகியவைகள் போன்று சமுதாயத்தில் குறிப்பிடத்தக்க அளவில் மாற்றங்களைத் தோற்றுவித்தாலும் நவீனப் பொருளாதாரத்தின் தேவைக் கேற்பச் சமுதாயமானது மிக வேகமாகச் சரிசெய்து கொண்டது. எப்படியிருந்தாலும், இப்போதுள்ள வளர்ந்துவரும் நாடுகளில் நினைக்கப்படுவதைப்போல மிகக் குறுகியகால அளவில் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டது இல்லை. தவிர, இப்போது தொழில் முன்னேற்ற நிலைக்கு முந்திய நிலையில் உள்ள நாடுகளில் இருப்பதோடு ஒப்பிடும்போது மக்களின் விருப்பு வெறுப்புகள், மதிப்புகள் ஆகியவைகளும் மக்களின் சமுதாய அமைப்பும் தொழிற்புரட்சி தோன்றிய காலத்திலேயே வேறுபட்டவைகளாக இருந்திருக்கின்றன. அவற்றோடு ஒப்பிடும் போது அத்தகைய மென்மையான, சமுதாய, பொருளாதார அனுசரணைகள் இந்தியா போன்ற நாடுகளில் மிகவும் கடினமான தாகவே தென்படுகின்றன. பருப்பொருள் சார்ந்த முன்னேற்றத் திற்கான தீவிரமான ஆவலையும். எதையும் தனக்கெனப் பறித்துக் கொள்ளக்கூடிய தீவிர மனப்பான்மையும், உடையதொன்றுக்கு மாறாக இந் நாட்டு மக்களின், பண்பாட்டு முறைகளும் மதிப்பு களும் இருந்ததுதான் இதற்கான அடிப்படைக் காரணமாகும் எனவே, ஒரு நாட்டின் பொருளாதாரத்தில் மேலைநாட்டு வழியில் அமைந்த நிலப்பிரபுத்துவ முறைகள் பின் தங்கிய நாடுகளில் பெரும் பிளவு செய்வதைப் பார்க்கிறோம். சுருங்கக்கூறின். சமுதாய முன்னேற்றத்திற்கும் பொருளாதார முன்னேற்றத் திற்கும் இடையே ஒரு சச்சரவு இருக்கிறது. இன்று முன்னேற்றப் பாதையில் மெதுவாக முன்னேறிக் கொண்டிருக்கும் பின் தங்கிய நாடுகளைப்போலவே வளர்ச்சி பெற்ற நாடுகளும் ஒரு காலத்தில் மெதுவாக முன்னேறிக்கொண்டிருந்தன. ஆனால், அக் காலத்தில் அந் நாடுகளில் தோன்றிய சச்சரவுகளைக் காட்டிலும் அதிகமான அளவிலான சச்சரவுகளை இன்றையப் பின்தங்கிய நாடுகள் எதிர் நோக்கி இருக்கின்றன. இதற்கு மூன்று சிறப்பான காரணங்கள் உண்டு. இப்போதுள்ள ஆசிய, லத்தீன், அமெரிக்கா, ஆப்பிரிக்கா நாடுகளில் இருப்பதைக்காட்டிலும். தொழிற்சாலை முறை புகுத் தப்பட்டுப் பரவலாக்கப்பட்ட சமுதாய அளவு மிகவும் குறைவு

என்பது முதற் காரணம். 19ஆம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் கிரேட்பிரிட்டனின் மக்கள்தொகை இந்தியாவில் இன்று இருப்பதில் மூன்று சதவீதம் மட்டும்தான். 19ஆம் நூற்றுண்டில் தொழில் மயமாகிக் கொண்டிருந்த மேலை நாடுகளில் கிராமப் பகுதிகளிலிருந்து மக்கள் நகர்ப் பகுதிகளுக்கு மாறினுர்கள். அப்போது அங்கு எந்தவிதமான சிக்கலும் தோன்றவில்லை. ஆனுல், அதைப் போல இன்று வளர்ச்சிபெறும் நாடுகளிலும் மக்கள் கிராமப் பகுதிகளிலிருந்து நகர்ப் பகுதிகளுக்கு மாறுகிருர்கள். ஆனுல், இங்கு அத்தகைய மக்களின் எண்ணிக்கைகூட பெரும் சிக்கலைத் தோற்றுவிக்கிறது. இரண்டாவதாக, மேலை நாடுகளில் வேளாண்மைப்புரட்சி, வணிகப் புரட்சி, அரசியல் முறைகள், மதிப்புகள், அறிவியல், கலை, மதம் ஆகியவைகளில் பேரளவு மாற்றங்கள் ஆகிய எல்லாம் தொழிற் புரட்சிக்கு முன்பே தோன்றியிருந்தன. அதற்கு மாருக இன்றைய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில். பொருளாதாரமற்ற பிற துறைகளில் இத்தகையதொரு மாற்றம் எதுவும் நிகழவில்லை. மேலை நாடுகளில் பொருளாதார வளர்ச்சி இயல்பானதாகவும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதார வளர்ச்சித் தூண்டப்படுவதாகவும் இருப்பதுவும் ஓரளவுக்குக் காரணமாகும். மேலைநாடுகளில், ஆதாயம் தரத்தக்க முதலீடுகளைக் கண்டு அந்த வாய்ப்புகளைப் பயன்படுத்திய தொழில் முயல்வோரிடையே தோன்றியதொரு விழிப்புணர்ச்சியால் பொருளாதார வளர்ச்சி தோன்றியது. மாருக குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தொழில் வளர்ச்சி அமைப்பைத் தோற்றுவித்தல் அவைகளை நிறைவேற்றுதல் ஆகியவைகள் அதிகாரிகள் பிரிவினரால் அனுமானிக்கப் பெற்று வகை செய்யப்படுகின்றன. மேலைநாடுகளில் தோன்றிய சமுதாய மாற்றங்கள் அரசியல் மாற்றங்கள், மக்களின் மதிப்பு, விருப்பு வெறுப்புகள் ஆகியவைகள் யாவும் அங்கு தோன்றிய பொருளாதார மாற்றங்களுடன் இணைந்தே தோன்றிய காரணத்தால் அவைகள் அந் நாடுகளின் செயல்களின் புதிய திட்டங்களுக்கு மிகவும் பொருத்தமாக அமைந்திருந்தன. மூன்றுவதாக, நவீனத்தொழில் பொருளாதாரத்தின் பின்னுல் உள்ள உணர்ச்சி, அது எந்தளந்த, அடிப்படையில் நிறுவப்பட்டிருக்கிறதோ, அதன் அமைப்பு வடிவமும் குறைந்த வளர்ச்சியுடைய பொருளாதாரங்களுக்கு முற்றும் புதியனவாகும். புதுமைத் தொழில் நுண்ணியலைப் பயன்படுத்துதல், நடவடிக்கைகளின் அதிகமான வேகம், அதோடு தொடர்ந்து செல்லும் அவசரமான வ ாழ்க்கையின் வேகம், ஆகியவைகள் யாவும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குப் பழக்கப்பட்டவைகள் அல்ல. வேளாண்மை நாடுகளில் மக்களுக்குப் பழக்கப்பட்டுவிட்ட வழி வழியாக வரும் மரபுகளுக்கு இவைகள் முற்றிலும் வேறுபட்ட

வைகளாக காணப்படுகின்றன. இத்தகைய வேற்றுப் பண்பாட்டை பின்தங்கிய நாடுகளில் பழக்கப்பட்டிருக்கும் வாழ்க்கை மரபு வழிகளோடு இணைக்கும்போது பல சமுதாயச் சிக்கல்கள் தோன்றுகின்றன.

நகர்ப் பகுதிகளில் இருக்கக்கூடிய அதிக அளவிலான கூட்டம் தொழிற் பெருக்கத்தின் ஓர் அளவையாக இல்லை. இருப்பினும், இத்தகையதொரு போக்கு, நகர்வாழ்வின் சமுதாயத் தீமைகளைத் தீவிரப்படுத்துகிறது. வேலையின்மையானது பிற நாடுகளிலிருந்து வரும் குடியேறுபவர்களின் ஒழுக்கத்தைப் பாதிக்கிறது. மோசமான வீட்டு வசதிகள், குடும்ப வாழ்வில் சீர்குலைவு, பழைய முறையிலான கட்டுப்பாடு, தீர்வுகள் ஆகியவைகளின் மறைவு இவற்றின் காரணமாக கடமை தவறுதல் பிச்சை எடுத்தல் குற்றங்கள் புரிவது ஆகியவற்றைத் தோற்றுவிக்கின்றன. வேளாண்மை செய்பவர்களாகவும், தங்கள் பெற்றோர்களை எதிர்ப்பவர்களாகவும், மரபு வழிச் சட்டங்களை முறியடித்தவர்களாகவும்; ஆனால், அதேநேரத்தில் புதிய சூழ்நிலைகளுக்கேற்ற புதிய முறையிலான மதிப்புகளையும் கட்டுப்பாடுகளையும் முழுஅளவில் பெறாதவர்களாகவும் உள்ள இளைஞர் சமுதாயத்தின் முதல் தலைமுறை குற்றங்களையும் சமுதாயத்திற்கு விரோதமான செயல்களையும் செய்யும் வாய்ப்புகளை அதிகம் கொண்டிருப்பார்கள் என்று சொல்லப்படுகிறது. தொழில்மயமாதலின் தொடக்க நிலைகளில் நகர் வாழ்வில் தோன்றக்கூடிய தொழிலாளர் முதலாளி உறவில் நல்ல நிலைமை இல்லாதிருத்தல், நீண்ட மணிநேரவேலை, குடும்ப வாழ்க்கையை நிருவகிப்பதற்குப் போதாத அளவிலான குறைந்த கூலி நிலைகள், இனிப்புக் கடைகள் முறை, சிறுவர்களை வேலை வாங்குதல் போன்ற தவறான சமுதாய இயல்புகளையும் இதோடு சேர்த்துக் கொள்ளவேண்டும். இருப்பினும் பின்தங்கிய நாடுகளுக்கிடையே முன்னேற்றமான நிலையில் உள்ள ஒரு சில நாடுகளில் உள்ள வேலைத்தருவோர் மனிதாபிமானத்தின் அடிப்படையில் நடந்து கொள்வதும், பாதுகாப்புத் தரத்தக்க சமுதாய, தொழிலாளர் சட்டங்களும் அந் நாடுகளில் இச் சிக்கலை ஓரளவு எளிமையாக்கி இருக்கின்றன.

தொழில் மயமாதலினால் தோன்றும் சமுதாயத் தீயவிளைவுகள் நகரங்களில் மட்டுமில்லாமல் கிராம சமுதாயத்திற்கும் பரவியுள்ளது. ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தோன்றிய மிகவேகமான தொழில் மயமாதல் அந் நாடுகளின் தொழிற்புரட்சி தோன்றியுள்ளது என்று சொல்லத்தக்க வகையில் சிறப்புப் பெற்றிருந்தாலும் அவ் வளர்ச்சியைப் போன்றதொரு வளர்ச்சி

கிராமப்பகுதிகளிலும் தோன்றாத காரணத்தால் நல்ல வாழ்க்கை நடத்துவதற்கேற்ற இடமாகக் கிராமங்களை மாற்ற இயலவில்லை. மிக வேகமாகப் பெருகிவரும் மக்கள்தொகை, பழைய கைத் தொழில்கள் மிக வேகமாக மறைந்துவருதல் ஆகியவைகள் இரண்டும் கிராமப்பகுதிகளில் உள்ள வேலையின்மையை மிகவும் விரிவடையச் செய்துவிட்டன. பெரிய அளவிலான குடும்பமுறை உடைந்து சிதறிவிட்டது. தொழில் மயமாதலின் விளைவு மரபு வழித் தொன்மைச் சமுதாயத்திலிருந்து தொழிலாளர்களைப் பிரித்துவிட்டது. இவைகள் இரண்டும் கிராமப் பொருளா தாரத்தின் உறுதித் தன்மைக்கும், கிராமச் சமுதாயத்தின் பலவீனமான குறைகள் உடைய உறுப்பினர்களுக்கான பாதுகாப்புக்கும் வகைசெய்யும் தன் உதவி, ஒருவருக்கொருவர் உதவி என்ற முறைகளின் வீழ்ச்சியை வேகப்படுத்தியிருக்கின்றன. இவ்வாறாக, குடும்பம் ஏற்கனவே செய்துவந்த சமுதாயப் பாதுகாப்புப் பணிகளில் பலவும் அரசாங்கத்தையே சார்ந்திருக்கும் போக்கு தோன்றியது.

மேலே பல பொருளாதார, சமுதாயத் தீமைகள் குறிப்பிடப் பட்டுள்ளன. இவைகள் யாவும், மிகவேகமாகத் தொழில் மயமாதலின் தவிர்க்க இயலாத தீமைகளாகும். இவைகள் பொருளாதார வளர்ச்சியின் சமுதாயச் செலவுகள் என்று கருதப்படவேண்டும். தொழில்வளர்ச்சி நிலைக்கு முந்திய நிலையில் இருக்கும் இன்றைய நாடுகளின் நிலைகளில் பார்க்கும்போது இந்தத் தீமைகள் யாவும் இன்றைய வளர்ச்சியடைந்த நாடுகளில் ஒரு காலத்தில் பெற்றிருந்ததைக் காட்டிலும் பெரிய அளவின வைகளாகத் தென்படுகின்றன. இஃது உண்மைதான். ஆனால், ஒரு நன்மையும் உண்டு. அதாவது, இத்தகைய தீமைகளின் உண்மை இயல்புகளைப்பற்றியும் இத் தீமைகளைக் கட்டுப் படுத்துவது எவ்வாறு என்பதைப்பற்றியும் இன்றைய வளர்ச்சி யடைந்த நாடுகளில் அன்று தெரிந்ததைக் காட்டிலும் இன்றைய பின்தங்கிய நாடுகளில் தெளிவான விளக்கம் கிடைக்கிறது. தவிர, இந் நாடுகளில் தோன்றும் பொருளாதார வளர்ச்சி இயற்கை யானதல்ல. மாறாக, அரசாங்கத்தால் தூண்டப்பட்டு, அரசாங்கம் காட்டும் வழியிலான பொருளாதார வளர்ச்சி இந் நாடுகளில் தோற்றுவிக்கப்படுகிறது. எனவே, இத் தீய விளைவுகளைக் கட்டுப் படுத்திப்பொருளாதாரமாற்றத்தை மென்மையாக்குவது அரசாங் கத்தின் பொறுப்பு. தவிர, இத்தகைய சமுதாயச் சிக்கல்கள் மிகவும் பரந்து காணப்படுபவைகளாகவும், குழப்பமானவை களாகவும், மக்கள் மனத்தில் வேரூன்றியவைகளாகவும் இருப்ப தால் மிக அதிகமான அளவிலான மூலவளங்களுடன் கூடிய நாடு

முழுவதற்குமான பேரளவில் மேற்கொள்ளப்படும் முயற்சிகள் தான் சிக்கலைத் தீர்ப்பதற்கான வழிகளாக அமையும். இதனுடைய சிறப்பும் அவசரமும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பல வற்றிலும் மிக நல்ல முறையில் உணரப்பட்டுள்ளன. சமுதாய நிலைகளை நன்னிலைப்படுத்துவதற்காகவும், பொருளாதார வளர்ச்சிக்கும் சமுதாய வளர்ச்சிக்கும் இடையே ஓர் இணைப்பை ஏற்படுத்துவதற்கும் அந் நாடுகள் தங்களின் வளர்ச்சித் திட்டங் களில் இதனையும் சேர்த்துள்ளன. இந்தியாவின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குறைந்த வளர்ச்சியுடையதொரு நாட்டின் முன்னுள்ள சிக்கலானது, இருக்கக்கூடிய பொருளா தார அமைப்புச் சட்ட வரம்புக்குள் பணிசெய்து நல்ல பலனைப் பெறுவது மட்டுமல்ல; இவ்வமைப்புகளை, சமுதாய மதிப்புகளை மிகவும் பரவலாகவும், திண்மையாகவும் பெறுவதற்கு அவைகள் உதவி செய்யும்வண்ணம் அவைகளை உருவாக்குவதும் மாற்றி யமைப்பதும் ஆகும் என்று கூறப்பட்டுள்ளது. பிலிப்பைன்ஸ், பர்மா, சிலோன் போன்ற நாடுகளின் வளர்ச்சித் திட்டங்களிலும் இதைப் போன்ற நோக்கங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரங்களில் கிடைப் பதைக் காட்டிலும் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியை அரசாங்கத்தின் தலைமையின்கீழ் மிக வேகமாகப் பெறமுடியும் என்ற ஆசை இருப்பதன் காரணமாகப் பொருளாதார வளர்ச்சித் திட்டங்களின் பகுதியான சமுதாய மறுமலர்ச்சிகளை வலியுறுத்த வேண்டும். தொழில்மயமாதல் மிகக் குறுகிய காலத்தில் பெற முயற்சிக்கப்படுகிறது. எனவே, அதனால் தோன்றும் சமுதாயத் தீமைகள் பெரிய அளவிலானவைகளாகவும் உடனடியாகத் தோன்றுபவைகளாகவும் தென்படும். எனவே. திட்டம் என்பது பொருளாதார நன்னிலைமைக்காகவும் அதே நேரத்தில் சமுதாயத்தை நலப்படுத்துவதற்காகவும் அமைந்ததாக இருக்க வேண்டும் முன்னேற்றத்தின் இந்தஇரண்டு பக்கங்களுக்கும் இடையே இணைந்துள்ளதும் திட்டமாக நன்கு சிந்தித்துத் திட்டப் பட்டதுமான திட்டம் குறைந்த அளவான பாதக விளைவுகளுடன் பொருளாதார மாற்றத்திற்கு வகை செய்யும்.

கீழ்க்கண்டவாறு சிக்கல்களை அணுகலாம் :

(அ) நகரங்களுக்குச் சிறப்பிடம் தரப்படுவதற்கொப்பக் கிராமங்களுக்கும் சிறப்பு அளிக்கப்படவேண்டும். தொழில்களுக்கு உள்ள சிறப்பிடம் வேளாண்மைக்கும் தரப்படவேண்டும். முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட மின்சாரத் திட்டங்கள் போன்ற பல முதலீட்டுத் திட்டங்கள்

நாட்டின் கிராமப் பகுதிகளுக்கும், தொழில் வளர்ச்சி பெற்ற பகுதிகளுக்கும் நேரிடையாக நற்பலன்கள் பல தந்துள்ளன. அதன் வழியாகப் பொருளாதாரத்தின் வேளாண்மைத்துறை தொழில் துறை ஆகியவைகளில் சமமான முன்னேற்றத்திற்கு மிகவும் வகை செய்யப்பட்டுள்ளன.

(ஆ) சமுதாய மறுமலர்ச்சி முயற்சிகளைத் தோற்றுவிக்க எங்கு முயற்சி செய்யப்படுகிறதோ அங்கு மக்களிடையே நிலவி வரும் நோக்கங்கள், விருப்பு வெறுப்புகள் ஆகியவைகளுக்குத் தகுதியான மதிப்பு தந்து, மாற்றங்கள் படிப்படியாகக் கொண்டு வரப்படவேண்டும். ஏற்கனவே இருக்கும் வாழ்க்கை முறைக்கேற்ப முன்னேற்றத்தை அமைக்கவேண்டும் ஏனென்றால், நகர்ப் பகுதிகளைக் காட்டிலும் தொழில் வளமற்ற பகுதிகளில் நடைமுறையில் இருக்கும் பழக்கங்களும் மக்களின் விருப்பு வெறுப்புகளும் அவர்களிடையே வேரூன்றியதாக இருக்கும். உறுதி மிக்க தீவிரமானமாற்றம் நடைமுறையிலிருக்கும்வாழ்க்கைமுறைகளைத் தலைகீழாக மாற்றிவிடும். தவிர, தவிர்க்கப்படவேண்டிய சமுதாய நெருக்கடியையும் தோற்றுவித்துவிடும். கலைகள், தொன்மை இதிகாசங்கள், மதஇயல் ஆகியவைகளில் ஆகிய நாட்டின் கல்வித் திட்டங்கள் அதிகமான ஈடுபாடு காட்டுகின்றன. இது மாற்றப் பட்டு, அறிவியல், தொழில்நுண்ணியல் ஆகிய இயல்களுக்குச் சிறப்பிடம் தருவனவாக மாற்றப்படவேண்டும். தொழில் பயிற்சிக்குக் கல்வித் திட்டங்களில் மிகவும் சிறப்பிடம் தருவதன் வாயிலாகத் தொழில் பயிற்சிக்கும் குறிப்பிட்ட சில சிறப்புத் தேர்ச்சி பெற்ற தொழில்நுண்ணியல் கல்வித் திட்டங்களுக்கும் பலர் கவரப்படுவார்களானால், மேற்குறிப்பிட்ட சமுதாய மாற்றம் மிகவும் எளிமையானதாக இருக்கும்.

(இ) பொருளாதாரத் திட்டங்கள் மூலமாகச் சமுதாய மாற்றங்களையும், சமுதாயத் திட்டங்கள் மூலமாகப் பொருளாதார மாற்றங்களையும் கொண்டுவர முயற்சிப்பதன் மூலம் சமுதாய முன்னேற்றத்தையும் பொருளாதார முன்னேற்றத்தையும் ஒருங்கிணைக்கலாம். இது மிக வேகமாகத் தொழில் மயமாதலில் உள்ளார்ந்திருக்கும் சமுதாயத் தீமைகளைக் குறைப்பதற்கான மூன்றாவது முறையாகும். இவ்வாறாக, சிறிய தொழில்களுக்குத் தரப்படும் ஊக்கம் அதிக அளவிலான உற்பத்தி, அதிக வருமானங்கள் ஆகிய பொருளாதார நோக்கங்களைக் கொண்டிருப்பதோடு, நன்னிலையிலானவேலை வாய்ப்பு வசதிகள் என்ற வடிவத்தில் சமுதாய நன்மையையும் தோற்றுவிக்கிறது. சமுதாய வளர்ச்சித் திட்டங்கள், சமுதாய நிலைகளின் முன்னேற்றம், வேலை பார்ப்ப

தற்கு ஓர் எழுச்சி, கூட்டுறவு உணர்வு, தனக்குத்தானே உதவி செய்துகொள்ளுதல், கட்டுப்பாடு, ஒழுக்கம் போன்ற சில சமுதாய நோக்கங்களைப் பெறுதல் ஆகியவைகளுக்குச் சிறப்பிடம் தந்து அதே நேரத்தில் கிராம மக்களின் பயனுள்ள வேலைகளினால் தோன்றும் பொருளாதார நன்மைகளுக்கும் சிறப்பிடம் தருகின்றன. இதைப்போன்று தாழ்த்தப்பட்ட பிரிவு மக்களுக்காகவும், மலைச்சாதி மக்களுக்காகவும், நாடோடிக் கூட்டத்தினருக்காகவும் மேற்கொள்ளப்படும் பொருளாதாரத் திட்டங்கள் அவைகளின் உடனடி நோக்கத்தில் சமுதாய நலனை மிகுதியாக உள்ளடக்கிக்கொண்டிருக்கின்றன. மறுபுறத்தில் பொருளாதார நோக்கங்களையும் உள்ளடக்கியவைகளாகச் சமுதாயத் திட்டங்கள் அமைக்கப்படலாம். கல்வியில் முதலீடு, பொதுச் சுகாதாரத்தில் முதலீடு போன்ற எல்லா விதமான 'மனித முதலீடு' (Human-investment) வகைகளும் சமுதாயத்தின் நிலைகளையும், அச் சமுதாய மக்களின் பருப்பொருள்சார் நல வாழ்க்கையையும் நன்னிலைப் படுத்தும். அதே நேரத்தில் உற்பத்திப் பணியில் ஈடுபடும் தொழிலாளர்கள் என்ற வகையில் அவர்களின் திறமையையும் மேம்பாடு அடையச் செய்கின்றன. தனக்குத் தானே உதவி செய்தல் என்ற உணர்வைத் தூண்டி விடுவதை நோக்கமாகக் கொண்டுள்ள பல சமுதாயத் திட்டங்கள் பண்பை வளர்ப்பதற்கு உதவி செய்வதோடு பொருளாதார நடவடிக்கைக்கு வகை செய்பவைகளாகவும் இருக்கின்றன. அதிகமான கூலிகள், மிகையூதியங்கள், குழந்தைகளைப் பராமரித்தல், கல்வி, சுகாதாரம், பொழுதுபோக்கு போன்றவைகளுக்காகத் தரப்படும் உதவி ஆகிய பல வழிகள் தொழில்களில் உள்ள தொழிலாளர்களின் வாழ்க்கை நிலைகளை சீர்படுத்துவதற்காக மேற்கொள்ளப்படுகின்றன. இவைகள் யாவும் பொருளாதார நடவடிக்கையில் நல்ல பலன்களைக் கொண்டுள்ள சமுதாயத் திட்டங்களுக்கான செலவுகளாகும். இச் செலவுகள் தொழிலாளர்களின் உறுதியின்மையைக் குறைக்கவும், தொழிலாளர் முதலாளி கூட்டுறவை நன்னிலைப் படுத்தவும், அதிக முயற்சியை மேற்கொள்ளுவதற்குத் தொழிலாளர்களை ஊக்குவிக்கவும் வகை செய்கின்றன.

# 3. பொருளாதார வளர்ச்சிக்கான ஒரு காரணி, மக்கள்தொகை

## (Population as a Factor in Economic Growth)

உத்பத்திக் காரணி என்ற வகையில் உழைப்பின் பொருளாதாரச் சிறப்பு இருவகைகளில் அமைகிறது. முதலாவதாக நுகர்வோர் என்ற வடிவத்தில் அதன் பங்கு உழைப்பானது மற்றக் காரணிகளோடு இணைந்து செயல்பட்டு மொத்த உற்பத்திக்கு அதன் பங்கை ஆற்றுகிறது. உழைப்பு முழு அளவில் பயன்படுத்தப்படுகிறதா இல்லையா என்பதைப் பொறுத்து நுகர்வு அளவு மாறுபடுதல் இல்லை. மாறுபடுதல் அதாவது மற்ற மூல வளங்களின் அளவு, அமைப்பு, தொழில் நுண்ணியல் ஆகியவைகளின் அளவுகள் நிலையாக இருக்கும் நிலையில் உழைப்பு வேலை நிறைவு நிலையில் இருந்தால் மொத்த விளைவு உச்சத்திலிருக்கும். ஆனால், வேலை நிலையின் அளவு குறையும்போது நுகர்வின் அளவானது குறைக்கப்படமாட்டாது. இவ்வாறாக, உழைப்பு பயன்படுத்தப்பட்டாலும், பயன்படுத்தப்படாவிட்டாலும் உழைப்பின் உற்பத்திச் செலவைச்செய்தேயாகவேண்டும். நிலம், மூலதனம் ஆகியவைகள் பயன்படுத்தப்படாமலிருக்கும்போதும் அவற்றின் தரத்தை நிலைநிறுத்துவதற்காகச் சில செலவுகளை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது என்பது உண்மைதான். ஆனால், இவ் விரண்டு காரணிகளும் பயன்படுத்தப்படும்போது மேற்கொள்ளக்கூடிய செலவோடு ஒப்பிடுகையில் இவ் விரண்டு காரணிகளும் பயன்படுத்தப்படாமலிருக்கும்போது மேற்கொள்ளக்கூடிய இச்செலவு மிகவும் குறைவானதுதான். உழைப்பு அதிகமான அளவுக்கு வேலையில் ஈடுபடுத்தப்படுதல், வேலையின்மையைத் தவிர்த்தல் ஆகிய இரண்டையும் பொருளாதார நோக்கில் பார்க்கும்போது மிகவும் இன்றியமையாத உழைப்பின் இப் பண்புதான் பொருளாதார வளர்ச்சிக்கு மக்களின் அல்லது உழைப்பின்

பங்கானது, நுகர்வுப்குதி, உற்பத்திப்பகுதி ஆகிய இரண்டு பகுதி களில் அவ்வவற்றின் தாக்குதல்களினுல் நிருணயிக்கப்படுகிறது.

மக்கள்தொகை அதிகரிக்கும்போது அதோடு தொடர்ச்சியாக அதனுடைய அதிகரிப்பு விகிதத்திற்கேற்றவாறு நுகர்வுத் தேவைகளும் தெளிவாக அதிகரிக்கின்றன. ஆனுல், மக்கள்தொகை அதிகரிப்பு உற்பத்தி அதிகரிப்பிற்கு எந்த அளவுக்குத் தன் பங்கை ஆற்றியிருக்கிறது என்பது எந்த அளவுக்கு மக்கள்தொகை அதிகரித்திருக்கிறது என்பதைப் பொறுத்து மட்டுமல்லாமல் அதன் அமைப்பு, இணைந்து முழுமையாக்குகிற மூலவளங்கள் கிடைத்தல், பயன்படுத்தப்படும் உற்பத்தி முறை, மேலும் இவை போன்ற பிறவற்றைப் பொறுத்தும் அமைகின்றது. நிலப்பரப்பு, இயற்கை மூலவளங்கள் ஆகியவைகள் நிலையாக இருக்கின்ற காரணத்தால் மக்கள் பெருக்க விகிதம் குறிப்பிட்ட நிலையி லிருக்கும்போது, நடப்பு நுகர்வைக் காட்டிலும் நடப்பு உற்பத்தி எந்த அளவுக்கு அதிகரிக்கிறது என்பதைப் பொறுத்து பொருளா தார வளர்ச்சிக்கான வாய்ப்புகள் அமைகின்றன. எனவே, பொருளாதார வளர்ச்சிக்கு மக்கள்தொகை ஆற்றும் பங்கை ஆராயும்போது (கீழ்க்கண்ட) இரண்டு பெரும் காரணிகளையும் நாம் நினைவில் இருத்திக்கொள்ளவேண்டியது மிகவும் அவசியம். முதலாவதாக, மக்கள்தொகை பெருக்கத்தினுல் உற்பத்தியில் தோன்றும் பெருக்கம். இரண்டாவதாக, பொருளாதாரத்தின் மொத்த நுகர்வுத் தேவைகளின் அதிகரிப்பு. இந்த வேறுபாட்டை மக்கள்தொகை எந்த அளவுக்கு உச்சமாக்குகிறது என்பதை நாம் பார்க்கவேண்டும்.

உற்பத்திக்கு மக்கள் தொகையின் பங்கை நிருணயிக்கும் காரணிகளை ஆராய்வதற்கு முன்னுல் பொருளாதார வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளோடு ஒப்பிடுகையில் குறைந்த வருமானமுள்ள நாடுகளில் உள்ள மக்கள் தொகையின் சில சிறப்பான இயல்புகளைப் பற்றிய பரந்த பொதுநோக்கு ஒன்றைப் பெறுவது மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

## வளர்ச்சியடைந்த நாடுகளிலும் குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளிலும் பிறப்பு-நோய் முதலிய சமுதாயநிலைப் புள்ளிவிவரப் பண்புகள்

(Demographic Characteristics of Developed and Under developed Countries)

உலகத்தின் பல பகுதிகளிலும் பல நாடுகளிலும் பரவியுள்ள மக்களின் பெருக்க விகிதங்கள் பலதரப்பட்டவைகளாக இருக்

கின்றன. அவற்றை ஆராயும்போது ஓர் உண்மை தெரிகிறது. அதாவது, மக்கள் தொகையின் பரும அளவும், நோக்கும் இன்றைய குறைந்த வருமானமுடைய நாட்டில் இருப்பதைப் போல் அல்லாமல் முன்னேற்றமடைந்த நாடுகளில் அதிகமான அளவுக்குப் பொருளாதாரச் சிறப்பிடத்தைப் பெற்றிருக்கவில்லை. 1950ஆம் ஆண்டில் ஆப்பிரிக்கா, வட அமெரிக்கா இலத்தீன் அமெரிக்கா, ஓசியானியா (ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, பசிபிக் தீவுகள்) ஆகிய பகுதிகளிலிருந்த நாடுகளில் முறையே உலக மக்களில் 8%, 6.7%, 6.5%, 0.5% அளவில் இருந்தபோது ஆசியாவில் மட்டும் உலக மக்களில் 55.2% மக்களும் ரஷ்யா உள்ளிட்ட ஐரோப்பாவில் 23% மக்களும் இருந்தனர். வட அமெரிக்கா மிதமான தென் அமெரிக்கா, ஐரோப்பாவின் பெரும்பகுதி, ஆஸ்திரேலியா, வட நியூசிலாந்து, ரஷ்யா ஆகிய உயர்ந்த வருமான நாடுகளைத் தொழில்நுண்ணியலில் வளர்ச்சி பெற்ற நாடுகள் என்றும், ஆப்பிரிக்கா, மைய அமெரிக்கா, கரிபியன், வெப்பநிலைத் தென் அமெரிக்கா, ஜப்பானும் பசிபிக் தீவுகளும் நீங்கலாக உள்ள ஆசியா, ஆகிய குறைந்த வருமான நாடுகளைத் தொழில்நுண்ணியலில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் என்றும் உலக நாடுகளை இரண்டு கூறுகளாகப் பிரித்துப் பார்த்தால், 1950ஆம் ஆண்டில் முதற்பிரிவில் 863 மில்லியன் மக்களும் அல்லது மொத்த உலக மக்கள்தொகையில் (34.5 விழுக்காடு) ⅓ பகுதியினரும் இரண்டாவது பிரிவில் 1,637 மில்லியன் மக்களும் அல்லது உலக மக்கள் தொகையில் (65.5%) மூன்றில் இரண்டு பகுதியினரும் இருந்திருக்கின்றனர். உலக நிலப்பகுதியை இன்னொரு அடிப்படையிலும் பிரித்துப் பார்க்கலாம். அப்போது ஆசியாக் கண்டத்தில் உள்ள நாடுகளும், ஜப்பான் உள்ளிட்ட தூரக்கிழக்கு நாடுகள் ஆகியவைகளில் 1956-ல் உலக மொத்த மக்கள் அளவில் 53.4% மக்களும் உலகின் மற்றப் பகுதிகளில் மிஞ்சியுள்ள 46.6% மக்களும் இருந்திருக்கின்றனர். முதற்பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள நாடுகளைப் பொறுத்தமட்டிலும், சீனாவில் 621.2 மில்லியன் அளவாகவும் அல்லது 42.5% அளவாகவும் இந்தியாவில் 387.3 மில்லியன் அளவாகவும் அல்லது 26.2% அளவாகவும் இருந்தது. இந் நிலப்பகுதியில் உள்ள பிற நாடுகள் 454 மில்லியன் அல்லது 31% அளவு மக்களைப் பெற்றிருந்தன. ஐக்கிய நாடுகளின் அண்மைக்கால மதிப்பீட்டின்படி (Statistical Year-Book 1969) உலகின் பல்வேறு பகுதிகளில் உள்ள மக்கள் அளவும் வளர்ச்சி விகிதமும் அட்டவணை 7-ல் காட்டப்பட்டுள்ளன. மக்கள் பெருக்க உள்ளாற்றல் அதிகமான அளவிலிருக்கும் நாடுகளில் 1951–61 ஆகிய பத்தாண்டுகளில் ஆண்டுதோறுமான சராசரி வளர்ச்சி விகிதம் 2.2 விழுக்காடாக இருந்தது. இது 1961-71

அட்டவணை 7

உலகின் பல்வேறு பகுதிகளின் மக்களும் வளர்ச்சி விகிதமும்

| நிலப்பகுதி | 1968-ஆம் ஆண்டின் மைய ஆண்டு மக்கள் தொகை மதிப்பீடு (மில்லியன் கணக்கில்) | | 1960-68-ல் சராசரி ஆண்டு தோறுமான வளர்ச்சி விகிதம் |
|---|---|---|---|
| | 1960 | 1968 | |
| உலகம் | 3005 | 3483 | 1.9 |
| ஆப்பிரிக்கா | 278 | 336 | 2.4 |
| வடக்கு அமெரிக்கா | 267 | 369 | 1.8 |
| தென் அமெரிக்கா | 145 | 180 | 2.7 |
| ஆசியா | 1660 | 1946 | 2.0 |
| ஐரோப்பா | 425 | 455 | 0.9 |
| ஓசியானியா | 15.8 | 18.5 | 2.1 |
| சோவியத் ரஷ்யா | 214 | 238 | 1.3 |

ஆகிய பத்தாண்டுக் காலத்தில் ஏறத்தாழ 2.5. விழுக்காடு என்ற அளவை எட்டியது. பல நாடுகளில் இருந்த மக்கள் அழுத்த வேறுபாடுகள் அட்டவணை 6-ல் காட்டப்பட்டுள்ளன. நாகரீக மனித வாழ்க்கைக்குத் தகுதியற்ற பாலைவனங்கள், சதுப்பு நிலங்கள், காடுகள், உள்ளிட்ட நிலப்பரப்பே மொத்தப் பரப்பு என்றாகிறது. எனவே, மொத்தப் பரப்பில் ஒரு சதுரக் கிலோ மீட்டருக்கு மக்கள் அழுத்தம் என்பது மிகவும் சிறப்புமிக்கதொன்றாக இருப்பதில்லை. பயிர் உள்ள நிலங்கள், தரிசு நிலங்கள், தோட்டத்திற்குத் தகுதியான தற்காலிக மேய்ச்சல் நிலமாக உள்ள புல்வெளிகள், மலைச் சரிவுகளில் உள்ள தேயிலைத் தோட்டங்கள் யாவும் பயிர்செய் நிலங்கள் ஆகின்றன. இத்தகைய பயிர்செய் நிலங்களைப் பொறுத்தும்கூட சராசரி கிலோ மீட்டருக்கான மக்கள் அழுத்தத்தில் குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் அதிக அளவில் இருக்கின்றன. 1956-ல் உலக சராசரி 198ஆக இருந்தது. கிழக்காசியப் பகுதிகளில் அது 375 ஆக இருந்தது. பின்னால் குறிப்பிடப்பட்டுள்ள கிழக்காசியப்

பகுதியில் உள்ள நாடுகளில் பயிர்செய் நிலங்களில் சராசரி சதுரக் கிலோ மீட்டருக்கான மக்கள்தொகை அழுத்தம் ஒரு சில நாடு களில் மிகவும் அதிகமாக இருந்தது. இது ஜப்பானில் 1783, சீனு (தலை நிலப்பரப்பு) வில் 568, சிலோனில் 586, இந்தியாவில் 245, பாகிஸ்தானில் 343, பிலிப்பைன்ஸில் 347, வியட்நாமில் 591 என்ற முறையில் இருந்தது. ஆப்கானிஸ்தானம், ஈரான், லாவோஸ் ஆகிய நாடுகளில் மட்டுமே அழுத்தமானது சராசரி சதுரக் கிலோ மீட்டருக்கு 150-குக் குறைவானதாக இருந்தது.

மக்கள்பெருக்க விகித அடிப்படையில் உலகநாடுகளை வேறொரு வழியிலும் நான்கு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

(அ) குறைந்த மக்கள் அழுத்தமும் அதிமான வளர்ச்சியும் உடைய நாடுகள்– வட அமெரிக்கா, மிதமான தட்ப வெப்ப முடைய தென்அமெரிக்கா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, ரஷ்யா

(ஆ) குறைந்த மக்கள் அழுத்தமும் மிகவேகமான வளர்ச்சியும் உடைய நாடுகள்—ஆப்பிரிக்காவின் சில பகுதிகள், மைய அமெரிக்கா, வெப்ப மிகுந்த தென் அமெரிக்கா, தென் மேற்கு ஆசியா, பசிபிக் தீவுகள்.

(இ) அதிகமான மக்கள் அழுத்தமும் மிதமான வளர்ச்சியும் உடைய நாடுகள்—ஐரோப்பாவின் பெரும் பகுதி, ஜப்பான்.

(ஈ) அதிகமான மக்கள்அழுத்தமும் மிக வேகமான வளர்ச்சியும் உடைய நாடுகள்—கரீபியன், மையத்தெற்கு ஆசியா, தென்கிழக்கு ஆசியா, (ஜப்பான் நீங்கலாக உள்ள) கிழக்கு ஆசியா.

(குறைந்த மக்கள் அழுத்தம் உடைய நிலப் பகுதிகளான) முதல் இரண்டு பிரிவுகளும் 1950–ல் உலக நிலப்பரப்பில் 80% அளவை நிறைத்திருந்தன. அதோடு அந்த ஆண்டில் உலக மக்கள் தொகையில் 31% அளவையும் பெற்றிருந்தன. எஞ்சியிருக்கும் 20% நில அளவில் ஏறத்தாழ மக்கள் தொகையில் 70% அளவு மக்கள் செறிந்திருந்தனர்.

மக்கள் அழுத்தம், பொருளாதார வெற்றிகளின் தரம் ஆகிய வற்றின் அடிப்படையில் உலக நாடுகள் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்படுகின்றன.

(அ) மக்கள் அழுத்தம் மிகுந்த முன்னேற்றமடைந்த நிலப் பரப்புகள்—ஜப்பான் சுவிட்சர்லாந்து, இத்தாலி போன்றவை.

(ஆ) மக்கள் செறிவு குறைந்த முன்னேற்ற மடைந்த நிலப் பரப்புகள்—அமெரிக்கா, கனடா, ரஷ்யா, ஆகியவை,

(இ) மக்கள் செறிவு குறைந்த பின்தங்கிய நிலப்பரப்புகள்— பிரேசில் கோல்டு கோஸ்ட்,பர்மா போன்றவைகள்,

(ஈ) மக்கள் செறிவு மிகுந்த குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள்—எகிப்து, ஜாவா, இந்தியா, சீனு.

இந்த நான்கு நிலப்பரப்புகளிடையேயுள்ள மக்கள் செறிவின் வேறுபாடுகள் வரப்போகும் ஆண்டுகளில் இன்னும் அதிகமாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. பொருளாதாரத்தில் பின்தங்கிய நிலையில் உள்ளவைகளாகவும் தற்போது மிகுதியான மக்கள் செறிவையும் மிக வேகமான வளர்ச்சியையும் கொண்டிருக்கும் நிலப்பரப்புகளில் மக்கள் பெருக்கத்திஞல் தோன்றும் சிக்கல்கள் மேலும் மேலும் அதிகரித்துவரும் போக்கு தென்படுகிறது. இவ்வாருக உலக மக்களில் சரிபாதிப் பேர் பருவக்காற்று வீசும் ஆசியாவில் வசிக்கின்றனர். இந் நிலப்பரப்பின் குறிப்பிட்ட நிலப் பகுதிகளில் மக்கள் செறிவு ஏற்கனவே அதிகமாக இருக்கிறது. தவிர, இப்பகுதிகளில் தோன்றத்தக்க எதிர்கால மக்கள் பெருக்கம் உலக மக்களின் பெரும்பான்மையை நிர்ணயிப்பதாக உள்ளது.[1]

அட்டவணை 8

குறிப்பிட்ட சில நாடுகளில் மக்கள் செறிவுநிலை 1968

| நாடு | மக்கள் தொகை (மில்லியனில்) | மக்கள் செறிவு (சதுரக்கிலோ மீட்டருக்கு) நபர்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| ஜப்பான் | 101 | 273 |
| இங்கிலாந்து | 55 | 227 |
| இத்தாலி | 53 | 175 |
| இந்தியா | 524 | 160 |
| பாக்கிஸ்தான் | 109 | 125 |
| பிரான்ஸ் | 50 | 91 |
| சீனு, (மெயின்லாந்து) | 730 | 76 |
| ஐக்கிய அமெரிக்க நாடு | 201 | 21 |
| சோவியத் ரஷ்யா | 238 | 11 |
| கனடா | 21 | 2 |

மூலம் : United naltons Statisticol Year Book 1969.

[1] *The Future Growth of World Population*, U. N., 1958, pp 27-29 also; Spengler, J. J., 'The Population Problem; Dimensions Potentialites, Limitations, *American Economic Review, Papers and Proceedings*, May 1965 p. 346.

இந்தியாவில் மக்கள் செறிவு நாடு முழுவதும் சீராக இல்லா விட்டாலும் ஒரு மொத்தமாகப் பார்க்கும் போது 1971-ல் சராசரி ஒரு சதுரக் கிலோ மீட்டருக்கு இந்தியாவில் 182 நபர்கள் இருந் திருக்கின்றனர். உலக நாடுகள் சிலவற்றின் மக்கள் செறிவு பற்றிய செய்தி அட்டவணை 8-ல் காட்டப்பட்டுள்ளது.

உலக மக்கள் தொகையின் போக்கில் மிகவும் இன்றியமை யாததொரு குறிப்பு இந்த நூற்றுண்டில் காணப்படுகிறது. மக்கள்பெருக்க விகிதமானது, செல்வச் செழிப்புள்ள நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் குறைந்த வருமானமுள்ள நாடுகளில் மிக வேகமானதாக இருக்கிறது. இந்த நூற்றுண்டின் முதல் கால் பகுதியிலும் இறுதிக் கால் பகுதியிலும் வளர்ச்சி விகிதங்கள் முறையே ஆப்பிரிக்காவில் 22%, 71%, லத்தீன் அமெரிக்க நாடு களில் 57%. 95%, ஆசியாவில் 19%. 7.5%, ஆக இருந்தன. ரஷ்யா உள்ளிட்ட ஐரோப்பாவில் முறையே 19%, 25%, என்ற அளவில் மிதமான அதிகரிப்பாக இருந்தது. வடக்கு அமெரிக்காவில் முதல் கால் நூற்றுண்டில் 56% 57% அளவிலிருந்து இறுதிக்கால் நூற்றுண்டில் 30%, 40% என்று குறைந்தது. இதன் காரண மாகப் பல நாடுகளில் இருக்கும் மக்களின் உலகமக்கள் விழுக் காட்டிலும் வேறுபாடு தோன்றியது. 1950, 2000 ஆகிய ஆண்டு களுக்கு இடைப்பட்ட காலத்தில் உலக மக்கள் தொகையில் உள்நாட்டு மக்கள் தொகையின் விழுக்காடு ஆப்பிரிக்காவில் 8.0-லிருந்து8.2, லத்தீன்அமெரிக்காவில்6.5-லிருந்து9.4, ஆசியாவில் 55.2—லிருந்து 61,8 ஆக உயர்ந்தது. ஆனால் இவ் விழுக்காடு ரஷ்யாவில் 23-லிருந்து 15.1-க்கும் வட அமெரிக்கவில் 6.7-லிருந்து 5.0-க்கும் குறைந்தது. இதை இன்னொரு விதத்தில் பார்த்தால் 1950ஆம் ஆண்டில் இருந்த ஒவ்வொரு 100 நபருக்கும் கி பி. 2000 ஆண்டில் மைய அமெரிக்கா, வெப்பம் மிகுந்த தென் அமெரிக்கா, ஆகியவைகளில் 400-க்கும் அதிகமாகவும், வடக்கு ஆப்பிரிக்கா, தெற்கு ஆப்பிரிக்கா, தென் மேற்கு ஆசியா, ஆகியவைகளில் 300-க்கும் அதிகமாகவும், ஆசியாவில் கிட்டத்தட்ட 300 ஆகவும், மிதமான வெப்பமுள்ள தென் அமெரிக்கா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து ஆகியவைகளில் ஏறத்தாழ 200ஆகவும், வடக்கு அமெரிக்காவில் 186 ஆகவும். தெற்கு ஐரோப்பா மைய ஐரோப்பா ஆகியவைகளில் 150 ஆகவும், வடக்கு ஐரோப்பா, மேற்கு ஐரோப்பா, ஆகியவைகளில் 135 ஆகவும் மக்கள் இருப்பார்கள் என்று தெரிகிறது. உலகத்தின் பல்வேறு நிலப்பகுதிகளிலும் உள்ள வளர்ச்சி விகிதத்தில் உள்ள இந்த வேறுபாடுகளுக்கு அந்தந்த நிலப்பகுதிகளிலுள்ள பிறப்பு இறப்பு விகிதங்களின் போக்குகள் தான் காரணம். உலகத்தின் பிறப்பு விகிதமானது 1950-ல் 1000 நபருக்கு 39 என்ற அளவிலிருந்து 1960-ல் 37ஆகக் குறைந்து

அதற்குப் பிறகு அதே அளவில் 1975-ல் மாறுமலிருக்கும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. ஆனல், இறப்பு விகிதம் 33-லிருந்து 31-க்கும், பிறகு 29-க்கும் குறையும் என்று, எதிர்பார்க்கப்படுகிறது. மாறுக உலகநாடுகள் பலவற்றிலும் பிறப்பு விகிதம் மிக வேகமாக குறையும் என்று எதிர் பார்க்கப்படவில்லை. ஆனல் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இறப்பு விகிதாமனது குறிப்பிடத்தக்க வகையில் மிக வேகமாகக் குறையும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. 1950,1975 ஆகிய ஆண்டுகளுக்கான காலத்தில் இறப்பு விகிதாமானது ஐரோப்பாவில் 1000 நபர்களுக்கு 9-லிருந்து 10 ஆக உயரும் என்றும், வடஅமெரிக்கா, ரஷ்யா, ஆகியவற்றில் முறையே 9.7 என்ற அளவில் மாறுமல் நிலையாக இருக்குமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது. அதற்கு மாறுக, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் குறிப்பிடத்தக்க அளவிலான குறைவு எதிர்பார்க்கப்படுகிறது. இத்தகைய இறக்கம் ஆப்பிரிக்காவில் 33-லிருந்து 29-க்கும் இலத்தீன் அமெரிக்காவில் 19-லிருந்து 12-க்கும் ஆசியாவில் 32-லிருந்து 20-க்கும் எதிர்பார்க்கப்படுகிறது. இதன் விளைவாகக் குறிப்பிட்ட இக்காலங்களுக்கிடையில் மக்கள் பெருக்கத்தின் இயற்கையான வளர்ச்சிவிகிதம் 100()-க்கு வடஅமெரிக்காவில் 13-லிருந்து 12-க்கும் ஐரோப்பாவில் 11-லிருந்து 8-க்கும் ரஷ்யாவில் 18-லிருந்து 15-க்கும் குறையும். ஆனல், அதே காலத்தில் ஆப்பிரிக்காவில் இது 14-லிருந்து 17-க்கும் இலத்தீன் அமெரிக்காவில் 21-லிருந்து 28-க்கும் ஆசியாவில் 13-லிருந்து 23-க்கும் அதிகரிக்கும்.

மூன்று வேறுபட்ட எடுகோள்களின் அடிப்படையில் அண்மையில் கோல், ஹோவர் ஆகியோர் இந்தியாவின் எதிர்கால மக்கள் தொகையைப் பற்றி மதிப்பீடு செய்திருக்கிறுர்கள்.[1] முதலாவதாக மக்கள் தொகையின் மேல்வரம்பாக 1951 முதல் 1986 வரை பிறப்புவள விகிதம் மாறுமல் இருக்கும் என்ற எடுகோள் அமைக்கப்பட்டது. இரண்டாவதாகக் கீழ் வரம்பாக 1956ஆம் ஆண்டுவரை பிறப்புவளம் நிலையாக இருப்பதாகவும், அதன் பிறகு நடப்பு மதிப்பிற்கும் பாதியாக 1981-ம் ஆண்டில் குறையும் என்றும், அதற்குப் பிறகு குறைந்த நிலையில் எப்பொழுதும் மாறுமல் நிலைத்திருக்கும் என்றும் எடுகோள் அமைக்கப்பட்டது. மூன்றுவது எடுகோள் 1966-லிருந்து பிறப்பு வளத்தில் சரிவு தோன்றும் என்கிறது. 1966-ல் திடீரென்று தோன்றும் வீழ்ச்சியாக நேர்கோட்டுச் சம்பந்தமான வீழ்ச்சி இரண்டாவது மாதிரியைப்போலத் தோன்றி இப்போதிருக்கும் அளவில் ஒரு பாதி அளவாக 1981-ல் மாறிவிடும். மேற்கண்ட

[1] Coale, Ansley J. and Edgar M. Hoover, *Population Growth and Economic Development in Low Income Countries*, Oxford, India, 1959.

மூன்று எடுகோள்களின் அடிப்படையிலும் மதிப்பீடு செய்யப் பட்ட இந்தியாவின் எதிர்கால மக்கள்தொகை அட்டவணை 9-ல் காட்டப்பட்டுள்ளது.

அட்டவணை 9

இந்தியாவின் மக்கள்தொகை

(மில்லியன் கணக்கில்)

| | 1951 | 1956 | 1961 | 1966 | 1971 | 1976 | 1681 | 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| முதல் எடுகோள் | 357 | 384 | 424 | 473 | 532 | 601 | 682 | 775 |
| இரண்டாவது எடுகோள் | 357 | 384 | 420 | 458 | 496 | 531 | 562 | 589 |
| மூன்றுவது எடுகோள் | 357 | 384 | 424 | 473 | 524 | 569 | 603 | 634 |

மூலம் : Coale, Ansley J, and Edgar M. Hoover, *Population Growth and Economic Development in Low Income Countries*, Oxford India, 1959, pp. 34-37.

இந்த எதிர்கால மதிப்பீட்டின்படி மக்கள் பெருக்கமானது 1951ஆம் ஆண்டு இந்திய மக்கள்தொகை அறிக்கையில் அமைத்துக் கொள்ளப்பட்ட வளர்ச்சி விகிதத்தைக் காட்டிலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் திட்டக் கமிஷன் அமைத்துக்கொண்ட எடுகோளைக் காட்டிலும் மிஞ்சிச் செல்கிறது. 1961ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்கு, இப்போது (1961-ல்) இந்தியாவின் மக்கள் தொகை அளவு 439.235 மில்லியன் என்று காட்டியது. அதாவது 1951 முதல் 1961 முடிய உள்ள பத்தாண்டுகளில் 21.5% அளவில் மக்கள் பெருக்கம் இருந்தது என்பதைக் காட்டியது. 1901, 1921 ஆகிய இரண்டு பத்தாண்டுகளில் வளர்ச்சி விகிதம் 5.35%ஆக இருந்தது. 1921 முதல் 1941 வரையிலான அடுத்த இருபதாண்டுகளில் வளர்ச்சி விகிதம் 26.79% ஆக இருந்தது. நடப்புப் பத்தாண்டு வளர்ச்சி விகிதத்தின் அடிப்படையில் பெருகினுலும்கூட 1971ஆம் ஆண்டிற்கு முன்பே இந்தியாவில் 1901-ல் இருந்த மக்கள்தொகையைப்போல இரண்டு மடங்கு பெருகிவிடும் என்று தோன்றியது.[1] 1951ஆம் ஆண்டு முதல் 1986ஆம் ஆண்டு வரையில் கோல், ஹோவர் அவர்கள் ஏற்படுத்திக் கொண்ட மூன்று எடுகோளின்படி ஒவ்வொரு 1000 நபர்களுக்கான பிறப்பு விகிதமும் இறப்பு விகிதமும், வளர்ச்சி விகிதமும் அட்டவணை 9-ல்

1 Report in *The Hindu*, Madras, 11, September, 1962,

காட்டப்பட்டுள்ளன. இது முற்றிலும் உண்மையாகிவிட்டது. 1971ஆம் ஆண்டு மக்கள் கணக்கின்படி இந்திய நாட்டின் மக்கள்தொகை 547 மில்லியனாகும். இந்திய நாட்டின் மக்கள் தொகையைப்பற்றிய கோல், ஹோவர் ஆகியோரின் உச்ச அளவு மதிப்பீட்டைக் காட்டிலும் (524மில்லியன்) இது அதிகமாகும். இந் நூற்றாண்டுத் தொடக்கத்திலிருந்து இந்தியாவின் மக்கள் தொகையைப்பற்றிய விவரம் அட்டவணை 10–ல் காட்டப் பட்டிருக்கிறது.

அட்டவணை 10

இந்திய மக்கள்தொகை அளவு

(மில்லியன் கணக்கில்)

| ஆண்டு | | மக்கள்தொகை |
|---|---|---|
| 1901 | — | 239 |
| 1911 | — | 252 |
| 1921 | — | 251 |
| 1931 | — | 279 |
| 1941 | — | 319 |
| 1951 | — | 361 |
| 1961 | — | 439 |
| 1971 | — | 547 |

## மக்கள் பெருக்கமும் பொருளாதார வளர்ச்சியும்
## (Population and Economic Growth)

பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருக்கிறது என்ற அடிப்படையில் மக்கள் பெருக்கம் மிக நுணுக்கமாக ஆராயப் படுவது அண்மைக் காலத்தில்தான். மால்தஸ், ரிக்கார்டோ ஆகியோர்களின் காலத்தில் பெருகிவரும் மக்களின் தேவைகளை ஈடுகட்டுமளவிற்கு வேளாண்மை உற்பத்தியும் முழு அளவில் அதிகரிக்காது என்றிருந்த பயம் உண்மையானதாகும். இரண்டு வளர்ச்சி விகிதங்களிலும் உள்ள வேறுபாட்டைப்பற்றிய சிக்கல் பொருளியல் அறிஞர்களிடையேயும், எழுத்தாளர்களிடையேயும் அதிக விவாதத்தைத் தோற்றுவித்தது. வேளாண்மை முறைகளைப்

புரட்சிகரமாக மாற்றியமைத்தது, தொழில்களில் வியத்தகு வளர்ச்சி தோன்றியது. உலக வாணிகப் பெருக்கம் ஆகியவைகள் அதிக மக்கள் என்ற போலி அச்சத்தைப் போக்கின. 19ஆம் நூற்றுண்டில் மேலே நாடுகளின் பொருளாதார முன்னேற்றம் அந் நாடுகளின் மக்கள் பெருக்கத்தைக் காட்டிலும் மிக வேகமாக இருந்தது. எனவே, உழைப்பு அளிப்பில் தராதரமான பற்ருக் குறை என்பதே அங்குச் சிக்கலாக இருந்தது. பொருளாதார நிறைவெய்துதல் என்ற ஹான்சனின் தத்துவம், பொருளாதார வளர்ச்சிக்கு அதிக மக்கள் மிகவும் இன்றியமையாத காரணி என்று அவர் குறிப்பிட்ட ஆணித்தரமான கருத்து ஆகியவைகளின் காரணமாக மக்கள் சிக்கலின் இயல்பில் மாற்றத்தைத் தோற்று வித்தன. 1930 ஐச் சார்ந்த ஆண்டுகளில் இருந்த மிக வேகமான பொருளாதார மந்தத்திற்குரிய தீக் குறிகளேக் காட்டிய மக்கள் பெருக்க விகிதம் இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்க நாடுகள் போன்ற மேலே நாடுகளில் அண்மைக் காலத்தில் குறிப்பிடத்தக்க அளவு மறுமலர்ச்சியை பெற்றிருக்கிறது என்ற உண்மையானது ஓர் உணர்வைத் தோற்றுவித்திருக்கிறது. அதாவது, முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளில் மிக அதிக அல்லது குறைந்த வேகத்தி லான மக்கள் பெருக்க அதிகரிப்பால் பொருளாதாரத்தில் விளைவு களைத் தோற்றுவிக்கும் மக்கள் தொகைக் காரணி, பொருளா தாரத்திற்குப் புறம்பானதல்ல என்றும், பொருளாதாரத்தின் தேவைகளுக்கேற்பச் சாதகமான முறையில் எதிரொலிக்கக் கூடியதுதான் என்றும் உணரப்பட்டது. எனவே, மால்தஸ் காலம் தொட்டுத் தொடங்கிய எழுத்தாளர்களிடையே மக்கள்தொகைச் சிக்கல் குறைவான கவனத்தையே ஈர்த்தது.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள பொருளாதார வளர்ச்சிச் சிக்கல்கள் அண்மைக் காலத்தில் அதிகமாகக் கவனத் திற்குக் கொண்டுவரப்பட்டன. இந் நாடுகளில் சில உறுதியாக அதிக மக்கள் தொகையைக் கொண்டிருக்கின்றன. இதனுல், மக்கள் தொகைப் போக்குப்பற்றிய கல்வி, இப் போக்கினுல் பொருளாதார முன்னேற்றத்தில் தோன்றும் விளைவுகளேப்பற்றிய கல்வி ஆகியவைபற்றிய ஆர்வம் மீண்டும் தோன்றியுள்ளது. தற்போது வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளில் அவற்றின் வளர்ச்சியின் தொடக்க நிலையில் அவற்றின் மக்கள் பெருக்கம் பொருளாதார வளர்ச்சியை மிஞ்சிச் செல்லவில்லை என்ற உண்மை தற்கால எழுத்தாளர்களின் நெஞ்சில் ஆழப் பதிந்திருக்கிறது. எனவே, அவர்கள் மக்கள்தொகை அதிகமாக இருப்பதால் தோன்றும் ஆபத்துகளேக் குறைத்தே மதிப்பிடுகிருர்கள். சில நேரங்களில் மக்களின் எண்ணிக்கையில் தோன்றக்கூடிய மிக

வேகமான வளர்ச்சியை உயர்வாகப் போற்றவும் செய்கிறார்கள். முதலாளித்துவத்துறை, பிழைப்பூழியத்துறை ஆகிய இரண்டும் அடங்கியதொரு பொருளாதார உருப்படிவத்தை அமைத்து, பிழைப்பூழியத் துறையில் நடைமுறையில் இருக்கும் ஊதிய நிலைக்குச் சிறிது அதிக ஊதிய நிலையில் பிழைப்பூழியத் துறையிலிருந்து தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்வதன் மூலமாக முதலாளித்துவத்துறை வளர்ச்சி பெறுகிறது என்பதையும், அவ்வாறு வளர்கின்றபோது பொருளாதாரம் முழுமைக்குமான ஒரு மொத்தமான வளர்ச்சியை அது தோற்றுவிக்கிறது என்பதையும், அண்மையில் எழுதிய சிறப்புமிக்க தமது கட்டுரையில் பேராசிரியர் ஆர்தர் லூயிஸ் விவரிக்கிறார். பிழைப்பூழியத் துறையிலிருந்து மலிவான உழைப்பு கிடைக்காவிட்டால் முதலாளித்துவத் துறையின் வளர்ச்சி தடைப்படுமென்று இந்த உருப்படிவத்தில் காட்டுகிறார்.[1] புதுமை மாஸ்தஸ் கோட்பாட்டினரின் பயம் மிகைப்படுத்தப்பட்டதெனக் காலின் கிளார்க் (Colin Clark) கருதுகிறார். இந்தியா, பாகிஸ்தானில் ஒரு சதுரமைலுக்கான மக்கள் செறிவு 400 ஆக இருப்பது எவ்வித அச்சத்தையும் தோற்றுவிக்கத் தேவையில்லை என்ற தமது கருத்திற்கு ஆதரவாக அவர் இந்தியாவையும் இத்தாலியையும் ஒப்பிடுகிறார். இந்தியாவில் இருப்பதைப் போன்று அதிக மக்கள் செறிவுடைய டென்மார்க், இத்தாலி போன்ற நாடுகளில் வேளாண்மைத்துறை உற்பத்தி அதிகமாகவே இருக்கிறது. எனவே, இந்தியாவிலும், பாகிஸ்தானிலும் இப்போதிருக்கும் மக்கள் செறிவு இருந்தாலும் வேளாண்மைத் துறை உற்பத்தியைப் பெருக்குவதற்கான வாய்ப்புகள் ஏராளமாக இருக்கின்றன என்று அவர் கருதுகிறார். இருப்பினும், வெளிநாடுகளுக்கு மக்கள் இடம் பெயர்ந்து செல்லுதல், வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருள்களை வளர்ச்சியடைந்த நாடுகளில் இறக்குமதி செய்வதற்குத் தடைகள் இல்லாதிருத்தல், வெளிநாட்டு உதவிகள் எளிதாகக் கிடைத்தல் ஆகியவைகள் இருந்தால்தான் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவற்றின் அதிக மக்களைப் பாதுகாக்க இயலும் என்று அவர் கருதுகிறார்.[2] பன்னாட்டு வாணிகம் வெளிநாடுகளுக்கு மக்கள் பெயர்ந்து செல்லுதல், ஆகியவற்றால் தோற்றுவிக்கப்படும்

[1]Lewis, Arthur W., 'Economic Development with Unlimited Supplies of Labour,' *The Manchester School*, May, 1954, Reprinted in Agarwala, A.N. and S P. Singh, *The Economics of Underdevelopment*, Oxford, India, 1958, pp 400—49.

[2] Clark, Colin, 'Population Growth and Living Standards', *International Labour Review*, August. 1953, Reprinted in Agarwala, A. N. and S. P. Singh, The Economics of Underdevelopment, Oxford India, 1958. pp. 32-53.

வாய்ப்புகள், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள மக்கள் அழுத்தத்தைக் குறைக்கும் என்று மற்றோர் அறிஞர் கருதுகிறார். மிகச் சிக்கலாக உள்ள உலக வாணிகப் பாதையில் நல்லதோர் இடத்தை இந் நாடுகள் பெற்றால், வெற்றிகரமான பொருளாதார முன்னேற்றத்திற்கான நல்ல வாய்ப்புகளை அவை அடையலாம். ஏனென்றால், அவைகளுக்குப் பற்றாக்குறையாக உள்ள உற்பத்திக் காரணிகள், உற்பத்திச் சாதனங்கள் ஆகியவற்றைப் பெறுவதற்கு இவ் வாணிக வாய்ப்பு பெரிதும் உதவும்.[1]

## மக்கள் பெருக்கமும் மூலதன ஆக்கமும்
## (Population Growth and Capital Formation)

மூலதன மூலவளங்கள் இல்லாத அல்லது மூலதன மூலவளங்கள் மிகக் குறைவான அளவில் உள்ள தொடக்க நிலைப் பொருளாதாரம் ஒன்றில் ஒவ்வொரு தொழிலாளருக்கும் கிடைக்கும் நிலத்தின் அளவு அல்லது நிலத்தின் தன்மை ஆகியவைகளைப் பொறுத்து ஓர் உழைப்பாளரின் விளைவு அமைகிறது. மக்கள்தொகை பெருகும்போது, நிலமும் இயற்கை மூலவளங்களும் மென்மேலும் அதிகமான அளவில் பயன்படுத்தப் படுகின்றன. அப்படிப் பயன்படுத்தப்படும்போதே மூலதனம் அமைக்கப்படுகிறது. மக்கள் பெருக்கத்தினால் ஓர் உழைப்பாளருக்குக் கிடைக்கத்தக்க இயற்கை மூலவளங்களின் இழப்பானது, அதிகமான அளவில் கிடைக்கத்தக்க மூலதன மூலவளங்களினால் ஈடு செய்யப்பட்டுவிடுமானால், உற்பத்தித் திறன் பாதகமாகப் பாதிக்கப்படமாட்டாது. அதற்கு மாறாக, உற்பத்தித் திறனை அது உண்மையாகவே அதிகரித்துவிடலாம். எனவே, ஒரு நாட்டின் முன்னேற்றப் பாதையில் மூலதன அமைப்புக்கு அடிக்கல் நாட்டுவதற்கு வசதி செய்யும் வகையில் நிலம்-உழைப்பு விகிதம் இருந்திருக்கும் என ஊகிக்கலாம். எனவே, மூலதன ஆக்கத்திற்கான இவ் வாய்ப்பு ஏதாவதொரு காரணத்தினால் தவறவிடப்பட்டிருக்குமானால், உழைப்பின் உற்பத்தித் திறன் உறுதியாகக் குறையும். தவிர, மூலதன ஆக்கமும் மிகவும் கடினமானதாக இருக்கும். இன்று நன்னிலையில் உள்ள வளர்ச்சியடைந்த நாடுகளில் பெரும்பாலானவை தங்களது நாடுகளில் மக்கள் பெருக்கம் தோன்றி அதன் வாயிலாக இயற்கை மூலவளங்களின் தலா அளவு மென்மேலும் குறைந்து செல்லும்போது, மூலதனத்தை ஆக்கிக் கொண்டவைகளாகும். நிலத்தைப் போலல்லாமல் மூலதனமானது அதிகரித்துக்கொண்டே செல்லும் இயல்புடையது என்பதால் அதிகரித்துவரும் மக்கள் தொகையின்

[1] Penrose, E. F., 'Malthus and the Underdeveloped Areas,' *Economic Journal*, June, 1957 pp. 238 39.

தேவைகளை ஈடு செய்யக்கூடிய தன்மையுடையது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பான்மையானவை இவ் வாய்ப்புகளைத் தவற விட்டவைகளாகும். இதன் காரணமாக இந் நாடுகளில் தலா நில அளவு மிகக் குறைந்திருப்பதற்கு இணையாக மூலவளங்களின் தலா அளவும் மிகவும் குறைவாகவே இருக்கின்றது. இதன் விளைவாக இந் நாடுகளின் பொருளா தாரங்கள் மிகக் குறைந்த அளவு முன்னேற்ற நிலையில் தேக்க நிலையை அடைந்திருக்கின்றன. எனவே நிலம் என்ற உற்பத்திக் காரணி நிலையாக இருப்பதுதான் சிக்கலின் மூலக் கருத்து எனத் தென்படுகிறது. நிலம் என்ற உற்பத்திக் காரணி நிலையாக இருப்பதால். அக் காரணியின் அளவு குறையும்போது உடனிகழ் வாக அதற்கு ஏற்றவண்ணம் மூலதன அதிகரிப்பு தோன்ருவிடில், உழைப்பின் உற்பத்தித் திறன் மிக வேகமாகக் குறைந்தே தீரும். மக்கள் தொகைப் பெருக்க வேகம் எந்த அளவுக்கு வேகமாக இருக்கிறதோ, அந்த அளவுக்குத் தனிநபர் விளைவின் குறைவும் அதிகமானதாக இருக்கிறது; மூலதன ஆக்கமும் மிகவும் கடின மானதாக இருக்கிறது. எனவே, மூலதன ஆக்கம் என்பது பொருளாதார முன்னேற்றம் என்றே ஆகிறது. உண்மையில் பார்க்கும்போதுகூட, மூலதன மூலவளங்கள் மிகக் குறைவான அளவில் இருக்கின்றபோது உழைப்பு மூலவளங்கள் ஏராளமான அளவில் இருக்கின்றன என்ற உண்மைதான் குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளில் மிகப் பெரிய வளர்ச்சிச் சிக்கலாக அமைந்திருக் கிறது. இச் சிக்கலில் இரண்டு பக்கங்கள் உள்ளன. முதலாவதாக, மிகத்தாழ்வான நிலையில் தேக்க நிலையை இப் பொருளாதாரங்கள் அடைந்திருப்பதாலும், மிகவும் அதிகமான மக்கள் தொகைப் பளுவை இவைகள் பெற்றிருப்பதாலும், பொருளாதார வளர்ச்சிக்குத் தேவைப்படும் தொடக்க மூலதன அளவு மிக அதிக மாக இருக்கிறது. இரண்டாவதாக, மிகவும் அதிகமான மக்கள் செறிவு மிகவும் அதிகமான வளர்ச்சி விகிதம் ஆகியவைகளோடு குறைந்த மூலதனத்தையும் இணைத்திருப்பதானது, மூலதன இருப்பை அதிகரித்தல் என்ற வினவை விட்டுவிட்டாலும்கூட, இந் நாடுகளில் நடைமுறையில் இருக்கும் வாழ்க்கைத் தரத்தை நிலை நாட்டுவதைக்கூட, மிகவும் கடினமானதாக்கிவிடுகின்றது. சிக்கலின் இவ் விரண்டு பகுதிகளும் இப்போது விரிவாக ஆராயப் படலாம்.

(அ) குறைந்த வளர்ச்சியுடைய பொருளாதாரங்களின் மூலதனத் தேவைகள்.

(Capital Requirements of Underdeveloped Economics.)

வேளாண்மைத்துறை, தொழில்துறை ஆகியவைகளிலிருந்து பெறப்படும் விளைவு அதிகமாக இருப்பதற்காக, அத் துறைகளில்

செய்யப்பட வேண்டிய முதலீடுகளுக்காக மட்டுமல்லாமல், சாலைகள், இருப்புப் பாதைகள், துறைமுகங்கள் போன்ற சமுதாயப் பின்னமைப்புகளுக்காகவும், மனித முதலீடுகள் என்றழைக்கப் படும் பள்ளிக்கூடங்கள், மருத்துவ நிலையங்கள், சுகாதார நிலையங்கள் போன்றவைகளின்மீதான முதலீடுகளுக்காவும், பொருளாதார முன்னேற்றம் தோன்றுவதற்குத் தேவையான அடிப்படைகளைத் தோற்றுவிக்கும் எல்லாவற்றின்மீதான முதலீடு களுக்காகவும் மூலதனம் தேவைப்படுகிறது. எனவே, பொருளா தார முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளிலிருக்கும் ஒரு நாட்டின் மூலதனத் தேவைகளைப்பற்றிய சரியான மதிப்பீட்டைச் செய்வது மிகவும் கடினமானதாகும். இந் நாடுகளில் கிடைக்கத் தக்க புள்ளி விவரங்களின் உறுதியற்ற தன்மையும், பற்றுக்குறையான தன்மையும், வரையறைகளில் உள்ள வேறுபாடுகளும் சிரமங்களை இன்னும் அதிகமாக்குகின்றன. இவை தவிர, ஒரே தொழிலில் அங்கங்குள்ள அமைப்புகள், தொழில்நுண்ணியல் போன்றவை களின் வேறுபாடுகளின் காரணமாகச் சராசரித் தொழிலாளிக்குத் தேவையான மூலதன அளவுகள் மிகவும் வேறுபட்டுக் காணப் படுகின்றன. இவ்வாருக, வேதியல் தொழிலில் பணிபுரியும் ஒரு நபருக்கான மூலதனத் தேவையின் அளவு ஹங்கேரியில் ( 937–ல்) £ 37?–லிருந்து அமெரிக்காவில் (1939–ல்) £ 543?–க்கு வேறு படுகிறது. மின் சக்தி, மின் விளக்கு ஆகியவைகளுக்கு இது இந்தியாவில் (193?–39-ல்) £ 174?–லிருந்து டென்மார்க்கில் (192?-ல்) £ 625?-க்கு வேறுபடுகிறது. ஏறத்தாழ ஒரியல்பினதாகக் கருதப்படும் துணித் தொழிலில்கூட இது பிரேசிலில் (1945–ல்) £ 123 லிருந்து கனடாவில் (1 36–ல்) £ ?1?-க்கு வேறுபாடுகிறது. ஒரே நாட்டிற்குள்ளேயுள்ள பல தொழில்களுக்கிடையே மூலதனத் தேவையின் அளவுகள் வேறுபட்டிருக்கின்றன. எடுத்துக் காட்டாக ஐக்கிய அமெரிக்க நாட்டில் வேலை செய்யும் தொழிலாளர் ஒருவருக்குத் தேவைப்படும் மூலதன அளவு துணித் தொழிலில் £ 4?5 ஆகவும், வேதியல் தொழிலில் £ ?430 ஆகவும் வேறுபட்டிருக்கிறது எல்லா விதமான பொறிவழி உற்பத்தித் தொழில்களுக்குமான மூலதனத் தேவையின் சாரசரி அளவின் வீச்சு (193?-ல் ஹங்கேரியில் £ 192–லிருந்து ஐக்கிய அமெரிக்க நாட்டில் £ 12?0வரையில் இருக்கிறது[1] தவிர, அசலன அடிப் படையில் மூலதனத் தேவையைக் கணக்கிடுதல் முறையற்ற தாகும். தொடக்கநிலையில் மற்ற உற்பத்திக் காரணிகளும்

1 M?ndelb?um, K, *Industria'ization of Backward ?reas*, Oxford Inst?tute o? Statistics, p. 5? and Clark, Col?n *Conditions of Economic ?rogress*, Macmillan, London, 3rd Edn., 1957, pp 582 83. Quoted in *Economic Bulletin for ?sia and the Far East*, June, 1959, p. 34 f n.

பயன்படுத்தப்பட்டால் ஒழிய, கிடைக்கத்தக்க மூலதன மூல வளங்கள் எல்லாவற்றையும் பயன்படுத்துதல் இயலாத ஒன்றாகும். பொருளாதார வளர்ச்சியின் போக்கில் குறிப்பிட்ட தொழில் களின் மூலதனத் தேவைகளைப் பாதிக்கத்தக்க வகையில் காரணிகளின் புதிய கலவைகளும் அமைப்பியல் மாற்றங்களும் தோன்றலாம்.

பெருகிவரும் மக்கள் தொகையின் காரணமாகவும், நாட்டு வருமான வளர்ச்சி விகிதத்தை அதிகரித்துக்கொண்டு செல்லத் தக்கதாக நிலைநிறுத்த வேண்டிய அவசியத்தின் காரணமாகவும் வளர்ந்து செல்லும் பொருளாதாரம் ஒன்றின் மூலதனத் தேவை யானது காலப் போக்கில் அதிகரித்துக்கொண்டே செல்லும். இந்த அடிப்படையில் 'பிறப்பு-நோய் முதலான சமுதாய நிலை" முதலீடு என்றும், 'பொருளாதார' முதலீடு என்றும் முதலீட்டை இரண்டு விதமாக வேறுபடுத்திக் காணுகின்றனர். மக்கள் தொகை அதிகரித்துக்கொண்டு வரும்போது. நடப்பில் இருக்கும் வாழ்க்கைத் தரத்தை மாருமல் நிலைத்திருக்கச் செய்வதற்குத் தேவைப்படும் முதலீட்டு அளவை முன்னதும், தனிநபர் வருமான உயர்வையும், வாழ்க்கைத் தரத்தில் உயர்வையும் தோற்றுவிக்கும் வண்ணம் மக்கள் பெருக்க விகிதத்தைக் காட்டிலும் அதிகமான அளவிலான நாட்டு வருமானப் பெருக்க விகிதத்தைத் தரும் அளவுக்கு மேற்கொள்ளப்படும் முதலீட்டு அளவைப் பின்னதும் குறிப்பிடுகின்றன. முதலாவது மக்கள் பெருக்க விகிதத்தால் நிருணயிக்கப்படுகிறது என்பதும், இரண்டாவது மக்கள் பெருக்கத்தோடு மட்டுமல்லாமல் விரும்பப்படும் தனிநபர் வருமான உயர்வு விகிதத்தோடும் தொடர்பு உடையது என்பதும் தெளிவாகத் தெரிகின்றது. மிகமிக வேகமாகப் பெருகிவரும் மக்களையும், குறைந்த அளவிலான தனிநபர் வருமானத்தையும் கொண்டுள்ள வளர்ச்சி குறைந்த பொருளாதாரம் ஒன்றில், அப் பொருளாதாரத்தில் கிடைக்கும் சேமிப்பு முழுவதையும் பிறப்பு-நோய் முதலான சமுதாய நிலைமுதலீடு ஒன்றே ஈர்த்துக் கொள்ளும். ஆண்டு ஒன்றுக்கு 1% அளவுக்கு அதிகரித்துவரும் மக்கள்தொகையை நடப்பில் இருக்கும் தனிநபர் வருமான நிலையில் பாதுகாப்பிற்குத் தேவையான மூலதன அளவுக்கு நாட்டு வருமானத்தில் 2% முதல் 5% வரையிலான அளவு சேமிப்பு தேவைப்படுகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பல வற்றிலும் பொதுவாகக் காணப்படுதல் போன்று ஆண்டு ஒன்றுக்கு 2.5% அளவில் மக்கள்தொகை பெருகிவருமானல், நாட்டு வருமானத்தில் 5% முதல் 12. 5% வரையிலான அளவு சேமிப்பைப் பிறப்பு-நோய் முதலான சமுதாயநிலை முதலீடு, வாழ்க்கைத்

தரத்தில் எந்த விதமான உயர்வும் இல்லாமலேயே ஈர்த்து விடும்.[1]

மேற்கொண்ட இடையூறுகளின் காரணமாகக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கான மூலதனத் தேவையைப்பற்றிச் செய்யப்படும் மதிப்பீடுகள் யாவும், உள்ளார்ந்திருக்கும் பருமங்களின் முழுமை பெருத நிலையிலான அறிவிப்புகள் என்றுதான் கருதப்படவேண்டும். குறைந்த வளர்ச்சியுடைய பொருளாதாரங்களில் குறிப்பிட்ட தொழில்களில் உள்ள தொழிலாளர்களுக்குத் தேவையான மூலதனத் தேவையைக் கணக்கிட, வளர்ச்சியடைந்த நாடுகளில் அதேபோன்ற தொழில்களில் சராசரித் தொழிலாளர் ஒருவருக்குக் கிடைக்கும் மூலதன அளவைப் பயன்படுத்துவது ஒரு முறையாகும்.

**(ஆ) மூலதன ஆக்கத்திற்குத் தடையாக மக்கள் பெருக்கம்.**
(Population Growth as an Obstacle to Capital Formation

மூலதனத் தேவை மிகப் பெரிய அளவிலிருக்கும்போது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் மக்கள் தொகையின் அமைப்பு மூலதன ஆக்கத்திற்கு மிகுதியான அளவில் ஊறு விளைவிப்பதாகவும், மூலதன ஆக்கத்தையும் தடை செய்வதாகவும் இருக்கிறது. பெருகிவரும் மக்கள் தொகையானது பொருளாதார வளர்ச்சிக்கு ஆற்றும் பங்கைப் பொதுவாக அம் மக்கள் தொகையினுல் நாட்டு உற்பத்தியில் அதிகப்படியாகச் சேர்க்கப்படுவதிருந்து நுகர்வு என்ற வடிவத்தில் அம் மக்கள் செலவழித்துவிடும் அளவைக் கழித்துப் பார்த்துக் கணக்கிடுவது வழக்கம். அதிக மக்கள் தொகையைக் கொண்டுள்ள இந்தியா போன்ற குறைந்த வருமானமுள்ள நாடுகளில் சேமிப்பு இறுதிநிலை மிகவும் குறைவாக உள்ளது. ஏனென்றல், மக்கள்தொகை அளவோடு ஒப்பிடுகையில் நாட்டு விளைவிற்கு மக்கள் ஆற்றும் பங்கு மிகவும் குறைந்த அளவிலேயே உள்ளது. தவிர, நாட்டு விளைவின் பருமத்தோடு ஒப்பிடுகையில் நுகர்வு என்ற வடிவத்தில் ஈர்த்துக் கொள்ளப்படும் அளவும் அதிகமானதாக இருக்கிறது. விளைவில் அதிகரிப்பைத் தோற்றுவிப்பதற்கு மக்கள் எந்த அளவுக்கு உதவி செய்ய முடியுமென்பது கீழ்க் கண்டவைகளைச் சார்ந்துள்ளது. (i) ஒரு தொழிலாளருக்குக் கிடைக்கும் வருமான உற்பத்திச் சாதனங்களின் அளவு, தொழில் நுண்ணியியல் நிலை ஆகியவைகள், (ii) உழைப்பாளர்களின் தரத்தின் கலவை, (iii) உழைப்பாளர்களின் அளவு, வளர்ச்சி

[1] *The Determinants and Consequences of Population Trends*, **U.N., 1953, p. 278.**

யடைந்த நாடுகளில் நாட்டு வருமானத்தின் 10% முதலீடானது நாட்டு விளைவை 2.5%-ம் மக்கள், மற்றும் உழைப்பாளர்களின் அளவை ஆண்டு ஒன்றுக்கு 1%-ம் அதிகரிக்குமானல், வருமான அதிகரிப்புக்கு மூலதனத்தின் பங்கு 0.6–0.75 உழைப்பாளர்களின் அளவில் தோன்றிய அதிகரிப்பின் பங்கு 0.7% அளவாகவும், தொழில்நுண்ணியியலின் பங்கு 1% அளவாகவும் இருக்கிறது எனக் கருதப்படுகிறது. தொழில் வளர்ச்சி பெருத நாடுகளில் ஒரு தொழிலாளருக்குக் கிடைக்கும் குறைந்த அளவு மூலதனச் சாதனங்கள் அந் நாட்டுத் தொழிலாளர்களின் உற்பத்தித்திறன் குறைவாக இருப்பதற்கான காரணமாகவும், குறைவாக இருப்பதன் விளைவாகவும் இருக்கிறது. மறு உற்பத்தி செய்யத் தக்க மூலவளங்களின் பற்ருக்குறையானது தொழிலாளர்களின் உற்பத்தித் திறனையும், தனிநபர் வருமானத்தையும் பாதிக்கிறது. குறைவான வருமானத்திஞல் சேமிப்பு குறைவாக இருக்கிறது. சேமிப்பு குறைவாக இருப்பதஞல் தொழிலாளர்களுக்குத் தேவையான அளவில் மூலதனச் சாதனங்களைத் தருவது என்பதைக் கடினமானதாக அல்லது முடியவே முடியாததாக ஆக்கிவிடுகிற து மூலதன மூலவளங்களின் பற்ருக் குறையிஞலும், கல்வியின் குறைவான தரத்திஞலும் தொழில் நுண்ணியலின் வளர்ச்சி மிக மிகக் குறைவானதாக இருக்கிறது. இவைகள் தவிர, தொழிலாளரின் மிகக் குறைவான தரத்தின் காரணமாக அவர்களின் உற்பத்தித்திறன், வளர்ச்சி பெற்ற நாடுகளோடு ஒப்பிடுகையில் மிகவும் குறைவான அளவிலேயே இருக்கிறது. திறமையை வளர்த்துக் கொள்வதற்கும், பயன்படுத்துவதற்கும் ஆன தகுதியைப் பாதிக்கும் உள்ளார்ந்த மனஇயல் மற்றும் உடற்கூற்றுப் பண்புகள், தொழிலாளர்கள் வகுப்பில் சேர்த்துக்கொள்ளப்படும் எண்ணிக்கையையும், அவர்களின் திறனையும், வேலையில் அவர்களது முயற்சியையும் நிருணயிக்கும் உடல்நலக் கலவை, தொழிலாளர்களின் பண்பு, ஒழுக்கம், சுறுசுறுப்பு, கடும் உழைப்பு ஆகியவைகளில் செயல் விளைவை உடைய கல்விக் கலவை ஆகிய தோற்றுவாய்க் கலவைகளைப் பொறுத்துத்தான் தொழிலாளர்களின் தரத்தின் கலவை அமையும் என்று 'ஸ்பெங்லர்' கருதுகிருர்[1] குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள தொழிலாளர்களின் தரக் கலவையானது பொருளாதார முன்னேற்றத்தை உறுதியாகத் தடைசெய்யும் ஒரு காரணியாகத்தான் இருக்கிறது. ஒரு தொழிலாளருக்கு உள்ள மூலதனச் சாதனங்கள் குறைவாக இருப்பதால், அவர் உழைப்பு பொருளாதார வளர்ச்சிக்கு

[1] Spengler, Joseph J., *Economic Development : Principles and patterns*, Williamson, Harold F., and John A. Buttrick, (eds.) Prentice Hall, New York, 1954, pp. 76-78.

ஆற்றும் பங்கு குறைவாக இருக்கிறது என்பதோடு மட்டு மல்லாமல் உழைப்பின் பங்கைப் பொதுச் சுகாதாரத்தின் குறைவான தரம், உழைப்பின் இடப் பெயர்ச்சியின்மை, தொழில் நுட்ப அறிவு குறைவாக இருத்தல் ஆகியவைகள் தொழிலாளர் களின் திறன் நிலையைக் குறைவானதாகவும், அவர்களின் உற்பத்தித் திறனைக் குறைந்த அளவிலானதாகவும் இருக்கச் செய்கிறது.

உழைக்கும் வயது வரம்பில் இருக்கும் மக்களின் எண்ணிக்கை ஒரு நாட்டில் இருப்பதைக் காட்டிலும் இன்னொரு நாட்டில் அதிகமானதாக இருந்தால், அதிகமாக இருக்கும் நாட்டில் நுகர்வோர்க்கு உற்பத்தியாளர்கள் என்ற அடிப்படையில் சாதக மான விகிதம் இருக்கிறது. உழைக்கும் வயது வரம்பில் உள்ள மக்களின் எண்ணிக்கை குறைவாக உள்ள நாட்டில் உற்பத்தி செய்பவர்களின் எண்ணிக்கை குறைவாக இருக்கிறது என்பதால் மட்டுமல்லாமல், சிறிய அளவிலான உற்பத்தியாளர்கள் முதலீட் டிற்காக எதையாவது பயன்படுத்துததற்கு முன்னால், தங்களது நுகர்வுத் தேவைகளையும் தங்களைச் சார்ந்துள்ளவர்களின் நுகர்வுத் தேவைகளையும் நிறைவு செய்யவேண்டியிருப்பதாலும், சேமிப்பின் அளவு உறுதியாகக் குறைவான அளவில்தான் இருக்க முடியும். ஒரே மாதிரியான மக்கள் அளவு, தொழிலாளர்கள் உற்பத்தித் திறன் ஆகியவைகளையும், ஆனால் வயது அமைப்பில் வேறுபாடு களையும் கொண்டுள்ள இரண்டு நாடுகளில், அதிகமான விழுக் காட்டு அளவு தொழிலாளர்களைக் கொண்டுள்ள நாடு அதிகமான மொத்தச் சேமிப்புக்கு வகைசெய்யும் என்பதோடு, வருமானத் தோடு ஒப்பிடுகையில் அதிகமான விழுக்காட்டு அளவு சேமிப்பையும் தரமுடியும். ஒரு சமுதாயத்தில் 1000 நபர்கள் இருக்கிறார்கள் என்றும், மிகக் குறைந்த அளவிலான தனிநபர் நுகர்வு அளவு $50 என்றும், $200 உள்ள தொழிலாளர்களின் உற்பத்தியும் இறுதிநிலை நுகர்வு நாட்டத்தின் அளவும் 70% என்றும் கருதிக்கொள்ளலாம். அப்போது மக்களில் 30% அளவினர் வேலை செய்தால் நாட்டு வரு மானத்தில் சேமிப்பு விகிதம் 5% அளவாக இருக்கும் என்பதையும் 40% அளவினர் வேலை செய்தால் நாட்டு வருமானத்தில் சேமிப் பின் விழுக்காடு 11.2% அளவாக இருக்கும் என்பதையும் காண முடியும். இச் சேமிப்புகளின் முதலீட்டு அளவுகள் முதலீடுகளினால் தோன்றும் வருமான அதிகரிப்புகள் ஆகியவைகளுக்கிடையேயான வேறுபாடுகள் கால ஓட்டத்தில் மிகவும் அதிகரித்துவிடும். இவ்வாறாக மேற்குறிப்பிடப்பட்ட உருப்படிவத்தில் 3% முதலீடு வருமானத்தில் 1% அதிகரிப்பைத் தோற்றுவிக்கும் என்று கருதிக் கொண்டால், மொத்த மக்களில்30% அளவு மக்கள்வேலைபார்த்தால்

அடுத்த வருமான்க் காலத்தில் தனிநபர் வருமானம் $203.3 ஆக உயரும்; சேமிப்பு 5.4% ஆக அதிகரிக்கும். ஆனால் மக்களில் 40% அளவினர் வேலை செய்தால், வருமானத்தில் தோன்றும் அதிகரிப்பு $207.5 ஆகவும், சேமிப்பில் தோன்றும் அதிகரிப்பு சமுதாயத்தின் மொத்த வருமானத்தில் 11.9% அளவாகவும் இருக்கும்.[1]

## வயது அமைப்பும் நுகர்வுத் தேவைகளும்
(Age Composition and Consumption)

பொருளாதாரத்தின் நுகர்வுத் தேவைகளை அதிகரிக்கிறது என்ற வகையிலும், உற்பத்திப் பணியில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர்களின் சார்புப் பளுவை அதிகரிக்கிறது என்ற வகையிலும் சேமிப்பு. மூலதன ஆக்கம் ஆகியவைகளின்மீது வயது அமைப்பின் பாதக விளைவுகள் தோன்றுகின்றன. உணவு, மற்றும் இன்றியமையாத பொருள்களின்மீதான செலவுகளின் வருமானப் பகுதி மொத்த வருமான அளவோடு எதிரிடைத் தொடர்பை உடையதாகும். தனிப்பட்ட நபர்களுக்கும், குடும்பங்களுக்கும், நாடுகளுக்கும் இக் கருத்து பொருத்தம் உடையதாகும். குறைந்த வருமானமுடைய நாடுகளில் தனிநபர் வருமானங்கள் அதிகரிக்கும்போது, அதோடு இறுதிநிலை நுகர்வு நாட்டமும் அதிகரித்துக் கொண்டு செல்லும் போக்கு தென்படுகிறது. பொதுவாக வருமானம் குறைவாக இருக்கும்போது. நடைமுறையில் இருக்கும் நுகர்வு மாதிரியைக் கைப்பற்றியிருப்பார்கள். ஆனால் அவர்கள் வருமானம் அதிகரிக்கும்போது, பெரும்பாலும் செலவுத் தொகையின் அளவு அதிகரிக்கப்படுவதுண்டு. ஏனென்றால் வருமானம் அதிகரிக்கும்போது. தேவையானது தரம் குறைந்த பொருள்களின் மீதிருந்து தரம் உயர்ந்த பொருள்களுக்கான தேவையாக மாற்றப்படுகிறது. தவிர, பலவிதமான பண்டங்களுக்கான தேவையாகவும் தேவையின் அளவு விரிவடைகிறது. வருமான அதிகரிப்பு, வாழ்க்கைத் தரத்தில் உயர்வு ஆகியவைகளில் தொடர்ந்து தோன்றும் உள்ளுணர்ச்சிகளை வெளிப்படுத்தும் விளைவு (விளம்பர விளைவு) மக்கள் கிராமப் பகுதிகளிலிருந்து நகர்ப் புறங்களுக்கு இடமாறுவதன் விளைவாகத் தோன்றும் நுகர்வுப் பழக்கங்களின் மாற்றம் ஆகியவைகள் யாவும் ஆடம்பரப் பண்டங்கள், பாதி ஆடம்பரப் பண்டங்கள் ஆகியவைகள் அதிகரித்துக் கொண்டு செல்லும் செலவுகளின் மூலம் தெரிகின்றது. மக்களின் வயது அமைப்பும் நுகர்வு நிலைகளில் அதிகமான பங்கு வகிக்கிறது. மிக வேகமாகப் பெருகிவரும் மக்களைக் கொண்டுள்ள

[1] *Economic Bulletin for Asia and the Far East*, U.N., June, 1959, p.41.

தொரு நாடு உண்மையிலேயே மிகவும் 'இளமையானது' என்று சொல்லப்பட வேண்டும். அத்தகைய நாட்டில் குறைவான வயது வரம்புகளில் இருக்கும் மக்கள் தொகையின் அளவு மக்கள் பெருக்க விகிதம் நிலையானதாக இருக்கும். நாட்டில் உள்ள அளவைக் காட்டிலும் அதிகமான அளவில் இருக்கும். ஒரே தனிநபர் வருமான நிலையில் தராதரமாக இளமையான நிலையில் உள்ள நாடு முதுமையான மக்களைக் கொண்டுள்ள நாட்டைக் காட்டிலும் அதிகமான வருமானப் பங்கை உணவுக்காகச் செலவிடும் இதை இன்னொரு வகையில் குறிப்பிட்டால் குறைவான வயது வரம்பில் உள்ள மக்களின் எண்ணிக்கையின் அதிகரிப்பு மொத்த மக்களில் உற்பத்திப் பணியில் ஈடுபடத்தக்க மக்களின் அளவைச் சிதைத்து நுகர்வை அதிகரிக்கச் செய்கிறது. இதற்கு மாருக, உற்பத்தி செய்யும் பிரிவினரைச் சார்ந்திருக்க நேர்ந்தாலும்கூட முதுமை யான மக்களின் அளவில் தோன்றும் அதிகரிப்பு சேமிப்புக்கு எதிரிடையாகச் செயல்படாமல், சேமிக்கும் எண்ணத்தையும் போக்கையும் உறுதிப்படுத்துவதாக இருக்கிறது என்ற கருத்து சில சமயங்களில் முன் வைக்கப்படுகிறது. இது ஒரு கற்பனையான கருத்துதான். இக் கருத்தை ஆதரிப்பதற்கான புள்ளிவிவரச் செய்திகள் முழு அளவில் இல்லை.[1]

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அடிப்படையான நுகர்வுப் பண்டங்களுக்கான தேவை அதிகமாக இருக்கும். அதே நேரத்தில் இத் தேவைகளை நிறைவு செய்யத்தக்க வழி முறைகள் மிகவும் அரிதானவைகளாக இருக்கின்றன. ஒரு நாட்டு மக்களை அந் நாடு தாங்கக் கூடிய சக்தியை உள்நாட்டு உணவு உற்பத்தியின் அளிப்பு பொதுவாகச் சுட்டிக் காட்டுகிறது. இவ் வழியில் பார்க்கும் போது குறைந்த வருமானமுடைய நாடுகள் உறுதியாக நன்மை பெற இயலாத நிலையிலேயே இருக்கின்றன என்பதை 1955-56 ஆம் ஆண்டிற்கான புள்ளிவிவரங்கள் தெளிவுபடுத்துகின்றன. ஐக்கிய அமெரிக்க நாடும், கனடாவும் உலக மக்களில் 6.8% அளவு மக்களைத்தான் கொண்டுள்ளன. ஆனால் உலகத்தின் மொத்த வேளாண்மைப் பண்டங்கள் உற்பத்தியில் 18.3% அளவை உற்பத்தி செய்கின்றன. இதைப்போன்ற புள்ளிவிவரங்கள் முறையே ஆஸ்திரேலியாவிலும் நியூசிலாந்திலும் 0.4%, 2.6% அளவாகவும், மேற்கு ஐரோப்பாவில் 11.0., 14.6% அளவாகவும் இருக்கின்றது. இதற்கு மாருகத் தூரக் கிழக்கு ஆசியாவும், மேற்கு ஆசியாவும் உலக மக்கள் தொகையில் 54.7 % அளவைப் பெற்றிருக்கின்றன. ஆனால் உலக வேளாண்மைப் பண்ட உற்பத்

[1] *Determinants and Consequences of Population Trends*, U.N., 1953, p. 218.

தியில் 34.3% அளவைத்தான் உற்பத்தி செய்கின்றன. ஏறத்தாழ 1920ஆம் ஆண்டுவரை நிகர ஏற்றுமதியாளராக இருந்த இந்திய நாடு இப்போது உணவில் நிகர இறுக்குமதியாளராக மாறிவிட்டது. இந்தியாவின் மக்கள் பெருக்க விகிதம் அந்த ஆண்டிலிருந்துதான் மிக வேகமாகப் பெருகத் தொடங்கியது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. ஏறத்தாழ ஆண்டு ஒன்றுக்கு 3 மில்லியன் டன் உணவுப் பொருளே எல்லா ஆண்டுகளிலும் இறக்குமதி செய்வதனுல், நாட்டிற்குப் மிகவும் இன்றியமையாத வகையில் தேவைப்படும் மூலதனப் பொருள்களே வேற்று நாடுகளிலிருந்து இறுக்குமதி செய்யப்படுவதற்காகப் பயன்படுத்தத் தக்க அயல் நாட்டுச் செலாவணியில் பெரும்பகுதியை உணவுப் பொருள்கள் இறக்குமதிக்காகச் செலவிடப்பட வேண்டியுள்ளது. நாட்டின் உணவில் தன்னிறைவு பெறவேண்டிய அவசியம் நன்கு உணரப்பட்டுள்ளது. ஆனுல் எடுக்கப்படும் முயற்சிகளுக்கேற்ப அல்லது மேற்கொள்ளப்படும் செலவுகளுக்கு ஏற்ப உணவு உற்பத்தி இருப்பதில்லே. இச் சிக்கல் மிக விரைவில் அச்சுறுத்தக் கூடியதாக மாறப்போகிறது. இந்தியா போன்ற நாடு ஒன்றில் உணவிற்கான சராசரி வருமானத்தேவை நெகிழ்ச்சி 0.7% அல்லது 0.8% ஆக இருக்கிறது. பொருளாதாரத்தில் வளர்ச்சி பெற்ற நாடுகளில் உள்ளதோடு ஒப்பிடும்போது இது மிகவும் அதிகமான தாகும். அதிகரித்துவரும் மக்கள்தொகை, நகர்ப்புறமயமாதல், தனிநபர் வருமானத்தில் தோன்றும் அதிகரிப்பு ஆகியவைகள் உணவுப் பக்கத்தைப் பொறுத்த மட்டிலும் சிக்கலே அதிகப்படுத்தா விட்டாலும்கூட, நிலைநிறுத்ததுவதற்கு உதவி செய்பவைகளாகும். பிறப்புவள விகிதம் நிலேயாக இருக்கும் என்றும், ஆண்டு வருமானம் 1% அளவில் அதிகரிக்கும் என்றும் கருதிக் கொண்டால், 1980ஆம் ஆண்டில் இந்தியாவின் மக்கள்தொகை 78% அளவுக்கு அதிகரிக்கும் என்றும், உணவின் தேவை 118% அளவுக்கு அதிகரிக்கும் என்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. ஆண்டு ஒன்றுக்கு 3% அளவுக்கு வருமானம் அதிகரிக்கும் என்று கருதிக்கொண்டால் உணவின் தேவையானது 200% அளவு அதிகரிக்கும்[1]. எனவே திட்டக் கமிஷன் குறிப்பிட்டுள்ளதுபோல, இந்தியாவின் உணவுச் சிக்கலானது தேவை, அளிப்பு ஆகியவைகளுக்கிடையில் நிலவும் தற்காலிகமான வேறுபாட்டினுல் தோன்றியிருக்கக் கூடிய தொன்றல்ல. மாறுக, தொடர்ச்சியாகப் பெருகிவரும் மக்களினுல் உணவின் அளிப்பின்மீது உள்ளதென்பது மிகவும் தெளிவாகத் தெரிகிறது.[2]

[1] *Economic Bulletin for Asia and the Far East*, U.N., June, 1959, p.30, Table 26.

[2] *The First Five Year Plan* 1951, Planning Commission, Government of India, New Delhi, pp. 78-81.

பொறிவழித் தொழிலோடு ஒப்பிடுகையில், மிகவும் குறைவான அளவில் வருமானத்தைத் தோற்றுவிக்கும் சக்தியைக் கொண்டுள்ள வேளாண்மைத் துறையில் தொழிலாளர்கள் சேர்ந்திருப்பதனுல் தோன்றக்கூடிய இன்னெரு குறிப்பிடத்தக்க சிரமத்தையும், பொருளாதார வளர்ச்சி என்ற நோக்கிலிருந்து பார்க்கும்போது இந்தியா போன்ற ' மிகவும் அதிகமான அளவில் உணவைச் செலவழிக்கக் கூடிய பொருளாதாரம்' எதிர்நோக்க வேண்டியுள்ளது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் நுகர்வுத் தேவைகள் அதிகமான அளவில் இருக்கின்றன. அதே நேரத்தில் உழைப்பாளர்களின் உற்பத்தித்திறன் மிகவும் குறைவாகவும் இருக்கிறது. எனவே இந் நாடுகளில் வளர்ச்சி அடைந்த நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் அதிகமான அளவு மக்கள் உணவு, வேளாண்மைப் பொருள்கள் ஆகியவைகளை உற்பத்தி செய்வதில் ஈடுபடுத்தப்படுகிருர்கள். நாடுகள் மேற்கொள்ள வேண்டிய செலவுகளின் அளவுகளைப் பற்றியதொரு கருத்தை கோல், ஹோவர். ஆகிய நிபுணர்கள் செய்த மதிப்பீடுகளிலிருந்து பெறலாம்.[1] 1981–க்குள் 6-13 வயது வரம்பில் உள்ளவர்களில் 100–க்கு 100 பேர்களுக்கும் கல்வி வசதி தரவேண்டும் என்று இந்தியப் பேரரசு எட்டு ஆண்டுக்கால அடிப்படைக் கல்வி முறைத் திட்டம் ஒன்றை மேற்கொண்டுள்ளது. இவ் வயது வரம்பில் உள்ள மக்களின் அளவு 1981-ல் 43 மில்லியன் அளவாகவும் 1986-ல் 67 மில்லியன் அளவாகவும் அதிகரிக்கும் என்றும் அப்போது கட்டாயக் கல்விக்கான செலவு ரூ 20 பில்லியன் முதல் ரூ 25 பில்லியனுக இருக்கும் என்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. 1656, 1986 ஆகிய ஆண்டுகளுக்கிடையில் மொத்த மக்கள் தொகையில் நகர்வாழ் மக்களின் அளவு 18.6%-லிருந்து 30%-க்கும் அதிகமாக இருக்கும் என்று மதிப்பிடப்பட்டுள்ளதால் 1956–1986 ஆகிய முப்பதாண்டுகளில் வீடுகள் கட்டுவதற்கான செலவுகள் ரூ. 40.7 மில்லியன் அளவிற்கு இருக்கும் என மதிப்பிடப்பட்டுள்ளது இந் நிபுணர்களின் கருத்துப்படி குறைத்துக் கூறப்பட்ட எடுகோள்களை மேற்கொண்டாலும்கூட, 1981-86 ஆகிய ஐந்தாண்டுக் காலத்தில் கல்வி, வீடு கட்டுதல் ஆகியவைகளுக்கான செலவு ஆண்டு ஒன்றுக்கு 6 பில்லியன் அளவுக்கும் அதிகரிக்கும். இது நாட்டு வருமானத்தில் 2% அதிகமாகின்றது. 1959–ல் இருந்ததைக் காட்டிலும் இரண்டரை மடங்காகிறது; இது ஏறத்தாழ மொத்த முதலீட்டில் 15% முதல் 20% எனலாம்.

[1] Coale, Ansley J., and Edgar M Hoover, *Population Growth and Economic Development in Low Income Countries*, Oxford, India, 1959, pp. 248-54.

## வயது அமைப்பும் சார்புப் பளுவும்
(Age Composition and Dependency Load)

வளர்ச்சி பெற்ற நாடுகளோடு ஒப்பிடுகையில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் குறைந்த வயது வரம்பிலுள்ள மக்களின் அளவு அதிகமானதாகவும் பொருளாதார அடிப்படையில் வலிவுள்ள பிரிவினராகிய 15-59 வயது வரம்பில் உள்ளவர்களின் அளவு மிகக் குறைவானதாகவும் இருப்பது, பொருளாதாரத்தின் உற்பத்தி முயற்சிக்கானதொரு தடையாக இருக்கிறது. 15 வயதுக்குக் குறைவாகவும் 60 வயதுக்கு அதிகமாகவும் உள்ள மக்கள் பொதுவாக உற்பத்திக்குத் தங்கள் பங்கை ஆற்றுவதில்லை என்பதோடு, எஞ்சியுள்ள மக்களைச் சார்ந்திருப்பவர்களாகவும் இருக்கிறார்கள். 15 வயதுக்குக் குறைவான மக்களின் எண்ணிக்கை வளர்ச்சி பெற்ற நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் அதிகமான அளவில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இருக்கிறது ஆனால் 60 வயதைக் கடந்தவர்களைப் பொறுத்தவரை நிலைமை தலைகீழாக இருக்கிறது. இங்கிலாந்து நாட்டில் 60 வயதுக்கும் அதிகமானவர்களின் அளவு மொத்த மக்கள் தொகையில் 1952–ல் 11%-லிருந்து 1982-ல் 16% அளவுக்கு அதிகரிக்கும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. 1952–ல் அந்த நாட்டில் 65 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு உற்பத்தி செய்யும் (15-59) வயது வரம்பில் உள்ளவர்களின் விகிதம் 6 : 1 என்றிருந்தது. ஆனால், அது 1982-ல் 4:1 என்று குறையும். 15 வயதுக்குக் குறைவானவர்களின் பகுதி நிலையானதாக இருக்குமாதலால் நுகர்வோர்களின் எண்ணிக்கையோடு ஒப்பிடும்போது உற்பத்தியாளர்களின் எண்ணிக்கை 2.9% அளவுக்குக் குறையும் என்றும், அது 3 முதல் 4 வரையிலான விழுக்காடு அளவுக்கு வாழ்க்கைத் தரத்தைக் குறைத்துவிடுமென்றும் மதிப்பிடப்பட்டிருக்கிறது.[1] வயதான மக்களின் தனி நபருக்குச் செலவிடப்படும் தொகையைக் காட்டிலும் ஒரு குழந்தைக்குச் செலவிடப்படும் தொகை மிகவும் குறைவாக இல்லாவிட்டாலும்கூட 15 வயதுக்கு உட்பட்டவர்களின் எண்ணிக்கை மிகவும் அதிகமானதாக இருக்கும் என்ற எளிய காரணத்தால் 15 வயதுக்குக் குறைவான உறுப்பினர்களின் எண்ணிக்கையில் தோன்றும் உயர்வினால் தோற்றுவிக்கப்படும் சார்புப் பளுவோடு ஒப்பிடுகையில் முதுமை பெற்ற நபர்களின் அதிகரிப்பினால் தோற்றுவிக்கப்படும் சார்ப்புப் பளு மிகமிகக் குறைந்ததாகும். மக்களின் நுகர்வோடு ஒப்பிடுகையில் அவர்கள்

[1] Hopkins, W. A. B., 'The Economics of an Aging Population,' *Lloyds Bank Review*, January, 1953, p. 33.

உற்பத்திக்கு ஆற்றும் பங்கின் அடிப்படையில் சார்புப் பளு கணக்கிடப்படுகிறது. உற்பத்தி செய்யும் வயதில் உள்ள வளர்ச்சி பெற்றதொரு நபருக்கான நுகர்வுத் தேவையை ஒன்றுக்குச் சமம் என்றும், குழந்தையின் நுகர்வுத் தேவையை மூன்றில் ஒரு பங்கு என்றும், மூப்படைந்த நபர் ஒருவரின் நுகர்வுத் தேவையை இரண்டில் ஒரு பங்கு என்று கணக்கிடுவோமானால் 42% சிறுவர்களையும், 3% முதியவர்களையும், 55% உற்பத்தி வயதில் உள்ள வயது வந்தவர்களையும் கொண்டுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாட்டில் உற்பத்தி வயது வரம்பில் உள்ள வயது வந்தவர்களில் ஒவ்வொரு 100 நபர்களுக்கும் 128 நுகர்வோர் சமாகும் என்ற விகிதம் இருக்கிறது. (23% சிறுர்கள். 67% வயது வந்தவர்கள், 10% முதியவர்கள் என்று) வயது அமைப்பு உற்பத்திக்குச் சாதகமாக அமைந்துள்ளதொரு முன்னேறிய நாட்டில் இதற்குச் சமமான விகிதம் ஒவ்வொரு 100 நபர்களுக்கும் 119 ஆகும். மற்றுமொரு வழியில் பார்த்தால், மேற்கு ஐரோப்பாவில் உள்ள தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளில் 3 உழைப்பாளர்களைச் சார்ந்திருப்பவர்களாக 2 நபர்களும், ஆசியாவில் உள்ள தொழில் நாடுகளில் பெரும்பாலனவற்றில் இவ் விகிதம் 3 : 4 என்றும் இருக்கின்றது.

மேற்குறிப்பிடப்பட்டவைகளிருந்து குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள மூலவளங்களின் பெரும்பகுதி மூலதன ஆக்கத்திற்காகப் பயன்படுத்துவதிலிருந்து திருப்பி விடப்பட்டு மக்களை ஆக்குவதற்காகப் பயன்படுத்தப்படுகிறது என்பதைக் காணலாம் ஆனால், தொழில் மயமான நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் அதிகமான அளவினதாகக் குழந்தைகளின் இறப்பு வள விகிதம் இருக்கின்ற காரணத்தால், மூலவளங்கள் வேறுவழிப் படுத்தப்படுவதை மட்டுமல்லாமல் மூலவளங்கள் வீணுவதையும் இது குறிக்கிறது. 15 வயதை அடைவதற்கு முன்பே மரித்துவிடும் குழந்தைகளைப் பராமரிப்பதற்கான செலவு இந்தியாவின் நாட்டு வருமானத்தில் 3% என்றும்,இங்கிலாந்தில் 0.1% என்றும் மதிப்பிடப் பட்டுள்ளது. இவ்வாறு வீணுக்கப்படும் இந்த நாட்டு வருமானப் பகுதியானது முதலீடுகளில் பயன்படுத்தப்படுமானுல் மூலதன ஆக்கம் ஏறத்தாழ 50% அளவுக்கு அதிகரிக்கும்[1] ஆனுல், நாட்டு வருமானத்தில் 15 வயதுக்குக் குறைவானவர்களுக்காகச் செலவிடப்படும் அளவு அதிகமானதாக இருந்தாலும் தனிநபர் வருமானம் மிகக் குறைவாகவே இருக்கின்ற காரணத்தால் ஒரு குழந்தைக்கான செலவுத் தொகை மிகவும் குறைவானதாகவே இருக்

[1]Villard, Henry H, *Economic Development*, Rinehart, New York, 1959, p. 196

கிறது. இதன் காரணமாக, வளர்ச்சி பெற்ற நாடுகளில் உள்ள சிறுவர்களோடு ஒப்பிடுகையில் வாழ்க்கைக்குத் தங்களைத் தயார் செய்துகொள்வதில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள சிறுவர்கள் மிகவும் பாதிக்கப்பட்டவர்களாக இருக்கிறார்கள். அதிகமான குழந்தைகள் இருப்பதனால் காணப்படும் சார்புப் பளுவைக் குறைப்பதற்காகக் குறைந்த வயதிலேயே குழந்தைகளை வேலைக்கு அனுப்பி அவர்களால் முடிந்ததைக் குடும்ப வருமானத்திற்குக் கொடுக்கக்கும்படியாகச் செய்வது மேற்குறிப்பிட்டதைவிட இழிந்த நிலையாகும். இதன் விளைவாகப் பொருளாதாரம் முழுமையிலுமே குறைந்த வேலையும் குறைந்த தனிநபர் உற்பத்தியும் இருக்கிறது இதனால் மிகவும் கவலை தரத்தக்கதானதொரு சமுதாயப் பொருளாதார விளைவு தோன்றுகிறது அதாவது தங்களது சிந்தனை, உடல் ஆகியவைகளை நல்ல முறையில் ஆக்கிக் கொள்ளுவதற்கான நல்வாய்ப்புகளைத் தடைசெய்து சிறுவர்களைத் தகுதியான பருவம் அடைவதற்கு முன்பே வேலைகளுக்கு அனுப்பிவிடுவது. எதிர்காலத் தொழிலாளரின் சந்ததியினரை வீணான முறையில் ஏமாற்றுவதற்கு ஒப்பாகும். மக்கள் தொகையைப் பற்றிய ஐக்கிய நாடுகளின் ஆய்வு ஒன்று கீழ்க்கண்டவாறு உறுதியானதொரு கருத்தைக் குறிப்பிட்டுள்ளது 'பசியின் காரணமாக ஒவ்வொரு ஆண்டிலும் கோதுமை விளைவதற்கு முன்பே அதை அறுவடை செய்யும் உழவர்களின் நிலையைப் போல இந்நிலை இருக்கிறது.'[1]

## மக்கள் பெருக்கமும் வேலையின்மையும்

(Population Growth and Unemployment)

நடப்பில் உள்ள நில மூலவளங்களோடும் மூலதன மூலவளங்களோடும் ஒப்பிடுகையில் மக்கள் அதிகமாக இருக்கிறார்கள் என்பதோடு மட்டுமல்லாமல், மக்கள்தொகை வளர்ச்சியும் உச்சநிலை அடைந்துவிடுகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள பிறப்பு, நோய் முதலானவை சமுதாயநிலைச் சிக்கல்களாகும் மேற்குறிப்பிட்ட பொருளாதாரத்தில் உற்பத்தி செய்யத்தக்க மூலவளங்களை அதிகரிப்பதில் உள்ள இடர்களின் கரணமாக மக்கள் அழுத்தமானது, வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் தெரியத்தக்க வேலையின்மை அளவு அதிகரிப்பதால் பிரதிபலிக்கிறது வருமானம் அதிகரிக்கும்போதே வேலையின்மையும் அதிகரிக்கும் முரண்பாடு காணப்படுகிறது. 1953ஆம் ஆண்டு இறுதியில் மேற்கொள்ளப்பட்ட நாட்டு மாதிரி உசாய்வின்படி (National Sample Survey) அந் நேரத்தில் நாட்டில் இருந்த

[1] *Determinants and Consequences of Population Trends*, U.N., 1953, p. 265.

நகர்ப்புற வேலையின்மையின் மொத்த அளவு 5 மில்லியன் ஆகும். அப்போது மொத்த மக்களில் உழைப்பாளர்களின் பகுதி 35% இருந்தது என்றும், இதில் 32%-க்குச் சிறிது அதிகமான விழுக்காட்டு அளவினர் ஆதாயம் பெறத்தக்க வகையில் ஈடுபட்டிருந்தனர் என்றும், 3%-க்குச் சற்றுக் குறைவான அளவினர் வேலையின்மை நிலையிலிருந்தனர் என்றும் தெரிகிறது. ஆதாயம் தரத்தக்க வகையிலான வேலைகளில் ஈடுபட்டிருப்பவகளில் $\frac{3}{4}$ பங்கிற்கும் குறைவான அளவினர் வேலை நிறைவு நிலையிலிருந்தனர் என்றும் $\frac{1}{4}$ பங்குக்குச் சிறிது அதிகமான அளவில் உள்ள மிஞ்சியிருப்போர் பல நிலைகளிலான குறைந்த வேலைகளில் ஈடுபட்டிருந்தனர் என்றும் தெரிந்தது. மிக மோசமான நிலையிலான குறைந்த வேலைகளில் உள்ள மக்கள் உண்மையிலேயேவேலையின்மையுடையவர்கள் எனக் கருதப்பட்டால் வேலையில்லாதவர்கள் அல்லது மிக மோசமான நிலையிலான குறைந்த வேலையில் உள்ளவர்களின் அளவு 5.8% அளவாக இருப்பதைக் காணலாம். முதல் ஐந்தாண்டுத்திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்களில் இருந்த ஆண்டுகளில் வேளாண்மைத்துறையில் மூன்று மில்லியன் மக்களுக்கும், வேளாண்மையற்ற பிற துறைகளில் பன்னிரண்டு மில்லியன் மக்களுக்கும் அதிகப்படியான வேலைகள் தரப்பட்டுள்ளன என மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது ஆண்டொன்றுக்கு மக்கள் தொகையில் ஏற்படும் அதிகத்திற்கான மதிப்பீட்டின் அடிப்படையில் மொத்த உழைப்பாளர்களின் அளவு 1951-ல் 139.6 மில்லியன் அளவிலிருந்து 1981-ல் 238.3 மில்லியன் அளவாக அதிகரிக்குமென்று கணக்கிடப்பட்டுள்ளது அதாவது ஆண்டு ஒன்றுக்கு உழைப்பாளர்களின் அளவில் 3.3 மில்லியன் அளவு அதிகமாகும் என்று கணக்கிடப்பட்டுள்ளது 1951-முதல் 1981 வரையிலான முப்பது ஆண்டுகளில் தோன்றக்கூடிய உழைப்பாளர்களின் அளவு இப்போது இங்கிலாந்தில் உள்ள மக்கள் தொகையைப்போல இரண்டு மடங்காகவும், ஐக்கிய அமெரிக்க நாட்டில் தற்போது வேலையில் ஈடுபட்டிருக்கும் மக்களைப்போல ஒன்றரை மடங்காகவும் இருக்கும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட கால முடிவில் ஏற்கெனவே வேலையற்றிருப்போரின் எண்ணிக்கை 8 மில்லியன் என மதிப்பிடப்பட்டுள்ளது இந்த 8 மில்லியன் மக்களையும் இயற்கையாக உழைப்பாளர் பகுதியில் சேரக்கூடியவர்களோடு சேர்த்துக் கணக்கிட்டால், 1961-81 ஆகிய காலத்தில் அதிகப்படியாகத் தோற்றுவிக்கப்படக்கூடிய வேலைகளில் எண்ணிக்கை 10.8 மில்லியனாக இருக்கும் இந்த 1 மில்லியன் தொழிலாளர்களில் மில்லியன் தொழிலாளர்கள் தொழில்களினால் ஈர்க்கப்படவேண்டும் . மில்லியன் தொழிலாளர்கள் வேளாண்மைத் துறையில் ஈர்க்கப்படவேண்டும்

குறைந்த வளர்ச்சியுடைய நாடு ஒன்றில் அமைப்பினால் (Structural) தோன்றக்கூடிய இந்த அளவில் உள்ள வேலையின்மை வளர்ச்சி பெற்ற நாடுகளின் வேலையின்மையிலிருந்து வேறுபட்டிருக்கிறது. வளர்ச்சி பெற்ற நாடுகளில் உள்ள வேலையின்மைக்கு உறுதித் தேவையில் உள்ள பற்றுக்குறை (deficiency in effective-demond) இன்றியமையாத காரணமாக இருக்கிறது. ஆனால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உழைப்புடன் செயல்படத்தக்க மூலவளங்களின் பற்றுக் குறையால் வேலையின்மையும் மறைமுகமான வேலையின்மையும் தோற்றுவிக்கப்படுகின்றன. இலக்கண விளக்கப்படி பார்த்தால். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மூலதனப் பற்றுக் குறை வளர்ச்சி பெற்ற நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் குறைவானது. நாட்டு வருமானப் பங்கை ஆண்டு ஒன்றுக்கான சேமிப்பாகவும், முதலீடாகவும் பெறுமளவிற்கு அவை மிகக் குறைந்த வருமானங்களை உடைய நாடுகள் எனலாம். இஃதோடு வளர்ச்சியடைந்த நாடுகளைவிட மக்கள்தொகை விகிதம் மக்கள்தொகைப் பெருக்கம் ஆகியவற்றில் உயர்ந்திருப்பதையும், வளர்ச்சி நிறைந்த நாடுகளின் பண்புகள் எனலாம். இதன் விளைவாக, இந்த நாடுகளில் உள்ள மக்கள் மிக வேகமான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேண்டிய அவசியத்தை உணர்ந்து அந்த இலக்கைப் பெறுவதற்குத் தேவையான முயற்சிகளை மேற்கொள்ள ஆயத்தமாக இருக்கும்போது, வேலையற்றிருப்போரின் மிக அதிகமான எண்ணிக்கையை முயற்சியின் துவக்கநிலையிலேயே எதிர்நோக்க வேண்டியிருக்கிறது. ஏற்கனவே வேலையற்றிருப்போரின் எண்ணிக்கை வரலாற்றுக் காரணங்களால் தோன்றியது. இந்திய நாட்டின் குடிசைத் தொழில்கள் புகழ் பெற்றுப் பிரபலமாகியிருந்தபோதும், அதிகமான பிறப்பு விகிதத்திற்குச் சமமாக இறப்பு விகிதமும் அதிகமானதாக இருந்தபோதும், மக்கள் பெருக்கம், மூலதன ஆக்கம் ஆகியவைகளுக்கிடையே சரியானதொரு இசைவு இருந்தது. வெளிநாட்டுப் போட்டியின் காரணமாக இக் கைத்தொழில்களில் தோன்றிய சிதைவு. உள்நாட்டு மூலதன ஆக்கத்தை மிக மோசமாகப் பாதித்தது. தவிர, அமைதி, சட்டம் ஒழுங்கு ஆகியவைகளை ஏற்படுத்தியதும் நன்னிலையிலான மருத்துவ வசதிகள். சுகாதார வசதிகள் ஆகியவைகளும் மிகவும் தொல்லை தரக்கூடிய வகையில் மிக உயர்ந்த மக்கள் பெருக்க விகிதத்தைத் தோற்றுவித்தன.

## வளர்ச்சியடைந்த நாடுகளோடு ஒப்புமை காணல்
(Comparison with Developed Countries)

இன்றுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கான பெருந்தடையாக மக்கள் அழுத்தம் அமைந்

திருக்கிறது என்பதை மேற்கண்ட பகுத்தாய்வு தெளிவுபடுத்துகிறது. எனவே, வளர்ச்சி அடைந்த நாடுகளில் சிலவற்றில் இருப்பதைப்போன்று மிகுதியான மக்கள் செறிவு குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இல்லை. வளர்ச்சி பெற்ற நாடுகள் தங்களின் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் மிக வேகமாக அதிகரித்துவரும் மக்கள் தொகையினால் நன்மை பல பெற்றிருக்கின்றன. எனவே, வளர்ச்சி குறைந்த நாடுகளின் மக்கள் பெருக்கப் பிரச்சனையானது மிகவும் மிகைப்படுத்தப்படுகிறது என்பன போன்ற வாதங்கள் பொருந்தாதவைகளாகத் தென்படுகின்றன. அர்ஜென்டைனா, ஆஸ்திரேலியா, கனடா, ஐக்கிய தென் அமெரிக்கா போன்ற சில நாடுகள் அண்மைக் காலத்தில் மக்கள் பெருக்கத்தினால் மிக வேகமாக வளர்ச்சி பெற்றன என்பது உண்மைதான்.[1] குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பிரேசில், பர்மா, ஆப்பிரிக்காவில் கோல்டு கோஸ்ட் ஆகியவைகள் ஏராளமான இயற்கை மூலவளங்களுடன் செறிவற்ற மக்களையும் பெற்றிருக்கின்றன. எனவே, அவைகள் முன்னேறுவதற்கான உள்ளாற்றல்கள் மிகவும் அதிகமாக இருக்கின்றன. ஒரு சதுர மைலுக்கான மக்களின் எண்ணிக்கை பிரேசிலில் 1 ஆகவும் கோல்டு கோஸ்ட்டில் 49 ஆகவும் பர்மாவில் 73 ஆகவும் இருக்கிறது. சாவே (Sauvey), டாயின் பீ (Toynbee), டியூப்ரீல் (Dupreel) போன்ற எழுத்தாளர்கள் மிகவும் வலியுறுத்திக் கூறிய நன்னிலையிலான அமைப்பும், தொழில் நுண்ணியல் முன்னேற்றமும், சமுதாய இடப் பெயர்ச்சி, தனிமனிதன் தொடர்புகளில் அதிகமான எண்ணிக்கை அளவு, சிந்தனை ஆற்றலின் தூண்டுதல்கள் பருப்பொருள் சார்ந்த முன்னேற்றத்திற்கு உதவி செய்யத்தக்க மதிப்புகளில் மாற்றங்கள் போன்ற நன்மை தரத்தக்க விளைவுகளில் சிலவற்றை, இந்நாடுகளில் தோன்றும் அதிகரிக்கும் மக்கள் தொகை தோற்றுவிக்கலாம். ஆனால், இங்கும்கூட, மக்கள் பெருக்கமானது மொத்தத்தில் நன்மை தரத்தக்கதாக இருப்பினும் மக்கள் பெருக்க விகிதங்களில் உள்ள வேறுபாடுகள், பொருளாதாரத்தின் வளர்ச்சி விகிதத்தில் விளைவை ஆற்றக் கூடியவைகளாகும். இப்போது கோல்டு கோஸ்ட், பர்மா ஆகிய நாடுகளில் மக்கள் ஆண்டு ஒன்றுக்கு முறையே 1.5%, 1.2% என்ற அளவுகளில் அதிகரித்துக்கொண்டுவருகிறார்கள். ஆனால், பிரேசில் நாட்டில் இவ் விகிதம் 2.2%, 2.6% ஆகியவைகளுக்கிடையிலானதாக இருக்கிறது. எனவே, பிரேசில் நாட்டில் ஏராளமான இயற்கை மூலவளங்கள் இருந்தாலும்கூட, அந்நாட்டு மக்கள் குறைந்த வேகத்தில் அதிகரித்து இருந்திருப்பார்களானால் பொருளாதார

[1] *Processes and Problems of Industrialisation in Underdeveloped Countries*, U N., 1953, pp. 15-18.

முன்னேற்ற விகிதம் இப்போது இருப்பதைக் காட்டிலும் அதிகமாக இருந்திருக்கும் என்று தெரிகிறது.[1]

ஆனால், உலகத்தில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பாலான நாடுகள் அமித மக்கள்தொகையைப் பெற்றிருப்பதோடு, மக்களின் எண்ணிக்கை அதிகரிப்பு விகிதத்தில் உயர்வையும் கொண்டிருக்கின்றன. இந் நாடுகளில் பல அண்மைக் காலத்தில்தான் காலனி நிலையிலிருந்து தோன்றின. அஃதோடு தங்களின் பொருளாதாரங்களை மிக விரைவாக நன்கமைத்துக் கொள்ளும் விழிப்புணர்ச்சியைப் பெற்றிருக்கின்றன. அவைகளின் உள்ளாற்றல்களைப்பற்றி அவைகள் நன்கு உணர்ந்துள்ளன. அஃதோடு மிகவும் பேரார்வம் மிக்க வகையிலான பொருளாதார வளர்ச்சித் திட்டங்களின் வாயிலாகச் சென்றுகொண்டிருக்கின்றன. அவைகளின் பொருளாதார வரலாற்றின் மிக இன்றியமையாத காலமாகிய இதே காலத்தில் அந் நாடுகளின் மக்கள் தொகையில் குறிப்பிடத்தக்க வகையில் மேல் நோக்கிய போக்கு இருக்கிறது. அது அவர்களின் பொருளாதார வளர்ச்சிக்கான பெரும் தடையாக, பெரும் சுமையாக நின்று அச்சுறுத்துகிறது. எகிப்து, ஜாவா, இந்தியா, சீனு ஆகிய நாடுகள் இவ் வகையைச் சார்ந்தவை. ஒரு சதுர மைலுக்கான மக்கள் செறிவு எகிப்தில் 1500 ஆகவும், ஜாவாவில் 1009 ஆகவும், இந்தியாவில் 293 ஆகவும், சீனுவில் 156 ஆகவும் இருக்கின்றது. ஆண்டு ஒன்றுக்கான அதிகரிப்பின் விழுக்காடு விகிதம் ஏறத்தாழ 2 ஆக அல்லது ..க்கும் அதிகமானதாக இந் நாடுகளில் இருக்கின்றது. மக்கள் தொகையில் தோன்றியிருக்கும் குறிப்பிடத்தக்க அளவிலான அதிகரிப்புக்குக் காரணம் நன்கு தெரிந்ததுதான். இறப்பு விகிதம் மிக வேகமாகச் சரிதலும் பிறப்பு விகிதம் இதற்கு மாறுக நிலையாக அல்லது அதிகரித்துக்கொண்டு செல்வதும்தான் இதற்கான காரணங்களாகும். அண்மைக் காலத்தில் உலகத்தில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிலும் இறப்பு விகிதத்தில் பேரளவில் தோன்றியுள்ள இறக்கத்திற்குக் காரணமாக, வேகமாகப் பரவும் பரவலான நோய்களைப் பெருமளவில் குறைந்த செலவில் கட்டுப்படுத்துவதற்கான நவீன பொதுச் சுகாதார, மருத்துவ அறிவைப் பயன்படுத்தியதுதான் என்று கூறப்படுகிறது. 1940–50 ஆகிய பத்தாண்டுக் காலத்தில் பியூர்டோரிக்கோவில் (Puerto Rico) இறப்புவிகிதம் 46% அளவுக்குக் குறைந்தது. இது பார்மோசாவில் 43% அளவிலும் ஐமைக்காவில் 2 % அளவிலும் அதிகரித்தது. இதே காலத்தில்

[1] *World Population and Resources*, (PEP 1955)., pp. 141-48.

சிலோனின் இறப்பு விகிதம் ஒரு 1000 நபர்களுக்கு 21.0-லிருந்து 12.6 ஆகக் குறைந்தது. குறிப்பிடத்தக்க அளவிலான மிகக் குறுகிய காலமான இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்குள் மேற்கு நாடுகளில் பெறப்பட்டிருக்கும் நிலைக்குச் சமமாக இறப்பு விகிதம் இந் நாட்டில் மிக வேகமாகக் குறைந்துவிட்டது. ஆனால், பிறப்பு விகிதம் எந்த விகிதத்திலும் இறங்காத காரணத்தால் ஆண்டு ஒன்றுக்கான மக்கள் பெருக்க விகிதமானது 2.7% என்ற அளவில் மிக அதிகமான அளவுக்கு உயர்ந்துவிட்டது. ஜப்பான் நிருவாகத்திலிருந்த தெய்வானில் (Taiwan) நன்னிலைப் படுத்தப் படாத இறப்பு விகிதம் ஒரு 1000 நபர்களுக்கு சராசரியாக 1906-1910 ஆண்டுகளில் 33.4%-லிருந்து 1941-43 ஆண்டுகளில் 18.5% ஆகக் குறைந்தது.[1] இப்போதுள்ள ஏழ்மை நாடுகள் பலவும், வளர்ச்சி பெற்ற நாடுகளின் இறப்பு விகிதத்தையும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பிறப்பு விகிதத்தையும் காட்டுகின்றன என்று சுட்டிக் காட்டப்படுகிறது.[2] இத்தகைய மாற்றத்தைப் பெற்றுவரும் நாடுகள் பலவற்றிலும் உள்ள நிலைமை இலங்கையின் நிலைக்கு ஒப்பானதாகவே இருக்கிறது. இந் நிலப் பகுதிகளில் உள்ள சமுதாய-பொருளாதார நிலைகளில் குறிப்பிடத் தக்க அளவிலான தீவிரமான மாற்றம் எதுவும் தோன்றினால் ஒழிய உடனடியான எதிர்காலத்தில் மக்கள் பெருக்க விகிதத்தில் எந்த விதமான குறிப்பிடத்தக்க குறைவையும் உண்டாக்க முடியாது என்ற மக்கள் பெருக்கப் போக்கின் தொடர்பாக இன்றியமை யாத கருத்தொன்றை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

வடமேற்கு ஐரோப்பாவில் உள்ள சில நாடுகளில் 18ஆம் நூற்றுண்டில் பதிவு செய்யப்பட்ட மிக உயர்ந்த விகிதம் 1000 நபர்களுக்கு 40 என்றுதான் இருந்தது. 1780-ல் டென்மார்க்கில் 34 ஆகவும், 1751-ல் ஸ்வீடனில் 39 ஆகவும், 1751-ல் நார்வேயில் 38 ஆகவும். இது இருந்தது. 1870ஆம் ஆண்டிற்கு முந்திய 100 ஆண்டுகளில் ஐக்கிய அமெரிக்க நாட்டில் பிறப்பு நோய் முதலான சமுதாயநிலை மாற்றம் மிக வேகமானதாக இருந்தது. தொழில் வளர்ச்சி, நகரங்களின் வளர்ச்சி, காலந்தாழ்த்தித் திருமணம் செய்தல் ஆகியவைகளின் காரணமாக இறப்பு விகித இறக்கத் தைக் காட்டிலும் மிக வேகமாகப் பிறப்பு விகிதத்தில் இறக்கம்

1 Coale, Ansley J., and Edgar, M. Hoover, *Population Growth and Economic Development in Low Income Countries* Oxford, India, 1959, p. 14.

2 Slesinger, Reuben E., 'Some Comments on Non-agricultulra Possibilities for Raising the Levels of Living of Underdeveloped Nations,' *American Economic Review, Papers and Proceedings*, May, 1956, p, 328.

காணப்பட்டது. இத்தகைய பிறப்பு வளக் குறைத்தலில், நகர் வாழ் மக்கள் கிராமங்களில் வாழ்ந்த மக்கள், தொழில்களைச் சார்ந்தவர்கள், வேளாண்மைப் பிரிவில் உள்ளவர்கள் ஆகிய. எல்லாப் பிரிவுமக்களும் பங்கு கொண்டனர்.[1] இதுதவிர, நிலத்தின்மீதான மக்கள் அழுத்தம் ஐரோப்பிய நாடுகள் சிலவற்றில் குறைவாகவே இருந்தது. 1950-ல் ஒரு சதுர மைலுக்கு இந்தியா 293 மக்களைக் கொண்டிருந்தது. 18ஆம் நூற்றுண்டு இறுதியில் பிரான்சும், இங்கிலாந்தும் முறையே 105, 115, மக்களைக் கொண்டிருந்தன. மேற்கு நோக்கி நிலப்பரப்பை விரிவாக்கியதால் அமெரிக்காவின் மக்கள் பெருக்கம் அதிக நன்மைகளைப் பெற்றன. மக்கள்தொகை மிக வேகமாகப் பெருகியதற்கு ஏற்ப, மேலைநாடுகள் புதிய நிலங்களைப் பெற்றன. நிலப் பற்ருக்குறை ஏற்படுவதற்கு முன்னுலேயே பிற மூலவளங்களை வளர்க்க முற்பட்டன. வேளாண்மைத் துறையில் தேவைபடாமலிருக்கும் மக்களுக்கு நல்ல வாய்ப்புகளைத் தருவதற்குப் போதுமான அளவிற்குத் தொழில்களும் வளர்ச்சி பெற்றிருந்தன[1]. இன்றைய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இருக்கும் தனிநபர் வருமானத்தைப் போன்று பல மடங்கு அதிகமான அளவான தனிநபர் வருமானத்தைப் பெற்றவைகளாகவும், தொழில் தலைமை வழியில் ஏற்கனவே மிக முன்னணியில் இருக்கக் கூடிய நிலையைப் பெற்றவைகளாகவும் தற்காலத்தில் உள்ள வளர்ச்சி பெற்ற நாடுகள் 18, 19ஆம் நூற்றுண்டுகளிலேயே இருந்தன என்பதையும் நன்கு நினைவிலிருத்திக்கொள்ள வேண்டும். தவிர, ஐரோப்பிய நாடுகளில் அன்று இருந்த எச்ச மக்களினுல் உண்டாகும் சிக்கலை. பிறநாடுகளுக்குக் குடியேற்றுதல் என்பதன் மூலம் மிகத்தெளிவாகத் தீர்த்து விடக்கூடிய வாய்ப்பு இருந்ததைப் போன்று வாய்ப்புகள் குறைந்த வருமானமுடைய அதிக மக்கள் தொகையைக் கொண்டுள்ள நாடுகளுக்குக் கிடைக்கவில்லை.

## மக்கள் தடையிலிருந்து விடுபடும் வழி
## (The way out of the Population Barrier)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பான்மையான நாடுகள் அதிக மக்கள் தொகையைக் கொண்டுள்ளன என்பதையும், பொருளாதார முன்னேற்றத்திற்கான பெருந்தடையாக மக்கள் அழுத்தம் இருக்கிறது என்பதையும், இத் தடை நீக்கப்படாவிடில் மூலதன ஆக்கத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும் எல்லா முயற்சிகளும் பயனற்றுவிடும் என்பதையும் பொருளாதார நிபுணர்களில் பெரும்பான்மையோர் ஒப்புக்கொள்கின்றனர். இந்த இலக்கைப்

[1] *Proceedings of the World Population Conference*, U·N. 1954, Summary of Report, pp. 128-129.

பெறுவதற்கான வழிமுறைகளைப் பொறுத்தமட்டிலும் அவர்களிடையே கருத்து மாற்றங்கள் இருக்கின்றன. தேவையான அளவுக்கு வருமானம் அதிகரிக்கப்படுமானால் பிறப்பு விகிதம் குறைந்துவிடும் என்றும், அந் நிலையை அடைந்த பின் வளர்ச்சி மிக எளிதாக இருக்கும் என்றும் ஒரு பிரிவினர் கருதுகிறார்கள். அதிகமான பிறப்பு, இறப்பு விகிதங்களால் ஏறத்தாழ நிலையான மக்கள் பெருக்க விகிதம், குறைந்த தனிநபர் வருமானம் ஆகியவைகளைக் கொண்டுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள், பிழைப்பூதிய அமைப்பின் அடிப்படையிலான மால்தாஸின் குறைந்த வேலைச் சமன்பாட்டு நிலையில் இருக்கின்றன என்று பேராசிரியர் ஹார்வி லீபென்ஸ்டீன் வாதிடுகிறார்,[1] தனிநபர் வருமானம், பிறப்பு விகிதம் ஆகியவைகளின் அடிப்படையில் அவர் வாதம் அமைகிறது. தவிர, குறைவான எண்ணிக்கையுடைய குழந்தைகள் இருப்பின் சமுதாயத்தில் உயருவதற்கான வாய்ப்புகள் அதிகமாக இருக்கிறது என்ற உண்மை சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்படின் அது தனிநபர் வருமானங்களில் உயர்வையும், சமுதாய நோக்கங்களில் ஒரு மாற்றத்தையும், குடும்பக் கட்டுப் பாட்டிற்கான வலுவான ஊக்கத்தையும் தோற்றுவிக்கும் என்ற டூமாண்ட் (Dumont) அவர்களின் நுண்துகளை ஈர்ப்புப் பொறி யாற்றலுடைமைக் (Capillarity) கொள்கையை ஏற்றுக்கொண்டு மேற்கோள் காட்டுகிறார். மக்கள் தொகையானது, குறிப்பிட்ட தொரு வருமானநிலைவரை வருமானத்தில் வளர்ந்து செல்லும் செயலாகவும், ஆனால் அந்த குறிப்பிட்ட நிலைக்கு மேல் செல்லும் போது, வருமானத்தில் குறைந்து செல்லும் செயலாகவும் இருக் கிறது என்ற எடுகோளின் அடிப்படையில் லீபென்ஸ்டீன் தனது வாதத்தைத் தொடருகிறார். வருமானம் மிகவும் குறைவாக இருக்கும்போது அதிகமான குழந்தைகள் வைத்திருப்பதனால் உண்டாகும் பயன்பாட்டோடு அவர்களுக்கான செலவுகளை ஒப்பிடும்போது செலவுகள் மிகவும் குறைவான அளவிலேயே இருக் கின்றன. இந்த நிலையில் இறப்பு வள விகிதம் அதிகமாக இருப்ப தால் நடைமுறையில் இருக்கக்கூடிய மக்கள் சக்தியைப் பாதுகாப் பதற்காக அதிகமான குழந்தைகள் தேவைப்படுகின்றனர். தவிர, குழந்தைகள் இளம் வயதிலேயே வேலைக்கு அனுப்பப்படுவதாலும், பொருளாதார வடிவத்தில் சிறு வயதிலேயே அவர்கள் பயனுள்ள உறுப்பினர்களாக மாறி விடுவதாலும் குழந்தைகளை வளர்க்கும் சுமை அதிகமான அளவிற்கு உணரப்படுவதில்லை. அடுத்த நிலையில், சமுதாய நோக்கங்கள் மாற்றமடைவதற்குச் சிறிது காலமாகு தலால் இறப்பு விகிதம் குறையும்போது பிறப்பு விகிதமும்

[1] Leibenstein, Harvey, *A Theory of Economic Demographic Development*, Princeton, 1954.

தொடர்ந்து குறைவதில்லை. இந் நிலையில் பிறக்கும் குழந்தைகளில் அதிகமான குழந்தைகள் உற்பத்திப்பருவம்வரை நன்கு பிழைத்திருக்க முடிகிறது. எனவே, குழந்தைகளைப் பராமரிப்பதற்கான செலவின் விகிதமாக உற்பத்திக்குக் குழந்தைகள் ஆற்றும் பங்கு அதிகரிக்கும். வருமானம்மேலும் அதிகரிக்கும்போது, உற்பத்திக்கும் வருமானத்திற்கும் தங்கள் பங்கை ஆற்றுபவர்கள் என்ற அடிப்படையில் குழந்தைகளுக்கான சிறப்புத் தன்மை குறைக்கப்படுகிறது. அதே நேரத்தில் குறைந்த எண்ணிக்கையிலான குழந்தைகளைப் பெற்றிருப்பதால் உண்டாகும் சமுதாயப் பொருளாதார நன்மைகள் குடும்பத்தின் அளவைக் குறைப்பதற்குச் சாதகமாகச் சமுதாய நிலைகளைத் தோற்றுவிக்கின்றன. இந் நிலையில் தனிநபர் வருமானம் அதிகமாக இருக்கும். தவிர, பிறப்பு விகிதம், இறப்பு விகிதம் ஆகிய இரண்டு விகிதங்களும் குறைவாக இருக்கும். அதனால் மக்கள் பெருக்க விகிதம் குறையும் அல்லது நிலையாக இருந்து விடும்.[1]

அதிக மக்களையும் குறைந்த வருமானத்தையும் கொண்டுள்ள நாடுகளின் இயல்பாக உள்ள குறைந்த வேலைச் சமன்பாட்டு நிலை, மேற்குறிப்பிட்ட முதலாவது, இரண்டாவது நிலைகளுக்குப் பொருந்துவதாகும். மிக அதிகமான அளவிலான வெளிநாட்டு மூலதனத்தை இறக்குமதி செய்தல் அல்லது தொழில் நுண்ணியலைச் சார்ந்த புதுமைகளைப் புகுத்துதல் அல்லது தொழிலாளர் தங்கள் நாட்டிலிருந்து வெளியில் இடம் பெயர்ந்து செல்லுதல் என்பதன் மூலம் தொடக்க நிலையிலான தனிநபர் வருமான அதிகரிப்பைத் தோற்றுவிப்பதன் வாயிலாக இந்தக் குறைந்த வேலைச் சமன்பாட்டை மாற்றியமைக்க முடியும். முதலாவதாக, முதலீட்டு அளவு அதிகரிப்பதன் மூலம் ஆண்டு தோறுமான மொத்த வருமானத்தில் அதிகரிப்பு, மக்கள் பெருக்க விகிதத்தில் அதிகரிப்பு ஆகிய இரண்டு சக்திகளையும் வருமானத்தில் தோன்றும் இத் தொடக்கநிலை உயர்வு செயல்படத் தூண்டி விடுகிறது. மக்கள் பெருக்க விகிதத்தின் உயர்வுப் போக்கினல். இம் மக்கள் பெருக்கம் இல்லாதிருந்தால் தனிநபர் வருமானம் எவ் வளவுக்கு அதிகரித்திருந்திருக்குமோ, அந்த அளவுக்கு உயர்வு இருக்காது. குறிப்பிட்டதொரு நிலையை அடைந்த பின் முதலீட்டு அளவிலும் தனிநபர் வருமான அளவிலும் தோன்றத் தக்க உயர்வுகளை மிக எளிதாக்கத்தக்க வகையில் மக்கள் பெருக்க விகிதத்தை அதுவே குறைத்து விடுவதற்குத் தேவையான அளவுக்குத் தனிநபர் வருமான உயர்வு தோன்ற வேண்டும் என்று

[1] Leibenstein, Harvey, *Economic Backwardness and Economic Growth*, John Wiley, New York, 1957, pp. 164-167.

வலியுறுத்தப்படுகிறது. இக் கோட்பாட்டின் மையக் கருத்து இது தான். இந்த நிலையை அடைவதற்கான கால அளவு, (a) சமன்பாட்டை மாற்றியமைக்கும் தொடக்க நிலையில் தோன்றும் வருமான உயர்வின் பரும அளவு, (b) தொடக்கத்தில் உள்ள மூலதன-உழைப்பு நிலை. அதாவது ஒன்றோடு ஒன்றை ஒப்பிடுகையில் அவற்றின் பரும அளவுகள், (c) மக்கள்தொகை பெருகிச் செல்லும் விகிதம் ஆகியவைகளைச் சார்ந்திருக்கிறது. தொடக்க நிலையிலான வருமான உயர்வு எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான அளவில் இருக்கிறதோ, மக்கள் பெருக்க விகிதம் எவ்வளவுக் கெவ்வளவு மெதுவானதாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு வேகமாக அந் நிலையை அடைய முடியும்.

மேலை நாடுகளாகிய எடுத்துக்காட்டுகளை லீபென்ஸ்டீன் அவர்களே தருகிறார். வருமான உயர்வில் தோன்றும் அதிகரிப்பே மக்கள் பெருக்கப் போக்கில் நேரிடையான விளைவைப் பெற்றிருக் கிறது என்பதே இவண் காணப்படும் முக்கியமான கூறு ஆகும். இதைக் காட்டிலும் சிறப்பானதொன்று உண்டு. அதாவது, (மால்தாஸின் எடுகோளுக்கேற்ப) வருமானத்தில் தோன்றும் மிதமான அதிகரிப்பு மக்கள் பெருக்க விகிதத்தை அதிகரித்து விடுகிறது. ஆனால், வருமானத்தில் குறிப்பிட்ட அளவுக்குமேல் தோன்றும் அதிகரிப்பு, மக்கள் பெருக்க விகிதத்தைக் குறைத்து விடுகிறது. ஆனால், உண்மை நிலவரத்தின்படி பார்க்கும்போது, குறைந்த வருமானமுள்ள நாடுகளில் உள்ள மக்கள் சிக்கலானது, எளிமையான கணிதச் சிக்கலாக இல்லை. அதற்கு மாறாக, பழக்க வழக்கங்கள், மரபுவழி நடவடிக்கைகள், சமுதாய நடவடிக் கைகள், மக்களின் விருப்பு வெறுப்புகள் ஆகியவற்றின் இயக்க விளைவுடைய மிகவும் சிக்கலான சமுதாயச் சிக்கலாக இருக்கிறது. எனவே, வருமான அதிகரிப்பு மட்டுமல்லாமல், சமுதாய நடவடிக்கைகள், பண்பாட்டு அமைப்புகள் ஆகியவற்றில் தோன்றும் மாற்றங்களும் மக்கள் பெருக்கப் போக்கில் நேரிடையான இயக்க விளைவுகளை உடையனவாக இருக்கின்றன. ஜப்பான் நாட்டில் அண்மையில் மக்கள் பெருக்க விகிதத்தில் ஏற்பட்ட உடனடி இறக்கம் பெரும்பாலும் குடும்பக் கட்டுப்பாடு, பிறப்புத் தடுப்பை அனுமதிக்கும் சட்டங்கள் ஆகியவைகளின் காரணமாகத் தோன்றியதே தவிர, பொருளாதார வளர்ச்சியினால் ஏற்பட்ட தல்ல.[1] பொருளாதார நிலைகளில் தோன்றும் முன்னேற்றம் குடும்பத்தைக் கட்டுப்படுத்துவதற்குத் தேவையான சமுதாய

[1] கடந்த 10 ஆண்டுகளில் குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டம் ஜப்பானின் பிறப்பு விகிதத்தில் பாதியளவைக் குறைத்துவிட்டது.

*Economic Bulletin for Asia and the Far East*, U. N., June, 1959, p. 3.

நாட்டங்களைத் தோற்றுவிக்கலாம். ஆனால், இது நிகழ்ந்தே தீரும் என்ற நியதி எதுவுமில்லை. நகர்ப் பகுதிகளில் உள்ள மக்கள் பெருக்க விகிதம் கிராமப் பகுதிகளில் உள்ள மக்கள் பெருக்க விகிதத்தைக் காட்டிலும் குறைவாக இருப்பதற்கான காரணம் அங்குள்ள சமுதாய நிலைகளில் உள்ள வேறுபாடுகள்தானே தவிர வருமானம் அதிகமாக இருப்பதனால் அல்ல. கிராமப் பகுதியில் உள்ளதொரு குடும்பத்தில் தோன்றும் வருமான அதிகரிப்பு குடும்பத்தின் அளவு பெருகுவதைத் தடை செய்வதற்குப் பதிலாக உறுப்பினர்களின் எண்ணிக்கையை மிகுதிப் படுத்தலாம். இந்தியாவின் மற்றப் பல பகுதிகளில் இருப்பதைக் காட்டிலும் பொருளாதாரத்தில் மிகவும் வளர்ச்சி பெற்றதொரு பகுதியாக இல்லாமலிருக்கும் தென் பகுதியில் மற்றப் பகுதிகளில் இருப்பதைக் காட்டிலும் திருமண வயது அதிகமானதாகவும், பிறப்பு விகிதம் குறைவானதாகவும் இருந்ததை இந்தியாவின் 1951ஆம் ஆண்டு மக்கள்தொகை அறிக்கை காட்டுகிறது. எனவே, பொருளாதாரப் பகுதியில் கவனத்தைச் செலுத்துவதற்குப் பதில் சமுதாயப் பகுதியில் கவனத்தைச் செலுத்தினால் நாம் பெற விரும்பும் இலக்கை எளிதாகப் பெறமுடியும் என்றுதோன்றுகிறது.

பொருளாதார முன்னேற்றத்தை ஒதுக்கிவிடலாம் என்பது இதன் பொருள் அல்ல. மக்களைக் கல்வி அறிவுள்ளவர்களாக்குதல், நன்கு திட்டப்பட்டுச் செயலாற்றப்படும் பிரசாரத்தின் வாயிலாக மக்களின் நாட்டங்களில் சாதகமான விளைவுகளைத் தோற்றுவித்தல் ஆகியவைகளின் மூலம் மக்கள் பெருக்க விகிதத்தை மிகவும் குறிப்பிடத்தக்க அளவுக்குக் குறைக்க முடியும் என்பதுதான் இங்கு வலியுறுத்தப்படுகிறது. மக்கள் பெருக்க விகிதத்தில் குறைவைப் பொருளாதார முன்னேற்றம் தோற்றுவிக்கட்டும் என்று காத்திருப்பது சரியல்ல. இத்தகைய முயற்சிகளினால் மக்களிடையே புதியதொரு உணர்வு தட்டி எழுப்பப்படுமானால், (இறந்த பிறகு ஆவிகள் செல்வதாகச் சொல்லப்படும்) மறு உலகத்தைப்பற்றிச் சிந்திப்பதைத் தவிர்த்து இவ்வுலக வாழ்வின் பருப்பொருள் சார்ந்த நோக்கங்களை அவர்கள் பெற இத்தகைய முயற்சிகள் உதவுமானால், கடந்த சில ஆண்டுகளில் மிகவும் குறிப்பிடத்தக்க வகையில் எவ்வாறு இறப்பு விகிதத்தில் குறைவு தோன்றியதோ அந்த வகையில் பிறப்பு விகிதத்திலும் மிக வேகமான சரிவு தோன்றத் தொடங்கிவிடும். பின்தங்கிய நாடுகளில் உள்ள கிராமப் பகுதிகளில் உள்ள மக்கள், எழுத்தறிவற்றவர்களாக இருந்தாலும்கூட, குடும்பத்தின் அளவு குறைவாக இருக்குமானால் குடும்பம் பொருளாதாரத்தில் நன்னிலைமையில் இருப்பதற்கான வாய்ப்புகள் அதிகமாக உண்டு என்ற எளிய உண்மையைப் புரிந்து

கொள்ளுமளவிற்குப் பொது அறிவுடையவர்களாகத்தான் இருக்கிருர்கள். கிராமப் பகுதிகளில் வாழும் மக்கள் குடும்பக் கட்டுப்பாட்டின் அவசியத்தை நன்கு உணர்ந்திருக்கிருர்கள். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பிறப்புத் தடுப்பு முறைகளுக்கான தூண்டு விசைத் தடுப்புகள் அதிகமாக இருக்கின்றன என்ற கூற்று மிகவும் மிகைப்படுத்தப்பட்டதொரு கூற்று என்பதை இத் துறையில் பணியாற்றும் சமூக ஊழியர்களின் அனுபவம் காட்டுகிறது. பிறப்புத் தடுப்பு வழியானது, கிராமப் பகுதி மக்களிடையே உண்மையில் வலிவுள்ளதான ஒன்ருக இருக்க வேண்டுமானுல் மிகவும் எளிதானதாகவும் மலிவானதாகவும் இருக்க வேண்டும் என்பது மிகத் தெளிவானதாகும். இந்த வழிகளில் மேற்கொள்ளப்படும் முயற்சிகள் குறிப்பிடத்தக்க வகையிலான விளைவுகளைத்தரும். இறப்பு விகிதத்தில் இறக்கத்தைத் தோற்றுவித்த பெரும் காரணிகள், புதிய மருந்துகள், மற்றும் பல மருத்துவ வழிகள் ஆகியவைகள் யாவும் அவைகளினுல் முடியத்தக்க உச்ச அளவு இலக்கை நெருங்கிக் கொண்டிருக்கின்றன. அதாவது, இவைகளில் தோன்றும் முன்னேற்றத்திஞல் இறப்பு விகிதத்தில் மென்மேலும் தோன்றக்கூடிய சரிவிற்கான வாய்ப்புகள் சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டு வருகிறது என்பது இங்கு மிகவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு இருப்பதன் காரணமாக, பிறப்பு விகிதத்தைத் தடை செய்யும் வழியில் பெறப்படும் சிறிதளவு வெற்றிகூட, அதைக் காட்டிலும் அதிகமான அளவு விகிதத்தில் மக்கள் பெருக்கத்தின் இயற்கையான அதிகரிப்பு விகிதத்தில் (அவ் விகிதத்தைக் குறைப்பதில்) நல்ல விளைவுகளைத் தரும். இது அரசாங்கத்தின்மீது அதிகமான பொறுப்பு உள்ளார்ந்துள்ளதொன்று என்பதும் ஏராளமான அளவு செலவை அவசியமாக்குகிறது என்பதும் உண்மைதான். ஆனுல், ஜப்பான், சீன ஆகிய நாடுகளில் அண்மைக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் நமக்கு நல்ல பாடங்களாக இருக்கின்றன. அவைகள், இம் முறையிலான நடவடிக்கைகள் மேற்கொள்வது இயலக்கூடியதுதான் என்பதை நமக்குக்காட்டுகின்றன.

தருக்க வாதத்தின் அடிப்படையில் பார்க்கும்போது, மூலதன—சேமிப்பு, தொழில் நுண்ணியல்கள் முன்னேற்றங்களின் வாயிலாகவும், நல்ல முறையிலும் மிகச் சிக்கனமான வழியிலும் நடப்பில் இருக்கக்கூடிய மூலதனச் சொத்துக்களைப் பயன்படுத்துவதன் வாயிலாகவும், தொழிற்சாலைகள், சாதனங்கள் ஆகியவைகளை வீணுன முறையில் பயன்படுத்துவதைத் தடுப்பதன் வாயிலாகவும், மூலதன விளைவு விகிதத்தைக் குறைக்கவேண்டும் என்ருகிறது.

உழைப்பைச் சேமிக்கும் வகைகளைத் தடை செய்ய வேண்டிய அவசியத்தையும் எங்கெல்லாம் முடிகின்றதோ அங்கெல்லாம் உழைப்புச் செறிவுள்ள முறைகளைப் பின்பற்ற வேண்டிய அவசியத்தையும் இது சுட்டிக் காட்டுகிறது. உழைப்புச் செறிவுள்ள பொறிநுட்ப முறைகளைப் பின்பற்றுவதால் அதிகமான நபர்களுக்கு வேலை தர முடியும் என்றாலும், மூலதனச்செறிவுள்ள மிகுதியான முதலீட்டுத் திட்டங்கள் செய்வதைப் போன்று, பொருளாதார முன்னேற்ற விகிதத்தை விரைவுபடுத்த இது தவறிவிடுகிறது. ஆனால், இப்போதுள்ள நிலையில் இவ்விரண்டு வகை முதலீட்டுத் திட்டங்களுக்கும் இடையே நல்ல முறையிலான இசைவிப்புகள் மிகவும் அவசியமாகிறது. பொறிநுட்பத்தில் பயிற்சி பெற்ற தொழிலாளர்களின் கிடைப்பருமை எந்த அளவுக்கு இருக்கிறதோ, நாட்டின் குறிப்பிட்ட சில நிலப்பகுதிகளில் தராதரமாகப் பார்க்கும்போது இது எவ்வளவு தூரம் கிடைப் பருமை உடையதாக இருக்கிறதோ அந்த அளவுக்குப் பயிற்சி அளித்தல், உழைப்பின் இடப் பெயர்ச்சியை முன்னேற்றுவித்தல் ஆகியவை களின் மூலம் உழைப்பின் பயனை அந் நிலப்பகுதிகளில் பெறலாம். மூலதன மூலவளங்கள் எந்த அளவுக்கும் பயன்படுத்தப்படாமல் இருந்தாலும் வேலையைத்தரத்தக்க உள்ளார்ந்ததொரு மூலமாக அவை இருக்கின்றன. உழைப்பின் திறமையை அதிகரிப்பதன் மூலமாகவும், உழைப்புக்கான மிகுந்த ஆர்வத்தைத் தோற்றுவிப்பதன் மூலமாகவும் உழைப்பின் உற்பத்தித்திறனை அதிகப்படுத்துவதற்கு ஏராளமான வாய்ப்புகள் இருக்கின்றன. தவிர, உழைப்பின் அமைப்புப் பக்கத்திலும் கவனம் செலுத்தப்படுகிறது. இவ்வழிகள் யாவும் அதிகமான அளவிலான முதலீடு எதுவுமின்றியே வருமான உயர்வைத் தரத்தக்கவைகளாகும். தவிர, இவ்வாறாகக் கிடைக்கும் மூலவளங்களைத் தகுதியான வரிக் கொள்கைகளின் மூலமாகவும் அயல் நாட்டு வாணிகக் கொள்கைகளின் மூலமாகவும் ஒன்று திரட்டப்பட்டுப் பயன்படுத்தலாம்.

# 4. சேமிப்பும் முதலீட்டின் நிதியாக்கமும்
## (Savings and Financing of Investment)

### சேமிப்புகளின் இயல்புகள்
### (The Nature of Savings)

நடப்பு வருமானம், நுகர்வு ஆகியவைகளுக்கிடையேயுள்ள கணக்கின் வேறுபாடுதான் 'சேமிப்புகள்' என்ற சொல்லின் பொருள் என வரையறை செய்யப்படுகிறது. உற்பத்தி அளவை அதிகரிப்பதின் மூலம் அல்லது நுகர்வு அளவைக் குறைப்பதன் மூலம் அல்லது இரண்டையும் செய்வதன் மூலம் சேமிப்பு விடுமுதல் அதிகரிக்கப்படலாம் என்பது இதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. மூலதன ஆக்கத்திற்கான மூன்று நிலைகளில் முதல் நிலையாகச் சேமிப்பு அமைந்திருக்கிறது. இச் சேமிப்புகளைத் திரட்டுதல் இரண்டாவது நிலை. சேமிப்பை உற்பத்திச் சாதனங்களாக மாற்றுதல் அல்லது முதலீடு செய்தல் மூன்றாவது நிலை. உயர்ந்த விகிதத்திலான நாட்டு வருமான அதிகரிப்புக்கு உயர்ந்த விகிதத்திலான மூலதன ஆக்கம் தேவையென்றால் சேமிப்பு விகிதமும் அதோடு சேர்ந்து அதிகமானதாக இருக்க வேண்டும். இருப்பினும், உள்நாட்டுச் சேமிப்பின் பரும அளவும் முதலீட்டு அளவும் ஒன்று போல இருக்க வேண்டும் என்பதில்லை. சேமிப்பின் அளவில் உள்ள குறையானது, எந்த அளவுக்கு வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுவதால் ஈடுகட்டப்படுகிறதோ அந்த அளவுக்கு உள் நாட்டுச் சேமிப்பைக் காட்டிலும் அதிகமானதாக முதலீடு இருக்கலாம். குறிப்பிட்டதொரு காலத்தில் கிடைக்கும் முதலீடு செய்யக்கூடிய மூலவளங்களின் மொத்தம் எனப்படுவது உள்நாட்டுச் சேமிப்பு, வெளிநாட்டு மூலதனம் என்ற வடிவத்தில் பொருளாதாரத்திற்குள் வரும் மூலதனங்களின் மொத்தம்தான்.

அரசாங்கத்துறை, வணிகத்துறை, வீட்டுத்துறை ஆகிய பொருளாதாரத்தின் மூன்று துறைகளிலும் மேற்கொள்ளப்படும் சேமிப்புகளின் மொத்தம்தான் நாட்டின் மொத்த சேமிப்பாகும்.

(வரி செலுத்தியது போக மிச்சமுள்ள வருமானமாகிய) செலவழிக்கத்தக்க வருமானம். நுகர்வுச் செலவுகள் ஆகிய இரண்டிற்குமிடையேயுள்ள வேறுபாடுதான் வீட்டுத் துறையின் சேமிப்பாகும். வருமானத்திற்கும் லாபப் பங்குகளுக்கும் செலுத்தப்படும் வரிகளுக்கும் இடையேயான வேறுபாடு வணிகத்துறையின் சேமிப்புகளாகும். வரி வருமானங்களிலிருந்து நடப்புச் செலவுகளை (அதாவது முதலீடு அற்ற செலவுகளைக்) கழித்துப் பார்த்தால் கிடைப்பது, அரசாங்கச் சேமிப்புக்குச் சமமானதாகும். அரசாங்கச் சேமிப்பு பொதுச் சேமிப்பாகும். வணிகச் சேமிப்புகளும், வீட்டுச் சேமிப்புகளும் தனியார் சேமிப்பாகும். தனிநபர் சேமிப்புகள் அல்லது வீட்டுத்துறை சேமிப்புகள், மொத்த சேமிப்புகளில் மிக இன்றியமையாத பகுதி வகிப்பனவாகும். ஐக்கிய அமெரிக்க நாட்டில் 1951-ல் தனிநபர் சேமிப்புகள், மொத்தச் சேமிப்பில் 52% அளவினதாகவும், வணிகத்துறையும், அரசுத்துறையும் சேமிப்பவை முறையே 25%, 23% அளவினதாகவும் இருந்தன. இந்தியாவில் 1958-59-ல்மொத்தச் சேமிப்பில் அரசுத்துறை 10.6% அளவையும், உள்நாட்டு வணிகத்துறை 3.5% அளவையும், வீட்டுத்துறை மிக அதிகமான அளவினதான 85.9% அளவையும் பெற்றிருந்தன. மூன்று மூலங்களிலிருந்தும் பெறப்படும் மொத்த சேமிப்பும், வெளிநாடுகளிலிருந்து பெறப்படும் நிகர வரவும் மொத்த முதலீட்டுக்குச் சமமாகும்போது, தனிப்பட்ட துறைகளின் சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் இடையே சில வேறுபாடுகள் தோன்றியே தீரும், ஏதாவது ஒரு துறையின் முதலீட்டோடு ஒப்பிடுபோது சேமிப்பில் தோன்றும் குறைவு, மற்றத் துறைகளின் முதலீட்டைக் காட்டிலும் சேமிப்பு அதிகமாக இருப்பதன் மூலம் ஈடுகட்டப்படுகிறது. இவ்வாறாக, செலவு செய்யும் அலகுகள், சமநிலைவரவு செலவுத் திட்டத்தை யுடைய அலகுகள், உபரி வரவு உள்ள அலகுகள், பற்றுக்குறை அலகுகள் என்ற பலதரப்பட்ட அலகுகளால் அமைக்கப்பட்டதாகப் பொருளாதாரம் இருப்பதைக் காண முடியும். பற்றுக்குறை வரவு செலவுத் திட்டத்தை வைத்துக் கொண்டு செலவு செய்யும் அலகுகள் கடன் நிதியை வேண்டுகின்றன. அதற்குப் பதிலாக கடனை வெளியிடுகின்றன. அல்லது நிதிச் சொத்துகளை வெளியேற்றுகின்றன. இச் சொத்துகள் யாவும் உபரி வரவு செலவுத் திட்டங்களைக் கொண்டுள்ள செலவு செய்யும் அலகுகளால் பெறப்படுகின்றன. அவைகளின் வசமுள்ள நிதிச் சொத்துகளும் கடனும், பற்றுக்குறை செலவு செய்யும் அலகுகளுக்கான நிகர நிதிக் கடன்பாடுகளின் அதிகரிப்பிற்குச் சமமாகின்றன.[1]

[1] Gurley, J. G. and F. S. Shaw, 'Financial Aspects of Economic Development', *American Economic Reveiw*; September, 1955; P. 516.

தனிப்பட்டவர்களின் சேமிப்புகள் கீழ்க்கண்டவாறு பகுக்கப்படலாம்.

(1) ஆயுள் காப்பீட்டுக் கழகங்கள், அடமானச் செலுத்துதல், பிராடுடெண்ட் நிதிச் செலுத்துதல்கள் மற்றும் இவை போன்றவைகளின் மூலம் தோன்றும் ஒப்பந்தச் சேமிப்புகள் (Contractnal Savings) ஒருவழியில் பார்த்தால் இத்தகைய சேமிப்புகள் யாவும் கட்டுப்பாடாகவுள்ள இயல்புடையவைகளாக இருப்பதால் அவைகள் ஏறத்தாழ நிலையானவைகளாக இருக்கின்றன.

(2) தாள் பணம், (காலவைப்பு, தேவை வைப்பு ஆகிய இரண்டும் உட்பட்ட) வங்கிவைப்பு, சேமிப்புக் கழகங்களிலும் கடன் கழகங்களிலும் பங்குகள், தனியார் பங்கு உரிமைச் சான்றிதழ்களை வாங்குதல் ஆகியவைகளின் மூலம் தனிநபர் வைத்திருக்கும், நீர்மைச் சொத்துகளில் அதிகரிப்பு.

(3) வேளாண்மையிலும், வணிக நிறுவனங்களின் மீதும் நேரிடையான முதலீடுகள்: கிராமப் புறச்சேமிப்பில் இவ் வகை பெரும் பங்கு வகிக்கிறது. நிலத்தின் முன்னேற்றம், நிருமானங்கள் ஆகியவைகளின் வடிவத்தில் இது தோன்றுகிறது. இங்குச் சேமிப்பும் முதலீடும் ஒரே நேரத்தில் நிகழ்கின்றன. உண்மையில் சேமிப்பவர்களே முதலீடு செய்பவர்களாகவும் இருக்கின்றனர். எனவே, இவ் விரு வகையினரிடையே இடைத்தரகர்கள் தோன்றுவதில்லை.

(4) தனிப்பட்ட நபர்களால் கடன் குறைக்கப்படுவதும் சேமிப்பே. வங்கிகளும், நிதிக் கழகங்களும் நல்ல முறையில் வளர்ச்சியடைந்திருக்கக் கூடியதாகவும், அத்தகைய நிலையங்களில் தங்கள் சேமிப்புகளை முதலீடு செய்வதற்குப் பழக்கப்பட்ட மக்களைக் கொண்டிருக்கக்கூடியதாகவும் உள்ளன. வளர்ச்சியடைந்த நாடுகளில் மேற்குறிப்பிட்ட நான்கு வகைகளில் முதலாவது வகையும் இரண்டாவது வகையும் சிறப்பானவைகளாக இருக்கின்றன. இவ் விரண்டு வகைகளிலும் சேர்க்கப்படும் சேமிப்பு மற்றவர்களுக்குக் கிடைக்கும்படியாகச் செய்யப்படுகிறது. ஆனால், மூன்றாவது வகையினால் சேர்க்கப்படுவது இவ்வாறு இல்லை. இவ்வாறாக. இரு நாடுகளில் சேமிப்பின் பரும அளவு ஒரே மாதிரியாக இருந்தாலும் கூட நேரடியாகவே முதலீடு செய்யப்படக்கூடிய நாட்டைக் காட்டிலும், முதல் இரண்டு வகைகள் சிறப்பான இடம் வகிக்கும் நாட்டிலும் புதிய வணிகத்திலும் புதிய தொழில்களிலும் மேற்கொள்ளப்படும் முதலீட்டிற்கு நிதி தருதல் எளிதாக இருக்கின்றது.

## தனியார் சேமிப்பை நிர்ணயிக்கும் காரணிகள்
(Determinants of Personal Savings)

தனியார் சேமிப்பின் விகிதத்தையும், பருமத்தையும் பல காரணிகள் நிர்ணயிக்கின்றன. இவைகளில் முக்கியமானவைகளாக வருமானத்தின் அளவும், அதன் மாற்றமும், அதன் பகிர்வும் அமைகின்றன. வருமான அளவுக்கும் சேமிப்பு அளவுக்கும் எந்த விதமான விகிதாச்சாரத் தொடர்பையும் ஏற்படுத்த முடியாது என்ருலும், சேமிப்பின் அளவை நிர்ணயிக்கும் காரணிகளில் மிகச் சிறப்பான காரணியாக, செலவழிக்கத்தக்க வருமானம் அமைந்திருக்கிறது என்பதைப் புள்ளிவிவரச் சான்றுகள் உறுதிப் படுத்துகின்றன. இரண்டாம் உலகப் போருக்குப் பின்பும், போருக்கு முந்திய ஆண்டுகளிலும் ஐக்கிய அமெரிக்க நாட்டில் மேற்கொள்ளப்பட்ட நுகர்வோர் உசாய்வுகளிலிருந்து பெறப்பட்ட புள்ளிவிவரங்கள் செல்வழிக்கத்தக்க தனியார் வருமான அளவோடு தனியார் சேமிப்பின் மிகமிக நெருங்கிய தொடர்பைப் பெற்றிருந்ததைக் காட்டுகின்றன. நுகர்வு, சேமிப்பு ஆகிய இரண்டோடும் வருமானத்தில் தோன்றும் அதிகரிப்பு மிக நெருங்கிய தொடர்புடையதாக அமைந்திருக்கிறது. வருமானம் அதிகரிக்கும் போது, இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் அதிகமாகி வருவதைக்காட்டும் வண்ணம், வருமானம் அதிகரிக்கும்போது சேமிப்பு வருமான விகிதம் அதிகரித்தது என்று மேற் குறிப்பிட்ட டில்லி சேமிப்பு உசாய்வில் காணப்பட்டது. ஆனல், குறிப்பிட்டதொரு காலத்தில் உண்மையான வருமான அளவைக் காட்டிலும் மிகவும் முக்கியமானது அவ் வருமானப் பருமத்தில் தோன்றும் மாற்றமே. வருமான மாற்றத்திற்கும் நுகர்வு நிலைகளுக்கும் இடையே பொதுவாக ஓர் இடைவெளி இருக்கிறது. வருமான மாற்றம் மேல் நோக்கிச் செல்லும்போது தோன்றும் இடைவெளியைக் காட்டிலும் வருமான மாற்றம் கீழ் நோக்கிச் செல்லும்போது தோன்றும் இடைவெளி மிகவும் அதிகமானதாக இருக்கிறது. குடும்பம் ஒன்றின் வருமானம் அதிகரிக்கும்போது, நுகர்வுச்செலவு மிக மெதுவாகவே அதிகரிக்கிறது. எனவே, ஓரளவுக்குச் சேமிப்பு விடுமுதல் அதிகமாக்கப்படுகிறது. அதற்கு மாருக, வருமானம் குறையும்போது, சிறிது காலத்திற்கு நடப்பு நிலையிலான நுகர்வுச் செலவுகள் நிலைத்திருக்கின்றன; அல்லது மிகவும் குறைவான வேகத்தில் குறைகின்றன. எனவே, குடும்பத்தின் சேமிப்பில் பேரளவிலான இறக்கம் காணப்படுகிறது. எனவே, ஒரு நபரின் அல்லது ஒரு குடும்பத்தின் நிலையான வருமானத்தைச் சார்ந்ததாகவே நுகர்வுச் செலவுகள் அமைந்துள்ளன என்ற கருத்தும் வருமானத்தின் தற்காலிக மாற்றங்

களினுல் மாறுததாகவும் நுகர்வுச் செலவுகள் அமைந்துள்ளன என்ற கருத்தும் தரப்படுகின்றன.

வருமானச் செறிவு விகிதம் அல்லது வருமானம், செல்வம் ஆகியவைகளின் பங்கீட்டில் உள்ள ஏற்றத்தாழ்வுகள், சேமிப்பு விகிதத்தைப் பாதிக்கும் காரணிகளில் ஒன்று என்று ஒரு சில நேரங்களில் குறிப்பிடப்படுகிறது. குறிப்பிட்டதொரு வருமான நிலையில், எந்த அளவுக்கு அதிகமானதாக இவ் வேற்றத் தாழ்வுகள் இருக்கின்றனவோ அந்த அளவுக்குச் சேமிப்பின் பருமமும் அதிக மாக இருக்கும் என்று கருதப்படுகிறது. எந்தப் பொருளாதாரத் திலும், அதிகமான சேமிப்பு நாட்டத்தையுடைய வகுப்பினர், அதிகச்செலவு நாட்டத்தையுடைய வகுப்பினர் என்று இருவகுப் பாரும் இருப்பார்கள். எனவே, சேமிப்புநாட்டம் அதிகம்உடைய வர்களுக்குச் சாதகமாக அமையும்வண்ணம் வருமானப் பகிர்வில் தோற்றுவிக்கப்படும் எந்த விதமான மாற்றமும் சேமிப்பை அதிகரிப்பதற்கு உதவி செய்யும். இருப்பினும், சேமிப்பு நாட்ட மானது, தனிநபரின் வருமானத்தை மட்டுமல்லாது அவரது வேலையின் இயல்பையும் பொறுத்திருக்கிறது. பொதுவாக, ஒரே வருமான நிலையில், நகர்ப்புறத்தில் வாழ்பவரைக்காட் டிலும் குடியானவர் ஒருவர் அதிகமாகச் சேமிக்க முடிகிறது. எனவே, மக்கள் பல விதமான வருமானப் பிரிவுக்கும் இடம் மாறுவதாலும், பலவிதமான வேலைகளுக்கு மாறுவதாலும், சேமிப்பின் அளவை நிர்ணயிப்பது, குறிப்பிட்டதொரு நேரத்தில் உள்ள வருமான பங்கீடுமட்டுமல்ல. மக்களின் அத்தைகைய மாற் றங்கள் சேமிப்பவர்களின் எண்ணிக்கையையும், சேமிப்பைக் களைப்பவர்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கிறது அல்லது குறைக் கிறது. இத்தகைய அதிகரிப்பு, குறைப்பு ஆகியவைகளின் நிகர விளைவு தான் சேமிப்பின் பருமத்தில் தோன்றும் மாற்றமாகும்.

ஏற்கனவே, குறிப்பிட்டிருப்பதுபோல வணிகத் தொழில் முயல்வோருடைய வருமானமும் குடியானவரின் வருமானமும், தனியார் சேமிப்பிற்கு மிகவும் முக்கியமான மூலமாக அமைந்திருக் கின்றன. கிராமப் பகுதிகளைக் காட்டிலும் நகர்ப் பகுதிகளில் சேமிப்பு குறைவாக இருப்பதால் கிராமப் பகுதிகளிலிருந்து நகர்ப் பகுதிகளுக்கு மக்கள் இடம் பெயர்ந்து செல்லுவதனுலும், அதன் காரணமாகக் குடியானவர்கள் பிரிவின் விகிதாச்சார வலிமை குறைவதனுலும் இவை, குறைந்த சேமிப்புக்கு வகைசெய் கின்றன. வேளாண்மைத் துறையில் உற்பத்தி செய்பவர்களின் எண்ணிக்கையிலும், அதன் காரணமாகக் கிராமச் சமுதாயத்தின் அளவிலும் குறைவு தோன்றும் போக்கும். நகர்ப் பகுதிகளில் வாழும் மக்களின் எண்ணிக்கையில் அதிகரிக்கும் போக்கும்.

தொழில் மயமாகும் பொருளாதார முன்னேற்றத்தின் பொதுவான இயல்பாகும் இவ்வாறுக ஐக்கிய அமெரிக்க நாட்டில் நகர மக்களுக்கும் கிராம மக்களுக்கும் உள்ள விகிதம் 1870-ல் 2.89-லிருந்து 1910-ல்1.19 ஆகவும், 1920-ல் 0.95 ஆகவும், 19 30-ல் 0.78 ஆகவும், 1940-ல் 0.77 ஆகவும், 1950-ல் 0.57 ஆகவும் குறைந்தது. ஐக்கிய அமெரிக்கநாட்டில் இருந்ததைப் போல மிக அதிகமான அளவினதாக இல்லாவிட்டாலும், அது போன்றதொரு போக்கு அண்மைக் காலத்தில் இந்தியாவிலும் காணப்படுகின்றது. தனிநபர், குடும்பங்களின் செலவு மாதிரிகளிலும் சமுதாய நாட்டங்களிலும் குறிப்பிடத்தக்க மாற்றங்களை, மக்களை நகர்ப் புறங்களுக்கு இடம்பெயரச் செய்வது தோற்றுவிக்கிறது. செலவழிப்பதற்கான வாய்ப்புகள் அதிகமாக இருக்கின்றன. அதே நேரத்தில் சேமிப்புகளை, உற்பத்தி முதலீடுகளில் ஈடுபடுத்தும் வழிகளும் அதிகரிக்கின்றன. ஆனால், நகர்ப்பகுதிகளுக்கு வருபவர் களில் பெரும்பான்மையோருக்குச் சேமிப்பதற்கு வழியில்லாமல் இருக்கிறது.

தனிநபர் சேமிப்பின் அளவை நிர்ணயிருக்கும் மற்றுமொரு காரணியாகத் தனிநபர் சொத்துகளின் நிலைமையும், குடும்பச் சொத்துகளின் நிலைமையும் இருக்கின்றன. நீர்மைச் சொத்து களை ஏற்கனவே குவித்திருக்கும் குடும்பங்கள் நுகர்வுக்காக அவை களின் நடப்பு வருமானத்தோடு அந் நீர்மைச் சொத்துகளையும் சேர்த்துப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்றிருந்தால், அத்தகைய நீர்மைச் சொத்துகளின் அதிகரிக்கும் பரும அளவு சேமிப்பின் மீது பாதகமான விளைவைக் கொண்டிருக்கும். அதாவது, நீர் மைச் சொத்துகள் அதிகமாக சேர்க்கப்படும்போது சேமிப்பின் அளவு குறைகிறது. இவ்வாறுக, நடப்பு நுகர்வுச் செலவுகளை ஈடுகட்டுவதற்குப் போதுமானதாக நடப்பு வருமானம் இல்லா மலிருக்கும்போது கையில் வைத்திருக்கும் பணம் மிக எளிதாக நுகர்வுக்காகப் பயன்படுத்தப்பட்டுவிடும் என்பது தெளிவாகத் தெரிகின்றது. தவிர, அத்தகைய நீர்மைச் சொத்துகள் இல்லாதவர்களிடம் அல்லது அத்தகைய நீர்மைச் சொத்துகளைக் குறைவாகப் பெற்றிருப்பவர்களிடம் காணப்படுவது போன்ற சேமிக்க வேண்டும் என்ற பேராவல், அத்தகைய நீர்மைச் சொத்துகளை வைத்திருப்பவர்களிடம் காணப்படுவதில்லை. எனவே, அதிக அளவிலான நுகர்வோர் கடன் அல்லது அடமானக் கடன் நுகர்வைத் தூண்டுவதற்குப் பதிலாக நுகர்வைத் தவிர்க்கத் தூண்டுவதன் மூலம் சேமிப்பின்மீது எதிர் மறை விளைவைப் பெற்றதாக இருக்கும் என்று கருதிக் கொள்ளலாம்.[1]

[1] Friend, Irwin, *Individuals Savings*, Wiley, New York, 1954 p 134.

இவை தவிர வேறு சில பொருளாதாரக் காரணிகளும், சமுதாயக் காரணிகளும், ஒரு சமுதாயத்தின் சேமிப்பு, தனி நபரின் சேமிப்பு ஆகியவற்றின் நீண்டகாலப் போக்கைப் பாதிக்கின்றன. அரசியல் நிலைகள், நாட்டில் நிலவும் விலை நிலவரம், விலை நிலைகளின் அதிகரிப்பு அல்லது குறைவு ஆகியவற்றை எதிர் பார்த்தல், சேமிப்பு நிலையங்கள் இருத்தல், செல்வத்தைச் சேர்ப்பதற்கும், வேலை செய்வதற்கும், முயற்சியில் ஈடுபடுவதற்கும் மக்களிடையே காணப்படும் பொதுவான இயல்பு, எதிர்காலத்திற்காகச் சேர்த்து வைக்கும் மக்களின் விருப்பம் திறமை ஆகியவைகள், குடும்பத்தின் வாழ்க்கைத் தரத்தை நிலைநிறுத்த அல்லது முன்னேற்றுவிக்க விருப்பம், பிறப்பு விகிதம், இறப்பு விகிதம், மக்கள் பெருக்க விகிதம் ஆகியவைகள், திருமண வயது, கூட்டுக் குடும்ப முறை, வரதட்சணை முறை, இன்னும் இவை போன்ற சமுதாயப் பழக்கங்கள், நுகர்வோர் கடனும் நுகர்வுப் பண்டங்களும் கிடைப்பதில் அதிகரிப்பு அல்லது குறைவு, பொருளாதாரம் பணமயமாக்கப்பட்டிருக்கும் அளவு, இவை தவிரப் பிற நிலைய மாற்றங்கள் ஆகியவைகள் எல்லாம் சமுதாயத்தின் அல்லது தனி நபர் சேமிப்புகளின் நீண்டகாலப் போக்கைப் பாதிக்கும் காரணிகளாகும்.

சமுதாயம் ஒன்றின் சேமிப்பை நிர்ணயிக்கும் காரணிகளின் சிக்கலானது, எந்த விதமான சேமிப்புச் செயலாயினும் (Savings function) பகுப்பதை மிகவும் கடினமானதாக்குகிறது. எனவே வருமானம் அதிகரிக்கும் செயலின் விளைவாக அல்லது குறையும் செயலின் விளைவாக, சேமிப்பு விகிதம் இருக்கும் என்ற எடுகோள் மிகவும் பொதுவானதொன்ருகவும், இயந்திர மயமானதைப் போன்றதொன்ருகவும் இருக்கிறது. சமுதாயம் ஒன்றின் சேமிக்கும் சக்தி, சேமிக்கும் விருப்பம் ஆகியவற்றில் அதிகரிப்பை அல்லது குறைவை நிர்ணயிக்கும் பல சக்திகளின் நிகர விளைவு தான் குறிப்பிட்டதொரு நேரத்திலான சேமிப்பு ஆகும். சமுதாயம் ஒன்றின் அமைப்பில் தோன்றும் மாற்றங்களுக்கும், அச் சமுதாயத்தின் உறுப்பினர்களின் நோக்கங்களுக்கும், அவர்களின் சிக்கனம் அல்லது சிக்கனமில்லாதிருத்தல் ஆகியவைகளுக்கும் ஏற்ப மொத்தச் சேமிப்பிற்கும் சேமிப்புக் கலைப்புக்குமான சமநிலை அமைந்திருக்கும். செலவு செய்யத்தக்க வருமானப் பருமங்களின் மாற்றத்தோடு தொடர்பில்லாமல் மக்களது நாட்டங்களின் மாற்றங்கள் சேமிப்பின் பருமத்தைப் பாதிக்க முடியும்; பாதிக்கவே செய்கின்றன. பொதுவாகச் சொல்லப் போனல், பொருளாதார வளர்ச்சியின் அமைப்பு, அதன் வளர்ச்சியின் விகிதம், அவ் வளர்ச்சிப் போக்கில் தோற்றுவிக்கப்

படும் நிலைய மாற்றங்கள், சமுதாய மாற்றங்கள் ஆகியவற்றால் சேமிப்பு நிர்ணயிக்கப்படலாம். முதலீட்டின் அளவை நிர்ணயிப்பதில் தொழில் முயல்வோரின் எதிர் காலத்தைப்பற்றிய மதிப்பீடுகள் எந்த அளவுக்கு முக்கியமானவைகளோ அந்த அளவுக்கு, நுகர்வுச் செலவு, சேமிப்பு ஆகியவைகளின் நிலைகளை நிர்ணயிப்பதற்கு நுகர்வோரின் எதிர்காலம் பற்றிய மதிப்பீடுகளும் மிகவும் முக்கியமானவைகளாகும். இம் மதிப்பு மிகவும் தெளிவற்றதாக இருக்கிறது. ஆனால், சிக்கலைத் தீர்மானிக்கக் கூடிய சக்திகள் ஏராளமானவைகளாக இருப்பதை ஒத்துக்கொள்வது என்ற அடிப்படையில் அமைந்திருப்பதன் நன்மையையும், உண்மை நிலைக்கு ஏற்றதாக இருக்கிறதென்ற நன்மையையும் அது பெற்றிருக்கிறது.[1]

## சேமிப்புகள், முதலீடு, நாட்டு வருமானம்
## (Savings, Investment and National Income)

மூலதன ஆக்கம் தோன்றவேண்டுமென்றால், பொருளாதாரத்தில் தேவையான அளவுக்குச் சேமிப்பு இருக்க வேண்டும். ஆனால், அச் சேமிப்பு மட்டுமிருந்தால் போதாது அம் மூலவளங்களையெல்லாம் ஒருங்கிணைக்கத்தக்க நிலையங்களும் அவற்றை முதலீட்டில் ஈடுபடுத்தும் நிலையங்களும் இருக்க வேண்டும். பொருளாதாரம் ஒன்றில் கிடைக்கும் மூலவளங்கள் நுகர்வுப் பண்டங்களை உற்பத்தி செய்வதற்கும் உற்பத்தியாளர் பண்டங்களை உற்பத்தி செய்வதற்கும் பயன்படுத்தப்படுகின்றன இவ் விருவகைப் பண்டங்களின் மதிப்புதான் மொத்த வருமானம் எனப்படுகிறது. எனவே, குறிப்பிட்டதொரு நேரத்தில் உற்பத்தியாளர் பண்டங்களின் அளிப்பு அதிகரிக்கப்படவேண்டுமானால் நுகர்வுப் பண்டங்களின் உற்பத்தியில் பயன்படுத்தப்படும் மூலவளங்களின் ஒருபகுதி விடுவிக்கப்பட்டு, உற்பத்தியாளர் பண்டங்களின் உற்பத்தியில் பயன்படுத்தப்படும்வண்ணம் வழிகாட்டப்படவேண்டும். வருமானத்திற்கும் நுகர்வுக்கும் உள்ள வேறுபாடுதான் சேமிப்பு. எனவே, எந்த அளவுக்கு நுகர்வுப் பொருள்களின் அளிப்பு கட்டுப்படுத்தப்படுகிறதோ அந்த அளவுக்குப்பொருளாதாரத்தில் சேமிப்போடு அதிகப்படியாகச் சேர்க்கப்படுவதைச் சிறப்பாகஅளவிடமுடிகிறது

பணவழியில் பரிமாற்றம் உள்ளதொரு பொருளாதாரத்தில் நுகர்வுப் பண்டத் துறையிலிருந்து உற்பத்திப் பண்டத் துறைக்கு உண்மை மூலவளங்களின் மாற்றம் பண இயந்திரத்தின்

[1] Farrel, M. J, 'The New Theories of Consumption Function,' *Economic Journal*, December, 1959, p 694.

மூலமாக இயக்கப்படுகிறது. நுகர்வோர் தங்கள் வருமானத்தைப் பணமாகப் பெறுகிறுர்கள். எனவே, நுகர்வுப் பண்டங்களுக்கான தேவையில் தோற்றுவிக்கப்படும் எந்தத் தடையும் நுகர்வோரிடையே பெருமளவு பணத்தை (செலவழிக்காமல்) வைத்திருக்கச் செய்யும். இத்தகைய எச்சப் பணத்தைப் பயன்படுத்துவதன் மூலம் உண்மை மூலவளங்கள்மீது முதலீடு செய்பவர்கள் நல்ல செயலாதிக்கத்தைப் பெறுகிறுர்கள். இப் பணமே மூலதனப் பொருள்களுக்கான உற்பத்தியில் பயன்படுத்தப்படுகிறது. முதலீடு செய்பவர்களால் பத்திரச் சான்றிதழ்கள் விற்பனை செய்யப் படுவதன் மூலம் இவ் விருப்புப் பணம் முதலீடு செய்பவர்களிடம் மாற்றப்படுகிறது. சேமிக்கும் பிரிவினர் தங்கள் பணத்தை விட்டுப் பிரிந்திருப்பதைத் தூண்டிவிடுவதற்காக வணிகப் பிரிவினர் சேமிப்புப் பிரிவினருக்குச் சிறிதளவு பணத்தைச் செலுத்துகிறுர்கள். வட்டியாகிய இச் சிறிதளவு பணத்தைச் செலுத்துவதற்கு வணிகப் பிரிவினர் ஆயத்தமாக இருக்கிறுர்கள். ஏனென்றுல், அவர்களுக்குக் கிடைக்கும் உண்மை மூலவளங்களை, சேமிப்பவர்களால் வெளியிடப்படும் அதிகப்படியான பணத்தின் உதவியுடன் உற்பத்தி செய்யத்தக்க வழிகளில் பயன்படுத்த முடியும். இவ்வாறுக ஒரு புறத்தில் நுகர்வு இல்லாமலிருப்பதால் உண்மை மூலவளங்கள் கிடைக்கின்றன. இன்னெரு புறத்தில் உண்மை மூலவளங்களைக் கொள்முதல் செய்யும்வண்ணம் பண இருப்புகள் வெளியிடப்படுகின்றன. உண்மை மூலவளங்களை உச்ச அளவு நன்மை தரத்தக்க வகையில் பயன்படுத்தும் திறமை மிக்க தொழில் முயல்வோர்கள் தங்களின் மூலவளங்களைப் பகிர்ந்தளிப்பதில் அவர்களுக்கு உதவத்தக்க விலையின் ஒரு பகுதியாக வட்டி விகிதம் செயல்படுகிறது வட்டி விகிதம் குறிப்பிட்டதொரு விகிதத்திலிருக்கும்போது, தேவையான அளவுக்கு விளைவைத் தரத்தக்க தொழில்களில் மட்டும் முதலீடுகள் மேற்கொள்ளப் படுகின்றன. அதே நேரத்தில் இத் தேர்வில் நிற்கமுடியாத தொழில்முயற்சிகளுக்கு அல்லது முதலீட்டு வழிகளுக்குப் பணம் கிடைக்காமல் போவதால் அவைகள் களையப்படுகின்றன. இவ்வாறுக, தடையில்லாத் தன்முயற்சிப் பொருளாதாரத்தில், சந்தை இயக்கமானது சேமிப்பைத் திரட்டுவதிலும் இச் சேமிப்புகளை முதலீட்டு நோக்கங்களுக்காகப் பயன்படுத்துவதிலும் உதவி செய்கின்றன. ஆனல் பொருளாதாரமானது, தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரமாக இருந்தாலும் மையத்திலிருந்து திட்டமிடப்பட்டு இயக்கப்படுவதாக இருந்தாலும், சேமிப்புக்கும் முதலீட்டிற்குமான அடிப்படைக் கொள்கைகள் ஒன்றே. அதாவது, நுகர்வைக் குறைப்பதனுல்தான்அல்லது நுகர்வுப் பண்டங்களின் உற்பத்திக்காகப் பயன்படுத்தத்தக்க மூலவளங்களின் தேவையைக்

குறைப்பதனுல்தான் அதிகப்படியான முதலீட்டின் அல்லது அதிகப் படியான உற்பத்திப் பண்டங்களின் உற்பத்தி இயலும்.

நுகர்வுப் பண்டங்களை விரும்பும் துறை என்றும் (வீட்டுத் துறை). முதலீட்டுப் பண்டங்களை விரும்பும் துறை (வணிகப் பிரிவினர்கள்) என்றும் இரண்டே துறைகள் இருக்கக்கூடிய எளிமையானதொரு பொருளாதாரத்தில்தான் சேமிப்பையும் முதலீட்டையும் பற்றிய மேலே குறிப்பிட்டுள்ள பகுத்தாய்வு உண்மையானதாக இருக்க முடியும். பொறியின் இயக்கம் மிகவும் எளிமையாகவும், மென்மையாகவும் செல்வதைப் பாதிக்கும் ஒரு சில காரணிகளும் இருக்கின்றன. நவீனப் பொருளாதாரம் ஒன்றில் இருக்கக்கூடிய இத்தகைய சில காரணிகளும் கருதப்படவேண்டும். முதலாவதாக, மூலதனச் சந்தையை அணுகாமலேயே நவீன வணிகங்கள் புதிய முதலீடுகளைச் செய்ய முடியும் அல்லது தங்களின் மூலதனத்தின் இருப்பை அதிகரிக்க முடியும். வெற்றிப் பாதையில் நடைபோடும் வணிக நிறுவனங்கள் தங்கள் இலாபத்தின் ஒரு பகுதியை மறுமுதலீடு செய்வதில் ஈடுபடுத்த முடியுமாதலால், இது முடியத்தக்கதாகும். உண்மையாகவே, வணிக நிறுவனங்கள் அவற்றின் செயல் அளவுகளை அதிகரிப்பதற்கான மிக முக்கியமான வழிகளில் மிகச் சிறந்த வழியாக ஆதாயத்தை மறு முதலீடு செய்வது என்ற முறை நவீன நாடுகளில் இருக்கிறது. வணிக நிறுவனங்கள் அவைகளின் முதலீட்டிற்கான நிதியாக்கத்திற்காக அவைகளின் சொந்த ஆதாயத்தை எந்த அளவுக்குச் சார்ந்திருக்கின்றனவோ அந்த அளவுக்கு அவைகள் மூலதனச் சந்தையைத் தவிர்க்க முடியும். இரண்டாவதாக, நவீன அரசுகள், குறிப்பாக, குறைந்த வளர்ச்சியுடைய அரசுகள் முதலீட்டுத் துறையில் மென்மேலும் அதிகரித்துவரும் சிறப்புமிக்க பங்கை ஆற்றிவருகின்றன. இந் நடவடிக்கைகளின் காரணமாக நுகர்வு, முதலீடு ஆகியவைகளுக்கிடையே பயன்படுத்துவதற்காக மூலவளங்களைப் பகிர்வதை அரசுகள் நேரிடையாகவே பாதிக்கலாம். வரி விதித்தலை அதிகரிப்பதன் மூலம் நுகர்வின் அளவை அரசு குறைக்கலாம். இதன் வழியாக அரசாங்கத்தின் கைக்கு வந்துசேரும் பண இருப்புகள் நுகர்வுப் பண்டங்களின் அல்லது உற்பத்திப்பண்டங்களின் அளிப்பை அதிகரிப்பதற்குப் பயன்படுத்தப்படலாம். தாங்களாகவே நுகர்வுப் பண்டங்களின் தேவையைக் குறைத்தாலும், அல்லது வரியின் காரணமாக நுகர்வைக் கட்டுப்படுத்திக் கொள்ளுமாறு அவர்கள் கட்டாயப்படுத்தப்பட்டாலும் பொருளாதாரத்தில் சேமிப்பு அதிகரிக்கிறது. முதலில் குறிப்பிட்டதில் சேமிப்பு தன்னிச்சையாகத் தோன்றுகிறது. இரண்டாவதாகக்

குறிப்பிட்டதில் கட்டாயப்படுத்தப்பட்டதால் சேமிப்பு தோன்றுகிறது. அதோடு அதிகரிக்கப்பட்ட வரிகளின் காரணமாகத் தோற்றுவிக்கப்படும் முதலீடு தடையற்ற சந்தைச் சக்திகளின் இயக்கத்தால் நிர்ணயிக்கப்படாமல், அரசாங்கத்தின் விருப்பு வெறுப்பால் நிர்ணயிக்கப்படுகிறது. மூன்றாவதாக, பணத்தைத் தோற்றுவிப்பதற்கான அல்லது அழிப்பதற்கான வங்கிகளின் சக்தி, நுகர்வு, முதலீடு ஆகியவைகளுக்கிடையில் உண்மை மூலவளங்களைப் பகிர்வதைப் பாதிக்கிறது. வங்கிகள் கடன்களை அதிகரிக்கும்போதும் சமுதாயத்திற்குக் கிடைக்கும் பண இருப்புகள் அதிகரிக்கப்படுகின்றன. வேலையில் நிறைவுநிலை இருப்பதாகக் கருதிக்கொண்டால், நுகர்வுத் தேவையில் அதைப் போன்ற குறைவு எதுவும் இல்லாமலேயே வங்கிகளின் இந்த நடவடிக்கையானது முதலீடு செய்பவர்கள் கைகளில் அதிகமான அளவு பணம் கொடுக்கலாம். ஆனால், அரசாங்கத்திற்கு ஆதரவாக அல்லது தனியார் வணிகத்திற்கு ஆதரவாக வங்கிகள் கடனை விரிவாக்கும் அத்தகைய சூழ்நிலையில் அமிதத் தேவையானது பண வீக்கத்தைத் தோற்றுவித்து நுகர்வின் பருமத்தைக் குறைத்துவிடும். முதலீட்டுத் தேவையின் அதிகரிப்புக்கு இணையாக இருக்கும்வண்ணம் பொருளாதாரத்தில் கட்டாயச் சேமிப்பை இப் பணவீக்கம் தோற்றுவிக்கிறது. இறுதியாக, ஒரு நாட்டின் சேமிப்பு அளவையும் முதலீட்டு அளவையும் அந் நாட்டின் அயல்நாட்டு வணிகம் பாதிக்கிறது. நிகர இறக்குமதியானது நுகர்வுப் பண்டங்களின் அளிப்பை அதிகரித்து அதன் வழியாக உண்மை மூலவளங்களை முதலீட்டு நோக்கங்களுக்காகத் தருகிறது. சேமிப்பு அதிகரிப்புகளின் விளைவுகளைப் போலவே, நிகர இறக்குமதியின் விளைவுகளும் இருக்கின்றன. அதற்கு மாறாக, இறக்குமதிகளுக்கு அதிகமானதாக ஏற்றுமதிகள் இருக்குமானால் அத்தகைய சாதகமான வணிகக் கொடுக்கல் நிலைமையுடைய நாடு அயல்நாடுகளிலிருந்து பெற வேண்டியவற்றை அதிகரித்துக்கொண்டு செல்லும். அது முதலீட்டோடு அதிகப்படியாகச் சேர்ப்பதனால் உண்டாகும் விளைவுகளைப் பெற்றிருக்கும்.

செலவு அல்லது சேமிப்புத் தொடர்பான அரசாங்க நடவடிக்கை சிக்கலை அதிகமாக்குகிறது. ஆனால், சேமிப்பு, முதலீடு ஆகியவற்றினிடையேயுள்ள சமத்துவத்தைப்பற்றிய அடிப்படைக் கொள்கையை அரசாங்கத்தின் நடவடிக்கை பாதிக்கவில்லை. வரி வருமானத்திற்கும் நடப்புச் செலவுகளுக்கும் உள்ள வேறுபாடுதான் அரசாங்கத்தின் சேமிப்பாகும். வரி விதிப்பதன் வாயிலாக அரசாங்கம் அதிகப்படியான வருமானத்தை வசூலிக்கும்போது

தனிநபரின் சேமிப்புகள் வசூலிக்கும் அளவுக்குக் குறைகின்றது. அதிகப்படியான வருமானங்கள் அரசாங்கத்தின் பண இருப்பு நிலையை அதிகரிக்கச் செய்யுமாஞல் அரசாங்கச் சேமிப்பின் அதிகரிப்பு தனியார் துறைச் சேமிப்பின் குறைவுக்குச் சமமாக இருக்கும். அப்போது முதலீட்டு அளவில் எந்த விதமான வேறுபாடும் இல்லை என்ருகிறது. அதிகப்படியான வரி வருமானத்தை அரசாங்கம் முதலீட்டு நோக்கங்களுக்காகப் பயன்படுத்தும்போது தனியார் துறையில் குறைவான அளவு சேமிப்பும் குறைந்த அளவு முதலீடும் இருக்கும். ஆஞலும், தனியார் துறையில் ஏற்படும் இக் குறைவு அரசு துறையின் அதிகரித்த சேமிப்பிஞலும் முதலீட்டிஞலும் ஈடுசெய்யப்படுகிறது. எனவே, மொத்தச் சேமிப்பும் மொத்த முதலீடும் சமமாகவே இருக்கும். அதாவது, பொருளாதாரம் முழுமைக்குமாகப் பார்க்கும்போது, தனி நபர்களின் சேமிப்புகளும், வணிக நிறுவனங்களின் சேமிப்புகளும், அரசாங்கத்தின் சேமிப்புகளும் சேர்ந்து மொத்த முதலீட்டிற்குச் சமமாக இருக்கும்.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தனிநபர் வருமானம் மிகவும் குறைவாக இருக்கிறது. அதே நேரத்தில் நுகர்வு மனப்பாங்கு மிகவும் அதிகமாக இருக்கிறது. எனவே, இந் நாடுகளில் சேமிப்பின் அளவு மிகவும் குறைவாக இருக்கிறது. அதோடு சேர்ந்து முதலீட்டு விகிதம், வருமான வளர்ச்சி விகிதம் ஆகியவைகளும் குறைவாக இருக்கின்றன. இதோடு பெருகிவரும் மக்கள் தொகையின் அழுத்தமும் சேர்ந்துகொள்கிறது. இப் பெருகிவரும் மக்கள் தொகையின் அழுத்தம் தனிநபர் வருமானத்தை இன்னும் குறைவானதாக ஆக்குகிறது. எனவே, சேமிப்பின் அளவை அதிகரிப்பதும் அதன் வாயிலாக வருமான வளர்ச்சி விகிதத்தை விரைவுபடுத்துவதும் குறைந்த வருமானமுடைய நாடுகளின் பெரும் சிக்கலாகும். 18ஆம் நூற்ருண்டையும் 19ஆம் நூற்ருண்டையும் சேர்ந்த பொருளாதாரப் புலவர்களால் பொருளாதார வளர்ச்சியால் அதிகப்படியான சேமிப்பு விடுமுதலின் சிறப்புத் தன்மை மிகவும் வலியுறுத்தப்பட்டுள்ளது. இருப்பினும், இருபதாம் நூற்ருண்டில், வளர்ச்சி பெற்ற பொருளாதாரத்தில் அதிகப்படியாகச் சேமிப்பதன் நன்மைகள் விஞவிற்குரியதொன்ருக இருக்கின்றன. 1930 ஐச் சேர்ந்த ஆண்டுகளில் தோன்றிய பெரும் பொருளாதார மந்தமும், வேலையில்லாப் பிரச்சினையைப் பற்றிய பேராசிரியர் கீன்ஸ் அவர்களின் பகுத்தாய்வும் சிக்கனமாக இருக்கும் பழக்கமானது ஒரு சில நேரங்களில் நன்மை தரத்தக்கதாக இல்லாமல் தீமை பயக்கத்தக்கதாகவும் இருக்கிறது என்ற உண்மையின் பக்கம் நமது கவனத்தைத்

திருப்பியிருக்கிறது. விளைவின் தேவையைப் பொறுத்துதான் வேலை நிலையின் தேவை அமைகிறது. எனவே, தனியார்களின் சேமிப்பு நடவடிக்கைகளில் உள்ளார்ந்திருக்கக் கூடிய எந்த விதமான நுகர்வுப் பண்டங்களின் தேவைக் குறைவும் வேலையின்மையைத் தோற்றுவிக்கும். அதாவது, இந் நுகர்வுப் பண்டங்களின் தேவைக் குறைவானது முதலீட்டுப் பண்டங்களின் தேவை அதிகரிப்பிஞல் ஈடு செய்யப்படாவிட்டால் அது வேலையின்மையைத் தோற்றுவித்துவிடும். இப் பகுத்தாய்வின்படி சமுதாயத்தின் செலவு அளவுகளை அதிகரித்தால்தான் வேலை நிலையையும் விளைவு அளவையும் அதிகரிக்க முடியும் என்ருகிறது. ஒரு மனிதனின் செலவு, மற்ருெரு மனிதனின் வரவு. எனவே, சேமிப்பு அல்லது நுகர்வுப் பண்டங்களின்மீதான செலவைத் தவிர்த்தல் என்பது நிச்சயம் பொருளாதாரத்திற்குத் தீங்கு விளைவிக்கத் தக்கதாகும். அத்தகைய விளைவானது, உற்பத்தியாளர்கள் பண்டங்களின் மீதான செலவுகள் அதிகரிக்கப்படுவதன் வாயிலாகத் தவிர்க்கப் படலாம். உற்பத்தியாளர்கள் பண்டங்களின்மீதான இத்தகைய செலவுகள் தேவைப்பட்டால், அரசாங்கத்தின் பற்ருக்குறை நிதியாக்கத்தின் மூலம் தோற்றுவிக்கப்படலாம்.

போர்ச் செலவுகள், அரசாங்கத்தின் பேரளவுச் செலவுகள், பணவீக்கம் ஆகியவைகள் விலை உயர்வைத் தடுப்பதில் சேமிப்பின் பங்கு என்ற சேமிப்பின் இன்ெருரு பகுதியைப் பற்றிய சிறப்புத் தன்மையை அண்மைக் காலத்தில் வெளிப்படுத்தியுள்ளன. பொருளாதாரத்தில் அமிதச் செலவின் காரணமாகப் பணவீக்கம் அமைந்திருந்தால், இத்தகைய அமிதச் செலவானது வங்கிகளது கடன் பெருக்கத்திஞலும் பண அளிப்பின் அதிகரிப்பிஞலும் தோன்றியிருக்குமாஞல் இப் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்து வதற்கான தருக்க வாதத்திற்குப் பொருத்தமான வழி செலவு அளவைக் குறைப்பதுதான். முதலீட்டுத் தேவை குறைக்கப்பட முடியாததாக இருந்தால் நமக்குக் கிடைக்கக் கூடிய மாற்றுவழி, நுகர்வுத் தேவையைக் குறைப்பதுதான். வரி விதிப்பதன் வாயி லாகவும், கட்டாயமாகக் கடன் வாங்குவதன் மூலமாகவும், நுகர்வுப் பண்டங்களின் உற்பத்தியையும், நுகர்வையும் நேரிடை யாகக் கட்டுப்படுத்துவதன் வாயிலாகவும் நுகர்வு அளவைக் குறைக்க முடியும். உலகின் பல நாடுகளிலும் உள்ள பணவீக்க நிலையில் விலைகளைக் கட்டுப்படுத்தி ஒரு மட்டத்திலிருத்துவதற் கான வழியாக அதிகரித்த சேமிப்புப் பயன்படுகிறது என்று சேமிப்பின் சிறப்பு வலியுறுத்தப்படுகிறது.

சேமிப்பைப்பற்றித் தொன்மைப் பொருளாதாரக் கருத்தி னர்கள் கொண்டிருந்த கருத்துகள் இன்றைய குறைந்த வளர்ச்சி

யுடைய நாடுகளுக்கு மிகவும் பொருத்தமானவைகளாக இருக்கின்றன. பொருளாதாரத்தின் உறுதித் தேவையை நிலைநிறுத்துவதற்குச் சேமிப்பை முறைப்படுத்துவது இந் நாடுகளின் சிக்கல் அன்று. இந் நாடுகளில் உள்ள உண்மையான சிக்கல் சேமிப்பைத் தோற்றுவிப்பதும் முன்னேற்றுவிப்பதுமேயாகும். இப் பொருளாதாரங்கள் பின் தங்கிய பொருளாதாரங்களாகவும் அவைகளின் முதலீட்டுத் தேவைகள் கிடைக்கும் சேமிப்பைக் காட்டிலும் அதிகமானவைகளாகவும் இருக்கும்வரை தேவையானது, மூலவளங்களை முழுஅளவு வேலையில் இருத்தாமலிருப்பதற்கான வாய்ப்புகள் கிடையாது. அதிகச் சேமிப்பினலோ, நுகர்வுப் பண்டங்களுக்கான தேவைக் குறைவினலோ வேலையின்மை தோன்றவில்லை. சேமிப்பின் பற்றுக் குறையினலும் அதன் காரணமாக உழைப்பு வேலையில் ஈடுபடுத்துவதற்குத் தேவையான மூலதனச் சாதனங்களின் பற்றுக்குறையின் காரணமாகவும் வேலையின்மை தோன்றுகிறது. இன்றைய பின்தங்கிய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கு 18ஆம் நூற்றுண்டில் அல்லது 19ஆம் நூற்றுண்டில் ஐரோப்பிய நாடுகளிலிருந்ததைப் போன்ற நுகர்வுத் தவிர்ப்பு, நுகர்வைக் கட்டுப்படுத்துதல், வயிற்றைக் கட்டுப்படுத்துதல் ஆகியவைகள் எல்லாம் மிகவும் அவசியமானவைகளாகும். சுருங்கக் கூறின், ஏழ்மை நாடுகளில் இன்றைய சேமிப்புச் சிக்கலானது, சேமிப்பை விரிவுபடுத்துவதும் தகுதியான வகையில் உற்பத்தி முதலீட்டிற்காக அதைப் பயன்படுத்துவதுமேயாகும்.

இந் நாடுகளில் இருக்கக்கூடிய குறைந்த வருமானம், குறைந்த சேமிப்பு, குறைந்த மூலதன ஆக்கநிலை என்ற நச்சுச் சுழல்களை உடைத்தெறிவதுதான் இந் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் உள்ளார்ந்திருக்கிறது. சேமிப்பு விகிதமும் முதலீட்டு விகிதமும் தேவயையான அளவுக்கு உயர்த்தப்பட்டுவிடுமானல், நாட்டு வருமானமும் தனிநபர் வருமானமும் அதிகரிக்கும். அதோடு சேமிப்பு விடுமுதலும் விரிவடையும். நாட்டு வருமான உயர்வே சேமிப்புக்கு வகைசெய்கிறது. அதன் பிறகு பொருளாதாரத்திற்கு எந்தவிதமான இடரையும் தராதவண்ணம் சேமிப்பு தானே தோன்றுவதாக அமைந்துவிடுகிறது.

## வளர்ச்சி பெற்ற நாடுகளிலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளிலும் சேமிப்புகள்
## (Savings in Developed and Underdeveloped Countries)

வளர்ச்சி பெற்ற நாடுகளில் உள்ள சேமிப்புகள் ஒரு சில இயல்புகளைக் கொண்டிருக்கின்றன. இவைகள் யாவும் குறைந்த

வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள இயல்புகளிலிருந்து வேறுபட்டிருக்கின்றன. முதலாவதாக, ஏழ்மை நாடுகளிலிருக்கும் சேமிப்பு அளவைக் காட்டிலும் வளர்ச்சி பெற்ற நாடுகளின் சேமிப்பு அளவுகள் எப்போதுமே அதிகமானவைகளாக இருக்கின்றன. இரண்டாவதாக, சேமிப்பு விகிதத்தில் குறிப்பிடத்தக்க அளவிலாலான நிலைத் தன்மை இருக்கிறது. மூன்றாவதாக, வளர்ச்சி பெற்ற நாடுகளில் பொருளாதாரம் நிலைத்திருக்காமையினால் சேமிப்போடு தொடர்புடைய பெரும் சிக்கல் அமைந்திருக்கிறது.

**(அ) வளர்ச்சி பெற்ற பொருளாதாரங்களில் அதிகமான அளவிலான சேமிப்புகள்** (High Level of Savings in Developed Economics)

அட்டவணை 10-ல் உள்ள எண்கள் வளர்ச்சி பெற்ற நாடுகள், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஆகியவைகளின் சேமிப்புக்களுக்கிடையேயுள்ள வேறுபாடுகளைக் காட்டுகின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள், ரொடீசியா (Rhodesia), நயாசாலாந்து (Nayasaland), வெனிசுலா, காங்கோ ஆகியவற்றில் காணப்படும் அதிகமான சேமிப்பு அளவு அசாதாரணமானதாகும். இந் நாடுகளில் அந்நியர்களுக்குச் சொந்தமான தொழில் நிறுவனங்கள் பெற்ற ஆதாயங்களை மறுமுதலீடு செய்ததனால்தான் இவ்வாறான அதிகமான அளவிலான சேமிப்பு அந்த நாடுகளில் காணப்படுகிறது. எண்ணெய் போன்ற சில ஏற்றுமதிப் பண்டங்களினால் பெறப்படும் வருமானமும் அதிகமான சேமிப்புக்கான காரணமாக இருக்கிறது. ஆனால், குறைந்த வருமான நாடுகளில் பெரும்பான்மையானவற்றில் சேமிப்பு அளவு நாட்டு வருமானத்தில் 10% அளவிற்கும் குறைவாகவே இருக்கிறது. ஆனால், பொருளாதார வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளில் இது நாட்டு வருமானத்தில் ஏறத்தாழ 20% அளவாக இருக்கின்றது. 1948–50 ஆகிய மூன்றாண்டுகளில் மொத்த நாட்டு விளைவுக்கு மொத்தச் சேமிப்பின் விகிதம் ஐக்கிய அமெரிக்க நாட்டில் 15%-க்கு அதிகமாகவும், கனடாவில் 21%-க்கு அதிகமாகவும் இருந்தது. தனியார் சேமிப்பு 4% முதல் 6% வரையிலும், வணிகத்துறைச் சேமிப்பு 5% முதல் 8% வரையிலும், அரசாங்கக் கணக்குகளின் எச்சம், சமுதாயப் பாதுகாப்புச் சேமிப்புகளின் அதிகரிப்பு அதைப்போன்ற பிற நிதிகள் ஆகியவைகள் ஏறத்தாழ 6% வரையிலுமாக இருந்து இஃது அமைக்கப்பட்டுள்ளது. 1950-59-ல் ஜப்பானில் மொத்த உள்நாட்டுச் சேமிப்பு ஆண்டொன்றுக்கான மொத்த நாட்டு விளைவில் 28.7% இருந்தது. ஆக 1957-ல் செலவழிக்

## அட்டவணை 10

### மொத்த உள்நாட்டுச் சேமிப்பு நிலைகளும், நிகர உள்நாட்டுச் சேமிப்பு நிலைகளும் 1950-59 (மொத்த நாட்டு உற்பத்தியின் %)

| அதிக வருமானம் பெறும் நாடுகள் | | | குறைந்த வருமானம் பெறும் நாடுகள் | | |
|---|---|---|---|---|---|
| நாடு | மொத்த உள் நாட்டுச் சேமிப்பு | நிகர உள் நாட்டுச் சேமிப்பு | நாடு | மொத்த உள் நாட்டுச் சேமிப்பு | நிகர உள் நாட்டுச் சேமிப்பு |
| ஜப்பான் | 28.7 | 21.1 | ரொடீசியாவும் | | |
| நார்வே | 27.1 | 17.2 | நயாசாலாந்தும் | 20 | 14 |
| பின்லாந்து | 26.7 | 21.7 | வெனிசுலா | 24 | 16 |
| ஜெர்மனி | | | காங்கோ | 24 | 16 |
| (ஐக்கியக் குடியரசு) | 26.3 | 17.2 | ஜமைக்கா | 12 | 5 |
| ஆஸ்திரேலியா | 26.1 | 20.2 | பியூர்டோரிக்கோ | 2 | 14 |
| நெதர்லாந்து | 25.7 | 15 9 | அர்ஜென்டைனா | 18 | 8 |
| கனடா | 22.5 | 11.4 | பர்மா | 20 | 14 |
| நியூசிலாந்து | 22.5 | 15.9 | ஸ்பெயின் | 15 | 8 |
| ஆஸ்திரியா | 20.4 | 13.3 | கொலம்பியா | 18 | 9 |
| இத்தாலி | 19.5 | 10.6 | கிரீஸ் | 9 | 4 |
| ஐக்கிய அமெரிக்க | | | பிரேசில் | 15 | 10 |
| நாடு | 18 6 | 9.9 | ஈராக் | 17 | 13 |
| டென்மார்க் | 18.5 | 12.4 | துருக்கி | 12 | 8 |
| பிரான்சு | 18.4 | 9.1 | சிலோன் | 11 | 9 |
| பெல்ஜியம் | 17.6 | 8.0 | சில்லி | 8 | 1 |
| இங்கிலாந்து | 15.2 | 7.2 | பிலிப்பைன்ஸ் | 7 | 2 |
| | | | இந்தோனேசியா | 5 | 2 |
| | | | இந்தியா | — | 7 |

மூலம் : *World Economic Survey*, 1960, U. N., pp. 21,, 61 ஆகியவை.

கத்தக்க வருமானத்தில் 18% சேமிக்கப்பட்டது; மொத்தச் சேமிப்பு மொத்த நாட்டு விளைவில் 32.1% என்ற அதிகமான அளவுக்குச் சென்றது. ஜப்பான் நாட்டு மக்களுக்குச் சேமிக்க வேண்டுமென்ற மிகவும் உறுதியான சேமிப்புப் பழக்கம் உண்டு என்ற உலகறிந்த உண்மையின் காரணமாகவே முக்கியமாக இவ் வுயர்ந்த சேமிப்புத் தோன்றியது. இத்தகைய அதிகமான சேமிப்புக்குச் சாதகமான காரணிகளாக நாட்டின் பொருளா தாரத்தின் மிக வேகமான முன்னேற்றமும், தனிநபர் வருமானங் களின் குறிப்பிடத்தக்க அளவிலான அதிகரிப்பும் அமைந்திருந்தன. முன்னேற்றமடைந்த மேலை நாடுகளில் மிக உயர்ந்த நிலையிலான சேமிப்புகளுக்கும் முதலீடுகளுக்கும் பெரும்பான்மையான காரணமாக வணிக நிறுவனங்களின் பிரித்துத் தரப்படாத ஆதாயத்தை மறு முதலீடு செய்தது அமைந்திருந்தது. இரண்டாம் உலகப் போருக்குப்பின் வந்த ஆண்டுகளில் இத்தகைய சேமிப்புக் குவிப்புகளுக்குப் பண வீக்கம், விற்பவர்களின் சந்தை இருப்பது, வணிக வருமானங்களின் மிக வேகமான பெருக்கம் போன்ற பல சாதகமான காரணிகள் மிகவும் உதவி செய்துள்ளன. அதோடு இலாபப் பங்குகளைப் பகிர்ந்தளிப்பதில் ஒரு சில தடைகள், மறு முதலீடு செய்யப்படும் வணிக லாபங்களுக்கு அரசு வரிக் கொள்கை களில் சலுகைகள் தருவது போன்றவற்றினாலும் இத்தகைய சேமிப்புக் குவிப்புகள் தோன்றியுள்ளன. கூட்டுப்பங்குக் கம்பெனி களின் வருமானங்கள் மிக அதிகமான அளவில் வரி விதிக்கப் பட்டன. ஆனால், இயந்திரங்களைப் புதுப்பிப்பதற்காகவும் மற்றும் இவை போன்றவற்றிற்காகவும் மேற்கொள்ளப்படும் செலவு களுக்குச் சலுகைகள் தரப்பட்டன. மூலதனச் சந்தை மிக மெதுவாக வளர்ச்சி பெற்றதும் தொழில், வணிகம் ஆகியவற்றின் வளர்ந்து வரும் தேவைகளை அம் மூலதனச் சந்தைகளால் ஈடு படுத்த முடியாததும், லாபத்தை மறு முதலீடு செய்வதற்கு மிகவும் உதவிசெய்திருக்கின்றன. அண்மை ஆண்டுகளில் இங்கிலாந்தில் தனியார் சேமிப்புகளிலும் கம்பெனிச் சேமிப்புகளிலும் தராதரமான இறக்கம் தோன்றியுள்ளது. பொதுச் சேமிப்புகள், வரவு செலவுக் கணக்கில் உபரி, நாட்டுக் காப்பீடு தருவது ஆகிய பல வழிகளில் தோன்றிய சேமிப்பு அளவு தனியார்சேமிப்புக் குறை வையும், கம்பெனிச் சேமிப்புக் குறைவையும் ஈடுகட்டி அதைக் காட்டிலும் அதிகமானதாக இருக்கிறது. ஒருமொத்தமாகப் பார்க்கும்போது, முன்னேற்றமடைந்த நாடுகளில் காணப்படும் சேமிப்பு அதிகரிப்பானது, அதிகமான தனிநபர் வருமானங் களாலும் சேமிப்பதற்கான வாய்ப்புகளினாலும்தான் தோன்றியது எனலாம்.

### (ஆ) சேமிப்பு விகிதத்தில் நிலையான தன்மை (Constancy in the Rate of Savings)

பொருளாதார வளர்ச்சி பெற்றிருக்கும் நாடுகளில் நீண்டகால அளவில் நாட்டு வருமானமும் தலா வருமானமும் மிக வேகமாக அதிகரித்திருந்தாலும் நாட்டு வருமானத்தில் சேமிப்பின் விகிதம் நிலையாக இருக்கும் போக்கு இருந்திருக்கிறது. சேமிப்பு விகிதம் மொத்தமாகப் பார்க்கப்பபடும்போது நிலையாகவே இருந்திருக்கிறது. வளர்ச்சிபெற்றுள்ள நாடுகளின் சேமிப்புகளின் இரண்டாவது இயல்பாகும் இது. ஐக்கிய அமெரிக்க நாடுகளுக்கான சைமன் குஸ்னெட் அவர்களின் கண்டுபிடிப்புகளாலும், கனடா, ஸ்வீடன் ஆகிய நாடுகளுக்கான மோடிக்லியானியின் (Modigliani) கண்டு பிடிப்புகளாலும் இது பெறப்படுகிறது. ஐக்கிய அமெரிக்க நாட்டில் 1897–1949 ஆகிய ஆண்டுகளில் சேமிப்பானது நாட்டு வருமானத்தில் 15% அளவாக நிலையானதாக இருந்தது. ஐக்கிய அமெரிக்க நாட்டின் சேமிப்பில் குறுகிய கால வேறுபாடுகள் நிறையக் காணப்பட்டாலும், சேமிப்பு வருமான விகிதம் வணிக மலர்ச்சிக் காலத்தில் மிகவும் கூர்மையாக அதிகரித்தும், மந்தக் காலத்தில் செங்குத்தாகச் சரிந்தும் காணப்பட்டாலும், சேமிப்பு வருமானமானது ஒருமொத்தமாகப் பார்க்கப்படும்போது கடந்த 60 ஆண்டுகளில் ஏறத்தாழ நிலையாகவே இருந்திருக்கிறது என்று கோல்ட்ஸ்மித் (Goldsmith) குறிப்பிடுகிறுர்.[1] அந் நாட்டின் சேமிப்பு ஆண்டொன்றுக்கு $1\frac{3}{4}\%$ அளவில் அதிகரித்திருக்கிறது. இது மொத்த நாட்டு வருமான விளைவு வளர்ச்சி விகிதத்தைக் காட்டிலும் சிறிது குறைவனது. வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளில் சேமிப்பு வருமான விகிதத்தின் நிலையான தன்மைக்குப் பல தரப்பட்ட விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் மிக அதிகமான வேகத்தில் அதிகரித்துச் சென்றும், பிறகு நிலையாக இருந்தும் அல்லது குறைந்து சென்றும், இருக்கத்தக்க இலாப விகிதப் போக்கு, இத்தகையதோர் இயல்புக்கான பல காரணிகளில் ஒரு காரணியாக இருக்கலாம் என ஆர்தர் லூயிஸ் கருதுகிறுர். பொருளாதார வளர்ச்சியின் பின் பகுதிகளில் மிக வேகமாகத் தோன்றும் உண்மைக் கூலி உயர்வினுல்தான் குறிப்பிட்டதொரு நிலைக்குப்பின் இலாபம் நிலையான அளவில் இருப்பது அல்லது குறைந்துசெல்வது என்ற போக்குத் தோன்றுகிறது என்று அவர் கருதுகிறுர்.

[1] Goldsmith, Raymond W., Trends and Structural Cnanges in Savings in the Twentieth Century,' *Savings in the, Modern Economy*, Heller. W. W. and Others (Eds), University of Minnesota, Minneapolis, 1953 pp 133-134

**(இ) சேமிப்பையும் முதலீட்டையும் இசைவிப்பதிலுள்ள சிக்கல். (The Problem of Adjustment between Savings and Investment)**

வளர்ச்சி பெற்ற பொருளாதாரங்களில் உயர்ந்த நிலையிலான சேமிப்பு தானாகவே தோன்றக்கூடியது. ஆனால் முதலீட்டுத்தேவை நிலைக்கும் சேமிப்பு நிலைக்கும் இசைவிப்பைத் தோற்றுவித்து, அதன் வழியாகப் பொருளாதாரம் நிலையானதாக இருக்காத ஒரு நிலையைத் தவிர்க்க வேண்டிய சிக்கலை உயர்ந்த நிலையில் உள்ள தானே தோற்றுவித்துக்கொள்ளும் சேமிப்பு தோற்றுவிக்கிறது. தடையற்ற தன்முயற்சி முதலாளித்துவப் பொருளாதாரம் ஒன்றில் பல வழிகளிலுமான முதலீட்டு அளவுகளைத் தீர்மானிப்பவர்கள் சேமிப்பவர்களிலிருந்து வேறுபட்டிருக்கிறார்கள். எனவே, திட்டமிட்ட முதலீடும் திட்டமிட்ட சேமிப்பும் சமமாக இருக்கும் வாய்ப்பு மிகவும் அரிதானதொன்றாகவே இருக்கமுடியும். சந்தைச் சக்திகள், வட்டிவிகிதம் ஆகியவற்றின் செயல்களின் மூலம் சேமிப்புகளுக்கும் முதலீட்டிற்கும் இடையே ஓர் இசைவிப்பைக் கொணர முடியுமென்று வழிவழியாகக் கருதப்படுகிறது. முதலீட்டுத் தேவையோடு ஒப்பிடுகையில் அதிகமாக இருக்கும் சேமிப்பு வட்டி விகிதத்தைக் குறைத்துச் சேமிப்பிற்கான தேவையை அதிகரித்துவிடும். அதே போன்றுஅதிகமான முதலீடானது, வட்டிவிகிதத்தை அதிகரிப்பதன் மூலம் அதிகமான சேமிப்புக்கு வகை செய்துவிடும். சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் இத்தகைய மென்மையான இசைவிப்பு கோட்பாடுகளின் அடிப்படையிலும் புள்ளி விவரங்களின் அடிப்படையிலும் வினாவிற்குரியதொன்றாக்கப்படுகிறது. குறிப்பிட்டதொரு நேரத்திலான சேமிப்பு நிலையானது வருமான நிலையால் நிர்ணயிக்கப்படுகிறதென்றும், ஆனால் முதலீட்டு விகிதமானது வருமான வளர்ச்சி விகிதத்தால் நிர்ணயிக்கப்படுகிறது என்றும் அண்மைக்காலப் பகுத்தாய்வு ஒன்று காட்டுகிறது. சேமிப்பிற்கான தேவை வணிகர்களிடமிருந்து தோன்றுகிறது. அவர்களது பண்டங்களுக்கான எதிர்காலத் தேவையைப்பற்றிய அவர்களின்எதிர்பார்த்தல்களினால்அவர்களது முதலீட்டுமுடிவுகள் நிர்ணயிக்கப்படுகின்றன. எனவே, சேமிப்புக்கும் முதலீட்டிற்குமிடையேயானதொரு இடைவெளிக்கு வாய்ப்பு உண்டு. இவ்விடைவெளியானது பொருளாதாரத்தின் நிலையற்ற தன்மையைத் தோற்றுவிக்கிறது. பொதுவாக, முதலீட்டைக் காட்டிலும் சேமிப்பு அதிகமாக இருந்தால் அது பணவாட்ட நிலையைத் தோற்றுவிக்கிறது. சேமிப்பைக் காட்டிலும் முதலீடு அதிகமானதாக இருந்தால் அது பணவீக்க விளைவைப் பெற்றிருக்கிறது. வளர்ச்சி பெற்ற நாடுகளில் உண்மை அளவுகளில் (Absolute terms) குறிப்

பிடப்படும் சேமிப்பின் பருமம் மிகவேகமாக அதிகரித்துக்கொண்டு வரும் போக்கானது அந் நாடுகளின் முதலீட்டில் அத்தகைய சேமிப்புகளை வெளியிடுவதற்கான வகைகளைக் கண்டுபிடிப்பதற்கான சிக்கலைத் தோற்றுவித்திருக்கிறது. சேமிப்புகள் அதிகரிக்கும் போது முதலீட்டு வாய்ப்புகளும் அதிகரிக்கத் தவறிவிடுகின்றன என்று கருதிக்கொண்டால் (தேக்கநிலைக் கோட்பாடுகளின்படி வளர்ச்சியடைந்த நாடுகளில் இவ்வாறிருப்பதற்கான வாய்ப்புகள் உண்டு.) வருமானத்தில் இறக்கம், அதிகரித்துவரும் வேலையின்மை ஆகிய விளைவுகள் தோன்றும். ஆனால், அறிவியல், தொழில் நுண்ணியல் ஆகியவைகளின் முன்னேற்றத்தினால் ஏராளமான வாய்ப்புகள் அண்மை ஆண்டுகளில் தோன்றியுள்ளதாலும், மக்களின் வாழ்க்கைத்தரத்தின் உயர்வினாலும், பலதரப்பட்ட பண்டங்களுக்கான தேவை மிக விரிவானதாக இருப்பதனாலும் தேக்கநிலைக் கோட்பாட்டை மிகவும் முக்கியமானதாகக் கருத வேண்டிய அவசியமில்லை. இருப்பினும் இது சேமிப்புக்கும் முதலீட்டிற்கும் இடையே ஒரு சமநிலையைத் நிலைநிறுத்த வேண்டுமென்ற வளர்ந்துவரும் நாடுகளின் மிக முக்கியமான சிக்கல் ஒன்றின் பக்கம் நமது கவனத்தைச் செலுத்தச்செய்கிறது.

### (அ) குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் குறைவாக உள்ள சேமிப்பு நிலை (Low of level Savingsin Underdeveloped Countries)

வளர்ச்சியடைந்த நாடுகளோடு ஒப்பிடுகையில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் உள்நாட்டுச் சேமிப்புகளின் நிலைகளை அட்டவணை 10-ல் கொடுக்கப்பட்டுள்ள எண்கள் தெளிவுபடுத்துகின்றன 'சாதாரணமான ஆண்டுகளிலும்கூட, மொத்த மக்கள் தொகையில் பெரும்பங்கு வகிக்கும் விவசாயிகள் சேமிக்கும் எச்ச அளவு மிகவும் குறைவாக இருக்கிறது' என்று இந்தியாவின் மைய வங்கி ஆய்வுக்கழகம் (Central Banking Enquiry Committee of India) 1930 ல் குறிப்பிட்டது.[1] "பல ஆண்டுகளாகப் பற்றுக் குறைத் துறையாக இருக்கும் கிராமப் பகுதித்துறையில் சேமிப்பு எப்பொழுதுமே அதிகமாக இருந்ததில்லை' என்று பன்னாட்டுச் செலாவணி நிதியின் (International Monetary Fund) ஆலோசனையின்படி ரிசர்வ் வங்கியின் அதிகாரி ஒருவரால் எழுதப்பட்ட அறிக்கையொன்று 19?2-ல் குறிப்பிட்டுள்ளது. இந்தியாவிலும் மற்றும் சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளிலும் உள்ள

[1] Quoted in Rangnekar, D G., *Poverty and Capital Development in India*, Oxford, London, 1959, pp 52-53.

உள்நாட்டுச் சேமிப்பின் பற்றுக்குறைக்குச் சான்றுகளாக இந் நாடுகளில் உள்ள குறைந்த அளவு முதலீடும் குறைந்த அளவு மூலதன ஆக்கமும் இருக்கின்றன. 1950–51–ல் நிகரச் சேமிப்பு இந்தியாவில் நாட்டு வருமானத்தில் 5%ஆக இருந்தது. ஆனால், அதே நேரத்தில் ஐக்கிய அமெரிக்க நாட்டில் இது 15%ஆக இருந்தது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள் இலத்தீன் அமெரிக்க நாடுகள் நல்ல பதிவைக் காட்டுகின்றன. 1946–48–ல் மொத்த நாட்டு வருமானத்தில் சேமிப்பின் அளவு கியூபாவில் 14. 6%, கொலம்பியாவில் 12.2%, பிரேசிலில் 11.2 %, மெக்சிகோவில் 10.8%, சில்லியில் 10.0% ஆக அமைந்திருந்தது. உலகம் முழுவதிலு முள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கான மதிப்பீடு செய்யப்பட்ட நாட்டு வருமானத்தில் ($ 97, 000 மில்லியன்) 5½% அளவாகத்தான் அல்லது மொத்தச் சேமிப்பு $ 5240 மில்லியன் என்ற அளவில்தான் இந் நாடுகளின் உள்நாட்டுச் சேமிப்பு இருந்தது என்று ஐக்கிய நாடுகளின் நிபுணர்களின் மதிப்பீடு ஒன்று குறிப்பிடுகிறது.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் மூலதனத் தேவை என்ற நோக்கில் பார்க்கும்போது ஏழ்மை நாடுகளின் பற்றுக்குறை மிகவும் தெளிவாகத் தென்படுகின்றது. மிக வேகமாகத் தொழில் மயமாக வேண்டுமானால் செலவு மிகுந்த மூலதனச் செறிவுள்ள திட்டங்களில் அதிகமான முதலீடுகள் தேவைப்படுகின்றன. ஒப்பிடக்கூடிய ஒரே மாதிரியான தொழில் நிறுவனங்களைப் பொறுத்தமட்டிலும்கூடக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் மூலதனத் தேவை மிகவும் அதிகமாகவே இருக்கின்றது. ஏனென்றால், இந் நாடுகளில் இத்தகைய மூலதனச் சாதனங்களை மிகுந்த செலவில் இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது. தவிர, இவற்றை நிறுவுவதற்கும் மிகுதியான அளவில் செலவாகிறது. துணைப் பணிகளைச் செய்யவேண்டிய அவசியமும், சேர்த்து வைக்கப்படுவதில் அதிகப்படியான இருப்பையும் பேரளவு மூலப் பொருள்களையும் வைத்திருக்க வேண்டிய அவசியமும் நிதித் தேவைகளை இன்னும் பெருக்கமடையச் செய்கின்றன. பெரும் பாலான நேரங்களில் மூலதனத் தேவையைப் பற்றிய தவறான மதிப்பீடுகள் செய்யப்படுகின்றன. இந் நாடுகளில் உள்நாட்டு மூலவளங்கள் கிடைப்பது அரியதாக இருப்பதாலும் திட்டமிடப் பட்ட மூலதனச் சந்தைகள் இல்லாமலிருப்பதாலும் நிதித் தேவைகளைப் பற்றிய குறைவான மதிப்பீடுகள் இத்தகைய தொழில் முயற்சிகளை அழிவுப் பாதையில் ஈடுபடுத்திவிடுகின்றன. உள்நாட்டுத் தனியார் சேமிப்புகள் ஏன் இத்தகைய முதலீடு களில் ஈடுபடுத்தப்படுவதில் தயக்கத்தைக் காட்டுகின்றன என்ப

தற்கான பல காரணங்களில் இதுவும் ஒரு காரணமாகும். மூலதனச் செறிவுள்ள திட்டங்கள் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் உதவும் என்றிருந்தாலும் இந் நாடுகளில் உள்ள தொழில் முயல்வோர்கள் தங்களின் நிதிப் பற்றுக்குறையின் காரணமாக மூலதனச் செறிவற்ற தொழில்களிலேயே நாட்டம் கொள்கிறார்கள். இவ்வாறாக, ஒரு நாட்டில் உள்ள சேமிப்புப் பற்றுக் குறையும், நிலைய வசதிகள் இல்லாமலிருக்கும் நிலையும் அந் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு ஊறு விளைவிக்கின்றன.

## (ஆ) சேமிப்பில் தேக்கம் (Stagnation in Savings)

வளர்ச்சியடைந்த நாடுகளோடு ஒப்பிடுகையில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சேமிப்பு குறைவாகவே இருக்கிறது. அதோடு பொருளாதார வளர்ச்சி விகிதத்தை விரைவுபடுத்துவதற்காக மிகவும் கடுமையான முயற்சிகள் மேற்கொள்ளப் படுகின்றன என்பது உண்மையாக இருந்தாலும்கூட, கடந்த சில ஆண்டுகளில் இந் நாடுகளில் சேமிப்பு வருமான விகிதமானது எந்த விதமான அதிகரிப்பையும் காட்டவில்லை. குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளில் உள்ள சேமிப்புகளைப்பற்றி ஐக்கிய நாடுகள் அமைத்துள்ள புள்ளிவிவரங்களில் இக் கருத்துக் காணப்படுகிறது. உள்நாட்டுச் சேமிப்பின் குறைவு குறிப்பாகக் காங்கோவிலும் (மொத்த நாட்டு விளைவில் 19% அளவாகவும்) பியூர்டோரிக்கோ, சிலோன் ஆகியவைகளிலும் (7%) மிகவும் குறிப்பிடத்தக்க அளவில் காணப்படுகின்றது. உள்நாட்டுச் சேமிப்பின் அங்கங்கள் அரசுத்துறை, வணிகத்துறை, வீட்டுத்துறை, ஆகிய துறைகள் பல நாடுகளிலும் அதிகமான அளவிலான வேறுபாடுகளைக் காட்டுகின்றன. ஜமைக்கா, ஈக்வடார், டிரினிடாட் ஆகிய, மூன்றே மூன்று நாடுகளில் மட்டும்தான் அரசு துறைச் சேமிப்பு மொத்த உற்பத்தியால் 2 விழுக்காடு அளவில் அல்லது அதைக்காட்டிலும் சிறிதளவு அதிகமான அளவில் அதிகரித்திருக்கிறது. வேறு ஐந்து நாடுகளின் அதிகரிப்பு ஒரு விழுக்காடு அளவில்தான் இருந்திருக்கிறது. மற்ற நாடுகளிலெல்லாம் அரசு துறைச் சேமிப்பின் அளவு ஏறத்தாழ நிலையானதாகவே மாறுதிருக்கின்றது அல்லது குறைந்தும் இருக்கின்றது. பர்மா, கோஸ்டாரிக்கா, சிலோன், ஹான்டுரஸ், காங்கோ, மொராக்கோ ஆகிய நாடுகளில் அரசு துறைச் சேமிப்பின் அளவு குறைந்திருக்கிறது. குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகள் பலவற்றிலும் அந் நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்காக அரசாங்கத்தின் பேரளவிலான நிதிப் பொறுப்புகளின் காரணமாக அந் நாடுகளின் அரசாங்கச் சேமிப்பு நிலையாக

இருந்ததை அல்லது குறைந்ததை ஓரளவுக்குப் புரிந்துகொள்ள லாம். மக்கள் பெருக்கம் பொருளாதாரப் பணிகளுக்காகவும் சமுதாயப் பணிகளுக்காகவும் ஆகும் அதிகமான செலவுகளோடும் பின்னுக்கிப் போகாதவரி மூலவளங்களோடும் சேர்ந்து அரசாங்கச் சேமிப்பில் குறைவைத் தோற்றுவித்துள்ளது. வரி வருமானத்தை அதிகரிப்பதற்கான முயற்சிகள் யாவும் இந் நாடுகளில் மிகக் குறைந்த அளவிலான வெற்றியையே தந்திருக்கின்றன. இருப் பினும், (வணிகத்துறை வீட்டுத்துறை ஆகிய) தனியார் சேமிப்பின் நிலையில் தோன்றிய இறக்கத்தின் அளவு, அரசுச் சேமிப்பின் குறைவைக் காட்டிலும் அதிகமானதாக இருப்பதாகக் காணப்படுகிறது. ஜமைக்கா, இந்தியா, பனாமா, கிரீஸ் ஆகிய நாடுகளில் மொத்த நாட்டு விளைவில் 2%-க்கு அல்லது அதற்கு அதிகமான அளவில் தனியார் சேமிப்பு அதிகரித்தது. இவ் வதிகரிப்பு சில்லி, கோஸ்டாரிக்கா, பிரேசில் ஆகியவற்றில் ஒரு விழுக்காடு அளவில் இருந்தது. பெரும்பான்மையான நாடுகளில் மிகவும் குறிப்பிடத்தக்கவாறு அதிகமான அளவில் வீட்டுத்துறைச் சேமிப்பு குறைந்தது என்பதைக் குறிப்பிட வேண்டும். ஜமைக்கா, ரொடீசியா, நயாசாலாந்து, கோஸ்டாரிக்கா ஆகிய நாடுகளில் மட்டும்தான் வீட்டுத்துறைச் சேமிப்பு அதிகரித்துள்ளது. பதினொரு நாடுகளில் இது குறைந்திருக்கிறது. மொத்த நாட்டு வருமானத்தில் 7 விழுக்காடு அளவு என்ற பெருமளவிற்கு வெனிசுலாவில் குறைந்துள்ளது. மற்றப் பத்து நாடுகளிலும் உள் நாட்டுச் சேமிப்பு மாறுதிருந்ததைப்போலத் தென்படுகிறது. காங்கோவில் வீட்டுத்துறைச் சேமிப்பு அதிகரிக்கவுமில்லை; குறையவுமில்லை. ஆனல், மொத்த நாட்டு விளைவில் 14% அளவுக்கு வணிகத்துறைச் சேமிப்பு குறைந்தது குறைந்த அளவு தலா வருமானநிலை, வருமானப் பகிர்வில் மாற்றம் ஆகியவைகள்தான் வீட்டுதுறைச் சேமிப்பின் குறைவுக்கான பெரும் காரணிகளாகும். கூலி வருமானம் பெறுவோரின் எண்ணிக்கையும் கூலி விகிதமும் அதிகரித்துச் செல்லும் போக்கைப் பெற்றிருந்தன. அதோடு குறைவான அளவில் சேமிக்கும் சக்தியைப் பெற்றுள்ள வருமானப் பிரிவினருக்கு வருமானம் மாற்றப்பட்டது. இவ் விரண்டும் வீட்டுத்துறைச் சேமிப்பு அதிகரிப்பைத் தடை செய்தன. இதோடு, ஏற்றுமதி அனுபவம் சாதகமானதாக இல்லாதிருந்ததும் வீட்டுத்துறைச் சேமிப்பின் மிக இன்றியமை யாததொரு அங்கமான ஒன்றிணைக்கப்படாத நிறுவனத்தின் மீதான பாதகமான விளைவுகளும் மொத்தச் சேமிப்பில் இவ் வகைச் சேமிப்பின் அளவைப் பல நாடுகளிலும் குறைத்ததில் பெரும் பங்கு ஆற்றியுள்ளன.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றில் குறிப்பாக, பர்மா, பியூர்டோரிக்கோ, ரொடீசியா, நயாசாலாந்து ஆகியவை இந்தியா போன்ற நாடுகளின் உள்நாட்டுச் சேமிப்பின் குறைவை ஈடுகட்டுவதற்கு அயல்நாட்டுச் சேமிப்புகள் உதவியிருக்கின்றன. பர்மாவில் உள்நாட்டுச் சேமிப்பின் அளவு மொத்த நாட்டு வருமானத்தில் 3% அளவுக்குக் குறைந்தது. ஆனால், அயல்நாட்டுச் சேமிப்பு 10% அளவுக்கு அதிகரித்தது. எனவே, மொத்த நிகரச் சேமிப்பு மொத்த நாட்டு விளைவில் 7% அளவுக்கு அதிகரித்தது. ரொடீசியாவில் அயல்நாட்டுச் சேமிப்பில் 7% அளவு அதிகரிப்பும் உள்நாட்டுச் சேமிப்பில் 4% அளவு குறைவும் தோன்றியதால் அதன் மொத்த நிகரச் சேமிப்பு 3% அளவுக்கு அதிகரித்தது. காங்கோவில் உள்நாட்டுச் சேமிப்பு, மொத்த நாட்டு விளைவில் 19% அளவுக்குக் குறைந்தது. ஆனால், அயல்நாட்டுச் சேமிப்பில் தோன்றிய 9% அளவு அதிகரிப்பினால் இக் குறைவு ஓரளவுக்குச் சமப்படுத்தப்பட்டது. கிட்டத்தட்ட மூன்றிலொரு பங்கு நாடுகளைக் காட்டிலும் அதிகமான அளவு நாடுகளில் அயல்நாட்டுச் சேமிப்புகளின் அளவு மொத்த விளைவில் 2%—3% அளவு வரை இருந்தது. நான்கில் ஒரு பங்கு நாடுகளில் இத்தகைய அதிகரிப்பு அதிகமானதாக இருந்தது. ஆனால், காங்கோ, பர்மா ஆகியவற்றில் முறையே இது 9%, 10% என்றிருந்தது. ஒரு மொத்தமாகப் பார்க்கும்போது, சட்டபூர்வமான மூலதன ஓட்டமானது தனியார் மூலதன ஓட்டத்தைக் காட்டிலும் அதிகமானதாக இருந்தது. கடன்களாகவும் மானியங்களாகவும் தரப்பட்ட சட்டபூர்வமான மூலதனத்தின் பெரும்பகுதி குறைந்த தலா வருமானங்களையுடைய நாடுகளுக்குச் சென்றுள்ளது. 1950—59 ஆகிய ஆண்டுகளில் வெளிநாட்டுப் பொதுநிதியின் மொத்த ஓட்டத்தில் ஏறத்தாழ 22 விழுக்காட்டு அளவுத்தொகை 100-க்குக் குறைவான தனிநபர் வருமானமுடைய நாடுகளுக்கே சென்றது. இதற்கு மாறாக, தனியார் அயல்நாட்டு மூலதனமானது அதிகமான தலா வருமான நிலையை உடைய நாடுகளில் ஈர்க்கப்பட்டிருக்கிறது.

அயல்நாட்டுச் சேமிப்புகள் இருப்பினும்கூட, ஒருமொத்தமாகப் பார்க்கும்போது மூலதன ஆக்கத்திற்காகக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் கிடைக்கும் ஒருங்கிணைக்கப்பட்ட நிகரச் சேமிப்பின் அளவுகள் மிகச் சிறியனவாகவே இருந்திருக்கின்றன. ரொடீசியா, நயாசாலாந்து வெனிசுலா, இசுரேல் காங்கோ ஆகிய நாடுகளைக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள் விதிவிலக்கானவை எனக் குறிப்பிடலாம். அவற்றின் சேமிப்புகள் வளர்ச்சியடைந்த நாடுகளுக்குச் சமமாக அல்லது வளர்ச்சியடைந்த

நாடுகளைக் காட்டிலும் அதிகமானதாக அதாவது 25 விழுக்காட்டிற்கும் அதிகமானதாக இருந்திருக்கின்றன. இந் நாடுகளின் பொருளாதாரங்களின் வேறுபட்ட அமைப்பினுல்தான் இவ்வாருன நிலை தோன்றியுள்ளது. ஏற்றுமதிப் பண்டங்கள் மிகுதியாக உள்ள நாடுகளில் இயற்கை மூலவளங்களை வளம் பறிப்பதற்காகப் பேரளவில் வெளிநாட்டு முதலீடுகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. அயல் நாட்டு வணிக நிறுவனங்களும் பேரளவில் முதலீடு செய்திருக்கின்றன. இவைகள் யாவும் அதிகமான விகிதத்தைத் தோற்றுவிப்பதற்கு மிகவும் உதவி செய்துள்ளன. ஆனுல், பெரும் பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மிகக் குறைந்த அளவிலான உற்பத்தியாலும் வருமானத்தாலும், சேமிப்பைத் திரட்டுவதற்கான நிலைய வசதிகள்இல்லாமையினுலும் சேமிப்புகள் மிகவும் குறைவானவைகளாகவே இருந்திருக்கின்றன.

இந்தியாவின் நாட்டு வருமானத்தில் குறிப்பிடத்தக்க வகையிலான அதிகரிப்பு இருந்தபோதிலும் தேவைக்கேற்ருற் போன்று சேமிப்பின் விகிதம் அதிகரிக்கவில்லை என்பதை இந்தியாவில் மேற்கொள்ளப்பட்ட அண்மைக்கால ஆய்வுகள் உறுதிப்படுத்துகின்றன. இந்தியாவின் சேமிப்புகளைப் பொறுத்த மட்டிலும் கடந்த பத்தாண்டுகளுக்கு அல்லது அதைப் போன்ற தொரு காலத்திற்கான புள்ளிவிவரங்கள் பின் வருமாறு:

(i) 1948–49-லிருந்து 1951–52 வரையுள்ள ஆண்டுகளில் இந்தியாவின் நிகரச் சேமிப்பைப் பேராசிரியர் ரெங்கனேகர் கணக்கிட்டிருக்கிருர்.[1]

(ii) 1949-50-லிருந்து 1954–55 வரையுள்ள ஆண்டுகளுக்கான நாட்டு வருமானத்தின் ஆராய்ச்சிக்கான இந்திய மகா நாட்டில் (Indian Conference on Research in National Income) ஒரு மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது.

(iii) 1950-51-லிருந்து 1957-58 வரையுள்ள ஆண்டுகளில் இந்தியாவின் சேமிப்பை டில்லியில் உள்ள கைக்கோள் பொருளாதார ஆராய்ச்சியின் நாட்டுக்குழு (National Council of Applied Economic Research) மதிப்பிட்டுள்ளது.

(iv) 1950-51-லிருந்து 1958-59 வரையுள்ள ஆண்டுகளுக்கான காலத்தின் இந்தியச் சேமிப்பு பற்றிய புள்ளிவிவரங்களை அண்மையில் இந்தியாவின் ரிசர்வ் வங்கி வெளியிட்டுள்ளது.[2]

1 Rangnekar, D. G., *Poverty and Capital Development in India*, Oxford, London, 1959, pp. 227-28.

2 *Reserve Bank of India Bulletin*, August, 1961.

இப்புள்ளிவிவரங்கள் அட்டவணை 11-ல் தரப்பட்டுள்ளன. ஒவ்வொன்றிலும் கணக்கிடப்பட்டுள்ள இனங்கள் மாறுபட்டிருப்பதாலும் கணக்கிடப்படுவதற்காகப் பல முறைகள் பயன்படுத்தப் பட்டிருப்பதாலும், நம்பிக்கை வைக்கத்தக்க செய்தி மூலங்களின் பற்றுக் குறையாலும் பலவிதமான கண்டுபிடிப்புகளுக்கிடையே யுள்ள வேறுபாடுகள் புரிந்துகொள்ளத் தக்கனவாக இருந்து இந்தியாவில் 1950-51-லிருந்து இருக்கும் சேமிப்புகளைப்பற்றிய போக்கைத் தெரிந்துகொள்ள இவ்வெண்கள் நமக்கு உதவி செய்கின்றன.

அட்டவணை 11

இந்தியாவில் சேமிப்பு : 1948-49—1958-59

(மில்லியன் ரூபாய்களில்)

| ஆண்டு | மூலம் | | | |
|---|---|---|---|---|
| | a | b | c | d |
| 1948-49 | 2,980 | ...... | ...... | ...... |
| 1949-50 | 4,410 | 5,100 | ...... | ...... |
| 1950-51 | 5,960 | 5,910 | 6,240 | 6,360 |
| 1951-52 | 5,770 | 4,680 | ...... | 5,040 |
| 1952-53 | ...... | 5,180 | ...... | 5,850 |
| 1953-54 | ...... | 6,690 | ...... | 5,990 |
| 1954-55 | ...... | 8,000 | ...... | 6,830 |
| 1955-56 | ...... | ...... | 11,350 | 9,100 |
| 1956-57 | ...... | ...... | ...... | 9,930 |
| 1957-58 | ...... | ...... | 12,110 | 8,180 |
| 1958-59 | ...... | ...... | ...... | 9,750 |

மூலம் : (a) Rangnekar, D G., *Poverty and Capital Formation in India*. Oxford; London, 1959.

(b) Indian Conference on Research in National Income, Delhi *Papers on National Income and Allied Topics*, Vol. I, Asia Publishing House, Bombay, 1960.

(c) National Council of Applied Economic Research, Delhi.

(d) *Reserve Bank of India Bulletin*, August; 1961.

1948-49ஆம் ஆண்டில் இந்தியாவின் நாட்டு வருமானம் ரூ. 86,500 மில்லியனாக இருந்தது. அந்த ஆண்டிலிருந்த நாட்டு வருமானத்தில் 3 6%ஆக அல்லது ரூ. 3.000 மில்லியன் அளவாக அந்த ஆண்டின் சேமிப்பு இருந்தது என்று பேராசிரியர் ரெங்க னேகரின் கணக்கீடு காட்டுகிறது. கைக்கோள் பொருளாதார ஆராய்ச்சி நாட்டுக் குழுவினால் 1955–56, 1957-58 ஆகிய ஆண்டு களுக்கான சேமிப்பு மதிப்பீடுகள், ரிசர்வ் வங்கியின் மதிப்பீடுகளைக் காட்டிலும் அதிகமாக இருக்கின்றன. வீட்டுத்துறைகள், வேளாண்மையிலும் வணிகத்திலும் சரக்குத் தொகுதிகள் என்ற வடிவத்திலான சேமிப்புகள், பணத்தொடர்பற்ற முதலீடுகள், நீண்டகால நுகர்வோர் பண்டங்கள் என்பவைகளை ரிசர்வ் வங்கியின் மதிப்பீடுகள் உள்ளடக்கவில்லை. நகர்ப்பகுதிகளில் வணிகத் துறையல்லாத பிற துறைகளின் முதலீடுகள், சேமிப்புகள் ஆகியவை குறைத்து மதிப்பிடப்பட்டிருக்கலாம் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகைய சேமிப்பு இனங்களும் முழு அளவில் கருதப்படுமானால், இவ் வுசாய்வுகளில் மதிப்பிடப் பட்டுள்ளதைக்காட்டிலும் 2% புள்ளிகள் அதிகமானதாக ஒருங் கிணைக்கப்பட்ட சேமிப்பு வருமான விகிதம் இருக்கலாம் என்ற தொரு கருத்தும் தெரிவிக்கப்படுகிறது.[1]

1951–52ஆம் ஆண்டில் 5.1% என மிகவும் குறைந்த அளவிலும் 1955-56ஆம் ஆண்டில் 9.1% என மிகவும் அதிகமான அளவிலும் சேமிப்பு-வருமான விகிதம் மாறுபட்டிருந்தது என்று ரிசர்வ் வங்கியின் ஆய்வு காட்டுகிறது. 1951–52 முதல் 1958-59 வரையி லான ஆண்டுகளில் சராசரி சேமிப்புவருமான விகிதம் 7.2 விழுக் காடாக இருந்தது. 1955-56-ல் பெறப்பட்ட 9.1% என்ற உச்ச அளவிலிருந்து 1957-58ஆம் ஆண்டில் இவ் விகிதம் மிகவும் செங்குத் தாகச் சரிந்தது. இவ் வொன்பது ஆண்டுக் காலமும் மூன்று ஆண்டு களைக் கொண்ட மூன்று சிறு காலங்களாகப் பகுக்கப்பட்டால், (1950-53 ஆகிய) முதல் காலத்தில் சேமிப்பு வருமான விகிதம் 5.9% ஆகவும் (1953-54 முதல் 1955-56 வரையிலான) இரண்டாம் காலத்தில் இவ் விகிதம் 7.3% ஆகவும், (1956-57 முதல் 1958-59 வரையிலான) மூன்றாவது காலத்தில் இவ் விகிதம் 7.9% ஆகவும் இருந்தது. 1951-52 முதல் 1955-56 வரையிலான முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 6.6% ஆகவும் இரண்டாம் திட்டக் காலத்தின் முதல் மூன்று ஆண்டுகளில் 7.9% ஆகவும் இவ் விகிதம் இருந்தது. இவ்விதமாகப் பார்க்கும்போது, சேமிப்புவிகிதம் ஊக்கம் தரத்தக்கதாக இருந்தாலும், இறுதிநிலைச் சேமிப்பு வருமான

1 *Reserve Bank of India Bulletin*, 1961, p. 1200.

விகிதம் இரண்டாவது காலத்தில் 19.1%-லிருந்து மூன்றாவது காலத்தில் 14.2%-க்குக் குறைந்தது என்பது கவனிக்கத்தக்கது.

இந்த ஆண்டுகளில் மொத்தச் சேமிப்பிற்கு ஒவ்வொரு துறையும் ஆற்றியுள்ள பங்கும் அட்டவணை 12-ல் காட்டப் பட்டுள்ளது.

1951-52-ல் மொத்தச் சேமிப்பில் 38.2% அளவுக்கு இருந்த அரசுச் சேமிப்பு அடுத்த சில ஆண்டுகளில் மிகவும் செங்குத்தாகச் சரிந்து 1955-56-ல் 7.6 விழுக்காட்டை அடைந்தது. அதிலிருந்து அது மறுமலர்ச்சியடையத் தொடங்கியது.

அட்டவணை 12

இந்தியாவில் மொத்தச் சேமிப்பிற்குப் பலதுறைகளும் தந்த பங்கு
(Contribution of Different Sectors to Total Savings in India)

| | | | | | வீட்டுத்துறை | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஆண்டு | அரசுத்துறை | மூன்றாண்டுகளின் சராசரிகள் | உள்நாட்டு வணிகத்துறை | மூன்றாண்டுகளின் சராசரிகள் | கிராமப் பகுதிகள் | மூன்றாண்டுகளின் சராசரிகள் | நகர்ப்பகுதிகள் | மூன்றாண்டுகளின் சராசரிகள் | மொத்தம் | மூன்றாண்டு காலத்தின் மொத்தம் |
| 1950—51 | 14 7 | | 5.1 | | 29.9 | | 50 3 | | 80 2 | |
| 1951—52 | 38 2 | 21 6 | 11.1 | 5.2 | 38.7 | 33 1 | 12.0 | 40.1 | 50 7 | 73.2 |
| 1952—53 | 15 1 | | 0.7 | | 39.1 | | 52.3 | | 84 2 | |
| 1953—54 | 11.9 | | 3.8 | | 34.4 | | 49.9 | | 84.3 | |
| 1954—55 | 12 0 | 1·01 | 5.7 | 5.3 | 24.8 | 25.0 | 57 5 | 59.6 | 82.3 | 84.6 |
| 1955—56 | 7 6 | | 6.0 | | 19.3 | | 67.1 | | 86 4 | |
| 1956—57 | 12.9 | | 5.4 | | 21.6 | | 60.1 | | 81.7 | |
| 1957—58 | 13 9 | 2.5 | 2.2 | 3 7 | 25.1 | 23.8 | 58.8 | 60.0 | 83.9 | 83.8 |
| 1958—59 | 10.6 | | 3 5 | | 24.8 | | 61.1 | | 85.9 | |

மூலம் : *Reserve Bank of India Bulletin*, August, 1961.

ஆனுல், மிக மெதுவாகவே அம் மறுமலர்ச்சி இருந்தது. அரசு நிருவாகத்தில்அதிகரித்தசெலவுஇருந்தது, வரிவருமானத்தில் அதிக வருமானம் இல்லாதிருந்தது ஆகிய இரண்டும் அரசுச் சேமிப்பின் போக்கை விளக்குகின்றன. வணிகத்துறை ஆற்றும் பங்கிலும் நன்கு உணரத்தக்கவகையிலான இறக்கம் தோன்றியது. அதிகரித்த உற்பத்திச் செலவு, அதிகரித்த கூலிகள், அதிகமான வரிகள், ஏற்றுமதி இடர்கள், மற்றும் இவைபோன்ற பிறவற்றினுல்தான் இவ் விறக்கம் தோன்றியது. வீட்டுத்துறைதான் பொருளா தாரச் சேமிப்பின் பெரும்பகுதியாகஅதாவது மொத்தச்சேமிப்பில் 80% அளவாக இருந்தது. இருப்பினும் மொத்தச் சேமிப்பில் கிராமப்பகுதி வீட்டுத்துறையின் பங்கில் உறுதியானதொரு சரிவு காணப்பட்டது. ஆனுல், நகர்ப்பகுதித்துறை நல்லதொரு அதிகரிப்பைக் காட்டியது. பலதரப்பட்ட துறைகளின் மொத்த வருமானத்தோடு அத் துறையின் சேமிப்புகளை ஒப்பிடும்போது, அரசுத்துறையின் சேமிப்பு வருமான விகிதம் முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 10.3% என்ற அளவிலிருந்து இரண்டாம் திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளில் 8.2% என்ற அளவாகக் குறைந்தது என்பதும், உள்நாட்டு வணிகத் துறையின் சேமிப்பு வருமான விகிதம் 37%–லிருந்து 32.4 %-க்குக் குறைந்தது என்பதும், வீட்டுத்துறையின் வருமானத்திற்கு சேமிப்பின் விகிதம் 5.3%-லிருந்து 6.7% அளவுக்கு அதிகரித்தது என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கனவாகும். 2.5%-லிருந்து 2.7%-க்கு கிராமப் பகுதி வீட்டுத்துறையில் தோன்றிய சேமிப்பு வருமான விகிதத்தின் அதிகரிப்பாலும், 12.6%-லிருந்து 16.9%-க்கு நகரப் பகுதி வீட்டுத்துறையில் தோன்றிய அதிகரிப்பாலும் இது தோற்று விக்கப்பட்டது. ஒருமொத்தமாகப் பார்த்தால், 1950–51 முதல் 1958-59 வரையிலுள்ள ஆண்டுகளில் மொத்தச் சேமிப்பில் 13.9% அளவுக்கு ஆண்டொன்றுக்குச் சராசரியாக அரசுத்துறை தனது பங்கைத் தந்திருக்கிறது. இதைப்போன்று வணிகத்துறை 4.7% அளவிலும், வீட்டுத்துறை 81.4% அளவிலும் அவற்றின் பங்கைத் தந்திருக்கின்றன.

1950-51-லிருந்து எந்த விதமான குறிப்பிடத்தக்க அளவிலும் இந்தியாவில் சேமிப்புகள் அதிகரிக்கவில்லை என்பது மேற்கண்ட புள்ளி விவரங்களிலிருந்து பெறப்படுகிறது. இது மிகவும் துயர மானதாகும். திட்டமிட்ட முன்னேற்றத் திட்டங்களிலிருந்து தோன்றும் தேவைகள் மிகவும் அதிகமான அளவிலிருக்கும்போது, அதோடு ஒப்பிடுகையில் உண்மையான சேமிப்பு மிகவும் குறை வாகவே இருந்திருக்கிறது. இது 1950-51-ல் ரூ 6,360 மில்லியனி லிருந்து 1958-59–ல் ரூ 9,750 மில்லியனுக அதிகரித்தது அல்லது

தனிநபர் சேமிப்பு அளவு 1950-51-ல் ரூ 18%-லிருந்து ரூ 24%-க்கு அதிகரித்தது. திட்ட இலக்குகளுக்கு எதிராக உண்மையான சேமிப்பைப்பற்றிய எண்ணிக்கைகள் தரப்படும்போது குறைவு எந்த அளவுக்கு இருக்கிறது என்பது காணப்படுகிறது. மூன்றாவது திட்டக் காலத்தில் ரூ 100 மில்லியன் அளவுக்கும் அதிகமான முதலீடு எனப்படுவது நாட்டு வருமானத்தில் தற்போது 11% ஆக இருக்கும் சேமிப்பு விகிதத்தை 14% ஆக அதிகரிப்பதாகும். நடப்பிலிருக்கும் சேமிப்பு நாட்டு வருமானத்தில் 8.5 அளவில்தான் இருக்கிறது எனத் திட்டக்குழு கருதியிருக்கிறது. திட்டத்தில் குறிப்பிட்டுள்ள இலக்குகளைப் பெறுவதற்குச் சேமிப்பு விகிதமானது மூன்றாவது திட்டத்தின் இறுதிக் காலத்தில் 11.5% அளவுக்கு அதிகரிக்கப்பட வேண்டும் என்று கருதப்பட்டது.[1]

இந்திய ரிசர்வ் வங்கியின் வெளியீடுகள் சேமிப்புப் பற்றிய செய்திகளை அவ்வப்போது தொகுத்து வெளியிட்டுவருகின்றன. அவைகள் அட்டவணை 13-லிலும், அட்டவணை 14-லிலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

அட்டவணை 13

இந்தியப் பொருளாதார நிகர உள்நாட்டுச் சேமிப்பும் முதலீடும்.

(நாட்டு வருமானத்தில் விழுக்காடு அளவில்)

| ஆண்டு | 1954 —55 | 1963 —64 | 1964 —65 | 1965 —66 | 1966 —67 | 1967 —68 | 1968 —69 | 1969 —70 |
|---|---|---|---|---|---|---|---|---|
| நிகரச் சேமிப்பு % | 8.0 | 12.0 | 10.7 | 10.8 | 8.0 | 8.0 | 9 1 | 8.5 |
| நிகர முதலீடு % | 8.5 | 14.9 | 14.0 | 13.7 | 11.6 | 11.1 | 10.8 | 9.3 |

(இ) உள்ளார்ந்திருக்கும் சேமிப்புக்கும் உண்மையான சேமிப்புக்கும் உள்ள வேறுபாடு (Disparity between Actual and Potential Savings)

குறைந்த வருமான நாடுகளில் சேமிப்புச் சிக்கல் உள்ள மற்றுமொரு பகுதி இந் நாடுகளில் கிடைக்கத் தக்க மிகக் குறைவான சேமிப்பும்கூட நல்லமுறையில் ஒன்று திரட்டப்படவில்லை என்பதாகும். இந் நாடுகளில் சேமிப்பின் பற்றாக்குறையானது சற்று மிகைப்படுத்தப்பட்டிருக்கிறது என்பது ஒரு சில

[1] *The Hindu,* Madras, dated, January, 21, 1962.

அட்டவணை 14

இந்தியப் பொருளாதாரத்தில் சேமிப்பு 1951-52—1969-70

| காலம் | நாட்டு வருமானத்தில் விழுக்காடு | | | மொத்தச் சேமிப்பில் விழுக்காடு | | |
|---|---|---|---|---|---|---|
| | அரசு | கார்ப் பொ ரேட் | வீட்டுத் துறை | அரசு | கார்ப் பொ ரேட் | வீட்டுத் துறை. |
| முதல் திட்டக்காலம் | 1.2 | 0·5 | 4·9 | 18 | 8 | 74 |
| இரண்டாம்திட்டக்காலம் | 1.6 | 0·4 | 6·5 | 18 | 5 | 77 |
| 1961-62—1962-63 | 2·5 | 0·7 | 6·3 | 26·3 | 7·4 | 66·3 |
| 1963-64 | 3·1 | 0·8 | 8·1 | 26·0 | 6·9 | 67·1 |
| 1964-55 | 2·7 | 0·4 | 7·6 | 24·8 | 4·3 | 70·9 |
| 1965-66 | 3·2 | 0·4 | 7·2 | 29·5 | 4·0 | 66·5 |
| 1966-67 | 1·8 | 0·5 | 5·7 | 21·8 | 6·5 | 71·7 |
| 1967-68 | 1·0 | 0·2 | 6·8 | 12·7 | 3·1 | 84·2 |
| 1968-69 | 1·9 | 0·3 | 6·9 | 20·6 | 3·4 | 75·9 |
| 1969-70 | 1·2 | 0·4 | 6·8 | 14·0 | 5·0 | 81·0 |

மூலம் : *Reserve Bank Bulletins Quoted in* Ditt & Sundaram op. cit. p. 136.

பொருளாதாரப் புலவர்களின் கருத்தாகும். நுகரப்படாதவற்றின் பெரும்பகுதி முதலீட்டுக்குக் கிடைக்கவில்லை என்பது அவர் தம் கருத்தாகும். நுகர்வுக்கு அதிகமாகவும் எச்சமாகவும் இருப்பதில் நல்லதொரு பகுதி ‘செயலற்ற மூலதனம்’ (Passive Capital) என்ற வடிவத்தில் மாறிவிடுகிறது. அதாவது, நிலம் வாங்குதல், வீடுகள் கட்டுதல், தங்கம், தங்க நகைகளை வாங்குதல் ஆகியவற்றின் வடிவத்தில் மாறிவிடுகிறது. இந்தியாவில் முதல் ஐந்தாண்டுத் திட்டக்கால ஆண்டுகளில் முதலீடு செய்யத்தக்க மூலவளங்களில் கிட்டத்தட்ட 45% அளவு செயலற்ற மூலதனம் என்ற வடிவத்தில் சென்றிருக்கலாம் என்றும், எஞ்சிய 55% அளவே உற்பத்தி நோக்கங்களுக்காக முதலீடு செய்யப்பட்டுள்ளன என்றும் மாலன்பாம் (Malenbaum) அவர்களால் குறிப்பிடப்படுகிறது. சேமிப்பை

வீணுக்குதலும் அதிகமான அளவுக்கு இருக்கிறது. இந்தியாவில் நாட்டுவருமானத்தில், சடங்கு நோக்கங்களுக்காக 7%–க்கு அதிகமான அளவும், புகையிலே, போதைப் பொருள்கள், கேளிக்கைகள் மற்றும் இவைபோன்றவற்றிற்காக மற்றுமொரு 6% அளவும் செலவிடப்படுவதாக மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. மத்தியக்கிழக்கில் உள்ள எண்ணெய் வளம் மிகுந்த நாடுகளில் அவைகளின் கனிச் செல்வங்களை வளம் பறிப்பதிலிருந்து பெறப்படும் வருமானத்தின் பெரும்பகுதியானது, மிகவும் ஆடம்பரமான கட்டடங்களைக் கட்டுவதிலும் அயல்நாடுகளிலிருந்து மிகவும் ஆடம்பரமான பண்டங்களை வாங்குவதிலும் செலவிடப்படுகிறது. இக் கூற்று இலத்தீன் அமெரிக்க நாடுகளுக்கும் பொருந்தும். இந் நாடுகளின் சேமிப்புகளில் பெரும் தொகை டாலர் பண வைப்புகளாகவும், பங்குச் சான்றிதழ்களாகவும் மற்றப்பட்டிருக்கின்றன. இந் நாடுகளில் இருக்கும் அரசுகளும் இத்தகைய வீண் ஆடம்பரங்களில் ஈடுபட்டு உள்நாட்டுச் சேமிப்பை வீணுக்குகின்றன. அயல்நாட்டுத் தூதரகங்களுக்கான பேரளவுச் செலவுகள் அலுவலக நோக்கத்திற்காக கவர்ச்சி மிகுந்த கட்டடங்களுக்கான செலவுகள், பல வடிவங்களிலான முனேப்பான உற்பத்திகளுள்ள செலவுகள் யாவும் இதனை நன்கு விளக்குபவைகளாகும். தவிர, அயல் நாட்டு நாணயங்களைப் பதுக்குவதற்கும் அரசுகளே காரணமாக இருக்கின்றன. அதாவது, உள்நாட்டுப் பணம் அல்லது சேமிப்பு, வங்கி வைப்புகள் ஆகியவைகள் 100விழுக்காடு அளவுக்கு அன்னியச்செலாவணியால் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற சட்டங்கள் உள்ள நாட்டில் அரசுகளே அயல்நாட்டு நாணயத்தைப் பயன்படுத்தாமல் தேக்கிவைக்கக் காரணமாக இருக்கின்றன. அரசாங்கம் அயல் நாட்டுச் செலாவணியில் ஒரு பொழுதும் மீட்டுக்கொள்ளத் தேவையில்லாத அளவு பண அளிப்புப் பகுதிக்குச் சமமான அளவுக்கு அயல் நாட்டுச் செலாவணியை உண்மையில் செயலற்றிருக்கச் செய்வதையே இது உள்ளார்ந்திருக்கிறது.[1]

மதிப்புமிக்க உலோகங்களைப் பெறுதலும், இருப்பு வைத்துக் கொள்ளுதலும் நிச்சயமாகச் சேமிப்பைத்தான் காட்டுகின்றன ஆனால், இச் சேமிப்புகள் எல்லாம் உற்பத்தி செய்யப்படத்தக்க வழிகளில் பயன்படுத்தப்படுவதில்லை. எனவே, செயலற்ற இத்தகைய முதலீடுகளையெல்லாம் உற்பத்தி செய்யத்தக்க முதலீடுகளுக்கும் மூலதன ஆக்கத்திற்கும் எவ்வாறு கொண்டுவருவது என்பது ஓர் இயல்பான வினவாகத் தோன்றுகிறது. இவ் வழியிலான வாய்ப்புகள் மிகவும் குறைவான அளவிலேயே இருக்கின்றன.

[1] *Measures for the Economic Development of Underdeveloped Countries*, U N., 1951, p.36

முதலாவதாக, எவ்வளவு இருக்கும் என்று அடிக்கடி கருதப்படு கிறதோ அந்த அளவுக்கு இருப்பு இருப்பதில்லை. தவிர, தங்கம் பதுக்கப்பட்டுள்ள அளவு குறைந்துகொண்டே வருகிறது என்றும் சான்றுகள் காட்டுகின்றன. இதனுடைய இருப்பு, நிலையான இருப்பாக இருப்பதால் மூலதனத்திற்காக இதைப் பயன்படுத் தினால் ஒரே தடவையில் பயன்படுத்தத்தக்கதாகவே இருக்கும் அல்லது 5 ஆண்டுகளுக்கு அல்லது அதைப்போன்றதொரு கால அளவுக்கு இருப்புப் பயன்படுத்தப்படுமானால், நாட்டு வருமானத் திற்கு ஆண்டு ஒன்றுக்கான முதலீடு அதிகமான அளவினதாக இருக்காது. இரண்டாவதாக, இந்தச் செயலற்ற முதலீட்டை வழிப்படுத்துவதிலும் ஓர் இடர் உண்டு. இந்தியா போன்ற நாடு களில் தங்க நகைகளைப் பெறவேண்டுமென்ற விருப்பம் சமுதாயப் பழக்கவழக்கங்களால் தோன்றியதாக இருக்கிறது என்பதையும், மதிப்புமிக்க உலோகங்களோடு உணர்ச்சி பூர்வமானதொரு தொடர்பு இருக்கிறது என்பதையும் கருத்தில் கொள்ளவேண்டும். சில நேரங்களில் தங்கத்தைப் பதுக்குவதானது உண்மையாகவே வருமானத்தின் செயலாக (Function of Income) இருப்பதாகவே கருதப்படுகிறது. எனவே, வட்டி விகிதத்தில் தோன்றும் எந்த விதமான உயர்வும் அல்லது இத்தகைய மதிப்புமிக்க உலோகங் களின் விலைகளில் தோன்றும் எந்த உயர்வும் இத்தகைய சொத்து களைப் பணமாக மாற்றவும் செய்யலாம்[1] வாணிக நோக்கத் தாலும் ஊக்கவாணிக நோக்கத்தாலும் தனிநபர் இயக்கப்படு கிறார் என்றதொரு கருத்தை இத்தகைய மாற்றமானது கருதிக் கொள்கிறது. ஆனால், இந்தியா போன்றதொரு நாட்டில் இது உண்மையாக இல்லை. பன்னாட்டு விலைகளைக் காட்டிலும் நிச்சயம் அதிகமான அளவில் இருக்கும்வண்ணம் உள்ள மிகவும் கவர்ச்சியுள்ள விலைகள் தரப்பட்டால், அவைகள் ஓரளவுக்குச் சேமிப்புக் கலைப்பைத் தோற்றுவிக்கலாம். ஆனால், அத்தகைய வழி யானது திருட்டுத்தனமான இறக்குமதிக்கு மென்மேலும் ஊக்கத் தைத் தருவதாக இருக்கும். ஒரு மனிதனிடமிருந்து இன்னொரு மனிதன் விலைக்குத் தங்கத்தை வாங்கிக் கொள்வதன் மூலம் அல்லது ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்குத் தங்கத்தை விற்பதன் மூலம் தங்கம் ஒருவரிடமிருந்து இன்னொருவருக்கு மாற்றப்படுவதனால் சமுதாயத்தின் சேமிப்பு அதிகரிப்பதில்லை என்பது தெளிவு. எனவே, தங்கத்திற்காகவும் வெள்ளிக்காகவும் சான்றிதழ்களைக் கொடுத்து விட்டு அரசாங்கம் இவற்றைப் பெறுவதுதான் சரியான வழி. இவ்வாறாகக் கடந்த காலச் சேமிப்பு நடப்பு முதலீட்டிற்குப் பயன்

[1] Chandavarkar, A. G., 'The Nature and Effects of Gold Hoarding in Underdeveloped Economics;' *Oxford Economic Papers*, June, 1961; pp. 137-48

படுத்தப்பட முடியும். இவ்வாறாகப் பெறப்படும் தங்கமும் வெள்ளியும் மூலதனச் சாதனங்களை இறக்குமதி செய்யப் பயன் படுத்தப்படலாம். ஆனால், இதுவும் மிகவும் எளிதானதொன்றல்ல. ஏனென்றால், இந்தியா போன்ற நாடுகளில் மதிப்புமிக்க உலோ கங்கள் வணிக நோக்கத்திற்காக அல்லது பேரக் காரணங்களுக் காகச் சேர்த்து வைக்கப்படுவதில்லை. மாறாக, எளிதில் கட்டுப் படுத்த முடியாத பல காரணங்களால் சேர்த்து வைக்கப்படு கின்றன.

தங்கமும், பிற மதிப்புள்ள உலோகங்களும் பெரும்பாலும் சமுதாயப் பழக்க வழக்கங்களாலும் சமுதாய மரபுகளாலும் பதுக்கப்பட்டாலும்கூட, மற்ற வகையான செயலற்ற முதலீடு களும் இவற்றாலே தோன்றுகின்றன எனக் குறிப்பிட முடியாது. எடுத்துக்காட்டாக, நிலத்தின்மீது முதலீடு செய்வது, அயல் நாட்டுச் செலாவணிகளில் முதலீடு செய்வது, அல்லது மிக ஆடம்பரமான கட்டடங்களில் முதலீடு செய்வது ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இவைகளெல்லாம் 'நன்னிலையிலான மாற்று முதலீடு வாய்ப்புகள் இல்லாததனாலேயே பெரும்பாலும் தோன்று கின்றன. தவிர இவைகள் யாவும் பணத்தின் உறுதியற்ற தன்மை, பொருளாதாரத்தின் உறுதியற்ற தன்மை ஆகியவைகளுக்கு எதிராக ஒரு பாதுகாப்பாகவும் மேற்கொள்ளப்படுகின்றன. இத்தகைய முதலீடுகளெல்லாம் உற்பத்தி வழிகளில் பயன்படுத்தப் படாமலிருக்கும் பொருளாதாரத்தின் உள்ளார்ந்திருக்கும் சேமிப் பைக் காட்டுகின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சேமிப்பின் அளவானது. சேமிப்பதற்கான தேவை மிகவும் குறைவாக இருப்பதனாலேயே குறைவாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இது உண்மையை மிகைப்படுத்திக் குறிப்பிடுவ தாகும். பணவசதிகள் மிகவும் குறைவாக இருக்கின்றன. என்பதாலும், முதலீடு வாய்ப்புகளும் கட்டுப்பட்டுள்ளதாகவே இருப்பதாலும் பெருமளவு சேமிப்பு வீணாக்கப்படுகிறது என்பதே உண்மையாகும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ளார்ந் திருக்கும் சேமிப்பிற்கும் உண்மையான சேமிப்பிற்கும் இடையே வேறுபாடு இருக்கிறது என்ற உண்மையையே இவைகளெல்லாம் காட்டுகின்றன. பொருளாதார முன்னேற்றம் தோன்றும்போது தான் இவற்றிற்கிடையேயுள்ள வேறுபாடு குறைக்கப்பட முடியும். அத்தகைய பொருளாதார முன்னேற்றம் சந்தைப் பெருக்கத் தையும், முதலீட்டு வாய்ப்புகளைப் பரவலாக்குவதையும் உட்கொண்டிருக்கும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள சேமிப்பை வீணாக்குதல் என்ற சிக்கலும், தவறான வழிகளில் முதலீடு செய்தல் என்ற சிக்கலும் உண்மையானவைகளே.

பொருளாதாரத்தின் சேமிப்புகளைத் திரட்டுவதற்கு மிகவும் நல்ல முறைகளைக் காணவேண்டிய அவசியத்தை அது கோடிட்டுக் காட்டுகின்றது. ஆனால், சேமிப்புப் பற்றாக்குறை என்ற சிக்கலி லிருந்து இது கவனத்தைத் திருப்ப முடியாது.

## குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சிக்கல்
## (The Problem in Underdeveloped Countries)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள சிக்கல் மூன்று வகையானவைகளாகும், முதலாவதாக. அதிகமான சேமிப்புகளை அவைகள் தோற்றுவிக்க வேண்டும்; இரண்டாவதாக, எவ்வளவு அதிகமாக முடியுமோ அந்த அளவுக்கு அவைகள் சேமிப்புகளைக் குவிக்க வேண்டும்; மூன்றாவதாக. சேமிப்புகளை உற்பத்தி முதலீடு களில் ஈடுபடுத்துவதற்கு வகைகள் செய்யப்பட வேண்டும்.

### (அ) சேமிப்பைத் தோற்றுவித்தல் (Generating Savings)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சேமிப்பு விடுமுதலை அதிகரிப்பதுதான் மூலதன ஆக்கத்தை விரைவுபடுத்துவதற்கான அடிப்படைத் தேவையாகும். குறைந்த வளர்ச்சியடைந்த பொருளாதாரம். வளர்ச்சியே பெறாத பொருளாதாரம் என்ற எந்தவிதமானதொரு பொருளாதாரத்திலும் சேமிப்புக்கான மேல் மட்டத்தையும் கீழ் மட்டத்தையும் கருதுவதென்பது இயலக்கூடி யதே. எந்த அளவுக்கு நுகர்வு அதிகரிக்கப்பட முடியுமா அளவுக்கு உற்பத்தி அதிகரிக்கப்பட முடியுமோ, அந்த அளவுக்கு அதிகரிக்கப்படுவதுதான் சேமிப்பின் உச்ச அளவை நிர்ணயிக்கின்றது. சமுதாயக் காரணிகள் மக்கள் தொகையின் அளவையும் அதன் அமைப்பையும், சமுதாயத்திற்குப் பழக்கமான வாழ்க்கைத் தரம் போன்ற பலவற்றையும் சார்ந்தே இருக்கின்றன. போர்க்காலம் போன்ற மிகவும் அதிகரிக்கத் தேவையிருக்கும் காலங்களில் நுகர்வு அளவுகள் மிகவும் குறைக்கப்படுகின்றன. ஆனால், சாதாரணமான காலங்களில் நுகர்வு அளவு ஏறத்தாழ மாறாமல் நிலையானதாகவே இருக்கிறது. ஏழை நாடுளில் நுகர்வு நிலையானது உடலுக்கு மிகவும் இன்றியமையாதவைகள் எந்த அளவு தேவை என்று கருதப்படுகிறதோ ஏறத்தாழ அந்த அளவுக்குச் சமமாக இருக்கிறது உற்பத்திப் பக்கத்திலும் கூட, குறுகிய காலத்தில் ஒரு குறிப்பிட்ட உச்சநிலை இருக்கிறது. இந்த உச்ச நிலையைக் காட்டிலும் அதிகமான அளவில் உற்பத் தியைப் பெருக்க முடியாது உற்பத்தி அமைப்பு, உற்பத்திமுறை, உழைப்பாளர் சக்தியின் அளவு அதன் திறமை, கிடைக்கத்தக்க

மூலதனச் சாதனங்கள் போன்றவற்றைச் சார்ந்துதான் இந்த உச்சம் அமைந்திருக்கிறது.

இவ்வாறாக, குறிப்பிட்ட நிலைகளில் மிகக் குறைந்த நுகர்வுத் தேவையும், மிக அதிகமான உற்பத்தி நிலையும்தான் சேமிப்பின் எல்லைகளாக அமைகின்றன. இவ்வெல்லைகளுக்குமேல் சேமிப்பை அதிகரிக்க முடியாது. சாதாரணக் காலங்களில் உச்ச அளவு சேமிப்பு எல்லையைப் பெறுவது முடியாது என்பது மிகவும் தெளிவு. உற்பத்தி நிலையை மாறாமல் பாதுகாப்பதற்காக மூலதனச் சாதனங்களைப் பராமரிப்பதற்குத் தேவையான சேமிப்பு அளவைத் தான் சமுதாயம் ஒன்றின் மிகக் குறைந்த அளவு சேமிப்புநிலை என்பது குறிப்பிடுகிறது. இந்த அளவைக்காட்டிலும் சேமிப்பு குறையுமானால் அது, மூலதனத்தையே நுகர வேண்டிய அவசியத்தைத் தோற்றுவித்துவிடும். அதன் வழியாக உற்பத்தியிலும் குறைவைத் தோற்றுவித்துவிடும். குறைந்த வளர்ச்சியுடைய நாடு ஒன்றில் சேமிப்பின் மேல் எல்லைக்கும், கீழ் எல்லைக்கும் இடையேயுள்ள வீச்சின் அளவு மிகவும் குறைவானதாகவே இருக்கிறது. நுகர்வின் நிலை மிகக் குறைவானதாக இருப்பதும், அந் நுகர்வு நிலையை மேலும் குறைத்தல் என்பது இயலாததொன்றாக இருப்பதும் இதற்கான காரணங்களாகும். தவிர, உற்பத்தி முறைகளும், உற்பத்தி அமைப்புகளும் முன்னேற்றுவிக்கப்படாவிட்டால் உற்பத்தியையும் அதிகரிக்க முடியாது. மறுபுறத்தில் நடப்பிலிருக்கும் உற்பத்தி நிலையை நிலைநாட்ட வேண்டுமானால், நுகர்வுச் செலவு செய்தபின் மிஞ்சியிருக்கும் சேமிப்பு முழுவதையும் முதலீடு செய்யவேண்டியது மிகவும் அவசியமாகிறது. பொருளாதாரம் வளரும்போது, சேமிப்பின் எல்லைகளும் விரிவாக்கப்படுகின்றன. குறைந்த அளவு நுகர்வுச் செலவு அதிகரிக்கிறது. உச்ச அளவு உற்பத்தி நிலை மேலும்மேலும் அதிகரிக்கிறது. நடப்பிலிருக்கும் உற்பத்தி நிலையைப் பராமரிப்பதற்காக நடப்பிலிருக்கும் உற்பத்திச் சக்தியின் தொந்தரவுகள் குறையும். அதாவது, நடப்பிலிருக்கும் வாழ்க்கைத் தரத்தைப் பராமரிப்பதற்குத் தேவைப்படும் உற்பத்தியைக் காட்டிலும் அதிகமான அளவு மூலதன மூலவளங்களைப் பொருளாதாரம் உற்பத்தி செய்யும் என்று குறிப்பிடலாம்.

மேற்கண்ட காரணங்களால் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் சேமிப்பு விடுமுதலை விரிவாக்கும் வழிகளைக் காண வேண்டும். எந்த அளவுக்குப் பொருளாதாரம் தேவையற்ற நுகர்வுகளில் ஈடுபட்டிருக்கிறதோ, அதாவது, எவைகளின் நுகர்வுச் செலவுகள் மறுக்கப்படும்போது அவைகளின் உற்பத்தித்

திறன் பாதிக்கப்படாமலிருக்கின்றதோ அந்த அளவுக்குச் சேமிப்பின் அளவை அதிகரிப்பதற்கான வாய்ப்புகள் இந் நாடுகளில் இருக்கின்றன. மறுபுறத்தில், நல்ல முறையிலான அமைப்புகள், நல்ல முறையிலான உற்பத்தி முறைகள் ஆகியவற்றைக் கண்டுபிடிப்பதன் மூலம் ஏற்கனவே இருக்கும் மூலவளங்களைப் பயன்படுத்தி உற்பத்தி அதிகரிக்கப்படுமென்றால், அங்குச் சேமிப்பு விடுமுதலை அதிகரிக்கும் வாய்ப்பு இருக்கிறது என்பது பொருள். இத்தகைய சேமிப்பு விரிவுக்கான வாய்ப்புகளை இவண் சுருக்கமாகக் காணலாம். ஆர்தல் லூயிஸ் என்பார் தனியார் முதலாளித்துவத் துறை, பொது முதலாளித்துவத் துறை ஆகிய இரண்டு துறைகளும் அடங்கிய மிக நன்கு அமைக்கப்பட்ட முதலாளித்துவத் துறையை வலியுறுத்துகிறார். இவைகள் உற்பத்தியைப் பெருக்குவதோடு சேமிப்பையும் அதிகரிக்கின்றன. அவரின் கருத்துப்படி முதலாளித்துவத் துறைகள் மிகவும் சிறிய அளவிலிருப்பதால்தான் ஏழ்மை நாடுகள் ஏழ்மை நாடுகளாகவே இருக்கின்றன. வார வருமானத்திலிருந்தும் கூலிகளிலிருந்தும்' சம்பளங்களிலிருந்தும் பேரளவிலான நாட்டுச் சேமிப்பு தோன்ற முடியாது. இந்தியாவில் வேளாண்மை மக்களில் ஒரு விழுக்காட்டினர்தான் வருமான வரி செலுத்துகின்றனர். ஆனால், இவர்கள் நாட்டு வருமானத்தில் 5%–7% வரையில் பங்கு பெறுகிறார்கள். இவர்கள்தான் நாட்டின் மொத்தத் தனிநபர் சேமிப்பில் 40% முதல் 50% வரை என்ற அதிகமான அளவு தனிநபர் சேமிப்புக்குக் காரணமாக இருக்கிறார்கள். நிலக்கிழார்கள்போல வணிகப் பிரிவினர்கள் அல்லது முதலாளிகள் அதிகமான செலவுகளைச் செய்வதில் ஈடுபடுவதில்லை. அவர்கள் முக்கியமாக இலாப நோக்கினால்தான் கவரப்படுகிறார்கள். இந்த இலாபநோக்கு மென்மேலும் அதிகமான அளவில் முதலீடு செய்வதற்கும் பெரும் பெரும் நிறுவனங்களை நிறுவுவதற்கும் அவர்களைத் தூண்டுகிறது. எனவே, முதலாளித்துவத் துறையின் வளர்ச்சி உற்பத்தியைப் பெருக்கவும், இலாபத்தை அதிகரிக்கவும் உதவுவதோடு அதிகமான இலாபத்தை மறு முதலீடு செய்யவும் உதவும். மூலதன முதலீடுகளுக்குப் பாதுகாப்பு, முதலீடுகளுக்கு நல்ல ஆதாயம்தரத்தக்க வாய்ப்புகள் ஆகியவைகளைத் தருவதனால் அத்தகைய முதலாளித்துவத் துறை வளர்க்கப்படுகிறது. லாபத்தின்மீது அதிகமான வரி விதித்தல், தனியார் வணிகத்தின்மீது ஆர்வமின்மையைத் தோற்றுவிக்கிறது; மேலும் இலாபத்தை மறுமுதலீடு செய்வதையும், தனியார் முதலாளித்துவத் துறையின் வளர்ச்சியையும் பாதிக்கிறது. பண வீக்கத்தின்போது வருமானம் முதலாளித்துவத் துறையினரிடம் மாற்றப்படும்போது, அது, அதிகரித்த சேமிப்புகளையும் அதிகரித்த முதலீடுகளையு-

ஊக்குவிக்கிறது என்ற கருத்து இங்கு உள்ளார்ந்திருக்கிறது. வாரத்திற்கும் கூலிக்கும் லாபத்தின் அதிகமான விகிதம் அதிகரித்த சேமிப்பிற்கானதொரு காரணியாக இருக்கிறது. செல்வத்தையும் வருமானத்தையும் சமமாகப் பிரித்தலானது சமுதாய நீதி என்ற நமது உணர்வுக்கு ஐயமில்லாமல் திருப்தி தருகிறது. ஆனால், தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரத்தில் இது செலவு நிலையை அதிகரிக்கும் என்றும், சேமிப்பு நிலையைக் குறைக்கும் என்றும் பொதுவாகக் கருதப்படுகிறது. செல்வத்தைச் சமமாகப் பங்கிடுவதற்காகச் சமமாக வரிவிதிக்கும் அரசாங்கத்தின் கொள்கைகளும், வேறு பல வழிகளும் அதிகமான சேமிப்புக்கு உதவி செய்பவைகள் அல்ல என்று பேராசிரியர் எல்லிஸ் குறிப்பிடுகிறார். ஏழை மக்கள் பெருமளவில் இருக்கிறார்கள். எனவே, அத்தகையவருமானப் பங்கீடு உற்பத்தித் திறனையும் அதிகரிக்காது. இந்தக் காரணத்திற்காகவும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் முதன்மையானதும் மிகவும் அவசரமானதுமான அதிகச் சேமிப்பு என்ற காரணத்திற்காகவும் ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சமமான செல்வத்தைப் பெறுவதற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் ஓரளவுக்குப் பக்குவமடைவதற்கு முன்னதாக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் போலத் தென்படுகின்றன. இத்தகைய வருமானப் பங்கீடு முதலீட்டை மிகவும் மோசமாகப் பாதிக்கிறது. அதாவது, இவ்விதமான வருமானப் பங்கீட்டால், வருமானமானது வழிவழியாகச் சேமிப்பவர்களாக இருப்பவர்களிடமிருந்து சேமிக்காதவர்கள் கைகளில் சென்றுவிடுகிறது. தவிர, சேமிக்காதவர்கள் என்று குறிப்பிடப்படுகின்றவர்களின் வாழ்க்கைநிலைகள் மாறாமலிருக்கும்போது, அவர்கள் சேமிக்க முடியாதவர்களாக ஆகிவிடலாம். இக் கருத்தை ஜியாபர்ரி டைசன் தெரிவிக்கிறார். அதே நேரத்தில் தனிநபரின் சேமிப்புக்கும் வணிகத்துறைச் சேமிப்புக்கும் நிச்சயம் பாதகமான விளைவைத் தரும் அளவுக்கு வரி விகிதமும் உயர்த்தப்பட்டிருக்கின்றது.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் நாட்டு வருமானத்தில் ஏறத்தாழ 50% அளவை வேளாண்மைத்துறை தருகின்றது. இத் துறை மக்கள் தொகையில் அதிகமான சதவீத அளவையும் பாதுகாக்கிறது. எனவே, இத்தகைய முதன்மைத் துறையானது, அத் துறை எந்த அளவுக்கு உற்பத்தி செய்யத்தக்கதாக இருக்கிறதோ அந்த அளவுக்குச் சேமிப்பைத் தருகிறதா என்று ஆராய்வது மிகவும் அவசியமானதாகிறது. அண்மைக் காலத்தில் பெரும்பான்மையான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வேளாண்மைத்துறைப் பண்டங்களின் விலை உயர்வால் இத் துறை

மிகுந்த நன்மைகளைப் பெற்றிருக்கின்றது. தவிர, தொழில் துறையோடு கொண்டுள்ள வேளாண்மைத் துறையின் மிகவும் சாதகமான வணிக நிபந்தனைகளாலும் வேளாண்மைத்துறை மிகுந்த நன்மைகளைப் பெற்றிருக்கிறது. ஆனால், ஒருமொத்தமான கிராமப்புறச் சேமிப்பு நிலையாக மாறாமலேயே இருக்கிறது. இந்தியாவில் 1950–51 முதல் 1958–59 வரையிலான ஒன்பது ஆண்டுகளிலும் கிராமப் பகுதியின் வீட்டுத்துறைச் சேமிப்பு அதன் வருமானத்தில் 2.6% என்று ஒரே அளவாகவே இருந்தது[1] அதிக மான உற்பத்தி, மிகுந்த இயக்க விளைவுடைய வரி விதித்தல் என்ற வழிகளின் வாயிலாகக் கிராமப்புறச் சேமிப்புகளைக் குவிப்பதற் கான வாய்ப்புகளைத் தீவிரமாக ஆராயவேண்டும். தொழில் துறையோடு ஒப்பிடுகையில் கிராமப்புறத்தின் சேமிப்பு எல்லா நாடுகளிலுமே மிகக் குறைவாகத்தான் இருக்கிறது. வேளாண்மைத் துறையில் வருமான ஏற்றத்தாழ்வு மிகவும் குறைவான அளவிலேயே இருக்கிறது. தொழில் துறையில் இருப்பது போன்று எதிர்பாராத ஆதாயங்களைப் பெறும் வாய்ப்புகள் இத் துறையில் மிகவும் குறைவு. மேலும் இத் துறையில் பல விதமான எதிர்பாராத இழப்புகளையும் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. ஊக்கவாணிக ஆதாயம் பெறும் வாய்ப்பு இத் துறையில் மிகமிகக் குறைவு. எனவே, தொழிலில் முயற்சியும், உணர்ச்சியும் குடியானவர்களிடம் தீவிரம் குறைந்தனவாகவே காணப்படுகின்றன. மேற்குறிப்பிட்ட இவற்றோடு ஆசியாவில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளைப் பொறுத்தமட்டிலும் இன்னும் சில சிறப்புக் காரணிகளும் சேர்க்கப்படவேண்டும். இந்த நாடுகளில் குறிப்பாகக் கிராமப் பகுதிகளில், குடும்பத்தில் உள்ள அத்தனை நபர்களுக்கும் உடல்நலக் குறைவின்போது பாதுகாப்பையும், மூப்புக் காலத்தில் பாதுகாப்பையும் தரும் வகையில் குடும்பத்தின் அமைப்பு (கூட்டுக் குடும்ப முறை) இருக்கின்ற காரணத்தால் முதுமைக் காலத்திற் கென்று அதிகமான சேமிப்புகள் ஒதுக்கப்படுவதில்லை. இதில் முன்னேற்றம் காணும் வாய்ப்பு மிகமிகக் குறைவாகவே இருக்கிறது.

அதிகமான முயற்சிக்கு ஊக்குவித்தல்களைத் தருவதன் மூலம் வரி விதித்தல் உற்பத்தியை அதிகரிக்கப் பயன்படுத்தப்படலாம். அதோடு மட்டுமல்லாமல் சேமிப்புகளையும் முதலீடுகளையும் குறிப்பாக ஆதாயங்களை மறு முதலீடு செய்தல் என்ற வடிவத் திலான முதலீடுகளையும் ஊக்குவிப்பதற்கான தொரு வழியாகவும் வரிவிதித்தல் பயன்படுத்தப்படலாம். முன்னேற்றத்தின் தொடக்க

[1] *Reserve Bank of India Bulletin*. August, 1961, p 1208,

நிலைகளில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சேமிப்பு விடுமிகையின் அளவை விரிவாக்குவதற்கு வரி நடவடிக்கைகள் மிகவும் பயனுள்ளவை என்ற கருத்தில் பொருளாதாரப் புலவர்களிடையே ஒருமித்த கருத்து காணப்படுகிறது. பொருளாதார முன்னேற்றம் மிக விரைவான வேகத்தைப் பெறும்போது, தனிநபர்களின் தன்னிச்சைச் சேமிப்புகளும், நிறுவனங்களின் தன்னிச்சைச் சேமிப்புகளும் மூலதனத் தேவையை ஈடுகட்டுவதற்குத் தேவையான அளவுக்கு அதிகரிக்கும். ஆனால் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் அரசாங்கத்தின் சக்தியின் மூலமான கட்டாயப்படுத்தல்கள் ஓரளவுக்கு மிகவும் அவசியமானவைகளாகின்றன. குறிப்பாக, பொருளாதார வளர்ச்சியின் காரணமாகத் தோன்றும் வருமான அதிகரிப்பின் மிகுதியானதொரு பகுதியை ஒன்று திரட்டுவதற்கு வரிவிதித்தல் பயன்படுத்தப்படலாம். துருக்கி, இந்தோனேசியா ஆகிய நாடுகளின் கிராமப் பகுதிகளில் சிலவற்றில் இறுதிநிலை நுகர்வு நாட்டம் 60% என்ற உயர்ந்த அளவிலிருந்தது என்று எக்பெர்ட் டி விரிஸ், எல்மார் ஸ்டார்ச் ஆகியவர்கள் (Elbert de Vries and Elmer Starch) குறிப்பிடுகிறார்கள். குறைந்த வளர்ச்சியுடைய பொருளாதாரங்களில் தொடர்ந்திருக்கக்கூடிய சேமிப்புப் பற்றாக்குறையை நமது கவனத்திற்குக் கொண்டுவருவதில் 1960ஆம் ஆண்டிற்கான ஐக்கிய நாடுகளின் உலகப் பொருளாதார உசாய்வு (United Nations World Economic Survey of 1960) அதிகரித்த அரசுச் சேமிப்பை வலியுறுத்துகிறது. அதாவது, செலவுகளைக் குறைப்பதன் மூலமும், அதிகரித்த நாட்டு வருமானத்தில் பெரும்பகுதியை வரிவிதித்தல் என்ற வகையில் அரசு எடுத்துக்கொள்வதன் மூலமும் அரசுச் சேமிப்பை அதிகரிக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்துகிறது.

பொதுமக்கள் தங்களுக்குக் கிடைக்கும் மூலவளங்களை உச்ச அளவு விளைவைத் தோற்றுவிக்கத்தக்க வகையில் பயன்படுத்துவதற்கு ஆயத்தமாக இருத்தல், ஓரளவுக்குச் சரியான எல்லைகளுக்குள்ளே தங்களின் செலவுகளைக் குறைப்பதற்கு ஆயத்தமாக இருத்தல் ஆகியவைகளினால் அதிகரித்த சேமிப்பு விகிதத்தைப் பெறுதல் முடியத்தக்கதாகும். ஜப்பான் நாடு கடந்த பத்தாண்டுக் காலத்தில் 6.5% என்ற ஆண்டுதோறுமான வளர்ச்சி விகிதத்தை அதன் நாட்டு வருமானத்தில் 25%-க்கும் அதிகமான சேமிப்பு நிலையோடு பெறமுடிந்தது என்றால் அதற்குக் காரணம் மக்கள் மரபு வழியாகச் சேமிக்கும் பழக்கத்தைக் கொண்டிருந்ததும் அதிகமான பரவலான கல்வி வளர்ச்சியுமேயாகும். அத்தகைய மன உறுதியும் நடவடிக்கைகளும் குறைவாக உள்ள நாடுகளிலும் கூட மனிதனின் சேமிப்பதற்கான அடிப்படை நோக்கங்களைத்

தூண்டிவிடுவதன் மூலம் அதிகரித்த சேமிப்பைப் பெறமுடியும். சேமிப்பின் முக்கியத்துவத்தைப்பற்றி மக்களுக்கு விளக்குவதன் மூலமும், உழைப்பு, முயற்சி ஆகியவைகளைப் பற்றிய மக்களின் கருத்துகளை முன்னேற்றுவிக்கும் சமுதாய நடவடிக்கைகளின் மூலமும், விளம்பர முயற்சிகளின் மூலமும் மக்களின் சேமிப்புப் பழக்கமானது வளர்க்கப்படலாம்.

(ஆ) சேமிப்பைத் திரட்டுதல் (Mobilizing Savings.)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மக்களின் சேமிப்புகள் மிகக் குறைவாக இருக்கின்றன. பொருளாதாரம் எந்த அளவுக்குச் சேமிப்பைத் தோற்றுவிக்க முடியுமோ அந்த அளவுக்குச் சேமிப்பையும்மிகத்திறம்படத் திரட்டுவதற்கான வகைகளைச் செய்துதர வேண்டிய அவசியத்தை இவ் வுண்மை கோடிட்டுக் காட்டுகிறது. முனைப்பான நுகர்வுகளிலும் ஆதாயம் தராத முதலீடுகளிலும் சேமிப்பை வீணாக்குவதைத் தடுப்பதோடு அதிகமான அளவு சேமிப்பதற்கு மக்களைத் தூண்டுவதற்காவும் தேவையான அளவு வசதிகள் உதவி செய்யவேண்டும். அதாவது, சேமிப்புகளைத் திரட்டுவதற்காக மேற்கொள்ளப்படும் எந்த ஒரு முயற்சியின் வெற்றியும் அது எந்த அளவுக்கு உண்மையான சேமிப்பிற்கும் உள்ளார்ந்திருக்கும் சேமிப்பிற்கும் இடையேயான இடைவெளியைக் குறைக்கிறது என்பதன் அடிப்படையிலேயே அளவிடப்படுகிறது.

தகுதியான பதிலாண்மைகளும் நிலையங்களும் கிடைத்தால் தான், இருக்கக்கூடிய சேமிப்புகளையெல்லாம் வெற்றிகரமாகத் திரட்டுவதற்கு அவசியமான முதனிலை தேவையாகும் என்பது மிகத் தெளிவாக இருக்கிறது. ஆசியா, தூரக்கிழக்கு நாடுகள் ஆகிய பகுதிகளில் உள்ள பெரும்பாலான நாடுகளில் சமுதாய நிலைகள் பாதகமானவைகளாகவும், பொருளாதார நிலையில் பின் தங்கியதாகவும் மாறுமலிருக்கும்போது, உள்நாட்டுச் சேமிப்பை மனநிறைவு தரத்தக்க வழியில் திரட்டுவதற்கான வகைகள் யாவும் கீழ்க்கண்டஅடிப்படைத் தத்துவங்களைப் பெற்றவைகளாக இருக்க வேண்டும். முதலீடு. விளைவு, நீர்மைத்தன்மை, எளிதில் அணுகக் கூடியதன்மை, எளிமை, பகுப்புடைமை, பரிமாற்றலாகும் தன்மை தரப்படுத்தும் தன்மை. ரகசியமாக இருக்கும் தன்மை, தனிநபர் தொடர்புகள்,[1] வைப்புக்காப்பீடு அரசாங்கத்தினுல் பாதுகாப்பு தரப்படும் என்ற நம்பிக்கை உறுதி நாணயத்தையும் பணநம்பிக்

[1] Liang, C. C, 'Mobilization of Rural Savings with Special Reference to the Far East,'; 'Mobilization of Domestic Capital,' *Report and Documents of the First Working Party of Experts*, U.N 1952. pp.152-53.

கையையும் காப்பீடு செய்வதற்கான வங்கிகளின் பொதுவான விதி முறைகள் போன்ற நல்ல தரமான பழக்கங்களின் மூலமாகச் சேமிப்பு நிலைகளில் வைப்பாக விட்டுவைக்கும் பணத்தின்பாதுகாப்பு பெறப்படுகிறது. சேமிப்புகளிலிருந்து ஏற்படும் விளைவு போது மான அளவுக்குக் கவர்ச்சியானதாக இருக்கவேண்டும். கிராமப்புற வருமானம் மிகுதியான அளவுக்கு நிலையற்றதாக இருப்பதனால் நீர்மைத்தன்மை என்பது மிகவும் கருத்தில் கொள்ளவேண்டிய ஒன்றாக இருக்கவேண்டும். அதாவது, சிறிய அளவில் சேமிப்ப வரும் அவசரத் தேவைகளின்போது அவர் சேமித்த பணத்தை யும் பயன்படுத்தத் தக்கவாறு இருக்க வேண்டும். உற்பத்தியல்லாத சொத்துகள் என்ற வடிவத்தில் சேமிப்புகள் சென்றுவிடுவதைத் தடுப்பதற்கு இது மிகவும் அவசியமானதாகும். இந் நாடுகளில் கிராமப்புறச் சேமிப்புகள் தகுதியான முறையில் திரட்டப்பட வேண்டுமென்றால், மக்களுக்கு மிக எளிதாகவும், அண்மையிலும் கிடைக்கத்தக்க வகையில் சேமிப்புப் பதிலாண்மைகளை மிகவும் பரவலாக்குதல், வைப்புகளைத் தருவதற்கும், திரும்பப்பெறுவதற்கு மான முறைகளில் எளிமை, அத்தகைய வரவு செலவுகளில் எந்த விதமான தாமதமும் இல்லாமல் நீக்குதல் சேமிப்பவர்களின் சிறிய சிறிய சேமிப்புத் தொகைகளுக்கும் ஏற்றவண்ணமிருக்குமாறு சிறு சிறு தொகைகளிலும் சேமிப்புப் பத்திரங்களையும், சேமிப்புச் சான்றிதழ்களையும் வகைப்படுத்துல், சேமிப்பவர்கள் வைத் திருக்கும் சேமிப்புக் கணக்குகளைப் பற்றிய செய்திகளை ரகசியமாக வைத்திருத்தல் ஆகியவைகளும், அவையெல்லாவற்றிற்கும் மேலாக, தனிநபர்களோடு நெருங்கிய தொடர்புகளை வைத்துக் கொள்ளுதல் ஆகியவைகளும் மிகவும் முக்கியமானவைகளாகக் கருதப்படவேண்டிய குறிப்புகளாகும்.

நகர்ப்பகுதிகளில் சேமிப்பதற்கான நிலைய வசதிகள் அதிகமாக இருக்கின்றன- எத்தகைய வருமானப் பகுதியினரால் சேமிக்க முடியுமோ அத்தகைய வருமானப் பிரிவினரின் சேமிப்புப் பழக் கங்கள் நல்ல முறையில் வளர்ச்சி பெற்றிருக்கின்றன. அண்மையில் டில்லியில் மேற்கொள்ளப்பட்ட சேமிப்புகளைப் பற்றியதொரு உசாய்வின்படி, வீட்டுத் துறையினரில் 1% அளவினர் சேமிப்பவர் களாகக் காணப்பட்டனர். சேமிக்கும் மொத்த நபர்களில் 4% அளவினர் பெரும்பாலும் நீர்மைத் தன்மையுடைய சொத்துகளின் மூலமாகவும், காப்பீடுக்கழகங்களின் மூலமாகவும் ஒப்பந்தங்களின் அடிப்படையில் சேமிக்கிறார்கள்[1]. எனவே. சேமிப்புக் குவிப்பை முன்னேற்றுவிப்பதற்கான வழிகள் பெரும்பாலும் கிராமப்

[1] *Delhi Savings Survey*, National Council of Applied Economic Research, Delhi, Asia Publishing House, Bombay. 1960, p. 70.

பகுதிகளிலேயே மிகவும் செறிவாக மேற்கொள்ளப்பட வேண்டும். அத்தகைய வழிகள் இங்கே கீழ்க்கண்டவாறு சுருக்கமாகத் தரப்படலாம்.

(i) சிறுசேமிப்புகளை ஊக்குவித்தல் (Promotion of Small Savings)

அண்மைக் காலத்தில் கிழக்குப் பகுதியில் உள்ள பல நாடுகள் சிறு சேமிப்புகளைத் தூண்டுவதற்காக மிக வேகமான பிரச்சாரங்களைத் தொடங்கியுள்ளன. 1950-51-ல் சேமிப்புப்பிரச்சாரத்தையும், 1951-52–ல் கொழும்புத்திட்டச் சேமிப்பையும் சிலோன் தொடங்கியது. மிக வேகமான கல்விமுறைப் பிரச்சாரங்கள் தொடங்கப்பட்டிருக்கின்றன. பள்ளிக் குழந்தைகளிடமிருந்தும் எஸ்டேட் தொழிலாளர்களிடமிருந்தும் சிறு சேமிப்புகளைச் சேர்ப்பதற்குச் சேமிப்பு அஞ்சல் தலைகளை விற்கும் முறை மிகப் பிரபலமாகிவருகிறது. சிக்கனத்தை விளக்கும் சுவரொட்டிகள் சிறுசிறு விளம்பர நூல்கள் ஆகியவற்றை வெளியிடுவதன் மூலம் 1961 ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் பிலிப்பைன்ஸின் மையவங்கி சிக்கனப் பிரச்சாரம் ஒன்றைத் தொடங்கியது. பாக்கிஸ்தானும், இந்தியாவும் சேமிப்புப் பத்திரங்களைப் பெருமளவில் பயன்படுத்துகின்றன. வணிக வங்கிகளில் 'எழுதப்படாத' ('Uninsrcribed') வகையிலான வைப்புகளை வைத்திருக்கலாம் என்ற புதியதொரு முறையை ஜப்பான் பரிசோதனை செய்து பார்த்திருக்கிறது. இத்தகையவற்றில் வைப்புகளை வைத்திருப்பவர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்காது. உள்நாட்டு மூலதனத்தைத் திரட்டுவதற்கான பயனுள்ளதொரு முறையாக ஜப்பான் இதனைக் கண்டது. 1950–ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் தைவானின் [புளாபின்சில் வங்கி (Provincial Bank of Taiwan China) ] சிறப்பான வட்டிச் சேமிப்பு வைப்பைத் தொடங்கியது. இது சலுகைச் சேமிப்பு வைப்பு எனப்பட்டது .இதற்கு மிகக்குறைந்த காலமாக ஒருமாத காலத்தையும் வழக்கமாக இருப்பதற்குச் சிறிதளவு அதிகமான தாக வட்டி விகிதத்தையும் இது பெற்றிருந்தது இதோடு இந் நாடுகளில் பெரும்பான்மையான நாடுகளில், குறைந்த வருமானமுடையவர்களிடையே சேமிப்பை ஊக்குவதற்கு அஞ்சலகச் சேமிப்பு வங்கிகள் பெருமளவில் பயன்படுத்தப்படுகின்றன.

(ii) அரசாங்கப் பத்திரங்களைப் பிரபலமாக்குதல் (Popularsing Government Bonds)

அரசுப்பத்திரங்கள் ஏற்றுக் கொள்ளப்படுவது மிகக் குறுகிய அளவிலேயே இருக்கிறது. குறிப்பாகக் கிராமப் பகுதிகளில் இது மிகவும் குறுகிய அளவிலேயே இருக்கிறது. அரசாங்கப் பத்திரங்

களின் வட்டி விகிதம் அதிகமானதாக இருந்தால் அது பொது வட்டி விகிதத்தை அதிகரித்துவிடும் என்ற பயத்தின் காரணமாக இப் பத்திரங்களின் வட்டி வருமானம் மிகவும் கவர்ச்சிகரமானதாக இருப்பதில்லை. அரசாங்கப் பத்திரங்கள் பிரபலமாகாமல் இருப்பதற்கான பல காரணிகளில் இதுவும் ஒரு காரணியாகும். எனவே, நிலையங்களுக்குக் கிடைக்காமல் தனிநபர்களுக்கே கிடைக்கும் வண்ணம் அதிக வட்டியுடன் கூடிய பத்திரங்களை வெளியிடலாம் என ஆசியாவிற்கும், தூரக் கிழக்கிற்குமான ஐக்கிய நாடுகளின் பொருளாதாரக் குழு பரிந்துரைத்திருக்கிறது. பொதுவாக, தனிநபர்களின் சேமிப்பு பங்குச் சந்தையினுல் கவரப்படுவதில்லை. அத்தகைய சேமிப்புகளைக் கவரும்வண்ணம் அரசுப் பத்திரங்களின் வட்டி விகிதம் அதிகரிக்கப்பட்டால் அத்தகைய அதிகரித்த செலவை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டியது அவசியம்தான் என்று குறிப்பிடப்படுகிறது. பரிசுச் சீட்டு இயல்புகளைப் புகுத்துதல், வரி ஊக்குவித்தல்களைத் தருதல், பிரச்சாரம், உள்ளூர் விருப்புகளுக்கேற்ப வேண்டுகோள் விடுத்தல் போன்று அரசாங்கத்தின் பரிசுப் பத்திரங்களைப் பிரபலமாக்கும் பிற வழிகளும் இருக்கின்றன. இவ்வாருகக் குறிப்பிட்ட பகுதிகளில் வளர்ச்சித் திட்டங்களுக்காகச் சிறப்புப் பத்திரங்கள் வெளியிடப்பட்டால் இத்தகைய பத்திரங்களை வாங்குமாறு உள்ளூர் மக்கள் கேட்டுக் கொள்ளப்படலாம். ஏனென்ருல், அத் திட்டத்தின்மீது அவர்களுக்குத்தான் அதிகமான அக்கறை உண்டு. பண வீக்கத்தின் காரணமாகப் பத்திரங்களின் மதிப்புகளில் வீழ்ச்சி தோன்றிவிடலாமென்ற பயத்தால் பொதுமக்கள் இப் பத்திரங்களை வாங்க மறுக்கலாம். ஆனுல், தன்னிச்சையான அளவுக் குறியீட்டெண்களின்மேல் அமைக்கப்படும் பணவீக்கம் அல்லது பணவாட்டப் பாதுகாப்புப் (Inflation or Deflation Proof) பத்திரங்களை வெளியிடலாம். அதாவது, இவ்வகை அளவுக்குறியீட்டெண்களில் பிரதிபலிக்கும் பணமதிப்பு மாற்றங்களுக்கு எதிராகப் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் பாதுகாக்கப்படலாம். பலவிதமான கருப்பேற்றுக் காலங்களையும் பல விதமான வட்டிவிகிதங்களையும், மாற்றுவதற்குப் பல விதமான நிபந்தனைகளையும் கொண்டுள்ள பல விதமான பத்திரங்களை வெளியிடுவதும் இத்தகைய சொத்துகளைப் பிரபலமாக்குவதற்கு உதவும்.

### (iii) கூட்டுறவுப் பதிலாண்மைகள் (Co-operative Agencies)

கிழக்குப் பகுதியில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பான்மையானவற்றில் கூட்டுறவுக் கடன் கழகங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகள் எல்லாம் மேலைநாடுகளில் குறிப்பாக ஜெர்மனி, செக்கோஸ்லோவேக்கியா,

கனடா போன்ற நாடுகளில் சிறு சேமிப்புகளைத் திரட்டுவதில் மிக அதிகமான அளவில் வெற்றியைப் பெற்றிருக்கின்றன. கிழக்குப் பகுதியில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள கூட்டுறவுக் கழகங்கள் கடனைப் பகிர்ந்தளிக்கும் கழகங் களாகவே இருக்கின்றன. ஆனால், அவைகள் மக்களிடையே சேமிப்பைத் தூண்டுவதில் பொதுவாகத் தோல்வியடைந்தவை களாகவே இருக்கின்றன. அதிகமான அளவு பாதுகாப்பும் அதிக மான வட்டி விகிதமும் தரப்பட்டால்தான் இவ்வழியில் முன்னேற் றத்தைப் பெற இயலும் பேங்காக்கில் உள்ள ஐக்கிய நாடுகளின், உணவு, வேளாண்மை அமைப்பின் மண்டல அலுவலகம் (F.A.O. Regional Office at Bangkok) 1951-ல் கிராமப் பகுதிகளின் சேமிப்பைத் திரட்டுவதற்குச் சரியான பதிலாண்மைகளாகக் கூட்டுறவு நிலையங்கள் நல்ல முறையில் செயல்படுவதற்குக் கீழ்க் கண்ட வழிகளைப் பரிந்துரைத்துள்ளது. மிகுந்த வலிமை மிக்க ஆலோசனைக் குழு ஒன்றையும், மைய உச்சநிலை நிலையம் ஒன்றை யும் நிறுவுதல், வசதி மிகுந்த குடியானவர்களைக் கூட்டுறவு இயக் கத்திற்குக் கவருதல், தேவையான அளவிலான வட்டி விகிதங்கள் தகுதி வாய்ந்த கூட்டுறவுக் கழகங்களின் வைப்புக்கடன் பொறுப் புகளுக்கும் அதிகாரிகளுக்கும் முகவர்களுக்கும் நன்னிலையிலான கல்வியும் பயிற்சியும் தருதல் ஆகியவைகளும் இவைபோன்ற பிறவும்[1] பலநாடுகளிலும் இருக்கும். இத்தகைய கூட்டுறவுக்கழகங் களில் கடன் வசதிகளை வழங்குவதிலும்கூட அவைகள் மிகமிக அதிகமான வட்டி விகிதங்களில் கடன் வழங்கும் கிராமப்புற லேவாதேவிக்காரர்களோடு போட்டி போட வேண்டியிருக்கிறது. உடனடியாகப் பணம் தருதல், மிக எளிதாக அணுகுவதற்கு வசதி யாக இருத்தல் ஆகியவற்றின் அடிப்படையிலேயே லேவாதேவிக் காரர்களின் வெற்றி அமைந்திருக்கிறது. எனவே, அநியாய வட்டியைத் தவிர்ப்பதற்காக இந்தோனேசியாவில் தோற்று விக்கப்பட்ட அரசாங்க லேவாதேவிக் கடைகளைப் போல சிறிய லேவாதேவி வங்கிகளைக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளும் தொடங்க வேண்டும் என்று பரிந்துரைக்கப்படுகிறது. எந்த நோக்கத்திற்காகக் கடன் கேட்கப்படுகிறது என்பதைப்பற்றி எந்த விதமான வினாவும் கேட்கப்படாமல் அசையும் பொருட்களின் அடமானத்தின் பேரில் சிறிய அளவில் கடன் தருவது இவ் வங்கிகளின் முக்கியமான பணியாக இருக்கவேண்டும். அரசாங் கத்தின் முற்றுரிமையோடு, பணிச்செலவுக் கோட்பாட்டின் அடிப் படையிலும், இலாபநோக்கு இல்லாமலும் இத்தகைய நிலையங்கள்

[1] *Measures for Mobilizing Rural Savings*, F.A.O. Office. Bangkok. 'Mobilization of Domestic Capital,' *Report and Documents of the First Working Party of Experts*, U.N., 1952, pp. 138-41.

இருப்பது மிகவும் விரும்பத்தக்கதாகும். இந்தோனேசியாவின் அரசாங்க லேவாதேவிக் கடைகள் மிகவும் திறம்படப் பணி செய்வதாகத் தெரிகிறது. அவைகள் அரசாங்கத்திடமிருந்து 3½% வட்டி விகித்தில் கடன் பெறுகின்றன. மேலும், கணக்குகளைத் தணிக்கை செய்யும் நோக்கங்களுக்காக, அஞ்சலகங்களை அவைகள் பயன்படுத்திக் கொள்கின்றன. அந்த வங்கிகளின் மிக முக்கியமான நோக்கம் சேமிப்புக்குவிப்பு அன்று. மாறாக, கிராமப் பகுதியில் உள்ள லேவாதேவிக்காரர்களுக்குப் பதிலாக இருப்பதற்கும் கிராமக் கூட்டுறவுக் கடன் கழகங்களுக்குத் துணை செய்வதற்காகவும் நல்லதொரு வழியாகக் கால ஓட்டத்தில் வட்டி விகிதத்தைக் குறைத்து கிராமப் பகுதிகளில் குறைந்த வட்டி நிலைமையைத் தோற்றுவிப்பதும்தான் அந்த வங்கிகளின் முக்கியமான நோக்கங்களாக இருக்கின்றன. இந்தோனேசியாவில் அரசாங்க லேவாதேவிக்கடைகள், கிராமப்பகுதி லேவாதேவிக்காரர்கள் வாங்கும் வட்டி விகிதங்களைக் குறைப்பதில் நிச்சயமாக வெற்றி பெற்றிருக்கின்றன என்று சொல்லப்படுகிறது.[1]

### (iv) காப்பீட்டுப் பழக்கத்தை வளர்த்தல் (Fostering the Insurance Habit)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சேமிப்புகளைக் குவிப்பதற்கான இன்னொரு வழி அந் நாடுகளின் கிராமப்புற மக்களிடையே காப்பீடு செய்துகொள்வதற்கான பழக்கத்தைப் பிரபலமாக்குவதாகும். மக்களின் கல்வித்தரம் உயரும்போதுதான் காப்பீடு செய்தல் பிரபலமடையும். ஆனால், கிராமப் பகுதிகளில் மிக நல்ல முறையில் அமைக்கப்பட்ட பிரச்சாரங்களின் வாயிலாக இத்தகைய பழக்கங்கள் முன்னேற்றுவிக்கப்படலாம். பெரும்பான்மையான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் காப்பீட்டு வசதிகள் பெருக்கப்பட்டுள்ளன. ஆனால், அவைகள் யாவும் நகர்ப் பகுதியிலேயே செறிந்திருக்கின்றன. ஒரு சில நாடுகளில் காப்பீட்டு வணிகம் நாட்டுடைமை ஆக்கப்பட்டிருக்கிறது. கிராமப் பகுதிகளிலும் காப்பீட்டு நடவடிக்கைகளை விரிவாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இந்தியாவில் ஆயுள் காப்பீட்டு வணிகம் 1956-ல் நாட்டுடைமையாக்கப்பட்டு இந்தியாவின் ஆயுள் காப்பீட்டுக் கழகம் அமைக்கப்பட்டது. அண்மை ஆண்டுகளில் காப்பீட்டு நடவடிக்கைகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் காணப்படுகிறது. 1956–ல் 567,000 பாலிசிகளுக்கு ரூ. 2,003

[1] State pawn shops in Indonesia, by E C A F E Secretariat- 'Mobilization of Domestic Capital,' *Report and Documents of the First Warking Party of Experts*, 1952, pp. 117-23.

மில்லியன் தொகைக்கு இருந்த இவ் வணிகத்தின் புதிய சாதனை 1960–ல் 1,258,000 பாலிசிகளுக்கு ரூ. 4.975 மில்லியனுக்கு அதிகரித்தது. இக் கழகத்தின் மூலவளங்கள் அரசாங்கப் பங்குச் சான்றிதழ்களிலும் கூட்டுப் பங்குக் கம்பெனிகளின் பங்குகளிலும் கடன்களிலும் முதலீடு செய்யப்பட்டன. 1960–ல் காப்பீட்டுக் கழக நிதியின் மொத்த முதலீடுகளில் பொதுத் துறையில் முதலீடு 79% அளவிலும் தனியார் துறையில் முதலீடு 21% அளவிலும் இருந்தது 1958–ல் இராஜஸ்தானில் மிகவும் செறிவான கிராமப் புறக் காப்பீட்டு முறை புகுத்தப்பட்டது. அத்தகைய தீவிரமான திட்டம் நாட்டின் பிற கிராமப் பகுதிகளுக்கும் விரிவுபடுத்தப் படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

**(இ) சேமிப்புகளை முதலீடுகளில் வழிப்படுத்துதல் (Canalization of Savings into Investment)**

முதலீட்டிற்கான நிதியாக்கச் சிக்கல் முக்கியமாகத் தனியார் வணிகத்துறையோடு தொடர்புடையதாக இருக்கிறது. வேளாண்மைத்துறைக்கு அரசு ஏராளமன அளவு மூலவளங்களைத் தருகிறது. அதோடு, வேளாண்மைத் துறை அதன் மூதலீடுகளுக்காக அதன் சொந்த மூலவளங்களையே பெருமளவில் சார்ந்திருக்கிறது. இத்தகைய முதலீடுகளில் பெரும்பான்மையானவை சேமிக்கும் போதே உடனிகழ்வாக நிகழ்பவை. எடுத்துக்காட்டாக, கட்டட நிருமானம். நிலத்தின் முன்னேற்றங்கள். கிணறுகள் தோண்டுதல் இன்னும் இவைபோன்ற பிறவற்றையும் குறிப்பிடலாம். தவிர, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தோற்றுவிக்கப்படும் மூல தனத்தின் பெரும்பகுதி பணத்தொடர்பற்றதாகவும் இருக்கிறது. பொதுத் துறையைப் பொறுத்தமட்டிலும் பெறுதல், வரி விதித்தல், பண வீக்க நிதியாக்கத்தைப் பயன்படுத்துதல் என்ற முறைகளில் தேவையான மூலவளங்களை அரசு பெறுகின்றது. சிறப்பான நிதிக்கழகங்களின் மூலமாகத் தனியார் துறைக்கும் ஓரளவுக்கு அரசு பணமுலவளங்களைத் தருகிறது. ஆனால், தனியார் துறையின் மூலவளத் தேவையின் பெரும்பகுதியை ஈடுகட்ட. அவைகள் வேறு பல மூலங்களைச் சார்ந்தே இருக்கவேண்டியிருக்கின்றது. தனியார் வணிகம், அதன் நிதியாக்கத்திற்காகக் கடைப்பிடிக்கும் முறைகள் மூன்றாக வகைப்படுத்தப்படுகின்றன. முதலாவதாக, அதன் ஆதாயத்தின் ஒருபகுதி ஆதாய ஈவாகப் பிரித்துத் தரப் படாமல் முதலீடு செய்யப்படுகிறது. அத்தகைய மூலவளத்தை ஓரளவுக்குச் சார்ந்து நிற்கிறது தனியார் வணிகம். இரண்டா வதாக, அதன் பங்குச் சான்றிதழ்களை விற்பதன் மூலம் அது பண மூலவளத்தைத் திரட்ட முடிகிறது. மூன்றாவதாக, கடன்களை எழுப்புவதன் மூலமாக, அமிதச் செலவு அலகுகளிலிருந்து

(Surplus Spending Units) நேரிடையாகவே கடன்களைப் பெற முடிகிறது. முதலில் குறிப்பிட்டது வணிகத்தின் அக நிதியாக்கம் என்றும், இரண்டாவதாகவும் மூன்றாவதாகவும் குறிப்பிடப் பட்டவை புறநிதியாக்கம் என்றும் அமைகின்றன.

நிதிஇடைத்தரகர்களால் அல்லது முகவர்களால் புற நிதியாக்கம் நடைபெறுகிறது. வீட்டுத் துறைகள் தங்களின் வருமானங்களின் பெரும் பகுதியைச் சேமிப்பவைகளாக உள்ள மற்றப் பல துறைகள் ஆகிய அமிதச் செலவு அலகுகளிலிருந்து மூலவளங்களைச் சேகரிப்பதிலும், பெரும்பாலும் வணிக நிறுவனங் களாக உள்ள பற்றுக்குறைச் செலவு அலகுகளுக்கு (Deficit-Spending Units) இம் மூலவளங்கள் கிடைக்கும்படியாகச் செய்வ திலும் இத்தகைய இடைத்தரகர்கள் அல்லது முகவர்கள் சிறப்புத் தேர்ச்சியைப் பெற்றவர்களாக இருக்கிறார்கள். வங்கிகள், தரகர்கள், முதலீட்டு நிறுவனங்கள், காப்பீட்டுக் கழகங்கள், கடன் சந்தையிலும் பங்குச் சந்தையிலும் இருக்கும் மற்றப் பல பதிலாண்மைகள் ஆகியவைகள் வளர்ச்சி பெற்ற தடையற்ற தன் முயற்சியில் பொருளாதாரத்தில் உள்ள நிதி இடைத்தரகர்களாக இருக்கின்றன. நிறைவுப் போட்டி நிறுவத் தக்க எளிமையானதொரு பொருளாதாரத்தில் கிடைக்கக் கூடிய சேமிப்புகள் முதலீட்டிற்கு மிக எளிதாகவும் நேரிடை யாகவும் செல்கிறது. முதலீடு செய்பவர்களாகவும் இருக்கக்கூடிய இத்தகைய சேமிப்பவர்கள் வைத்திருக்கும் சொத்துகளின் நிகர விளைவு மூலதனத்தின் உறுதி இறுதி நிலைவிளைவுக்குச் (Effective marginal Product of Capital) சமமாக இருக்கும். ஆனால், பொருளாதாரம் வளர்ச்சி பெற்று அதன் பணிகள் மிகவும் சிக்க லானவைகளாக மாறும்போது, ஏராளமான இடைத்தரகர்கள் தோன்றுகிறார்கள். கடன் தருபவர்களாக இருக்கும் சமூகப் பிரிவினரிடம் இருக்கும் சேமிப்புகளைக் கடன் பெறுபவர்களாக இருக்கும் சமூகப் பிரிவினரிடம் மாற்றுவதற்கு இத் தரகர்கள் உதவி செய்கிறார்கள். எளிமையான பொருளாதாரத்தில் முதலீடு செய்பவரையும் சேமிப்பவரையும் பாதிக்கும் முதலீட்டுத் தோல்வி யின் இழப்பு என்ற ஒரேயொரு ஆபத்து மட்டும்தான் தோன்று கிறது. ஆனால், இடைத்தரகர்கள் தோன்றுவதால் இன்னொரு ஆபத்தும் தோன்றுகிறது. அதாவது, எந்த நிறுவனத்தின்மீது முதலீடு செய்யப்படுகிறதோ அந்த நிறுவனம் தோல்வியடைந்து விடலாம் என்ற ஆபத்தோடு சேமிப்பவர்கள் அல்லது கடன் தருவோர் எதிர்நோக்கத்தக்க அளவில் அவர்கள் கொடுத்திருக்கும் பணத்தையும் இழந்துவிடத்தக்க இரண்டாவது ஆபத்தும் இருக் கிறது.

பார்க்கத்தக்க சொத்துகளின் அடிப்படையில் கடன்கள் தரப்படுகின்றன. எனவே, பொருளாதாரம் ஒன்று வளர்ச்சி யடையும்போதும், கடன் பற்று வரவுகளின் மூலம் தோற்றுவிக்கப் படும் முதலீட்டு நிதியாக்கங்களில் நிதி இடைத்தரகர்களின் பங்கு அதிகரிக்கப்படும்போதும், மென்மேலும் அதிகமான கோரிப் பெறும் நிதி உரிமைகள், கடன் பொறுப்புகள், உரிமைக்கான சான்றிதழ்கள் (உரிமைச் சான்றிதழ்கள்) தோற்றுவிக்கப்படும். இத்தகைய பார்க்கத்தக்க சொத்துகளுக்கு அல்லது பொருளா தாரத்தின் சொத்துகளின் விகிதம் அதிகரிக்கும் அத்தகைய இருவகையான சொத்துகளுக்குமுள்ள தொடர்பை ரேமாண்ட் கோல்ட்ஸ்மித் (Raymond Goldsmith) என்பவர் நிதியின் பல தொடர்புகளின் விகிதம் (Financial Interrelations Ratio) என்று குறிப்பிடுகிறார். அஃது கீழ்க்கண்டவாறு தெரிவிக்கப்படுகிறது.

$$\frac{\text{நாட்டுச் சொத்துகள் (National Assets)}}{\text{நாட்டுச் செல்வங்கள் (National Wealth)}} \quad 1$$

கண்ணுக்குப் புலனுகாதவைகள் இருக்கும்போது இவ் விகிதம் பூச்சியத்திற்குச் சமமாகிறது. அதாவது, நாட்டுச் சொத்துகள் நாட்டுச் செல்வங்களுக்குச் சமமாகும்வண்ணம் எந்தவிதமான நிதியின் தொடர்புகளும் இல்லை என்றுகிறது. இவ் விகிதம் அதிகமாக இருந்தால், நிகர நிதியின் பல தொடர்புகள் மிகவும் செறிவாக இருக்கும். 1850ஆம் ஆண்டிலிருந்து உள்ள ஆண்டு களுக்கு ஐக்கிய அமெரிக்க நாட்டில் இவ் விகிதத்தை கோல்ட்ஸ்மித் கணக்கிட்டிருக்கிறுர். அதில் இந்த நிதியின் பல தொடர்புகள் (F.I.R) நீண்ட காலத்தில் வளர்ந்து செல்லும் போக்கைப் பெற் றிருந்தன என்றும் கண்டிருக்கிறுர். இருப்பினும், பொருளாதார வளர்ச்சியைக் காட்டும் ஓர் அளவையாக இவ் விகிதம் இல்லை என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறுர். பொருளாதாரத்தின் நிதி அமைப்பில் தோன்றும் மாற்றத்தைச் சுட்டிக் காட்டுவதாக இது இருக்கிறது என்றும், அரசாங்கக் கடனின் அளவு என்பதைப் போன்ற பல காரணிகளாலும், வங்கிமுறை, காப்பீட்டுக் கழகங்கள் மற்றும் பொருளாதார நடவடிக்கைகளுக்கான நிதியாக்கத் திற்கான பிற நிலையப் பதிலாண்மைகள் ஆகியவைகளின் செயல் பங்கு ஆகியவைகளால் நிர்ணயிக்கப்படுகிறது என்றும் அவர் குறிப்பிடுகிறுர்.[1] எப்படியிருந்தாலும் வளர்ச்சி பெற்ற பொருளா தாரங்களில் இவ் விகிதம் ஒன்றுக்குக் குறைவானதாகவே இருக் கிறது.

[1] Goldsmith, R., 'Financial Structure and Economic Growth in Advanced Countries. '*Capital Formation and Economic Growth*, National Bureau of Economic Research, Princeton, 1955, p. 118.

19ஆம் நூற்றுண்டின் இறுதி ஆண்டுகளிலிருந்து வளர்ச்சி பெற்ற நாடுகளில் முதலீடுகளுக்கான நிதியாக்க முறையில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டன. முதலாவதாக, மூலதனச் சந்தையில் தனியார் நிறுவனங்களுக்குக் கிடைக்கத்தக்க மூலவளங்களின் தொகையில் அண்மை ஆண்டுகளில் பேரளவிலான சரிவு தோன்றியிருக்கிறது. மூலதனச் சந்தையில் இந் நிதியில் பொதுவான இறக்கத்தின் காரணமாக ஓரளவுக்கும், தனியார் வணிகமானது இம் மூலத்தின்மீது சார்ந்திருக்கும் இயல்பு குறைந்து வருவதன் காரணமாக ஓரளவுக்கும் இச் சரிவு தோன்றியிருக்கிறது. வருமானப் பங்கீட்டில் மாற்றங்கள், எல்லோருக்கும் சமமான வரி முறைகள் என்ற அரசாங்கத்தின் நடவடிக்கைகள் ஆகியவைகள் சமுதாயத்தில் செல்வச் செறிவைக் குறைத்திருக்கின்றன. அதன் காரணமாகப் பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கேற்ப நிதிகள் அதிகமாதல், மூலதனச் சந்தையின் நிதி மூலவளங்களின் தேவைகளைப் பெறுதல் என்ற வாய்ப்புகள் மூலதனச் சந்தைக்கு மறுக்கப்பட்டிருக்கின்றன. மறுபுறத்தில், தனியார் வணிகம் அதன் வருமானங்களை மறு முதலீடு செய்வதை மென்மேலும் சார்ந்திருக்கவேண்டியிருந்தது. இரண்டாவதாக, கடன் மூலதனம், பங்குகள் இவற்றிடையே தனியார் வணிக நிறுவனங்கள் கடன் மூலதனத்தின்மீது மென்மேலுமான விருப்பத்தைக் காட்டும் போக்கைப் பெற்றிருந்தன. தனியார் வணிக நிறுவனங்கள் கடன் மூலதனங்களை மிகவும் மலிவானவைகளாகவும் சிரமம் குறைந்தவைகளாகவும் காண்கின்றன. இதற்கு மாருக, இலாபத்தில் அதிகமான அளவை மறு முதலீடு செய்வதற்கேற்ப அரசாங்கத்திஞல் கட்டாயமாகப் புகுத்தப்படும் அல்லது வணிக நிறுவனங்கள் அவைகளாகவே தன்னிச்சையாக ஏற்படுத்திக் கொள்ளும் இலாப ஈவுத் தொகைக் கட்டுப்படுத்தல்களும் அரசாங்கத்தின் வரிக் கொள்கைகளும் சரிஒப்புரவு மூலதனத்தின் (Equity-Capital) குறைந்து செல்லும் முக்கியத்துவத்தை விளக்குகின்றன. மூன்ருவதாக, தனியார் வணிகத்திற்கு நிதிகளைத் தரும் பதிலாண்மை என்ற வடிவத்தில் வணிக வங்கிகளின் சிறப்பிடமும் குறைந்துவருகிறது. அரசாங்கத்தின் காப்பீடு, கடன் தருதல் ஆகியவைகளின் பதிலாண்மைகள், அஞ்சலகச் சேமிப்புகள் கடன் கூட்டமைப்புகள், தனியார் முதலீட்டுக் கம்பெனிகள் மற்றும் பிறவகைகள் போன்ற பலவிதமான நிதி இடைத்தரகர்களின் பதிலாண்மையின் மூலம் நிதியாக்கம் மென்மேலும் அதிகமான அளவில் மேற்கொள்ளப்படுகின்றன. இத்தகைய முன்னேற்றங்களின் காரணமாக, வளர்ச்சி பெற்ற நாடுகளில் உள்ள நிதி இயந்திரம் மிகவும் சிக்கலானதாகவும், மரபு வழியாக உள்ள பண வழிகளின் மூலமாகவும், கடன் கட்டுப்பாடுகள் மூலமாகவும் ஓரளவுக்கு

மட்டுமே முறைப்படுத்தத் தக்கதாகவும் கட்டுப்படுத்தத் தக்க தாகவும் இருக்கிறது.

பொருளாதார முன்னேற்றத்தோடு நிதி நிலையங்களும் வளர்ச்சி பெற்றுவருகின்றன. தொழில் மயமாதலோடு, நாட்டு வருமானம் அதிகரிக்கும்போது, புதிய முதலீடுகளுக்குத் தேவைப் படும் நிதி மூலவளங்களும் அதிகரிக்கின்றன. தவிர, தொழிற் பெருக்கம் முதலீட்டில் ஒரு நம்பிக்கையைத் தோற்றுவிக்கிறது. பொருளாதாரத்தில் உள்ள அமிதச் செலவு அலகுகள் (Surplus-Spending Units) அவைகளின் சேமிப்புகளை வணிக நிறுவனத் திடம் நேரிடையாகவோ இடைத்தரகர்கள் மூலமாகவோ கொடுப்பதற்குச் சம்மதம் உடையவைகளாக இருக்கின்றன. முதலீடு செய்பவரின் நோக்கிலிருந்து பார்க்கும்போது அவரின் நிலையை மிகவும் நீர்மையற்றதாகச் செய்யாமலிருக்குமானால் முதலீடு மிகவும் கவர்ச்சியானதாக மாறிவிடுகின்றது. வரையறை செய்யப்பட்ட கடன் பொறுப்புக் கம்பெனிப் பங்குகளின் சந்தை ஆகியவைகள் போன்ற நிதி நிலையங்களின் முன்னேற்றத்தின் மூலம் நீர்மைத் தன்மை அதிகரிக்கப்படும். வணிக வங்கிகளின் முன்னேற் றமும் சேமிப்பை அதிகரித்தல், முதலீடுகளில் சேமிப்புகள் எளிதாகச் செல்வதற்கு வகை செய்தல் ஆகியவைகளைத் தோற்று விக்கின்றது. ஆனால் இந்த நிலையங்கள் எல்லாம் பொருளாதார வளர்ச்சியோடுதான் முன்னேற முடியும் என்றிருப்பதால் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளின் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் மிகவும் இடர்ப்பாடுடைய நிலையில் காணப்படுகின்றன. தொழில்மயமாகவேண்டும் என்ற தேவைக்கான உணர்வு ஏறத்தாழத் திடீரெனத் தோன்றியிருக்கிறது. எனவே, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளின் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் மிக வேகமான தொழில்மயமாதலைத் தடை செய்யத் தக்கதொரு நிலையக் கிளர்ச்சியின்மையைக் காணுகின்றன.

வணிக வங்கிகளின் நடவடிக்கைகளில் உள்ள இத்தகைய குறைகளை நீக்குவதற்குக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் ஒரு சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இரண்டாவது உலகப் பெரும் போருக்குப்பின் மையவங்கிகள் இல்லாதிருந்த பல நாடுகளில் மையவங்கிகள் தோற்றுவிக்கப் பட்டிருக்கின்றன. பாக்கிஸ்தான் நாட்டின் மையவங்கி அதிகாரத்தையுடைய பாக்கிஸ்தானின் அரசு வங்கி (Stae Bank of Pakistan) 194 ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் அமைக்கப்பட்டது. கிராமப் பகுதிகளில் நிதியாக்கத்திற்காகச் சிக்கல்களில் அதிகக் கவனத்தைச் செலுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடும், பாதி

நகர்ப்பகுதிகளாக உள்ள நிலப்பகுதிகளில் வங்கி வசதிகளை விரிவாக்கும் நோக்கத்தோடும் 1950ஆம் ஆண்டில் வங்கி முன்னேற்றத்துறை (Department of Banking Development) என்றதொரு துறையை இந்தியாவில் ரிசர்வ் வங்கி அமைத்தது. 1952ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் பர்மாவின் யூனியன் வங்கிச் சட்டத்தின்படி (Union Bank of Burma Act of March 1952) பர்மாவின் யூனியன் வங்கி வலிமைப்படுத்தப்பட்டுத் திருத்தி அமைக்கப்பட்டது. 1951ஆம் ஆண்டில் இந்தோனேசிய அரசாங்கம் அதன் மையவங்கி முறையைச் சீர்திருத்தியது. தொழில் மயமாவதற்குத் தேவையானவற்றைத் தருவதற்கு வங்கிகளைத் தோற்றுவித்தலும், தொழில் முயற்சிகளில் வங்கி நிதிகள் மிக எளிதாகச் செல்லும்வண்ணம் வணிக வங்கிகளின் கடன்கொடுக்கும் கொள்கைகளைத் தளர்த்தலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வங்கி முறையை முன்னேற்றுவிப்பதற்காக மேற்கொள்ளப் பட்ட இன்னொரு முறையாகும். மக்களிடையே வங்கிப் பழக்கத்தை முன்னேற்றுவிக்கும் நோக்கத்துடனும், கிராமப் பகுதிகளில் வங்கி வசதிகளைத் தரும் நோக்கத்துடனும் அரசினரின் கட்டுப்பாடுகளுடனும் உதவியுடனும் பெரிய வங்கிகளைக் கிராமப் பகுதிகளில் கிளைகளைத் திறக்கச்செய்ய நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன. பொருளாதாரப் பின்தங்கிய நிலையின் காரணமாகவும், கிராமப்புறத்தில் இருக்கும் மக்களிடையே கல்வி வளர்ச்சியின் காரணமாகவும் சாதாரணமான சூழ்நிலைகளில் கிராமப் பகுதிகளில் வங்கிகள் அவைகளின் கிளைகளைத் தொடங்க மாட்டா என்ற எடுகோளின் அடிப்படையில்தான் இக் கொள்கை அமைந்திருக்கிறது. இவ்வாறாக, இந்தியாவின் இம்பீரியல் வங்கியை Imperial Bank of India) நாட்டுடைமையாக்கியதன் மூலம் 1955 ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்ட இந்திய அரசு வங்கி (State Bank of India)யிடம் கிராமப்புறச் சேமிப்புகளைத் திரட்டுதல், வேளாண்மை, தொழில், வணிகம், வியாபாரம் ஆகியவைகளுக்கு நல்ல முறையிலான கடன் வசதிகளைத் தருதல் ஆகிய பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. கிராமப்பகுதிகளில் வங்கி, வசதிகளை விரிவாக்கும் திட்டத்தின்படி 1960ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 30ஆம் தேதிக்குள் குறைந்த அளவு 400 கிளைகளையாவது திறக்கும்படி அரசு வங்கி (State Bank) கேட்டுக் கொள்ளப் பட்டது. குறிப்பிட்ட காலத்திற்குள்ளேயே இந்த இலக்கைப் பெறுவதில் வெற்றி காணப்பட்டது. துணைக்குழு ஒன்றின் பரிந்துரைகளின்படி, அரசு வங்கி இன்னும் 300 கிளைகளை 1965ஆம் ஆண்டு ஜூலைத் திங்களுக்குள் திறக்கவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. புதிய கிளைகளைத் தொடங்கும் திட்டத்தில் இந்திய அரசு வங்கி (State Bank of India) 145 கிளைகளையும் மற்ற

துணை வங்கிகள் 155 கிளைகளையும் திறக்கவேண்டும் என்றும் அவைகளிடம் பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்டுள்ளன.

ஏற்கனவே, குறிப்பிட்டபடி, பொருளாதார வளர்ச்சியின் துவக்க நிலைகளில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தோன்றிய தனித்தன்மை வாய்ந்த சிக்கல்களின்படி பார்க்கும்போது முன்னேற்றம், நிதி ஆகியவைகளுக்கான கழகங்கள் (Development and Finance Corporations) போன்ற நிதிக் கழகங்கள் தேவைப் படுகின்றன. ஒரு வழியில் பார்த்தால், இக் கழகங்கள் அரசுக்கும் தனியார் தொழில் நிறுவனங்களுக்கும் இடையே ஒரு தொடர்பாக அமைந்துள்ளன. ஒரு சில நாடுகளில் தனியார் துறையில் தொழில்களை ஊக்குவிக்கும் நோக்கத்தைக் குறிக்கோளாக முன்னேற்றக் கழகங்கள் (Development Corporations) கொண்டிருக் கின்றன. ஆனால், இயல்பான வழிகளின் வாயிலாக நிதி மூலவளங்கள் கிடைக்காததனால் பொருளாதார வளர்ச்சிப்போக்கு தடைப்பட்டுவிடாமல் இருக்கிறதா என்பதைப் பார்ப்பதே இத்தகைய கழகங்களின் பின்னணியில் உள்ள பொதுவான கருத் தாகும். இப்போதுள்ள வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளின் வளர்ச்சியின் துவக்க நிலைகளில் இத்தகையதொரு தேவை ஏற்பட்டிருக்கவில்லை. ஏனென்றால், தொழில் முன்னேற்றத்தோடு ஒரு படியாக இந் நாடுகளில் நிதிக்கழகங்கள் வளர்ச்சி பெற்றன. இப்போதுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் மிக வேகமான பொருளாதார வளர்ச்சி விகிதத்தைப் பெறவேண்டியிருக்கின்றன. ஆதலால், மிக மெதுவாகத் தோன்றும் நிதிக்கழகங்கள் தோன்றும் வரை அவைகளால் காத்திருக்க முடியாது. பொருளாதார வளர்ச்சியின் மாதிரி அரசாங்கத்தினால் அமைக்கப்பட்டுத் திட்ட மிட்டதாக இருப்பதனாலும், பண மூலவளங்களைத் திரட்டுவதற்கும், முதலீடுகளில் அவற்றை வழிப்படுத்துவதற்கும் முகவர்களும் இடைத்தரகர்களும் தோற்றுவிக்கப்படவேண்டும். இருப்பினும், சேமிப்பைத் திரட்டுவதற்கும் வழிப்படுத்துவதற்கும் தோன்றும் புதிய முகவர்கள் மிகவும் மனநிறைவு தரத்தக்க வகையில் செயல் படவேண்டுமானால், அவைகள் மிகவும் திறம்பட நடத்தப்படவும செயல்படுத்தப்படவும் வேண்டும் என்பது மிகவும் முக்கியமான தாகும். தராதரமாக மிகக் குறைந்த செலவில் வணிகத்திற்கும், தொழிலுக்கும், வேளாண்மைக்கும் நிதியளிக்க அவைகளால் முடிய வேண்டும். தனியார் வணிகத்தின் நோக்கில் மிகவும் நம்பத்தக்க தொரு நிதி மூலமாக அவைகள் செயல்பட வேண்டும். வளர்ச்சி பெற்றுவரும் பொருளாதாரத்தின் அதிகரித்துவரும் தேவைகளை ஈடு செய்யும்வண்ணம் அவைகளின் மூலம் கிடைக்கத்தக்க மூலதன அளவில் உறுதியான அதிகரிப்பு இருக்க வேண்டும். பண

வீக்கத்தின் வாயிலான நிதியாக்கத்தை அவைகள் தவிர்க்க வேண்டும் என்பதும் மிகவும் முக்கியமானதாகும். தங்களின் மூல வளங்களுக்காக அரசாங்கத்தை அல்லது மைய வங்கிகளைச் சார்ந்திருக்கும் நிதியாக்க முறைகள் மிகக் குறைவான அளவில் பண வீக்கத்தைத் தோற்றுவிக்கத் தக்கவைகளாகும். ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ளும் திட்டங்களில் (Mutual Aid Programmes) அரசுகளுக்கு அளிக்கப்படும் மானியங்களால் தோன்றும் 'எதிரிணை' ('Counterpart') நிதிகளைப் பயன்படுத்துவது மிகக் குறைவான அளவில் பணவீக்க விளைவுகளைப் பெற்றவைகளாகும். ஜப்பான், இந்தோனேசியா, துருக்கி, இந்தியா போன்ற நாடுகளுக்கு இத்தகைய நிதிகள் கிடைக்கின்றன. மாறுதிருக்கும் தன்மையைப் பாதிக்காமல் தொழில் வளர்ச்சியையும் பொருளாதார வளர்ச்சியையும் எந்த அளவுக்கு அதிகரிக்கிறதோ அதைக் காட்டுவதாக வளர்ச்சிக் கழகங்களின் (Development Corporations) பயன் இருக்கிறது என்பதுதான் உண்மை.

# 5. பணவாக்கக் கொள்கை

## (Monetary Policy)

### பணவாக்கக் கொள்கை என்றால் என்ன?

### (What Monetary Policy Means?)

பொருளாதாரம் ஒன்றில் உள்ள தாள் பணம், கடன், மற்றப் பணப்பதிலிகள் ஆகிய சொத்துகளின் மொத்த இருப்பைப் பாதித்தல், அத்தகைய சொத்துகளுக்கான சமுதாயத் தேவையை இயக்குதல் ஆகிய கண்ணோட்டத்தில் இத்தகைய சொத்துகளின் ஓட்டத்தை வழிப்படுத்துவதைப் பணவாக்கக் கொள்கை நோக்கமாக கொண்டிருக்கிறது.[1] பண இயந்திர அமைப்பின் மூலமாகச் செயல்படும் பரிமாற்றப் பொருளாதாரத்தின் நடவடிக்கை நிலைகளின்மீதும் மூலவளங்களின் பங்கீட்டின்மீதும், பணப்பரிமாணத்தின் அளிப்பை வழிப்படுத்தும் முறைகள் தெளிவாக நேரடியான விளைவுகளைப் பெற்றிருக்கும். தனியார் நுகர்வு, பொது அல்லது அரசுச் செலவுகள், தனியார், பொது ஆகிய இரண்டின் முதலீடு ஆகிய மூன்றிலும் குறிப்பட்டதொரு காலத்தில் கிடைக்கும் உண்மை மூலவளங்கள் பகிர்ந்தளிக்கப்படுகின்றன. பணவாக்கக் கொள்கையின் மூலம் அதாவது, வட்டி விகித மாற்றங்கள், கடனின் பெருக்கம் அல்லது கடனின் சுருக்கம் ஆகியவைகளின்மூலம் மற்றும் வரிக் கொள்கைகளின் மூலம் அதாவது, வரி நிலையை அதிகரிப்பதன் மூலம் அல்லது குறைப்பதன் மூலம் பண அதிகாரிகள் அல்லது அரசுத் தனியார் நுகர்வில் அல்லது அரசுச் செலவில் மூலவளங்களின் ஓட்டத்தை குறைக்கவோ அதிகரிக்கவோ முடியும். அதன் வழியாக முதலீட்டிற்கும் மூலதன ஆக்கத்திற்குமான மூலவளங்கள் கிடைப்பதை அதிகரிக்கவும்

[1] Hart, A. G., 'Monetary Policy for Income Stabilization, *Income Stabilization for a Developing Democracy*, Ed. by Max F. Millikan, Yale, 1953, p. 304.

அல்லது குறைக்கவும் முடியும். இவைகள் யாவும் பொருளாதார வளர்ச்சியின்மீது நேரடியான விளைவைப் பெற்றிருக்கின்றன.[1] இத்தகைய வழிகளில் மூலதன ஓட்டத்தைச் சரியான முறையில் இசைவிப்புச் செய்வதன் மூலம் பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கு உறுதித் தன்மையைக் கொடுக்க முடியும்.

பத்தொன்பதாம் நூற்றுண்டில் பொருளாதாரத்தின் செயல்களை வழிப்படுத்தும் ஒருவகையாகப் பணவாக்கக் கொள்கையின்மீது அதிகமான நம்பிக்கை வைக்கப்பட்டிருந்தது. 1920ஐச் சேர்ந்த ஆண்டுகளிலும் 1930ஐச் சேர்ந்த ஆண்டுகளிலும் அந்த நம்பிக்கை குறைந்துவிட்டது. பணவாக்கக் கொள்கையும், வழக்கமான பணவாக்கக் கட்டுப்பாட்டு முறைகளும் வணிக மந்தத்தைத் தடைசெய்யத் தவறிவிட்டது இத்தகைய குறிப்பிடத்தக்க தடைக்கான தெளிவானதொரு காரணமாகும். கீன்ஸின் பொருளியலில் (Keynesian Economics) பணத்தின் இருப்பை மாற்றுதல் என்பதிலிருந்து வரிமுறைகளுக்கு முக்கியத்துவம் மாற்றப்பட்டது. பொருளாதாரக் கொள்கைகளில் பணமுறைகளின் பங்கில் சிறப்புக் குறைவைத் தோற்றுவித்ததில் இதுவும் முக்கியமான பங்கு வகித்தது. இருப்பினும், அண்மை ஆண்டுகளில் நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளை வகைப் படுத்துவதற்கு நம்பிக்கையானதொரு வழியாகப் பணவாக்க முறைகள் மீண்டும் முன்னணி நிலைக்கு வந்திருக்கின்றன. கடந்த ஆண்டுகளில் பணவாக்கக் கொள்கையை நிறுத்திவைக்கக் காரணமாக இருந்த காரணிகள் படிப்படியாக மறைந்த இத்தகைய மறுமலர்ச்சிக்கு ஓரளவு காரணமாகும். ஆனால், கொரியாப் போருக்குப் பிறகு வளர்ச்சியுடைய, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஆகிய இருவகை நாடுகள் பலவற்றிலும் தோன்றிய பணவீக்க நிலைகள்தான் பணவாக்கக் கொள்கை மீண்டும் தோன்றுவதற்குத் துணைநின்ற பெரும் காரணிகளாகும். பேரளவு முதலீட்டுச் செலவுகள் பாதுகாப்புக்காகவும் போர்ச் சாதனங்களுக்காகவும் மேற்கொள்ளப்படும் பேரளவுச் செலவுகள் ஆகியவைகளின் காரணத்தால் விலைகளில் இத்தகைய பணவீக்க உயர்வுகள் தோன்றியுள்ளன. பணவாக்கக் கொள்கைகள் ஒரு சில காலத்திற்குப் பின்னர் புறத்தில் மறைந்துவிட்டாலும் அதன்மீதான நம்பிக்கை முழுமையாக மறைந்து விடவில்லை என்பது இங்குக் கருதப்பட வேண்டும். பொருளாதார மந்த நிலைகளின்போது பொருளாதாரத்திற்குச் சிறிய அளவில் புத்துயிர் அளிப்பதில் பணவாக்கக் கொள்கை பயனுடையது. மேற்கு ஐரோப்பாவில்

[1] Smith, Warren L., 'Monetary fiscal Policy and Economic Growth *Quarterly Journal of Economics*, February, 1957, pp. 36-55.

விளைவு 10% அளவில் அதிகரித்திருக்கும்போது மொத்த நிலையான மூலதன ஆக்கமானது மேற்கு ஐரோப்பாவில் 20% அளவுக்கு அதிகரித்திருந்தது. அந்த ஆண்டுகளில் ஐக்கிய அமெரிக்க நாட்டில் மொத்த நாட்டு விளைவு 10% அளவில் அதிகரித்தது. ஆனால், வணிக நிறுவனங்களின் விளைவும், நீண்ட காலத்திற்கு உழைக்கத்தக்க உற்பத்தியாளர்களின் சாதனங்களும் 15% அளவில் அதிகரித்தன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் முன்னேற்றத் திட்டங்களின்மீதான மிகுதியான அளவிலான பொதுச்செலவுகள், பேரளவிலான பற்றுக்குறை நிதியாக்கம் ஆகியவைகள் பணவீக்க விலைப்போக்குகளுக்குச் சாதகமான சூழ்நிலைகளைத் தோற்றுவித்திருக்கின்றன.

முன்னேற்றமடைந்துள்ள இன்றைய முதலாளித்துவ நாடுகளில் பொருளாதார உறுதித்தன்மையை நிலைநிறுத்துவதே பணவாக்கக்கொள்கையின் மிக முக்கியமான நோக்கமாக இருக்கிறது. பணவாக்கக் கொள்கையின் மிக முக்கியமான நோக்கமாகப் பொருளாதார உறுதித் தன்மையை உறுதியாகக் குறிப்பிடும் அண்மைக் காலப் பொருளியல் வல்லுநர் தங்களுடைய கருத்துக்களுக்கு ஆதரவாகப் பணப்பரிமாணக் கோட்பாட்டைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். பொருளாதாரம் ஒன்று வளர்ச்சிபெறும் போது பணத்திற்கான தேவை அதிகமாகிறது. அப்போது, நாட்டு விளைவின் அதிகரிப்புக் கேற்ற விகிதத்தில் பண அளிப்புப் பெருக்கத்தைப் பண அதிகாரிகள் தராவிட்டால் பண்டங்களுக்கான தேவை குறையும்; சரக்குத் தொகுதிகள் குவியும்; விலைகள் குறையும். பணத்தின் தேவைக்கு அதிகமாகப் பணத்தின் அளிப்பு இருந்தால் இதற்கு நேர்மாறானதொன்று நிகழ்கிறது. நாட்டு விளைவிலும் உண்மை வருமானத்திலும் தோன்றும் அதிகரிப்புக்கு ஏற்பப் பணப்பரிமாணமும் அதிகரித்தால்தான் உறுதித் தன்மை அங்கு இருக்கமுடியும். இங்குத் தாள்பணம் கடன்பணம் ஆகிய வகைகளைக் கொண்டுள்ள மொத்தப்பணத்தின் அளவைக் காட்டிலும் தாள்பண அளிப்பின் மாற்றங்களின்மீது முக்கியத்துவம் சிறப்பாக வலியுறுத்தப்படுகிறது. கடன் ஒரு துணைப்பொருள் தான். அதனால் பண முறையிலிருந்து கடன் விலகிவிடுகிறது என்பதும் அதன் காரணமாக வழிப்படுத்தப்பட வேண்டியது பண இருப்புகளே தவிர கடன் அல்ல என்பதும் இந்த நோக்கத்தில் உள்ள பொருத்தமான கருத்துகளாகும். பண இருப்பில் மாற்றங்களைத்தோற்றுவித்தால் அது கடனையும் கவனித்துக் கொள்ளும் என்ற எடுகோள் இங்கு மேற்கொள்ளப்படிருக்கிறது.[1] பொருளா

[1] Shaw, E. S., Monetary Stability in a Growing Economy, '*The Allocation of Economic Resources*, Essays in honour of B. F. Haley, Stanford 1954 pp. 326-27.

தாரத்தின் வளர்ச்சி விகிதம், பணத்தின் தேவை ஆகியவைகளின் அடிப்படைகளில் பணத்தின் பரிமாத்தில் தோற்றுவிக்கப்படும் இசைவிப்பு வட்டி விகிதத்தில் மாற்றங்களைத் தோற்றுவிக்கும் இது அமிதத் தேவையை குறைக்கும்; (வட்டிவிகிதம் அதிகரித்துக் கொண்டு) அல்லது (வட்டி விகிதத்தில் குறைவின் மூலமாக) புதிய முதலீடுகளை ஊக்குவிக்கும்; அதன் வாயிலாக வணிக நடவடிக்கை களில் சரிவைத் தடுக்கும்; அல்லது அதிகரிப்பை ஊக்குவிக்கும் இத்தகைய பணத்தின் தேவைக்கேற்ப இயல்பாகவே இயங்கத்தக்க பண அளிப்பு வகையையுடையதொரு முறையைப் பேராசிரியர் ஷா (Prof. Shaw) அவர்கள் "பணவாக்கக் கட்டுப்பாட்டின் தேவைத்திட்டம்" ("Demand Standard of Monetary Control") என்று அழைக்கிறார்.

பணவாக்கக் கொள்கையின் முக்கியமான நோக்கம் பொருளாதார உறுதித் தன்மையாக இருந்தாலும், வளர்ச்சி என்பதாக இருந்தாலும் இக் கொள்கையைப்பற்றித் திறனாய்வோர் இல்லாமலில்லை. பணவாக்கக் கொள்கைக்கு எதிராகக் குறிப்பிடப் படும் முக்கியமான எதிர்ப்புகள் இருவகைப்படும். முதலாவதாக, இது செயல்திறம் அற்றது அல்லது குறைந்த அளவு அதன் நோக்கங்களை அடைவதற்குத் தகுதியற்றது என்று குறிப்பிடப் படுகிறது. இன்று கருதப்பட்டுப் பயன்படுத்தப்படும் பணவாக்கக் கொள்கை பெரும்பாலும் சமுதாய நலன்களுக்கு எதிராகச் செல்கிறது.

இக் கருத்தின்படி, பணவாக்கக் கொள்கையின் திறமையின்மை பல காரணிகளால் தோன்றுகிறது. முதலாவதாகப் பணவாக்கக் கொள்கையின் நோக்கங்கள் தெளிவற்றவைகளாகவும், உறுதியான தன்மையைப் பெறாதவைகளாகவும், தெளிவான சொற்களால் குறிப்பிட முடியாதவைகளாகவும் இருக்கின்றன. வழக்கமாகச் சொல்லப்படுவது போன்று, பொருளாதார உறுதித்தன்மை வேலை நிறைவு, பொருளாதார வளர்ச்சி ஆகியவைகள்தான் இப் பெரும் நோக்கங்களாகும். பொருளாதார உறுதித்தன்மை விலை உயர்வுத் தன்மைக்குச் சமமாகக் கருதப்படுகிறது. இந் நோக்கத்தை அடைவதற்கு ஒருவழியாகப் பணவாக்கக் கொள்கையைக் குறிப்பிடுவோர் பணத்தின் தேவைக்கேற்பப் பணப்பரிமானத்தின் மாற்றங்களின் மூலம்தான் உறுதித்தன்மையை உறுதிப்படுத்த முடியும் என்று குறிப்பிடுகிறார்கள். பணத்திற்கான தேவையானது நாட்டு விளைவின் வளர்ச்சி விகிதத்தைச் சார்ந்திருக்கிறது ஆனால், ஏற்கெனவேகுறிப்பிட்டுள்ளபடிபொருளாதாரவளர்ச்சியுடன் விலை உறுதித்தன்மையை நிலைநிறுத்துவது மோதும்போது ஓர் இடர்ப்பாடு

தோன்றுகிறது. விலைநிலையில் தோன்றும் அதிகரிப்பினால் பிரதிபலிக்கும் உறுதித் தேவையின் உயர்வானது, தகுதி விளைவின் (Capacity output) வேலை நிறைவுக்கு அவசியமானதென்று கருதப்பட்டால், பணவாக்கக் கொள்கை அல்லது விலைக் கொள்கை, நிலையான விலை நிலையை நிலைநிறுத்துவதைக் காட்டிலும் விளைவின் அதிகரிப்பு அதிகமான அளவில் வலியுறுத்தப்படவேண்டும். வேலை நிறைவு என்ற சொல்லும் தெளிவற்றதாகவே இருக்கிறது. இயங்கு நிலைப்பொருளாதாரத்தின் நோக்கில், வேலைநிறைவு என்பது ஏற்கனவே இருக்கும் மூலவளங்களை முழு அளவில் பயன்படுத்திக்கொள்ளுதல் என்பதை மட்டுமல்லாமல், அதிகரித்துவரும் மூலதனச் சாதனங்கள் மற்ற மூலவளங்கள் ஆகியவற்றின் வேலை நிறைவையும் குறிக்கும்.[1] அதாவது, பணம், கடன் ஆகியவைகளின் ஓட்டத்தை வழிப்படுத்துவதன் மூலமும், வட்டி விகிதத்தை மாற்றுவதன் மூலமும் பணவாக்கக் கொள்கையானது நாட்டு வருமானத்தில் உறுதியான அதிகரிப்பை உறுதிசெய்யும்வண்ணம் பெருகிய சக்தியை ஈர்ப்பதை நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டும். இறுதியாகக் குறிப்பிடப்பட்ட பொருளாதார வளர்ச்சி என்ற நோக்கமானது மற்ற இரண்டைக் காட்டிலும் குறைவான தெளிவு குறைவான, உறுதித்தன்மை ஆகியவைகளைப் பெற்றிருக்கின்றது.

பணவாக்கக் கொள்கை மிக மெதுவாகச் செயல்படக்கூடியது என்பது இதன் இன்னொரு குறையாகும். பணவாக்கச் செல்வாக்குகள் குறிப்பிட்ட கால இடைவெளிக்குப் பின்தான் தோன்றுகின்றன. எனவே, உடனடியான விளைவைத் தோற்றுவிக்கத் தவறிவிடுகின்றன. குறிப்பிட்ட காலத்தில் பெறப்படும் உச்சநிலை, மிகத் தாழ்ந்தநிலை ஆகியவைகள் ஒப்பிடப்படும் வணிகச் சுழல்கள் என்ற கருத்தின் அடிப்படையில் மில்டன் பிரீட்மென் (Milton Friedman) பணவாக்க மாற்றங்களுக்கும், பொருளாதார நடவடிக்கையின் மாற்றங்களுக்கும் இடையே 16 முதல் 20 மாதங்கள் அளவுக்கு இடைவெளி இருக்கும் என்ற முடிவுக்கு வருகிறார்.[2] ஆனால், செயல்திறன் உடையதாக இருப்பதற்குப் பணவாக்கக் கொள்கைக்கு எவ்வளவு காலம் ஆகின்றதோ அதற்கேற்றாற்போன்று இது, வணிக ஏற்றத்தாழ்வுகளைக் கட்டுப்படுத்துவதற்கான சக்திவாய்ந்த ஆயுதமாக இருக்கத் தவறிவிடுகிறது. வட்டி விகித

[1] Whittlesey, Charles R,, Relation of Money to Economic Growth, *The American Economic Review*; *Papers and Proceedings*, May, 1956, pp. 188-210.

[2] Culbertson, J. M., 'Friedman on the Lag in effect of Monetary Policy, *Journal of Political Economy* December, 1960, pp. 617-21.

மாற்றங்கள் அல்லது கடன் கொள்கை ஆகியவற்றின் மூலம் முதலீட்டு முடிவுகள் அல்லது தேவை நிலைகள் ஆகியவைகளைப் பொறுத்த மட்டிலும் விரைவான மாற்றங்களைக் கொண்டு வர முடியாவிட்டால், பணவாக்க முறைகளை முழுவதுமாகச் சக்தியற்றவைகளாக ஆக்கும்வண்ணம் இத்தகைய மாற்றங் களுக்குப் பின்னால் உள்ள பொருளாதாரச் சக்திகள் தேவையான அளவுக்கு அவைகளின் சொந்த சக்தியைச் சேர்த்துக்கொள்ளும் வாய்ப்பு இருக்கிறது.

பணவாட்டத்தை அல்லது பண வீக்கத்தைக் கட்டுப்படுத்து வதற்குச் சக்தியற்றதாக வழிவழியாக உள்ள பணவாக்கத் துறைகள் இருக்கின்றன என்ற கருத்தை உறுதிப்படுத்துவதற்கு எண்ணிக்கையின் அடிப்படையிலான சான்றுகள் தரப்படுகின்றன. 1930ஐச் சேர்ந்த ஆண்டுகளில் வட்டி விகிதத்தைக் குறைத்தது முதலீட்டு முடிவுகளில் எத்தகைய விளைவையும் பெற்றிருக்கவில்லை. அதைப் போன்று 1940ஐச் சேர்ந்த ஆண்டுகளில் பணவீக்கக் காலத்தில் பணவாக்க வழிகள் விலைக்கோட்டைக் கட்டுப்படுத்த முடியவில்லை. 1930ஐச் சேர்ந்த ஆண்டுகளில் இருந்த பொருளா தார மந்தம் முற்றிலும் முன்னர் நேரிடாத ஒன்று. என்ற காரணத்தாலும் பொருளாதார காரணிகளும், பொருளாதார மற்றக் காரணிகளும் பொருளாதார மந்தத்தின் கடுமையை அதிக மாக்குவதற்குச் சாதகமாகச் செயல்பட்டன என்ற காரணத்தாலும் தான் பணவாக்க வழிகளால் பொருளாதார மந்தத்தைக் கட்டுப் படுத்த முடியாமல் போய்விட்டது எனலாம். ஆனால், பணவீக்கக் காலத்திலும் பணவாக்கக் கொள்கை தவறிவிட்டது. மிகவும் முக்கியமானதாக உள்ள சிக்கலின் மற்றொரு பகுதி இதனால் தெளி வாகின்றது. நீர்மைச் சொத்துகளின் தேவையை இயக்குவதன் மூலம் பணவாக்கக் கொள்கையைச் செயல்படுத்த வேண்டும். மக்களின் முன்னெச்சரிக்கை நாட்டம் ஊக வாணிக நாட்டம் ஆகியவை களிலிருந்து நீர்மைச் சொத்துகளுக்கான தேவை தோன்றுகிறது. இத்தகைய நாட்டங்கள் எல்லாம் மன இயல்பினால் அதிகமான அளவில் பாதிக்கப்படத்தக்கவைகளாகும். இவைகள் உறுதி யற்றவைகளும்கூட. இத்தகைய காரணங்களால் இவைகள் முன்ன தாகவே இப்படித்தான் இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது இயலாததாகிவிடுகிறது. பணச்சுழற்சியின்மீது சிறிதளவே செல்வாக்குப் பெற்றிருக்கிறது என்பதால், பணத்தின் பரிமாணத் தில் மாற்றங்களின் மூலம் விலையைக் கட்டுப்படுத்தும் முயற்சியில் பணவாக்கக் கொள்கை, குறிப்பிட்ட அளவிலேயே விளைவையுடை யதாக இருக்கிறது. பெருக்கக் காலத்திலும், மந்தக் காலத்திலும் அத்தகைய பணச்சுழற்சி மிகவும் முக்கியமான பங்கு வகிக்கிறது

தொன்மையான பணவாக்கக் கொள்கை வலிமையற்றதாகக் காணப்படுகிறது என்பதோடு மட்டுமல்லாமல் இது சமுதாய நலன் களுக்கு எதிராகச் செல்கிறது என்ற அடிப்படையிலும் குறை சொல்லப்படுகிறது. கடன் வாங்குபவர்களைப் பொறுத்த மட்டிலும் பணவாக்கக் கொள்கைகளின் விளைவுகள் சம பாக களைப் பெற்றனவாக இல்லாமலிருக்கின்றன என்று குறிப்பிடப்படு கிறது. வணிக நிறுவனங்களுக்கிடையே நிதிக்கான தேவை நெகிழ்ச்சி மாறுபடுகிறது என்ற உண்மையிலிருந்து இது தோன்று கிறது. மிக இறுக்கமான பணக் கொள்கையுடைய காலத்தில் தங்களின் நிதிக்காக வங்கிகளையே பெரும்பாலும் சார்ந்திருக்கின்ற வணிக நிறுவனங்கள் அதிகமான வட்டியைச் செலுத்தும்படி கட்டாயப்படுத்தப்படுகின்றன. ஆனால், தங்களிடமே பேரளவு மூலவளங்களை வைத்திருப்பவைகளும், வங்கி முறையைத் தவிர பிறவற்றையும் நடத்தத் தக்கவைகளும் குறைந்த அளவிலேயே பாதிக்கப்படுகின்றன. சில வீடுகட்டும் சங்கங்கள், உள்ளூர் அரசுகள், மற்றும் சில சிறிய வணிக நிறுவனங்கள் ஆகியவைகள் முதலில் குறிப்பிட்ட வகையைச் சார்ந்தவைகளாக இருக்கின்றன இவை தவிர, நீண்ட காலப் பொதுநலக் கருத்துகளைப் பாதிக் கிறது் என்றும், உள்நாட்டு முதலீட்டு நடவடிக்கைகளில் குறைவைத் தோற்றுவிப்பதன் மூலம் பொருளாதார வளர்ச்சியில் தடை செய்கிறது என்பதாலும் விலைகள் அதிகரித்துவரும் காலத்தில் மேற்கொள்ளப்படும் கண்டிப்பான பணவாக்கக் கொள்கை சமுதாய நலன்களுக்கு எதிராகச் செல்கிறது என்ப தாலும் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதவை களாக இருக்கும் சமுதாய இயல்புடைய முதலீடுகளில்தான் கடன் கட்டுப்பாடுகள் அதிகமான அளவில் தோற்றுவிக்கப்படுகின்றன எனவே குறைவான அளவில் உள்ள மூலவளங்கள் மிகவும் பயனுள்ள நோக்கங்களுக்காக முதலீடுகளிலிருந்து விலக்கப்படு வதற்கும், நுகர்வுப் பண்டங்களின் உற்பத்தியில் விணக்கப்படு வதற்கும் வாய்ப்பு தோன்றுகிறது.[1]

பணவாக்கக் கொள்கையின் ஒரு சில குறைகள் மிகைப் படுத்தப்பட்டிருப்பவைகளாகத் தென்படுகின்றன. இருப்பினும்' தற்கால முன்னேற்றமடைந்துள்ள நாடுகளின் நிதி அமைப்பு களில் இப்போது தோன்றியுள்ள முன்னேற்றங்கள், பொருளாதார முன்னேற்றத்தைத் தோற்றுவிக்கும் சக்திகளையும் சமுதாய நலன்களைத் தோற்றுவிக்கும் சக்திகளையும் தோற்றுவிக்க வேண்டிய அவசியம் ஆகியவற்றின் அடிப்படையில் பார்க்கப்படும்

[1] Schlesinger, James R., Monetary Policy and its Crties, '*Journal of P olitical Economy*, December, 1960, pp. 601-16.

போது, மரபு வழியாகக் காணப்படும் பணவாக்கக் கொள்கைக்குப் பேரளவில் மாற்றங்களும் புதுமைகளும் தேவைப்படுகின்றன. பணவாக்கக் கட்டுப்பாட்டின் கருவிகள் மிக வேகமாகப் பழமை யானவைகளாகப் போய்விடுகின்றன என்பதாலும், அவ்வாறிருப் பதால் தற்காலப் பொருளாதாரத்தில் தோன்றும் புதிய சிக்கல் களையும் சேர்த்துக்கொள்ளத் தவறிவிடுகின்றன என்பதாலும் முக்கியமாகப் பணவாக்கக் கொள்கையின் இடர்கள் தோன்று கின்றன.

## குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உறுதியற்ற தன்மையின் அறிகுறியாகப் பணவீக்கம்

(Inflation as a Symptom of Instability in Underdeveloped Countries)

பொருளாதார முன்னேற்றமடைந்த முதலாளித்துவ நாடு களில் உறுதியற்ற தன்மையானது பணவாட்டம், பணவீக்கம் ஆகியவைகளை உள்ளார்ந்திருக்கும்போது இப்போதுள்ள குறைந்த வளர்ச்சியடைந்த நாடுகளில் இது மாற்ற இயலாத நிலையிலுள்ளது. கிடைக்கத்தக்க மூலவளங்களைக் காட்டிலும் அதிகமானதாக உள்ள பேரளவு முதலீட்டுத் தேவைகளின் நோக்கில் பார்க்கும் போது, விலை நிலைகளில் நிலையான அதிகரிப்பின் போக்கையுடைய தாகவே காணப்படுகிறது. எனவே, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உறுதியற்ற தன்மையைக் கட்டுப்படுத்துவதற்கான பணவாக்கக் கொள்கையானது பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தும் கொள்கை என்றே பொருள்படுகிறது. தன்னைத்தானே அதிகரித்துக்கொள்ளும் இயல்புடன் உறுதியாகவும் தொடர்ச்சி யாகவும் விலைகள் அதிகரித்துவரும் இயல்புடையதாக இந் நாடு களின் பணவீக்கம் இருக்கிறது. கிடைக்கத்தக்க உண்மை உற்பத் தியின் அளவிற்கும் அதிகமானதாக அதன் தேவை இருப்பதே அத்தகைய உயர்வுக்கான அடிப்படைக் காரணமாகும். பரிமாற்றப் பொருளாதாரம் ஒன்றில் உற்பத்தியின் தேவையானது உண்மை யான பண்டங்களைப் பெறுவதற்கான பணத்தருதலினால் காட்டப் படுகிறது. செலவழிக்கத்தக்க தனிநபர் வருமானம், பகிர்ந் தளிக்கப்படாத வணிக இலாபங்கள் ஆகியவைகளின் மொத்தம் தான் சமுதாயம் ஒன்றின் மொத்தப் பணம் அல்லது பண வருமானம் என்று குறிப்பிடப்படுகிறது. இத்தகைய பணவருமான மானது உண்மை வருமானத்தைக் காட்டிலும் வேகமாக அதிகரிக்குமானால் அங்குப் பணவீக்கம் இருக்கிறது.

ஏதாவது ஒருகாலத்தில் உள்ள பண்டங்களுக்கான மொத்தத் தேவை கீழ்க்கண்டவாறு பிரிக்கப்படலாம்.

(அ) தனியார் துறையிடமிருந்து வரும் முதலீடு, நுகர்வு ஆகியவைகளுக்கான தேவை.

(ஆ) அரசாங்கச் செலவு.

(இ) ஏற்றுமதிகள்.

இத்தேவையை ஈடுகட்டுவதற்காகக் கிடைக்கும் அளிப்பும் கீழ்க்கண்டவாறு பகுக்கப்படலாம்.

(அ) தனியார் வருமானமும் சேமிப்பும்.

(ஆ) பொது வருமானங்கள் : அதாவது வரிவிதித்தல் மூலமாகவும், பொது நிறுவனங்கள் மூலமாகவும் அரசாங்கம் பெறும் வருமானங்கள்

(இ) இறக்குமதிகள்.

அமிதத் தேவையை மதிப்பிடும்போதும் இந்த மூன்று விதமான தேவைகளும் அளிப்புகளும் கருத்தில் கொள்ளப் படவேண்டும். அளிப்புக் காரணிகளின் மொத்தத்திற்கு எதிராகத் தேவைக்காரணிகளின் மொத்தம் இருந்தால் பொருளாதாரத்தில் சமநிலை இருக்கிறது என்பது பொருள். அதற்கு மாறாக அளிப்புக் காரணிகளின் மொத்தம் அதிகமாக இருந்தாலும் குறைவாக இருந்தாலும் பொருளாதாரத்தில் சமநிலையற்ற தன்மை தோன்றுகிறது. இச் சமநிலைமையின்மை பணவாக்கம் அல்லது பணவாட்டம் என்ற வடிவத்தில் காட்டப்படுகிறது. பொதுத்துறையில் தோன்றும் அமிதத் தேவையானது தனியார் துறையில் தோன்றும் முதலீட்டிற்கும் அதிகமான அமிதச் சேமிப்பினுல் ஈடுகட்டப்படுமானுலும், அல்லது ஏற்றுமதிகளைக் காட்டிலும் அதிகமான இறக்குமதிகள் இருந்தாலும், அரசாங்கத்தின் வரவைக் காட்டிலும் அதன் செலவுகள் அதிகமாக இருந்தாலும் கூட, அதாவது, பற்றுக்குறை வரவுசெலவுத் திட்டம் இருந்தாலும்கூட அது பணவீக்க நிலையைத் தோற்றுவிக்க வேண்டிய அவசியம் எதுவுமில்லை என்பது தெளிவாகும்.

அரசாங்கத்தின் வரிவருமானம், அரசாங்க நிறுவனங்களின் வருமானம் ஆகியவைகளிலிருந்துதான் மொத்த அரசாங்கச் செலவுகள் பொதுவாக ஈடுகட்டப்படுகின்றன. இயல்பான வருமானத்தைக் காட்டிலும் செலவு அதிகமானுல் அரசாங்கமானது பற்றுக்குறை நிதியாக்கம் என்ற முறையை நாடுகிறது. அதாவது மைய வங்கியிடமிருந்து கடன் வாங்கும் முறையை நாடுகிறது. மேற்குறிப்பிட்ட இரண்டு வழிகளிலிருந்தும் பெறத்தக்க அரசின் நடப்பு வருமானமும் சமுதாயத்தின் நுகர்வுச் செலவும் பொதுவாக

நாட்டு வருமானத்தோடு விகிதாச்சார அளவிலிருப்பவைகளாகும். எனவே, அரசாங்கப் பற்ருக்குறை, தனியார் முதலீடு, நடப்புக் கணக்கில் உபரி அல்லது இறக்குமதியைக் காட்டிலும் ஏற்றுமதி அதிகப்படுத்தல் ஆகியவைகள்தான் அமிதத்தேவையைத் தோற்று விக்கும் மிக இன்றியமையாத காரணிகளாகும். அரசாங்கத்தின் பற்ருக்குறை நிதியாக்கத்தின் அளவானது, அரசாங்கத்தின் கடனின் அளவினுல் காட்டப்படுகிறது. வங்கிக் கடனில் அதிகரிப் பினுல் தனியார் முதலீட்டுச் செலவின் அதிகம் ஓரளவிற்கு அளவிடப்படலாம். அயல்நாட்டுச் செலாவணி இருப்பினுல் இறக்குமதியைக் காட்டிலும் அதிகமானதாக உள்ள ஏற்றுமதி காட்டப்படுகிறது. அரசாங்கக் கடனிலும், வங்கி வரவிலும் அல்லது கடன்களிலும் ஒரு நாட்டின் அந்நியச் செலாவணி இருப்பு களிலும் தோன்றும் மாற்றங்கள் பரவலாகப் பொருளா தாரத்தில் உள்ள அமிதத் தேவையின் அளவையும் போக்கையும் பிரதிபலிக்கின்றன என்பது பொருளாகிறது.

தனியார் துறை, பொதுத்துறை ஆகிய இருதுறைகளிலும் முதலீட்டு விகிதத்தை அதிகப்படுத்துவதைப் பொருளாதார முன்னேற்றம் குறிப்பிடுகிறது. தற்காலத்தில் குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளில் பொதுத்துறையின் முதலீட்டு நடவடிக்கை மிகவும் தீவிரமாகிக்கொண்டிருக்கிறது. இந் நாடுகளில் வளர்ச்சிப் போக்கைத் தொடங்கிவைக்கும் பொறுப்பை அரசுகள் மேற் கொண்டுள்ளன. அரசாங்க முதலீடுகள் அதிகரிக்க வேண்டு மென்ருல் தனியார் துறையில் நுகர்வுக்காகப் பயன்படுத்தப்பட்டு வந்த மூலவளங்கள் பொதுத்துறைக்கு மாற்றப்பட வேண்டும். தனியார் துறையில் இம் மூலவளங்களுக்கான தேவை மாரு திருந்தால், அரசாங்கத்தின் அதிகரித்த முதலீடு மொத்தத் தேவையில் அதிகரிப்பையே காட்டுகிறது. இதை வேருரு விதமாகச் சொன்னுல், அரசாங்கத்தினுல் மேற்கொள்ளப்படும் அதிகப்படியான செலவு மூலவளங்களின் இயல்பான அளிப்புக்கும் அதிகமாக மொத்தத் தேவையின் அதிகரிப்புக்குக் காரணமாகிறது. இத்தகைய நிலேயில் பருப்பொருள் சார்ந்த கட்டுப்பாடுகள் மூலமாகவும், மற்றப் பல நேரடியான வழிகளின் மூலமாகவும், தனியார் துறையின் நுகர்வுத் தேவையையும் முதலீட்டுத் தேவையையும் அரசாங்கம் கட்டுப்படுத்துமானுல், விலேயில் எந்த விதமான அதிகரிப்பும் இல்லாமல் பொதுத் துறைக்கு உண்மை மூலவளங்கள் மாற்றப்படலாம். இதற்கு மாருக, இயல்பான சந்தை இயந்திர அமைப்பின் மூலம் இத்தகைய மாற்றம் தோற்று விக்கப்படுமானுல் இம் மூலவளங்களே வாங்குவதற்குத் தேவையான வழிகளே அரசு காணவேண்டும். அதாவது, இம் மூலவளங்களே

வாங்குவதற்கு அரசு, அதன் கடந்தகாலச் சேமிப்புகளைப் பயன்படுத்த வேண்டும் அல்லது தாள்பணத்தை வெளியிட வேண்டும் அல்லது மைய வங்கியிடமிருந்தும் வணிக வங்கிகளிடமிருந்தும் கடன் வாங்கவேண்டும். உண்மையில், அதிகரித்த முதலீட்டு விகிதத்திற்குச் சமமான அளவுக்கு உண்மையான சேமிப்பை அதிகரிப்பதில் உதவுக்கூடியது விலைகளில் தோன்றும் இந்த உயர்வுதான். கூலி வருமானம் பெறுபவர்கள், குறிப்பிட்ட அளவு வருமானம் பெறுபவர்கள், ஆகியவர்களின் நுகர்வு நாட்டம் அதிகமாக இருக்கிறது. சிறிய அளவிலான பணவீக்கத்தால் இவர்களின் பண வருமானத்தைக் காட்டிலும் ஆதாய வருமானம் பெறுபவர்களின் பணவருமானம் அதிகரிக்கப்படுகிறது. ஆதாய வருமானம் பெறுபவர்களின் சேமிப்பு நாட்டம் அதிகமாக இருக்கிறது. எனவே, இத்தகைய சிறிய அளவிலான பணவீக்கமானது ஆதாய வருமானம் பெறுபவர்களின் பணவருமானத்தை அதிகரித்து அதன் வழியாகப் பேரளவு முதலீட்டிற்கு வகை செய்கிறது. இவ்வாறாக ஏற்கெனவேயுள்ள சேமிப்புக்குச் சமமான முதலீடு ஆக்கப்படாமல் எதிர்காலத்தில் சேமிப்பு அதிகமாக இருக்குமென்று எதிர்பார்த்துப் பொருளாதார வளர்ச்சியைப் பெறுவதற்காக முதலீடு முதலிலேயே அதிகப்படுத்தப்படுகிறது. எதிர்பார்க்கப்படும் இத்தகைய சேமிப்புகள் இப்போதுள்ள முறைகளின்படி கட்டாயச் சேமிப்புகள் என்று மறைமுகமாகக் கொண்டுவரப்படுகின்றன.

## பணவீக்கத்தில் பணம், வங்கி நிலையங்கள் ஆகியவைகளின் பங்கு

(The Role of Money and Banking Institutions in Inflation)

பணவீக்கத்திற்கான அடிப்படைக் காரணம் அமிதத் தேவை என்றிருந்தாலும் இது பெரும்பாலும் ஒரு பணவாக்க நிகழ்ச்சியே. விலைகளின் பொதுவான உயர்வு தொடர்ச்சியானதாகவும், அதனை அதுவே வளர்த்துக் கொள்ளக்கூடியதாகவும் மாறும்போதுதான் அத்தகைய உயர்வு பணவீக்க நிலையைப் பெறுகிறது என்று சொல்லப்படலாம். அதிகரித்த விலை நிலைகளில் நடப்பிலிருக்கும் உற்பத்தி அளவுகளை நிதியாக்கம் செய்வதற்கு முடியாவிட்டால் தொடர்ச்சியான விலை உயர்வை நிலைபேறுடையதாகச் செய்ய முடியாது என்பது தெளிவு. உற்பத்தி, நுகர்வு, முதலீடு ஆகியவைகளின் நிதியாக்கத்திற்குத் தாள்பணம், வைப்புகள் ஆகியவைகளின் வடிவத்தில் குறிப்பிட்டதொரு காலத்தில் பொதுமக்களிடம் கிடைக்கத்தக்க பணஇருப்பு பயன்படுத்தப்படுகிறது. முதலீட்டிற்காக மூலவளங்களுக்கான தேவையின் அதிகரிப்பினால் தோற்று

விக்கப்படும் விலைகளின் உயர்வு, மக்களிடையே நீர்மையைக் குறைக்கிறது. இவ்வாறாக, அது பணவீக்கப் போக்கை நின்று விடும் நிலைக்குக் கொண்டுவருவதில் பொதுவாக உதவுகிறது.

தற்காலப் பொருளாதாரத்தில் பண அளிப்புக்கான முக்கிய மான மூலங்கள் மைய வங்கியும் வணிக வங்கிகளும் ஆகும். மைய வங்கி அரசுக்குக் கடன் தருவதன் மூலமும் வணிக வங்கிகள் கடன்களை விரிவுபடுத்தும்போது அவைகளுக்கு உதவ முன் வருவதன் மூலமும் பண அளிப்பின் பெருக்கத்திற்கு வகை செய்ய முடியும். இவ்வாறு மைய வங்கி அரசாங்கத்திற்குக் கடன் கொடுக்கும்போதும், புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட கடன் களுக்கு எதிராக அலுவலர்களுக்கும், கடன் கொடுத்தவர் களுக்கும், ஒப்பந்தக்காரர்களுக்கும் மற்றும் பிறருக்கும் செக்கு களைத் தருவதன் மூலம் மைய வங்கியிடமிருந்து பெறப்பட்ட கடனை அரசாங்கம் பயன்படுத்தும்போதும், செக்குகளைப் பெறுவோர் வணிக வங்கிகளிடம் இப் பணத்தை வைப்பாக வைக்கும்போதும், வணிக வங்கிகளின் இருப்பு நிதிகள் அதிக மாக்கப்படுகின்றன. தவிர, வணிகத் துறையின் அதிகரித்த தேவை களின் காரணமாக நிதிகளுக்கான வணிக வங்கிகளின்மீதான அழுத்தம் இருக்குமானால், கடன் கழிவு செய்து தருதல் அல்லது கடன் பத்திரங்களை வாங்குதல் அல்லது கடன்களைத் தருதல் என்பதன் மூலமாக வணிக வங்கிகளுக்குக் கடன் தருவதன் மூலம் வங்கிகளின் இத்தகைய அழுத்தத்தைக் குறைப்பதற்கு மைய வங்கி மேற்கொள்ளும் முயற்சி, வணிக வங்கிகளின் தடையில்லாத இருப்புகளை வலிமைப்படுத்தும். பணவீக்கப் போக்கில் அதற்கான பொறுப்பின் ஒரு பகுதியை மைய வங்கியும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது இதன் வாயிலாகத் தெளிவாகத் தென்படுகிறது. இப் போக்கில் வணிக வங்கிகளின் பங்கு. மைய வங்கியின் பங்குக்குச் சமமான அளவில் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். வங்கிகளை நாடுவதற்கான தேவை அதிகமாக இருக்கும் பொருளா தாரப் பெருக்கக் காலத்தில் தங்களுக்கென்று ஆதாயத்தைப் பெறும் நோக்குடன் கடன் பெருக்கத்திற்குத் தூண்டப்படுவதைத் தடை செய்வது வங்கி முறைக்கு மிகவும் சிரமமாகும். மைய வங்கி யிடமிருந்து நேரடியாகக் கடன் வாங்குவதன் மூலமாக அல்லது மைய வங்கியிடம் வணிகத் தாள்களை, தொழில் தாள்களை அல்லது வேளாண்மைத் தாள்களைக் கடன் கழிவு செய்வதன் மூலமாக, அதிகரித்துவரும் தேவைகளை ஈடுகட்டுவதற்குத் தேவையான நிதி மூலவளங்களை வணிக வங்கிகள் பெறுகின்றன. வணிக வங்கிகளின் கடன் கொடுக்கும் நடவடிக்கை பண அளிப்பின் அதிகரிப்பிற்கு நேரடியாகவே வழி வகுத்து, அதன் வழியாக, உறுதித் தேவை

நிலையை உயர்த்துவதற்கு உதவி செய்வதனுல் வணிக வங்கிகளின் பங்கு இதில் மிகவும் தீவிரமாக இருக்கிறது என்று குறிப்பிடலாம். வணிகத் துறையிலிருந்து தோன்றும் அழுத்தம் இருந்தாலும்கூட வணிக வங்கிகள் கடனைப் பெருக்காமலிருந்து, அரசுக்கு உதவி செய்வதற்காக அல்லது வேலை நிறுத்தம், அல்லது வேலையின்மை போன்ற சமுதாய விளைவுகளைத் தவிர்ப்பதற்காக வணிக வங்கிகள் கடன்களைப் பெருக்குவதற்குக் கட்டாயப் படுத்தப்படுமானுல், பணவீக்கப் போக்கில் வணிக வங்கிகளின் பங்கு செயலற்றதாக இருக்கலாம். இறுதியான பகுத்தாய்வில் தொடர்ச்சியான பணவீக்கத்திற்கான பொறுப்புகளை பணவாக்க அதிகாரிகள்தான் ஏற்றுக்கொள்கிருர்கள் என்பதைத்தான் இவைகள் யாவும் காட்டுகின்றன.[1]

## பணவீக்கமும் பொருளாதார முன்னேற்றமும்
(Inflation and Economic Development)

அரசாங்கம் அல்லது தனி வணிகர்கள் ஆகிய முதலீடு செய்பவர்களிடம் பணத்தின் பெரும்பகுதி செல்லும்வண்ணமும் நுகர்வைக் குறைக்கும்வண்ணமும் விலைகளின் உயர்வு எந்த அளவுக்குப் பணத்தின் மறுபகிர்வைத் தோற்றுவிக்கிறதோ அந்த அளவுக்கு விலைகளின் உயர்வானது பேரளவு முதலீடுகளுக்கு வகை செய்து அதிகமான வளர்ச்சி விகிதத்தைப் பெறு வகை செய்கிறது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் நடப்பிலிருக்கும் தன்னிச்சைச் சேமிப்பின் அளவு உண்மை விளைவின் தொடர்ச்சியான அதிகமான விகிதத்தைக் கொண்டுவருவதற்குப்போதுமானதாக இல்லாமலிருக்கிறது. குறைந்த வருமான நாடுகளிலிருப்பதைக் காட்டிலும் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில் உற்பத்தி அதிகரிப்பு விகிதம் மிகவும் அதிகமான அளவில் இருக்கிறது. குறைந்த வளர்ச்சியடைய நாடுகளில்அடிக்கடி தோன்றும் சூழ்நிலைகளில் மட்டுமல்லாமல், வளர்ச்சி பெற்ற நாடுகளிலும்கூட சிறிய அளவிலான பணவீக்கம் பரிந்துரைக்கப்படுகிறது உற்பத்தித் தேவை நிலையை நிலைநிறுத்துவதன் மூலமாகவும் வருமானப் பகிர்வில் மாற்றங்களைத் தோற்றுவிப்பதன் மூலமாகவும் நாட்டு வருமான வளர்ச்சி அதிகரிப்புக்கு ஊர்ந்து செல்லும் பணவீக்கம் உதவி செய்கிறது என்ற அடிப்படையில் பேராசிரியர் ஹான்சன் (Prof. Hansen) இவ்வகைப் பணவீக்கத்தை உறுதியுடன் ஆதரிக்கிருர். 1959-ல் ஐக்கிய அமெரிக்க நாட்டின் கூட்டுப் பொருளா

1 Bernstein, E. M. and I. G. Patel, 'Inflation in Relation to Economic Development,' *I.M.F. Staff Papers*, Vol. II, No. 3. November, 1952, pp. 363-98.

தாரக் குழுவினுல் (Joint Economic committee of the U.S.A.) கவனிக்கப்படுவதற்காகத் தயாரிக்கப்பட்ட வேலை, வளர்ச்சி விலை நிலைகள் ஆகியவைகளைப் பற்றிய அலுவலர்கள் அறிக்கை (Staff Report on Employment, Growth and price levels) 1953-க்குப் பிறகு மொத்த நாட்டு விளைவு வளர்ச்சி விகிதம், கூறுக்கப்படுவதிலிருந்து விலக்கப்பட்டது என்றும், போர்க் காலத்திற்கு முந்திய காலத்தின் தொடக்க நிலைகளின்போது பெறப்பட்ட 4·6% அளவிற்கு மிகவும் குறைவான அளவிலிருந்தது என்றும் குறிப்பிடுகிறது.

வட்டியின் உண்மை விகிதம் கீழ்க்கண்ட வாய்பாட்டினுல் அளவிடப்படுகிறது.

$$r = \left( \frac{100 + i}{100 + \Delta p} \right) 100$$

r என்பது வட்டியின் உண்மை விகிதம். i என்பது வங்கிக் கடன்களின்மீது விதிக்கப்படும் உண்மையான சராசரி வட்டி விகிதம். $\Delta$ p என்பது % அடிப்படையில் வாழ்க்கைச் செலவில் ஆண்டு தோறுமான அதிகரிப்பு (உண்மையான வட்டி விகிதம் 6% என்றும், வாழ்க்கைச் செலவில் ஆண்டுதோறும் 10% என்றும் இருந்தால் உண்மை வட்டி 3.?% ஆக இருக்கிறது. எனவே, விலைகள் அதிகரித்துக்கொண்டிருக்கும்போது, வட்டியின் உண்மை விகிதம் குறைந்து செல்லும் போக்கைப் பெறுகிறது. அப்போது முதலீட்டிற்கான அதிகமான தூண்டு விசைகள் இருக்கும். எனவே, நிலையான வருமானங்கள், குறைந்து வரும் விலைகள் ஆகியவைகளைக் கொண்டுள்ளதொரு கொள்கை பொருளாதார வளர்ச்சிக்கு எப்போதுமே பொருத்தமானது அன்று. தேவையான அளவுக்கு உயர்ந்த நிலையில் விலைகளை நிலைநிறுத்துவதன் மூலம் செழிப்பு நிலைகளை நிலைநிறுத்தலாம் என்று கால்டார் (Kaldor) மேலும் தொடர்ந்து வாதிடுகிறுர். மிக மெதுவானதும் உறுதியானதுமான பணவீக்க விகிதமானது, உறுதியான பொருளாதார வளர்ச்சி விகிதத்தை பெறுவதில் மிகவும் வலிமை மிக்க உதவியாக இருக்கிறது.[1]

இதில் தீவிரமான கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. பொருளாதார வளர்ச்சி நோக்கிலிருந்து பெறப்படும் பணவீக்கத்தின் நன்மைகள் மிகுதியான அளவுக்கு மிகைப்படுத்தப் பட்டிருக்கின்றன என்று காட்டும் பயங்கரமான எண்ணிக்கையின்

[1] Kaldor, Nicholas. 'Economic Growth and the Problem of Inflation' Part II *Economica*, November, 1959, pp. 287-98.

அடிப்படையிலான புள்ளி விவரங்கள் அண்மையில் தரப்பட்டிருக்கின்றன. அதற்கு மாறாக விளைவிற்குரியதாக இருக்கும் சில நன்மைகளையும் மிஞ்சியதாகப் பணவீக்கத்தின் தீமைகள் இருக்கின்றன என்பதில் நமது கவனத்தை புகழ்மிக்க பொருளாதாரப் புலவர்கள் பலர் கவருகின்றனர்.

கோட்பாட்டின் நோக்கிலிருந்து பார்க்கும்போது, முதலீடு செய்யும் பிரிவினர்களுக்குச் சாதகமாக வருமானப் பகிர்வைக் கொண்டுவருகிறது என்பதால் பணவீக்கம் பொருளாதார வளர்ச்சிக்கு உதவலாம். சேமிப்பு பேரளவில் தோற்றுவிக்கப் படலாம். மூலவளங்கள் கிடைத்தால் அதன் விளைவாக முதலீட்டு அளவு அதிகமாகும் என்ற எடுகோள் அமைக்கப்படுவதால், அதிகரித்த முதலீடு நாட்டு உற்பத்தியின் அதிகரிப்பை உறுதி செய்கிறது. பொருளாதார வளர்ச்சி விகிதத்தை அதிகரிப்பதில் பணவீக்கத்தின் சக்தியானது இரண்டு அடிப்படை நிலைகளை சார்ந்திருக்கிறது.

(1) மொத்தத்தில் நுகர்வின் அளவுகள் குறைக்கப்பட்டிருக்கின்றன. சேமிப்புகள் அதிகரிக்கப்படுகின்றன. இதன் வழியாகத் தோன்றும் மூலவளங்கள் தனியார்துறை, பொதுத்துறை ஆகிய இரண்டு துறைகளையும் உள்ளடக்கிய முதலீடு செய்யும் பிரிவினருக்கு மாற்றப்படுகின்றன.

(2) இந்த மூலவளங்கள் யாவும் வீணாக்கப்படுவதில்லை. மாறாக, பொருளாதார வளர்ச்சிக்கு உதவக்கூடிய வகையில் தொழில் முயற்சிகளில் ஆதாயம் தரத்தக்க வகையில் முதலீடு செய்யப் படுகின்றன.

கூலி வருமானம் பெறும் பிரிவினரிடமிருந்து ஆதாயம் பெறும் பிரிவினருக்கு உண்மை வருமானத்தைப் பேரளவில் மாற்றுவது என்பதைப் பணவீக்கம் தோற்றுவிக்கிறது என்று கருதிக் கொண்டாலும்கூட, இம் மூலவளங்கள் யாவும் ஆதாயம் தரத்தக்க வழியில் முதலீடு செய்யப்படும் என்பதற்கான உறுதிமொழி எதுவும் கிடையாது. அதிகமான வருமானமுடைய நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் ஆதாயத்தின்மீதான வரிகள் குறைவாகவே இருக்கின்றன. எனவே, பணவீக்கத்தின் மூலம் மாற்றப்பட்ட வருமானத்திலிருந்து வணிகப் பிரிவினருக்குக் கிடைக்கும் செலவழிக்கத்தக்க வருமானம் விகிதாச்சார அளவில் அதிகமாக இருக்கும். அதனால், அவர்கள் விரும்பும் முறையில் அவ் வருமானத்தின் பெரும் பகுதியைச் செலவழிப்பதற்கு அவர்களால் முடியும். அவர்களின்

மொத்தச் செலவில் ஒரு பகுதி அவர்களுக்கு அதிகமான உரிமையை அல்லது தனிப்பட்ட நன்மைகளைத் தரலாம்; பேரளவு ஆதாயத்தை அல்லது மூலதன ஆதாயத்தைத் தரத்தக்க வகையில் வெளி நாட்டுச் சொத்துகளிலும் மற்ற ஊக வாணிக வழிகளிலும் மேற் கொள்ளப்படும் முதலீடுகளையும் அத்தகைய செலவுகளில் குறிப்பிடலாம். நாட்டு உற்பத்தியை அதிகரித்து அதன் வழியாகப் பேரளவில் பயன்களைத் தரும் அல்லது சமுதாய நன்மைகளைத் தரும் தொழில்துறை முன்னேற்றம், வேளாண்மைத்துறை முன்னேற்றம் ஆகியவற்றில் அதிகரித்த வருமானத்தின் ஒரு பகுதி முதலீடு செய்யப்படலாம்.[1] ஆனால், குறைந்த வருமான நாடுகளில் வணிகர்களை அவர்களாகவே முடிவு எடுக்காவிட்டால் அவர்கள் சமுதாய நன்மைகளை அதிகமான அளவில் தரத்தக்க வற்றில் முதலீடு செய்வதைக் காட்டிலும் சொந்த உரிமை நன்மைகள் அதிகமாக உள்ள வெளிநாட்டுச் சொத்துகள், தங்கத்தின் இருப்பு, சரக்குத் தொகுதிகளின் திரட்சி, உண்மை நிலச் சொத்தில் முதலீடு, ஆடம்பரமான கட்டடங்களின்மீதான முதலீடு, பகட்டான பண்டங்களைப் பெறுதல் ஆகியவற்றின்மீது முதலீடு செய்வதைத்தான் விரும்புவார்கள். இவ்வாறாக, தனியார் முதலீடுகளை மிகவும் கடுமையான முறையில் வழிப்படுத்தாம லிருந்தாலும், கட்டுப்படுத்தாமலிருந்தாலும் பணவீக்கத்தினால் தோன்றிய கட்டாயச் சேமிப்பின் பெரும்பகுதி வீணாக்கப்படுவ தற்கும் நாட்டின் மூலதன ஆக்கத்திற்கு உதவி செய்யாமல் போவதற்குமான வாய்ப்புகள் அதிகம் உண்டு.

இவ்வாறாக. பொருளாதார முன்னேற்றத்தை அதிகரிப்பதற் கானதொரு வழியாகப் பணவீக்கத்தைப் பயன்படுத்துவதில் ஒரு சில இடர்ப்பாடுகள் இருக்கின்றன. விலைகளில் தோன்றும் நிதான மான உயர்வு பொருளாதார வளர்ச்சிக்குத் தீமை விளைவிக்கக் கூடியது என்பதோடு மட்டுமல்லாமல் பொருளாதார வளர்ச்சிக்கு உண்மையிலேயே உதவுவதாகவும் பொருளாதார வளர்ச்சியைச் சுட்டிக் காட்டுவதாகவும் இருக்கிறது என்ற கருத்தில் மிகவும் முனைப்பான ஐயங்களை இக் குறைகள் தோற்றுவிக்கின்றன இது வரையில் பொதுவாக ஒத்துக்கொள்ளப்பட்ட கருத்திற்கு அண்மையில் இதைப்பற்றிப் பெறப்பட்ட புள்ளிவிவரக் கண்டு பிடிப்புகள் பெரிய சவாலாக அமைந்திருக்கின்றன. பணவீக்கத் திற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் எத்தகைய தொடர்பும் இல்லை என்று இப் புள்ளி விவரங்கள் காட்டுகின்றன.

[1] Brenstein, E N. and I. G. Patel, 'Inflation in Relation to Economic Development. '*International Monetary Fund Staff Papers*, Vol. II, No. 3, November, 1952, pp. 363-98.

வளர்ச்சியடைந்த நாடுகள் பலவற்றிலும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிலும் இரண்டாவது உலகப் பெரும் போருக்குப் பின் வந்த ஆண்டுகளில் மிகவும் முனைப்பான பண வீக்கப் போக்குகள் தோன்றியிருக்கின்றன. ஆனால், எந்தெந்த நாடுகளில் விலை உயர்வு அதிகமான அளவில் இருந்ததோ அந்தந்த நாடுகளில் எல்லாம் உடனிகழ்வாக உண்மை உற்பத்தியில் அதற்கேற்றவாறு அதிகமான அளவிலான அதிகரிப்பு தோன்ற வில்லை. அதைப் போன்று எந்தெந்த நாடுகளில் விலைகளின் உயர்வு மிகவும் மெதுவான அளவில் அல்லது குறைவான அளவில் இருந்ததோ அவற்றின் வருமானப் பெருக்கம் குறைவானதாகவும் இல்லை. 1947–48, 1956–57 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் ஆண்டுதோறுமான சராசரி விலைஉயர்வு விகிதம் ஆஸ்திரேலியாவில் 8·5%, நியூசிலாந்தில் 5·2%, இங்கிலாந்தில் 5% ஆக இருந்தது. ஆனால், நாட்டிலிருக்கும் மக்களின் தனிநபர் உண்மை வருமானம் முறையே 1·1%, 1·8%. 1·5% என்ற அளவில் தான் அதிகரித்தது. ஐக்கிய அமெரிக்க நாட்டில் விலை உயர்வு 2·3% ஆகவும், உற்பத்தியில் ஆண்டுதோறுமான அதிகரிப்பு 2.2% ஆகவும் இருந்தன. ஜெர்மெனியில் விலையின் உயர்வு மிகவும் மென்மையானதாக, 2·1% அளவு இருந்தது. ஆனால், உண்மை உற்பத்தி தலா ஆண்டுக்கு 4·6% அளவுக்கு அதிகரித்தது. பிரான்சில் விலை உயர்வும், உண்மை உற்பத்தியின் அதிகரிப்பும் முறையே 5·6%, 5·5% என்று ஏறத்தாழ ஒரே மாதிரியாக இருந்தன. பொருளாதார வளர்ச்சியும் பணவீக்கமும் குறுகிய காலத்தில் ஒன்றோடொன்று மிகவும் தவிர்க்க இயலாதபடி தொடர்புடையவைகளாக இல்லை என்பதை இப் புள்ளிவிவரங்கள் காட்டுகின்றன. உண்மையில் கிடைக்கக்கூடிய புள்ளி விவரங்களின் அடிப்படையில் பார்த்தால், குறைவான பணவீக்கம் அதிகமான உண்மை வருமானப் பெருக்கவிகிதம் ஆகியவற்றோடு தொடர்புடையவைகள் அதிகமானவைகளாகத் தென்படுகின்றன.[1] 19, 20ஆம் நூற்றாண்டு களில் எழும்பு நிலையில் இருந்த ஐந்து முன்னேற்றமடைந்த நாடு களின் வளர்ச்சியையும் விலை நிலையையும் பற்றிய புள்ளிவிவர ஆராய்ச்சியின் அடிப்படையில் பன்னாட்டுச் செலாவணி நிதியில் உள்ள உண்மை வருமான அதிகரிப்புக்கும் விலை நிலைக்கும் எந்த விதமான உடன்தொடர்பும் இல்லை என்ற முடிவுக்கு வந்து ராட்டன் J. பாட்டியா (Rattan J. Bhatia) நமது கவனத்தைக் கவருகிறார். கடந்த 50 முதல் 90 ஆண்டுகளில் வளர்ச்சியடைந்த எட்டு நாடு களின் பதிவுகளையும், 1949–லிருந்து பன்னிரண்டு நாடுகளின் பதிவு

1 Phelphs Brown. E. H. and M. H. Browne, 'Distribution and Productivity Under Inflation, 1947-57, '*The Economic Journal*, December; 1960, p. 745.

களையும் ஐக்கிய அமெரிக்க நாட்டின் கூட்டுப் பொருளாதாரக் குழுவின் அதிகாரிகள் ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். அதில் 'உற்பத்தியின் மாற்றங்களுக்கும் விலைகளின் மாற்றங்களுக்கும் எந்த விதமான எளிமையான தொடர்பும் இல்லை' எனக் கண்டு பிடித்துள்ளனர். மேலும் 'மெதுவான வளர்ச்சிக் காலம் அல்லது எந்த விதமான வளர்ச்சியுமே தோன்றாத காலம் ஆகியவைகளில் எல்லா விதமான விலை நிகழ்ச்சிகளும் நிகழ்ந்திருப்பது போலப் பல விதமான காலங்களில் மிக வேகமான பொருளாதார வளர்ச்சி யானது அதிகரித்துவரும் விலைகளோடும், மாறாநிலை விலைகளோடும், குறைந்துவரும் விலைகளோடும் தொடர்புகளைப் பெற்றிருக்கிறது. எனவும் கண்டு பிடித்துள்ளனர்.

மூலவளங்களை ஆதாய வருமானம் பெறுபவர்களிடம் மாற்று வதற்கு எப்போதுமே பணவீக்கம் துணை செய்வதில்லை அத்தகைய கையதொரு மாற்றம் ஏற்படுத்தப்பட்டாலும் இம் மூலவளங்கள் யாவும் மிகவும் நல்ல பலன் தரத்தக்க முதலீட்டு முயற்சிகளில் ஈடுபடுத்தப்படும் என்பதற்கான உத்திரவாதம் எதுவும் இல்லை. பணவீக்கமானது பொருளாதார வளர்ச்சிக்கு உதவி செய்கிறது என்ற எடுகோள் மிகவும் வலுவற்ற அடிப்படையில் நின்று கொண்டிருக்கிறது என்பவைகள் எல்லாம் வெறும் சொல்வளத் துடன் பணவீக்கம் இருக்க வேண்டும்; பணவீக்கம் தொடர்ந் திருக்கவேண்டும் என்று கூறப்படுகின்ற குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மிகவும் கவனிக்கப்படவேண்டியவைகளாகும் இவைகள் தவிர இங்குக்கவனிக்கப்படவேண்டிய அளவில் சமுதாய பொருளா தார இயல்புடைய ஒரு சில பணவீக்கத்தின் குறைகளும் தெளிவாக இருக்கின்றன. அவைகள் தெளிவாகத் தென்படுகின்றன என்ற காரணத்தால் அவைகளை ஒதுக்கிவிடக் கூடாது. பணவீக்கமானது வருமானம், செல்வம் ஆகியவற்றின் பகிர்வில் உள்ள ஏற்றத் தாழ்வுகளை அதிகமாக்குகிறது. ஆதாய இலாபம் பெறுபவர்களின் அதிகரித்த வருமானத்தின் பெரும் பகுதி எதிர்பாராத ஆதாயமாக இருக்கின்றது இந்த ஆதாயமானது ஏமாற்ற உணர்ச்சி சமுதாய அநீதி உணர்ச்சி ஆகியவகைளை நிலையான வருமானம் பெறுபவர் களுக்கும் கூலி வருமானம் பெறுபவர்களுக்கும் தோற்றுவிககிறது. சமுதாயத் தீய எண்ணங்களுக்கும் மோதல்களுக்கும் இந் நிலை சாதகமாக இருக்கிறது அதிகரித்த முதலீடு என்ற வடிவத்தில் பணவீக்கத்தின் காரணமாகத் தோற்றுவிக்கப்படும் பொருளா தார நன்மைகள் மற்ற விளைவுகளால் ஓரளவுக்கு ஈடு செய்யப் படுகின்றன. உள் நாட்டுப் பணத்தின் மதிப்பு குறைந்து வருவதால் கட்டுப்பாடுகள் இல்லாத சூழ்நிலையில் உள்நாட்டு நாணயத்தின் மீது நம்பிக்கை இழந்துவிட்டவர்களால் சேமிப்புகள் யாவும்

ஏற்றுமதி செய்யப்பட்டுவிடலாம். பணவீக்கத்தால் காட்டாயச் சேமிப்பு தோன்றும் அதே நேரத்தில் பணவீக்கமானது தன்னிச்சைச் சேமிப்பைக் குறைக்கிறது என்ற காரணத்தால் பொருளாதாரத்திற்கு ஓர் இழப்பு தோன்றுகிறது. நிலையானவட்டி விகிதம் உறுதித் தன்மைக்கு உறுதியளிக்கிறது; வணிகப் பிரிவு மக்களிடையே ஒரு நம்பிக்கையைத் தோற்றுவிக்கிறது; அவர்களின் வணிகச் செலவுகளைப் பற்றிய மதிப்பீடுகளில் உறுதி என்ற இயல்பைப் புகுத்துகிறது. ஆனால், உண்மையான வட்டி விகிதத்தைக் குறைக்கும்போது, பணவீக்கமானது பணவிகிதங்களின் உறுதித் தன்மையைப் பாதிக்கிறது. ஒரு நீண்ட காலத் திட்டத்தின் செலவுகளைப்பற்றிய கணக்கீட்டில் உறுதியின்மையை அதிகரிக்கிறது. இறுதியாக அதிகரித்த இறக்குமதி ஏற்றுமதியில் குறைவு நேர்ந்ததன் விளைவாக மற்ற நாடுகளோடான அயல்நாட்டுச் செலுத்துநிலைப் பற்றுக்குறை என்ற வடிவத்தில் பணவீக்கமானது புறச் சமநிலையின்மையையும் தோற்றுவிக்கிறது. பரிமாற்றக் கட்டுப்பாடுகள் மற்ற விதமான கட்டுப்பாடுகள் ஆகியவற்றை இத்தகைய இயல்புடைய புறச்சமநிலையின்மை அவசியமாக்குகிறது. இத்தகைய கட்டுப்பாடுகள் யாவும், நாட்டின் பொருளாதார வளர்ச்சியை மிகுதிப்படுத்தும் இயற்கையாகத் தோன்றக்கூடிய உற்பத்தி முயற்சிகளின்மீது தடை செய்யத்தக்க விளைவுகளைப் பெற்றிருக்கின்றன. இது தவிர, இத்தகைய மென்மையான அல்லது ஊர்ந்து செல்லும் பணவீக்கமானது, தன்னைத்தானே வளர்த்துக்கொள்வதற்கும், மிக வேகமாகச் செல்லக்கூடிய பணவீக்கமாக மாறிக்கொள்வதற்கும் வாய்ப்புகள் இருக்கின்றன. குறிப்பாக, இவ் வாய்ப்புகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அதிகமாகக் காணப்படுகின்றன அப்போது, மேற்குறிப்பிடப்பட்ட சமுதாயப் பொருளாதாரத் தீமைகள் யாவும் மிகவும் பெரியவைகளாகிவிடுகின்றன. இத்தகைய நிலையொன்று தோன்றினால் அதைக் கவனித்துக் கொள்ளத்தக்க நிருவாகத் திறமையின்மையை அல்லது பண நிருவாகத்தில் தேவையான அளவுக்கு அனுபவமின்மையைக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பெற்றிருக்கின்ற காரணத்தால் இந்த அபாயம் முக்கியமாகப் பாதுகாக்கப்படவேண்டிய தொன்றாகும்.

பணவீக்க முறையினால் பொருளாதார முன்னேற்றத்தைத் தோற்றுவிக்கும்போது இக் குறிப்புகள் யாவும் மிகவும் அதிகமான அளவில் எச்சரிக்கையுடன் கவனிக்கப்பட வேண்டியவைகளாகும். மாறாத விலையுடன் கூடிய பொருளாதார முன்னேற்றத்தைத் தரத்தக்க வகையில் நிதியாக்கத்திற்கும் திட்டங்களை நிறைவேற்று

வதற்குமான வழிகளைக் கண்டுபிடித்துக் கடைப்பிடிப்பதுதான் நீண்ட கால அளவில் பொருளாதாரத்திற்கு நன்மை தரத்தக்க தாகவும் மிகவும் பாதுகாப்பானதாகவும் உள்ள முறையாகும் என்பது மறுக்க முடியாத உண்மையாகும். இருப்பினும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இதைப் பெறுவது மிகமிகக் கடின மாகும். இந்த நாடுகளில் ஓரளவுக்கான விலை அதிகரிப்பைத் தவிர்க்கமுடியாது. முதலீட்டு விகிதத்தை அதிகரித்தால் ஒழிய, மிகக் குறைந்த வருமானம், சேமிப்பு ஆகிய நிலைகளில் பலகாலம் வளர்ச்சியுறுமலிருந்த இந்த நாடுகள் பொருளாதார வளர்ச்சியை விரைவாக்க முடியாது. சேமிப்பைக் காட்டிலும் அதிகமான முதலீடு என்பதை இத்தகைய விரைவுபடுத்துதல் உள்ளார்ந் திருக்கிறது. முதலீட்டு விகிதத்தில் அதிகரிப்பைத் தோற்று விப்பதற்கு எந்த விதமான முயற்சி மேற்கொண்டாலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சாதாரணமாகக் காணப்படும் காரணி அளிப்பு நிலையில் உள்ள தடைகள் மற்ற உற்பத்தித் தடைகள் ஆகியவைகளில், மிகமிக வேகமாகப் பணவீக்க அழுத்தத்தைத் தோற்றுவித்துவிடுகின்றன. தவிர, பொருளா தார வளர்ச்சியைப் பெறுதற்குத் தேவைப்படும் முதலீட்டு வகைகளின் பணவீக்க உள்ளாற்றல் பொதுவாக அதிகமான அளவில் இருக்கிறது. நாடு தொழில் மயமாக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்தப்படுவதனுல் அடிப்படைத் தொழில்கள், போக்குவரத்துத் தொழில்கள், மற்றப் பல பொதுப் பயன்பாடுகள் போன்றவற்றின் முன்னேற்றத்திற்காக அரசினர் பேரளவு முதலீடுகள் மேற்கொள்ள வேண்டிய அவசியமாகிறது. ஆனுல், பெரும் தொழில்களைத் தொடங்குவது, விரிவுபடுத்துவது, தொழிற்சாலைகள் பலவற்றை நிருமாணிப்பது ஆகியவைகளுக்கு மூலப்பொருள்கள், உழைப்புச் சக்தி என்ற வடிவத்தில் உண்மை மூலவளங்கள் ஏராளமாகத் தேவைப்படுகின்றன. வேளாண்மைத் துறையின் வளர்ச்சி, உற்பத்தித்திறன் ஆகியவைகளை மூலப் பொருள்களின் அளிப்பு சார்ந்திருக்கிறது. மேலும், பலருக்கு வேலை வாய்ப்புத் தருவதானது உணவிற்கான தேவையை அதிகரிக்கிறது. ஆனுல், உற்பத்தியின்மீது மூலதனத்தின் விளைவு என்ற நோக்கிலிருந்து பார்த்தால், தொழில் துறைக்கும் வேளாண்மைத் துறைக்கும் இடையே வேறுபாடு இருக்கிறது. பொதுவாக, உண்மையான நுகர்வுப் பண்டங்கள் என்ற வடிவத்தில் பலன் தருவதற்குத் தொழில் துறையின்மீதான முதலீட்டிற்கு அதிகக் காலம் ஆகும். ஆனுல், வேளாண்மைத் துறையில் மேற்கொள்ளப்படும் முதலீட்டின் பெரும்பகுதி உடனடியான அளிப்பில் அதிகரிப்பைத் தோற்றுவிக்கும். இதையே மாற்றிச் சொன்னுல் குறுகிய காலத்தில் மூலப் பொருள்கள்

துறையில் மேற்கொள்ளப்படும் முதலீட்டைக் காட்டிலும், தொழில்துறையில் மேற்கொள்ளப்படும் முதலீடு அதிகரித்த பண வருமானத்தைத் தோற்றுவிப்பதற்கு வகை செய்கிறது. இவ்வாறாக, தொழில்துறை பெருகும்போதும், மூலப்பொருள்களுக்கான தேவை அதிகரிக்கும்போதும், பொருளாதாரத்திற்குத் தரப்படத் தக்க பணத்தின் அளவும் அதிகரிக்கிறது. இந்த அமிதத் தேவையானது விலைப்பகுதியில் எந்த விதமான விளைவையும் தோற்றுவிக்கக்கூடாது என்றால், மூலப் பொருள்களின் அளிப்பில் விகிதாச்சார அளவில் அதிகரிப்பு இருக்க வேண்டும். அதாவது, வேளாண்மைப் பண்டங்களில் தராதரமான பற்றாக்குறை தோன்றும்போது மொத்த விலையில் அதிகரிப்பைப் பொருளாதாரம் பெறுகிறது. செலவின் அதிகரிப்புக்கு ஏற்ப இறுதிப் பண்டங்களை உற்பத்தி செய்பவர்கள் தங்களது பண்டங்களின் விலைகளைஉயர்த்திவிடுகிறார்கள். அதனால்வாழ்க்கைச்செலவு அதிகரிக்கிறது. கூலி வருமானம் பெறுபவர்கள் அதிகக் கூலியைத் தருமாறு வற்புறுத்துகிறார்கள். இவ்வாறு தோற்றுவிக்கப்படும் அதிகரித்த வருமானம் மென்மேலும் உற்பத்திச் செலவையும் பணவருமானத்தையும் அதிகரித்து முழுமையான பணவீக்கப் போக்கைத் தோற்றுவிக்கிறது. இத்தகைய தொடர்ச்சியானது, அண்மைக் கால இந்தியாவின் அனுபவத்தில் நன்கு காணப்படுகிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் வேளாண்மைப் பொருள்களுக்குச் சிறப்பிடம் தரப்பட்டது. ஆனால், இஃது இரண்டாம் திட்டக் காலத்தில் பேரளவு தொழில்களுக்கும், பொருளாதாரப் பின்னமைப்புகளுக்கும் மாற்றப்பட்டது. இரண்டாம் திட்டக் காலத்தில் தொழில் வளர்ச்சி விகிதம் குறிப்பிடத்தக்க வகையில் அதிகரித்தது. ஆனால், வேளாண்மை உற்பத்தி பின்தங்கிவிட்டது. பொதுவான மொத்த விலைகளில் அதிகரிப்பானது, தொழில் பண்டங்களின் விலைகளின் அதிகரிப்பைக் காட்டிலும் அதிகமாகவும், உணவுப் பொருள்கள் மற்றத் தொழில் மூலப்பொருள்கள் ஆகியவைகளின் விலைகளின் அதிகரிப்பைக் காட்டிலும் குறைவாகவும் இருந்திருக்கிறது என்ற உண்மையானது, இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்டுள்ள பண்டங்கள் பொதுவிலை அமைப்பின்மேல் மிக அழுத்தமான விளைவுகளைப் பெற்றிருக்கிறது என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. மேலும், வேளாண்மைப் பண்டங்களின் உற்பத்தியிலான இறக்கத்தோடு உடனிகழ்வாகத், தொழில் துறையில் அதிகமான முதலீட்டின் காரணமாக இப் பண்டங்களின் விலைகளில் மேல்நோக்கிய இழுப்பு தோற்றுவிக்கப்படுகிறது என்பதும் இங்கு மிக முக்கியமாகக் குறிப்பிடப்படவேண்டிய குறிப்பாகும்.

விலை அதிகரிப்புக்குக் காரணமாக இருக்கும் இரண்டு விதமான சம நிலைமையின்மையைக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பணவீக்கத்தின் இயல்புகளைப் பற்றிய மேற்கண்ட பகுத்தாய்வு சுட்டிக் காட்டுகின்றது. முதலாவதாக, சேமிப்பு, முதலீடு ஆகியவைகளுக்கிடையே ஒரு சமநிலையின்மை இருக்கிறது. முதலீடு சேமிப்பைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறது. இரண்டாவதாக, பொறிவழித்துறை அல்லது தொழில்துறை, முதன்மைத்துறை அல்லது வேளாண்மைத்துறை ஆகியவைகளுக்கிடையே ஒரு சம நிலையின்மை இருக்கிறது. முதலீடு சேமிப்பைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறது. எனவே, தருக்க வாதத்தின் அடிப்படையில் பார்த்தால், பொருளாதாரத்தில் கிடைக்கத்தக்க சேமிப்புக்கு ஏற்ப முதலீடு இசைவு செய்யப்பட்டாலும் அல்லது தொழில் துறை, வேளாண்மைத்துறை ஆகியவைகளுக்கிடையே சமநிலை தோற்றுவிக்கப்பட்டாலும் பணவீக்கம் தவிர்க்கப்படலாம். குறைந்த வருமான நாடுகள் பலவற்றிலும் ஏற்கெனவே வகுக்கப் பட்டு, நிறைவேறிக் கொண்டிருக்கும் வளர்ச்சித் திட்டங் களைத் திருத்தி அமைப்பதில்தான் சரிசெய்யும் முறைகள் இருக் கின்றன. மேலும், மிகவும் விரிவான அடிப்படையிலான பணவாக்க முறைகள், வரி விதிப்பு முறைகள் ஆகிய இரண்டையும் செயல்திறன் உடையவைகளாக ஆக்குவதையும் இது அவசிய மாக்குகிறது.

## பணவாக்கக் கொள்கையும் பணவீக்கக் கட்டுப்பாடும்
## (Monetary Policy and Inflation Control)

பணவீக்கத்தின் ஆரம்ப நிலைகளை அமித முதலீடு வேளாண்மைத் துறைக்கும் தொழில்துறைக்குமிடையேயான சமநிலைமையற்ற முன்னேற்றம் ஆகியவைகளால் தோன்றும் விலை உயர்வுகள் காட்டுகின்றன. தாள்பண அளிப்பின் அதிகரிப்பு கடன் பெருக்கம் ஆகியவைகளால் பேணப்படும் விலைகளின் உயர்வுப் போக்கு தொடர்ச்சியானதாகவும் மிகவும் அதிகமான அளவில் உள்ளதாகவும் மாறும்போது பணவீக்கம் அதன் இரண்டாம் நிலையை அடைகிறது. பொதுமக்களிடையே கிடைக்கத் தக்க வாங்கும் சக்தி தொடர்ச்சியாக அதிகரித்தால் ஒழிய பணவீக்கம் தொடர்ச்சியாக அதிகரிக்க முடியாது என்பது மிகவும் தெளிவாகும். இந்த நிலையில்தான் நாட்டின் மைய வங்கியும், வணிக வங்கிகளும், பணவீக்கத்தின் தொடர்ச் சிக்கும் பணவீக்க நிலைகளை மிகவும் மோசமானதாக ஆக்கு வதற்குமான சிறப்பான பொறுப்புகளைப் பெற்றிருக்கின்றன. தொடக்க நிலையில் மேற்கொள்ளப்பட வேண்டியவைகளுக்கு,

எதிராக அந்த நிலையில் மேற்கொள்ளப்பட வேண்டிய நடவடிக்கைகள் பெரும்பாலும் பணவாக்கக் கொள்கைகளாக இருக்கின்றன. கடனை வழிப்படுத்துதலையும் பலவிதமான பருப்பொருள் சார்ந்த கட்டுப்பாடுகளையும் இப் பணவாக்கக் கொள்கைகள் உட்கொண்டிருக்கின்றன. இவ்வாருக, பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கான பணவாக்கக் கொள்கை முக்கியமாகத் தீர்வுகாணும் வகையைச் சேர்ந்ததாக இருக்கிறது கடனைப் பெருக்குவதற்கு வங்கி முறையின் சக்திகளைக் கட்டுப்படுத்துவதன் மூலம் விலைகளின் அதிகரிப்பை மெதுவானதாக்குவதற்கும், அல்லது விலைகளின் அதிகரிப்பைக் கட்டுப்படுத்துவதற்கும், விலைகளில் உறுதித் தன்மையைப் புகுத்துவதற்கும் இது முயலுகிறது. எனவே, அத்தகைய கொள்கையானது அரசாங்கத்தின் தலைமைப் பணவாக்க அதிகாரியாக இருக்கும் மைய வங்கி என்ற பதிலாண்மையின் மூலம்தான் செயல்படுத்தப்பட வேண்டும் என்பது மிகவும் தெளிவாக இருக்கிறது.

## இந்தியாவில் பணவீக்கக் கட்டுப்பாட்டு முறைகள்
## (Anti-Inflationary Measures in India)

1939-ல் 2ஆவது உலகப்போர் தோன்றியவுடன் மற்றப் பல நாடுகளில் விலைகள் அதிகரித்ததைப் போன்று இந்தியாவிலும் விலைகள் மிக வேகமாக அதிகரித்தன. அவ்வாறு தோன்றிய விலை உயர்வுகள் மிக வேகமாகப் பணவீக்கத் தன்மையைப் பெற்றிருந்தன. போரின் இறுதிக் காலத்தில் 1939ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்களில் பொதுவான மொத்த விலைக்குறியீட்டு எண் 100–லிருந்து 244·1-க்கு அதிகரித்தது.[1] போர் முடிந்த பிறகு நாட்டிலிருந்து அரசியல் இடர்ப்பாடுகளும், கொரியச் செழிப்பும் (Korean boom) விலைகளில் மென்மேலுமான அதிகரிப்பைத் தோற்றுவித்தன. 1950ஆம் ஆண்டு ஜுன் திங்களில் விலைகளின் அளவுக் குறியீட்டு எண் 395·6 என்ற அளவை எட்டியது. உடணிகழ்வாக 1939–40–ல் ரூபாய் 5,320 மில்லியனிலிருந்து 1945-46-ல் ரூபாய் 21,210 மில்லியனுக்குப் பணத்தின் அளிப்பு அதிகரித்தது. 1950ஆம் ஆண்டிலிருந்து இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டத்தின் முதலீட்டுக்காக அரசாங்கத்தின் பேரளவுச்செலவுகள் இந்தியாவின் விலை அதிகரிப்பின் பொறுப்புக்கான பெரிய காரணியாக இருந்தது. திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலைப் பற்றுக்குறை நிதியாக்கம் மிகக் குறைந்த அளவிலேயே இருந்தன. ஆனல், முதல் திட்டத்தின் இறுதி இரண்டு ஆண்டுகளில்

1 Base: Week ending 19th August, 1939 = 100.

முதலீட்டுச் செலவில் தோற்றுவிக்கப்பட்ட பேரளவு அதிகரிப்பு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மென்மேலும்முதலீட்டை அதிகரித்தது ஆகியவைகள் பற்றுக்குறை நிதியாக்கத்தை அதிகரித்தன. மேலும், கனரகத் தொழில்களின்மீதும், பொருளாதாரப் பின் அமைப்புகளின்மீதும், சமுதாயப் பின் அமைப்புகளின்மீதும் அதிகமான அளவு முக்கியத்துவம் தரப்பட்டதனுல் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மென்மேலும் மிக அதிகமான அளவில் விலைகளின் உயர்வுக்கு அவைகள் உதவி செய்தன.

மூன்றும் திட்டக் காலத்திலும் அதற்குப் பின்னரும் விலைகளில் ஏற்பட்டுள்ள உயர்வை அட்டவணை 15 காட்டுகின்றது.

அட்டவணை 15

மொத்த விலைக்குறியீட்டெண்களின் போக்கு

(1961-62-100)

| ஆண்டுகள் | உணவுப் பொருள்கள் | தொழிலுக்கான கச்சாப் பொருள்கள் | பொறி செய் பொருள்கள் | எல்லாப் பண்டங்களும் சேர்த்து |
|---|---|---|---|---|
| 1961-62 | 100 | 100 | 100 | 100 |
| 1965-66 | 145 | 133 | 118 | 132 |
| 1968-69 | 197 | 157 | 133 | 165 |
| 1969-70 | 197 | 180 | 144 | 172 |
| 1970-71 | 204 | 197 | 155 | 181 |
| 1572-(Feb) | 211 | 186 | 172 | 190 |

மூலம் : Reserve Bank of India Bulletin, March, 72.

விலைக் கட்டுப்பாட்டின் முயற்சிகளில் இந்திய அரசாங்கமும், ரிசர்வ் வங்கியும் பெரும்பாலும் பணவாக்க முறைகளையே பின்பற்றின. போர் ஆண்டுகளில் தோற்றுவிக்கப்பட்டிருந்த நேரடியான பருப்பொருள் சார்ந்த கட்டுப்பாட்டு முறைகளில் பலவும் போர் முடிந்த பிறகு கைவிடப்பட்டன. அதற்குப் பதிலாக வங்கி முறையின் கடன் கொள்கையின்மீது கவனம் திருப்பப்

பட்டது. மைய வங்கியினுல் தோற்றுவிக்கப்படும் கடனின் முதன்மைப் பெருக்கத்தையும் வணிக வங்கிகளினுல் தோற்று விக்கப்படும் கடனின் இரண்டாந்தரப் பெருக்கத்தையும் கட்டுப் படுத்துவதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. 1951ஆம் ஆண்டு மேத் திங்களின் மையப் பகுதியில் வணிக வங்கியின் கடன் பரிமாணம் அதாவது கடன்களும் கழிவுகளும் அதுவரை பெற்றிருந்ததில் உச்ச அளவாகிய ரூபாய் 5,860 மில்லியனுக்கு உயர்ந்தது. போர்க் காலத்தில் பெறப்பட்ட உச்ச அளவையும் மிஞ்சியதாகப் புழக்கத்திலிருக்கும் தாள்பணத்தின் அளவு ரூபாய் 12.000 மில்லியனுக்கும் அதிகமாக இருந்தது. இத்தகைய தகுதி இல்லாத முறையில்லாக் கடன் பெருக்கம், தாள்பணப் பெருக்கம் ஆகியவைகளினுல் தோன்றும் ஆபத்தைச் சந்திப் பதற்காக வங்கி வட்டி விகிதம் 1951ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 14-ம் நாளில் 3%-லிருந்து 3½% ஆக உயர்த்தப்பட்டது. இந்தப் பிடியை மேலும் இறுக்குவதற்கான வழியாகச் சுறுசுறுப் பான காலங்களில் வங்கிகளிடமிருந்து நேரடியாக அரசுக் கடன் பத்திரங்களை வாங்குவது இல்லை என்ற தனது முடிவையும் அரசுக் கடன் பத்திரங்களுக்கு எதிராகப் புதிய வட்டி விகிதத்தில் கடன் களையும், முன் பணங்களையும் தருவதற்கான தனது விருப்பத் தையும் ரிசர்வ் வங்கி வெளியிட்டது. இந்த நடவடிக்கையின் காரணமாகப் பண அளிப்பில் அதிகரிப்பு விகிதமும் செட்யூல்டு வங்கிகளில் கடன் அதிகரிப்பு விகிதமும் குறையும் போக்கை பெற்றிருந்தாலும், அதிகரித்த வட்டி விகிதத்தின் விளைவு நிராகரிக் கப்படத்தக்க அளவில் மிகக் குறைவாகவே இருந்தது. 1951–52ஆம் ஆண்டில் சுறுசுறுப்புக் காலத்தில் (ரூபாய் 5,970 மில்லியனுக) இருந்த வங்கிக் கடன்களின் நிலையானது அதற்கு முந்திய சுறு சுறுப்புக் காலத்தில் பெறப்பட்ட உச்ச அளவைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. வங்கிக்கடன் பெருக்கத்தின் அளவிற்கான நம்பகமான அளவுக் குறியீட்டு எண்ணுகை இருக்கும் கடன்களின் வைப்பு விகிதம் 1952ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் 70% ஐ அடைந்தது. இந்த ஆண்டுக்கு முன்னுல் இருந்த உச்ச அளவான 65% ஐக் காட்டிலும் இது அதிகமாகும்.

திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்கத் திலிருந்து வங்கிக் கடன் பெருக்கத்தின் இரண்டாவது நிலை 1954-ல் தொடங்கி அடுத்த ஆண்டில் குறிப்பிடத்தக்க அளவில் வேகத்தைப் பெற்றது. 1954 முதல் 1957 முடிய உள்ள ஆண்டுகளின் மூன்று சுறுசுறுப்புக் காலங்களிலும், வங்கிக் கடன்களின் பெருக்கம் முறையே ரூபாய் 950 மில்லியன், ரூபாய் 1600 மில்லியன், ரூபாய் 1700 மில்லியன் ஆகும். பொதுத்துறை, தனியார்துறை ஆகிய

இரண்டு துறைகளிலும், மேற்கொள்ளப்பட்ட மிக அதிகமான அளவிலான முதலீட்டு நடவடிக்கைகளும் வணிக நடவடிக்கைகளும், 1954–55ஆம் ஆண்டின் இறுதியில் இருந்த வங்கிக் கடன், பண அளிப்பு ஆகியவைகளை ரூ 19,210 மில்லியனிலிருந்து. 1957–58ஆம் ஆண்டின் இறுதியில் ரூ 2 .890 மில்லியனுக அதிகரிப்பதை மிகவும் அவசியமாக்கின. ஆனுல், சூழ்நிலைகள் எந்த அளவை அனுமதிக்குமோ அந்த அளவைக் காட்டிலும் மிக அதிகமான அளவில் கடன் பெருக்க விகிதம் இருந்ததாக அச்சம் தோன்றியது. எனவே, 1956ஆம் ஆண்டு மார்ச் திங்கள் முதல் நாளில் உண்டியல் சந்தைத் திட்டத்தின்படி (Bill Market Scheme) வங்கி அதன் கடன் கொடுக்கும் விகிதத்தை 3%–லிருந்து 3¼% ஆக அதிகரித்தது. (அதாவது வங்கி விகிதத்தைக் காட்டிலும் ¼% அளவு குறைவாகக் கடன்கொடுக்கும் விகிதத்தை அதிகரித்தது). இதோடு, 19 1ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 21ஆம் தேதியிலிருந்து வட்டி விகிதத்தை 3½%ஆக அதிகரித்தது. ஆனுல், அதே நேரத்தில் திறந்த சந்தை நடவடிக்கைகளைப் (Open Market Operation) பற்றிய வங்கியின் கொள்கையில் ஒரு சில தளர்த்துதல்களும் தோற்றுவிக்கப்பட்டன. 1956ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களிலிருந்து அரசாங்கத்தின் கடன் பத்திரங்களைப் பல்வேறு முறைகளில் வாங்குவதை ரிசர்வ் வங்கி தொடங்கியது. மேலும் உண்டியல் சந்தைத் திட்டத்தில் தரப்படும் வசதிகளை ஓரளவு தளர்த்தியது. அடுத்த ஆண்டில் கடனைக் கட்டுப்படுத்துவதற்கான மென்மேலும் பல வழிகள் மேற்கொள்ளப்பட்டன. உண்டியல் மாமூல் தவணைகளின்மீது ஸ்டாம்பு வரியை அரசாங்கம் அதிகரித்ததன் காரணமாக உண்டியல் மாமூல் தவணைகளுக்கு எதிராகச் செட்யூல்டுவங்கிகளின் கடன் வாங்கும் உறுதியான விகிதம் மேலும் ½% அதிகரித்தது. உடனிகழ்வாக அரசாங்கக் கடன் பத்திரங்களுக்குத் தரப்படும் கடன்களின் மீதான வங்கியின் வட்டி விகிதம் 3½%–லிருந்து 4%-க்கு அதிகரித்தது. 1957ஆம் ஆண்டு மேத் திங்களிலிருந்து வங்கி வட்டி விகிதமும் 4%ஆக அதிகரிக்கப்பட்டது. ஆனுல், உண்டியல் மாமூல் தவணைகளுக்கு (Usame bill) எதிராகச் செட்யூல்டு பாங்குகளின் கடன் விகிதம் 4½%ஆக குறைக்கப்படும்வண்ணம் உண்டியல் மாமூல் தவணைகளின்மீதான ஸ்டாம்பு வரி (Stamp Duty) 1%–லிருந்து ⅕ ஆகக் குறைக்கப்பட்டது.

ஓரளவிற்குப் பழமையற்றதான தடை செய்யும் முறைகள் அண்மையில் கடைப்பிடிக்கப்பட்டன. 1960ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 11ஆம் தேதி செட்யூல்டு வங்கிகளில் இருப்பு விகிதங்களை மாற்றக்கூடிய தனது அதிகாரத்தை ரிசர்வ் வங்கி முதன் முறையாகப் பயன்படுத்தியது. அதன் மூலம் அந்தத் தேதியிலிருந்து

செட்யூல்டு வங்கிகளின் மொத்த வைப்புக் கடன் பொறுப்புகளின் அதிகரிப்பில் 25 விழுக்காட்டுக்குச் சமமான அதிகப்படியான இருப்பை ரிசர்வ் வங்கியிடம் செட்யூல்டு வங்கிகள் வைத்திருக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளப்பட்டன. பின்னர், தேவைக் கடன் பொறுப்புகள் (Demand Liabilities) காலக் கடன் பொறுப்புகள் (Time Liabilities) ஆகியவைகளில் இத்தகைய இருப்பு வைக்க வேண்டிய அளவு 50 விழுக்காடாக அதிகரிக்கப் பட்டது. 1960ஆம் ஆண்டு, செப்டெம்பர்த் திங்கள் 21ஆம் நாள் மூன்றடுக்கு முறைக் கடன் கட்டுப்பாட்டைப் (Three Tier System of Credit Control) புகுத்தியதன் மூலம் முக்கியமானதொரு நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. வங்கிகளுக்குத் தரப் பட்டிருக்கும் குறிப்பிட்ட அளவைக் காட்டிலும் வங்கிகள் ரிசர்வ் வங்கியிடம் கடன் வாங்கும்போது அத்தகைய கடன்களுக்குத் தண்டனைக்குரியதொரு வட்டி விகிதத்தை விதித்தல், வாடிக்கைக் காரர்களிடம் கடன் கொடுப்பதில் நடைமுறையில் உள்ள வட்டி விகிதத்தில் ½% அளவை உயர்த்துதல், குறுகிய கால வைப்புகளின் மீது வங்கிகளால் செலுத்தப்படும் வட்டி விகிதத்திற்கு ஓர் எல்லையை நிருணயித்தல் ஆகியவைகளை இஃது உட்கொண்டிருந்தது. மேலும், பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகளும் பெருமளவில் கடைப்பிடிக்கப்பட்டன. பண்டங்கள், சரி ஒப்புரவுப் பங்குகள் (Equity shares) ஆகியவைகளுக்கு எதிராக செட்யூல்டு வங்கிகள் கொடுக்கும் கடன்களுக்கான குறைந்த அளவு எல்லையை விதித்தல், ஏராளமான அளவிலான கடன் பெருக்கத்திலிருந்து தடுத்துக் கொள்வதற்கான தேவையை வலியுறுத்தி ரிசர்வ் வங்கியின் ஆளுநரிடமிருந்து வணிக வங்கிகளுக்கு காலந்தோறும் வேண்டு கோள்களும், ஆணைகளும் அனுப்புதல் ஆகியவைகளை இஃது உள்ளடக்கியிருக்கிறது.

இரண்டாம் திட்டக் காலத்திற்குப் பிறகு பலவிதமான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 1963 ஜனவரி மாதத்தில் ரிசர்வ் வங்கியின் பாங்குவீதம் 4·5% ஆக இருந்தது. இது 1964 செப்டெம்பர் மாதத்தில் 5% ஆகவும், 1965 பிப்ரவரியில் 6% ஆகவும் உயர்த்தப்பட்டது. பின்னர் 1968 மார்ச்சு மாதத்தில் 5% ஆகக் குறைக்கப்பட்டது. ஆனால், 1971 ஜனவரியில் மீண்டும் 6% ஆகக் அதிகரிக்கப்பட்டது. ஆனால், இந்த ஆயுதமானது விலை உயர்வைக் குறைப்பதற்கான வலுவானதொரு ஆயுதமாகச் செயல்பட வில்லை. விலை உயர்வைக் குறைப்பதற்கான ஆயுதமாகச் செயல்பட வேண்டிய இவ் விகிதம் உண்மையாகப் பார்த்தால் செயலிழந்து விலை மாற்றங்களால் இயக்கப்படுவதாக மாறியிருந்தது என்பதைக் குறிப்பிடும்போது, 'பண அங்காடியிலும் மூலதன அங்காடியிலும்

நிலவும் வட்டிவிகிதத்திற்கு ஏற்ப இருக்க வேண்டும் என்பதற் காகவே பாங்கு வீதம் உயர்த்தப்பட்டது' என்று ரிசர்வ் வங்கி குறிப்பிட்டிருக்கிறது.

செட்யூல்டு வங்கிகள் வாங்கும் கடனை கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் 1965ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் புதியதொரு முறையைப் புகுத்தியது. அதாவது, செட்யூல்டு வங்கியொன்று அதன் மொத்தத் தேவை, நீர்மைச் சொத்துகள் என்ற வடிவத் திலிருக்கும் காலக் கடன் பொறுப்புகள் (Aggregate Demand and Time Liabilities in the form of Iiquid Assets) ஆகியவைகளில் 32% அளவை வைத்திருந்தால் ரிசர்வ் வங்கியிடமிருந்து பாங்கு வீதத்தில் கடன் பெறலாம். நிகர நீர்மை விகிதத்தில் (Liquidity rates) தோன்றும் ஒவ்வொரு % அளவு குறைவுக்கும் வட்டி விகிதம் ½% அதிகமாகும் என்பதே புதிய முறையாகும். மேலும் 1970ஆம் ஆண்டு மே மாதம் முதல் நீர்மை விகிதம் (Liquidity rates) 32% உயர்த்தப்பட்டது.

இத்தகைய முறைகள் ஏராளமாக இருந்தாலும் விலை நிலையை அல்லது பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதில் அவைகளின் பலன் மிகவும் குறைவான அளவிலிருக்கிறது. விலைகள் தொடர்ச்சியாக அதிகரித்துச் செல்லும் போக்கையே பெற்றிருக்கின்றன. இரண்டாவது ஐந்தாண்டுக் காலமான 1956-1961 ஆகிய ஆண்டு களில் நாட்டின் பொதுவான மொத்த விலை நிலை 12% அளவுக்கு அதிகரித்தது. 1958-59 முதல் 1960-61 ஆகிய மூன்றாண்டுகளில் விலைகளில் ஆண்டுதோறுமான அதிகரிப்பு, முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இதைப்போன்ற ஆண்டுகளில் ஒரு விழுக்காட் டிற்கும் சிறிதளவே அதிகமானதாக இருந்ததற்கு எதிராக ஏறத்தாழ 4% ஆக இருந்தது. பணத்தின் அளிப்பு இரண்டாம் திட்டத் தொடக்கத்தில் ரூ. 22,200 மில்லியனிலிருந்து அத் திட்டத்தின் இறுதி ஆண்டுகளில் ரூ 28,700 ஆக அதிகரித்தது. 1957-58, 1960–61 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் இந்திய அரசின் தொழில் துறை(Labour Bureau of the Government of India)யினால் தொழிலாளர் வகுப்புக்கெனத் தொகுக்கப்பட்ட நுகர்வோர் விலைக் குறியீட்டு எண் 13 புள்ளிகள் அதிகமாக இருந்ததைப் பதிவு செய்தது. 1965ஆம் ஆண்டுக்குப் பிறகு விலைகளில் மிகவும் முனைப்பான அதிகரிப்பு தோன்றியது. 1966-67, 1967–68 ஆகிய ஆண்டுகளில் விலை அதிகரிப்பு அதற்கு முன்பு தோன்றியதைக் காட்டிலும் மிகவும் அதிகமான அளவில் இருந்தது. கடந்த ஆண்டுகளில் கடைப்பிடிக்கப்பட்ட பற்றுக்குறை நிதியாக்கம், இந்தியாவுக்கும்

பாக்கிஸ்தானுக்கும் இடையே ஏற்பட்ட மிகப் பெரும்போர், வங்காள தேசத்திலிருந்து (Bangla Desh) இந்தியாவிற்குள் அகதிகளாகப் பலகோடி மக்கள் வந்தது ஆகியவைகளெல்லாம் சேர்ந்து அண்மைக் காலத்தில் பண்டங்களின் விலைகளை மென்மேலும் உயர்த்திவிட்டன. பணஅளிப்பின் அளவு 1950–51-ல் 20,200 மில்லியனிலிருந்து 1960-61-ல் 28,700 மில்லியனாகவும் 1970-71-ல் 71,350 மில்லியனாகவும் 1972 பிப்ரவரி மாதத்தில் 78,900 மில்லியனாகவும் உயர்ந்துவிட்டது. இவைகள் யாவும் இந்தியப் பொருளாதாரத்தில் உள்ள பணவீக்கத்தைக்காட்டும் தவறில்லாத குறிகளாகும். அவைகளில் பணத்தின் சுழற்சியில் அதிகரிப்பு, மக்களின் நீர்மை விருப்பத்தில் குறைவு அல்லது பணத்தின் மதிப்பு குறைந்து செல்வத்தினால் தோன்றும் இழப்பிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காகப் பணத்தை மிக வேகமாகச் செலவழிக்கும் அதிகரித்த விருப்பம், நிலச் சொத்து போன்ற நிலையான சொத்துகளின் மதிப்பில் ஊக வாணிக மதிப்பு அதிகரிப்பு, அதிகமான விலைகளாலும் அதிகமான வாழ்க்கைச் செலவாலும், கூலிகள் அதிகரிக்கும் போக்கு, கூலிகளின் அதிகரிப்பாலும், உற்பத்திச் செலவு அதிகரிப்பாலும் விலைகள் அதிகரிக்கும் போக்கு. ஊக வாணிக நோக்கத்திற்காகப் பண்டங்களைப் பதுக்குவதும், ஒதுக்குவதும் போன்றவை ஆகியவைகளை இங்குக் குறிப்பிடலாம். முதலீட்டின்மீது அதிகமான செலவு, பேரளவிலான பற்றுக்குறை நிதியாக்கம் ஆகிய இரண்டுமே இத்தகைய நிலைக்குப் பொறுப்பான முக்கிய காரணிகளாகும். விலைகளை உறுதியாக உயர்த்தும் நோக்குடைய இத்தகைய சக்திகளுக்கு எதிராக, விலைக்கோட்டைக் கட்டுப்பாட்டுக்குள் வைப்பதற்கு மேற்கொள்ளப்படும் பணவாக்கக் கொள்கைகள் சிறிதளவே பயனுள்ளவைகளாகத் தென்படுகின்றன.

## குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பணவாக்கக் கொள்கையின் வரையறைகள்
## (Limitation of Monetary Policy in Underdeveloped Countries)

பணவாக்கக் கொள்கையானது வளர்ச்சி பெற்ற நாடுகளில் எந்த அளவுக்கு வெற்றியைத் தந்ததோ அந்த அளவுக்குக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வெற்றியைத் தரமுடியாது என்று நம்பப்படுவதற்கான அடிப்படைக் காரணம் மூலதனச் சந்தையிலும், பணச் சந்தையிலும் குறைந்த வளர்ச்சித்தன்மையில் இந் நாடுகளில் உள்ள பொருளாதாரப் பின்தங்கிய நிலைகள் பிரதிபலிப்பதுதான். இந் நாடுகளில் வங்கி வைப்புகளைக் காட்டிலும்

தாள்பணமே மிகவும் முக்கியமானவைகளாகக் கருதப்படுகின்றன. ஆதலால் மைய வங்கியானது வணிக வங்கிகளின் கடன் பரிமாணத்தைக் கட்டுப்படுத்த முடியுமென்றாலும்கூட, பணத்தின் அளிப்பில் மிகவும் முக்கியமான பகுதியைத் தனது கட்டுப்பாட்டிற்குள்ளிருந்து விலக்குகிறது. பணத்தின் அளிப்பில் கடன் பகுதியின்மீது இயங்கும் கட்டுப்படுத்தத் தக்க பணவாக்கக் கொள்கை எந்த அளவுக்கு இருக்கிறதோ அந்த அளவுக்குப் பின்தங்கிய நாடுகளில் இத்தகைய கொள்கையின் குறுகிய வாய்ப்புகள் தெளிவாகத் தெரிகின்றன. மேலும், அரிசி, பருத்தி, சணல் ரப்பர் தகரம் மற்றும் இவை போன்ற ஒரு சில மிக முக்கியமான ஏற்றுமதிப் பண்டங்களின் மூலமாகவே பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள், அவைகளின் வருமானத்தின் பெரும்பகுதியைப் பெறுகின்ற காரணத்தால், அப் பண்டங்களில் உள்நாட்டு விலை நிலையானது அப் பண்டங்களுக்கான உலகத் தேவையினாலும், அப் பண்டங்களுக்கான உலகச் சந்தை விலைகளினாலும் இயக்கப்படுகிறது. இறக்குமதி செய்யப்படும் இத்தகைய உறுதியின்மையானது உள்நாட்டு விலைக் கட்டுப்பாடு முறைகளினால் எளிதாக மாற்றப்படத்தக்கவைகள் அல்ல.

மறு கடன் கழிவு விகிதம், வெளி அங்காடி நடவடிக்கைகள், வணிக வங்கிகளின் இருப்புகளில் மாற்றத்தைத் தோற்றுவித்தல் ஆகியவைகள்தான் மைய வங்கிகளால் கடைப்பிடிக்கப்படும் மரபு வழியான கடன் கட்டுப்பாடு முறைகளாகும். இத்தகைய முறைகளின் செயற்பாடுகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பேரளவில் வரையறைக்குட்பட்டவைகளாக இருக்கின்றன. இந்நாடுகளின் பணச் சந்தையும் மூலதனச் சந்தையும் நல்ல முறையில் அமைக்கப்பட்டிருக்கவில்லை என்பதோடு, மைய வங்கி அமைப்போடு மிகவும் நெருக்கமாக இணைக்கப்பட்டிருக்கவில்லை என்பதே இதற்கான காரணமாகும். மைய வங்கி, வணிக வங்கி ஆகிய வங்கிகளுக்கிடையேயான தொடர்பு மிகவும் நெருக்கமானதாகவும், கடனுக்கான தேவையான செலவைப்பொறுத்து உடனுக்குடன் மாறுபடக்கூடியதாகவும் இருந்தால்தான் பாங்கு வீத மாற்ற நடவடிக்கைகள் மிகவும் பயனுள்ளவைகளாக இருக்கும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் சட்ட ரீதியாக எவ்வளவு ரொக்க இருப்பு வைத்துக்கொள்ள வேண்டுமென்ற நியதி இருக்கிறதோ அதைக்காட்டிலும் அதிகமான அளவில் வணிக வங்கிகள் ரொக்க இருப்பை வைத்துக்கொள்வது மிகவும் சாதாரணமாகக் காணப்படக்கூடியதாகும். சட்ட ரீதியான ரொக்க இருப்புகளுக்கும், உண்மையான ரொக்க இருப்புகளுக்கும் இடையேயான வேறுபாட்டு எல்லையானது, வணிக வங்கி

களுக்குத் தேவை ஏற்படும்போது கடன்களைப் பெருக்குவதற்குத் தங்களது சொந்த மூலவளங்களையே சார்ந்திருப்பதற்கானதொரு பெரும் வழியைத் தருகிறது. இதையே இன்னொரு விதத்தில் குறிப்பிட்டால், எந்த நேரத்தில் மைய வங்கியிடம் வணிக வங்கிகள் (உதவி நாடிச்) செல்ல வேண்டுமென்று விரும்பப்படுகின்றனவோ அந்த நேரத்தில் வணிக வங்கிகள் அவ்வாறு செல்லாமல் இருக்கின்றன. தவிர, எந்த நிலையில் அல்லது எந்த அளவு அதிகமான பாங்கு வீதத்தில் பாங்கு வீதம் பயனுள்ளதாக ஆக்கப்படும் என்பதும் மைய வங்கிக்கு உறுதியாகத் தெரியவில்லை. இக் காரணங்களால் அதிகமான பாங்குவீதம் எதிர்பார்க்கும் பயனைத் தருவதாக இல்லை. கழிவு செய்வதற்கேற்ற உண்டியல்கள் இல்லாதிருப்பது பாங்கு வீதம் பயனுள்ளதாக இல்லாமலிருப்பதற்கான இன்னொரு காரணமாகும். மைய வங்கியினால் தரப்படத்தக்க மறு கடன் கழிவு வசதிகளைப் பேரளவில் பயன்படுத்திக்கொள்வதை இது தடை செய்கிறது. மூன்றாவதாக, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பல அயல் நாட்டு வங்கிகள் இருப்பதனால் வங்கி முறையின்மீது மிக நெருக்கமான கட்டுப்பாட்டை மைய வங்கிகள் பயன்படுத்துவது கடினமானதாக இருக்கிறது. அயல் நாட்டு வங்கிகளின் கிளைகளுக்கு நிதி தேவைப்படும்போது, அயல் நாடுகளில் உள்ள தாய் நிறுவனங்களிலிருந்து தேவையான மூலவளங்களை அவைகள் பெற்றுக்கொள்கின்றன. இதன் காரணமாக அவைகள் செயல்பட்டுக்கொண்டிருக்கும் நாடுகளில் உள்ள மைய வங்கிகளின் கொள்கைகளை முக்கியமானவைகளாகக் கருதாமல் பெரும்பாலும் புறக்கணித்துவிடுகின்றன. இறுதியாக ஒரு குறிப்பு. இது குறைந்த வருமானமுடைய நாடுகளில் மட்டும் காணப்படும் சிறப்புப் பண்பு அன்று. அதாவது, விலைகளில் சரிவு தோன்றும் என்றும் அதிகரிப்பு தோன்றும் என்றும் உறுதியான எதிர்பார்த்தல்கள் இருக்கும்போது பாங்கு வீதத்தில் தோற்றுவிக்கப்படும் மாற்றம் குறைந்த அளவு பயனையே தரத்தக்கதாகும். பணவீக்கம் சிறிது காலத்திற்குத் தொடர்ச்சியாக இருந்து, விலைகளின் அதிகரிப்பு தொடர்ச்சியாக இருக்கும் என்று வணிகப் பிரிவினர் எதிர்பார்த்திருக்கும்போது. பாங்குவீதம் அதிகமான அளவில் இருந்தாலும்கூட, அவர்கள் மைய வங்கியிடமிருந்து கடன் பெறத் தயங்கமாட்டார்கள். இதன் காரணமாக, வங்கிக்கடன் பரிமாணமானது பேரளவில் மாற்ற முடியாததாகிறது. மேற்கண்ட பகுத்தாய்வு உண்மை நிலை பெரிதுபடுத்திக் காட்டப்பட்டுள்ளதொரு பகுத்தாய்வு அன்று. இது பிலிப்பைன்ஸ் நாட்டின் அனுபவத்தினால் நிருபிக்கப்பட்டிருக்கிறது. பிலிப்பைன்ஸ் நாட்டில் பொருளாதார நடவடிக்கைகளைத் தூண்டிவிடுவதற்கான மைய வங்கி அதன் பாங்கு வீதத்தை 1954ஆம்

ஆண்டின் முற்பகுதியில் 2 விழுக்காட்டிலிருந்து $1\frac{1}{2}$ விழுக்காட்டிற்குக் குறைத்தது. இதன் காரணமாக வணிக வங்கிகளின் வட்டி விகிதம் குறைந்திருக்க வேண்டும். ஆனால், உண்மையில் அவ்வாறு குறையவில்லை என்பதோடு உண்மையாக அதிகரித்தது.[1] பொருளாதார முன்னேற்றத்துடன் தொடர்புள்ள அரசாங்கச் செலவின் அளவை அதிகரிப்பதற்கான வாய்ப்பும் மிகவும் வரையறைக்குட்பட்ட அளவில்தான் இருக்கிறது. இது மிகவும் முக்கியமானது. ஏனென்றால், பெரும்பாலான இத்தகைய நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தில் பொதுத்துறை மிகவும் சிறப்பு மிக்க பங்கை ஆற்றிவருகிறது தவிர, பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான நிதியாக்கத்திற்கு அரசுக் கடன் பத்திரங்களுக்கு எதிராகக் கடன் வாங்குதல் என்பதில்தான் மென்மேலும் அதிகமான அளவில் அரசாங்கம் சார்ந்திருக்கின்றது

மேற்கண்ட காரணங்களால் வெளி அங்காடி நடவடிக்கைகளும் சரிவரச் செயல்படத் தவறிவிடுகின்றன. தகுதியுள்ள கடன் பத்திரங்களை வாங்குவதன் மூலமும் விற்பதன் மூலமும் மைய வங்கி, வணிகங்களின் நீர்மைத் தன்மையைக் குறைக்க அல்லது அதிகரிக்க முடியும் என்பதோடு அவ்வாறு குறைப்பதால் அல்லது அதிகரிப்பதால் வங்கிக் கடன் (வங்கிச் செலாவணியின்) பருமத்தைப் பாதிக்க முடியும் என்பதுதான் இத்தகைய வெளி அங்காடி நடவடிக்கைகளுக்குப் பின்புறத்தில் உள்ள கொள்கையாகும். இத்தகைய கொள்கை வெற்றிபெற வேண்டுமானால் அரசுப் பத்திரங்கள் ஏராளமாகக் கிடைக்கவேண்டும். அவைகள் எளிதாகச் சந்தையில் விற்கப்படவும் வாங்கப்படவும் வேண்டும் என்பது மிகவும் தெளிவாக இருக்கிறது. அரசுப் பத்திரங்களின் அளிப்பு. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அண்மை ஆண்டுகளில் அதிகரித்திருக்கிறது. ஆனால், அவைகளின் குறைந்த வட்டி விகிதத்தின் காரணமாகவும் குறைந்த வருமானத்தின் காரணமாகவும் அவைகளைச் சந்தையில் விற்பது, வாங்குவது என்பது முன்னேற்றமடையவில்லை. வணிக நிறுவனக் கடன் பத்திரங்களின் வருமானம் ஆண்டொன்றுக்கு 8 முதல் 12% வரை இருக்கிறது. ஆனால், அரசாங்கப் பத்திரங்களின் வருமானம் ஆண்டொன்றுக்கு 4%—5% வரைதான் இருக்கிறது. எனவே, அரசாங்கப் பங்குப் பத்திரங்கள் பாதுகாப்பானவை என்ற நோக்கில் வணிக வங்கிகளுக்கு மிகவும் கவர்ச்சியானவைகளாக இருந்தாலும், வணிக நிறுவனக் கடன் பத்திரங்களோடு ஒப்பிடுகையில் பாதகமானவைகளாகவே காணப்படுகின்றன. எனவே, பல நேரங்களில் நடப்

[1] *Economic Bulletin for Asia and the Far East*, U. N., Vol. VII. No. 3, November 1956, p. 41.

பதைப் போன்று, வணிக வங்கிகள் வணிக நிறுவனங்களின் கடன் பத்திரங்களையே விரும்புகின்றன. அவ் வணிக வங்கிகள் அவைகளின் நீர்மைத் தன்மைக்கு மிகுந்த சிறப்பிடம் தருகின்றன. அதற்காக அவர்கள் பணம், தங்கம், அந்நியச் செலாவணி போன்ற நீர்மைத் தன்மையுடைய சொத்துகளில் தங்களது அதிகரித்த இருப்புகளை வைத்திருக்கிறார்கள். மூலதனச் சந்தைகள் இல்லாதிருத்தலால் அல்லது பற்றாக்குறையாக இருத்தலால்தான் அரசுப் பத்திரங்களில் ஓரளவுக்குக் காணப்படும் தராதரமான நீர்மையற்ற தன்மை இருக்கிறது. அரசுப் பத்திரங்களின் விற்பனை செய்யத்தக்க தன்மையை முன்னேற்றுவிப்பதற்கு மேற்கொள்ளப் படும் எந்த முயற்சியும் அரசுப் பத்திரங்களின் விகிதத்தைத் தேவையான அளவுக்கு அதிகப்படுத்தவேண்டும் என்ற சிக்கலை எதிர்நோக்க வேண்டும். இப்போது அங்காடி வட்டி விகிதம் மிகவும் அதிகமான அளவில் இருக்கிறது. இந்த நிலையில் பத்திரச் சந்தையைத் (Bond Market) தோற்றுவித்தால் அது அரசாங்கக் கடன் பத்திரங்களின் மதிப்பை மேலும் குறைத்துவிடும். அதன் மூலம் அத்தகைய பத்திரங்களின் மூலதன மதிப்பில் பெரும் பகுதியையும் நீக்கிவிடும். இன்னொரு வழியில் அரசுப் பத்திரங்களை அதிகமான அளவில் விற்பனை செய்வதற்காக அவைகளின் மீதான வட்டி விகிதங்கள் அதிகரிக்கப்பட்டால் அவைகள் அரசாங்கத்தின் கடன் வாங்கும் செலவை நேரிடையாகவே அதிகப்படுத்தி விடுகின்றன.

மற்றொரு முறையினாலும் வணிக வங்கிகளால் தோற்றுவிக்கப் படும் கடன் பெருக்கம் கட்டுப்படுத்தப்படுகிறது. இது மூன்றாவது முறையாகும். இம் முறையை ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பின்பற்றியுள்ளன. வணிக வங்கிகளின் வைப்புகளுக்கு எதிராக அவைகள் வைத்திருக்க வேண்டிய ரொக்க இருப்புகளை அதிகரிப்பதன் மூலம் அவைகளின் சொத்துகளின் ஒரு பகுதி அசைவற்றதாக்கப்பட்டு, கடன் பெருக்கத்திற்கான அவைகளின் சக்தியும் அதற்கேற்பக் கட்டுப்படுத்தப்படுகிறது. வணிக வங்கிகள் ரொக்க இருப்புகளை அதிகமான அளவில் வைத்திருப்பதாலும், அயல் நாடுகளிலிருந்து பெறத்தக்க மூலவளங்களைச் சார்ந்திருக்கும் அயல் நாட்டு வங்கிகள் பல இருக்கின்ற காரணத்தாலும் கடன் கட்டுப்பாட்டிற்கான இந்த முறையைப் பயன் படுத்துவதற்கான வாய்ப்பும் குறுகிய அளவிலேயே இருக்கிறது. தவிர, வணிக வங்கிகள் அரசுக் கடன் பத்திரங்களை எந்த அளவுக்கு வைத்திருக்கின்றனவோ அந்த அளவைப் பொறுத்து, அழுத்தக் காலத்தில் அத்தகைய கடன் பத்திரங்களை விற்பனை செய்வதன் மூலம் அவைகளின் மூலவளங்களைக் குறை நிரப்பிவிடமுடியும்.

அதிகமான அளவில் ரொக்க இருப்புகளை வைத்திருக்கும் வணிக வங்கிகளை, அத்தகைய அதிக ரொக்க இருப்புகளை அரசுக் கடன் பத்திரங்களாக வைத்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்வது. ரொக்க இருப்புகளை அதிகமான அளவில் வைத்துக்கொள்ளுவதைக் கட்டுப்படுத்துவதற்காகப் பரிந்துரைக்கப்படும் ஒரு முறையாகும். இத்தகைய முறை மேற்குறிப்பிட்டவாறு நடவடிக்கைகளை மாற்றிக்கொள்ளுவதைக் குறைக்கும் என்றும், அரசுப் பத்திரங்களின் சந்தையில் தோன்றும் ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கும் என்றும், அரசுப்பங்குச் சந்தையைப் பாதுகாப்பதற்கு மைய வங்கி செயல்பட வேண்டிய அவசியத்தைக் குறைக்கும் என்றும் நம்பப் படுகிறது. பெல்ஜியம் இத்தாலி, பிரான்ஸ், நெதர்லாந்து ஆகிய சில ஐரோப்பிய நாடுகளில் இம் முறை புகுத்தப்பட்டிருக்கிறது. ஏறத்தாழ இதைப் போன்ற நடவடிக்கைகளைக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளான பாக்கிஸ்தானும், பிலிப்பைன்ஸ் நாடும் ஓரளவுக்கு மேற்கொண்டிருக்கின்றன.

## பொருளாதார வளர்ச்சியை முன்னேற்றுவிப்பதற்கான பணவாக்கக் கொள்கை
## (Monetary Policy for Promoting Economic Development)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பணவீக்கமானது மிகவும் தீவிரமான போக்குடையதாக இருந்தால் ஒழிய. விலைகளின் அதிகரிப்பைக் கட்டுப்படுத்துவதற்கான பணவாக்கக் கொள்கையானது குறுகிய காலத் தன்மையுடையதாகவே இருக்கும். பணவாக்க நிருவாகத்தின் எதிர்மறைத் தன்மையை அது காட்டுகிறது. ஆனால். விலைகளில் நிலையான தன்மையைத் தோற்றுவித்தல் என்ற நோக்கத்தைவிட மிக முக்கியமாகப் பொருளாதார வளர்ச்சி என்ற நீண்ட கால நோக்கம் ஒன்று இருக்கிறது குறைந்த வருமானமுடைய நாடுகளில் பணவாக்கக் கொள்கையின் நேர்த் தன்மையை இது காட்டுகிறது. நீண்ட கால நோக்கமாகிய பொருளாதார வளர்ச்சி என்ற நோக்கில் முதலீட்டிற்கான நிதி மூலவளங்களை நல்ல முறையில் ஒன்று திரட்டுவதற்கும் வழிப் படுத்துவதற்கும் ஒரு வழியாக அமைவதைப் பணவாக்கக் கொள்கை இலக்காகக் கொண்டிருக்க வேண்டும். வங்கி நிலையங்கள், நிதிநிலையங்கள் ஆகியவற்றின் வளர்ச்சியை முன்னேற்றுவித்தல், சமுதாயத்தில் வங்கிப் பழக்கத்தை வளர்த்தல் போன்ற நோக்கங்களையும் அது கொண்டிருக்க வேண்டும்.

### வங்கிமுறையின் வளர்ச்சியும் சேமிப்புத் திரட்சியும் (Development of Banking and Mobilization of Savings)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உண்மையாகச் சேமிக்கப்படும் அளவைக் காட்டிலும் உள்ளார்ந்திருக்கும்

சேமிப்பின் அளவு அதிகமாக இருக்கிறது என்பதாலும் வரி விதித்தல், உள்நாட்டில் கடன் வாங்குதல் ஆகியவைகளைக் காட்டிலும் சேமிப்பு நிலையை அதிகரிப்பதற்கு மிகவும் திறனுள்ளதொரு முறையாகப் பணவீக்கம் அமைந்திருக்கிறது என்பதாலும் தான் பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதியாக்கத்தைச் செய்வதற்குப் பணவீக்க முறைகளைப் பயன்படுத்துவதற்கான நீதியைப் பெற்றிருக்கிறது. ஆதலால், தன்னிச்சைச் சேமிப்பை அதிகரிப்பதற்கான முயற்சிகள் ஓரளவுக்கு மேற்கொள்ளப் படுமானால் பற்றுக்குறை நிதியாக்கத்திற்கான அவசியம் அல்லது நிதியாக்கத்திற்கான பணவீக்க முறைகளின் அவசியம் அந்த அளவுக்குக் குறைவாகவே இருக்கும் மென்மேலும் அதிகமான அளவில் நாட்டில் வங்கி நிலையங்களையும் மற்றப் பல சேமிப்பு நிலையங்களையும் தோற்றுவிக்க வேண்டிய அவசியத்தையும், மக்களிடையே வங்கிப் பழக்கத்தை முன்னேற்றுவிக்க வேண்டிய அவசியத்தையும் இது சுட்டிக் காட்டுகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பணமுறைக்குள் வராத துறையின் அளவு மிகப் பெரியதாக இருக்கிறது. இத்தகைய துறை கிராமப்பகுதிகளில் பேரளவில் காணப்படுகிறது. கிராமப் பகுதிகளில் பணத்திற்குப் பதிலாகப் பண்டங்களின் மூலமாகவே சேமிப்புகள் மேற்கொள்ளப்படுகின்றன வேளாண்மைத்துறை வணிக மயமாக்கப்பட்டு, கிராம மக்கள் எல்லோரும் பரிமாற்றப் பொருளாதார முறையில் கொண்டுவரப்படும்போது, பணவாக்கச் சேமிப்பின் பெரும் பகுதியானது, அதிகமான வட்டி விகிதத்தால் கவரப்பட்டு நன்கு அமைக்கப்படாத பண அங்காடிக்குள் ஈர்க்கப் படுகிறது. கிராமப் பகுதிகளிலும்கூட வங்கிகள் நல்ல முறையில் பரவினால்தான் இத்தகைய மூலவளங்களையெல்லாம் பெறமுடியும். ஆனால், வங்கி முறை வளர்ச்சியும் பொருளாதார முன்னேற்றமும் ஒன்றோடொன்று தொடர்புடையவைகளாகும் தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரத்தில் முதலீடுகள் எல்லாம் வணிக நோக்கத்தில் பார்க்கப்படும்போது கவர்ச்சியானவைகளாக இருந்தால்தான் மூலதனமானது வங்கிகள், நிதிக் கழகங்கள் ஆகியவைகளின்மீது முதலீடு செய்யப்படும். தொழில் மயமாதல், பொருளாதார வளர்ச்சி ஆகியவைகள் தோன்றும்போது, நிதி வசதிகளுக்கான தேவையும் அதிகரிக்கிறது எனவே, இத் தேவைகளை ஈடுகட்டுவதற்காகப் புதிய வங்கிகள் தொடங்கப் பெறும். வங்கிகளின் வளர்ச்சியானது தொழில்கள் வாணிகம் ஆகியவைகளின் வளர்ச்சிக்கு உதவும். ஆனால், மிக நீண்டகாலமாகப் பொருளாதாரத்தில் தேக்க நிலையை அடைந்திருக்கும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இத்தகைய மகிழ்ச்சியான இணைப்பு இயலாதது. ஒன்று இந் நாடுகளில் மூலதனப் பற்றுக்குறை இருப்

பதோடு, தனியார் துறையானது கிராமப் பகுதிகளில் வங்கித் தொழிலை தொடங்குவதற்குஆயத்தமாக இல்லைஎன்றநிலையும் இருக்கிறது. இவை இரண்டுமாகச் சேர்ந்து இவ் வழியில் பொதுத்துறை ஆர்வத்தின் அல்லது பொதுத்துறை முயற்சியின் அவசியத்தைச் சுட்டிக் காட்டுகின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வங்கி அமைப்புகளும், தொழில் மயமாதல் என்பதும உள்ளார்ந் திருக்கும் இடையூற்றை உடைத்தெறிவதற்கான ஒரே வழி இது தான். இத்தகைய முன்னேற்றமானது உள்நாட்டுச் சேமிப்புத் திரட்சிக்கு உதவும் என்பதோடு நாட்டில் உள்ள பண அங்காடியின் வளர்ச்சிக்கும், வங்கி அமைப்பையும் நிதி அமைப்பையும் ஒருங்கிணைப்பதற்கும் உதவும். வங்கி முறை, விரிவான அடிப் படையிலானதாகவும், மிக நல்ல முறையில் அமைக்கப்பட்ட தாகவும், இருந்து பணவாக்க அதிகாரிகளுக்கும் நிதிப் பதிலாண்மை களுக்கும் இடையே மிகவும் நெருக்கமான தொடர்பும் இருந்தால் பணவாக்கக் கொள்கையானது புதிய பொருளையும் புதிய சிறப்புத் தன்மையையும் பெறும். அமைப்பில் தோற்றுவிக்கப்படும் முன்னேற்றமும், பணவாக்க நிலையங்களுக்கிடையே நெருக்கமான தொடர்பும் பணவாக்கக் கொள்கையின் திறனை மிகவும் அதிகப் படுத்துவன.

கிராமப் பகுதிகளில் வங்கி வசதிகளை விரிவாக்கும் வழியில் அரசினல் மிகவும் முக்கியமான நடவடிக்கையொன்று மேற் கொள்ளப்பட்டிருக்கிறது. நமது பொருளாதாரத்தில் வேளாண்மைத் துறையில் உள்ள மக்களின் வருமானத்தில் அதிக மான அளவிலான உயர்வு அண்மையில் தோன்றியுள்ளது. வணிகத்தின் பேரங்கள் யாவும் வேளாண்மைத் துறைக்கே சாதகமாக இருப்பதை அண்மையில் காணப்படும் விலைகளின் போக்கு தெளிவாகக் காட்டுகிறது. எனவே, நாட்டின் கிராமப் பகுதிகளில் மிக விரைவான வங்கிப் பெருக்கத்திற்குப் பெருமள விலான வாய்ப்புகள் இருக்கின்றன. ஆனல்,வங்கியின் வளர்ச்சியில் தோன்றியுள்ள முன்னேற்றம் உற்சாகம் தரத்தக்கதாக இல்லை. 1951 ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள், 1959-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் ஆகியவற்றிற்கு இடையேயுள்ள காலத்தில் செட்யூல்டு வங்கிகள், செட்யூல்டு அல்லாத வங்கிகள் ஆகிய வற்றின் அலுவலகங்கள் இந்தியாவில் 4,119–லிருந்து 4,851-க்கு அதிகரித்தது. அதிகமான அளவில் பரவலாக்குதல், நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் பரவும்படியாக அமைத்தல் ஆகியவைகளே வங்கி முறையில் இப்போது மிகவும் தேவைபடுவனவாகும். உண்மையாகப் பார்த்தால், நாட்டின் குறிப்பிட்ட பகுதிகளில் ஏராளமான அளவில் செறிவு காணப்படுகிறது. 1959-ல் காணப்

பட்ட 347 வங்கிகளில் 29 வங்கிகள் மட்டுமே அல்லது 8·4% அளவு வங்கிகள் மட்டுமே ரூ. 5 மில்லியனுக்கும் அதிகமான அளவில் செயல் மூலதனம், கையிருப்பு ஆகியவைகளாகப் பெற்றிருந்தன. மொத்த வைப்பாகிய ரூ. 16,640 மில்லியன் தொகையில் இந்த 29 வங்கிகள் மட்டும் ரூ. 15,000 மில்லியனை அல்லது மொத்த வைப்பில் 90% அளவை வைத்திருந்தன. 1952–ல் இருந்த நிலையில் இப்போது மிகச் சிறிதளவே மாற்றம் தோன்றியுள்ளது. இப்போதிருக்கும் மொத்த வங்கிகளில் 6% அளவு வங்கிகள்தான் ரூ 5 மில்லியனுக்கும் அதிகமான மூலதனம், கையிருப்புகள் ஆகியவைகளைப் பெற்றிருக்கின்றன. இத்தகைய வங்கிகள், வங்கிகளின் மொத்த வைப்பில் 86% வைப்பைப் பெற்றிருந்தன. இத்தகைய செறிவுக்கு மேலாக, நாட்டின் பல பகுதிகளிலும் காணப்படும் பொருளாதார முன்னேற்றத் தகுதியில் உள்ள வேறுபாட்டினால் மட்டும் விவரிக்க முடியாதவண்ணம் பல பகுதிகளிலும் காணப்படும் வங்கி முன்னேற்றத்தில் ஏராளமான அளவில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. முன்னேற்றத்தில் காணப்படும் இத்தகைய வேறுபாடாகிய குறையைப் போக்குவதற்காகத்தான் நாட்டின் கிராமப் பகுதிகளிலெல்லாம் கிளைகளைத் திறக்க வேண்டும் என்றதொரு தீவிர இயக்கத்தை அரசு வங்கி (State Bank) 1955–ல் தொடங்கியது.

மூன்றாவதாக வங்கி முறையில் அதிகமான அளவுக்கு இணைப்பைத் தோற்றுவிப்பதற்காகவும், வணிக வங்கிகளின் மீதான கட்டுப்பாடுகளை அதிகப்படுத்துவதற்கும் நிருவாகப் பகுதியில் ரிசர்வ் வங்கி ஒரு சில மாற்றங்களைச் செய்தது. 1949–ல் வங்கிக் கம்பெனிச் சட்டம் நடைமுறைக்கு வந்ததிலிருந்து வணிக வங்கிகளின் திறனை அதிகரிப்பது, பொதுவாக வங்கி அமைப்பின் குரல் ஆகியவைகளை உயர்த்தும் நோக்கத்துடன் வணிக வங்கிகளின் மீது மிகவும் நெருக்கமான மேற்பார்வையை மேற்கொண்டு வந்திருக்கிறது. ரூ 50,000-க்கும் குறைவான அளவில் செலுத்தப் பட்ட மூலதனம் (Paid up Capital) கையிருப்பு ஆகியவைகளை வைத்திருக்கும் வங்கிகள் இந்தச் சட்டத்தின் 11 (1)ஆம் பிரிவு, 11 (3)ஆம் பிரிவு ஆகியவற்றின்படி வணிகத்தை நடத்துவதை நிறுத்திவிட வேண்டும். அதே நேரத்தில் வைப்புகளை வைத்திருப்போரைப் பாதுகாப்பதற்கும், அதிகமான அளவிலான உறுதித் தன்மையை நிலை நாட்டுவதற்கும், மிகவும் திறம்பட்ட முறையில் செயல்பட முடியாதபடி அதிகமான அளவில் தோன்றும் வங்கி வளர்ச்சியைத் தடை செய்வதற்கும் சிறிய வங்கிகளை ஒருங்கிணைப்பதற்குமான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. தவிர, வணிக வங்கிகளை ரிசர்வ் வங்கி சோதனையிடும் முறையும் 1950ஆம்

ஆண்டு மார்ச்சுத் திங்களில் தோற்றுவிக்கப்பட்டது. இம் முறையானது, வணிக வங்கிகளின் வணிக நடவடிக்கைகளை மிக நெருக்கமாகத் தெரிந்துகொள்ள ரிசர்வ் வங்கிக்கு நல்லதொரு வாய்ப்பைத் தந்தது. முறையாக மேற்கொள்ளப்படும் இத்தகைய சோதனைகள் சிறிய வங்கிகளில் காணப்படும் சில பொதுவான குறைகளை வெளிப்படுத்தி, வங்கி முறையின் பொதுவான முன்னேற்றத்திற்கு வகை செய்தது. அண்மையில் இந்தியாவில் தோற்றுவிக்கப் பட்டுள்ள வைப்புக் காப்புத்திட்டம் (Deposit Insurance Scheme) வரவேற்கப்படத்தக்க இன்னொரு முறையாகும். வங்கி முறையின் மீது மக்கள் நம்பிக்கை வைப்பதற்கும், மக்களிடையேயுள்ள வங்கிப் பழக்கத்தை முன்னேற்றுவிப்பதற்கும் இது நீண்ட காலத்தில் நல்ல பலனைத் தரும்.

**சேமிப்பை வழிப்படுத்துதல் (Canalisation of Savings)**

ஒரு நாட்டில் கிடைக்கத்தக்க சேமிப்பை ஒருங்கிணைக்கத் தக்க வழிகளைத் தருவதன் மூலம் பணவாக்கக் கொள்கையானது பொருளாதார முன்னேற்றத்திற்குத் துணைபுரியும் என்பதோடு அவ்விதம் ஒருங்கிணைக்கப்பட்ட சேமிப்புகளைத் தகுதியான முதலீட்டு வழிகளில் வழிப்படுத்துவதன் மூலமாகவும் பொருளாதார முன்னேற்றத்திற்குத் துணைபுரிய முடியும். நுகர்வின்மீது முனைப்பான செலவுகள் என்ற வடிவத்திலும் பயன்தராத முதலீடுகள் என்ற வடிவத்திலும் மூலவளங்கள் வீணாவதை பணவீக்கத் தடுப்பு முறைகள் எந்த அளவுக்குத் தடை செய்கின்றனவோ, அந்த அளவுக்கு அம் முறைகள் பொருளாதார முன்னேற்றத்திற்கு மறைமுகமாக உதவி செய்கின்றன. ஆனால், பாங்கு வீதம் வெளி அங்காடி நடவடிக்கைகள் போன்ற கணியக் கட்டுப் பாட்டு முறைகளின் (Quantitative Measures) முக்கியமான குறை, அவைகளின் விளைவுகளில் அவைகள் பேதம் காட்டாதவைகளாக இருப்பதே. பொருளாதாரத்தின் ஏதாவதொரு துறையில் அல்லது ஒன்றுக்கும் அதிகமான துறைகளில் பணவீக்கமானது அமிதப் பெருக்கத்தைத் (Over expansion) தோற்றுவிக்குமானால் மரபு வழிக் கட்டுப்பாட்டு முறைகளினால் இத் துறைகளைத் தடுப்பதும், அதே நேரத்தில் அமுக்கப்பட்ட மற்றத் துறைகளை ஊக்குவித்தலும் இயலாததாக இருக்கின்றது. பயன்படுத்தப்படும் பணவாக்க முறைகள் அரை மனதுடன் ஆனவைகளாகவும், அதன் காரணமாக எதிர்பார்க்கும் விளைவுகளைத் தரத்தக்கனவாக இல்லாமலும் இருக்குமானால் சமநிலையற்ற பெருக்கம் தொடர்ந்து பெருகநேரிடும். அதற்கு மாறாக மிகவும் கண்டிப்பான பணவாக்க முறைகள் பயன் படுத்தப்பட்டால் பொருளாதாரத்தின் எல்லாத்துறைகளையும் எந்த விதமான பாகுபாடும் இல்லாமல் அவைகள் பாதிக்க மிகும்

உயர்ந்த அளவிலான வட்டிவிகிதம் பலவீனமான தொழில்களையும் சிறிய நிறுவனங்களையும் பேரளவுக்குப் பாதிக்கிறது. கடன்கட்டுப் பாட்டினால் பேரளவில் தடைசெய்யப்படத்தக்க நிறுவனங்கள் யாவும் பொருளாதார நோக்கில் உறுதியாக விலக்கப்படத்தக்க நிறுவனங்களாகத்தான் இருக்கவேண்டுமென்ற அவசியம் இல்லை. எனவே,பொருளாதார முன்னேற்றம் என்ற அடிப்படையில் பண வாக்கக் கொள்கையானது இரண்டு தன்மைகளைக் கொண்டிருக்க வேண்டும். ஒரு புறத்தில் அது பணவீக்கத்தைத் தடை செய்ய வேண்டும். பொருளாதார வளர்ச்சிக்கு உதவத்தக்க வகையில் இல்லாத தொழில்களின் பெருக்கத்தைத் தடை செய்வதன் மூல மாக இதில் வெற்றியைக் காணவேண்டும். மறுபுறத்தில் தவறான முதலீட்டு வழிகளில் செல்வதிலிருந்து சேமிப்பைத் திருப்பிவிட வேண்டும் என்பதோடு உண்மையிலேயே நன்மை தரத்தக்க நடவடிக்கைகளில் சேமிப்பை வழிப்படுத்த வேண்டும். இதையே இன்னொரு விதத்தில் குறிப்பிட்டால், பணவாக்கக் கொள்கை யானது கடன் தன்மைக் கட்டுப்பாட்டு இயல்பை உடையதாகவும் பொருளாதாரத்திற்குப் பயன்தரத்தக்க செலவுகள், பயன்தராத செலவுகள் என்பனவற்றை வேறுபடுத்திக் காணத்தக்கதாகவும், பொருளாதாரத்திற்கு நன்மை தரத் தக்கனவற்றை ஆதரிப்ப தாகவும், நன்மை தரத்தகாதவைகளை எதிர்ப்பதாகவும் இருக்க வேண்டும்.

அண்மை ஆண்டுகளில் கடன் தன்மைக் கட்டுப்பாட்டு முறைகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள், வளர்ச்சியடைந்த நாடுகள் ஆகிய இருவகை நாடுகளிலுமே மிகவும் புகழ் பெற்ற முறைகளாக மாறியிருக்கின்றன. 1951-52ஆம் ஆண்டிலிருந்து கடன் கட்டுப்பாட்டிற்கானதொரு வழியாகக் கையிருப்பை மாற்றும் ஒரு முறையானது நியூசிலாந்து, ஜெர்மனி, கொலம்பியா, பிரேசில், பெரு, பிரான்ஸ், ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் பேரளவில் பயன்படுத்தப்பட்டுவருகிறது. தன்னிச்சையாகவே கடனைக் கட்டுப்படுத்திக்கொள்ளும் திட்டம் (Voluntary Credit-Restriant Programme) ஒன்று 1951ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் ஐக்கிய அமெரிக்க நாட்டில் துவக்கப்பட்டது. சுவீடன் நாடும் பேரளவில் இந்த முறையையே சார்ந்திருந்தது. பண வீக்கத்திற்கான உள்ளார்ந்த மூலங்களாக இருக்கக்கூடிய குறிப் பிட்ட வகை வணிகங்களுக்கு வங்கிகளால் தரப்படும் கடன்கள், நார்வே, கிரீஸ், சில்லி, பெராகுவே ஆகிய நாடுகளில் தடை செய்யப்பட்டன. 1953ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் ஜப்பானின் வங்கியாளர்களின் கழகத்தின் நாட்டு அமைப்பு, (The National Federation of Bankers' Association in Japan)

ஊக வாணிக நோக்கத்திற்காகவும், உற்பத்தியல்லாத நோக்கங்களுக்காகவும் வங்கிகளின் கடன்களைக் கட்டுப்படுத்தும் தன்னிச்சை முறைகளைக் கையாள முடிவு செய்தது. இதைப்போலவே ஆஸ்திரேலியாவின் காமன்வெல்த் வங்கி (Common Wealth Bank of Australia) அண்மையில் முதலீட்டுச் செலவுத் திட்டங்களுக்கான புதிய கடன்களைப் பொறுத்த மட்டிலும் மிகவும் குறைவான அளவு தாராள மனப்பான்மையைக் கடைப்பிடிக்குமாறு வணிக வங்கிகளை வற்புறுத்தியது. வணிக வங்கிகளுக்கு ஆணைகளும் வேண்டுகோள்களும் விடும் முறை உள்ளார்ந்திருக்கும் அறிவுரை வேண்டுகோள் முறையானது இப்போது பணவாக்கக் கொள்கையின் இன்றியமையாத பகுதியாக இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, கனடா, நியூசிலாந்து, நெதர்லாந்து, நார்வே, சுவீடன், ஆகிய நாடுகளில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

போர்க்காலம், பின்னர் 1946ஆம் ஆண்டு ஆகிய இரு நேரங்களில் வங்கிக் கடன் நெருக்கத்தை ஒழுங்குபடுத்துவதற்காக ஆணையிடும் முறையை இந்தியாவில் ரிசர்வ் வங்கி பின்பற்றியது. ஆனால், 1949ஆம் ஆண்டில்தான் இவ் வகைக் கட்டுப்பாட்டைப் பயன்படுத்துவதற்குத் தேவையான சக்திகள் யாவும் வங்கிக் கம்பெனிச் சட்டத்தின் (Banking Companies' Act) மூலம் இந்தியாவின் ரிசர்வ் வங்கிக்குத் தரப்பட்டது. பின்னர், 1956ஆம் ஆண்டின் ரிசர்வ் வங்கித் திருத்தச் சட்டத்தின்படி, (Reserve Bank Amendment Act of 1956) செட்யூல்டு வங்கிகளின் கையிருப்புத் தேவைகளை மாற்றுவதன் மூலம் கடன் கட்டுப்பாட்டு முறைகளை மேற்கொள்வதற்கான சக்திகளை வங்கி பெற்றது. இத்தகைய சக்திகளை நிரம்பப் பெற்று வலிமை அடைந்த பின்னர், பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகளைப் பயன்படுத்தத் தொடங்கியது. 1956ஆம் ஆண்டு மேத் திங்கள் 1 ஆம் நாளன்று, நெல், அரிசி ஆகியவற்றின் அடிப்படையில் அதிகமான அளவுக்குக் கடன் தருவதிலிருந்து விலகிக் கொள்ளுமாறு வங்கிகளுக்கு ஓர் ஆணை பிறப்பித்தது. இத் தடை 1956ஆம் ஆண்டின் இறுதியில் நீக்கப்பட்டது. ஆனால், 1959ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள் 9ஆம் நாளன்று இது மறுபடியும் புகுத்தப்பட்டது. அதிலிருந்து நெல் அரிசி, கோதுமை, மற்றத் தானிய வகைகள், உழுந்து, பருப்புகள், நூல் உள்ளிட்ட பருத்தித் துணி வகைகள் போன்ற பல பொருள்களின் அடிப்படையில் வங்கிகளின் கடன்களைக் கட்டுப்படுத்துவதற்குப் பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகள் பேரளவில் பயன்படுத்தப்பட்டன. ஊக வாணிக நோக்கங்களின் நிதியாக்கத்திற்காகத் தரப்படும் கடன்களைக் கட்டுப்படுத்துவதற்காக ஒரு சில கடன் பத்திரங்களின் அடிப்படையில் வழங்கப்படும் வங்கிக் கடன்

களின்மீதும் பின்னர் தடைகள் விரிவாக்கப்பட்டன. ஆனால், எந்த நோக்கத்திற்காக இத்தகைய முறைகள் யாவும் கடைப்பிடிக்கப்பட்டனவோ அந்த நோக்கத்தை இம் முறைகளால் வெற்றியுடன் பெற முடியவில்லை.

பல நாடுகளிலும் கடன் தன்மைக் கட்டுப்பாட்டு முறைகள் நிலைத்திருக்கின்றன என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனால், பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகளின் வெற்றி ஊக்கம் தரத்தக்கதாகக் காணப்படவில்லை. பங்கு அங்காடி கடன்களைப் (Share Market Credit) பொறுத்த மட்டிலும் கடன்கட்டுப்பாடுகள் ஐக்கிய அமெரிக்க நாட்டில் நல்ல வெற்றியைத் தந்தது எனக் குறிப்பிடப்படுகிறது. ஆனால், அதே நாட்டில் நுகர்வோரின் தவணை முறைக் கடனைக் கட்டுப்படுத்தும் முறை மிகவும் குறைந்த அளவிலேயே வெற்றியைப் பெற்றிருக்கிறது. பிரான்ஸ் நாட்டில் பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகள் மிகவும் பயனுள்ள நிலையில் காணப்படவில்லை. இங்கிலாந்து நாட்டில் மிகவும் அதிகமான அளவிலான வங்கிச் செறிவு இருந்ததாலும், இங்கிலாந்து வங்கிகளிடையே பொதுக்கடமையுணர்வு மிகவும் செறிவான அளவில் இருந்ததாலும்தான் இங்கிலாந்தில் பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகள் வெற்றியைத் தந்தன. இதற்கு மாறாக, ஆஸ்திரேலியாவில் கடைப்பிடிக்கப்பட்ட கடன் தன்மைக் கட்டுப்பாட்டு முறைகள், வணிக வங்கிகளின் நடவடிக்கைகளில் தேவையற்ற அதிகமான அளவில் மையவங்கி தலையிடுவதாக இருந்ததாகவும் சலிப்புத் தரத்தக்க அளவிலான சட்டதிட்டங்களைக் கொண்டுள்ளதாக இருந்ததாகவும் குறை கூறப்பட்டது. மேலும், வணிகத்தை மற்றப் பல நிதிக்கழங்களுக்குத் திருப்பிவிடும் போக்கைப் பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகள் பெற்றிருந்தன என்றும் சொல்லப்படுகிறது. வணிக வங்கிகளின் நடவடிக்கைகளில் மிகவும் செறிவான அளவுக்கு மைய வங்கியைப் பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகள் உள்ளார்ந்திருக்கச் செய்கின்றன என்பதிலும், வங்கி இயந்திரமானது மென்மேலும் செலவுள்ளதாகவும், சிக்கலானதாகவும் மாறிவிடுகிறது என்பதிலும் அதிகமான அளவு பொருள் இருக்கின்றது. ஊக வணிகத்திற்காகப் பெறப்படும் கடன்கள், ஊக வணிகமற்றவைகளுக்காகப் பெறப்படும் கடன்கள் என்ற இரண்டையும் வேறுபடுத்துவதும், வங்கிச் செலாவணியை இயல்பாகப் பயன்படுத்திக் கொள்ளுதல், இயல்பற்ற முறையில் அதிகமான அளவில் பயன்படுத்திக்கொள்ளுதல் ஆகிய இரண்டையும் வேறுபடுத்துவதும் பணவாக்க அதிகாரிகளால் செய்யத்தக்கவைகள் அல்ல. சிறிய அளவில் செயல்படும் தனியார் கம்பெனிகள் அவைகளுக்குத்

தேவையான அதிகப்படியான நிதியைத் தேடிக்கொள்வது மிகவும் சிரமமாக இருக்கிறது என்று ஒரு சில நேரங்களில் குறையும் கூறப்படுகின்றது. நாட்டின் மைய வங்கி அல்லது பணவாக்க அதிகாரிகள் கடன்களைத் தருவதில்தான் தங்களது நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்ள முடியும். ஆனால், உண்மையான முதலீட்டு முடிவுகள் கடன் வாங்குபவரால்தான் உண்மையாக மேற்கொள்ளப்படுகிறது. இது வங்கி முறைக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது என்ற குறையும் சுட்டிக்காட்டப்படுகிறது. இது தவிர, பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகள் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும் என்று குறிப்பிடுவதும் சரிதானா என்ற வினா தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது. அதாவது, ஒரு சிலவற்றிற்கு மட்டும் சாதகமான நடத்துமுறை இருப்பதனால் மட்டும் பொருளாதார முன்னேற்றம் தோன்றிவிட முடியாது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அதிக அளவு உற்பத்தியைப் பெறுவதற்கான தடைகள் ஏராளமாக இருக்கின்றன. இத் தடைகளின் நீக்கம்தான் பொருளாதார முன்னேற்றத்தை உறுதி செய்யத்தக்கதாகும். இத்தகைய பணவாக்க முறைகளைப் பயன்படுத்தும்போது அவைகள் நிதிச் செய்திகளிலும், வணிகச் செய்திகளிலும் அரசியல் தன்மையைத் தோற்றுவிக்கின்றன. இத்தகைய தன்மை தோன்றுவது பொதுவாக இந் நாடுகளில் விரும்பப்படுவதில்லை. அதோடு இந்து உள்ளார்ந்திருக்கூடிய கட்டுப்பாடுகளும், ஒழுங்கு முறைப்படுத்தல்களும், எந்த விதமான தவறான கருத்துகளும், எதிர்ப்புகளுமில்லாமல் ஏற்கப்படவும்மாட்டா.

இத்தகைய குறைகள் பல இருப்பினும் இன்றுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறைகள் அதிகமான அளவு புகழைப் பெற்றிருக்கும் என எதிர்பார்க்கலாம். வளர்ந்துவரும் பொருளாதாரம் ஒன்று பணவீக்கம் என்ற பயத்திற்கு உட்படுத்தப்படும்போது, பொருளாதார வளர்ச்சிக்கும் உறுதித் தன்மைக்கும் மிகவும் குறைந்த அளவிலான இடரைத் தோற்றுவிக்கும்வண்ணம் அப் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தத்தக்க முறைகள்தான், இந் நாடுகளுக்கு இப்போது மிகவும் தேவைப்படுவனவாக இருக்கின்றன. எந்த அளவுக்குப் பொறுக்குக் கடன் கட்டுப்பாடுகளை இலக்காகக்கொண்டிருக்கின்றனவோ, அந்த அளவுக்கு நல்ல விளைவுகளைத் தரலாம் என்று எதிர்பார்க்கப்படுகின்றன. அவைகள் தீய விளைவுகளையும் தோற்றுவிக்கலாம். ஆனால், அத் தீய விளைவுகளின் அளவு பாங்குவீத முறையினால் தோன்றக் கூடியதைக் காட்டிலும் குறைவானதாகவே இருக்கும். எந்தெந்த நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்திலும் வளர்ச்சியிலும் அரசுகள் மிகவும் முக்கியமான பங்காற்றிவருகின்றனவோ,

அந்தந்த நாடுகளில் எல்லாம் பொறுக்குக் கடன்களையே பயன்படுத்தினால் அவைகள் அரசியல் சுதந்திரத்திற்குத் தீமை விளைவித்து விடும் என்று சொல்லப்படும் கருத்து ஆதாரமற்றதாக இருக்கும். திட்டமிட்ட பொருளாதாரம் கடன்கட்டுப்பாடுகளையும், கடன் தடைகளையும் உள்ளார்ந்திருக்கின்றன என்பதோடு இத்தகைய தடைகளையும், கட்டுப்பாடுகளையும் மிகவும் அவசியமானவைகளாகவும் ஆக்குகின்றன. இது தவிர, விரும்பப்படும் வழிகளில் வளர்ச்சியை முன்னேற்றுவிப்பதற்காகக் கடன் தன்மைக் கட்டுப்பாட்டு முறைகளைப் பயன்படுத்துவதற்கான வாய்ப்பும் அதிகமான அளவில் இருக்கிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தொழில் மயமாதல் அதிகரிக்கும்போதும், கடன் கழகங்களில் முன்னேற்றம் அதிகரிக்கும்போதும், நிருவாகத் திறன் அதிகமாகும் போதும், பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்காக மட்டுமல்லாமல், பொருளாதார முன்னேற்றத்திற்கான உறுதியானதொரு வழிகாட்டியாக இருப்பதற்காகவும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் கடன் தன்மைக் கட்டுப்பாட்டு முறைகள் மிகவும் பரவலான முறையில் பயன்படுத்தப்படும்.

# 6. வரிக் கொள்கை

## (Tax Policy)

தலையிடாக் கொள்கை முழுமையாகப் பரவியிருந்த தொடக்கநிலைப் பொருளியல் புலவர்கள் காலத்திலிருந்து நாடு ஒன்றின் பொருளாதார வாழ்வில் அரசு ஆற்றவேண்டிய பங்கைப் பற்றிப் பொருளாதார நிபுணர்களின் நோக்கம் பேரளவிலான மாற்றங்களைப் பெற்றுவந்திருக்கிறது. சட்டத்தையும் அமைதியையும் நிலை நாட்டுதல், அரசியலில் நிலையான தன்மையை உறுதி செய்தல், போக்குவரத்துச் சாதனங்களில் முன்னேற்றத்தைத் தோற்றுவித்தல் ஆகியவைகள்தான் அரசின் கடமைகளாக இருக்க வேண்டுமென ஆடம் ஸ்மித் கருதினர். வரி விதித்தலையும் பொதுச் செலவு செய்தலையும் எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்கு மிகச் சிறிய அளவிலிருக்கச் செய்யவேண்டும் என்பது அப்போது நிலவிவந்த கொள்கையாகும். பத்தொன் பதாம் நூற்றுண்டில் இத்தகைய சாதுவான கொள்கை கைவிடப்பட்டு, பகிர்வு நீதி என்ற உயர்ந்த நோக்கம் தோன்றியது. செல்வம், வருமானம் ஆகியவற்றைச் சமமாகப் பகிர்ந்தளித்தல்' மக்களின் மொத்த மனநிறைவை உச்ச நிலையிலாக்குதல் ஆகிய இரண்டையும் உறுதி செய்யும்வண்ணம் பொதுச் செலவு, வரிக் கொள்கை ஆகியவற்றிற்கு வடிவம் கொடுக்க வேண்டிய அவசியத்தைப் பெந்தாம் (Bentham) என்பவரும், பயன்பாட்டுக் கோட்பாட்டினரும் (Utilitarians) குறிப்பிட்டுக் காட்டினர்கள். 1930ஐச் சேர்ந்த ஆண்டுகளில் உலக நாடுகளில் பொருளாதார மந்தம் தோன்றியது. தடையற்ற தன் முயற்சிப் பொருளாதரத்தின் குறைகளைக் 'கீன்ஸ்' கண்டுபிடித்தார். இவை இரண்டும் சேமிப்பின் அதிகரிப்போடு முதலீட்டு நிலையையும் அதிகமான அளவில் நிலைநிறுத்த வேண்டிய அவசியத்தை நோக்கி கவனத்தைத் திருப்பின. அரசின் செலவும், வரிக் கொள்கையும் மூலவளங்களைத்

திரட்டுதல், இம் மூலவளங்களின் பகிர்வின் முறையிலும் மூலவளங்களைப் பயன்படுத்துவதிலும் மாற்றங்களைத் தோற்றுவிக்கின்றன என்ற உண்மை உணரப்பட்டது. அவ் வுண்மையானது, பொதுப் பொருளாதாரத்தின் பணியாற்றும் பகுதிக்கான (Functional Aspect) சிறப்பிடத்தை மாற்றியது. பணியாற்றும் நிதியாக்காக் (Functional Finance) கொள்கைப்படி வரிக் கொள்கையானது, (பொருளாதார உறுதித் தன்மையை அல்லது உறுதியற்ற தன்மையை நிர்ணயிக்கும் மிக முக்கியமான இரண்டு காரணிகளான) சேமிப்பு, முதலீடு ஆகிய இரண்டிலும் இயக்க விளைவுடையதாக இருக்கும். பொருளாதார மந்தக் காலத்தில் தனியார் துறைச்செலவில் தோன்றும் சரிவை ஈடுசெய்யும்வண்ணம் பொது முதலீட்டின் விளைவுகள் இருக்கும் என்ற நிலையும், தகுதியான வரிக் கொள்கையானது பொதுச் சேமிப்பை விரிவாக்குலதற்கு உதவும் என்ற நிலையும் இருக்கும் வரை சேமிப்பு, முதலீடு ஆகியவைகளைச் சமன் செய்வதற்கு அரசுக்கு முடியுமென்பது மட்டுமல்லாமல், பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கும் அது உதவும்.[1]

வளர்ச்சியடைந்த பொருளாதாரங்களின் நோக்கங்களிலிருந்து வேறுபட்டதாக உள்ளதொரு நோக்கத்தைப் பெறும் இலக்கைக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பணவாக்கக் கொள்கை பெற்றிருப்பதைப் போல, வரிக் கொள்கையும்;வேறுபட்டதாகப் பெற்றிருக்கவேண்டும். வளர்ச்சியடைந்த நாடுகளின் மொத்த முதலீட்டின் பெரும் பகுதிக்குத் தனியார் துறையே பொறுப்பாக உள்ளது. இத்தகைய முதலீட்டிற்கான நிதியாக்கத்திற்குத் தேவையான சேமிப்பைத் தோற்றுவிக்கத் தனியார் துறையில் முடிகின்றது. ஆனால், பெரும்பாலான ஏழ்மை நாடுகளில் தனியார் துறை நன்கு வளர்ச்சியடையாததாக இருக்கிறது. மேலும், வளர்ச்சி விகிதம், நுகர்வு நிலை ஆகிய இரண்டிற்கு மிடையேயான உடன் தொடர்பு மிகவும் நெருக்கமாக இல்லை. எனவே, வளர்ச்சியடைந்த நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் பொதுப் பொருளாதாரத்தின் பங்கு மிகவும் திடமானதாக இருக்கவேண்டும். தவிர, அரசாங்கத்தின் அதிகப்படியான செலவு 'மாற்றும்' மாதிரியாக ('Transfer' type) இல்லாமல், 'உண்மை' மாதிரியாக ('Real' type) இருக்க வேண்டும். இது தவிர, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிலும் கிடைக்கத்தக்க பண்டங்களின் அளிப்பில் பெரும்பகுதி இறுக்குமதிகளிலிருந்து கிடைக்கிறது. செலவு நிலையை அதிகரிப்பதென்பது பேரளவு இறக்குமதிகளுக்கே வகை செய்கிறது. இதன் காரணமாக, முன்னேற்றம் அடைந்த நாடு

[1] Gurley, John G., 'Fiscal Policy in a Growing Economy, '*Journal of Political Economy*, 1953, p. 523.

களில் வெற்றியடைந்திருக்கக் கூடிய உறுதித் தேவையைத் தூண்டி விடும் கொள்கை. பின் தங்கிய நாடுகளில் கடைப்பிடிக்கப்பட்டால் வெளிநாட்டில் உள்ளஉற்பத்தியாளர்களுக்குநன்மையைத்தரலாம். எனவே, வரிக் கொள்கையின் நோக்கம் நுகர்வு நிலையை அதிகரிப் பதற்காக இருக்காமல் நாட்டின் சேமிப்பின் அளவை அதிகரிப்ப தற்காகவும், இச் சேமிப்புகளை உற்பத்தி செய்யத்தக்க முதலீடு களில் மாற்றுவதற்காவும் இருக்க வேண்டும். பேரளவுச் சேமிப்பு குறிப்பிட்ட அளவிலிருக்கும்போது, நிதித்தேவைகளைப் பொறுத்த மட்டிலும், வரிநிலே, கடன் அளவு ஆகிய இரண்டையும் சரிசெய்தல் என்பதைச் செய்யமுடியும். ஆனல், ஏழ்மை நாட்டில் நிலைமை தலைகீழாக இருக்கிறது. அதிகரித்த அரசுச் செலவுக்காக அதிகமான வரிவிதித்தல் என்பதுதான்·வரிசைக் கிரமமாக இருக்க வேண்டுமே தவிர எதிர் வரிசையில் இருக்கக் கூடாது.

பொருளாதார நடவடிக்கையை நல்ல வழியில் செலுத்தும் என்ற வகையிலும் அதனைத் தூண்டிவிடுவதற்காகவும் அல்லது தோற்றுவிப்பதற்காகவும் உள்ளதொரு வழி என்ற வகையிலும் பணவாக்கக் கொள்கையைவிட வரிக் கொள்கை மிகவும் சிறப் புடையது. கடன் ஒட்டம், பண அளிப்பு ஆகியவைகளை ஒழுங்கு படுத்துவதன் மூலம் தனி மனிதர்களின் சேமிப்பு முடிவுகள் செல வழிக்கும் முடிவுகள்·ஆகியவைகளில் செல்வாக்குடையதாக இருக்க முயலுகிறது என்பதால் பணவாக்கக் கொள்கையின் விளைவு மறை முகமானதாக இருக்கிறது. ஆனல். வரிக் கொள்கை பொருளாதார நடவடிக்கையை நேரடியாகவே .பாதிக்கிறது. பொதுச் செலவின் மூலம் பொருளாதாரத்தின் செலவு நிலை ஒழுங்கு படுத்தப்படும் அதே நேரத்தில் வரிகள் என்ற வடிவத்திலும், கடன்கள் என்ற வடிவத்திலும் மூலவளங்களை அரசாங்கத்திற்கு மாற்றுவதனல் வரிகளைச் செலுத்தும் நபர்கள், கடன்களைக் கொடுக்கும் நபர்கள் ஆகியோரின் செலவழிக்கும் வாய்ப்பு குறைக்கப்படுகிறது. பண வாக்கக் கொள்கையோடு ஒப்பிடும்போது, வரிக் கொள்கைகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மிகவும் சிறப்புப் பெற்றவை களாகும் இந் நாடுகளில் பணவாக்க இயந்திர அமைப்பு நல்ல முறையில் வளர்ச்சி பெருதது பணவாக்கக் கருவிகள் நின்றுநின்று வேலைசெய்வது ஆகியவைகளே இதற்குக்காரணங்களாகும். ஆனல், வளர்ச்சி பெற்ற நாடுகளில் இருப்பதைப் போன்று நுட்பமானவை களாக இல்லாவிட்டாலும் வரி முறையை முழு மன நிறைவு தரத்தக்க வகையில் செயல்படுத்த முடியும்.

பொது முதலீட்டுச் செலவு, மிகவேகமாக அதிகரித்துவரும் பாதுகாப்புச் செலவு, நிருவாகச் செலவில் அதிகரிப்பு ஆகியவைகள்

தான் கடந்த சில ஆண்டுகளில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொதுச் செலவின் பேரளவிலான அதிகரிப்புக்குப் பொறுப்பான பெரும் காரணிகளாக இருக்கின்றன. அரசாங்கத்தின் முதலீட்டுச் செலவுகளை அதிகரிக்கச் செய்வதில் செயல்படும் சக்திகள் யாவும் பின்வரும் ஓர் அத்தியாயத்தில்[1] விரிவாக விளக்கப்பட்டுள்ளன. அரசியல் தன்னுட்சியைப் பெற்றது. அந்தந்த நாடுகளின் அரசுகள், தங்களைத் தாங்கள் பாதுகாத்துக் கொள்ளும் முழுப் பொறுப்பையும் பேரரசுகளிலிருந்து பெற்றதுஆகியவற்றின் காரணமாக நாட்டின் பாதுகாப்புச் செலவுகள் மிக அதிகமான அளவுக்கு உயர்ந்தன. அரசியலின் தனியுரிமை நிலையானது, வெளிநாடுகளில் சார்புகளுக்கான பேரளவுச் செலவை உள்ளார்ந்திருக்கிறது வெளிநாடுகளில் தூதரகங்கள், தூதுக்குழுக்கள், பிரதிநிதி குழுக்கள் ஆகியவற்றின் செலவுகளும், பன்னுட்டு மாநாடுகளுக்கான செலவுகளும் அதிகரித்தன பொருளாதார வளர்ச்சி என்ற நோக்கலிருந்து பார்க்கும்போது, இத்தகைய செலவுகளில் பெரும் பகுதி பயனற்றதாகும். ஆனல் நாடுகளின் அரசுகள் இச் செலவுகள் சுதந்திரமான நிலையை நிலைநாட்டிக் கொள்வதற்கும், பன்னுட்டு அரசுகளின் பண்பாட்டு ஒத்துழைப்புகளில் அவைகளின் நிலையை உயர்த்திக் கொள்வதற்கும் மிகவும் அவசியமானவைகள் என்று கருதுகின்றன. கிழக்காசிய நாடுகளில் பெரும்பாலான நாடுகளில் அரசியல் உறுதியின்மை பாதுகாப்பின்மை என்ற பொது உணர்வு ஆகியவற்றின் காரணமாகப் பாதுகாப்புச் செலவு மிகவேகமாக அதிகரித்துள்ளது. மொத்த நாட்டு விளைவில் ஒரு பகுதியாகப்பார்க்கப்படும் போது, பாதுகாப்புச் செலவானது பர்மாவில் 1950-ல் 3·8%-லிருந்து 1958-ல் 7·7%-கும்; சிலோனில் 0·2%-லிருந்து 1·1%-கும், இந்தியாவில் 1·6%-லிருந்து 2·1%-கும், தாய்லாந்தில் 1·4%-லிருந்து 2· %-கும் அதிகரித்திருக்கின்றது. இதற்கு மாறாக மெயின்லாந்து, சீனு, ஜப்பான் ஆகிய நாடுகளில் பாதுகாப்புச் செலவுக்கான பகுதி குறைந்திருக்கிறது. வெளிநாடுகளில் பிரதிநிதி அமைப்புகளைப் பொறுத்தமட்டிலும் 1950, 1958 ஆகிய ஆண்டுகளுக்கிடையேயான அதிகரிப்பு பர்மா இந்தோனேசியா, பாக்கிஸ்தான் ஆகியவற்றில் ஏறத்தாழ 150 விழுக்காடாகவும், சிலோனில் 2 விழுக்காடாகவும் இருந்தது. ஆனல், இந்தியாவில் இதன் அளவு இரட்டிப்பானது.

நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் அதிகரித்துவரும் அரசாங்கத்தின் பங்கு. அரசுகளின் அதிகரித்துவரும் செயல்கள் ஆகியவைகள் பொது நிருவாகத்தின் செலவு மிக வேகமாக அதி

1 அத்தியாயம் 11

கரித்துவருவதை விளக்குகின்றன. நாட்டின் பாதுகாப்பிற்கான செலவு நீங்கலாகப் பொதுப்பணிகளின் மீதான செலவு, ECAFE நாடுகளுக்கிடையே ஜப்பானில் (1957) மொத்தச் செலவு அளவில் 5 விழுக்காட்டிலிருந்து மலேசியக் கூட்டாட்சியில் 28%அளவுக்கான வீச்செல்லேயைப் பெற்றிருந்தது. இது சிலோனில் 12%,இந்தியாவில் 1%, பாக்கிஸ்தானில் 17% இருக்கிறது இந்தியாவில் பொதுச் செலவின் போக்கு விளக்கிக் காட்டுவது போல. வளர்ச்சியடைந்து வரும் பொருளாதாரம் ஒன்றில் இத்தகைய செலவின் பெருக்கம் தவிர்க்க முடியாதது என்ற உண்மையை மறுக்க முடியாது. உள்நாட்டு நிருவாகம், பாதுகாப்புப் பணிகள், வருவாயின்மீதான நேரடித்தேவை. மற்றவைகள் என்ற வருவாய்ச் செலவின் நான்கு தலைப்புகளில் முதல் இரண்டு : தலைப்புகளின் அதிகரிப்பு மிகவும் அதிகமான அளவில் இருக்கிறது. அறிவியல் துறை, கல்வித்துறை, மருத்துவத்துறை ஆகியவைகளில் ஏற்படும் அதிகரித்த செலவின் காரணமாகவே பெரும்பாலும் உள்நாட்டு நிருவாகத்தின் செலவில் அதிகரிப்பு தோன்றியுள்ளது. தவிர, அரசாங்கம் தொழில் துறையிலும் புகுந்துள்ளது. இதன் காரணமாகத் தொழில், அளிப்பு ஆகியவைகளுக்கான பங்கீட்டில் குறிப்பிடத்தக்க அளவிலான பெருக்கம் தோன்றியுள்ளது. வேலேகளின் அதிகரிப்பு, புள்ளியல், தகவல், சமுதாய நலத்திட்டங்கள் மற்றும் இவை போன்ற பலபுதிய துறைகளேத் தோற்றுவித்தது ஆகியவைகளின் காரணமாக உள்நாட்டு நிருவாகத்தின் செலவு பேரளவில் உயர்ந்துள்ளது. துறைகளின் எண்ணிக்கையும் அளவும் அதிகரிக்கும் போது, பார்க்கின்சன் விதிப்படி (Parkinson's Law) நிருவாகப் பணியில் ஈடுபட்டுள்ள நபர்களின் எண்ணிக்கையும் அதிகரித்தது. இதன் காரணமாகப் பொதுப் பணிகளில் கூலிப் பட்டியலின் அளவும் குறிப்பிடத்தக்க அளவில் அதிகரித்துள்ளது, இருப்பினும் பொதுப் பணியின் தரமும், தன்மையும் அவற்றின் செலவு அதிகரிப்பிற்கேற்றாற் போன்று அதிகரிக்கவில்லே என்ற உணர்வு இருக்கிறது "குறைந்த வளர்ச்சியுடை பொருளாதாரங்களில் உள்ள தேவையற்ற அளவுக்குப் பெரியதாக உள்ள அரசுச் சாதனங்கள் அந்நாடுகளில் உள்ள மறைமுக வேலேயின்மையைக் காட்டும் அளவையாக இருக்கிறது. அவைகள் திறமையற்ற முறையிலும் மிக மெதுவான அளவிலும் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன" என்ற கருத்தில் அதிகமான உண்மை இருக்கின்றது.[1] வளர்ச்சிச் செலவுக்கு அதிகமான அளவு மூலவளங்கள் கிடைக்கச் செய்யும் வண்ணம் நிருவாகத் திறமையை அதிகரிப்பது

[1] Van Philips Paul, A. M. *Public Finance and Less Developed Economy with Special Reference to Latin America*, Martinus Nijhoff, 1957, p.854.

மிகவும் தவிர்க்கப்பட முடியாததாகும். அதாவது, அந் நாடுகளில் உள்ள நிதி மூலவளங்களின் பற்றுக்குறை நோக்கில் பார்க்கும் போது இது தவிர்க்கப்பட முடியாததாகும்.

அரசின்மீதான அதிகரித்துவரும் தேவையை ஈடுகட்டு வதற்கு அரசாங்கத்தின் கைவசமிருக்க வேண்டிய நிதி மூலவளங் களின் அளவு அதிகமான அளவுக்கு அதிகரிக்கப்பட வேண்டும். அரசுச் செலவின் இறுதி மூலம் நாட்டுச் சேமிப்பே. மொத்த உற்பத்திக்கும் மொத்த நுகர்வுக்கும் இடையேயான வேறுபாட்டு அளவுதான் நாட்டுச் சேமிப்பு எனப்படுகிறது. ஆனல், பொருளா தாரம் ஒன்றில் உள்ளார்ந்திருக்கும் சேமிப்பின் அளவு நிலையாக இருக்கும்போது அரசுக்குக் கிடைக்கத்தக்க உண்மையான சேமிப் புத் தொகையானது இம் மூலவளங்கள் எவ்வளவு திறமையுடன் ஒன்று சேர்க்கப்படுகின்றனவோ அத் திறமையைப் பொறுத்து அமைகின்றது. தேவையோடு ஒப்பிடுகையில் சேமிப்பின் அளவு குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மிகவும் குறைவானதாக இருக்கிறது. இந்த உண்மையே, சேமிப்புத் திரட்சி, சேமிப்பைச் சரியான வழிகளில் ஈடுபடுத்துதல் ஆகிய இரண்டும் மிகவும் சிறப் புடையவைகள் என்பதைக் காட்டுகின்றது. தற்கால அரசுகள் பொதுவாகக் கடைப்பிடிக்கும் வழிகள் மூன்று காணப்படு கின்றன. முதலாவதாக, வரிவிதித்தல். இரண்டாவதாக, உள் நாட்டில் கடன் வாங்குதல். மூன்ருவதாக, பற்றுக்குறை நிதி யாக்கம். முதலில் குறிப்பிடப்பட்ட இரண்டும் நிகழ்காலச் சேமிப் பிலிருந்தும், கடந்த காலச் சேமிப்பிலிருந்தும், மூலவளங்களைப் பெறுகின்றன. ஆனல் பணவீக்க முறையில் நிதியாக்கம் செய் வதானது எதிர்பார்க்கும் சேமிப்பு என்பதைப் பயன்படுத்துகிறது. குறைந்த வருமானமுடைய பெரும்பான்மையான நாடுகளில் உள் நாட்டில் கடன் வாங்குதல் என்பதற்கும், பற்றுக்குறை நிதி யாக்கம் என்பதற்கும் மிகவும் குறைவான அளவிலான வாய்ப்பே இருக்கிறது. வளர்ச்சி பெற்ற நாடுகளில் பொதுக் கடனின் அளவு நாட்டு வருமானத்தைப்போல 100 விழுக்காட்டிலிருந்து 20 விழுக்காடுவரை இருக்கிறது. ஆனல், இவ் விழுக்காடு ஏழ்மை நாடுகளில் 20%—30% அளவிலேயே இருக்கிறது. சிறு சேமிப்புகள் கடன்களை வெளியிடுதல் என்பதன் மூலம் சமுதாயத்தின் தன்னிச் சைச் சேமிப்பைத் திரட்டுவதற்காக அண்மை ஆண்டுகளில் மேற் கொள்ளப்பட்ட முயற்சிகளில் இந்திய அரசின் அனுபவம் ஊக்கம் தருவதாக இல்லை. நாட்டு முதலீட்டு முயற்சிக்குத் தன்னிச்சைச் சேமிப்பின் பங்கு மிகமிகக் குறைந்த அளவிலேயே இருந்தது எனக் குறிப்பிடலாம். அரசாங்கத்தின் மூலவளங்களை அதிகரிப் பதற்குரிய வழி என்ற அடிப்படையில் உள்நாட்டில் கடன் வாங்கு

தல் என்ற முறையைக் காட்டிலும் மிகக் குறைந்த அளவிலேயே பற்றுக்குறை நிதியாக்கம் என்ற முறை செயல்படுகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பாலானவற்றில் இம் முறை அண்மை ஆண்டுகளில் பொருளாதார வளர்ச்சிக்கான நிதியாக்க முறையாகப் பயன்படுத்தப்படுகிறது. இருப்பினும் இம் முறையினால் தோன்றக்கூடிய உறுதியின்மையும் ஆபத்துகளும் அதிகமான அளவில் மிகத் தெளிவாகத் தென்படுகின்றன. ஒருகாலத்தில் இம் முறையை நன்கு வரவேற்ற நாடுகளான இந்தியா போன்ற நாடுகள் இப்போது இம் முறையை நாடும்போது மிகுந்த விழிப்புணர்ச்சியுடன் செயல்படுகின்றன.

நாட்டின் மூலவளங்களைச் சேகரிப்பதற்கு அரசுக்குக் கிடைக்கும் வழிகளில் மிகவும் முக்கியமான வழியாக வரிவிதித்தல்என்பது இருந்துவருகிறது. அரசாங்கத்தின் பண மூலவளங்களின் பெரும் பகுதியைத் தருவதற்கு மட்டுமல்லாமல் இது மிகவும் தெளிவான தொரு நன்மையையும் பெற்றிருக்கிறது. அதாவது, தன்னிச்சைச் சேமிப்பினால் அல்லது கட்டாயச் சேமிப்பினால் தோன்றக்கூடிய வரவு பொருளாதார விளைவு ஆகியவைகளைக் காட்டிலும் வரி விதிப்பினால் தோன்றும் வரவு அதிகமானதாகவும், துல்லியமாக மதிப்பிடத்தக்கதாகவும் இருப்பதோடு வரிவிதித்தலின் பொருளாதார விளைவுகள் முன் கூட்டியே நல்ல முறையில் மதிப்பீடு செய்யத் தக்கவைகளாகவும் இருக்கின்றன. பொருளாதார உறுதித் தன்மைக்கு மிகமிகக் குறைந்த அளவு ஆபத்துடன் முதலீட்டுத் திட்டங்களுக்கு இந் நாடுகள் எந்த அளவுக்கு நிதியாக்கம் செய்ய முடியும் என்பது உள்நாட்டுச் சேமிப்பைத் திரட்டுவதற்காகக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் வரி இயந்திரத்தைப் பயன் படுத்தும் முறையைச் சார்ந்திருக்கிறது.

## குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வரி விதித்தலின் நோக்கங்கள்
## (The Objectives of Taxation in Underdeveloped Countries)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள் நாட்டுச் சேமிப்புக் குவிப்பிற்கானதொரு வழியாக வரிவிதித்தல் என்பது மிகவும் சிறப்பிடத்தைப் பெற்றிருக்கிறது. இந்த அடிப்படையில் பார்க்கும்போது எந்த அளவுக்கு அதிகமாக முடியுமோ அந்த அளவுக்குச் சமுதாயத்திடம் இருக்கும் மூலவளங்களின் பெரியதொரு அளவை அரசிடம் மாற்றுவது ஒன்றே வரி விதித்தலின் மிக முக்கியமான நோக்கமாக இருக்க வேண்டும். மூலவளங்கள் இவ்வாறு மாற்றப்படும்போது தனியார்களின் முதலீட்டு ஆர்வமும்

உற்பத்தி ஆர்வமும் பாதிக்கப்படலாம். அத்தகைய பாதக விளைவு மிகமிகக் குறைவான அளவில் இருக்கும்படியாகவும் பார்த்துக் கொள்ளுவது மிகவும் அவசியமாகும். கிடைக்கத்தக்க மூலவளங்களை முழு அளவில் திரட்டுவதற்குப் போதுமானதாக இந் நாடுகளின் வரி முயற்சிகள் இல்லை என்பது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தின் நிதியாக்கச் சிக்கல்களை ஆராய்ச்சி செய்பவர்களிடையே பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டதொரு கருத்தாக இருக்கிறது. வரி முறையை விரிவுபடுத்துவதன் மூலமும், தீவிரப்படுத்துவதன் மூலமும் வரி விதித்தலின் அமைப்பையும் பகுதிகளையும் திருத்தி அமைப்பதன் மூலமும், வரி இயந்திரத்தைத் தீவிரமாகச் செயல்படச் செய்வதன் மூலமும் வரி வருமானத்தை அதிகரிப்பதற்கு அதிகமான அளவில் வாய்ப்பு இருக்கிறது. இந்த மிகப் பெரிய நோக்கத்தைத் தவிர, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வரிவிதித்தலை வேறு பல நோக்கங்களுக்காகவும் பயன்படுத்தலாம். முதலாவதாக. நேரிடையாகவும், மறைமுகமாகவும் தனியார் மூலதன ஆக்கத்திற்கு உதவி செய்யத்தக்க அளவில் வரிவிதித்தல் பயன்படுத்தப்படலாம். அரசாங்கத்தின் வரிக் கொள்கையானது தனியார் உற்பத்தி முயற்சிகளைத் தடை செய்யக் கூடாது என்ற நடுநிலைத் தன்மையை மட்டும் பெற்றிருக்கக் கூடாது. அதோடு, தனியார் தொழில் முயற்சிக்குத் தேவையான ஊக்கு விசைகளைத் தரத்தக்க வகையில் உறுதியானதொரு பங்கையும் ஆற்ற வேண்டும். இரண்டாவதாக, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொதுவாக ஏற்றுமதித் துறையிலிருந்து தோன்றத்தக்க ஏற்றத்தாழ்வுகளைக் கட்டுபபடுத்துவதற்கானதொரு வழியாகவும், பொருளாதார வளர்ச்சியில் உறுதித் தன்மையை உறுதி செய்யத்தக்கதொரு வழியாகவும் வரி விதித்தல் என்ற முறை அமைந்திருக்க வேண்டும். வளர்ச்சி பெற்ற நாடுகளில் தகுதிக் கொள்கை ('rincip'e of Equity) அல்லது சமுதாய நீதிக் கொள்கை ( rincip e of Social Justice) என்பதற்கு மிகவும் சிறப்பிடம் தரப்படுகிறது. இக் கோட்பாடுகளுக்கு வளர்ச்சியடைந்த நாடுகளில் தரப்படும் சிறப்பிடத்தைப் போன்ற சிறப்பிடம் குறைந்த வளர்ச்சி அடைந்த நாடுகளில் தரப்படுவதில்லை. இருப்பினும், வரிச் சுமையைத் தாங்கிக்கொள்வது சமுதாயத்தின் பலதரப்பட்ட வருமானப் பிரிவினரிடையே எந்த அளவுக்கு பகிர்ந்தளிக்கப்படுகிறதோ அந்த அளவுக்கு அதிகரித்த அளவு உற்பத்தி முயற்சிக்கு அது உதவுகிறது. எனவே. எந்தெந்த நேரங்களில் அக் கோட்பாட்டை ஏற்றுக்கொள்ள முடியுமோ அப்போதெல்லாம் அக் கோட்பாடு ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்பதும் குறிப்பிடப்பட வேண்டும்.

தற்போதுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் எந்த அளவுக்கு வரி விதித்தலின் இத்தகைய நோக்கங்கள் பெறப்பட்பட்டிருக்கின்றன என்பதை நாம் இனி ஆராயலாம். இங்கு இந் நாடுகளில் உள்ள வரி முறைகளைப்பற்றிச் சிறிதளவு விளக்கமாகக் காண வேண்டும். இவ் விளக்கம், இத் தொடர்பில் இந் நாடுகள் எதிர்நோக்கும் சிக்கல்களைத் தெளிவாக்குவதற்கும், வரி விதிப்பதில் முன்னேற்றங்களைப் பரிந்துரைப்பதற்கும் உதவும். இதன் மூலம் இந் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் வரி விதித்தலானது மிகமிகச் சிறப்பான பங்காற்றுமாறு செய்யப்படலாம்.

எந்த அளவுக்கு அதிகமாக முடியுமோ அந்த உச்ச அளவுக்கு உள்நாட்டு மூலவளங்களைத் திரட்டுவற்கு ஒரு வழி என்ற அடிப்படையில் வரிவிதித்தல் (Taxation as a Means to Mobilize Domestic Resources to he Fuller Extent Possible)

பொருளாதார முன்னேற்ற நிதியாக்கத்திற்கான பெரிய தொரு வழி என்ற வகையில் வரி விதித்தல் என்ற முறையின் மீது வெற்றியுடன் சார்ந்திருந்த சில நாடுகளின் உதாரணத்தை வரலாறு தருகிறது. ஜப்பானில் மொத்த அரசு வருமானத்தில் 5-ல் 4 பங்கை 1870-ஐச் சார்ந்த ஆண்டுகளில் விதிக்கப்பட்ட அதிகமான நிலவரி தந்தது. இம் மூலவளங்கள் யாவும் பொருளாதாரத்தை நன்கமைக்கப் பயன்படுத்தப்பட்டன. அதே நேரத்தில் தொழில் மிகவும் எளிதானதாக மதிப்பிடப்பட்டது. இதைப் போன்று 1920-ஐச் சார்ந்த ஆண்டுகளில் லாட்வியாவில் (Latvia) வரி அதிகரிப்பு மைய வங்கியில் ஏராளமான அளவில் அரசு நிதியின் குவிப்பைத் தோற்றுவித்தது. தனியார் தொழிற்பெருக்கத்திற்கு இந் நிதிகள் கிடைக்கும்படியாகச் செய்யப்பட்டன. இதைப் போன்று போலந்து, துருக்கி ஆகிய நாடுகளில் முதல் உலகப் போரின்போதும், இரண்டாம் உலகப் போரின்போதும், பொருளாதார முன்னேற்றத்திற்கு நிதியாக்கம் செய்யும் ஒரு விதியாக வெற்றியுடன் இது பயன்படுத்தப்பட்டது. ஆனால், பொருளாதார வளர்ச்சிக்காக வரி விதித்தலை மிகமிக அதிகமான வெற்றியுடன் பயன்படுத்திய நாட்டிற்கு எடுத்துக்காட்டாக 1918-லிருந்து ஐந்தாண்டுத் திட்டங்களின்மூலம் செயல்பட்ட இரஷ்ய நாட்டைக் குறிப்பிடலாம்.

ஆனால், இன்றைய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றின் அனுபவம் மேற்குறிப்பிடப்பட்டதைப் பொறுத்த மட்டிலும் வேறுபட்டுக் காணப்படுகின்றது. பொதுவருமானத்தின் அதிகரிப்பையும் மிஞ்சிச் செல்வதாகப் பொதுச் செலவு

அளவின் வளர்ச்சி கிழக்காசியப் பகுதியில் உள்ள பெரும் பான்மையான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இருக் கிறது. இந் நிலை இருப்பதற்கு இரண்டு சமமான வலி வுள்ள காரணங்கள் காணப்படுகின்றன. முதலாவதாக, இந் நாட்டு அரசுகளின் பொருளாதார முன்னேற்றத் திற்கான செலவு அளவிலும், வளர்ச்சித் திட்டங்களுக்கில்லாத செலவு அளவிலும் குறிப்பிடத்தக்கவாறு பேரளவு அதிகரிப்பு தோன்றியுள்ளது. இரண்டாவதாக, சமுதாயத்தில் அதிகரிக்கும் வருமானத்தின் பெரும் பகுதியை ஈர்த்துக் கொள்ள வரி முறை தவறிவிட்டது. அட்டவணையில் ஒன்பது நாடுகள் குறிப்பிடப் பட்டுள்ளன. அவற்றில் சீனு, பிலிப்பைன்ஸ், தாய்லாந்து ஆகிய மூன்று நாடுகளில் மட்டுமே பொது வருவாயின் அளவு பொதுச் செலவின் அளவைவிட அதிகமாகக் காணப்படுகிறது. அல்லது, பொதுச் செலவின் அளவுக்குச் சமமாகக் காணப்படு கிறது. மற்ற எல்லாவற்றிலும் செலவு அதிகரிப்பு, வருவாய் அதிகரிப்பு ஆகியவைகளுக்கிடையே பேரளவிலான வேறுபாடுகள் காணப்படுகின்றன. இந்தியாவிலும், பாக்கிஸ்தானிலும் 1950, 1958 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் அரசு வருமான அதிகரிப்பு அரசுச் செலவில் முறையே 70% 60% என்ற அளவிலேயே இருந்தது.

## குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் நேர்முக வரிகள் (Direct Taxes in Underdeveloped Countries)

வளர்ச்சியடைந்த நாடுகள் அவைகளின் வரி வருமானத்தின் பெரும்பகுதியை நேர்முக வரிகளின் மூலமாகவே பெறுகின்றன. குறிப்பாக வருமான வரி மூலம் பெறுகின்றன. இவ் வித வரிகள் மிகவும் நெகிழ்ச்சித் தன்மையைப் பெற்றிருக்கின்றன. நாட்டு வருமான அதிகரிப்புக்கு ஏற்றவாறு அவைகளின் வருமானம் தானுகவே அதிகரிக்கிறது. அதைப் போன்று நாட்டு வருமானம் குறையும்போது தானுகவே அவைகளின் வருமானம் குறைகிறது. அத்தகைய வருமானங்களின் வரவுகளைப் பற்றியும், அவைகளின் பொருளாதார விளைவுகளைப் பற்றியும் அதிகமான அளவிலான உறுதித் தன்மையையும் அவைகள் பெற்றிருக்கின்றன. ஆனுல், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பெரும்பாலும் மறைமுக வரிகளையே சார்ந்திருக்கின்றன. குறிப்பாகச் சுங்க வரிகள், கலால் வரிகள் ஆகியவைகளைச் சார்ந்திருக்கின்றன. இங்கிலாந்து நாட்டைச் சார்ந்திருந்து இப்போதுதான் அரசியல் சுதந்திரம் பெற்றிருக்கும் ஒரு சில பகுதிகளில் வருமானவரி நீண்டகால மாகவே நிலைத்திருக்கிறது. ஆனுல், பல நாடுகள் வருமான

வரியை மிக அண்மைக் காலத்தில்தான் கையாளத் தொடங்கி யுள்ளன. ஆனால், வருமான வரி, நில வரி போன்ற நேர்முக வரிகளின் நிருவாகம் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மன நிறைவைத் தரத்தக்கதாக இல்லை. வளர்ச்சியடைந்த நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இம் மூலங்களிலிருந்து பெறப்படும் வருமானத்தின் அளவு மொத்த நாட்டு உற்பத்தியில் மிகக் குறைவான அளவாகவே இருக்கிறது. ஐக்கிய அமெரிக்க நாட்டில் பெடரல் அரசாங்கத்தின் வருமானத் தில் நேர்முக வரியின் பங்கு 78% அளவுக்கு இருக்கிறது. இப் பங்கு இங்கிலாந்தில் 57 விழுக்காடாகவும், ஜப்பானில் 50% ஆகவும் இருக்கிறது. இந்தியாவில் இந்திய அரசாங்கத்தின் மொத்த வரு மானத்தில் நிலவரி, வருமான வரி ஆகிய இரண்டு நேர்முக வரிகளி லிருந்தும் பெறப்பட்ட வருமானத்தின் பங்கு 1950-ல் 28% ஆகவும் 1958-ல் 25% ஆகவும் இருந்தன. மற்றப் பல குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளில் இந்த விகிதமானது மொத்த வருமானத்தில் ஐந்தில் ஒரு பங்கிலிருந்து நான்கில் ஒரு பங்கு வரையிலான வீச்சிலிருக்கிறது.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வருமான வரியிலிருந்து பெறப்படும் வருமானம் மிகக் குறைவாக இருப்பதற்கு இந் நாடு களின் குறைந்த அளவு நாட்டு வருமானமே அடிப்படைக் காரண மாகும். இது தவிர, பொருளாதாரப் பின்தங்கிய நிலையும் சமுதாயப் பின்தங்கிய நிலையும் இத்தகைய வரிகளைச் சரியாக மதிப்பீடு செய்வதிலும் வரித் தொகையை வசூல் செய்வதிலும் பல இடர்ப்பாடுகளைத் தோற்றுவிக்கின்றன. குறைவான கல்வித்தரம், தனிநபரின் வருமானத்தைப் பற்றியும் செலவைப் பற்றியும் கணக்குகளை வைத்திருக்கும் பழக்கமின்மை, பேரளவில் பணத் தொடர்பற்ற துறை நிலைத்திருத்தல், மக்களிடையே நாட்டு உணர்வு இல்லாதிருத்தல் ஆகியவைகளை இத்தகைய குறைகளில் சில குறைகளாகக் குறிப்பிடலாம். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள சராசரி நபரின் தனிநபர் வருமானம் மிகமிகக் குறைவானதாக இருக்கிறது. எனவே, வருமான வரியானது மொத்த மக்களில் மிகமிகக் குறைந்த அளவு மக்களின்மீதே விதிக் கப்படுகிறது. ஆனால், பொருளாதார வளர்ச்சி பெற்றுள்ள ஜப்பான் போன்ற நாடுகளில் வருமான வரி செலுத்துபவர்களின் எண்ணிக்கை அதிகமானதாக இருக்கிறது. இத்தகைய நாடுகளில் வருமான வரி பேரளவில் வசூலிக்கப்படும் பெரும் வரியாகவே இருக்கிறது. இவ்வாறாக, இந்தியாவில் வருமானவரி 6,00,000 தனி நபர்களாலும், 55,000 இந்து அபிவிருத்திக் குடும்பங்களாலும், 50,000 வணிகக் கூட்டு நிறுவனங்களாலும், கூட்டுப்பங்குக்

கம்பெனிகளாலும்தான் செலுத்தப்படுகிறது. வரிவிதிக்கப்படும் தலா நபருக்குச் சராசரியாக 5 நபர்கள் உறுதியாகச் சேர்த்துக் கொள்ளப்படுவதாகக் கருதிக் கொண்டால், மொத்த மக்கள் தொகையில் ஒரு விழுக்காட்டிற்கும் குறைவான அளவிலேயே வரியானது விளைவுடையதாக இருக்கிறது. நாட்டின் வரி விதிக்கத் தக்க உள்ளார்ந்திருக்கும் வருமானம் (அதாவது, நாட்டு வருமானம் நாட்டு வருமானத்தில் சேர்க்கப்படாத வரி விதிக்கத் தக்க மாற்று வருமானம்) ரூ 13) பில்லியன் முதல் ரூ 140 பில்லியன் வரையிலானதாக இருக்கும். ஆனால், வருமான வரிக்காக மதிப்பீடு செய்யப்படும் வருமானத்தின் அளவு (கூட்டு நிறுவனங்கள், கூட்டுப் பங்குக் கம்பெனிகள் ஆகியவைகளின் வருமானத்தையும் உள்ளடக்கிய வருமானம் ஏறத்தாழ ரூ. 10 பில்லியன் அளவாக இருக்கிறது வசூலிக்கப்பட்ட வரியானது ரூ. 2•2 பில்லியன் அளவாகவே இருக்கிறது. அதாவது, நாட்டின் மொத்த மக்களில் 99 விழுக்காட்டு அளவு மக்களும், நாட்டு வருமானத்தில் வரி விதிக்கத்தக்கதான வருமானத்தில் 93 விழுக்காட்டு அளவு வருமானமும் வரிமுறை எல்லையிலிருந்து விலக்கப்பட்டிருக்கின்றன.

சராசரித் தனிநபர் வருமானத்தோடு ஒப்பிடுகையில் குறைந்த அளவு விதிவிலக்கு எல்லை மிகவும் அதிகமானதாக இருப்பது இதற்கானதொரு முக்கியமான காரணமாகும். பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் குறைந்த அளவு விதிவிலக்கு எல்லையானது அதிகமான செல்வ மிகு நாடுகளில் இருக்கும் விதி விலக்கு எல்லையைவிட அதிகமானதாக இருக்கிறது. பர்மாவில் மூன்று குழந்தைகளையும் ஒரு மனைவியையும் உடையதொரு மனிதன் தனது வருமானத்தின்மீது வரி செலுத்துவதற்கு நாட்டின் தனிநபர் வருமான அளவைப்போல 19 மடங்கு சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. இந்த அளவு பிலிப்பைன்ஸ் நாட்டில் 15·6 மடங்காகவும், சிலோனில் 12·5 மடங்காகவும் இந்தியாவில் 11·5 மடங்காகவும், மலேயாக் கூட்டாட்சியில் 10 மடங்காகவும் இருக்கிறது. ஆனால், இந்த அளவு ஐக்கிய அமெரிக்க நாட்டில் 1·3 மடங்காகவும், இங்கிலாந்திலும், கனடா விலும் 1·9 மடங்காகவும், பிரான்ஸில் 2·1 மடங்காகவும், ஆதிரேலியாவில் 0·7 மடங்காகவும் இருக்கிறது. இந்த அளவு களோடு ஒப்பிடத்தக்க வகையில் ஜப்பான் நாடு ஒன்றில் மட்டுமே இந்த அளவானது (3·4 மடங்கு என்ற அளவில்) குறைவானதாக இருக்கிறது. எந்த விதமான சார்ந்திருப்பவர்களும் இல்லாமல் தனியொரு மனிதனை இருப்பவருக்குத் தரப்படும் அடிப்படை விதிவிலக்கு எல்லையானது இங்கிலாந்தில் $336 ஆக இருந்ததை

விடவும், ஐக்கிய அமெரிக்க நாட்டில் $600 ஆக இருந்ததை விடவும் மிகவும் அதிகமான அளவினதாக இருந்தது.

நிருவாகத்தில் உறுதியற்ற தன்மை இருப்பதும் குறைவான விளைவுக்கான இன்னொரு காரணமாகும். கட்டிய பணத்தைத் திருப்பித் தருவதில் உள்ள தாமதம், வரி மதிப்பீடு செய்வதில் தாமதம், அறிவிப்புகளோடு ஒத்துப்போவதற்குத் தரப்படும் கால அளவு மிகக் குறைவானதாக இருத்தல் என்பன போன்ற பல குறைகளைப்பற்றி வரிச் செலுத்துவோர் குறை கூறுகின்றனர். அதே நேரத்தில் பேரளவில் வரி ஏய்ப்பு நடப்பதைப் பற்றியும் அதன் காரணமாகக் கருவூலத்திற்கு வரக்கூடிய தொகையில் ஏற்படும் பேரிழப்புகள் ஆகியவைகளைப் பற்றியும் வருமான வரித் துறை கவலைப்படுகிறது. இது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் எந்த அளவுக்கு உண்மையானதாகக் காணப்படுகிறதோ. அதே அளவுக்கு வளர்ச்சியடைந்த நாடுகளிலும் காணப்படுகிறது. எனவே, வரி விதிப்பு முறையிலும் வரி விகிதத்தைக் குறைப்பதிலும் நல்ல பல மாறுதல்கள் வேண்டும் எனப் பரிந்துரைக்கப் பட்டது. இதைப் பொறுத்த மட்டிலும் ஐக்கிய அமெரிக்க நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கான குழுவில் (Committee for Economic Development in the U.S.A.) உள்ள ஆராய்ச்சி, கொள்கை ஆகியவைகளுக்கான குழு (Research and Policy Committee) கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளது. 'இயற்கையான தவறுகள், கணக்கிடுவதில் தவறுதல்கள் ஆகியவைகளுக்கிடையே யான வேறுபாடுகளைப் பிரித்துக் காண்பது மென்மேலும் மிகவும் கடினமானதாக இருக்கக்கூடிய அளவில் வரி விண்ணப்பங்கள் மிகவும் சிக்கலானவைகளாக இருக்கின்றன. இத்தகைய தவறுகள் மிகவும் அபூர்வமாகத்தான் கண்டுபிடிக்கப்படுகின்றன. அவை வேண்டுமென்று தவறுதலாகத் தரப்படுபவைகள். இயல்பான தவறுதல்கள் என்று கருதப்பட்டு அவை தள்ளுபடி செய்யப்படலாம் என்று பெரும்பாலான வரிச் செலுத்துவோர் உணர்ந்து கொள்வார்களானல் ஏமாற்றுவது எப்போதாவது தோன்றுவதாக இல்லாமல் சட்டமானதைப் போலவே பழக்கத்திலிருக்கும் பொருளாதார நோக்கிலிருந்து பார்க்கும்போது, வரித்தொகையைக் குறைப்பதற்கு வரிச் செலுத்துபவர்களாலும் அவர்களின் ஆலோசகர்களாலும் மேற்கொள்ளப்படும். முயற்சி, காலம் ஆகியவைகளில் உள்ளார்ந்திருக்கும் வீணுதல் அங்கு இருப்பதனுல் வரிச்செலுத்தும் நேர்மை பாதிக்கப்படுகிறது. 'வருமான வரியானது தவருக மதிப்பிடப்பட்டுவிடத்தக்க உண்மையான ஆபத்தும் இருக்கிறது. இந்தியாவின் வரிச் சீர்திருத்தத்தைப்பற்றி' அண்மையில் பேராசிரியர் கால்டார் அறிக்கையொன்றைத்

தந்திருக்கிறார். அதில் கணக்குப் புத்தகங்களில் தவறான கணக்குகளை எழுதுவதன் மூலம் இந்தியாவில் நிலவும் வரித் தவிர்த்தல்கள், வரி ஏய்ப்புகள் ஆகியவைகள் பேரளவில் நடைபெறுகின்றன என்று கூறி நமது கவனத்தைக் கவருகிறார். "இத்தகைய வரி ஏய்ப்பானது மதிப்பிடப்படும் வருமானத்தில் குறைந்த அளவில் 10%–20% ஆகவும், அதிகமான அளவில் 200 முதல் 300 விழுக்காடாகவும் இருக்கலாம் என்ற மதிப்பீட்டைத் தனிப்பட்ட வியாபாரிகள், கணக்காளர்கள், வருமானத்துறை அதிகாரிகள் ஆகியோர்களிடம் பேச்சுக் கொடுப்பதன் மூலம் பெறலாம்' என்று அவர் கருதுகிறார். பிலிப்பைன்ஸ் என்ற மற்றொரு குறைந்த வளர்ச்சியுடைய நாட்டைப்பற்றிய செய்திகளிலிருந்தும் வருமானத்தை மறைத்தல், வரி ஏய்த்தல் ஆகியவைகளைப்பற்றிய சிக்கலின் பருமம் சுட்டிக்காட்டப்படுகிறது. 1950ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் பெல் அறிக்கை (Bell Report) வெளியிடப்பட்டது. அவ் வறிக்கையின்படி வரி செலுத்தத்தக்க வருமானங்களுடன் 9,350 நபர்கள் தங்களது வருமான விண்ணப்பத்தைக் கொடுத்தனர். ஆனால், அத்தகைய வருமான எல்லைகளிலிருப்பவர்களின் எண்ணிக்கை 88,000 என மைய வங்கி மதிப்பீடு செய்துள்ளது. சட்ட அடிப்படையிலான பதிவுகளின்படி வரி விதிக்கத்தக்க தொகையின் அளவு p 29 2 மில்லியனாக இருந்தது. ஆனால், இத்தகைய தொகையின் அளவு p 232·3 மில்லியன் என்று மைய வங்கி மதிப்பீடு செய்துள்ளது. மைய வங்கியின் மதிப்பீடுகள் சரியானவைகளாக இருந்தால், வரி விதிக்கத்தக்க வருமானமுடையவர்களில் 11% அளவில்தான் தங்களது வருமான விண்ணப்பங்களைக் கொடுத்திருக்கின்றனர் என்றும் வருமானத்தில் 13% அளவுதான் வரி காட்டப்பட்டிருக்கிறது என்றும் தெளியலாம்.

பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மரபு வழியாக உள்ள நிலவரிதான் மிகப் பெரிய நேர்முக வரியாக இருக்கிறது. ஆனால், நிலவருமான வரி விதிப்பில் இந் நாடுகளில் பேரளவு வேறுபாடுகள் காணப்படுகின்றன. (மெயின்லாந்து) சீனாவிலும், கொரியக் குடியரசிலும் மொத்த விளைவில் ஒரு பகுதி விளைவு நிலவரியாக விதிக்கப்படுகிறது. 1953–54ஆம் ஆண்டில் அரசாங்கம் பெற்ற மொத்த வருமானத்தில் 24 விழுக்காட்டு அளவுக்கு இத்தகைய நிலவரியே காரணமாக இருந்தது. ஈராக்கிலும், சிரியாவிலும் சந்தைக்கு வரும் உற்பத்தி அளவின் மீதான வரி என்ற வடிவத்தில் நிலவரி அமைந்திருக்கிறது. 1951–52ஆம் ஆண்டில் ஈராக்கின் மொத்த வரி வருமானத்தில் நிலவரியின் பங்கு 20% ஆகவும், சிரியாவின் மொத்த வரி

வருமானத்தில் நிலவரியின் பங்கு 15% ஆகவும் இருந்தது. (எகிப்து) இந்தியா, பர்மா, பாக்கிஸ்தான், கியூபா, ஈரான் போன்ற மத்தியக் கிழக்கு, தூரக்கிழக்கு ஆசியப் பகுதிகளில் உள்ள சில நாடுகளில் ஆண்டுதோறுமான வாரமதிப்பின்மேல் விதிக்கப்படும் வரியாக இது காணப்படுகிறது. (பெராகுவே (Peraguay), பனமா, கோஸ்டாரிக்கா, மெக்ஸிகோ சில்லி நிகராகுவா (Nicaragua), எல்சால்வடார் (Elsalvador) கௌடமாலா, பொலீவியா, பிரேசில்) போன்ற இலத்தீன் அமெரிக்க நாடுகளில் பெரும்பாலும் மூலதன மதிப்பின்மீதான வரியாகவே இது காணப்படுகிறது. கிழக்காசிய நாடுகளில் நிலவரி பல காலம் நிலைபெற்றிருந்த போதிலும், இந் நாடுகளின் மொத்த வருமானத்திற்கு இவ் வரியின் பங்கு மிகமிகக் குறைந்த அளவிலேயே இருக்கிறது குறைவாக இருப்பதோடு மட்டுமல்லாமல், அண்மை ஆண்டுகளில் குறைந்து செல்லும் போக்கையும் பெற்றிருக்கிறது. நேபாளம், தென் கொரியா, ஆப்கானிஸ்தானம் ஆகியவற்றில் நிலவரியின் பங்கு மிகவும் அதிகமான அளவில் இருக்கிறது. ஆனல், கடந்த பத்தாண்டுக் காலத்தில் இவ் வரிகளின் வருமானத்தில் மிகவும் முனைப்பான இறக்கம் காணப்படுகிறது. ஆப்கானிஸ்தானத்தில் மொத்த வரி வருமானத்தில் நிலவரியின் பங்கு 1951-ல் 12% அளவிலிருந்து 1956-ல் 3% அளவுக்குக் குறைந்தது. தென் கொரியாவில் இது 1949-ல் 25%-லிருந்து 1958-ல் 10%-க்குக் குறைந்தது. நேபாளத்தில் 1952-ல் 42%-லிருந்து 1954 ல் 24%-க்குச் சரிவு தோன்றியது. 1939ஆம் ஆண்டில் இந்தியாவின் மொத்த வரி வருமானத்தில் நிலவரி வருமானத்தின் பங்கு 20% அளவாக இருந்தது. ஆனல், இப்போது இது 7% ஆக இருக்கிறது. வேளாண்மைத் துறையினல் தோற்றுவிக்கப்பட்டு, நாட்டு வருமானத்திற்குத் தரப்படும் பங்கைப் பொறுத்தே நிலவரியினல் பெறப்படும் வருமானம் பெரும்பாலும் இருக்கின்றது. ஒரு சில இலத்தீன் அமெரிக்க நாடுகளில் இந்த விகிதமானது மிகவும் குறைவாக இருக்கிறது. அதாவது. தென்கிழக்காசிய நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் குறைவாக இருக்கிறது. சில்லியில் மொத்த நாட்டு வருமானத்தில் 13%, மெக்சிகோவில் 19% என்று இது இருக்கிறது. மொத்த வரி வருமானத்திற்கு நிலவரி வருமானத்தின் பங்கு 5%-க்கும் குறைவாகவே இந் நாடுகளில் காணப்படுகிறது. ஆனல், பெரும்பான்மையான தென்கிழக்காசிய நாடுகளில் இதன் வீச்சு எல்லைகள் 5% முதல் 10 விழுக்காடுவரை இருக்கின்றன.

பொருளாதாரம் வளர்ச்சியடையும்போது, நாட்டு வருமானமும், தனிநபர் வருமானமும் வரி செலுத்துவதற்கான மக்களின் தகுதியும் அதிகரிக்கின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில்

வேளாண்மைத்துறை மிகப் பெரிய துறையாகவும் நாட்டு வருமானத்தில் பெரும்பகுதியைத் தரத்தக்கதாகவும் இருக்கிறது என்ற உண்மையின் காரணமாக இந் நாடுகளில் நிலவரிக்கான வாய்ப்புகளை அதிகமான அளவில் ஏற்படுத்திக் கொள்வது சரியானதே. பொருளாதார வளர்ச்சித் திட்டங்களின் மிக முக்கியமான தொருபடியாக வேளாண்மைத் துறை முன்னேற்றம் அமைந்திருக்கிறது. அரசாங்கத்தின் முதலீட்டுச் செலவில் நல்லதொரு பங்கு வேளாண்மைத்துறை முன்னேற்றத்திற்காக மேற்கொள்ளப்படுகிறது. இவை தவிர, வளர்ந்துவரும் பொருளாதாரம் ஒன்றில் இந்தத் துறையிலிருந்து மூலவளங்கள் முழு அளவில் வளம்பறிக்கப்படவேண்டும் என்று சொல்லப்படுவதற்குச் சிறப்பான சில காரணங்களும் இருக்கின்றன. வேளாண்மைத் துறையில் பேரளவில் பணத் தொடர்பற்ற துறை இருக்கிறது. இதோடு இத்துறையில் பெரும்பாலான மக்களின் கல்வித் தரமும் மிகவும் குறைவான நிலையில் இருக்கிறது. இவ் விரண்டு காரணத்தாலும் இத் துறையிலிருந்து, தனிநபர் வருமானவரி என்பதன் மூலமாகவும், பேரளவில் பயன்படுத்தப்படும் பல விதமான மறைமுக வரிகளின் மூலமாகவும் வருமானத்தின் போதுமான அளவுப் பகுதியை வரியாக அரசாங்கத்தால் வசூலிக்க முடியாமல் போய்விடுகிறது. இரண்டாம் உலகப்போர் காலத்திலிருந்து பல நாடுகளிலும் பணவீக்க நிலைகளும், உள்நாட்டு நிருவாகச் செலவு அதிகரிப்பும், அரசாங்கத்தின் முதலீட்டுச் செலவு அதிகரிப்பும் தோன்றியுள்ளன. இவைகளும், நிலவரியின் நெகிழ்ச்சியற்ற வருமானமும் சேர்ந்து நிலவரியை மிகவும் நெகிழ்ச்சியுடையதாகவும் அரசாங்கத்திற்கு வருமானம் தரத்தக்க செழிப்பானதொரு மூலமாகவும் மாற்ற வேண்டிய அவசியத்தைப் பற்றிக் கவனத்தைத் திருப்பியது. தவிர, நிலத்தின் முன்னேற்றத்திற்காக மேற்கொள்ளப்படும் முயற்சிகள், குடிவாரச் சட்டங்கள் ஆகியவைகளும் நிலவரி முறையை முன்னேற்றுவதற்கு உதவி செய்ததோடு அத்தகைய முன்னேற்றத்திற்குத் தேவையான பல வழிகளையும் காட்டின.

வருமானவரி, விற்பனைவரி போன்ற வரிகளிலிருந்து பெறப்படும் பேரளவு வருமானத்தைப் போன்று நிலவரியிலிருந்து பெறுவது கடினம். 'நடப்பிலிருப்பதற்கேற்ப அமைக்க முடியாத வரி அடிப்படைக்கு நிலையான வரி விகிதத்தைப் பயன்படுத்துவதன் விளைவாக வரிக்குள்ளேயே அது வருகிறது' என்ற தன்மையிலான அமைப்பில் நிலவரியின் நெகிழ்ச்சியற்ற தன்மை இருக்கிறது.[1]

[1] "It Comes from Within the tax as a result of the application of a Stable tax rate to a tax base that is not kept current."

Wald, Haskell P., *Taxation of Agricultural Land in Underdeveloped Countries,* Harvard, 1959. p. 203

இந்நிலவரி வளர்விகித முறைக்கு இசைந்துவருவதில்லே. தவிர, மரபுவழியாக வரும் இவ்வரி வேறுபல குறைகளேயும் பெற்றிருக்கிறது. குறிப்பாகச் சமத்துவம் என்ற அடிப்படையில் பார்க்கும் போது பல குறைகளேப் பெற்றிருக்கிறது. மக்களின் வரி செலுத்துவதற்கான உண்மையான சக்தியைக் கருதுவதற்கு இது தவறிவிடுகிறது. குறைந்த அளவு விதிவிலக்குகளேயும், குடும்பச்செலவு கட்டுப்படிகளேயும் இது தருவதில்லே. தவிர, உழைத்துப் பெறும் வருமானம், உழைக்காமல் பெறும் வருமானம் ஆகிய இரண்டையும் இது வேறுபடுத்திக் காணவில்லே. உண்மையான நெகிழ்வுத்தன்மை என்ற பண்பைப் புகுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் நிலவரியைச் சீர்திருத்தும் எந்த முயற்சிகளிலும் நிலவரி அமைப்பிலேயே உள்ள குறைகள் நன்கு உணரப்பட வேண்டும். இதை வேறுவிதமாகச் சொன்னுல், நிலவரியானது இப்போதுள்ள அமைப்பிலேயே இருக்குமானுல் இதிலிருந்து அதிகரித்த வருவாயைப் பெறுவதற்காக மேற்கொள்ளப்படும் எந்த முயற்சியும் வெற்றியைப் பெற முடியாது. நிலவரிச் சீர்திருத்தத்திற்குத் தேவைப்படுவது இவ்வரியை முழுமையாக மாற்றியமைத்தல்தான். தனி நபர் வருமான வரியைப் போன்று வளர்ச்சி விகித அமைப்பையுடைய நேர்முகவரியைப் போன்றும் உள்ளதொரு மாற்றம்தான் நிலவரியைச் சீர்திருத்துவதற்குத் தேவைப்படுவதாகும்.

வளர்ச்சி பெற்ற நாடு, குறைந்த வளர்ச்சியுடைய நாடு ஆகியவற்றில் நிலவரி முறையில் உள்ள வேறுபாட்டைச் சுட்டிக் காட்டுவது இங்கு அவசியமானதாகும். வளர்ச்சியடைந்த நாடுகளில் வேளாண்மைத்துறையின்மீதான வரி விதித்தல் உறுதியான வடிவத்தைப் பெற்றிருக்கிறது. வேளாண்மையிலிருந்து பெறப்படும் வருமானத்தின் வரியையும் பண்ணே நிலச் சொத்துகளின் மீதான சொத்து வரியையும் உள்ளடக்கியதாக இது இருக்கிறது. சொத்தின் மூலதன மதிப்பு அல்லது ஆண்டு தோறுமான மதிப்பு அல்லது வாரத்தின் மதிப்பு ஆகியவற்றின் அடிப்படையில்தான் பண்ணே நிலச்சொத்துகளின்மீதான சொத்துவரி நிர்ணயிக்கப்படுகிறது. நிலவரியின் இத்தகைய வடிவமானது, மிகவும் நெகிழ்ச்சித் தன்மையுடைய வருமானத்தின் மூலமாக நிலவரியை அமைத்துவிடுகிறது. இவ்வாருக, ஐக்கிய அமெரிக்க நாட்டில் உள்ள மாநிலங்களில், வரவு செலவுத் திட்டங்களில் தேவைகளுக்கேற்ப மூலதன மதிப்புக்கான விகிதங்கள் இசைவிப்புச் செய்யப்படுகின்றன. இதற்கு மிகத்திறம்பட்ட நிருவாக இயந்திர அமைப்பு அவசியமாகிறது. ஆனுல், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இது இல்லே. ஒரு சில குறைந்த வருமானமுள்ள நாடு

களில் வேளாண்மைத்துறை வருமானத்தின்மீது 'வரி விதிப்பதில் மரபு வழிக்குப் புறம்பான முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. அந்த நாடுகளில். இவ் வரியின் மூலம் பெறப்படும் வருமானம் அதிகமாக இருக்கிறது. அதாவது, மரபு வழியான முறைகளைப் பயன்படுத்தும் குறைந்த வருமானமுடைய நாடுகளில் இவ் வரியின் மூலம் பெறப்படும் வருமானத்தைக் காட்டிலும் அதிகமான அளவு வருமானம் மேற்கண்ட நாடுகளில் பெறப்படுகிறது. இந்தியா விலும், பாக்கிஸ்தானிலும், ஆண்டுதோறுமானவார வருமானத்தின் அடிப்படையில் வரி விதிக்கப்படுகிறது. அத்தகைய வரி, பதினைந்து ஆண்டுகளுக்கு அல்லது இருபது ஆண்டுகளுக்கு ஒரு முறை வரி விதிக்கத்தக்க நிலங்களைப்பற்றிய பொருளாதார உசாய்வின் (Survey) அடிப்படையில் நிர்ணயிக்கப்படுகிறது. அத்தகைய உசாய்வுகள் செலவு மிகுந்தவைகளாக இருக்கின்றன. இத்தகைய மதிப்பீடுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் நிலத்திலிருந்து பெறப் படும் உண்மையான வருமான அளவுக்கும் நிலவரியின் வருமானத் திற்கும் எந்த விதமான தொடர்பும் இல்லாமல் போய்விடுகிறது. இந்த முறையானது மிகவும் நெகிழ்வற்றதாக இருப்பதோடு மட்டு மல்லாமல் ஊகத்தால் அமைந்ததாகவும் எண்ணத்தின் அடிப் படையில் அமைந்ததாகவும் இருக்கிறது. வரி வரிவிதிக்கப் படுபவரின் வரிச்செலுத்தும் தகுதியைக் கருத்தில் எடுத்துக் கொள்ள இது தவறிவிடுகிறது. இவ்வாறாக, இம் முறையானது நெகிழ்வற்ற தன்மை. சமத்துவமற்ற தன்மை என்ற இரண்டு தன்மையையும் பெற்றிருக்கிறது. அண்மையில் இந்திய மாநிலங் களில் வேளாண்மை வருமான வரி புகுத்தப்பட்டிருக்கிறது. இதோடு நிலவரியின்மீது வரிக்கு வரியும் மேம்பாட்டு வரியும் நெகிழ்ச்சித் தன்மையையும், வளர்விகிதத் தன்மையையும் ஓரளவுக்குப் புகுத்தியுள்ளன. ஆனல், இப்போதுள்ள அமைப்பு விரும்பத்தக்க பெரும்பான்மையான அளவுக்கு இன்னும் அதிக மான அளவுக்கு மாற்றப்படவேண்டியதாகும். வரியின் நிருவாகச் செலவு மிகவும் அதிகமானதாக இருக்கிறது. ஆனல் செலவு செய்யப்படும் ஓர் அலகின் வருமானம் மிகவும் குறைவானதாக இருக்கிறது.

நிலத்தின்மீது வரிவிதித்தல், பண்ணை விளைவின்மீது வரி விதித்தல் ஆகியவற்றில் மரபு வழியற்ற முறைகள் ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளால் பயன்படுத்தப்படுகின்றன. நிலவரி விதிப்பதற்குப் பதிலாகச் சிலோன், மலேயா, தாய்லாந்து போன்ற நாடுகள் அவைகளின் முக்கியமான ஏற்றுமதி செய்யத் தக்க பயிர்களின்மீது வரிவிதிக்கின்றன. பிலிப்பைன்ஸ், நிலச் சொத்துகளின்மீது பொதுவான வரியைப் பெற்றிருக்கிறது.

சீனுவிலும், கொரியக் குடியரசிலும் பண்டங்களாக வரிவசூலிக்கப் படுகிறது. இது நிலத்திலிருந்து பெறப்படும் விளைவுடன் ஒப்பிடும் போது வரிவருமானத்தை வேறுபட்டதாக்குகிறது. பர்மாவில் அரசாங்க வேளாண்மைத்துறை அங்காடிக்குழு (State Agricultural Marketing Board) வின் ஆதாயம் வருமானத்திற்குரியதொரு மூலமாக அமைந்திருக்கிறது. இது எல்லா மூலங்களிலிருந்தும் அரசாங்கம் பெறக்கூடிய மொத்த வருமானத்தில் 5-ல் 2 பங்கு பகுதியைத் தருகிறது. விலை நிலையில் மாற்றங்கள் என்ற அடிப் படையில் பத்தாண்டுகளுக்கு ஒரு முறை தரப்படுத்தப்பட்ட பிறகு நிலவரிமதிப்பீட்டை மறு பரிசீலனை செய்யும்படி இந்தியா வில் வரிவிசாரணைக்குழு (Taxation Enquiry Commission) பரிந் துரை செய்துள்ளது. மேலும், சொத்து வரி, நிகரமதிப்பின் மீதான வரி, மூலதன ஆதாயவரி, விற்பனையாகும்போது நில மதிப்பின்மீதான வரி. ஆகிய பல புதியவரிகளும் பரிந்துரைக்கப் பட்டுள்ளன. இத்தகைய புதியவரிகள் யாவும் வேளாண்மைத்துறை வருமானத்தில் பெரும் பகுதியை அரசுக்கு மாற்றுவதற்கு உதவி செய்யும் என்பது சரிதான் என்றாலும்கூட, அவைகளை நிறை வேற்றுவதற்கான வாய்ப்பு குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் நிருவாக இடர்பாடுகளின் காரணமாக மிகவும் குறைவான அளவிலேயே இருக்கின்றன, இத்தகைய வழிகளில் ஒரு சில நாடு களில் மேற்கொள்ளப் பட்ட சீர்திருத்தங்கள் வெற்றியுடையவை களாகக் காணப்படவில்லை. 1950- ல்சோப்மிஷின் (Shoup Mission) பரிந்துரைகளின்படி ஜப்பானில் நிகர மதிப்புவரி (Net work tax) விதிக்கப்பட்டது. ஆனல் அது நல்ல முறையில் செயல்படவில்லை. எனவே 1[illegible] -ல் இது கைவிடப்பட்டது மைய அரசு ஏற்கெனவே விதித்துவந்த நிலவரிக்குப் பதிலாக சந்தைக்கு விற்பனைக்கு வரும் வேளாண்மைப் பண்டங்களின் மதிப்பின்மீது [illegible]% வரியை ஈரான் நாடு 1933-ல் விதித்தது ஆனல், பத்தாண்டுகளுக்குப் பிறகு இது நீக்கப்பட்டு வேளாண்மை வருமானமும் பொது வருமானத்தோடு சேர்த்துக் கொள்ளப்பட்டது. ஆனல், இத்தகைய வேளாண்மை வரி அமைப்புடன் கூடிய வரி நிருவாகத்தில் தோன்றிய இடர்களின் காரணமாக 1[illegible]6-ல் பழைய நிலவரி முறை திரும்பவும் கொண்டு வரப்பட்டது.

நிலவரியை மரபு வழி முறைப்படி வைத்திருத்தல். அதோடு துணைத் தீர்வைகள் பலவற்றை விதித்தல் ஆகியவைகள் வரி முறையைச் சிக்கலானதாகவும் ,செலவு மிகுந்ததாகவும் ஆக்கியதே தவிர, அதிகப்படியான வருமானம் என்ற வடிவத்தில் எத்தகைய நன்மையையும் தரவில்லை. இதனை முன்னேற்றுவிப்பதற்காக மேற்கொள்ளப்படும் சிறப்பு முயற்சிகள் எவையும் இவ் வரியை

மிகவும் குறைந்த அளவிலான பிற்போக்குத் தன்மையுடைய வரியாக்குவதிலும் சமத்துவத்தைக் கொணரத்தக்க வரியாக ஆக்குவதிலும் நல்ல பல விளைவுகளைப் பெற்றிருக்கவில்லை. வளர்ந்து வரும் பொருளாதாரத்தின் தேவைகளை நிறைவேற்றும் வண்ணமும், பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவி செய்யும் வண்ணமும். நிலவரி இருக்க வேண்டுமானால் அது எல்லா மக்களையும் உள்ளடக்கியதானதொரு வழியாக இருக்க வேண்டும். வருமான நோக்கிலிருந்து பார்த்தால் அதிகமான அளவு வருமானத்தை அரசுக்குத் தரத்தக்கதாக இருக்க வேண்டும். வேளாண்மை வருமானத்தில் பெரும் பகுதியைப் பெறும் செல்வம் மிகுந்தவர்களிடமிருந்து அதிகப் பங்குத் தொகையை வசூலிக்கத் தக்க வகையில் மிகவும் வளர்ச்சி விகித வரியாக இருக்க வேண்டும் விலைகளின் ஏற்றங்களினலும், நிலத்தின் மதிப்பு உயர்வுகளினலும் தோன்றும் உழைக்காமல் பெறும் வருமானம், எதிர்பாராமல் கிடைக்கும் பேரளவு ஆதாயம் ஆகியவைகளையும் உள்ளடக்கிய தாக இது இருக்க வேண்டும். மேலும் ஒருங்குபடுத்தும் நோக்கங் களுக்காக தனித்தீர்வைக்கும் (Special Assessment) வழியுள்ளதாக இது இருக்க வேண்டும. எனவே, நிலத்தின்மீதும் வேளாண்மை வருமானத்தின்மீதும் இப்போது விதிக்கப்பட்டுவரும் பல தரப் பட்ட தீர்வைகளையும ஒருங்கிணைத்து ஒரு தீர்வையாகக் கொண்டு வருவதில்தான் இதற்கான சீர்திருத்தம் இருக்கிறது. அதே நேரத்தில் இத்தகைய புதிய தீர்வை மிக எளிமையான முறையில் அமைந்ததாகவும் இருக்க வேண்டும். இவ்வாறுக, முன்னேற்றப் படுத்தப்படும்போது நிலவரியானது தனி நபரைச் சார்ந்ததாக மாற்றப்படுகிறது. அதன் வழியாக மிகவும் சமத்துவத் தன்மை யுடையதாகவும், முற்போக்குத் தன்மையுடையதாகவும் இருக் கிறது. நிலத்திலிருந்து பெறப்படும் வரியையும் உள்ளடக்கிய தாகத் தனிநபர் பொது வருமான வரி விரிவுபடுத்தப்படும்போது இது செய்யப்படலாம். ஆனல், வருமான வரியே மிகமிக அண்மையில் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டுள்ள பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இதனைச் செயல்படுத்துவது மிகவும் கடினமானதாகும். எனவே, இத்தகைய நாடுகளில் இது நல்ல முறையில் செயல்பட்டுக்கொண் டிருக்கவில்லை. இத்தகைய மிகச் சீரியதொரு முறை ஒரு புறமிருக்க, நிலத்தின்மீதான வரி வேளாண்மை வருமானத்தின்மீதான வரி ஆகியவைகளையும் உள்ளடக்கியதாக வருமான வரி விதித்தல் கொள்கைகள் உள்ள ஒரு சில வழிகள் காணப்பட வேண்டும்.

1970ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் நீதிபதி கே. என். வாஞ்சு (Justice K. N. Wanchoo) என்பவரின் தலைமையில் நேர்முக வரிகள்

விசாரணைக் குழுவை (Direct Taxes Enquiry Committee) அரசு நியமித்தது. 1972 ஜனவரியில் இக் குழு அதன் அறிக்கையை அரசிடம் அளித்தது. கணக்கில் காட்டப்படாத கறுப்புப் பணம் 1968-69-ல் ஏறத்தாழ ரூ. 70,000 மில்லியனுக்கும் அதிகமாக இருக்கும் என்றும், அதனால் வருமான வரி ஏய்ப்பு மட்டும் ஏறத்தாழ ரூ. 4 00 மில்லியனாக இருக்கும் என்றும் இக் குழு மதிப்பிட்டது. அதிகமான வரி விகிதம் இருத்தல் பற்றாக்குறையும் லைசென்ஸ், கண்ட்ரோல் முறையிருத்தல், அரசியல் கட்சிகளுக்கு நன்கொடை கொடுக்கும் வழக்கம் இருத்தல், நேர்மையற்ற வணிக முறைகள் நடைமுறையில் இருத்தல், வணிகச் செலவு களுக்கு உச்சவரம்பு நிர்ணயித்து அதற்குமேலாகும் செலவுகளுக்கு வரி விதிப்பினின்று விலக்குத் தராதிருத்தல், மிகவும் முனைப்பான விகிதங்களுடன் கூடிய மறைமுக வரிகள் இருத்தல், வரி விதிகளை நல்ல முறையில் பயன்படுத்தாதிருத்தல், மக்களின் நேர்மை உணர்வில் சீர்கேடு தோன்றியிருத்தல் போன்றவைகள்தான் இதற்கான காரணங்கள் என்றும் வாஞ்சு குழு குறிப்பிட்டிருக் கிறது. எனவே, இப்போது வருமான வரியின் உச்ச வரம்பாக இருக்கும். 97·5% அளவை 75% அளவாகக் குறைக்க வேண்டும் என்று இக் குழு பரிந்துரைத்துள்ளது. ஆனால், இப் பரிந்துரையை அரசு ஏற்றுக் கொள்வதாகத் தெரியவில்லை. கார்ப்பொரேசன் வரியைப் பொறுத்தமட்டிலும் இப்போதிருக்கும் பலவிதமான வரி விகிதங்களுக்குப் பதிலாக எல்லா நிறுவனங்களுக்கும் ஒரே மாதிரியாக 55 விழுக்காடு வரி விதிக்கலாம் என்றும் இக் குழு பரிந்துரைத்துள்ளது. மேலும், நாட்டு முன்னேற்ற நிதி (National Development Fund) புனரமைப்பு, உறுதிப்பாட்டுச் சேமிப்பு நிதி (Reconstruction and Stablization Fund) போன்ற இரு நிதி அமைப்புகளையும் நிறுவுமாறு பரிந்துரைத்துள்ளது.

மறைமுக வரிகள் (Indirect Taxes)

பெரும்பான்மையான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொது வருமானத்திற்கு மறைமுக வரிகளே ஆதாரக் கயிறாக இருந்துவருகின்றன. வளர்ச்சி பெற்ற நாடுகளில் எல்லா மக்களையும் வரி என்ற வலைக்குள் அகப்படுமாறு செய்வதற்காகவும், உயர்ந்த வருமானப் பிரிவினர் செலுத்தும் நேர்முக வரிகளுக்கு எதிரான சமன் செய்யும் வழியாகப் பயன்படுத்துவதற்காகவும் மறைமுக வரிகள் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் முக்கியமாக வருமானம் தரும் நோக்கத்திற்காகவும் அல்லது பாதுகாப்பு நோக்கங்களுக்காகவும் அல்லது அந்நியச் செலாவணியைப் பாதுகாப்பதற்காகவும் மறை முக வரிகள் பயன்படுத்தப்படுகின்றன. இந் நாடுகளில் பண்டத்தின்

தன்மைக்கேற்பவும் மதிப்பிற்கேற்பவும் வரி விகிதங்களை மாற்று வதன் மூலமும், எல்லோராலும் பயன்படுத்தப்படும் நுகர்வுப் பண்டங்கள் உற்பத்தியாளர் பண்டங்கள் என்று பண்டங்களைப் பாகுபடுத்துவதன் மூலமும் இந்த வரிகள் மிகவும் முற்போக்கான வளர்விகித வரிகளாக்கப்படுகின்றன. இவ் வரிகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கு மிகவும் பொருத்தமானவைகளாகும். ஏனென்றால், இவ் வரிகளை வசூலிப்பது மிகவும் எளிது. மேலும் இவற்றின் நிருவாகச் செலவு தராதரமாகக் குறைவாகவும் இருக் கிறது. இவ் வரிகள் செலவைக் குறைத்துச் சேமிப்பை அதிகரிக்கச் செய்கின்றன. தனியார் முதலீட்டின்மீது ஊக்குவித்தலுக்கு எதிரான விளைவு இவ் வரிகளில் மிகவும் குறைவாகவே இருக்கிறது. அரசாங்கத்தின் கருவூலத்திற்கு ஏராளமான தொகையை அவைகள் கொண்டுவந்து தருகின்றன. சுங்கத் தீர்வையின் மூலம் தான், குறிப்பாக ஒரு சில ஆடம்பரத் தன்மையுடைய பொருள் களின்மீதான தனிப்பட்ட இறக்குமதித் தீர்வையின் மூலம்தான் எகிப்தின் பொது வருமானத்தில் 50% அளவு 1950ஐச் சார்ந்த ஆண்டுகளின் தொடக்க ஆண்டுகளில் பெறப்பட்டது. மொத்த வருமானத்தில் வருமான வரியானது 60% அளவாக இருந்தபோது 1948ஆம் ஆண்டில் நேர்முக வரிகள் உச்சநிலையிலிருந்தன ஆனால், அந்த ஆண்டிலிருந்து மறைமுக வரிக்குச் சாதகமானதொரு நிலை தோன்றியது.

மறைமுக வரிகள் இரண்டாக வகைப்படுத்தப்படலாம். முதலாவது வெளிநாட்டு வணிகத்தின்மீதான வரிகள். இரண்டா வது உள்நாட்டு வரவு செலவுகளின்மீதான வரிகள். முதல் வகையில் இறக்குமதி வரிகள்தான் பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் முக்கியமானவைகளாக இருக்கின்றன. ஆனாலும், வேளாண்மைப் பண்டங்களையும் தொழில் பண்டங் களையும் பேரளவில் ஏற்றுமதி செய்யும் ஒரு சில நாடுகளில் இவ்வாறு இல்லை. உள்நாட்டுத் தொழில்களைப் பாதுகாக்கவே முக்கியமாக இறக்குமதி வரிகள் பல நாடுகளிலும் அமைந்திருந்தன. ஆனால், அண்மை ஆண்டுகளில் முனைப்பான நுகர்வைக் குறைப் பதற்காகவும் அந்நியச் செலாவணியைச் சேமிப்பதற்காகவும், பேதம் காட்டும் வரிக்கொள்கையைக் கடைப்பிடிப்பதன் மூலம் உள்நாட்டுத் தொழில்களை ஊக்குவிப்பதற்காகவும் இத்தகைய இறக்குமதி வரிகள் பயன்படுத்தப்படுகின்றன. நுகர்வுப் பண்டங் களின்மீது, குறிப்பாக ஆடம்பரத் தன்மையுடைய நுகர்வுப் பண்டங்களின்மீது அதிகமான வரியை விதித்தல், இயந்திரங் களுக்கும் மூலதனப் பண்டங்களுக்கும் வரிவிலக்குத் தருதல் அல்லது குறைந்த அளவு வரியை விதித்தல் என்பதே பேதம் காட்டும் வரிக்

கொள்கை எனப்படும். இறக்குமதி வரி விதித்தலில் குறிப்பிட்ட ஒரு சில தீர்வைகளைக் காட்டிலும் பண்டங்களின் மதிப்புக்கேற்ற வண்ணம் விதிக்கப்படும் வரிகளே மிகவும் விரும்பப்படக் கூடியவை களாகும். ஏனென்றால், பண்டங்களின் மதிப்புக்கேற்றவண்ணம் விதிக்கப்படும் வரிமுறை மிகவும் நெகிழ்வுத் தன்மையுடைய தாகவும் பேரளவு வருமானத்தைத் தரத்தக்கதாகவும் இருக்கிறது. இது தவிர, குறிப்பிட்ட வரி விகிதங்கள் என்பதைக் காட்டிலும் மதிப்புக்கேற்றவாறான வரி விதிப்பில் பலவகை இறக்குமதிகளுக் கிடையே பேதம் காட்டுதல் மிகவும் எளிதானதாகும். பொறிவழிப் பண்டங்களின்மீதான இறக்குமதி வரிகள் நேரிடையாகவும் மறைமுகமாகவும் உள்நாட்டுத் தொழில் மயமாதலுக்கு உதவி செய்கின்றன. உள்நாட்டு உற்பத்திக்குப் பதிலியாகப் பயன் படுத்தத்தக்க இறக்குமதிப் பண்டங்களின்மீது அதிகமான வரிகள் விதிக்கப்பட்டால் அவை நேரிடையாகவே தொழில் மயமாதலை முன்னேற்றுவிக்கும். உள்நாட்டுப் பதிலிகள் உற்பத்தி செய்யப்பட முடியாவிட்டால் நிறுத்தப்பட்டுவிட்ட இறக்குமதிப் பண்டங் களின் தேவை இருந்த இடத்தில் வேறு விதமான பண்டங்களின் தேவை அதிகரிக்கும். இவ்வாறாக, உள்நாட்டு உற்பத்தியின் மீதான தேவை அதிகரிக்காவிட்டால், பொருளாதாரத்தில் பேரளவு சேமிப்பு கிடைக்கும்.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள்ளேயும், சிலோன், மலேயா, தாய்லாந்து போன்ற வேளாண்மைப் பண்டங்களைப் பேரளவில் ஏற்றுமதி செய்பவைகளாக உள்ள நாடுகள் ஏற்று மதிப் பண்டங்களின்மீது வரிவிதிப்பதன் வாயிலாக அவைகளின் வருமானத்தின் நல்லதொரு பகுதியைப் பெறுகின்றன. உள் நாட்டில் உள்ள உற்பத்தி நிலைகள், அப்பண்டங்களுக்கு அயல் நாடுகளில் உள்ள தேவையின் தன்மை ஆகியவைகளைச் சார்ந்தே ஏற்றுமதிப் பண்டங்களின்மீது வரி விதிப்பதன் வாயிலாகப் பெறப்படும் பேரளவு வருமானத்தின் அளவு அமைந்திருக் கிறது.

ஏற்றுமதி வரிகள் மிக எளிதாக நிருவகிக்கப் படத்தக்க வைகள் என்பதோடு, பொருளாதார உறுதித் தன்மையை முன்னேற்றுவிப்பதற்கானதொரு வழியாகவும் அவைகள் பயன் படுத்தப்படத் தக்கவைகளாகவும் இருக்கின்றன. விலை, தேவை நிலைகள் ஆகியவைகளுக்கேற்ப வரி விகிதத்தை அதிகரிப்பதன் மூலமும், குறைப்பதன் மூலமும், பொருளாதார மலர்ச்சிக் காலத்தில் ஏராளமாகத் தோன்றக்கூடிய அரசு வருமானங்களி லிருந்து ரொக்க இருப்புகளை அமைத்துக்கொள்வதன் மூலமும் இது

செய்யப்படுகிறது. சிலோனில் தேயிலை ரப்பர் ஆகியவைகளைப் பொறுத்த மட்டிலும் இத்தகைய கொள்கை கடைப்பிடிக்கப் பட்டது. இந்தியாவில் சணல் ஏற்றுமதியிலும் தாய்லாந்தில் அரிசி ஏற்றுமதியிலும் இத்தகைய இசைவிப்புகள் மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன. ஒழுங்கான ஏற்றுமதித் தீர்வைகளின் மூலம் பெறப்படுவதைத் தவிர, ஏற்றுமதிப் பண்டங்களிலிருந்து மறை முகமாகவும் ஒரு சில நாடுகள் வருமானத்தைப் பெறுகின்றன. பர்மாவில் அரசு வேளாண்மை அங்காடிக்குழு (State Agricultural Marketing Board) அரிசியின் உள்நாட்டு விலையை மிகவும் குறைவான நிலையிலும் நிரந்தரமான நிலையிலும் நிர்ணயித்து விட்டு. வெளிநாடுகளில் அதிகமான உலக விலையில் விற்று ஆதாயத்தைப் பெறுகிறது. ரப்பர், தகரம் போன்றவற்றை ஏற்று மதி செய்பவர்கள் மூலம் பெறப்படும் அந்நியச் செலாவணியை பாதகமான முறையில் அதிகமான பரிமாற்ற விகிதத்தின் அடிப்படையில் இறக்குமதியாளர்களுக்கு விற்று, அதன் மூலம் 1947–55-ல் தாய்லாந்து ஏராளமான ஆதாயத்தைப் பெற்றது. அவ் வாறு பெறப்பட்ட ஆதாயத்திலிருந்து உறுதிப்படுத்தல் நிதியைத் (Stabilisation Fund) தோற்றுவித்தது. அயல்நாட்டு வணிகத்தின் மீதான வரி விதித்தல் பேரளவு வருமானத்தைப் பெரும்பாலான நேரங்களில் தரத்தக்கதாக இருந்தாலும் உறுதியற்றதாக இருந்தது என்ற மிகப் பெரிய குறையையும் கொண்டிருக்கிறது. பொருளா தார முன்னேற்றம் என்ற நோக்கிலிருந்து பார்க்கும்போது, இது மிகவும் சிறப்புடைய தொன்றாகும். ஏனென்றால், முக்கியமான தொரு மூலத்திலிருந்து பெறத்தக்க வருவாயைப்பற்றிய உறுதி யின்மை இருந்தால் அது பொது முதலீட்டுச் செலவுகளைப் பொறுத்தமட்டிலுமான முடிவுகளைப் பாதிக்கும்.

உள்நாட்டு வரவுசெலவுகளின்மீதான வரிகளைப் பொறுத்த மட்டிலும் ஆயத்தீர்வைகளும் (Excise duties) விற்பனை வரிகளும் தான் மிக அதிகமான வருமானத்தை அரசுக்கு ஈட்டித்தரும் முக்கியமான வரி மூலங்களாகும். வருமானவரி செலுத்தலில் விளக்கம் பெற்றுள்ள ஏராளமான நுகர்வோர்களை அணுகும் ஒரு வழியாக இவ் வரிகள் அமைந்துள்ளன. இவைகள் நுகர் வோரின் செலவுகளைக் குறைத்துப் பொருளாதாரத்தின் சேமிப்பு எல்லையை அதிகரிக்கின்றன. விற்பனை வரியானது செலவின்மீது தான் விதிக்கப்படுகின்றது. சேமிப்போடு சேர்க்கப்படும் வருமானத் தின்மீது இது விதிக்கப்படுவதில்லை. இவ் வரிகளை வசூலிப்பதற்கா கும் செலவும் குறைவுப் பண்டங்களின் தன்மைக் கேற்றவாறும் மதிப்புக் கேற்றவாறும் அதன் விகிதங்களை அதிகரிக்க முடியும். வரி விகிதங்களில் இசைவிப்பு செய்வதன் மூலமாகவும், அதிகப்படியான

நுகர்வுப் பண்டங்களை விற்பனை வரிக்கு இலக்காக்குவதன் மூல மாகவும் பொருளாதாரத்தின் வரவு செலவுத் திட்டத் தேவைகள் வருமானம், விலை மாற்றங்கள் ஆகியவைகளுக்கு ஏற்றவண்ணம் இவ் வரிகளிலிருந்து பெறத்தக்க வருமான அளவுகளை மாற்ற முடியும். எந்த அளவுக்கு எளிதான முறையில் இந்த வருமான மூலத்திலிருந்து வருமானத்தை வசூலிக்க முடியும் என்பது பண்டங் களின் தேவை நெகிழ்ச்சியைச் சார்ந்திருக்கிறது. தேவையின் விலை நெகிழ்ச்சி குறைவானதாகவும் வருமான நெகிழ்ச்சி அதிகமான தாகவும் இருந்தால் வருமானம் அதிகமாக இருக்கும் என்பதோடு வசூலும் மிக எளிதானதாக இருக்கும். இவைகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கு மிகவும் பொருத்தமானவைகளாகும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் இப்போதுதான் வளர்ச்சி பெறத் தொடங்கியுள்ளன. அதனால் தோன்றக்கூடிய தொழிற் பெருக்கம், சமுதாயத்தில் செலவழிக்கும் நிலையில் உள்ள அதிகரிப்பு ஆகியவைகளினால் நன்மையைப் பெறுவதும் அரசுகளின் வரு மானத்தை அதிகரிப்பதும் இயலக்கூடியவைகளாகும்.

இந்தியாவில் அயல்நாட்டு வணிகத்தின்மீதான வரிகளில் சரிவு தோன்றியுள்ளது. உள்நாட்டு வரவு செலவுகளின்மீதான வருமான வசூலின் அதிகரிப்பினால் இச் சரிவு ஈடுகட்டப்பட்டுள்ளது. இந்தியப் பேரரசின் மொத்த வருமானம் 1950–51, 1960–61 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட ஆண்டுகளில் ரூ 3,570 மில்லியனி லிருந்து ரூ ',301 மில்லியனாக, இரண்டு மடங்குக்கும் அதிகமான அளவில்தான் அதிகரித்தது. ஆனால், மைய அரசின் ஆயத் தீர்வை யினால் பெறப்பட்ட வருமானம் ரூ 6‍‍'5 மில்லியனிலிருந்து ரூ 3,413 மில்லியனாக ஐந்து மடங்குக்கும் அதிகமான அளவுக்கு அதிகரித்தது. மொத்த வரி வருமானத்தின் விழுக்காடாகப் பார்த்தால் மைய அரசின் ஆயத் தீர்வை 1950-51–ல் 19%-லிருந்து 1960–61ல் 47%-க்கு அதிகரித்தது அதற்கு மாறாக இக் காலத்தில் சுங்க வரியின் மூலம் பெறப்பட்ட வருமானம் ரூ 1,572 மில்லியனிலிருந்து ரூ 1,700 மில்லியனாக மட்டுமே அதிகரித்தது. ஆயத்தீர்வை உறுதியாக அதிகரித்துவந்ததற்கு அதிகரித்த தொழில் உற்பத்தி, மக்களின் வாங்கும் சக்தியில் அதிகரிப்பு, மக்களின் நுகர்வு நிலையில் அதிகரிப்பு, பலவிதமான பண்டங்களின்மீது வரி விதித்தல் ஆகிய வைகளே காரணங்களாகும். முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கம்வரை ஆயத் தீர்வைக்குட்பட்ட பண்டங்களின் எண்ணிக்கை பன்னிரண்டுதான். அதுமுதல் அதிகரித்த எண்ணிக் கையிலான பண்டங்களின்மீது வரிகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. இப்போது அறுபது பண்டங்களின்மீது ஆயத்தீர்வை வசூலிக்கப் படுகின்றது. உண்மையாகப் பார்த்தால், உப்பு, அரிசி வகைகள்

நீங்கலாக உள்ள மற்றெல்லா வகை இன்றியமையாத பண்டங்கள் யாவும் ஆயத் தீர்வையின் பிடிக்குள் கொண்டுவரப்பட்டுள்ளன. மறைமுக வரி விதிப்புக்குள், குறிப்பாக ஆயத்தீர்வைக்குள் பண்டங்களைக் கொண்டுவருவதில் அரசு ஒரு முடிவைக் கொண்டிருக்கிறது. அதாவது, பொருளாதார முன்னேற்றம் என்ற அடிப்படையில் இறக்குமதிகளையும் நுகர்வையும் அதிகப்படுத்துவது, ஏற்றுமதிகளையும் முதலீட்டையும் ஊக்குவிப்பது என்ற இலக்குகளை இப்போதுள்ள கொள்கை கொண்டிருக்க வேண்டும் என்பதே அந்த முடிவு.

'நாடு தொழில் துறையில் பெருக்கமடையும்போது ஆயத் தீர்வை வலையைப் பரவலாக்குவதென்பது இப்போது முடியத் தக்கதுதான்' என்று அதிகப்படியாக விதிக்கப்படும் ஆயத் தீர்வைகளுக்கு ஆதரவாகச் சொல்லப்படுவதுண்டு. இறக்குமதி வரிகளுக்கு எதிராக அதற்கிணையான விளைவுகளை உடைய தொன்றாக ஆயத் தீர்வைகள் ஒரு காலத்தில் கருதப்பட்டன என்பதையும் இங்குக் கருதவேண்டும். உள்நாட்டு உற்பத்தியாளருக்குத் தீங்கு விளைவிக்காதவண்ணம் அதிகமான ஆயத்தீர்வைக்கு எதிராக அயல்நாட்டு உற்பத்தியாளரின்மீது மாற்று விளைவுடைய தொரு கட்டணமாக இறக்குமதி வரிகளை விதிப்பது என்பதை நோக்கியே அண்மைக்கால மாற்றம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. வரி வருமானத்தை அதிகரிக்க வேண்டிய அவசியம் நன்கு புரிந்து கொள்ளத் தக்கதுதான். அதைப் போன்று, இறக்குமதிகளை அதைரியப்படுத்துதல் ஏற்றுமதிகளை ஊக்குவித்தல் ஆகிய இரண்டு நோக்கங்களும் நாட்டின் தொழிற்பெருக்கம் என்ற அடிப்படையில் பார்க்கும்போது மிகவும் சரியானவைகள் என்பதோடு மிகவும் இன்றியமையாதவைகள் என்பதும் சரிதான். ஆனால், அறிவியல் அடிப்படையில் அமைந்த வரி முறையின் அடிப்படைக் கொள்கைகளுக்கு இவைகள் ஒத்து வரக்கூடியவைகள்தானா என்பதும், இப்போது மேற்கொள்ளப்படும் வழிமுறைகள் யாவும் நல்ல முறையில் அமைக்கப்பட்டவைகள்தானா என்பதும் நிச்சயம் சோதித்துப் பார்க்க வேண்டியவைகளாகும். நுகர்வுப் பண்டங்கள் பலவற்றின்மீதும் பலவிதமான தீர்வைகளை விதித்தது வாழ்க்கைச் செலவை அதிகரித்திருக்கின்றது என்பதும் பொருளாதாரத்தின் பணவீக்க அழுத்தங்களை அதிகரித்திருக்கின்றது என்பதும் மறுக்க முடியாதவைகளாகும். தவிர, உற்பத்தியில் பயன்படுத்தப்படும் ஏராளமான பண்டங்களின்மீது இவ்வாறு விதிக்கப்படும் தீர்வைகள் நாட்டின் ஏற்றுமதிகளைப் பாதிக்காவா என்ற வினாவும், அவ்வாறு பாதிப்பதன் மூலம் நமது வரிக் கொள்கையின் சிறப்பு இயல்புகளுக்கு எதிராகச் செயல்படாவா என்ற வினாவும் கேட்கப்

படவேண்டிய வினக்களாகும். இத்தகைய வரிகளை வசூலிப்பதற்காகும் செலவு, உற்பத்தியில் இத்தகைய வரிகளால் தோன்றும் இடையூறுகள், ஒழுங்கீனங்கள் ஆகியவைகளோடு ஒப்பிடுகையில் இவ் வரிகளை விதிப்பதனால் பெறப்படும் வருமானத்தின் அளவு மிகவும் குறைவானதாகவே இருக்கிறது என்ற குறைபாடும் சுட்டிக் காட்டப்படுகின்றன. 'குறைந்த வளர்ச்சியுடைய பல நாடுகளில், புதிய வரிகளைச் சேர்த்தல், பழைய வரிகளின்மீது அதிகப்படியாக வரிகளைச் சேர்த்தல் என்பனவற்றால் வரி அமைப்பை மிகவும் சிக்கலானதாகவும், அதன் மூலமாக அதன் திறமையைக் குறைப்பதாகவும் காணப்படும் போக்கு குறிப்பாக மறைமுக வரிகளில் அதிகமான அளவில் காணப்படுகின்றது' என்று ஐக்கிய நாடுகளின் நிபுணர்கள் கருதுகிறார்கள். ஒரு சில வரிகளை விதிப்பதால் மக்களுக்குப் பல தொல்லைகளும் இடையூறுகளும் தோன்றுகின்றன. அவ் வரிகளின் வருமானங்களைக் காட்டிலும் தொல்லைகளும் துயரங்களுமே அதிகமான அளவில் இருக்கும். இத்தகைய வரிகளை அறவே நீக்கிவிடுவதும் இவைகளுக்குப் பதிலாக வேறு சில பண்டங்களின்மீதான வரி விகிதத்தை அதிகப்படுத்திக்கொள்வதும் நிருவாக இயந்திரம் மிகவும் திறம்பட்ட முறையில் செயல்படும்வண்ணம் தூண்டி விடப்படுவதும் நல்லதொரு வரிக் கொள்கைக்கு மிகவும் முக்கியமானவைகளாகும்.

### வரி விதித்தலும் உற்சாகமூட்டுதலும் (Taxation and Incentives)

வளர்ச்சிக்கேற்ற நடப்புச் செலவுகளைக் காட்டிலும் அதிகமான அளவில் உள்ள (கடன்கள் நீங்கலாக) வரி வருமானங்களும் மற்ற வருமானங்களும் பொதுச் சேமிப்பு எனப்படுகின்றன. பொருளாதாரம் ஒன்றில், குறிப்பாகப் பொருளாதார முன்னேற்றத்தில் தலைமைப் பொறுப்பேற்று நடத்திச்செல்லும் பொருளாதாரம் ஒன்றில் இத்தகைய பொதுச் சேமிப்புகளை அதிகரிக்க வேண்டிய அவசியம் மிகவும் தெளிவாக இருக்கிறது. தனியார் துறை, பொதுத்துறை ஆகிய இரண்டு துறைகளிலும் மேற்கொள்ளப்படும் முதலீடுகளுக்கான இறுதியான மூலம் ஒன்றுதான். பொருளாதாரத்தின் மொத்தச் சேமிப்பு என்பதுதான் அது. எனவே, சேமிப்பு எல்லை விரிவுபடுத்தப்படாமலிருக்கும்போது வரி விதித்தல் அல்லது உள் நாட்டில் கடன் எழுப்புதல் அல்லது பற்றுக்குறை நிதியாக்கம் ஆகியவற்றின்மூலம் பொதுத்துறையால் மேற்கொள்ளப்படும் சேமிப்புக் குவிப்பு தனியார் துறைக்குக் கிடைக்கத்தக்க மூலவளங்களையும் பாதிக்கும் என்றாகிறது. இருப்பினும், இதை அரசு தவிர்க்க முடியும். அதாவது முதலீட்டிற்கான தனியார் துறையின் ஊக்குவித்தல்களைப் பாதிக்காத

வகையில் சேமிப்பைத் திரட்டுவதற்கு உதவி செய்யும் வகையிலான வரிக் கொள்கை அல்லது கடன் வாங்கும் கொள்கையைப் பின்பற்ற அரசாங்கத்தால் இயலும். இது தவிர, தனியார் உற்பத்தி முறையை உற்சாகப்படுத்துவதிலும் தூண்டிவிடுவதிலும் உறுதியானதொரு பங்காற்றும்வண்ணம் வரிக் கொள்கையை வகுக்கமுடியும். பொருளாதார முன்னேற்றத்திற்கு அரசு பங்காற்றுவதைப் போன்று தனியார் துறையும் பாங்காற்ற வேண்டும் என்று எதிர்பார்க்கப்படும் பொருளாதாரம் ஒன்றில் தனியார் துறைக்கு உற்சாக மூட்டுதல் மிகவும் அவசியமானதாகும். எந்த ஒரு வரி விதித்தல் முறையிலும் மூலவளங்களைப் பொதுத் துறைக்கு மாற்றுவதன் மூலம் தனியார் துறைக்கு ஏற்படும் தீய விளைவுகள் யாவும் மாற்றப்பட்டு, அத்தகைய மாற்றத்தின் காரணமாகப் பொருளாதாரத்திற்குக் கிடைக்கும் நன்மைகளால் அவை ஈடுகட்டப்படவேண்டும். இவ்வாறாக, அரசுத் துறைக்கு வெளியில் மேற்கொள்ளப்படும் முயற்சிகளின்மீது தோன்றும் இழப்புகளை ஈடுகட்டும்வண்ணமும் சரியானவண்ணமும் பயன்படுத்தப்படாமலும், தேவையான அளவுக்கு வருமானத்தை தரத்தக்கதாக இல்லாமலும் இருந்தால் அந்த வரி முறையானது தவறான முறையில் அமைக்கப்பட்டது ஆகும். வரி முறையானது நல்ல முறையில் வகுபடாதிருந்தால் பொருளாதார முன்னேற்றத்திற்கானதொரு குழுவாக அமைந்திருக்கும் நல்ல முறையில் அமைக்கப்பட்டுள்ள தொழில்களின்மீது வரிகளின் பளு அதிகமான அளவில் விழுவதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன. மெக்சிகோவின் பொருளாதாரத்தில் 1940ஐச் சார்ந்த இறுதி ஆண்டுகளில் அதிக வரி விதித்தலினால் சுரங்கத் தொழில் பாதிக்கப்பட்டதாகக் குறிப்பிடப்படுகிறது. ஆதாயத்தைப் புதிய வணிகங்களில் மறு முதலீடு செய்வதற்கான ஊக்குவித்தல்களைத் தரும் வண்ணம் வரி அமைப்பை ஆக்குதல், முதலீட்டிற்குள் செல்லத்தக்க சேமிப்புக் குவிப்புக்கு உதவுதல் ஆகியவைகளின் அவசியம் இந்திய அரசாங்கத்தால் 1947ஆம் ஆண்டிலிருந்து ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

வரிமுறைகளின் மூலம் நேரிடையாகவே தனியார் மூலதன ஆக்கத்திற்கான ஊக்குவிசைகள் தரப்படுகின்றன என்பதோடு மறைமுகமாக அரசுச் சேமிப்புகளையும் முதலீடுகளையும் அதிகரிப்பதன் மூலமும் இத்தகைய ஊக்குவிசைகள் தரப்படுகின்றன, மின்சாரம், போக்குவரத்து, செய்தித் தொடர்புகள் போன்ற பொருளாதாரப் பின்னமைப்புகள்மீதும், கல்வி, பொதுச்சுகாதாரம், தொழில் நுணுக்கப்பயிற்சி போன்ற சமுதாயப் பின்னமைப்புகள்மீதும் அரசுத் துறையின் முதலீடுகள் மூலம் பொருளா,

தாரத்திற்குத் தேவையான உள்ளமைப்புகளை அரசு அமைத்துத் தருகிறது.

அதன் மூலம், வரி விதித்தலால் பாதிக்கப்படும் தனியார் முயற்சிகளுக்கு அரசு நன்மையைத் தருகிறது. மேலும் தனியார் துறைக்கான ஆதாயத்தைத் தரத்தக்க புதிய முதலீட்டு வாய்களின் எல்லையை விரிவுபடுத்துகிறது. அதோடு, தனியார் மூலதன ஆக்கத்தையும் உற்பத்தியையும் முன்னேற்றுவதில் உதவி செய்கிறது. இவை தவிர, நல்ல முறையில் வளர்ச்சி பெற்றுள்ள பணச்சந்தை, மூலதனச் சந்தை ஆகியவைகள் இல்லாமல் இருக்கும் பல குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள அரசுகள் ஏறப் பான பல நிதிக் கழகங்களின் மூலம், வரிகளின் வாயிலாகப் பெறப் பட்ட பொது மூலவளங்களைத் தனியார் முயற்சிகளின் நிதியாக்கத் திற்குத் தருகின்றன. தனியார் வங்கி முறையின் மூலமும், வரியின் மூலமும் பெறப்பட்ட சேமிப்புகளைத் தனியார் துறைத் தொழில் முயல்வோர்களுக்குக் கிடைக்கும்வண்ணம் தனியார் தொழில் களுக்குப் பணவசதிகளைச் செய்து கொடுப்பது இன்னொரு முறை யாகும். இவ்வாறுக வரியின் மூலம் பெறப்படும் தொகையானது வங்கியிடம் இருக்கும் பொதுக் கடனைக் குறைப்பதற்குப் பயன் படுத்தப்பட்டால் தனியார் முதலீட்டுத் திட்டங்களுக்கு நிதியாக்கம் செய்யத் தேவையான கடன்களைப் பெருக்குவது வங்கிகளுக்கு முடியத்தக்கதாகும்.

வரி ஊக்குவிசைகளின் அடிப்படைக் கொள்கையானது நேர் முகத் தன்மையையும் எதிர் மறைத்தன்மையையும் பெற்றிருக் கிறது. முதலீடு செய்யத்தக்க தனியார் மூலவளங்களை உற்பத்தி யற்ற வழிகளில் சென்றுவிடாமல் தடுத்தல் அல்லது வழிப் படுத்துதல் என்பது எதிர்மறைத் தன்மையாகும். பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் உற்பத்தியிலும், உள்நாட்டு மூலதன ஆக்கத்தை முன்னேற்று விக்கும் முதலீட்டு வழிகளிலும் தொழில் முயற்சிகளிலும் அத்தகைய ஓட்டத்தை ஊக்குவித்தல் என்பது நேர்முகத் தன்மை யாகும். தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரத்தில் விலை இயந்திரம்தான் முதலீட்டுச் செலவு ஓட்டத்தை வகைப்படுத்து கிறது. அத்தகையதொரு பொருளாதாரத்தில் ஆதாயத்தைப் பெறுவதற்கான வாய்ப்புகளை அதிகரிப்பதன் மூலம் தனியார் முதலீட்டை ஊக்குவித்தல் இயலும். உற்பத்திச் செலவைக் குறைத்தல், உற்பத்தித்திறனை அதிகரித்தல், ஆபத்துகளைக் குறைத்தல், ஒரு சில பாதுகாப்புகளைத் தருவதன் மூலமும், ஆதாயத்தைப் பெறும் நிறுவனங்கள் எந்த முறைகளில் அதனைப்

பயன்படுத்திஞல் நல்லது என்று கருதுகின்றனவோ அந்தந்த வழிகளில் பயன்படுத்துவதற்கான ஓரளவு சுதந்திரத்தை அந்த நிறுவனங்களுக்குத் தருவதன் மூலமும் எதிர்பார்க்கக்கூடிய இழப்புகளைத் தவிர்த்தல் ஆகியவைகளைக் கையாளுவதன்மூலம் இவைகளைப் பெறலாம். வருமான வரியைப் பொறுத்தமட்டிலும் தான் பெரும்பாலான வரிச் சலுகைகள் இருக்கின்றன. வருமான வரிக்கு உட்படுத்தப்படும் தனிநபர் வருமானத்தைப் பொறுத்த மட்டிலும் வளர் விகித முறையானது தேவையான நுகர்வைத் தவிர்ப்பதற்கு மட்டுமல்லாமல் அரசாங்கத்திற்குத் தேவையான வருமானத்தை அதிகரிப்பதற்கும் உதவுகிறது. தவிர, சேமிப்பதற் கான தனிநபர்களின் ஊக்குவிசைகளை மேலும் வலுப்படுத்து வதற்காக, வரிச் செலுத்துவோர் சேமிக்கும் வருமானத்தின் குறிப்பிட்டதொரு பகுதியைப் பொறுத்தமட்டிலும் வரித் தள்ளு படிகள் தரப்பட்டுள்ளன. அஞ்சலகச் சேமிப்பு வங்கிகளிலிருந்து பெறப்படும் வட்டியும், சிலவகை அரசாங்கப் பத்திரங்களிலிருந்து பெறப்படும் வட்டியும், இந்தியா, சிலோன், பாக்கிஸ்தான் போன்ற நாடுகளில் வருமான வரிவிதித்தலிலிருந்து தள்ளுபடி செய்யப்படு கின்றன. ஆயுள் காப்பீட்டுக் கழகத்திற்குச் செலுத்தும் பிரீமியத் தொகை பகுதியளவில் அல்லது முழுவதுமாக இந்தியாவிலும். ஜப்பானிலும். பாக்கிஸ்தானிலும் வரி விதிக்கத்தக்க வருமானத் திலிருந்து விலக்கப்படுகின்றன.

ஒரு சில ஆண்டுகளில் வணிகத்தில் ஏற்படும் இழப்புகளை மற்றப் பல ஆண்டுகளில் பெறப்படும் ஆதாயத்திலிருந்து ஈடுகட்டு வதற்காக நீண்ட கால எல்லையை அனுமதிக்கலாம். இவ்வாருக ஆதாயம் தரும் நல்ல காலம், இழப்பு தோன்றும் கெட்ட காலம் ஆகிய இருவகைக் காலங்களும் சேர்த்துப் பார்க்கப்படும் போது கம்பெனியின் நிகர வரிப் பொறுப்பு குறைக்கப்படுகிறது. தவிர, தொடக்க நிலைகளில் இழப்புகளிஞல் தோன்றும் பாதகமான விளைவுகளும் குறைக்கப்படலாம். இவைகள் தவிர குறிப்பிட்ட அளவு தொடக்கக் காலத்தில் வரி விதிவிலக்குகள் தரப்படுவதன் மூலமும் புதிய நிறுவனங்களைத் தொடங்குவது ஊக்குவிக்கப் படுகிறது. வணிக நிறுவனங்களைச் சரியான நல்ல நிலையில் நிலை நிறுத்துவதற்கு இவை வகை செய்கின்றன. சிலோனிலும் இந்தியாவிலும் இதே நோக்கத்தைப் பெறுவதற்காக முன்னேற்றத் தள்ளுபடிகள் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன. ஏதாவதொரு ஆண்டில் நிறுவப்படும் தொழிற்சாலை, இயந்திரங்கள், பொறிகள் ஆகியவைகளின் உற்பத்திச் செலவில் 20 விழுக்காட்டு அளவுவரை முன்னேற்றத் தள்ளுபடிகள் சிலோனில் தரப்படுகின்றன. இவைகள் சாதாரணமான தொழில்களுக்குத் தரப்படுகின்றன. ஆனுல்,

பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்று நிறுவனம் கருதப்படுமானால் இத் தள்ளுபடியின் அளவு 40 விழுக்காடாக அதிகரிக்கப்படுகிறது. இந்த விகிதமானது இந்தியாவில் 25% ஆகவும் ஜப்பானில், 50% ஆகவும் இருக்கிறது. இத்தகைய தள்ளுபடிகள், வழக்கமாகத் தரப்படும் தேய்மானப் படிகள், தொழில்களுக்குத் தரப்படும் நேரிடையான வரி விலக்குக்கான தொகை ஆகியவைகளுடன் சேர்த்துத் தரப்படுகின்றது. இவ்வாறு புதிய தொழில்களுக்கு வரி விடுமுறைகள் தரப்படுவது விரும்பப்படும் வழிகளில் முதலீடுகளை மேற்கொள்வதற்கான ஊக்கு விசையாகவும் அமைகின்றது. ஒப்புக்கொள்ளப்பட்ட தொழில் முயற்சிகளுக்கே இத்தகைய சலுகைகள் சிலோன், இந்தியா, பாக்கிஸ்தான், பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளில் தரப்படுகின்றன. இத்தகைய வரி விடுமுறைக் காலம் ஆப்கானிஸ்தானம், ஜப்பான், பர்மா ஆகிய நாடுகளில் மூன்றாண்டுக் காலத்திலிருந்து இந்தியா, சிலோன் ஆகிய நாடுகளின் ஐந்தாண்டு காலம்வரை வேறுபடுகின்றது. 1953-ல் தரப்பட்ட வரிச் சலுகைகளின்படி பிலிப்பைன்ஸ் நாட்டில் 1958ஆம் ஆண்டு முடிய முழு வரி விடுமுறை தரப்பட்டது. அதன் பிறகு வளர்விகிதத்தில் வரிப் பொறுப்பு 10%-லிருந்து 1963-ல் 100%-க்கு அதிகரிக்கப்பட்டது. நிலையான பொருளாதாரத் தன்மையை நிலைநாட்டுவதற்கு ஒரு தொழில் எந்த அளவுக்கு அதன் பங்கை ஆற்றுகிறது, உற்பத்தி நிகழ்ச்சிகளில் எந்த அளவுக்கு இறக்குமதியைச் சார்ந்திருக்கிறது என்பனவற்றையும் நவீன உற்பத்தி முறைகளுடனும், பழக்க வழக்கங்களுடனும் பேரளவில் தொழிலை நிருணயிக்க முடியுமா என்பதையும் பொறுத்து வரிச் சலுகைகளைப் பெறுவதற்கான தகுதி அந்த நாட்டில் நிருணயிக்கப்பட்டது.

பேரளவு வணிகங்கள் மிக முக்கியமான புறச் சிக்கனங்களுக்கானதொரு மூலமாக இருக்கும் என்று கருதப்படுகிறது. அந்த எடுகோளின் அடிப்படையில் பேரளவு வணிகங்களை முன்னேற்றுவிப்பதற்காக ஒரு சில நாடுகளில் பெரிய கூட்டுப் பங்கு நிறுவனங்களுக்கு வரிச் சலுகைகள் தரப்படுகின்றன. இவ்வாறாக எகிப்தில் 1953-ல் தரப்பட்ட வரிச் சலுகைகளைக் கார்ப்பரேசன்களும் பங்கு நிறுவனக் கம்பெனிகளும் பயன்படுத்திக்கொண்டன. குறைந்த அளவு 20 தொழிலாளர்களுக்கு வேலை தரத்தக்க புதிய தொழில் முயற்சிகள் அல்லது மின்சாரச் சக்தியைப் பயன்படுத்திக்கொண்டு பத்து அல்லது அதிகமான தொழிலாளர்களுக்கு வேலை தரத்தக்க புதிய தொழில் முயற்சிகள் ஆகியவைகளுக்கு இந்தியாவில் வருமான வரியிலிருந்து விலக்கு தரப்படுகிறது. மின்சார சக்தியைப் பயன்படுத்திக்கொண்டு இருபத்து ஐந்து நபர்களுக்கும் அதிகமானவர்

களுக்கு வேலை தரத்தக்க தொழில்களுக்கு மட்டுமே இலோனில் வரிச் சலுகைகள் தரப்படுகின்றன. மூலதனச் சந்தையை முன்னேற்றுவிக்கத்தக்க ஊக்கத்தைத் தருவதற்குச் சிறப்பான சில வரி முறைகளை எகிப்தும் இஸ்ரேலும் கடைப்பிடிக்கின்றன.

நிலத்தை மிக நல்ல முறையில் பயன்படுத்துவதை ஊக்குவிப்பதற்கும் வேளாண்மை உற்பத்தியை அதிகரிப்பதற்கும் எதிர்மறை வழியில் வேளாண்மை செய்யத்தக்க நிலத்தை புறக்கணிப்பதை அதைரியப்படுத்துவதற்கும் நிலவரி பயன்படுத்தப்படுகிறது. 1950-ல் கொலம்பியாவுக்கான உலக வங்கிக் குழு (Missoin of the International Bank Colombia) ஒரு புதிய வழியைக் குறிப்பிட்டது. அதாவது நிலத்தின் உண்மையான விளைவின்மீது வரி விதிப்பதைக் காட்டிலும் நிலத்திலிருந்து பெறத்தக்க உள்ளார்ந்திருக்கும் விளைவின்மீது வரி விதிப்பது நிலத்தின் உற்பத்தித் திறனை அதிகரிப்பதற்கானதொரு வழியாக இருக்கும். புதிதாக உற்பத்திக்குக் கொண்டுவரப்பட்ட நிலத்திற்கு அல்லது பல ஆண்டுகளாகத் தரிசாக விடப்பட்டுப் புதிதாக விவசாயத்திற்குக் கொண்டுவரப்பட்ட நிலத்திற்குக் குறிப்பிட்ட கால அளவுக்கு நில வரியிலிருந்து விலக்குகள் தரப்படுதல், நீர்ப்பாசனத்திற்கான முதலீடு செய்யப்படும் பணத்திற்கு வரி விலக்கு தரப்படுதல், அல்லது புதிய மேம்பாடடைந்த உற்பத்தி முறைகளுக்கு நல்ல உற்சாகம் தரப்படுதல் ஆகியவைகளும் இவ்வகையைச் சேர்ந்தவைகளே. புதிய குடிவார முறையை ஏற்றுக் கொள்ளும் நிலச் சொந்தக்காரர்களுக்கு குறைந்த விகிதங்கள் என்ற வடிவத்தில் வரிச் சலுகைகள் வியட்நாமில் தரப்படுகின்றன. பிரதான சீனவில் கூட்டுறவுப் பண்ணைகளில் வரிச் சலுகைகள் தரப்படுகின்றன. வேளாண்மை உற்பத்தியில் மாற்றங்களைக் கொண்டுவருவதற்குத் தகுதியான வரிக்கொள்கை வகுக்கப்பட வேண்டும். வேளாண்மை உற்பத்தியில் மாற்றத்திற்கு எடுத்துக்காட்டாக உணவுப் பயிர்களுக்குப் பதிலாக வணிகப் பயிர்களை உற்பத்தி செய்தலைக் குறிப்பிடலாம். அதாவது வரிச்சலுகை தருவதன் மூலமாக அல்லது குறைந்த விகிதத்தில் வரி விதிப்பதன் மூலமாக விரும்பும் பயிரைப் பயிரிடுவதற்கு நிலத்தைப் பயன்படுத்த வைக்கலாம். மற்றுமொரு புறத்தில் புறக்கணிக்கப்பட்டுக் கிடக்கும் நிலங்களின்மீது அபராத வரிகளை விதிக்கலாம். எதிர்பாராத பெரும் ஆதாயங்களைப் பெறுவதற்காக ஊகவாணிக நோக்கத்துடன் நிலத்தை வைத்திருந்தால் அத்தகைய நிலமானது அபராத வரி விதிப்பில் உட்படுத்தப்படலாம்.

மறைமுக வரிகள் யாவும் அரசுக்கு அதிகமான அளவு வருமானத்தைத் தேடித் தருவதற்காகவே முக்கியமாக அமைக்கப்

பட்டிக்கின்றன. இவ்வாறு அமைக்கப்பட்டிருந்தாலும் வரித் தொடர்பற்ற நோக்கங்களுக்காகவும் அவைகளை ஓரளவுக்குப் பயன்படுத்திக்கொள்ள முடியும். ஏற்றுமதிப் பண்டங்களின் மீதான வரிகளை மாற்றியமைப்பதன் மூலம் ஏற்றுமதிகளை முன்னேற்றுவிக்கலாம். ரப்பர் உற்பத்தியில் சிறிய அளவில் வைத்திருந்தவர்களுக்கு மிகவும் சாதகமான நடவடிக்கையை இந்தோனேசியா தந்திருக்கிறது. கம்பெனிகளின் வரி விதிக்கத் தக்க வருமானத்தைக் கணக்கிடுவதில் ஏற்றுமதி இறக்குமதி இழப்புகளை ஈடுகட்டுவதற்காக மாற்றப்படும் சேமிப்புத் தொகைகளும் வணிகச் செலவுகளாகக் கழிக்கத் தக்கவை என்று ஜப்பானில் குறிப்பிடப்பட்டது. தேயிலை, சணல் போன்ற ஏற்றுமதிப் பண்டங்களைப் பொறுத்த மட்டிலும் வரிச் சலுகைகள் இந்தியாவில் தரப்படுகின்றன.

## வரி ஊக்குவித்தல்களைப் பற்றியதொரு மதிப்பீடு (An Assessment of Tax Incentives)

பொருளாதார முன்னேற்றத்தைத் தூண்டிவிடுவதற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதியாக்கத்திற்கும் மிகவும் நல்ல பலன் தரத்தக்கதொரு வழியாக வரி முறைகள் பயன்படுத்தப்படலாம். ஆனால். அத்தகைய கொள்கை நடைமுறையில் பயன்படுத்தப்படவேண்டுமென்றால், வரி நிருவாகத்தைப் பற்றிய மிக நல்ல முறையொன்று இருக்க வேண்டும் என்ற முதல்நிலையொன்று தேவைப்படுகிறது. இத்தகைய இடர்ப்பாட்டின் காரணமாக, வரி ஊக்குவித்தல்களில் உள்ள நன்மைகள் குறை காண்பவர்களால் ஒரு சில நேரங்களில் குற்றம் கூறப்படுகின்றன. முதலாவதாக, வரிச் சலுகைகள் யாவும் வரி ஓட்டைகளாக மாற்றப்படத்தக்க அபாயத்தைக் கொண்டுள்ளன. வரிச் சலுகைகள் தரப்படுவதன் அடிப்படை நோக்கங்களைத் தெரிந்து செயல்படவேண்டும் என்பதைப்பற்றிச் சிந்திக்காமல், வரி செலுத்துபவர்கள் குறிப்பாக வணிகர்கள் அத்தகைய சலுகைகளைப் பெற வேண்டிய தேவைகளை முறைப்படி செய்துகொண்டு வரிச் சலுகைகளையும் வரி விலக்குகளையும் மிக வேகமாகப் பெற்றுக்கொள்கின்றனர். எவ்வளவு காலத்திற்கு முடியுமோ அவ்வளவு காலத்திற்கு வரிச்சலுகை தரப்படத்தக்க காலத்தை நீடித்துக் கொள்ளும் போக்கும் காணப்படுகின்றது. இது திறமையின்மையைத்தான் மென்மேலும் அதிகரிக்கும். தவிர,சலுகையின் அடிப்படையில் நடத்தப்படுமாறு மென்மேலும் அதிகமான தொழில்களைக் கேட்டுக்கொள்ளும் . பிலிப்பைன்ஸ், மெக்சிகோ ஆகிய அரசுகளின் அனுபவமாக இந்த நிலை இருக்கிறது. அந்நியர்

களுக்கு உரிமையான, கம்பெனிகளுக்குத் தரப்படும் சலுகைகளும் இத்தகைய சிக்கலை அதிகமாக்குகின்றன.

பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்காகச் சிறந்ததொரு வழியாகத் தனியார் துறையைக் கருதும் பொருளியல் புலவர்கள் ஊக்குவிக்கும் நோக்கங்களுக்காக வரிவிதித்தலைக் கடைபிடிக்கும் பயனைப்பற்றி ஐயம் கொண்டிருக்கிறார்கள். அவர்களின் கருத்துப்படி இது எதிர்மறை வழியாகும். வரிவிதித்தலை வரையறைக்கு உட்படுத்துவது மிகச் சிறந்த முறையாகும். உயர்ந்த அளவு ஆதாயநிலை, ஆடம்பர வாழ்வு, வருமான அளவிலும் செல்வ அளவிலும் வேறுபாடுகள் போன்றவைகள் தான் தனியார் முதலீட்டிற்கும் மனித முயற்சிக்குமான அடிப்படைத் தூண்டு விசைக் கருவிகள். இத்தகையவற்றை அனுமதித்தால் அவை சம பகிர்வு நீதி என்ற கருத்திற்கு எதிராக அமைந்துவிடுன்கிறன. ஆனால், அது இயல்பான பொருளாதார வளர்ச்சியைப் பெறுவதற்காகத் தரப்பட வேண்டிய விலையே. ஆனால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் அரசுகளின் பங்கு உணரப்படும்போது இந்த விவாதம் சக்தியை இழந்துவிடுகிறது. பேரளவிலான முதலீட்டுச் செலவுகளை அரசு மேற்கொள்ள வேண்டுமானால் தனியார் துறைக்கான முதலீட்டு ஊக்குவித்தல் காரணிக்கு மிகவும் குறைந்த அளவு பாதிப்பு ஏற்படும்வண்ணம் தேவையான மூல வளங்கள் எவ்வாறு ஒன்று திரட்டப்படலாம் என்பது மிகப் பெரிய வினவாக இருக்கும் என்பது மறுக்கப்பட முடியாது. இருப்பினும் ஒரு கருத்தில் உடன்பாடு காணப்படுகிறது. அதாவது, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளாக இருந்தாலும் சரி, வளர்ச்சி பெற்ற நாடுகளாக இருந்தாலும் சரி நல்ல முறையில் அமையப் பெற்ற வரி முறையானது ஊக வாணிக முதலீடுகளில் அல்லது முனைப்பான நுகர்வுகளில் பயன்படுத்தப்படத்தக்க உண்மை மூல வளங்களைச் சமுதாயத்திடமிருந்து பொதுத்துறைக்கு மாற்றுவதை உட்கொண்டிருக்க வேண்டும். அதிகமான வருமானம், எதிர்பாராத ஆதாயங்கள் ஆகியவைகளைப் பொறுத்த மட்டிலும் வளர் விகித முறையைக் கடைப்பிடிப்பதாகவும் தனியார் முயற்சியை ஊக்குவிப்பதாகவும் உள்ள வரி முறையானது மிக நல்ல முறையில் அமைக்கப்பட்டதாகவும், பரவலான அடிப்படையில் அமைக்கப்பட்டதாகவும் இருக்கும் என்றால் அது தனியார் முதலீட்டைப் பாதிக்காமல் மூலவளங்களை முழுமையான அளவிலும் மிக நல்ல முறையிலும் பயன்படத்தக்க வழியில் நாட்டு முதலீட்டு அமைப்பை மாற்றுவதற்கு மட்டுமே வழி செய்யத்தக்கதாக இருக்கும். ஆனால், வரிச் சலுகைகளும், விதி விலக்குகளும், குறைந்த வரி

வருமானம் என்ற வடிவத்தில் அரசுச் செலவில் அதிகரிப்பைத் தான் தருகின்றன. எனவே, பொருளாதாரம் முழுவதற்குமான திருப்தியான விளைவுகள் கிடைக்கும் என்ற உறுதிமொழி இருந்தால்தான் அத்தகைய தியாகங்களை மேற்கொள்வது சரியானதாக இருக்கும். அதாவது, வரிச் சலுகைகள் தனியார் துறை முதலீட்டைத் தூண்டி விடுவதாக அமைய வேண்டும். அதோடு உற்பதித்யைப் பெருக்குவதற்கான முறையில் இச் சலுகைகளை மிக நல்ல முறையில் தனியார் துறை பயன் படுத்திக் கொள்ளவேண்டும். இவ்வாறு இருந்தால்தான் தொடக்க நிலையில் அரசுக்கு ஏற்படும் இழப்புகள் யாவும் பின் நிலையில் சமுதாயத்தின் வரிச் செலுத்தும் திறமை அதிகரிப்பைத் தோற்று விக்க முடியும். இத்தகைய வரிச் சலுகைகள் யாவும் இவ்வாறு நடைபெற்றால் பொருளாதார அடிப்படையில் சரியானவைகள் என்று ஏற்றுக் கொள்ளப்படத்தக்கவைகளே.

வரி விதித்தலைப் பொருளாதார வளர்ச்சிக்குத் தீய விளைவைத் தரத்தக்கதாகவும், பளு மிக்கதாகவும் ஆக்குவது மிக அதிகமான வரி விகிதம் அன்று. மாறாக, வரிச் சட்டங்களை நிறைவேற்று வதில் கண்டிப்பின்மையும் ஆட்டத்தின் விதிகளை நடத்துபவர் களுக்கும் (Those who play the rules of the game) அவ்வாறு செய்யாதவர்களுக்கும் இடையே வரிப் பேதம் இல்லாதிருத்தலும் தான் இதைச் செய்கின்றன. தனியார் முதலீட்டைத் தூண்டி விடுவதற்காகவும், அவைகளைப் பயன்படுத்துவதைத் தூண்டி விடுவதற்குமான தேர்ந்தெடுத்தலுக்கு அதிகமான அளவு சிறப்பிடம் தரப்படுவதன் முக்கியத்துவம் ஊக்குவிக்கும் வரி விதித்தலில் மிகைப்படுத்தப்பட முடியாது. குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளில் வரி விதித்தல் உண்மையிலேயே மதில்மேல் பூனை நிலை போல் இருக்கின்றது. ஒரு புறத்தில் அரசாங்க முதலீட்டுச் செலவிற்கான நிதியாக்கத்திற்கு அதிகமான வரி விதித்தல் மிகவும் அவசியமாகின்றது. அதே நேரத்தில் இன்னொரு புறத்தில் தகுதியான பாதுகாப்பு இல்லாவிட்டால் அதிகப்படியான வரிகளும், பளு மிக்க வரிகளும் தனியார் முயற்சிகளைக் கெடுத்து விடும். உண்மையாகப் பார்த்தால், பொருளாதார முன்னேற் றத்தின் நன்மைகளிலிருந்து பெரும்பகுதியைப் பெறுவதில் திறனுள்ளதாகக் காணப்படும் வரி முறைகள்தான் தனியார் துறையிலிருந்து பெறப்படும் விளைவுகளைப் பாதிக்கத் தக்கவை களாக காணப்படுகின்றன.

### வரி விதித்தலும் பொருளாதாரத்தின் நிலைத்த தன்மையும் (Taxation and Economic Stability)

செல்வமிகு நாடுகள், குறைந்த வருமான நாடுகள் ஆகிய இருவகை நாடுகளிலுமே, பொருளாதார நடவடிக்கை நிலை,

முதலீட்டு நிலை ஆகியவற்றில் தோன்றும் ஏற்றத்தாழ்வுகள் பொருளாதார முன்னேற்றத்திற்கு மிகவும் தீமை விளைவிக்கத் தக்க காரணிகளாக இருக்கின்றன. ஆனால், இவ் விருவகை நாடு களிலும் தோன்றத்தக்க சுழல் மாற்றங்களின் இயல்புகளும் அமைப்புகளும் வேறுபட்டிருக்கின்றன. வளர்ச்சிபெற்ற நாடுகளில் அத்தகைய ஏற்றத்தாழ்வுகளுக்கு எதிராக மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் வெற்றியைத்தரத் தக்கவைகளாக இருந்தாலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் சிறப்பான நிலைகளுக்கு ஏற்ப மாற்றியமைத்துப் பயன்படுத்தப்படாவிட்டால், குறைந்தவளர்ச்சி யுடைய நாடுகளில் எதிர்பார்க்கும் நல்ல விளைவுகளைத் தரத்தக்க வைகளாக இருக்கமாட்டா. இது, வரி விதித்தல் என்பதைப் பொறுத்தமட்டிலும் மிகவும் சரியான கூற்றாகும். முக்கியமாக, அயல் நாட்டு வணிகத்தின் ஏற்றத்தாழ்வுகளிலிருந்தே தோன்றத் தக்க இறக்குமதி செய்யப்பட்ட வகையைச் சேர்ந்ததாகவே குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள வணிகச் சுழல்கள் காணப்படுகின்றன. இதன் காரணமாக, அயல் நாட்டு வணிகங் களின்மீது வரி விதிப்பதில்தான் இத்தகைய ஏற்றத்தாழ்வுகளை ஒருங்குபடுத்துவதற்கான முக்கியமான வழி இருப்பதை இது பரிந்துரைக்கிறது.

தனியார் முதலீட்டு நடவடிக்கைகளில் தோன்றும் மந்த நிலையானது, வேலையின்மையையும், உறுதித் தேவையில் சரிவையும் தோற்றுவிப்பதால், முன்னேற்றமடைந்துள்ள தடையற்ற தன் முயற்சியில் பொருளாதாரங்களில் காணப்படும் பணவாட்டப் போக்குகள், வரி விதித்தலில் மாற்றங்களையும், அரசுக் கடன் களையும், பொதுச் செலவுகளையும் உள்ளார்ந்திருக்கும் ஈடு செய்யும் வரிக்கொள்கை (Compensatory fiscal policy) யினால் சரி செய்யப் படுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள பொருளாதார இயந்திரமானது பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைத் தானே உண்டாக்கிக் கொள்ளும் அளவுக்குச் சக்தி பெற்றதாக இல்லை. ஆனால் இத்தகைய பல நாடுகளிலும் ஏற்றுமதிகள் நாட்டு வருமானத்தைத் தரத்தக்கதொரு இன்றியமையாத மூலமாக இருக்கிறது. அதாவது ஏற்றுமதியில் தோன்றும் ஏற்றத்தாழ்வுகள் வணிக மலர்ச்சியை அல்லது வாட்ட நிலைமைகளைப் பொருளாதாரத்தில் ஏற்படுத்தி விடத்தக்கவைகளாக இருக்கின்றன. 1940ஐச் சார்ந்த ஆண்டு களின் இறுதி ஆண்டுகளிலும் 1950ஐச் சார்ந்த ஆண்டுகளின் தொடக்க ஆண்டுகளிலும் பொலிவியாவில் கனரகப் பொருள் களின் ஏற்றுமதியும், சில்லியில் செம்பு நைட்ரேட் ஆகியவைகளின் ஏற்றுமதியும், கியூபாவில் சர்க்கரை, சர்க்கரைப் பொருள்கள்

ஆகியவைகளின் ஏற்றுமதியும், எல்சால்வடாரில் (Elsalvador) காபி ஏற்றுமதியும், கௌடமாலாவில் காபி. வாழைப்பழங்கள்ஆகியவை களின் ஏற்றுமதியும், ஈரானிலும் வெனிசுலாவிலும் எண்ணெய் ஏற்றுமதியும், சிலோனில் தேயிலை, ரப்பர், ஆகியவைகளின் ஏற்றுமதியும் மொத்த ஏற்றுமதியில் 80%-90% அளவில் அமைந் திருந்தன. 1951-ல் இந்தோனேசியாவின் மொத்த ஏற்றுமதியில் 62 விழுக்காடு அளவு ஏற்றுமதிக்கு ரப்பர் ஏற்றுமதியும், எண்ணெய் ஏற்றுமதியும் காரணங்களாக இருந்தன. 1950ஆம் ஆண்டில் தாய்லாந்தின் மொத்த ஏற்றுமதியில் அரிசி ஏற்றுமதி மட்டும் 62 விழுக்காடு அளவாக இருந்தது. மொத்த நாட்டு விளைவின் பங்கு என்ற அடிப்படையில் கியூபாவில் சர்க்கரையின் பங்கு 1945-47ஆம் ஆண்டுகளில் 30% அளவாகவும், 1956ஆம் ஆண்டில் எல்சால்வடாரில் காப்பியின் பங்கு 12% அளவாகவும் இருந்தன. எனவே, ஏற்றுமதியின் அளவில் தோன்றும் சரிவு, அல்லது ஏற்றுமதி அங்காடியில் விலைச் சரிவினால் அவைகளின் மதிப்புகளில் தோன்றும் சரிவு போன்றவைகள் இந்த நாடுகளின் பொருளாதாரங்களின்மீது மிகவும் முனைப்பான தீய விளைவுகளைப் பெற்றிருந்திருக்கலாம் என்பது தெளிவாகத் தென்படுகிறது. இவைகள் யாவும் வெளியில் காட்டப்படத்தக்க பொருளாதாரம் (Exposed economics) எனப்படுகின்றன. அதாவது, இந் நாடு களின் பண்டங்கள் எந்தெந்த வளர்ச்சியடைந்த நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றனவோ அந்தந்த நாடுகளின் நாட்டு வருமானத்தின் ஏற்றத் தாழ்வுகளுக்கேற்ப இந் நாடுகளின் நாட்டு வருமானத்திலும் நடவடிக்கை நிலைகளிலும் ஏற்றத் தாழ்வுகளைத் தோற்றுவிக்கின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் ஏற்றுமதி நிலையற்றதொரு காரணியாகவும், வளர்ச்சி பெற்ற நாடுகளில் தனியார் முதலீடு நிலையற்றதொரு காரணியாகவும் இருக்கின்றது. இவ்வாறாக முன்னேற்றம் அடைந்த நாடுகள் ஒரு சுழல் மையமாகவும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அச் சுழலின் பரப்பளவாகவும் அமைகின்றன.

குறைந்த வளர்ச்சியுடைய நாடொன்று இவ்வாறு வெளிப் படுத்தப்படும்போது, உலகத்தில் தொழில்மயமான நாடுகளில் நிகழ்வதைப் போலவே வருமான ஏற்றத் தாழ்வுகள் இந் நாடு களிலும் தோன்றுகின்றன. அங்கெல்லாம் ஏற்றுமதி வணிக மலர்ச் சியில் வருமானம் பேரளவில் இருக்கும். மேலும், உள்நாட்டு முத லீட்டு நடவடிக்கை விரைவுபடுத்தப்படுகிறது. அப்போது வேலை நிலையிலும் உறுதித் தேவை நிலையிலும் அதிகரிப்பு, பண வருமானத்தின் அதிகரிப்பு ஆகியவைகளில் பெருக்க விளைவுகள் காணப்படுகின்றன. ஆனால் ஏற்றுமதித் தேவை குறையும்போது

பெருக்கி எதிர் வழியில் செயல்படுகிறது. அதன் வழியாக அது பொருளாதார மந்த க்நிலேகளேத் தோற்றுவிக்கிறது. ஆனுல் ஏற்றத் தாழ்வுகளுக்கான பெரும் காரணங்கள் வளர்ச்சி குறைந்த நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளில் வேறுபட்டவைகளாக இருக்கின்றன. வளர்ச்சி பெற்ற நாடுகளில் பொருளாதார மலர்ச்சிக் காலத்தில் தனியார் முதலீட்டைத் தடை செய்தல், தனியார் முதலீட்டில் உள்ள குறையை ஈடுகட்டுவதற்காகப் பொருளாதார மந்தக் காலத்தில் அரசு முதலீட்டை அதிகரித்தல் என்பன போன்ற மரபு வழிக் கட்டுப்பாட்டு முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. ஆனுல், ஏற்றத்தாழ்வுகளுக்கான பெரும் காரணங்கள் இவ் விருவகை நாடுகளிலும் வேறுபட்டிருக்கின்ற காரணத்தால், வளர்ச்சி பெற்ற நாடுகளில் மரபு வழியாகப் பயன்படுத்தப்படும் முறைகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அதிகமான அளவில் பயன் தரத்தக்கவைகளாக இருப்பதில்லே. இவ்வாருக, ஏற்றுமதித் துறைக்குப் பொருத்தமான உறுதித் தேவை அயல் நாடு ஒன்றில் செயல்பட்டுக்கொண்டிருக்கக்கூடிய எளியதொரு காரணத்தால் பணவாக்கத் தேவையை மாற்றி அமைத்தலானது முதலீட்டில் அல்லது பொருளாதாரத்தின் ஏற்றுமதிப் பருமனில் எந்த விளைவையும் தோற்றுவிக்காது. வளர்ச்சி பெற்ற நாடுகளில் உள்ள பொருளாதாரத்தின் உறுதித்தன்மை நிலைமைகள்தான் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உறுதித் தன்மையை நிலே நாட்ட உதவி செய்கின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் நிச்சயமாகத் தங்களேக் காத்துக் கொள்ளும் இயல்புடைவைகளாகவே இருக்க வேண்டும்.

இவ்வாறு இருப்பினும் பொருளாதார மந்த நிலேகளுக்கு எதிர் விளேவுகளேத் தோற்றுவிப்பதிலும் வெற்றி பெறுவதிலும் வரிக் கொள்கைகளுக்கு வாய்ப்பில்லாமல் போய்விட்டது. வெளித் தேவைக், குறைவின் விளேவை ஈடு செய்வதற்கும், உள்நாட்டுத் தேவையை நிலேபேறு உடையதாகச் செய்வதற்கும், ஏற்றுமதி வரி நீக்கமும் உள்நாட்டுப் பண்டங்களின்மீதான வரியின் இறக்கமும் ஓரளவுக்கு உதவிசெய்யும். உள்நாட்டு உறுதித் தேவையின் குறைவிஞல் தோன்றுவதைக் காட்டிலும், நாட்டின் ஏற்றுமதிப் பண்டங்களுக்கான வெளிநாட்டுத் தேவையின் குறைவிஞல்தான் தொழில் மந்தப் போக்குகள் அதிகமாகத் தோன்றுகின்றன என்று தெளிவாகத்தெரியும் உண்மையின் காரணமாக மேற்குறிப்பிட்ட விளேவுகள் பேரளவில் இருக்கமாட்டா. அரசாங்கம் அதன் செலவை அதிகரிப்பதே நிலேமையைச் சமாளிப்பதற்கு மிகவும் பயனுள்ள முறையாகும். அரசாங்கத்தின் வருமானமூலவளங்கள் அதிகமான

அளவிலும் தனியார் முதலீட்டுச் செலவு அதிகமான அளவிலும் இருக்கக் கூடிய பொருளாதார மலர்ச்சிக் காலத்தில் முதலீட்டுச் செலவை நிறுத்தி வைப்பதையும் இஃது அவசியமாக்கும். ஏற்றுமதி வருமானங்கள் அதிகமாக இருக்கும் சேகரிக்கப்படும் இத்தகைய அதிக வருமானங்கள் வரவு செலவுத் திட்ட உறுதிப்பாட்டு நிதியை (Budget Stabilisation fund) அமைப்பதற்காகப் பயன்படுத்தப்பட வேண்டும். இத்தகைய மூலவளங்கள் யாவும் வங்கிகளில் முதலீடு செய்யப்பட்டுவிடக்கூடாது என்பது மிகவும் இன்றியமையாததாகும். (அவ்வாறு முதலீடு செய்யப்பட்டால் அவைகள் பண வீக்கத்தை மென்மேலும் அதிகரித்துவிடும். அதற்கு மாருக அந்நியச் செலாவணி என்ற வடிவத்தில் ஒன்றுதிரட்டப்படுவது மிகவும் விரும்பத்தக்கதாகும். ஏற்றுமதிகள் குறையும்போது, இந்த நிதியிலிருந்து தொகைகள் எடுக்கப்பட்டு மூலதனப் பண்டங்களின் இறக்குமதி, பொதுப்பணிகள் போன்ற முதலீட்டுத் திட்டங்களைத் தொடங்குதல் ஆகியவைகளுக்குத் தேவையான நிதியாக்கத்திற்குப் பயன்படுத்தப்படலாம். இத்தகைய தொரு ஏற்பாடானது பணவாக்க உறுதிப்பாட்டை உறுதி செய்வதோடு பொருளாதார வளர்ச்சியையும் முன்னேற்றுவிக்கும். வரவு செலவைச் சமன்படுத்தும் நிதியிலிருந்து (Budget Equalisation Fund) முற்றிலும் வேறுபட்டதாக அயல் நாட்டுச் செலாவணி உறுதிப்பாட்டு நிதியைத் (Foreign Exchange Stabilisation fund) தோற்றுவித்தால், அது, ஏற்றுமதிகள் குறையும்போது ஏற்றுமதித் தீர்வைகளைக் குறைக்கும்படி செய்வதன் மூலமும், பரிமாற்றக் கையிருப்புகளிலிருந்து எடுத்துக்கொள்வதன் மூலமும் வணிக ஒப்பந்தங்களின் மோசமாக்கும் விளைவுகளை மென்மைப்படுத்துவதற்கு உதவும். அண்மையில் சிலோனில் இவ்வழியில் பெறப்பட்ட அனுபவம், ஏற்றுமதி செய்யும் நாடுகளாக உள்ள குறைந்த வளர்ச்சியுடைய பொருளாதாரங்களில் ஒன்றிற்கு இக் கொள்கையின் நல்ல வாய்ப்பைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. 1954-56ஆம் ஆண்டில் சிலோனில் தேயிலை ஏற்றுமதி மலர்ச்சியானது வெளிநாட்டுச் சொத்துகளின் குவிப்பையும், பொது வருமானத்தின் அதிகரிப்பையும் தோற்றுவித்தது. இப்போது பொதுச்செலவு சரி செய்யப்பட்டு வரவு செலவுத் திட்டங்களின் உபரிகளால் ஏற்றுமதி உபரிகளின் பணவீக்கத் தாக்குதல்கள் கட்டுப்படுத்தப்பட்டன. அதன் காரணமாக விலை நிலை ஒரே நிலையிலிருந்தது. இருப்பினும், அடுத்தடுத்து வரும் ஆண்டுகளில், நடப்புச் செலவுகளின் அதிகரிப்பாலும், மூலதனச் செலவுகளின் அதிகரிப்பாலும் வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறை அதிகரிக்கப்பட்டபோது, முன்னதன் பணவீக்க விளைவை ஈடு செய்வதற்குப் போதுமான

தாக அயல் நாட்டுச் செலுத்துநிலைப் பற்றுக்குறை இருக்கவில்லை. மொத்தமாகப் பார்க்கும்போது, 1950-1957 ஆகிய ஆண்டுகளுக்கு இடையில் ஏற்றுமதிச் சுழற்சிக் காலத்தில் சிலோனில் பயன்படுத்தப்பட்ட எதிர் சுழல் வரிக்கொள்கை (Counter Cyclical Fiscal Policy) வருமானப் பக்கத்தில் வெற்றியுடையதாக இருந்தது. நாட்டு வருமானத்தின் பெரும் பகுதி ஏற்றுமதியிலிருந்து பெறப்படுகின்ற காரணத்தால், ஏற்றுமதி மலர்ச்சிக் காலத்தில் உபரியை அதிகமான அளவுக்குச் சேர்க்க முடியும். ஆனால், அரசுச் செலவு ஈடு செய்யும் வழியில் செல்லத் தவறிவிடுகிறது. மலர்ச்சிக் காலத்தில் அது அதிகரிக்கும் போக்கைப் பெற்றுச் சுழலின் கீழ்நோக்கிய பகுதியில் மறு விளைவைத் தோற்றுவிக்கும் போக்கைப் பெறுகிறது. மேலும் இது நிருவாக இயந்திரத்தின் குறைகளையும் சுட்டிக் காட்டுகிறது. 'பணம் கிடைக்கும்போது செலவிடத்தக்க காலம் இல்லை என்பதைப் பொதுமக்களுக்கும் அரசுக்கும் உணர்த்துவது மிகவும் சிரமமானதாகும்' என்று வாலிச் (Wallich) அவர்கள் குறிப்பிட்டது மிகவும் உண்மையானது தான். இறுதியாகப் பார்க்கும்போது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளின் பொருளாதாரங்களின் அமைப்பையும் வடிவத்தையும் மாற்றிக்கொள்வதுதான் அயல் நாட்டு வணிகத்தின் மூலமாக வளர்ச்சி பெற்ற நாடுகளிலிருந்து குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கு வணிகச் சுழல்களை மாற்றுவதிலிருந்து தப்பித்துக்கொள்வதற்கான உண்மையான பாதுகாப்பாகும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் நாட்டு வருமானத்தின் அளவை நிர்ணயிப்பதில் அயல் நாட்டு வணிகம் பேரளவு பங்கு வகிக்கும்வரை, இத்தகைய சுழல் ஏற்றத்தாழ்வுகளுக்கு எதிரான உண்மையான தீர்வு அயல்நாட்டு வணிக விளைவுகளிலிருந்து பொருளாதாரத்தை விலக்கிவைத்தல் என்ற எதிர்மறை நடவடிக்கையில் இல்லை. மாறாக, அப் பொருளாதாரத்தைக் குறைவான அளவுக்கு 'வெளிப்பட' இருக்கச் செய்யும்வண்ணம் முன்னேற்றுவித்தல், பரவலாக்குதல் என்ற நேர் நடவடிக்கைகளில்தான் இருக்கிறது. நாட்டின் தொழில் வளர்ச்சி, நிதி இயந்திரத்தின் முன்னேற்றம், நிருவாக இயந்திரத்தின் முன்னேற்றம் ஆகியவைகளை இது உட்கொண்டிருக்கிறது. ஏற்றுமதிப் பண்டங்களை உள் நாட்டில் பயன்படுத்துவதற்கும், வேளாண்மைத் தொழில்களில் ஈடுபட்டிருக்கும் ஏராளமான தொழிலாளர்களை ஈர்த்துக்கொள்வதற்கும் தொழில் பெருக்கம் உதவும். மிக மேம்பாடைந்த முறையிலும், நம்பிக்கை வைக்கத்தக்க முறையிலும், உள்ள நிதிக்கட்டுப்பாடுகள். பணவாக்கக் கட்டுப்பாடுகள் ஆகியவைகள் தோன்றுவதை முன்னேற்றுவிக்கும் நோக்கத்தோடு நிதி இயந்திரத்தின் முன்னேற்றம், நிருவாக

இயந்திரத்தின் முன்னேற்றம் ஆகியவைகள் தோற்றுவிக்கப்படு கின்றன. அயல் நாட்டு வணிகத்தினால் தோன்றத்தக்க பண வீக்கம் அல்லது பணவாட்டம் ஆகியவைகளின் ஆபத்துகளைப் பொருளாதாரத்தைப் பரவலாக்குவது குறைக்கும். நிதி இயந்திரம் பணவாக்க இயந்திரம் ஆகியவைகளில் தோற்றுவிக்கப்படும் முன்னேற்றம் அத்தகைய உறுதியின்மையைக் கட்டுப்படுத்த இந் நாடுகளுக்குள்ள வழிகளை மென்மேலும் வலிமைப்படுத்தும்.

## குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வரிச் சீர்திருத்தத்தின் தேவை

(Tax Reform in Underdeveloped Countries—The need for it)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வரி முயற்சியை அதிகரிப்பதற்கு இரண்டு சரியான காரணங்கள் இருக்கின்றன. முதலாவதாக, இந் நாடுகளில் சேமிப்புகள் மிகக் குறைவான அளவில் இருக்கின்றன. மூலதன ஆக்க விகிதமும் மிகக் குறை வானதாக இருக்கின்றது. மூலதனம் கிடைக்கும் அளவோடு ஒப்பிடுகையில் மூலதனத் தேவைகள் அதிகமாக இருக்கின்ற காரணத்தால் ஏற்கனவே இருக்கும் மூலதனத்தோடு அதிகப் படியாகச் சேர்க்கப்படுவது தராதரமாக அதிகமான விளைவைத் தரத்தக்கதாக இருக்கும் என்று கருதலாம். போக்குவரத்து, நீர்ப் பாசன மின்சாரத் திட்டங்கள் போன்ற முன்னேற்ற நோக்கங் களுக்கான ஒரு சில அரசுச் செலவுகள் அதிகமான இறுதி நிலை மதிப்பைக் காட்டுகின்றன. ஆனால், தனியார் வணிகத்தில் ஆடம்பரப் பண்டங்களைச் சேர்த்து வைத்தல் போன்ற எதிர் மறைச் சமுதாய மதிப்பை அல்லது மிகக் குறைந்த அளவு சமுதாய மதிப்பை ஒரு சில தனியார் பொருளாதார நடவடிக்கைகள் பெற்றிருக்கின்றன. பொதுத்துறை முதலீடுகளின் உற்பத்தித் திறன் குறிப்பிட்ட அளவில் இருக்கும்போது, அதிகமான வரி விதிப்பின் மூலம் மூலவளங்களைப் பொது முதலீட்டுக்கு மாற்றுவது சரியானதே. தொடக்க நிலையில் மொத்த வரி வருமானம் குறை வானதாக இருக்கும்போது அதோடு சேர்க்கப்படுவதன் இறுதி நிலையின் சிறப்பைச் சிறியதொரு கணக்கின் மூலம் நன்கு விளக்கலாம். நாட்டு வருமானத்தின் 12% அளவு வரி வருமானம் என்றும், அதில் மூன்றில் ஒரு பங்கு வளர்ச்சிச் செலவுகளுக்குப் பயன்படுத்தப்படுகிறது என்றும் இருக்குமானால், வருமானத்தில் 2% அளவை அதிகமாக வசூலித்தல் என்பது வரி வருமானத்தில் 16% அளவைக் குறிக்கும். நாட்டு வருமானத்தில் அத்தகைய அதிகப்படியான 2% அளவும் முன்னேற்றத்திற்காக மட்டுமே பயன் படுத்தப்பட்டால், அரசாங்கத்தின் முன்னேற்றச் செலவு

(Development Expenditure) 50% அளவுக்கு அதிகரிக்கும்' அதாவது, நாட்டு வருமானத்தில் 4%-6% அளவு அதிகரிக்கும்.

இரண்டாவதாக, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் விதிக்கப்படும் வரி வகைகளும், அவைகள் நிருவகிக்கப்படும் முறைகளும், இந் நாடுகளில் வரி செலுத்தும் தகுதி எந்த அளவுக்கு இருக்கிறதோ அந்த அளவுக்கு வரி விதித்தல் மேற்கொள்ளப்படவில்லை என்ற கூற்றை அனுமதிப்பது போன்று காணப்படுகின்றன. வரித் தொகைகள் பயன்படுத்தப்படும் நோக்கங்கள், பொருளாதாரத்தின் தன்மை, மக்களின் விருப்பு வெறுப்புகள், வரி நிருவாகத்தின் முறை, வரி வசூலிக்கப்படும் முறை ஆகியவைகளைச் சார்ந்திருப்பதால் வரி செலுத்தும் திறன் தராதரமானதாகும். செலுத்துவோர் நோக்கிலிருந்து பார்க்கும்போது, வரி விதித்தலானது நுகர்வு நிலைகளின்மீது தாக்குதலால் வரி செலுத்தும் திறனின் எல்லை எட்டப்படுகிறது என்று கூறலாம். நுகர்வின் மீதான அத்தகைய தடையானது உழைப்பின் உற்பத்தித் திறனைப் பாதிப்பதன் மூலம் பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கிறது. பொருளாதாரம் முழுமைக்குமாகப் பார்க்கும்போது, தனியார் துறையின் உற்பத்தித் திறனின் குறைவினுல் ஈடு செய்யப்படுவதைக் காட்டிலும் அதிகமானதாக அதிகப்படியான வரி விதித்தலால் உண்டாகும் பொதுத் துறையின் அதிகரித்த உற்பத்தித் திறன் இருக்கும்போது, வரி விதித்தலின் உச்ச அளவு பெறப்படுகிறது. இன்னும் பொதுவாகச் சொல்ல வேண்டுமானுல், சேமிப்பு, முதலீடு ஆகிய இரண்டுக்குமான உற்சாகத்தைப் பாதிக்காமல் வரியானது எந்த அளவுக்கு விதிக்கப்படுகிறதோ அந்த அளவுதான் வரி செலுத்தும் திறனின் எல்லை எனப்படலாம். தளர்ச்சியான முறையில் வரிகள் விதிக்கப்பட்டு நிருவகிக்கப்படுவதைக் காட்டிலும், திறமையான வரி முறையில், உற்சாகத்தைப் பாதிக்காமல் அல்லது தனியார் துறையின் உற்பத்தித் திறனைப் பாதிக்காமல் பேரளவிலான பொது மூல வளங்கள் ஒன்று திரட்டப்படலாம். சமுதாயத்தின் ஒவ்வொரு பிரிவினரும் எந்த அளவு பளுவைத் தாங்க முடியுமோ அந்த அளவுப் பளுவை அவர்கள் தாங்கும்வண்ணம் இருந்தால் வரி முறையில் சமமான வரிப் பளு இருப்பதாகச் சொல்லாம். இத்தகைய முறையில் அமைந்த நல்லதொரு வரி முறை பொது மக்களின் ஒத்துழைப்பை எளிதில் பெறும் வகையில் இருப்பதோடு உற்பத்தி முயற்சிகளில் அதிகமான அளவில் ஈடுபடுவதற்கு மக்களை உற்சாகப்படுத்துவதாகவும் இருக்கும். இன்றேல், மாறுக சமமில்லாத வரிப் பளுப் பகிர்வு முயற்சியை அழிக்கும் ஒரு காரணியாகவே இருக்கும் என்பது மிகத் தெளிவு. இதையே வேறொரு

விதத்திலும் குறிப்பிடலாம். அதாவது, அதிகமான எண்ணிக்கை யுடைய வரிகள் இருக்கின்றன என்பதாலும், அதிகமான வரி விகிதங்கள் இருக்கின்றன என்பதாலும் மட்டும் வரிச் செலுத்தும் திறன் அதன் உச்ச அளவில் இருக்கத்தான் வேண்டும் என்பதில்லை. வரி செலுத்தும் திறனின் உச்ச அளவானது, வரிகள் எந்த அளவுக்கு அமுல் நடத்தப்படுகின்றன நடைபெறுகின்றன என்பதையும் சார்ந்தே இருக்கின்றது. வரி வசூல் தொகை எந்த நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன என்பதைப் பொறுத்தும் இஃது அமைகிறது. வாங்கும் சக்தியானது பொருளா தார நன்மையுடன் தனியாரிடமிருந்து அரசுக்கு மாற்றப்படும் போது வரி செலுத்தும் திறன் அதிகமாக்கப்படுகின்றது. குறைவான உற்பத்தித் திறனுடைய அரசுச் செலவுகளின் நிதியாக்கத்திற்காக வரி வருமானம் பயன்படுத்தப்படும்போது அது குறைக்கப்படுகிறது. நாட்டு விளைவில் 25 விழுக்காடு அளவுக்கு வரி விதித்தல் மிகவும் பாதுகாப்பான உச்ச அளவு வரி விதித்தல் என்று கருதுவது சரியெனப் பேராசிரியர் காளின் கிளார்க் (Prof. Colin Clark) கருதுகிருர். பொருளாதாரத்தின் இயல்பு, அரசின் நடவடிக்கைகள், பணிகள் ஆகியவைகளைப் பற்றிச் சரியான கருத்துகள் எவையுமில்லாமல் வரி செலுத்தலுக்கான எல்லையை நிர்ணயிப்பது மிகவும்பாதுகாப்புடையதன்று என்ருலும், பொதுத் துறைக்கான மூலவளங்களைப் பெறுவதற்கு ஒரு வழியாக வரி விதித்தல் எந்த அளவுக்கு நம்பப்படலாம் என்பதைக் காட்டுவதற் கானதொரு குறியீடாக இந்த அளவு கருதப்படலாம். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பாலும் எந்த நாடுமே நாட்டு வருமானத்தில் நான்கில் ஒரு பகுதியை வரியின் மூலம் வசூலிப்ப தில்லை. அப்படியே வசூலித்தாலும் மிகமிகக் குறைந்த எண்ணிக் கையுடைய நாடுகளே அதைச் செய்கின்றன. இதற்கு மாருக, இந் நாடுகளின் பொருளாதாரங்களின் அதிகமான அளவிலான முன்னேற்றங்கள் தோன்றியுள்ளன. இவைகளின் நாட்டு வருமானமும் தலா வருமானமும் அதிகரித்திருக்கின்றன. ஆனல், நாட்டு வருமானத்தின் விகிதம் என்ற அடிப்படையில் வரி வருமானத்தின் பங்கு இன்னும் மாருமலேயே இருக்கிறது. வரி தேவையான அளவுக்கும், சரியான அளவுக்கும் பயன்படுத்தப்பட வில்லை என்ற கருத்திற்கான சரியான விளக்கமாக இவை அமைகின்றன.

நாட்டின் பொருளாதாரத் திறனைப் பாதிக்காத வண்ணம் வரி வருமானத்தின் அளவை அதிகரிக்க வேண்டும் என்பதே குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வரிச் சீர்திருத்தங்களில் மிகவும் சிறப் பாகக் கவனிக்கப்பட வேண்டியதாகும். சமத்துவக் கொள்கை

அல்லது வரிப்பளுவைச் சமமாகப் பகிர்ந்தளித்தல் என்பதற்கு இரண்டாம் தர இடம்தான் தரப்படவேண்டும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இப்போது உள்ள வரி அமைப்பு, நிலைய அமைப்பு ஆகியவற்றின் அடிப்படையில் மூன்று வழிகளில் பொது வருமானத்தை அதிகரிப்பதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன.

(அ) பொது நிறுவனங்களிலிருந்து பேரளவு வருமானத்தைப் பெறுதல்.

(ஆ) வரி அமைப்பை எளிமையாக்குதல்.

(இ) வரி நிருவாகத்தை நன்னிலைப்படுத்துதல்.

(அ) பொது நிறுவனங்களிலிருந்து பெறப்படும் வருமானம் (Revenue from Public Undertakings)

தற்கால அரசுகளின் வரியற்ற வருமானங்களின் நல்லதொரு பங்கைப் பொது நிறுவனங்கள் தருகின்றன. நாட்டுத் தொழில் நிறுவனங்களிலிருந்து, பொது நிறுவனங்களின் மொத்த விற்பனைத் தொகைமீதான வரி மூலமாகவும் ஏறத்தாழப் பொது வருமானத்தின் 90% அளவு சோவியத் ரஷ்யாவில் பெறப்படுகிறது இங்கிலாந்து, பிரான்ஸ் போன்ற தடையற்ற தன்முயற்சிப் பொருளாதார அமைப்புடைய நாடுகளிலுங்கூட இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் உள்ள ஆண்டுகளில் ஒரு சில அடிப்படைத் தொழில்கள் நாட்டுடைமையாக்கப்பட்டன. இதுபொதுத் துறையின் வளர்ச்சிக்கான வாய்ப்பைப் பேரளவுக்கு அதிகரித்திருக்கிறது. ஆனால், இவ்விதம் நாட்டுடைமையாக்கப்பட்ட நிறுவனங்கள் அரசின் வருமானத்திற்கான மிகவும் சிறப்புமிக்கதொரு மூலமாக அமையவில்லை. பிரான்ஸ் நாட்டில் பொது நிறுவனங்களை நிருவகிப்பதால் பெரும்பாலும் மீண்டும் மீண்டும் இழப்புகள்தான் தோன்றிக்கொண்டிருக்கின்றன. ஆனால், தெற்கு ஆசியாவிலும் தூரக்கிழக்கிலும் உள்ள சில நாடுகளில் ஒரு சில அடிப்படைத் தொழில்களின்மீது அரசு உரிமை ஏற்றுமதி செய்யத்தக்க சில பண்டங்களின் விற்பனையை அரசு மேற்கொண்டதும் ஏராளமான ஆதாயத்தை ஈட்டித் தந்திருக்கின்றது. இவ்விதம் பர்மாவில் அரசு வேளாண்மை அங்காடிக் குழுவின் (State Agricultural Marketing Board) மூலம் மேற்கொள்ளப்பட்ட அரிசி ஏற்றுமதியும், தாய்லாந்தில், சிமெண்டுத் தொழில், பருத்தித்துணித் தொழில், காகிதத் தொழில், சர்க்கரைத்தொழில் இன்னும் இவை போன்ற தொழில்களின் மீது உரிமையை அரசு பெற்றிருந்ததும், அரசு அரிசிக்குழு (State-Rice Bureau) மூலமாக ஏற்றுமதியை மேற்கொண்டிருந்ததும் அரசு வருமானத்திற்குப் பேரளவு பங்கு தந்திருக்கிறது.

சிலோனிலும், இந்தோனிசியாவிலும் அண்மை ஆண்டுகளின் பல பொது நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன.

பொது நிறுவனங்கள் அரசு வருமானத்திற்குரிய நல்லதொரு மூலமாக இருப்பதோடு, வேறு பல வழிகளிலும், அவைகள் பயனுள்ளவைகளாக இருக்கின்றன தனியார் நிறுவனங்களின் வரி செலுத்தும் திறனையும் நேர்மையையும், திறனையும் அல்லது அவைகளால் நிர்ணயிக்கப்படும் விலைகளையும் அளவிடும் சிறந்த தொரு அளவையாகப் பொது மக்களுக்குச் சொந்தமான ஆதாயம் பெறும் நிறுவனங்கள் பயன்படுகின்றன. இது தவிர, இத்தகைய நிறுவனங்களை நிருவகிப்பதில் நேரடியான பொறுப்பை அரசு மேற்கொள்கிறது என்ற எடுகோள் பொருளாதார உண்மை நிலை களோடு பொது அதிகாரிகள் மிகவும் நெருக்கமான தொடர்பைப் பெற வகை செய்வதாக அமைகிறது. மேலும் தனியார் வணிகங் களின் சிக்கல்களைப்பற்றிய நல்ல அனுபவ அறிவைப் பெறவும் அவர்களுக்கு உதவுகிறது. அதோடு, பொருளாதார வளர்ச்சித் திட்டங்களை வகுப்பதற்கும் பொதுவான பொருளாதாரக் கொள்கைளை வகுப்பதற்கும், முன்னேற்றப் போக்கைக் கட்டுப் படுத்துவதற்கும் அவர்களின் தகுதியை அதிகரிக்கிறது.

இந்தியாவில் வணிகத்தில் அரசு நுழைந்ததற்கான பொது வான நோக்கம் அரசு வருமானத்தை அதிகரிப்பதற்காக இல்லை. இவைகளின் நோக்கங்கள் பல. முதலாவதாக, இருப்புப் பாதைகள் போன்ற அடிப்படைப் பொதுப்பயன்பாடுகள், பொது மக்களுக்கு மிகுதியான அளவில் நன்மை தரத்தக்க மின்சாரத் திட்டங்கள், நீர்ப்பாசனத்திட்டங்கள் போன்றவைகள் ஆகிய வைகளை மேற்கொள்ளுதல் ஆகியவைகளைக் குறிப்பிடலாம். இரண்டாவதாக, நாட்டின் அடிப்படையில் மிகவும் சிறப்பிடம் பெற்றுள்ள தொழில்களைத் தொடங்குதலைக் குறிப்பிடலாம். மூன்றாவதாக, தனியார் முயற்சிகளுக்கு மிகவும் கவர்ச்சியான வைகளாக இல்லாதிருக்கும் மூலதனப் பண்டத் தொழில்களைத் தொடங்குதலைக் குறிப்பிடலாம். இறுதியாக, தொழில்களின் புதிய பகுதிகளில் நுழைவதற்குத் தனியார் தொழில் முயல்வோர் களைத் தூண்டிவிடும் நோக்கத்துடன் முன்னடத்திச் செல்லத்தக்க தொழில்களைத் தொடங்குதலைக் குறிப்பிடலாம். இத்தகைய தொழில்களில் சிலவற்றை நிருவகித்தலால் அவற்றிலிருந்து மென் மேலும் அதிகமான அளவு வருவாயை அரசு பெறுகிறது என்பது உண்மைதான். ஆனால், அரசுத் தொழில்களைப் பரவலாக்கு வதற்குப் பின்னணியில் உள்ள மிக இன்றியமையாத காரணி பரவலான பொதுநோக்கத்தை முன்னேற்றுவித்தல் என்பது தானே தவிர, வருமானமோ ஆதாயமோ அன்று.

பொது நிறுவனங்கள் யாவும் நாட்டுப்பணியைத் தருவதற்காகவே மிகவும் முக்கியமான வழியாக இருக்கின்றன என்றுதான் பெரும்பாலானவர்களால் கருதப்படுகின்றது. தனியார் துறை மிக நல்ல முறையில் அமைக்கப்பட்டிருக்கும் முன்னேற்றமடைந்த நாடுகளைப் பொறுத்த மட்டிலும் இது மிகவும் நல்லதொரு கோட்பாடாக இருக்கலாம். தேவையை அதிகரிப்பதையும் உள் நாட்டுச் சந்தையின் அளவை விரிவாக்குவதையும் முதன்மை நோக்கமாகக் கொண்டுள்ள பொதுப்பயன் பாடுகள், இருப்புப் பாதைகள், துறைமுகத்தின் முன்னேற்றங்கள், கப்பல் கட்டும் துறையின் முன்னேற்றங்கள் என்பன போன்ற ஒரு சில வகை மூதலீடுகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளிலும் இருக்கின்றன. வணிக முயற்சிகளும், தொழில் முயற்சிகளும் நல்ல முறையில் அமைந்த வணிக அடிப்படையில் செயல்படும்வரை, இவற்றில் அரசு பேரளவு முதலீட்டை மேற்கொள்ளுமானால், அவைகள் யாவும் தனியார் முதலீட்டிற்குத் துணை முதலீடுகளாகவே கருதப்பட முடியும். அந்த அடிப்படையில், நியாயமான வருமான விகிதத்தை உறுதிப்படுத்தும் நோக்கத்திற்கு அவைகளின் விலைக் கொள்கையை இசைவிப்புச் செய்வதில் இத்தகைய நிறுவனங்கள் சரியானவைகளே என்று கருதப்பட வேண்டும். இத்தகைய இயல்புடைய தொழில் நிறுவனங்களால் ஆதாயம் பெறப்படுவது பல அடிப்படையில் சரியெனக் குறிப்பிடப் படுகின்றது. முதலாவதாக, இத்தகைய நிறுவனங்களில் பல வற்றிற்குத் தொடக்க நிலையில் மிகவும் பேரளவிலான முதலீடுகள் தேவைப்படுகின்றன என்பதோடு தொடங்கிச் சில ஆண்டுகளில் அவைகள் நட்டத்தில்தான் நடைபெறுகின்றன என்பதையும் மறுக்க முடியாது. ஏறத்தாழ 10 அல்லது 20 ஆண்டுகள் இடைவெளிக்குப்பின்தான் அவைகள் விளைவைத் தரத் தொடங்குகின்றன. இதற்குஎடுத்துக் காட்டாக, சக்தி மற்றும் மின்சாரத் திட்டங்களைக் குறிப்பிடலாம். இவ்வாறாக, குறிப்பிட்டதொரு நேரத்தில் புதிய நிறுவனங்கள் நட்டத்தில் நடப்பவைகளாகவும் அதைப் போலவேயுள்ள பழைய முதடுலீகள் பேரளவில் நிகர வருவாயைத் தருபவைகளாகவும் இருக்கலாம். புதிய திட்டங்களின் இழப்புகளை ஈடு செய்வதற்கும், அதிகப்படியான திட்டங்களுக்கான நிதியாக்கத்திற்கும் அத்தகைய வருவாய்கள் மிகவும் இன்றியமையாதவைகளாக'இருக்கின்றன. உத்தரப் பிரதேசம், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் மின்சாரத் திட்டங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள் ஆகியவற்றைப் பொறுத்த மட்டிலும் அவைகளின் அனுபவம் இதுதான். எனவே, அத்தகைய பணிகளுக்கான விலையை நிர்ணயிக்கும்போது வரியியல்பையும் புகுத்துதல் முடியத்தக்கதாகும் என்பதோடு மிகவும் இன்றியமையாததாகவும் இருக்கிறது.

இரண்டாவதாக, இந்தியாவில் அரசின் தொழில்கள் பொருளாதார வளர்ச்சிப் போக்கில் இயங்கு நிலைப்பங்கை ஆற்ற வேண்டிய வகையில் இருக்கின்றன. புதிய வழிகளைக் காண்பவைகளாகவும் பின்பற்றுவதற்குரிய வழியைத் தனியார் துறைக்குக் காட்டுபவைகளாகவும் பல நேரங்களில் பொது நிறுவனங்கள் முன் நின்று நடத்திச் செல்ல வேண்டிய நிலையில் இருக்கின்றன. பொருளாதார வளர்ச்சிக்கான அடிப்படை நிலைகளை வகுத்துத் தரும் பணியோடு மட்டுமல்லாமல் மூலதனப் பண்டங்கள் தொழில்கள், உற்பத்தியாளர் பண்டங்கள், தொழில்கள், ஆகியவைகளிலும் அரசுத் தொழில்கள் பெரும் பங்கு புரிய வேண்டிய நிலைகள் தோன்றியுள்ளன. ஒரு சில நிறுவனங்கள் தொழில் இயல்புடையவைகளாகவும், வணிக இயல்புடையவைகளாகவும் காணப்படுகின்றன. எந்த அளவுக்கு இந்த இயல்புகள் காணப்படுகின்றனவோ அந்த அளவுக்குத் தனியார் துறையில் இலாப நோக்குடன் அமைந்திருக்கும் விலைக் கொள்கை அரசு நிறுவனங்களுக்கும் பொருந்தக் கூடியதே. மூன்றாவதாக, இத்தகைய நிறுவனங்களில் பெரும்பான்மையானவை குறிப்பிட்ட வகை நுகர்வோருக்கு நன்மை தரத்தக்கவைகளாகக் காணப்படுகின்றன. இருப்புப் பாதைகள் போன்ற பொதுப்பணிகள் பொதுவாக வரி செலுத்தும் எல்லோருக்கும் பயனைத் தருகின்றன என்றாலும் மின்சாரத் திட்டங்கள் அல்லது நீர்ப்பாசனத் திட்டங்கள் போன்றவைகள் குறிப்பிட்ட மக்களுக்கு அல்லது குறிப்பிட்ட பகுதிக்கு மட்டுமே நன்மை தரத்தக்கவைகளாக இருக்கின்றன எனவே இத்திட்டங்களால் நன்மை பெறுபவர்களின் வருமானம் அதிகரிக்கப்படும்போது, அவ்வாறு அதிகரிக்கப்பட்ட வருமானத்தின் ஒரு பங்கை வசூலிக்க அரசுக்கு வசதி செய்துதரும்வண்ணம் உள்ளதொரு தகுதியான விலைக்கொள்கையைக் கடைப்பிடிப்பதற்கு எதிராக எதுவுமே செல்ல முடியாது. இந் நோக்கில் பார்க்கும் போது, நேர்முக வரியைப்பற்றி மதிப்புரை தருவதைக்காட்டிலும் பொது நிறுவனங்களிலிருந்து பெறப்படும் ஆதாயத்தைப்பற்றிக் குறைவான அளவுதான் மதிப்புரை தரப்படவேண்டும். ஆனால், வருமானத்தைப் பெருக்குவதற்கானதொரு வழியாக மறைமுக வரிகள் பயன்படுத்தப்படுவதைக் காட்டிலும் குறைந்த அளவில் தகுதி னவைகளாக இல்லை.

(ஆ) வரி முறையை எளிமைப்படுத்துதல் (Simplification of the Tax System)

வரி இயந்திரத்தை எளிமைப்படுத்துவதன் மூலமும் வரித் தொகையை வசூலிப்பதற்காகும் செலவைக் குறைப்பதன்மூலமும் வரி நிகர வருமானத்தின் அளவை நிச்சயமாக அதிகரிக்க முடியும்

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள வரி விதித்தலைப் பற்றிய சிக்கல்களைப்பற்றிப் பல நிபுணர்கள் ஆராய்ந்திருக்கிறார்கள். இந் நாடுகளில் உள்ள வரி அமைப்புகள் மிகவும் சிக்கலானவைகளாக இருக்கின்றன என்றும், வரி வசூலிப்பதற்காகும் செலவைக் குறைப்பதற்கான வாய்ப்புகள் அதிகமான அளவில் இருப்பதாகவும் இவ் வறிஞர்கள் கருதுகிறார்கள். வரித் தொகையை வசூலிப்பதற்காகும் செலவுக்கும் அதிகமாக எந்த அளவுக்கு வருமானத்தைத் தருகின்றன என்பதைப் பற்றிய சரியான மதிப்பீடு எதுவுமில்லாமல் ஏற்கெனவே இருக்கும் அடிப்படையான ஒரு சில வரிகளின்மீது அதிகப்படியாக விதிக்கப்படும் குறிப்பிட்ட நோக்கங்களுக்கான வரிகளாகவே பல வரிகள் காணப்படுகின்றன. இவ்வாறாக, சரியான வரிக் கொள்கைகளில் ஒன்றான சிக்கனக் கொள்கை (Canon of Economy) மீறப்படுகிறது. பழைய வரி ஒரு வரியே அன்று என்ற கூற்றில் அதிகமான உண்மை இருக்கிறது. நேர்முக வரியாக இருந்தாலும், மறைமுக வரியாக இருந்தாலும். எந்த ஒரு வரியும் புதிதாக விதிக்கப்படும் போது வரிச் செலுத்துபவர்களில் ஒரு சில பிரிவினரிடையே பாதகமான எதிர்விளைவுகளைத்தான் முதலில் தோற்றுவிக்கும். ஆனால், இத்தகைய எதிர்ப்புகள் யாவும் சில காலத்திற்குப்பின் அவைகளாகவே அடங்கிவிடும். அப்போது புதியபுதிய வரிகளை விதிப்பதற்கும் ஏற்கெனவேயுள்ள வரிகளோடு அதிகமாகச் சேர்ப்பதற்கும் வரி அதிகாரிகள் தூண்டப்படுகிறார்கள். ஆனால், சமுதாயத்தின் வருமானம்தான் எல்லா வரிகளுக்குமான அடிப்படை மூலமாக இருக்கின்றன என்பதால், வரியை வசூலிப்பதற்கான செலவு உறுதியாக அதிகரிக்கும்போது வரி வருமானத்தில் குறைந்துசெல் விளைவுவிதி செயல்படத் தொடங்குகிறது. இவ்வாறாக, இந்தியாவில் வருமானவரி அமைப்பில் உள்ள ஓட்டைகளை அடைக்கும் ஒருவித நோக்கத்துடனும் அரசாங்கத்தின் வரி மூல வளங்களை அதிகரிக்கும் ஒருவித நோக்கத்துடனும் சொத்துவரி, மூலதன ஆதாய வரி, பரிசு வரி, செலவு வரி போன்ற வரிகள் நேர்முக வரிகள் பட்டியலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதைப் போன்று வேளாண்மை வருமான வரி, வாரிசு உரிமை வரி, முன்னேற்றத் தீர்வை மற்றும் இவை போன்ற பல வடிவங்களில் நிலத்தின்மீதான வரியின்மீதும் புதிய வரிகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. இந்தியாவில் உள்ள ஆயத் தீர்வைகளின் எண்ணிக்கை மிகுதியாக உள்ளது. அவைகளிலிருந்து பெறப்படும் வருமானத்தைக் காட்டிலும் அதிகரித்துச் செல்லும் விகிதத்தில் அவைகளை வசூலிப்பதற்காகும் செலவு சென்றுகொண்டிருக்கிறது.

நிலவரி மதிப்பீடு மாற்றியமைக்கப்படலாம். பொது வருமானத்தின் அட்டவணையைப்போல, வேளாண்மையிலிருந்து பெறப்

படும் வருமானமும், வளர்க்கப்படும் பயிரின் தன்மை. நிலத்தின் வளம், நிலத்தைப் பெற்றிருக்கும் முறை என்ற பல அடிப்படைகளில் வகைப்படுத்தப்படலாம். இவ்வாறு செய்வது, வருமான வரி, நிலவரி ஆகியவற்றின் முறைகளை ஒரே மாதிரியாக்கும் என்பதோடு நேர்முக வரி அமைப்பை மிகுந்த அளவு நெகிழ்ச்சியுடையதாகவும், இப்போதிருக்கும் முறைகளில் உள்ள குழப்பத்தைக் குறைப்பதாகவும் அமையும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தொழில்களிலிருந்தும், வணிகத்திலிருந்தும், பணிகளிலிருந்தும், பெறப்படும் வருமானத்தைக் காட்டிலும் வேளாண்மைத் துறையிலிருந்து பெறப்படும் வருமானமே மொத்த வருமானத்தில் மிக முக்கியமான அளவைத் தரத்தக்கதாக இருக்கிறது. மேலும், இந் நாடுகளின் தொழில் முன்னேற்றத்திற்குச் சமமான அதிகமான அளவு சிறப்பிடம் வேளாண்மை முன்னேற்றத்திற்கும் தரப்படுகிறது. இத்தகைய வளர்ந்துவரும் பொருளாதாரங்களில் இவ் வழிகளில் முன்னேற்றம் தோற்றுவிக்கப்பட்டால் அவை அந் நாடுகளின் தேவைகளை ஈடுசெய்யத்தக்கவைகளாக அமையும்.

(இ) வரி நிருவாகத்தில் சீர்திருத்தம் (Reform of Tax Administration)

நாடுகள் பலவற்றில் பொருளாதார வளர்ச்சி உள்ளார்ந்திருப்பதால் அதிகமான முதலீட்டுச் செலவுகள் அரசாங்கத்தால் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று எண்ணி குறைந்த வளர்ச்சியுடைய நாட்டு வருமான அதிகரிப்புக்கு ஏற்ற வகையிலாவது அரசாங்கம் தன் கைவசமிருக்கும் நிதி மூலவளங்களைப் பெருக்க வேண்டும். வருமான அதிகரிப்பில் 40%-50% வரையிலான அளவை வரி விதிப்பு தானாகவே உறிஞ்சும்வண்ணம் தரப்படுத்தப்பட்டவைகளாக வரிகள் அமைந்திருந்தால்தான் இது முடியக்கூடியதாகும். இத்தகைய முறையில் அமையப் பெற்ற இறுதிநிலை வரி விதிப்பின் அதிகமான விகிதம் பணவீக்கத்தைத் தடை செய்கிறது என்பது மட்டுமல்லாமல் உறுதிப்படுத்தும் காரணியாகவும் செயல்படுகிறது. முதலீட்டு விகிதத்தை அதிகரிப்பதற்கு அரசுக்கு வழி வகுப்பதாகவும் செயல்படுகிறது. இன்றியமையாத பண்டங்களின் மீதான வரி விகிதத்தைக் காட்டிலும் ஆடம்பரப் பண்டங்களின் மீதான வரி விகிதங்கள் அதிகமானவைகளாக இருந்தாலும், வருமான வரி போதுமான அளவுக்கு வளர் விகித வரியாக இருந்தாலும் இறுதி நிலை விகிதங்கள் அதிகமான அளவில் நிலைநிறுத்தப்படலாம். அத்தகைய வரி விதிப்பு முறை இருந்தாலும் எந்த அளவுக்கு வரிகள் வலியுறுத்தப்படுகின்றன என்பதைப் பொறுத்து மூலவளத் திரட்சியின் அளவு அமைந்திருக்கிறது. வரி ஏய்ப்புகள் மிகமிகக் குறைந்த அளவில் இருக்குமாறு செய்யப்பட

வேண்டும் என்பதும், வரியினுல் பெறப்படும் வருமானத்தோடு விகிதமல்லாத முறையில் வசூலிப்பதற்காகும் செலவு அதிக மாகாதவாறு பார்த்துக்கொள்ளப்படவேண்டும் என்பதும் மிகச் சிறப்பாகக் கவனிக்கத்தக்கவைகளாகும்.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள வரி இயந்திரம் மிகவும் குறைபாடு உடையதாக இருக்கிறது என்பதும், வரி நிருவாகத்தில் அதிகமான அளவு தளர்ச்சி இருக்கிறது என்பதும், அதன் காரணமாக வரி விதிப்பின் இறுதி நிலை விகிதம் சாரசரி விகிதத்தைக் காட்டிலும் குறைவானதாக இருக்கிறது என்பதும் தான் உண்மை நிலை. இந் நாடுகளில் உள்ள நிலைய அமைப்புகள், நிருவாக நிலைகள் ஆகியவைகள் காரணமாக வரி விதித்தலின் நுட்பமான கலைகளைப் பயன்படுத்த முடியாது. பெரும்பாலும் பொருளாதாரப் பின்தங்கிய நிலைகளுடன் நிருவாகப் பின்தங்கிய நிலையும் சேர்ந்தே காணப்படுகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் காணப்படும் வேறுபட்ட சமுதாய அமைப்பு, பொருளா தாரச் சூழ்நிலைகள் ஆகியவைகளுக்கேற்றவாறு மாற்றியமைக்கப் படாமல், முன்னேற்றமடைந்த வேற்று நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவைகளாகவே இந் நாடுகளில் காணப்படும் வரி நிருவாக அமைப்பும் பொது நிருவாக அமைப்பும் பொது நிருவாகமும் காணப்படுகின்றன. இவ்வாறாக, இலத்தீன் அமெரிக்க நாடுகளில் உள்ள வரி முறைகள் பிரான்ஸ், ஸ்பெயின் மாதிரியை (France Spanish Model) அடிப்படையாகக்கொண்டு அமைக்கப்பட்டவைகளாகக் காணப்படுகின்றன. இதைப் போன்று, இங்கிலாந்து காமன்வெல்த்தைச் சேர்ந்த சில பின் தங்கிய நாடுகளில் உள்ள வரி முறைகள். இங்கிலாந்து மாதிரியைக் கொண்டவைகளாக இருக்கின்றன. ஒரு சில குறைந்த வருமான நாடுகளில் இன்னும் நிலப்பிரபு முறையைச் (Feudel Type) சேர்ந்த தாகவே சமுதாய அமைப்புக் காணப்படுகிறது. வருமான வரி மிகவும் வெற்றியுடன் செயல்படுத்தப்படுவதற்கு ஆறு சிறப்பான நிலைகளைப் பொலியாவிற்கான ஐக்கிய நாடுகளின் தொழில் நுட்பக் குழுவின் ஓர் உறுப்பினரான ரிச்சாடு கூடு (Richard Coode, a member of the United Nations, Technical Assistance Mission to Bolivia) குறிப்பிட்டிருக்கிறார். அதிகமான அளவில் பணப் பொருளாதாரம் நடைமுறையில் இருத்தல், வரி செலுத்து வோரிடையே மிக அதிகமான கல்வித்தரம் இருத்தல், நேர்மை யாகவும் நம்பிக்கை வைக்கத்தக்க மாதிரியாகவும் கணக்குப் பதிவு செய்யும்முறைகள் இருத்தல், வரிச் செலுத்துவோர் தாங்களாகவே முன் வந்து வரி செலுத்தும் தன்மை இருத்தல், தடையற்ற மக்க ளாட்சி அரசு என்ற வடிவத்தில் அமையப் பெற்ற சாதகமான அரசியல் சூழ்நிலைகள் இருத்தல், நேர்மையானதும் திறமையானது

மான நிருவாக முறை இருத்தல் என்பவைகளே அத்தகைய ஆறு நிலைகளாகும்.[1] பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் ஏறத்தாழ இந்த நிலைகள் யாவுமே காணப்படவில்லை. இத்தகைய நாடுகளில் பெரும்பான்மையானவற்றில் காணப்படும் அரசியல் முறைகள் மக்களாட்சிமுறைகளாகஇருக்கின்றன. ஆனால் இந் நாடுகளில் காணப்படும் பணச் சம்பந்தப்பட்ட துறை மிகவும் குறுகியதாக இருக்கிறது. 50%-க்கும் குறைவான அளவு மக்களே கல்வியறிவு பெற்றவர்களாக இருக்கிறார்கள். கணக்குப் பதிவுகள் பொதுவாகக் காணப்படுவதில்லை. பதிவு செய்யப்படும் கணக்குகளிலும்கூடச் சரியாகப் பதிவு செய்யப்பட்டு நிருவகிக்கப்படுவதில்லை. வரி செலுத்த வேண்டுமென்ற வேண்டுகோள் மிகவும் குறைவானதாகக் காணப்படுகிறது. நிருவாகம் திறமையற்றதாக இருக்கிறது. இவற்றின் காரணமாக வளர்ச்சி பெற்ற நாடுகளில் மொத்த வருமானத்தில் வரியின் பங்கு இருக்கும் அளவைக் காட்டிலும் மிகவும் குறைவானதாகவே குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வரியின் பங்கு இருக்கிறது. இதுமட்டுமல்லாமல் அதிகப்படியாகத் தோன்றும் வருமானத்தின் மென்மேலும் அதிகமான பங்கைத் திரட்டுவதற்கான வாய்ப்பும் மிகவும் குறுகியதாக இருக்கிறது.

வரிமுறை மிகவும் பயனுள்ளதாக இருக்கவேண்டுமானால், அந்த நாட்டின் சமுதாயச் சூழ்நிலைகளுக்கும் பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கும் ஏற்றவண்ணம் மாற்றியமைக்கப்படவேண்டும். முன்னேற்றமடைந்துள்ள தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரம் ஒன்றில் மிகவும் திறம்படச் செயல்படத்தக்கதொரு முறை வேறுபட்ட சமுதாய அமைப்பையும் பண்பாட்டு நிலையையும் உடையதொரு ஏழ்மை நாட்டில் தோல்வியடைகிறது. 1950ஆம் ஆண்டில் ஜப்பான் நாட்டிற்கான சூப் மிஷின் (Shoup Mission) பரிந்துரைகள், அதே நாட்டிற்கு கால்டார் (Kaldor) அவர்களின் பரிந்துரைகள் போன்று குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மேலை நாட்டு நிபுணர்கள் நிதித் திட்டங்களுக்காகத் தந்த பரிந்துரைகள் மிகவும் குறைவான அளவிலேயே வெற்றியைத் தந்தன என்பதே இதை விளக்குவதாக அமைந்திருக்கிறது. ஆனால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள சமுதாய நிலையங்களுக்கேற்ப அயல் நாட்டுத் தொழில் நுணுக்கங்கள் மாற்றியமைக்கப்பட வேண்டியது எந்த அளவுக்கு இன்றியமையாததோ அதே அளவுக்குச் சிரமமான செயலும் ஆகும். குறைந்த வளர்ச்சியுடைய நாடொன்றில் மிகவும் முன்னேற்றமடைந்ததொரு நிதி

[1] Proceedings of the Forty-fourth Annual Conference of the National Tax Association, 1951, quoted in *Taxes and Fiscal Policy in Underdeveloped Countries*, U.N., 1954, pp. 20-21.

நிருவாக முறையை அதன் பொருளாதார அமைப்புக்கேற்றவாறு மாற்றியமைத்துக்கொள்வதைக் காட்டிலும் மிக எளிமையாகப் பின்தங்கிய வரிமுறையொன்றை வளர்ச்சி பெற்ற பொருளாதாரம் அதன் தேவைக்கேற்ப மாற்றியமைத்துக்கொள்ளமுடியும் என்று குறிப்பிடப்படுகிறது.[1]

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கு நிருவாக முறைகளை மாற்றுவதன் சிரமம் ஒரு சில வரிகளில் மிகவும் அதிகமானதாகவும் வேறு சிலவற்றில் சிறிது குறைவானதாகவும் இருக்கிறது. நிலக் குடிவார முறையுடனும் பொருளாதாரம் ஒன்றின் வேளாண்மை அமைப்புடனும் நிலவரி எந்த அளவுக்கு நெருக்கமாக இணைக்கப்பட்டிருக்கிறதோ அந்த அளவுக்கு ஒரு நாட்டில் வெற்றியுடன் செயல்படும் வரிமுறை இன்னொரு நாட்டில் வெற்றியுடன் செயல்பட முடியாமல் இருக்கும். இதற்கு மாறாக, இரண்டு நாடுகளிலும் காணப்படும் மாநகராட்சி அமைப்பும் மாநகராட்சி முறையில் நடத்தப்படும் வணிகமும் ஏறத்தாழ ஒன்றுபோலவே இருக்குமாதலால் மாநகராட்சி வரி போன்ற வரிகளில் பயன்படுத்தத்தக்க முறைகள் மிக எளிதாக ஒரு நாட்டிலிருந்து பிற நாட்டிற்கு மாற்றப்படலாம். வேளாண்மையையே முதன்மையான தொழிலாகக் கொண்டுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளிலும்கூட, பேரளவில் நடைபெறும் சர்க்கரைத் தொழில், ரப்பர் தோட்டத் தொழில் ஆகியவைகள் மாநகராட்சி முறைகளில் நடத்தப்படுவதைப்போன்று வேளாண்மைத் தொழில்களும் நடத்தப்படுமானால், வளர்ச்சியடைந்த நாடுகளில் உள்ள பொறி வழித் தொழில்களில் பயன்படுத்தப்படும் மாநகராட்சி வரி முறைகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கு எளிதாக மாற்றப்படலாம்.

மேலை நாட்டு வரி முறைகளைக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளின் தேவைக் கேற்றவாறும், நிலைய அமைப்புக் கேற்றவாறும் மாற்றியமைத்துக் கொள்வதோடு, இந் நாடுகளில் உள்ள வரி இயந்திரத்தை முன்னேற்றுவதன் மூலம் அவைகளின் வருவாய் மூலவளங்களைப் பேரளவில் பெருக்கவும் செய்யலாம். பொறிநுட்ப உதவிக்கான ஐக்கிய நாட்டு விரிவாக்கும் திட்டத்தின் (United Nations Expanded Programme of Technical Assistance) மூலமாக ஏழ்மை நாடுகளுக்கு இத்தகைய சிறந்த அறிவுரைகள் பேரளவில் இப்போது கிடைக்கின்றன. ஒரு சில நாடுகள் அத்தகைய சிறந்த அறிவுரைகளைப் பின்பற்றி, அதன்

[1] Bloch, H.S., 'Economic Development and Public Finance,' *The Progress of Underdeveloped Areas*, Ed. Hoselitz, Bert F., Chicago 1952, p. 253.

மூலமாக, வரி நிருவாகச் செலவைப் போன்று இருபது மடங்கு முதல் நூறு மடங்குவரை வரி வருமானங்களை அதிகமாகப் பெற்றதனால் நன்மைகளைப் பெற்றிருக்கின்றன. குறைந்த வருமானமுடைய நாடுகளில் காணப்படும் நிதி நிலையங்களை முன்னேற்றுவித்தல், கணக்கு வைத்துக் கொள்ளும் பழக்கங்களை முன்னேற்றுவித்தல், கணக்கு எழுதும் முறைகளில் சீரான தரத்தைப் புகுத்துதல், வரி அதிகாரிகளுக்குத் தகுதியான பயிற்சியைத் தருதல் பொது நிருவாகத் திறமையை அதிகரித்தல் போன்றவைகள் யாவும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் சக்திக்கு உட்பட்டவைகளே. மேம்பாடடைந்த பொருளாதார நிலைகளும், உயர்வான கல்வித்தரமும் சமுதாயத்தின் வரிச் செலுத்தவேண்டிய உணர்வின் அளவை அதிகரிக்கும் இத்தகைய வழிகளில் மேற்கொள்ளப்படும் முன்னேற்றங்கள் யாவும் வரிகளின் மூலமாக நாட்டு வருமானத்தின் அதிகரித்த பங்கைப் பெறுவதற்கு அரசு வகைசெய்யும் என்பதோடு பேரளவில் பொது முதலீட்டை மேற்கொள்ளவும் வகைசெய்யும். அதே நேரத்தில் இத்தகைய நடவடிக்கைகளின் காரணமாகத் தோன்றும் பொருளாதார முன்னேற்றம், தேவையான சமுதாய மாற்றங்களையும், நிலைய மாற்றங்களையும் தோற்றுவிக்கும். இந்த அடிப்படையில் பார்க்கும் போது இந்த வழிகளில் மேற்கொள்ளப்படும் முன்னேற்றங்கள் திரள் விளைவுகளைத் தரத்தக்கவைகளாக இருக்கின்றன.

# 7. பற்றுக்குறை நிதியாக்கம்

## (Deficit Financing)

ஏதாவதொரு செலவு செய்யும் நிறுவனத்தின் (Spending Unit) அல்லது நிருவாக அமைப்பின் நடப்பு மூல வளங்கள் அதன் செலவுகளைக் காட்டிலும் குறைவானதாக இருந்தால் அதன் வரவு செலவுத் திட்டத்தில் பற்றுக்குறை தோன்றுகிறது. இப் பற்றுக் குறையை நிரப்புவதற்காக மேற்கொள்ளப்படும் முயற்சிகள், வரிகளுக்கேற்ற வகையின் செலவுகளைச் சமன் செய்வதற்கான முயற்சிகள் ஆகியவைகளைத்தான் பற்றுக்குறை நிதியாக்கம் என்ற சொற்றொடர் குறிப்பிடுகிறது. பொதுவாக, பற்றுக்குறை நிதி யாக்கம் என்பது அரசின் நிதி நடவடிக்கைகளைப் பற்றியதாகவே இருக்கிறது. முதலாளித்துவ முறையில் இருக்கும் நாடுகளிலும் கூட, அண்மை ஆண்டுகளில் அரசின் முதலீட்டு நடவடிக்கைகள் பேரளவில் பெருகியுள்ளன. பொதுப் பயன்பாட்டுப் பணிகளை அரசு தனது உடைமையாக்கியிருப்பதும் தானே நடத்துவதும் பொது நலனுக்கு மிகவும் அவசியமானது என்ற அடிப்படையிலும், நெடுஞ்சாலைகள் மின்சார நீர்ப்பாசனத் திட்டங்கள் போன்ற பேரளவிலான முதலீட்டுத்திட்டங்கள் நிச்சயமாக அரசினால் தான் மேற்கொள்ளப்பட வேண்டும் என்ற அடிப்படையிலும், பொது மருத்துவ முன்னேற்றம் சமூகப்பணிகளின் முன்னேற்றம் பொதுநல முன்னேற்றம் ஆகியவைகளின்மீது மென்மேலும் அதிக மாகச் செலவழிக்க வேண்டியிருக்கிறது என்ற அடிப்படையிலும் இத்தகைய முதலீட்டுப் பெருக்கத்தைப் பொருளாதார நிபுணர் கள் சரியெனக் குறிப்பிடுவதோடு அவசியம் எனப் பரிந்துரைக்கவும் செய்கிறார்கள். தவிர, பொருளாதார உறுதித் தன்மையை உறுதி செய்வதற்காவும். முன்னேற்றுவிப்பதற்காகவும் மென்மேலும் அதிகரித்துவரும் அளவிலான பொது முதலீடுகள் மிகவும் அவசிய

மானவையெனப் பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.[1] மேலே குறிப்பிடப்பட்டுள்ள விவாதத்தின் பெரும் பகுதி முன்னேற்றமடைந்த நாடுகளுக்கும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கும் மிகவும் பொருந்தக்கூடியவைகளாகும். பேரளவு முதலீட்டை மேற்கொள்ளுவதற்காக அதிகமான அளவிலான தொடக்கநிலை முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டால் ஒழிய, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பொருளாதாரத்தில் பின் தங்கிய நிலையிலிருந்து விடுபடுதலும், பொருளாதாரத் தேக்க நிலையிலிருந்து விடுபடுதலும் முடியவே முடியாதவைகளாகும். இந்த உண்மையானது பேரளவில் பொது முதலீடுகள் மேற்கொள் படுவதற்குரிய சக்தி மிக்கதொரு சிறப்புக் காரணமாக இருக்கிறது. உண்மையில் பொருளாதார வளர்ச்சிப் போக்கைத் தொடங்கி வைப்பதில் மிகவும் சிறப்பு மிக்கதொரு பங்கை அரசு ஆற்ற வேண்டியிருக்கிறது என்ற கருத்து குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பற்றுக்குறை நிதியாக்கத்தை மிகவும் அவசியமான தாக்கும் காரணிகளில் மிகவும் சிறப்பான காரணியாக இருக்கிறது.

இன்றைய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அரசுகள் பேரளவிலான முதலீடுகளை மேற்கொள்ளவேண்டிய அவசியம் அதிகமான அளவில் உணரப்படுகிறது. ஆனால், இவ்வாறு மிக வேகமாக அதிகரித்துவரும் முதலீட்டுச் செலவுகளுக்கெதிராக அரசுத்துறை நிறுவனங்களின் வருமானங்கள் வரிவிதித்தலின் மூலம் பெறப்படும் வருமானங்கள் போன்று, மரபு வழியாக அரசு பெறக்கூடிய நிதி மூலவளங்கள் மனநிறைவு தரத்தக்க வகையில் அதிகரிக்கத் தவறிவிட்டன. அதன் காரணமாக, அரசு என்ற பதிலாண்மையின் மூலமாகப் பெற முயலப்படும் பொருளாதார முன்னேற்றம் பொது வரவு செலவுத் திட்டங்களைச் சிரமப் படுத்தியிருக்கின்றன என்பதோடு வரவு செலவுத் திட்டங்களின் பற்றுக்குறைக்கும் வகை செய்திருக்கின்றன எனலாம். முன்னேற்ற மடைந்த நாடுகளில் நாட்டு விளைவில் 20%—40% வரையிலான வருமானம் அரசுகளுக்குக் கிடைப்பதற்கு எதிராகக் குறைந்த வருமானமுள்ள நாடுகளில் இவ் விழுக்காட்டின் அளவு 10%-க்கும் குறைவாகவே இருக்கின்றது என்பதை முந்திய அத்தியாயத்தில் பார்த்திருக்கிறோம். கட்டாயச் சேமிப்புகள் என்ற வடிவத்தில் பெறப்படுவதுதான் வரி வருமானங்களாகும். பொருளாதாரம் வளர்ச்சி பெற்று, அரசாங்கத்தின் செலவு அளவுகள் அதிகரிக்கும்

1 Gopland, D. B., *Public Policy-The Doctrine of Full Employment*, Harris, S. E., *The New Economics-Keynes' Influence on Theory and on Public Policy*, Alfred Knopf Inc., New York, 1948, p. 216.

போது அரசுக்குத் தேவையான அளவுக்கு நிதி மூலவளங்களைத் தரும்வண்ணம் வரிமுறை நெகிழ்ச்சித் தன்மைஉடையதாக இருக்க வேண்டும். ஆனால், விதிக்கப்படும் வரிகளின் இயல்புகள், வரிகளை நிருவகிபபதிலும் வசூலிப்பதிலும் உள்ள திறமை, பொருளாதாரம் மென்மேலும் விரிவான அடிப்படையைப் பெறும்போதும் சமுதாயத்தின் தனிநபர் வருமானம் அதிகரிக்கும்போதும் புதிய புதிய வரிகளைப் புகுத்துவதற்கான வாய்ப்பு ஆகியவைகளைச் சார்ந்தே நிதி இயந்திரத்தின் எதிர் விளைவு அமைந்திருக்கிறது. உலகில் ஏழ்மை நாடுகளில் இருக்கும் வரி நிருவாகம் தளர்ச்சியுடையதாகவும் திறமையற்றதாகவும் இருக்கிறது என்ற உண்மை விளக்குவதற்குத் தேவையில்லாத வகையில் மிகத் தெளிவாகக் காணப்படுவதாக இருக்கின்றது. இதன் காரணமாகக், கடன் வாங்குதல். பற்றுக்குறை நிதியாக்கம் போன்ற முறைகளை அரசு அணுக வேண்டியிருக்கிறது. முதல்வகை, தன்னிச்சைச் சேமிப்பால் தோன்றுகிறது. இரண்டாவது வகை, கட்டாயச் சேமிப்பால் தோன்றுகிறது.

கீன்ஸ் அவர்களின் விளக்கத்தின்படியான உறுதித் தேவையில் தோன்றும் குறைவுதான் பொருளாதார மந்தத்தின் மிகவும் இன்றியமையாத பெரும் காரணமாகும் என்ற எடுகோளின் அடிப் படையில்தான் வளர்ந்துவரும் நாடுகளில் உள்ள பற்றுக்குறை நிதி யாக்கத்திற்கான கோட்பாடுகளின் நீதி இருக்கிறது. இத்தகைய நிலையில் பற்றுக்குறை நிதியாக்கம் பணத்தின் அளிப்பையும் மக்களின்வாங்கும் சக்தியையும்அதிகரிக்கும். அரசாங்கத்தின்கடன் வாங்கும் நடவடிக்கைகளும், வங்கி அமைப்பின் சொத்துகளும் வைப்புகளும் கடன் பெருக்கம், பண அளிப்பின் பெருக்கம், சமுதாயத்தின் செலவழிக்கத்தக்க பண வருமான அளவின் அதிரிகப்பு ஆகியவை இதன் காரணமாகத் தோன்றுகின்றன. பொருளாதார மந்த நிலை அல்லது பொருளாதாரத் தேக்க நிலைக்கான காரணமாக உறுதித் தேவையின் பற்றுக்குறை இருக்கும்வரை பண அளிப்பின் அதிகரிப்பும், அரசாங்கத்தின் அதிகரிக்கும் செலவும் அதிகமான மொத்தச் செலவை ஊக்குவிக்கும் உறுதித் தேவை நிலையில் அதிகரிப்பு தோன்றும் போது, பொருளாதாரத்திலிருக்கும் மூலதன மூலவளங்களும், உழைப்பு மூலவளங்களும் முழுமையான அளவுக்கு அதிகரிக்கின்றன. அதோடு பொருளாதார நடவடிக்கையின் வேகமும் புத்துயிர் பெறுகின்றது.

ஆனால், முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் பொருளாதார மறுமலர்ச்சியைத் தோற்றுவிப்பதற்கும், பொருளாதார உறுதித்

தன்மையை நிலைநாட்டுவதற்கும் உரியதொரு வழியாகப் பயன் படுத்தப்படும் பற்றுக்குறை நிதியாக்கத்தின் விளைவுகள் இப்போது வினாவிற்குரியவைகளாக இருக்கின்றன. அதோடு பற்றுக்குறை நிதி யாக்கம் என்ற முறையே கடுமையமான குற்றச் சாட்டுகளுக்கு இலக்காகியிருக்கிறது. எடுத்துக்காட்டாக, இந்த நூற்றாண்டில் தோன்றிய உலகப் பெரு மந்தத்தின் இறுதி ஆண்டுகளில் ஐக்கிய அமெரிக்க நாட்டில் பொருளாதார மறுமலர்ச்சி தோன்றியது. இத்தகைய மறுமலர்ச்சி ஓரளவுக்காவது தனியார் வணிகத்தின் மறுமலர்ச்சியால் தோன்றியது என்பது மறுக்க முடியாது. தனியார் வணிகத்தின் மறுமலர்ச்சிக்கு அரசாங்கத்தின் முதலீடு களின் அதிகரிப்பு காரணமாக இருக்கவில்லை. மாறாக வேறுபல சூழ் நிலைகள் காரணமாக இருந்திருக்கின்றன மாறிக்கொண்டிருக்கும் பன்னாட்டு அரசியல் நிலைகள், தொழிலாளர் உறவில் உறுதி யில்லா நிலைகள் பொதுப் பணித் தொழில்களில் தனியார்களுக் கான வாய்ப்புகள், மற்றும் இவை போன்றவற்றின் நோக்கில் வணிகப் பிரிவினரிடையே போதுமான அளவுக்கு நம்பிக்கையை அரசாங்க நடவடிக்கைகள் வளர்க்க முடியவில்லை. பேரளவிலான பற்றுக்குறைச் செலவுகள் பொதுத் துறையில் வீணான செலவுகளை ஊக்குவிக்கின்றன என்றும், அதன் காரணமாக உற்பத்திச் செலவிலும் கூலி நிலையிலும் தோன்றும் உயர்வு தனியார் வணிகர் களின் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் மிகவும் பாதகமாகப் பாதிக்கிறது என்றும் குறிப்பிடப்படுகிறது.[1] தவிர, பற்றுக்குறை நிதியாக்கத்தின் காரணமாக அரசுப் பத்திரங்கள், கடன் பத்திரங்கள் ஆகியவைகள் வங்கி முறையில் அதிகமான அளவில் சுமத்தப்படும் என்பதால் அந்நாட்டின் பணவாக்க முறைகள், கடன் முறைகள் ஆகியவைகளின் பயனைக் கெடுத்துவிடுகிறது. மேலும் வழக்கமாகப் பயன்படுத்தப்படும் கடன் கட்டுப்பாட்டுக் கருவிகளைப் பயன்படுத்தப்படும்போதும் அது எதிர்பார்க்கும் பயனைத் தராமல் போகின்றது.

ஒருபுறம் அரசாங்கத்தின் வருமானம், மற்றொரு புறம் மூல தனச் செலவு உள்ளிட்ட வரவு செலவுத் திட்ட மொத்தச் செலவு ஆகியவற்றிடையேயான இடைவெளியைப் பற்றுக்குறை நிதி யாக்கம் என்ற சொல் ஐக்கிய அமெரிக்க நாட்டில் குறிப்பிடுகிறது. மேலும், ரொக்க இருப்புகளைப் பயன்படுத்துதல், மைய வங்கியிட மிருந்து கடன் வாங்குதல். பொதுமக்களிடமிருந்து கடன் வாங்கு தல் போன்று இத்தகைய இடைவெளியை நிரப்பும் வழிகளையும் இது ஐக்கிய அமெரிக்க நாட்டில் உள்ளடக்கியிருக்கிறது. பற்றுக்

[1] Haley, B. F., 'The Federal Budget: Economic Consequences of Deficit Financing' *American Economic Review*, February, 1941, pp. 67-87.

குறை நிதியாக்கத்தில் உள்ளார்ந்திருக்கும் பணவீக்கத்தின்மீது கவனம் செலுத்தப்படும்வண்ணம் 'பற்ருக்குறை நிதியாக்கம்' என்ற சொல்லின் பொருள் இந்தியாவில் வரையறை செய்யப் படுகிறது. இவ்வாருகப் பற்ருக்குறை என்ற சொல் வரவு செலவுத் திட்டத்தின் இரு பகுதிகளான வருவாய், மூலதனம் என்ற இரு பகுதிகளிலும் தோன்றும் குறைவைக் குறிப்பிடுகிறது. அன்றியும் ரொக்க இருப்புகளைப் பயன்படுத்துதலையும், மைய வங்கியிட மிருந்தும் வணிக வங்கிகளிடமிருந்தும் அரசாங்கத்தின் குறுகிய காலக் கடன்களையும் இந்த நிதியாக்கத்தின் பகுதி குறிப்பிடுகிறது. கடன்களின் தொகைகள், சிறு சேமிப்புகள், ஓய்வு காலத்திற்கான செலுத்துதல்கள், அரசாங்கத்திற்குக் கிடைக்கத்தக்க வேறுபல நிதிகள் ஆகியவைகள் உள்பட உள்ள அரசாங்கத்தின் நடப்பு வருமானங்கள், இயல்பான வருமானங்கள் ஆகியவைகளைவிட மொத்தச் செலவு அதிகமாக இருக்கும்வரை வரவு செலவுத் திட்டத்தில் பற்ருக்குறை இருக்கும். மைய அரசாங்கத்தின் ரொக்க இருப்புகளினுலும், மாநில அரசாங்கத்தின் ரொக்க இருப்புகளினுலும் மைய வங்கிகள் வணிக வங்கிகள் ஆகியவை களிலிருந்து பெறப்படும் குறைந்த காலக் கடன்களினுலும் இப் பற்ருக்குறையானது நிதியாக்கம் செய்யப்படுகிறது. ஐக்கிய அமெரிக்க நாட்டில் வரவு செலவுத் திட்டத்தின் இடைவெளியை நிரப்புவதற்கானதொரு வழியாக உள்நாட்டுக் கடன்கள் கருதப் பட்டன. ஆனுல், இத்தகைய கடன்களின் மூலம் பெறப்படும் வருமானம், வரவு செலவுத் திட்டத்தின் இடைவெளியைக் குறை வானதாகக் காட்டுவதற்காகச் செய்யப்படுவது போன்று நடப்பு வருமானங்களின் ஒரு பகுதியாக இந்தியாவில் கருதப்படுகின்றது. இந்த முறையில் வரையறை செய்யப்படும் பற்ருக்குறை நிதி யாக்கம் மிகவும் தெளிவாக நடப்பு உற்பத்திக்குமேல் அரசாங் கத்தின் அமிதச் செலவை மிகவும் தெளிவாகக் காட்டுகிறது என்றும், அதன் வழியாக அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகள் எந்த அளவுக்குப் பணவீக்கத் தன்மையை உள்ளார்ந்திருக்கின்றன என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது என்றும் பற்ருக்குறை நிதியாக்கத்திற்கு இந்தியாவில் மேற்கண்ட விளக்கம் தருவது சரியெனக் குறிப்பிடப்படுகிறது. ரொக்க இருப்புகளைச் செலவழித் தலும் அரசாங்கம் மைய வங்கியின் கடனை அணுகுதலும் நடப்பில் இருக்கும் தாள்பணத்தின்மீது நேரடியான விளைவைத் தோற்று விக்கின்றன. இருந்தாலும், நாட்டின் பண அளிப்பின்மீதும் பணவீக்க நிலைகளின்மீதும் விளைவுகளைத் தோற்றுவிக்கத்தக்க நிதி வரவு செலவுகள் என்ற வகைக்கு அப்பாற்பட்டதாக வங்கி முறையிலிருந்து பெறப்படும் நீண்டகாலக் கடன்களைக் கருதுவது தவருனதாகும்.

## பொருளாதார முன்னேற்றத்திற்கான பற்றுக்குறை நிதியாக்கம்

## (Deficit Financing For Economic Development)

பணவருமானத்தை அதிகரிப்பதற்கும்.வேலை நிலையை அதிகரிப்பதற்கும் அரசாங்கச் செலவின் அதிகரிப்பு உதவி செய்து அதன் மூலமாகப் பொருளாதார மந்தக் காலத்தில் தனியார் முதலீட்டு நடவடிக்கையில் தோன்றும் குறைவை இழப்பீடு செய்யும் என்ற அடிப்படையில் வளர்ச்சி பெற்றுள்ள தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரத்தில் பற்றுக்குறை நிதியாக்கத்திற்குக் கோட்பாட்டிலான நீதி காணப்படுகிறது. ஆனால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வரவு செலவுத் திட்டங்களின் பற்றுக்குறைகள் முற்றிலும் வேறுபட்டதொரு காரணத்திற்காகப் பரிந்துரைக்கப் படுகின்றன. உறுதித் தேவை நிலையை உயர்த்துவதற்காகப் பற்றுக் குறை நிதியாக்க முறை இந் நாடுகளில் அமைக்கப்படவில்லை. இந் நாடுகளில் உள்ள சேமிப்புகளை அதிகமான அளவில் திரட்டுவதற் காகவும் உண்மை மூலதனத்தை அமைப்பதற்காகவும் பற்றுக்குறை நிதியாக்கம் இந் நாடுகளில் பயன்படுத்தப்படுகின்றது. இந்தியா போன்ற குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பயன்படுத்தப்படா திருக்கும் சக்தி (Idle Capacity) அதிகமான அளவில் இருக்கிறது என்பதைக் காட்டுவதற்கான புள்ளிவிவரச் சான்றுகள் நிறைய இருக்கின்றன.

அரசாங்கம் பற்றுக்குறைச் செலவுகளைச் செய்கிறதென்றால் அது முதலீட்டுத் தேவையானது சேமிப்பைக் காட்டிலும் அதிக மாக இருக்கிறதென்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. மேற் குறிப்பிட்ட அமைப்பு, இணைப்பின்மைகள் இல்லாதிருக்கும்வரை உறுதித் தேவையின்மையின் காரணமாக எந்த அளவுக்கு மூல வளங்கள் வேலையற்றிருக்கின்றனவோ, அந்த அளவுக்குப் பற்றுக் குறை நிதியாக்கத்தின் மூலம் அரசாங்கத்தின் முதலீட்டுச் செலவு சோம்பியிருக்கும் உழைப்பையும் முதலையும் வேலையில் சேர்க்கும். அவைகளின் திரட்சியையும், உற்பத்தி நோக்கங்களுக்காக அவை களின் வேலையையும் தோற்றுவிக்கும்; பணவீக்க அழுத்தங்கள் எதையும் உற்பத்தி செய்யாமல் உற்பத்தியில் அதிகரிப்பைச் சேர்க்கும். ஆனால், அமைப்புக் காரணிகள் உற்பத்திக் காரணி களின் வேலையின்மைக்குக் காரணமாக இருக்குமென்றால் அதிகப் படியான வாங்கும் சக்தியை வெளியிடுதல் என்பது விலைகளில் அதிகரிப்பைக் காட்டிலும் அதிகமான அளவில் விளைவில் அதிகரிப் பைத் தோற்றுவிக்க உதவாது. தவிர, எந்த அளவுக்கு விலைகள் அதிகரிக்கும் என்பதும் எந்த அளவுக்குப் பணவீக்க அளவுகள்

இருக்கும் என்ற எடுகோள் அமைக்கப்பட வேண்டும் என்பது உற்பத்திக் காரணி அளிப்பின் இணைப்பின்மையின் அளவு, தேவையில் எந்த விதமான அதிகரிப்புக்கும் எதிர் விளைவைத் தோற்றுவிக்க உற்பத்தி தவறிவிடுதல் ஆகியவைகளை அவை நேரிடையாகவே சார்ந்திருக்கின்றன. மேலும், மின்சார நீர்ப்பாசனத் திட்டங்கள், சாலைகள், இருப்புப் பாதைகள் போன்ற மூலதனச் சாதனங்கள், பொருளாதாரப் பின்னமைப்புகள் போன்ற விலைமிக்க சாதனங்களை அமைப்பதைப் பற்றுக்குறை நிதியாக்கம் இலக்காகக் கொண்டிருக்குமானால் பணவீக்க விளைவுகள் மிகவும் அதிகமான அளவில் இருக்கும். இதற்கான காரணம் மிகவும் தெளிவாக உள்ளது. அதாவது, நுகர்வுப் பண்டங்களின் உற்பத்தியில் இருப்பதைப்போல அல்லாமல், மூலதனத் திட்டங்களின்மீதான பேரளவிலான முதலீடுகள் மக்களில் பெரும்பகுதியினரில் பண வருமானத்தை அதிகரிக்கும். ஆனால், அதே நேரத்தில் அவ்வாறு அதிகமான அளவில் அதிகரித்திருக்கும் வாங்கும் சக்தியின் விளைவுகளை ஈடு செய்வதற்குத் தேவையான நுகர்வுப் பண்டங்களின் அளிப்பில் உடனடியாகப் பேரளவிலான அதிகரிப்பு எதுவும் தோன்றுவதற்கான வாய்ப்பு இல்லை.

குறைந்த வளர்ச்சியுடைய நாடொன்றில் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிப்பதற்கனதொரு வழியாகப் பயன்படுத்தப் படத்தக்க பற்றுக்குறை நிதியாக்கத்தின் விளைவுகள் கீழ்க்கண்ட காரணிகளைச் சார்ந்திருக்கின்றன.

(1) இந்த முறையை நடைமுறையில் பயன்படுத்துவதிலும் செயல்படுத்துவதிலும் உள்ளார்ந்திருக்கும் துன்பத்தோடு ஒப்பிடும் போது ஒருங்கிணைக்கப்படும் சேமிப்பின் அளவு அதிகமானதாக இருக்கிறது.

(2) மிகவும் அதிகமான அளவிலான நன்மைகளைப் பெறும் வண்ணம் இவ்வாறு சேகரிக்கப்படும் மூலவளங்கள் உற்பத்தியைத் தோற்றுவிக்கும் வகைகளில் பயன்படுத்தப்படுகின்றன. வேறொரு விதமாகச் சொன்னால், சமுதாயத்தின் நுகர்வுத் தேவைகளை ஈடுசெய்வதில் வீணடிக்கப்படாமல், இவ்விதம் சேகரிக்கப்படும் மூலவளங்கள் தேவைப்படும் மூலதனங்களை அமைப்பதில் பயன் படுத்தப்படுகின்றன. இத்தகைய மூலதனங்கள்தான், இந் நாடுகளின் பொருளாதார வளர்ச்சியை முன்னேற்றுவிக்கத் தக்கவையாகும்.

(3) பற்றுக்குறை நிதியாக்கத்தின் தொடக்க நிலைகளில் ஓரளவுக்கு நிதானமான பணவீக்கம் ஏற்றுக்கொள்ளத்தக்கது தான். ஆனால், இது விரைந்தோடும் பணவீக்க நிலைக்கு (Runaway

Inflation) வழி வகுத்துவிடக்கூடாது. மிகவும் மெதுவானதாகவும், கட்டுப்படுத்தத்தக்கதாகவும் அல்லது பொருளாதாரத்தின் ஈர்ப்புச் சக்திக்கேற்றவண்ணம் இசைவிப்புச் செய்ததாகவும் பற்றுக்குறை நிதியாக்கம் இருக்கவேண்டும். நாடொன்றின் பலவிதமான சமுதாயப் பொருளாதாரச் சூழ்நிலைகளினால் நிர்ணயிக்கப்படக் கூடிய உத்தம எல்லையை மிஞ்சிச் செல்லத்தக்கதாக இது அனுமதிக்கப்படக்கூடாது.

இந்த மூன்று காரணிகளும் மேலும் விளக்கமாக இங்கு ஆராயப்படலாம். பற்றுக்குறை நிதியாக்கத்தினால் தோற்றுவிக்கப்படும் சேமிப்பின் பருமன் நடைமுறையிலிருக்கும் வருமானப் பகிர்வு, செல்வப் பகிர்வு முறைகளையும் பலவிதமான வருமானப் பிரிவினரின் அளவுகளையும், மக்களின் விருப்புவெறுப்புகள் நுகர்வுப் பழக்கங்கள் ஆகியவைகளையும் சார்ந்திருக்கிறது. பணவீக்கத்தினால் தோன்றும் மென்மையான விலை உயர்வு அவசியமானதாக அல்லது குறைந்த அளவு தீங்கற்றதாக இருக்கலாம். ஆனால், விரைந்தோடும் பணவீக்கம் மிகவும் ஆபத்தானதாகும். இதன் காரணமாக, பணவீக்கத் திருப்பத்தை விலைகள் பெறத்தக்க நிலையானது பற்றுக்குறை நிதியாக்கத்தை அனுமதிக்கக்கூடாது என்பதற்கான உச்சநிலை எல்லையாகக் கருதப்படவேண்டும். அதாவது, குறிப்பிட்ட எல்லைக்குட்பட்டிருந்தால் பற்றுக்குறை நிதியாக்கத்திலிருந்து உச்ச அளவு நன்மையைப் பெறமுடியும். விலைகளின் உயர்வுகளின் மூலமும், அதன் விளைவாகத் தோன்றும் சமுதாயத்தில் உள்ள பலவகை வருமானப் பிரிவினரிடையே வருமான மாற்றங்களைத் தோற்றுவிப்பதன் மூலமும் மூலவளங்களின் திரட்சிக்கும் பற்றுக்குறை நிதியாக்கம் உதவி செய்கிறது. விலைகள் அதிகரிக்கும் காலத்தில் நிலையான வருமானம் பெறும் மக்களின் உண்மை வருமானமும் கடன் கொடுப்பவர்களின் உண்மை வருமானமும் குறைகிறது. கடன் பெறுபவர்களின் உண்மை வருமானமும், நிலையற்ற வருமானம் பெறுபவர்களின் உண்மை வருமானமும் இக்காலத்தில் அதிகரிக்கின்றன. மத்திய தர வகுப்பினர்கள், சம்பளம் பெறும் பிரிவினர்கள், சிறு சேமிப்புகளில் முதலீடு செய்திருப்பவர்கள் ஆகியவர்களில் பெரும்பகுதியினர் முதல் வகையைச் சேர்ந்தவர்களாக இருக்கின்றனர். சமுதாயத்தின் செல்வமிகு உறுப்பினர்களாகவே பெரும்பாலும் இருக்கும் வணிகப் பிரிவினர்கள் இத்தகைய காலத்தில் ஏராளமான அளவு பண வருமானத்தைப் பெறுகிறார்கள். எந்த அளவுக்குப் பண வருமானமானது, விலைகளின் அதிகரிப்பைக் காட்டிலும் அதிகமானதாக இருக்கிறதோ அந்த அளவுக்கு அவர்களின் உண்மை வருமானம் அதிகமான அளவுக்கு

அதிகரிக்கிறது. ஆனால், விலைகளில் அதிகரிப்பு அல்லது குறைவு தோன்றும்போது, உழைப்பாளர்களின் வருமானத்தில் உடனடியான அதிகரிப்பு அல்லது குறைவு இசைவிப்புகள் செய்யப்படமாட்டாது என்பதால் இத்தகைய வருமானப் பிரிவினரின் உண்மை வருமானம், அதிகரித்துச் செல்லும் விலைகள் நிலவும் காலத்தில் குறைகிறது. விலைகளில் அதிகரிப்பு தோன்றும்போது, வருமானமும் செல்வமும் நிலையான வருமானம் பெறக்கூடிய பிரிவினரிடமிருந்து சமுதாயத்தின் செல்வமிகு பிரிவினருக்கு மாற்றப்படுகிறது. இத்தகைய செல்வமிகு பிரிவினரின் நுகர்வு நாட்டம் மிகவும் குறைவாகவே இருப்பதால், வருமானங்களின் இத்தகைய மாற்றமானது சமுதாயத்தின் அதிகமான சேமிப்புக்கும் முதலீட்டு நிலைகளின் அதிகரிப்புக்கும் வகைசெய்யும் கூலி வருமானம் பெறுபவர்கள் நடுத்தர வகுப்பினர் ஆகியவர்களின் பணவருமானங்கள் எந்த அளவுக்கு இணக்கமில்லாமலிருக்கின்றனவோ அந்த அளவுக்குப் பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் மூலவளங்களைத் திரட்டுவதற்கான வாய்ப்பும் அதிகமான அளவில் இருக்கிறது. தவிர, இத்தகைய வருமானப் பிரிவினரின் அளவு எந்த அளவுக்கு அதிகமானதாக இருக்கிறதோ அந்த அளவுக்குப் பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் விளைவைப் பெறுவதும் அதிகமான அளவில் இருக்கும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பான்மையான நாடுகளில் மற்றப் பிரிவினரின் அளவோடு ஒப்பிடுகையில் இப் பிரினரின் அளவு சிறியதாகவே இருக்கிறது.

## பற்றுக்குறை நிதியாக்கமும் பணவீக்கமும்
(Deficit Financing and Inflation)

சேமிப்பைக் காட்டிலும் அதிகமான முதலீடு என்பதை வரவு செலவுத் திட்டத்தின் பற்றுக்குறைகள் உள்ளார்ந்திருப்பதைத் தவிர குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளின் பொருளாதார முன்னேற்றத்திற்காகப் பற்றுக்குறை நிதியாக்கம் என்ற முறையைப் பயன்படுத்தும்போது இந் நாடுகளில் பணவீக்க நிலைகளை அதிகரிப்பதற்கான வேறு சில காரணிகளும் இருக்கின்றன. இவைகளை இரண்டு தலைப்புகளில் வகைப்படுத்தலாம். (1) பணவாக்கக் காரணிகள் (2) பொருளாதார நடவடிக்கையும் மக்களின் நோக்கங்களும்.

**(அ) பணவாக்கக் காரணிகள்** (Monetary Factors)

கண்டிப்பாகச் சொல்ல வேண்டுமானால் அளிப்புச் சக்திகள், தேவை சக்திகள் ஆகியவற்றின் அடிப்படையில்தான் விலைகளின்

அதிகரிப்பு விளக்கப்பட முடியும். இருப்பினும், பொருளாதாரத்தின் அதிகத் தேவையின் பணவீக்க விளைவு பண அளிப்பு அதிகரிப்பினால் வசதி செய்யப்படுகிறது; அதிகப்படுத்தப்படுகிறது என்ற உண்மையும் இருக்கிறது. இவ்வாறாக, பற்றுக்குறை நிதியாக்க முறை அதன் அளவு ஆகியவைகள் ஒருபுறம், பண அளிப்பு மற்றொரு புறம் ஆகிய இரண்டிற்கும், இடையேயான தொடர்பு பற்றுக்குறை நிதியாக்கத்திலிருந்து தோன்றும் பணவீக்கப் போக்குகளின் மீது நெருக்கமான விளைவைப் பெற்றிருக்கின்றது.

தாள்பணத்திற்கு வைப்புப் பணத்தின் விகிதம் குறைவாக இருந்தால் குறிப்பிட்ட அளவு பற்றுக்குறை நிதியாக்கக் கடனின்மீதான கோபுர விளைவு குறைவாக இருக்கும். தன்னைத் தானே பெருக்கிக் கொள்ளதவற்காகப் பொருளாதார அமைப்புக்குள் செலுத்தப்படும் புதிய பணத்தின் போக்கின்மீது தடைவிதிக்கத்தக்க விளைவை இது பெற்றிருக்கும்.

(ஆ) பொருளாதார ஒழுக்கமும் மக்களின் நோக்கங்களும் (Economic Behaviour and Attitudes of the People)

இங்கு, மக்களின் நுகர்வு நாட்டம், பண வருமானங்களைச் செலவழிக்கும் விகிதம், விலைகளில் குறிப்பிட்ட அளவு அதிகரிப்பிற்கு அவர்களின் உள இயலின் அடிப்படையிலான எதிர்விளைவு ஆகியவைகளை வலியுறுத்த வேண்டும். செலவழிக்கும் விகிதம் அதிகமானதாக இருக்கும்போது பணச் சுழற்சியின் வேகமும் அதிகமானதாக இருக்கும் என்பதோடு விலைகளின் அதிகரிப்பும் அதிகமானதாக இருக்கும். பண வருமானம், குறிப்பாக நடுநிலைமை வகுப்பாளர்களின் பண வருமானமும் குறைந்த வருமான வகுப்பாளர்களின் பண வருமானமும் அதிகரிக்கும்போது, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இருப்பதைப்போல இறுதி நிலை நுகர்வு நாட்டம் அதிகமாக இருந்தால் நுகர்வுக்கான பண்டங்களின்மீதும் பணிகளின்மீதும் அதிகமான அளவு செலவு செய்யப்படும். அவ்வாறிருப்பதால், விலைகளை மேல்நோக்கி உயர்த்துவதற்கான அழுத்தம் இருக்கும். இதுமட்டுமல்லாமல், பொதுத்துறையில் முதலீட்டிற்காக உண்மை மூலவளங்களைத் திருப்பிவிடுவதற்கான அளவும் வரையறைக்குட்பட்டதாக இருக்கும். ஒவ்வொரு தனி மனிதனுக்கும் கிடைக்கத்தக்க வாங்கும் சக்தியின் இருப்பில் குறிப்பிட்டதொரு அதிகரிப்பு தோன்றும்போது, நுகர்வு நாட்டம் அதிகமாக இருந்தால் உறுதித்தேவையும் அதிகமாக இருக்கிறது. இறுதிநிலை நுகர்வு நாட்டம் என்பது மக்களின்வருமானநிலை, வருமானத்தின் பகிர்வு அமைப்பு,மக்களின் உடனடியான வாழ்க்

கைத் தரத்தை உயர்த்திக் கொள்வதற்காக மக்களின் ஆர்வம் ஆகியவைகளைச் சார்ந்திருக்கிறது.

பண்டங்களுக்கான தேவை இங்கு எவ்வளவு இன்றியமையாததோ அதே அளவுக்குப் பணிகளுக்கான தேவையும் மிகவும் இன்றியமையாததாகும். அரசாங்கத்தின் முதலீட்டுத் தேவைகளில் தோற்றுவிக்கப்படும் அதிகரிப்பு விலைகளை அதிகரிக்கும் போக்கைப் பெற்றிருக்கும். தேவையானது பண்டங்களுக்காகவும் மூலதனப் பண்டங்களுக்காகவும் மட்டுமல்லாமல் உழைப்பின் பணிகளுக்காகவும்அதிகரிக்கும் என்பதால், உழைப்பின் விலைகள் அதிகரிக்கும் உற்பத்திச் செலவில் உழைப்பின் கூலி சிறப்பானதொரு அதிகமாக இருக்கும்வரை, கூலி நிலையில் தோன்றும் எந்த உயர்வும் உற்பத்திச் செலவுகளையும் விலைகளையும் அதிகரித்து விடுகின்றது. இவ்விதம் உற்பத்திச் செலவும் விலைகளும் அதிகரிப்பதனுல் அவை கூலி உயர்வுக்கான தேவைக்கு வழிவகுத்துப் பண வீக்கச் சுழற்சியைத் தொடங்கிவைக்கின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள மொத்த மக்களில் கூலி வருமானம் பெறும் பிரிவினர் வளர்ச்சி அடைந்த நாடுகளில் இருப்பதைக் காட்டிலும், தராதரமாகக் குறைந்த அளவிலேயே இருக்கிருர்கள் என்ற உண்மையும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள தொழிலாளர்கள் அவர்களுடைய கூட்டமைப்புகளில் மிக நல்ல முறையில் ஒருங்கிணைக்கப்படாதிருக்கிருர்கள் என்ற உண்மையும், அத் தொழிலாளர்களின் வாங்கும் சக்தி மிகவும் அதிகமானதாக இல்லை என்ற உண்மையும், கூலி உற்பத்திச் செலவுச் சுழற்சியின் (Wage cost spiral) வாய்ப்புகளையும் பருமனையும் குறைக்கின்றது. ஆனுல் இதற்கு எதிராக மற்ருெரு உண்மையும் குறிப்பிடப்பட வேண்டும். பணவீக்க நிலைகளின்போது கூலிவருமானம் பெறுபவர்களின் பேரச் சக்தி (Bargaining power) அதிகமாக இருக்கும். ஆதாயமும் அதிகரித்துச் செல்லும் போக்குடையாதாக இருக்குமாதலால் தொழில் முயல்வோரும் அவர்களாகவே மென்மேலும் அதிகமான அளவிலான கூலியைத்தர முன்வருவார்கள். அதிகமான வாழ்க்கைச் செலவு அதிகமான கூலிகள் என்ற வழியில் விலைகளின் அதிகரிப்பு தோன்றும் வாய்ப்பிற்கான எந்த ஒரு கருத்திலும் இவ் விரண்டு காரணிகளும் மனதிற் கொள்ளப்பட வேண்டும்.

பண வருமானங்களில் தோன்றும் அதிகரிப்பு சமுதாயத்தின் செலவு நிலைகளில் அதிகரிப்பை அவசியம் தோற்றுவிக்கத்தான் வேண்டுமென்பதில்லை. அதிகப்படியான பண வருமானத்தின் பெரும்பகுதி முடக்கப்பட்டுவிட்டால் எந்தவிதமான பணவீக்க விளைவையும் தோற்றுவிக்காமல் உண்மை மூலவளங்கள் மாற்றப்

படுகின்றன என்பதையே இது பொருளுணர்த்துகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பண அளிப்பு அதிகரிப்பின் விளைவுகள் இந் நாடுகளில் உள்ள முடக்கும் பழக்கமும், பண வருமானத்தைத் தங்க நகைகளின்மீதும் வேறுபல மதிப்புள்ள பொருள்களின் மீதும் முதலீடு செய்யும் பழக்கமும் சமன்படுத்துகின்றன. விலை உயர்வு தோன்றும் காலங்களில் உள்ளூர்களில் உணவைக் கையிருப்பு வைக்கும் போக்கு பணவீக்கத்தைப் பொறுத்தமட்டிலும் அதிர்ச்சி உட்கிரகியாகப் (Shock absorver) பணியாற்றுகிறது. இதோடு, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் செய்தித்தொடர்பு வசதிகள் நல்ல முறையில் வளர்ச்சி பெறுதவைகளாக இருப்பதால் இந் நிலை, பணவீக்கத்தை ஒரு சில பகுதிகளில் இருக்கச் செய்வதோடு ஒரு பகுதியில் உள்ள மென்மையான பணவீக்கம் மிக எளிதாக இன்னொரு பகுதிக்குச் செல்வதைத் தடை செய்கிறது.[1]

பேரளவில் பார்க்கும்போது, குறிப்பிட்ட அளவு பற்றுக்குறை நிதியாக்கம் பணவீக்க நிலைகளுக்கு எந்த அளவிற்கு வகை செய்கிறதென்பது வணிகப் பிரிவினரின் எதிர்விளைவை மட்டுமல்லாமல் நுகர்வோரின் எதிர்விளைவையும் சார்ந்திருக்கிறது. வரவுசெலவுத் திட்டத்தின் பற்றுக்குறையின் பணவீக்க மோதலின் மீது மக்களின் எதிர்கால நம்பிக்கைகளின் நிலை அதிகமான விளைவுகளை உடையதாக இருக்கிறது. பல காலத்திற்கு விலைகள் மாறுததாக நிலைபெற்றிருக்கச் செய்யப்பட்டிருந்தால், பற்றுக்குறை நிதியாக்கத்தினுல் விலைகளில் திடீரென்ற உயர்வை மக்கள் எதிர்பார்க்கமாட்டார்கள். அதற்கு மாருக வெகு அண்மைக் காலத்தில் விலைகளின் பணவீக்கப் போக்குகளை மக்கள் அனுபவித்திருந்தால், மிகச் சிறிய அளவிலான பணவீக்கம்கூட உறுதியானதும் தொடர்ச்சியானதுமான சரிவுப் பணத்தின் மதிப்பில் தோன்றிவிடலாம் என்ற பயத்தின் காரணமாக அதிகமான அளவு பணத்தை செலவிடுவதற்கு மக்களைத் தூண்டிவிடும் பணத்தை மிக வேகமாகப் பண்டங்களாக மாற்றிக் கொள்ளும் இந்தப் போக்கு விலைகளில் அதிகரிப்பு தோன்றக்கூடிய போக்கை இன்னும் அதிகப்படுத்திவிடும். எனவே, விலைநிலையின்மீதான விளைவை நிர்ணயிப்பதில் பற்றுக்குறை நிதியாக்கத்தின் காலம் மிகவும் சிறப்பான இடம் வகிக்கிறது. விலைகள் அதிகரித்துச் செல்லும் காலம் ஒன்றில் பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவை அதிகரிப்பதை விலை உறுதிப்பாடு என்ற அடிப்படையில், தவிர்க்கவேண்டியது மிகவும் அவசியம் என்பதே இங்கு நாமறிந்துகொள்ளும் பாடமாகும். இது தவிர

[1] Benham, F., 'Deficit Finance in Asia.' *Lloyds Bank Review*, January 1955, p. 22.

அத்தகைய பணவீக்கச் சக்திகள் ஒரு முறை தொடங்கிவைக்கப் பெற்றுவிட்டால், பற்றுக்குறை நிதியாக்கம் என்ற நோக்கத்தினை பெறவேண்டியது மென்மேலும் சிரமமானதாகப் போய் விடுகின்றது. விலைகள் அதிகரித்துக்கொண்டே செல்வதால், பொதுத் துறையில் முதலீட்டிற்காக, ஒரே அளவு உண்மை மூல வளங்களை மாற்றுவதற்காக மென்மேலும் அதிகரித்த அளவிலான பற்றுக்குறை நிதியாக்கத்தை அரசு கடைப்பிடிக்கவேண்டும் என்ற தொரு நிலையே தோன்றும்;விரைந்தோடும் பணவீக்கம்தான் அதன் விளைவாக இருக்கும். பணவீக்க நிலைகளை மென்மேலும் அதிகரிப்பதற்கு மக்களின் ஊக வணிகப் பழக்கங்களும் பேரளவில் காரணமாக இருக்கின்றன. விலை மாற்றங்களை மிகக் கூர்மையாகக் கவனித்து அதன்படி செயலாற்றிவரும் ஊக வாணிகப் பிரிவினர் அதிகமான அளவில் இருக்கும் நாடுகளில் பற்றுக்குறை நிதியாக்கத்தின் எல்லைகள் மிக விரைவாகவும் எளிமையாகவும் தோன்றி விடுகின்றன.

## பற்றுக்குறை நிதியாக்கத்திலிருந்து தோன்றும் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தும் வழிகள்
## (Measures to Control Inflation Resulting from Deficit Financing)

பற்றுக்குறை வரவுசெலவுத் திட்டங்களின் பணவீக்க வழிகளைத் தடை செய்வதற்கென்று மேற்கொள்ளப்படும் வழிகள் இரு தலைப்புகளில் கருதப்படலாம். முதலாவதாக, குணப்படுத்தும் வழிகள். இரண்டாவதாக, தடை செய்யும் வழிகள்.

பணவீக்கத்திற்கான அடையாளங்கள் தென்பட்டவுடன் அரசாங்கத்தால் மேற்கொள்ளப்படும் முறைகள்தான் குணப்படுத்தும் வழிகள் எனப்படுகின்றன. அளிப்போடு ஒப்பிடும்போது அமிதத் தேவையின் காரணமாகப் பணவீக்க விலை உயர்வுகள் இருக்கும்வரை தேவையைக் கட்டுப்படுத்துவதையும் கிடைக்கத் தக்க வரையறைக்குட்பட்ட பண்டங்களின் ஓட்டத்தை ஒழுங்கு படுத்துவதையும்தான் இம் முறைகள் நோக்கங்களாகக் கொண்டிருக்கும். நல்ல முறையில் சிந்தித்து அமைக்கப்பட்ட வரிக் கொள்கை தேவையைக் குறைப்பதோடு மட்டுமல்லாமல் அளிப்பை அதிகரிப்பதிலும் வெற்றி பெறத்தக்கதாக இருக்க முடியும். குறிப்பிட்டவகைத் தொழில்களுக்கான வரி வேறுபாடுகள் அல்லது சேமிப்பை ஊக்குவிக்கும் நோக்கத்துடன் தரப்படும் வரித் தள்ளுபடிகள் அல்லது குறிப்பிட்ட வழிகளில் தொழில்களை மேற்கொள்ளுவதை உற்சாகப்படுத்துவதற்காகத் தரப்படும் தள்ளுபடிகள் அளிப்புப் பக்கத்தில் அவைகளின் விளைவுகளால் பொருளா

தாரத்தில் பணவீக்க அழுத்தங்களைப் பெற்றிருக்கச் செய்வதில் உதவக் கூடியவைகளாகும். சமுதாயத்தில் கிடைக்கத்தக்க வாங்கும் சக்தியில் அதிகரிப்பு அமிதத் தேவையை மிகவும் பயனுள்ளதாக ஆக்குவதற்கு மிகவும் முக்கியமான அளவில் பங்காற்றுகிறது. எனவே, பண வருமானங்களில் தோன்றும் இறுதிநிலை அதிகரிப்புகளை உள்நாட்டுக் கடன் வாங்குதல் என்பதன் மூலமாகவும், வரி விதித்தலின் மூலமாகவும் ஈர்த்துக்கொள்வதன் மூலமாகவும், அமிதத் தேவையின்மீதான அழுத்தத்தைப் பேரளவில் குறைப்பது முடியத்தக்கதாகும். அத்தகைய நிதி நடவடிக்கைக்கு இன்னுமொரு குறிப்பும் இருக்கிறது. அரசாங்கத்தின் முதலீட்டுத் திட்டங்கள் சமுதாயத்தின்மீது பேரளவில் நன்மைகளைத் தருகின்றன என்பதோடு குறிப்பிட்ட பிரிவினரின் வருமான அதிகரிப்பையும் தோற்றுவிக்கின்றன. அவ்வாறிருப்பதால் அதிகப்படியாகத் தோன்றும் பணவருமானத்தின் குறைந்த அளவு ஒரு பகுதியையாவது அரசு பெற்றுத் திரட்டிக்கொள்வது சரியானதுதான் என்று குறிப்பிடப்படுகிறது அத்தகைய கொள்கை இரண்டு நன்மைகளைப் பெற்றிருக்கிறது. முதலாவதாக, முதலீட்டிற்காக அரசுக்குக் கிடைக்கத்தக்க மூலவளங்கள் அதிகப்படுத்தப்படுகின்றன. இரண்டாவதாக, தேவையின் அழுத்தத்தை அதிகரித்திருக்கக்கூடிய அதிகப்படியான வாங்கும் சக்தி மாற்றப்படுகிறது; கேடு விளைவிக்காததாக ஆக்கப்படுகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் கிராமப் பகுதிகளின் வளர்ச்சிக்குப் பேரளவிலான செலவுகள் அரசினால் மேற்கொள்ளப்படுகின்றன என்பதால், குறிப்பாக வேளாண்மைத் துறையின் வளர்ச்சிக்காகப் பேரளவிலான செலவுகள் அரசாங்கத்தால் மேற்கொள்ளப்படுகின்றன என்பதால் நிலவரியை அதிகமான அளவில் உயர்த்த வேண்டும் என்றும், வேளாண்மை வரியின்மீது அதிகப்படியான தீர்வைகளை விதிக்க வேண்டும் என்றும் மிகவும் உறுதியுடன் பரிந்துரை செய்யப்பட வேண்டும்.

பற்றாக்குறை நிதியாக்கத்தைப் பயன்படுத்தும்போது சமுதாயத்திடமிருக்கும் வாங்கும் சக்தி அதிகரிப்பதாகவும், தேவையோடு ஒப்பிடும்போது நிறைவு செய்யப்பட்ட பண்டங்களின் அளிப்பிலும் மற்ற மூலவளங்களின் அளிப்பிலும் பற்றாக்குறை இருப்பதாகவும் இருந்தால், பணவீக்க அழுத்தங்களை அமுக்கிவிடுவதற்காக அல்லது எல்லைகளுக்குட்பட்ட நிலையிலேயே வைத்திருக்கக் கட்டுப்பாடுகள் என்ற வழியின் மூலம் கிடைக்கத்தக்க அளிப்பின் பகிர்வை ஒழுங்கு படுத்துவதற்குத் தேவையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவேண்டும் என்பது மிகவும் அவசியமானதாகும். ஆள் வீத உரிமைப் பங்கீடு செய்தல், விலைக்

கட்டுப்பாடுகள், பகிர்வுக் கட்டுப்பாடு ஆகிய பருப்பொருள் சார்ந்த கட்டுப்பாடுகளேயும் இது உள்ளடக்கியிருக்கிறது. நிருவாக இயந்திரம் நல்ல முறையில் இல்லாத நிலேயிலும், மக்களின் நாட்டு உணர்வு மிக உயர்ந்த நிலேயில் இல்லாத நிலேயிலும் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் திறமையான கட்டுப்பாடு களேப் பெறுவதும் மிகவும் கடினமானது என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும்.

எல்லா விதமான பொருளாதார இடர்களுக்கும் சொல்லப் படுவது போன்று பணவீக்கத்தைப் பொறுத்தமட்டிலுங்கூடக் குணப்படுத்துவதைக் காட்டிலும் இடர் வராமல் பாதுகாத்துக் கொள்வதே சரி என் றுசொல்வது மிகவும் பொறுத்தமானதாகும். ஆனுல், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்காகப் பரிந்துரைக்கப் பட்டு இந் நாடுகளில் பயன்படுத்திப் பார்க்கப்பட்ட வழிவழியாக வந்த தடைசெய்யும் முறைகள் மன நிறைவைத் தரத் தக்கவை களாக இல்லே. கிடைக்கத்தக்க அயல்நாட்டுச் செலாவணிக்கு ஏற்பப் பற்ருக்குறை நிதியாக்கத்தைக் குறிப்பிட்ட எல்லேக்குள் வைத்துக்கொள்வதென்பது அவைகளில் ஒருமுறை. பற்ருக்குறை நிதியாக்கத்திஞல் வெளியிடப்படும் உண்மை மூலவளங்களே முடிந்தமட்டிலும் கூலிப் பண்டங்களின் உற்பத்திக்குப் பயன் படுத்துதல் என்பது இன்ஞெரு முறை. வாங்கும் சக்தியின் பருமனில் தோன்றும் அதிகரிப்புடன் சேர்ந்து நாடொன்றில் நுகர்வுப் பண்டங்களின் அளிப்பும் அதிகரிக்கும் வரை, அங்கு எந்த விதமான பணவீக்க விலே அதிகரிப்பும் இருக்கமுடியாது என்ற அடிப்படையில்தான் நுகர்வுப் பண்டங்களின் அளிப்பின் அதிகரிப்பிற்காகப் பற்ருக்குறை நிதியாக்கம் பயன்படுததப்பட வேண்டிய தேவை வலியுறுத்தப்படுகின்றது. முதலீடு செய்யப் படும் காலத்திற்கும் இறுதிப் பண்டங்களின் அதிகரித்த அளிப்பு தோன்றுவதற்கு ஆகும் காலத்திற்கும் இடையே காலவெளி இருப்பதுதான் வளர்ந்துவரும் பொருளாதாரத்தில் பண வீக்கத்தைத் தோற்றுவிக்கத்தக்கதொரு சிறப்பான மூலமாக இருக்கிறது. எனவே, மிக விரைவாகப் பலன்களேத் தரத்தக்கவை களாகவும் கூலிப் பண்டங்களின் உற்பத்திக்கும் நுகர்வுப் பண்டங் களின் உற்பத்திக்கும் உதவி செய்யத் தக்கவைகளாகவும் உள்ள திட்டங்களின்மீது பற்ருக்குறை நிதியாக்கத்தின் மூலம் (தோன்றக்கூடிய) பெறப்படும் உண்மை, மூலவளங்கள் பயன் படுத்தப்படுமாஞல் பணவீக்கம் என்பதன் மூலம் தோன்றக்கூடிய அபாயம் பேரளவில் குறைக்கப்பட முடியும் என்றும் வாதிடப் படுகிறது. இவ்வாருக, குடிசைத் தொழில்களின் முன்னேற்றம், சிறு நீர்ப்பாசனத் திட்டங்களின் மூலமாக வேளாண்மையின்

முன்னேற்றம், அதிகமான உணவு உற்பத்திக்கான திட்டம் ஆகியவைகள் மேற்குறிப்பிட்ட கொள்கைக்கு ஏற்றவைகளாக இருக்கும். எனவே, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் முன்னேற்றத்திற்கென அமைக்கப்படும் வரவுசெலவுத் திட்டங்கள் பொருளாதார வளர்ச்சியின் நிதியாக்கத்திற்கான வரவு செலவுத் திட்டத்தின் பற்றுக்குறையின் அளவானவை. அவை நாட்டிற்குக் கிடைக்கத்தக்க அயல்நாட்டு இருப்பை காட்டிலும் அதிகமானதாக இல்லாதிருக்கும் வரை பணவீக்கம் தோன்றாது என்ற ஒரு கருத்தும் நிலவுகிறது. வரவு செலவுத் திட்டத்தின் பற்றுக்குறையால் தென்படக்கூடிய நடப்பு உள்நாட்டுச் சேமிப்பைக்காட்டிலும் அதிகமான முதலீடுகள் அயல் நாட்டு இருப்புகளைப் பயன்படுத்துவதன் மூலம் சமப்படுத்தப்பட , தக்கவைகள் என்ற அடிப்படையில் கடந்த காலச் சேமிப்புகளைத்தான் புற இருப்புகள் குறிக்கின்றன என்ற உண்மையின் அடிப்படையில் இக் கருத்து நிலவுகிறது. எனவே, புற இருப்பில் தோன்றும் குறைவில் உள்நாட்டுச் சேமிப்பைக் காட்டிலும் முதலீடு அதிகமாக உள்ள அளவும் ஒன்றுக்கொன்று சமமாக இருந்தால், கடந்த காலச் சேமிப்புகள் இப்போதைய பயனுக்காகப் பயன்படுத்தப் படுகின்றன என்றும், உள்நாட்டுச் சேமிப்போடு சேர்க்கப் படுகின்றன என்றும், அதன் வழியாக, அமிதச் செலவு நீக்கக்கூடிய தென்றும் கருதப்படலாம். அத்தகையதொரு நிலையில் பற்றுக் குறை நிதியாக்கம் என்பது பணவீக்கமற்றதொன்றாகும். 1953–ல் இந்தியாவின் பெர்ன்ஸ்டீன் மிஷின் [Bernstein Mission in India 1953] இந்திய நாட்டில் பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவை நிர்ணயிப்பதில் நாட்டிற்குக் கிடைக்கத்தக்க ஸ்டெர்லிங் இருப்பை (Sterling Reserves) எல்லைக் காரணியாக மனதிற் கொள்ள வேண்டும் என்று இந்த அடிப்படையில்தான் பரிந்துரைத்தது பொதுத் துறையின் அல்லது தனியார் துறையின் அல்லது இரண்டு துறைகளின் நன்மைக்காவும் வங்கி முறையில் கடனைத் தோற்றுவித்தல் என்பதையும் பற்றுக்குறை நிதியாக்கம் உள்ளார்ந்திருக்கிறது. ஆனால், "நடப்புக் கணக்கில் அல்லது மூலதனக் கணக்கில் உள்ள அயல் நாட்டுச் செலுத்து நிலைப் பற்றுக் குறையினால் தோன்றக்கூடிய குறைவுக்குச் சமமான கடன் பெருக்கம் பணவீக்கத் தன்மையுடையதன்று என்பதோடு பண அளிப்பு சரியான முறையில் பொருளாதாரக் கொள்கையோடு தொடர்புடையதாதவும், நிதியாக்கம் செய்யத்தக்கதாகத் தகுதியான பற்றுக்குறையாக அயல நாட்டுச் செலாவணிப் பற்றுக் குறை இருக்கக் கூடியதாகவும் உள்ளதொரு நாட்டில், பண அளிப்பை நிலைநிறுத்துவதும் அதன் வழியாகப் பணவாட்டத்தைத் தடுப்பதும் மிகவும் இன்றியமையாத ஒரு தேவை

ஆகும்."[1] கடன் உற்பத்தி செய்யப்படும்போது அல்லது அரசாங்கத்தின் சார்பாகப் பண அளிப்பு அதிகப்படுத்தப்படும்போது, பொதுத் துறை, தனியார் துறை ஆகிய இரு துறையினருக்கும் உண்மை மூலவளங்கள் கிடைக்கும்வண்ணம் செய்யப்படுகின்றன. பொதுத் துறைக்கான நன்மை மிகவும் தெளிவாகத் தென்படக்கூடியது. ஆனால், வணிகவங்கிகளிடமிருந்து வணிகத்துறை கடன் வாங்குவதால் எந்த அளவுக்குப் பண அளிப்பு அதிகரிக்கிறதோ அந்த அளவுக்குத் தனியார் துறைக்கும் உண்மை மூலவளங்கள் கிடைக்கும்படியாகச் செய்யப்படுகின்றன. இது தவிர, அயல் நாட்டு இருப்பின் அளவில் உண்டாகும் குறைவினால் தோற்றுவிக்கப்படும் எல்லைக்குட்பட்டதாகப் பண அளிப்பின் பருமன் இருக்கும்வரையிலும் நாட்டின் பொருள்வள முன்னேற்றத்தினாலும், அதிகரித்த உற்பத்தியினாலும், பொருளாதாரம் அதிகமான அளவில் பணவாக்கத் துறையைப் பெற்றதாக மாறுவதனாலும் தோன்றக்கூடிய அதிகப்படியான பணத் தேவையைக் காட்டிலும் அதிகமானதாகப் பண அளிப்பின் பருமன் இருக்கும் வரையிலும், பற்றுக்குறை நிதியாக்கத்தினால் தோற்றுவிக்கப்படும் எந்த விதமான பண அதிகரிப்பும் பண வீக்கத்தைத் தோற்றுவிக்காது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

பற்றுக்குறை நிதியாக்கமானது எல்லைகளுக்கு உட்பட்டதாக அல்லது புறப் பற்றுக்குறை அளவுக்கு உட்பட்டதாக இருக்கும் போது கூடப் பற்றுக்குறை நிதியாக்கத்தின் பணவீக்க உள்ளாற்றல்களை இப் பற்றுக்குறை எந்த நோக்கத்திற்காக ஏற்படுத்தப்படுகிறது என்பதை நேரிடையாகவே நிருணயிக்கிறது. பொருளாதாரம் விரிவடையும்போதும், பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலமாக வெளியிடப்படும் அதிகரிக்கும் வாங்கும் சக்தி கூலிப் பண்டங்களின் அளிப்பின்மீதும், நுகர்வுப் பண்டங்களின் அளிப்பின்மீதும் அழுத்தத்தைத் தோற்றுவிக்கும்போதும், உடனடியாக உள்நாட்டு உற்பத்தியில் அதிகரிப்பு இல்லாமலும் இத்தகைய பண்டங்களின் அளிப்பில் அதிகரிப்பு இல்லாமலும் இருக்கும்போதும் விலைகளின் அதிகரிப்பு உறுதியாகத் தோன்றியே தீரும். அத்தகைய சூழ்நிலையில் நுகர்வுப் பண்டங்களின் இறக்குமதிக்கான நிதியாக்கத்திற்கென்று அயல் இருப்புகள் திரும்பப் பெறப்பட வேண்டும் அல்லது அயல் நாடுகளில் கடன் வாங்குதல் என்ற முறை கடைப்பிடிக்கப்பட வேண்டும். நாட்டின் விலைப் போக்கின்மேல் தடை விதிக்கும் விளைவைத்

[1] *Economic Development with Stability*, A Report to the Government of India by a Mission of the International Monetary Fund, New Delhi, 1954, p. 46 f.n.

தெளிவாக இது பெற்றிருக்கும். இஃது இவ்வாறிருந்தாலும், முதலீட்டு நோக்கங்களுக்கானதாக மூலதனப் பண்டங்களின் இறக்குமதிக்கான புறப் பற்றுக்குறை இருக்குமானால் நிலைமை வேறு விதமாக மாறிவிடுகிறது. முதலீட்டுப் பண்டங்கள் உண்மை மூலவளங்களின் அளிப்பை அதிகரிக்கத்தான் செய்கின்றன. ஆனால், பணவீக்கம் தவிர்க்கப்பட வேண்டுமானால் அவைகளை நிருமாணம் செய்வதும், அவைகளை நிருவகிப்பதும் அதிகப்படியான உள்நாட்டுச் சேமிப்புகளை அவசியமாக்குகின்றன. சாதனங்களை நிறுவுவதிலும் பண்டங்களைக் கொள்முதல் செய்வதிலும் இன்னும் இது போன்றவைகளிலும் உள்ள அதிகப்படியான செலவுகள், மேலும் அதிகமான செலவுகளை உட்கொண்டுள்ளன. இத்தகைய அதிகப்படியான முதலீட்டுச் செலவுகள் அதிகப்படியான உள்நாட்டுச் சேமிப்புகளினால் சமன் செய்யப்படாத நிலையில் வரவு செலவுத் திட்டத்தின் பற்றுக்குறையால் நிதியாக்கம் செய்யப்பட்டால், அது உள்நாட்டு விலை நிலையில் பணவீக்க விளைவைத் தோற்றுவிக்கத் தவறாது. (தோற்றுவித்தே தீரும்) பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவு புறச் செலுத்து நிலைப் பற்றுக்குறையைக் காட்டிலும் அதிகமானதாக இல்லாமலிருந்தால், பற்றுக்குறை நிதியாக்கம் அல்லது உள்நாட்டுக் கடன்பெருக்கம் என்பது பண அளிப்பின்மீதும் விலைகளின்மீதும் நடுநிலைமை விளைவைத்தான் பெற்றிருக்கும் என்ற சாதாரணமாக வழக்கத்திலிருக்கும் எடுகோள் சரியானதன்று என்பது இதன் மூலம் தெளிவாகிறது. உண்மையாகப் பார்க்கப்போனால், குறைந்த வளர்ச்சியுடையதொரு நாட்டில் எந்த விதத்திலும் பற்றுக்குறை நிதியாக்கம் என்பதற்கான உச்ச நிலை எல்லையைக் குறிப்பிடுவது கடினமானதாகும் இத்தகைய நிதியாக்கம் பயன்படுத்தப்பட வேண்டிய நோக்கம், இறக்குமதி செய்யப்பட வேண்டிய பண்டங்களின் தன்மை, நாட்டில் கிடைக்கத்தக்க கடன் அளவு, கடன் நிலைகள் ஆகியவைகள், கிடைக்கத்தக்க உள்நாட்டுச் சேமிப்பு ஆகிய இவைகள் எல்லாம் மிகவும் பாதுகாப்பான மேல் எல்லையைக் குறிப்பிடுவதற்கு மிகவும் கருதப்பட வேண்டியவைகளாகும்.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் கடன்களை மிகவும் குறைந்த அளவில் பயன்படுத்துதல், மக்களின் முடக்கும் பழக்கம், வளர்ந்துவரும் பொருளாதாரம் ஒன்றின் தேவைகளை ஈடுகட்டுவதற்காக அதிகமான பணத்தின் தேவை போன்ற சில காரணிகள் பற்றுக்குறை நிதியாக்கத்தின் பணவீக்கப் பயமுறுத்தலைத் தணிக்கும் விளைவுகளை உண்டாக்குபவைகளாகப் பயன்பட்டாலும் கூட, எதிர்ப்பக்கத்தில் செயல்படக்கூடிய காரணிகள் முதலில்

சொல்லப்பட்டவைகளின் விளைவுகளைக் காட்டிலும் அதிகமான அளவு விளைவுகளைத் தோற்றுவிக்கத் தக்கவைகளாக இருக்கின்றன. மூலதனச் சாதனங்களின் பற்றுக்குறை, நீண்டகால முதலீடுகளுக்கான தேவை, அதிகமான இறுதிநிலை நுகர்வு நாட்டம், குறைந்த பண வருமான விகிதம், நடுநிலை வகுப்பின் மிகக் குறைவான அளவு ஆகியவைகள் யாவும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் காணப்படும் சிறப்பு இயல்புகள். இவ் வியல்புகள் யாவும் பற்றுக் குறை நிதியாக்கத்திற்கான எல்லையை மிகவும் கட்டுப்படுத்துகின்றன. இதற்கு மேலாக, அதிகப்படியாகத் தோன்றும் வருமானங்களை உறுதியாக ஈர்த்துக்கொள்ளும் வகையில் தேவையான அளவுக்கு இந் நாடுகளின் வரிமுறை அமைந்திருக்கவில்லை. நல்ல முறையிலான நிருவாக இயந்திரம் இல்லாதிருக்குமானால், விலைக் கட்டுப்பாட்டு முறைகள் மனநிறைவு தரத்தக்க வகையில் செயல்பட முடியாது. அதற்கு மாறாக, பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பேரளவில் பயன்படுத்துவதற்கு உண்மையான தடைகளாக அந்நியச் செலாவணியின் பொதுவான பற்றுக்குறையும் அயல்நாட்டு ஏற்றுமதிச் சந்தைகளையே பேரளவில் நம்பியிருக்கக் கூடிய நிலையும் அமைந்திருக்கின்றன.

## இந்தியாவில் உள்ள பற்றுக்குறை நிதியாக்கத்தைப்பற்றி ஒரு குறிப்பு

(A Note on Deficit Financing in India)

பொருளாதார வளர்ச்சி நோக்கங்களுக்காகப் பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பயன்படுத்தும் முறை முதன்முதலாக இந்தியாவில் பம்பாய்த் திட்டத்தில் [Bombay Plan (1943)] பரிந்துரைக்கப்பட்டது. முதல் திட்டத்தின் மொத்தச் செலவின் நல்லதொரு பகுதி பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் அமைக்கப்பட்டது. ஆனால், இந்த முறையை அரசு பின்பற்றியது, தயங்கித்தயங்கிச் செயல்பட்டது போலவும், தவறு செய்வதைப் போன்ற உணர்வுடன் செயல்பட்டது போலவும் தோன்றியது. பொருளாதார வளர்ச்சிக்கானதொரு வழியாகப் பற்றுக்குறை நிதியாக்கத்தின் பங்கு இரண்டாம் திட்டக் காலத்தில் வெளிப்படையாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

மைய அரசு, மாநில அரசுகள் ஆகியவைகளுக்குச் சேர்த்து முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் எதிர்பார்க்கப்பட்ட மொத்தச் செலவு முதலில் ரூ. 20,690 மில்லியனாக இருந்தது. (பின்னால் இது ரூ. 23,777 மில்லியனாக உயர்த்தப்பட்டது அதில் மைய அரசு ரூ. 13,895 மில்லியனையும், மாநில அரசுகள் ரூ. 9,882

மில்லியனையும் செலவு செய்யவேண்டும் என்று அமைக்கப் பட்டது). 1951–56 ஆகிய 5 ஆண்டுகளில் ரூ. 20,690 மில்லியன் தொகையைச் செலவிடுவதற்கான மூலவளங்கள் கீழ்க்கண்ட வகை களில் பெறப்படவேண்டும் எனவும் முடிவு செய்யப்பட்டது. வரிகள், கடன்கள், சிறுசேமிப்புகள் மற்றும் இவை போன்றவற்றின் வாயிலாக ரூ. 12,580 மில்லியன் பெறப்பட வேண்டும் என்றும் எஞ்சியுள்ள ரூ. 8,110 மில்லியன் ஓரளவுக்கு அயல்நாட்டு உதவி யாலும் (ரூ. 5.210 மில்லியன்), ஓரளவுக்குப் பற்றுக்குறை நிதியாக் கத்தாலும் (ரூ. 2,900 மில்லியன்) பெறவேண்டுமென்றும் கருதப் பட்டது. ஆனால், முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தின் உண்மையான செலவுத் தொகை ரூ. 20,124 மில்லியனாகத்தான் அமைந்தது. அதில் ரூ. 11.149 மில்லியனை மைய அரசும், ரூ. 8.975 மில்லியனை மாநில அரசுகளும் செலவு செய்திருந்தன. வரி விதித் தலின் மூலம் பெறப்பட்ட வருமானம், இருப்புப் பாதைகளின் மூலம் பெறப்பட்ட வருமானம் ஆகியவைகளும், கடன்களின் மூலமாகவும், சிறுசேமிப்புகளின் மூலமாகவும், வைப்பு நிதிகளின் மூலமாகவும் மற்றும் இவை போன்ற மற்றவைகளின் மூலமாகவும் பெறப்பட்ட வருமானம் ஆகியவைகளுமாக மைய அரசாங்கத் தினால் பெறப்பட்ட மூலவளங்கள் ரூ. 7,776 மில்லியனுக்குச் சமமாக இருந்தன. இத் தொகையிலிருந்து மாநிலங்களுக்கு மாற்றப்பட்ட தொகையான ரூ. 3.497 மில்லியனைக் கழித்துப் பார்த்தால், மைய அரசாங்கத்தால் செலவழிப்பதற்கென்று மட்டும் கிடைத்த தொகையின் அளவு ரூ. 4,279 மில்லியனாகும். வெளிநாட்டு உதவி ரூ 2,032 மில்லியன் அளவுக்குக் கிடைத்தது என்பதால், மைய அரசாங்கத்திற்குக் கிடைத்த மூலவளங்களின் மொத்தம் ரூ. 6,311 மில்லியனாகும். இதன் காரணமாகத் தோன்றிய வரவு செலவுத் திட்ட இடைவெளியின் அளவு ரூ. 11,149 மில்லியன்—ரூ. 6,311 மில்லியன் = ரூ. 4,838 மில்லியன். மைய அரசாங்கத்திடமிருந்து பெறப்பட்ட உதவித் தொகையான ரூ. 3,497 மில்லியன் உள்பட உள்ள மாநில அரசுகளின் மூலவளங் களின் அளவின் மொத்தம் ரூ. 8.494 மில்லியனாக இருந்தது. இது மாநில அளவில் ரூ. 481 மில்லியன் பற்றுக்குறையைக் கொண் டிருந்தது. இவ்வாறாக மைய அரசு அளவிலும் மாநில அரசுகளின் அளவிலுமாகச் சேர்த்து ஒரு மொத்தமான பற்றுக்குறையின் அளவு ரூ. 5,319 மில்லியனாகும். இது மொத்த வளர்ச்சிச் செலவில் 26% அளவாக அமைந்திருந்தது.[1]

[1] முதல் திட்டத்தின் முதல் நான்கு ஆண்டுகளுக்கும் ஆன உண்மை அளவுகளையும் இறுதி ஆண்டுக்கான மறுபரிசீலனை செய்யப்பட்ட மதிப்பையும் அடிப்படையாகக் கொண்டு இந்த மொத்த எண்கள் அமைந்திருக்கின்றன. 1955-56 ஆம் ஆண்டிற்கான உண்மையான வரவு செலவுத் திட்டப் பற்றுக்

முதல் ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கப்பட்டபோது பற்றுக் குறை நிதியாக்கத்தின் அளவு ஸ்டெர்லிங் இருப்பில் பெறப்படு வதற்குச் சமமாக ரூ.2,900 மில்லியன் என்ற அளவிலிருக்கும் என நம்பப்பட்டது. அயல்நாட்டு உதவி ரூ.2,900 மில்லியன் அளவுக்குக் கிடைக்கத்தக்கதாக இருந்தும் பயன்படுத்தப்பட்ட அயல்நாட்டு உதவியின் அளவு ரூ.1,880 மில்லியன் அளவாகவே இருந்தது. முதல் மூன்று ஆண்டுகளில் மைய அரசாங்கத்தின் பற்றுக்குறை அதன் ரொக்க இருப்புகளைப் பெறுவதன் மூலமாக அமைக்கப் பட்டது. கடைசி இரண்டு ஆண்டுகளில் ரிசர்வ் வங்கியிடமிருந்து கடன்வாங்குவதன் மூலமாக அது பெறப்பட்டது. இவ்வாறாக, முதல் திட்டத்தின் இறுதிக் காலத்தில் மைய அரசின் கடன் எழுப்புதல் (Floating debt of the Central Government) ரூ.3,469 மில்லியன் அளவுக்கு அதிகரித்தது. கையிருப்பாக வைத்திருந்த கடன் பத்திரங்களின் விற்பனை அளவு ரூ.252 மில்லியனுக்கு அதிகரித்தது. ரொக்க இருப்பிலிருந்து பெறப்பட்டதன் அளவு ரூ.1,117 மில்லியனாக இருந்தது. இந்த மூன்று இனங்களையும் கூட்டினால் ரூ.4,838 மில்லியனாக இருந்தது. மாநிலங்களைப் பொறுத்தமட்டிலும் கடன்களை எழுப்பியதன் மூலமாக ரூ. 211 மில்லியன் அளவும், கையிருப்பாக வைத்திருக்கக்கூடிய கடன் பத்திரங்களின் விற்பனையின் மூலம் ரூ.102 மில்லியன் அளவும், ரொக்க இருப்புகளிலிருந்து பெறப்படுவதன் மூலம் ரூ.168 மில்லியன் அளவும் பெறப்பட்டு மொத்தப் பற்றுக்குறையான ரூ 481 மில்லியன் அளவு சரிசெய்யப்பட்டது.

ஒரு மொத்தமாகப் பார்த்தால் பற்றுக்குறை நிதியாக்கம் என்பது பண அளிப்பின்மீது அல்லது விலைகளின்மீது கவனத்தைக் கவரும் அளவுக்கான விளைவு எதையும் முதல் திட்டத்தின் இறுதிக் காலம்வரை தோற்றுவிக்கவில்லை. 1951-56 ஆகிய ஐந்தாண்டு களில் பணஅளிப்பு ரூ.2,050 மில்லியன் அளவுக்கு அல்லது 14% அளவுக்கு அதிகரித்தது. திட்டத்தின் முதல் ஆண்டிற்கான மைய அரசின் வரவு செலவுத் திட்டம் சிறிய அளவிலான உபரியைக் காட்டியது. கடன்கள் உதவித் தொகைகள் என்ற வடிவத்தில் புறநிதியாக்கம் கிடைத்தது. இறுக்கமான பணவாக்கக் கொள்கையாலும் தனியார் முதலீடுகளின்மீதான கடுமையான

---

குறையும், திட்டத்திற்கான செலவும் மறுபரிசீலனை செய்யப்பட்ட அளவுகளைக் காட்டிலும் குறைவானதாக இருந்தன. இவ்வாறாக, முதல் திட்டத்தின் ஐந்து ஆண்டுகளுக்கு ஆன செலவு ரூ. 19,600 மில்லியனாகவும் பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவு ரூ. 4,200 மில்லியனாகவும் அல்லது மொத்தச் செலவில் 21 விழுக்காடு அளவாகவும் இருந்தன. (*Review of the First Five Year Plan*, Government of India, New Delhi, May, 1957, p. 34 and tables on pp. 39-47.

கட்டுப்பாடுகளாலும் தனியார் முதலீட்டில் தோன்றிய குறைவு, ஷெட்யூல்டு வங்கிகளின் கடனில் தோன்றிய மிகவும் அதிகமான இறக்கம் ஆகிய ஈடுசெய்யும் காரணிகளின் காரணமாக அடுத்த ஆண்டாகிய 1952-53-ல் இருந்த பற்றுக்குறை பெருகிச் செல்லும் விளைவு எதையும் காட்டவில்லை. இருப்பினும், திட்டத்தின் இறுதி இரண்டாண்டுகளில் முன்னேற்றச் செலவுகளைப் பேரளவில் அதிகரித்தலும் வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறையும் அயல்நாட்டுச் செலுத்துநிலை உபரியும் சேர்ந்து பணத்தின் அளிப்பை அதிகமான அளவுக்கு அதிகரித்துவிட்டன. இவ்வாறாக, திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளில் பணத்தின் அளிப்பு ரூ.1,850 மில்லியன் அளவுக்கும் குறைவானதாக இருந்தாலும் கடைசி இரண்டு ஆண்டுகளில் இது ரூ.3,900 மில்லியன் அளவுக்கு அதிகரித்தது. இந்தப் பணவாக்க அதிகரிப்பு இருந்தாலும் பொது விலைநிலை பாதிக்கப்படவில்லை. 1953-55ஆம் ஆண்டுகளில் வேளாண்மை விளைவில் பேரளவிலான அதிகரிப்புத் தோன்றிய தாலேயே பெரும்பாலும் இது தோன்றியது. தவிர, கொரியப் போருக்குப்பின் வந்த பணவாட்டச் சக்திகளைச் சமப்படுத்துபவை களாகவே இந்த ஆண்டுகளில் தோற்றுவிக்கப்பட்ட பற்றுக்குறை நிதியாக்கம் அமைந்திருந்தது. 1954-55ஆம் ஆண்டில் பண அளிப்பு ஏறத்தாழ 7% அளவுக்கு அதிகரித்தபோது மொத்த விலைகளின் நிலை 5% அளவுக்கே குறைந்திருந்தது. இருந்தாலும் திட்டத்தின் இறுதி ஆண்டில் (1955-56-ல்) பேரளவிலான முதலீட்டுச் செலவுகள், வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறைகள், பண அளிப்பில் மென்மேலுமான அதிகரிப்பு, வேளாண்மைப் பண்டங்களின் உற்பத்தியில் சரிவு ஆகியவைகளோடு விலை நிலையும் குறிப்பிடத்தக்க அளவில் அதிகரித்துச் செல்லும் போக்கைப் பெற்றிருந்தது. பற்றுக்குறை நிதியாக்கத்தை ஈர்த்துக் கொள்வதற்கான பொருளாதாரத்தின் எல்லைகள் மிக வேகமாகப் பெறப் பட்டுவிட்டன என்பதை இவைகள் காட்டுகின்றன.

இரண்டாம் திட்டக் காலத்தின் பற்றுக்குறை நிதியாக்கம் முதல் திட்டத்தைக் காட்டிலும் அதிகமான அளவினதாக இருந்தது என்பதோடுகூட விலைகள் அதிகரித்துவரும் போக்கின் உச்ச நிலையில் அது வந்ததாக அமைந்தது. இரண்டாம் திட்டத்தின் மொத்தச் செலவு ரூ.4,800 மில்லியனாக இருந்தது. இதற்கான நிதியாக்கம் கீழ்க்கண்டவாறு அமைந்திருந்தது. நடப்பு வருமானம் ரூ.8,000 மில்லியன்; பொது மக்களிடமிருந்து கடன் வாங்குவதன் மூலம் ரூ.12,000 மில்லியன்; இருப்புப் பாதையிலிருந்தும் பிராவி டெண்ட் நிதியிலிருந்தும் ரூ.4,000 மில்லியன்; புறநிதியாக்கத்தின் மூலம் ரூ.8,000 மில்லியன்; அதிகப்படியான வரி விதித்தலின்

மூலமாகவும் மென்மேலுமான பற்ருக்குறை நிதியாக்கத்தின் மூலமாகவும் ரூ. 12,000 மில்லியன். ஒருசில பொருளாதாரப் புலவர்களாலும் நிபுணர்களாலும் மதிப்பீடு செய்யப்பட்ட அளவைக் காட்டிலும் இரண்டாம் திட்டக்காலத்தில் முடியத்தக்க அளவாகத் திட்ட அதிகாரிகளால் நிருணயிக்கப்பட்ட அளவு மிகவும் அதிகமானதாக இருந்ததென்பதை இங்குக் குறிப்பிடலாம். கிடைக்கத்தக்க ஸ்டெர்லிங் இருப்புக்கு ஏற்றவண்ணம்தான் பற்ருக்குறை நிதியாக்கத்தின் அளவு அமைந்திருக்க வேண்டும் எனப் பன்னட்டுச் செலாவணி நிதிக் குழு (Commission of the International Monetary Fund) 1953-ல் பரிந்துரைத்தது. அந்த ஐந்து ஆண்டுகளிலுமாகப் பற்ருக்குறை நிதியாக்கத்தின் முடியத்தக்க அதிகமான அளவு ரூ. 1,650 மில்லியன் என்றும் அல்லது ஆண்டொன்றுக்குச் சராசரியாக ரூ. 333 மில்லியன் என்றும் அக்குழுக் கருதியது. நாட்டு விளைவின் அதிகரிப்புக்கேற்ப மாறுபடக் கூடியது என்று கருதப்படத்தக்க பொதுமக்களிடம் இருக்கும் ரொக்க இருப்புகளின் தேவைக்கேற்பப் பற்ருக்குறை நிதியாக்கத்திற்கான அளவை நிருணயிக்க வேண்டிய அவசியத்தை டாக்டர் பி. ஆர். செனுய் (Dr. B. R. Shenoy) குறிப்பிட்டுக் காட்டினுர். ஐந்து ஆண்டுக் காலத்திற்குமான தொகையாக ரூ. 1,800—2,200 மில்லியன் தொகையை அவர் பரிந்துரைத்தார்.[1] பொருளாதாரம் ஏற்றுக் கொள்ளத்தக்க பற்ருக்குறை நிதியாக்கத்தின் அளவு ஆண்டொன்றுக்கு ரூ. 1,500 மில்லியனுக்கு அதிகரிக்கக்கூடாது அல்லது ஐந்தாண்டுக் காலத்தில் ஏறத்தாழ ரூ 8,000 மில்லியனுக்கும் அதிகரிக்கக்கூடாது என்று பேராசிரியர் கால்டார் (Prof. Kaldor) இந்தியாவில் வரிச் சீர்திருத்தம் என்பதைப் பற்றிய அறிக்கையில் குறிப்பிடுகிருர்.[2] இரண்டாம் திட்டத்திற்கான ஆண்டுகளில் பற்ருக்குறை நிதியாக்கத்திற்கு மேல் எல்லையாக ரூ. 12,000 மில்லியன் தொகையை ஆசியாவிற்கும், தூரக் கிழக்கிற்கும் ஆன பொருளாதாரக் குழு (Economic Commission for Asia and the Far East) கருதியது. இந்தத் தொகைக்கும் அதிகமான அளவில் பற்ருக்குறை நிதியாக்கத்தின் அளவு அதிகரிக்கப்பட்டால், அதற்கேற்ப ஈடுசெய்யும் தன்மை எதுவுமில்லாமல் அமித வாங்கும் சக்தியைப் பேரளவில் அது வெளியிட்டுவிடலாம்.[3]

[1] Shenoy, B. R., *A Note of Dissent—Second Five Year Plan, the Frame Work*, Government of India, New Delhi, 1955, p. 167.

[2] Kaldor Nicholas, *Indian Tax Reform, Report of a Survey*, Government of India, New Delhi, 1956, p. 1.

[3] *Economic Survey of Asia and the Far East*, United Nations, 1955, p. 112.

இரண்டாம் திட்டத்தின் முன்னேற்றத்தைப்பற்றியதொரு மதிப்புரை மூலவளங்களின் பக்கத்தில் செயல்பட்ட விதம் ஏமாற்றம் தருவதாக இருக்கிறது என்பதைக் காட்டுகிறது. ஐந்தாண்டுக் காலத்தில் நடப்புவருமானமாகப் பெறவேண்டுமென எதிர்பார்த்த தொகையான ரூ. 12,000 மில்லியனுக்குப் பதிலாக முதல் மூன்றுண்டுகளில் பெறப்பட்ட தொகையின் மொத்தம் ரூ 4,275 மில்லியனுகவே இருந்தது. அல்லது 36%-க்கும் குறைவாகவே இருந்தது; அதிகப்படியான வரி விதித்தலின் மூலம் எந்த அளவுக்கு அதிகமாக்க முடியுமோ அந்தஅளவுக்கு அதிகமாக மைய அரசும் மாநில அரசுகளும் முயற்சி எடுத்தும்கூட இந்த அளவைத் தான் பெறமுடிந்தது. மைய அரசிலும் மாநில அரசுகளிலும் பொதுக் கடன்களின் விளைவும், சிறு சேமிப்பின் மூலம் பெறப்பட்ட விளைவும் மன நிறைவைத் தரத்தக்க நிலைக்கு வெகு அப்பால் இருந்தன. ஐந்தாண்டுக் காலத்தில் வருமானம் 25% என்றும் நுகர்வு 21% என்றும் அதன் மூலம் திட்டக் காலத் தொடக்கத்தில் கிடைக்கக்கூடிய நாட்டு வருமானம் 7·6%-லிருந்து 1957-58-ல் 9·2%-க்கு அதிகரித்தது. இயல்பான மூலவளங்களின் பகுதியிலிருந்து தோன்றிய இத்தகைய குறைவு, திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளுக்குள்ளேயே ரூ. 9,000 மில்லியன் அளவுக்குப் பற்றுக்குறை நிதியாக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டிய அவசியத்தைத் தோற்றுவித்தது. உள்நாட்டு மூலவளங்களால் 46% அளவும், வெளிநாட்டு உதவிகளால் 19% அளவும், பற்றுக்குறை நிதியாக்கத்தால் 35% அளவும் நிதியாக்கம் செய்யப்பட்டதாக இந்த ஆண்டுகளில் திட்டத்தின் மொத்தச் செலவு ரூ. 25,000 மில்லியனுக அமைந்தது. மைய அரசினுலும் மாநில அரசுகளாலும் செலவிடப்பட்ட மொத்தப் பற்றுக்குறையான ரூ 9,000 மில்லியன் தொகையில் பெரும்பகுதி (ரூ. 8,300 மில்லியன்) ரிசர்வ் வங்கியிடம் அரசு கடன்களை வெளியிடுவதை அதிகரிப்பதன் மூலமாகவே பெறப்பட்டது. எஞ்சியுள்ள சிறிய பகுதி (ஏறத்தாழ ரூ. 700 மில்லியன்) ரொக்க இருப்புகளைத் திரும்பப் பெறுவதனுல் பெறப்பட்டது. முதல் திட்டத்தின் மொத்தச் செலவில் 5-ல் ஒரு பங்கு பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் நிதியாக்கம் செய்யப்பட்டது. ஆனுல், இரண்டாவது திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளுக்குள்ளேயே இம் முறையில் நிதியாக்கப்பட்டதன் அளவு மொத்தத்தில் மூன்றில் ஒரு பங்கைவிட அதிகமானதாகச் சென்றுவிட்டது. ஆதலால், இரண்டாம் திட்டத்தின் இறுதி இரண்டு ஆண்டுகளில் வரவு செலவுத் திட்டத்தின் பற்றுக்குறைகள் வெகுவாகக் குறைக்கப்பட்டு விட்டன. 1955-56 முதல் 1961 முடிய உள்ள ஐந்தாண்டுகளில் திட்டச் செலவின் மொத்தம் ரூ. 46,000 மில்லியன் என மதிப்பிடப்

பட்டது. அதனுடைய நிதியாக்கம் கீழ்க்கண்டவாறு இருந்தது: வரி விதித்தல் மூலமாகவும், பொதுத்துறை உபரிகளின் மூலமாகவும் ரூ. 11,520 மில்லியன்; கடன்களின் மூலமாகவும் சிறு சேமிப்புகள் மூலமாகவும் இது போன்ற மற்றவைகளின் மூலமாகவும் தனியார் சேமிப்புகளைத் திரட்டியது ரூ 14,100 மில்லியன்; வெளிநாட்டு உதவியின் மூலமாக ரூ. 10,900 மில்லியன்; பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலமாக ரூ. 9,480 மில்லியன்.[1] இவ்வாறாகத் தொடக்கத்தில் எதிர்பார்க்கப்பட்ட மதிப்பீடான ரூ. 12,000 மில்லியனுக்கு மாறாக உண்மையாக மேற்கொள்ளப்பட்ட அளவு ரூ. 2,520 மில்லியனாக இருந்தது. திட்டத்தின் மொத்தச் செலவின் விகிதமாகப் பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பார்த்தால் இது முதல் திட்டக் காலத்தில் 21% ஆகவும் இரண்டாம் திட்டக் காலத்தில் 26% ஆக அதிகமான அளவிலும் இருந்தது.

அண்மையில் இந்தியப் பொருளாதாரத்தில் தெளிவாகத் தென்பட்டுள்ள பணவீக்க நிலையானது பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவினால் மட்டுமல்லாமல், இரண்டாம் திட்டத்தின்போது மேற்கொள்ளப்பட்ட முதலீட்டு அமைப்பினாலும் தோன்றியது எனலாம். முதல் திட்டத்திலிருந்ததற்கு மாறாக, இரண்டாம் திட்டத்தில் முதலீட்டிற்கான சிறப்பிடம் வேளாண்மைத் துறையிலிருந்து பெரும் தொழில்களுக்கும், மூலதனச் செறிவுள்ள திட்டங்களுக்கும் மாற்றப்பட்டது. இரண்டாம் திட்டத்தின் மொத்தச் செலவில் ஏறத்தாழ 60% அளவு, பேரளவுத் தொழில்கள், நடுத்தரமான தொழில்கள், கனித்தொழில், போக்குவரத்து, செய்தித் தொடர்பு, மின்சக்தித் தொழில்கள் ஆகியவைகளிலேயே மேற்கொள்ளப்பட்டன. பொருளாதாரம் வளர்ச்சி பெறவேண்டுமானால் அதற்கான வலுவான அடிப்படை அமைக்கப் படவேண்டும். அத்தகைய அடிப்படை அமைப்பதற்கு இத்தகைய முதலீடுகள் உதவத் தக்கவைகளாகும்.

1 *Report on Currency and Finance*, 1960-61, Reserve Bank of India, Bombay, p 79.

# 8. அயல்நாட்டு வணிகம்

## (Foreign Trade)

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் அந்த நாட்டின் அயல்நாட்டு வணிகத்திற்கும் இடையே மிக நெருக்கமான ஒரு தொடர்பு இருக்கிறது. அயல்நாட்டு வணிகத்தின் அமைப்பையும் பருமனையும் பொருளாதார முன்னேற்றமும் நாட்டு வருமான நிலையின் அதிகரிப்பும் இயக்குகின்றன. அதே நேரத்தில் அயல் நாட்டு வணிக நிலைகளில் உண்டாகும் மாற்றங்கள் நாட்டுவருமான நிலையையும் நாட்டு வருமான அமைப்பையும் நேரடியாகவே பாதிக்கின்றன. நாட்டு வருமானத்தின் அளவு, அயல்நாட்டு வருமானத்தின் அளவு ஆகியவைகள் குறிப்பிட்டதொரு நிலையிலிருக்கும் போது, இவைகளில் ஏதாவதொன்றில் மாற்றம் தோன்றினால் அந்த மாற்றம் ஒருசில சக்திகளைத் தோற்றுவிக்கின்றது. அந்தச் சக்திகள் இரண்டிற்கும் இடையானதொரு விதமான சமன்பாட்டைக் கொண்டுவரும் போக்கைப் பெற்றிருக்கும். இரண்டு நாடுகள் பொன் திட்டத்தைப் பெற்றிருப்பதாகக் கொள்வோம். அப்போது ஒரு நாட்டில் ஏற்றுமதி அதிகரிக்கப்பட்டால் அது அந்த நாட்டுக்குள் பொன் இறக்குமதியாவதற்கு வழிவகுக்கும். தங்கம் பேரளவில் நாட்டுக்குள் வருகின்ற காரணத்தால் உள்நாட்டு விலைகள் பாதிக்கப்படும். இவ்வாறு அதிகரிக்கப்பட்ட உள்நாட்டு விலைகள் ஏற்றுமதியைக் குறைத்து அதிகமான இறக்குமதிக்கு வழி வகுக்கும். இவ்வழியாக இரு நாடுகளுக்குமிடையே வணிகத் தொடர்பில் இசைவிப்புத் தோற்றுவிக்கப்படுகிறது என்பது பழமையான கோட்பாடுகள் தரும் பாடமாக இருக்கிறது. இக் கோட்பாடு பின்னால் மாற்றியமைக்கப்பட்டது. நாடுகளில் ஏற்றுமதி, இறக்குமதி நிலைகளைப் பாதிக்கத் தக்க வகையில் உள்ள வருமான விளைவுகளின் அடிப்படையில் அல்லது இரண்டு நாடுகளுக்குமான வருமான நிலைகளில் மாற்றங்கள் என்ற அடிப்

படையில் அல்லது இத்தகைய இசைவிப்புகளை விளக்குதல் என்ற அடிப்படையில் இக் கோட்பாட்டின் முன்னேற்றம் அமைந்திருந்தது. இந்தக் கருத்தின்படி சமன்பாட்டை மறுபடி கொண்டு வருவதற்கான மூல ஊக்கி (Prime mover) ஏற்றுமதிப் பரிமாணத்திலும் இறக்குமதிப் பரிமாணத்திலும் எதிர்விளைவுகளைத் தோற்றுவிக்கும் சமுதாயத்தின் வருமான நிலைகளும் செலவுகளுமே தவிரப் பணத்தின் பரிமாணமும் விலைநிலையும் அல்ல.

பொருளாதார வளர்ச்சியின்மீது அயல்நாட்டு வணிகத்தின் மோதல் கீழ்க்கண்டவாறு விளக்கப்படலாம். நாட்டு வருமானத்திற்கு அயல்நாட்டு வணிகத்தின் மதிப்புக்கான குறிப்பிட்டதொரு விகிதம் என்ற வடிவத்தில் இவ் விரண்டிற்குமிடையே இயல்பானதொரு சமன்பாடு இருக்கிறதென்ற எடுகோள் ஒன்றை அமைத்துக்கொள்ள வேண்டும். இந்தத் தொடக்கநிலைச் சமன்பாடு புறக்காரணிகளின் காரணமாகப் பேரளவிலான ஏற்றுமதிகளினால் பாதிக்கப்படுகிறது என்னும் எடுகோள் அமைத்துக் கொள்ள வேண்டும். இறக்குமதி நிலையானதாக இருக்கும்போது அதிகரித்த அளவிலான எந்த விதமான ஏற்றுமதியும் முதலீட்டை இயக்குவதாகவும், அதன் வழியாகப் பொருளாதார நடவடிக்கைகளை இயக்குவதாகவும் உள்ள வெளிநாட்டுத் தேவையின் அதிகரிப்பையே காட்டுகிறது. ஏற்றுமதி உபரியைப் பெறும் நாட்டு வருமானமானது உள்நாட்டு உறுதித்தேவை அதிகரித்தால் என்ன விளைவைப் பெறுமோ அதே மாதிரியான விளைவைப் பெறும். பொதுவாக இறக்குமதிகளால் ஏற்றுமதிகள் சமன் செய்யப்படுகின்றன. இறக்குமதிகளுக்காகப் பணம் செலுத்தப்பட வேண்டுமாதலால் ஏற்றுமதிகளின் மதிப்பிற்கும் இறக்குமதிகளின் மதிப்பிற்கும் இடையேயுள்ள அளவுதான் அயல்நாட்டு வருமானத்தின் மூலம் சம்பாதித்த நிகர அதிகரித்த வருமானமாகும். இறக்குமதிகள் நடப்பு வருமானத்தில் ஒரு பகுதியாக அமைகின்றன. எனவே, ஒரு நாட்டின் இறக்குமதிகளைக் காட்டிலும் அதிகமானதாக ஏற்றுமதிகளின்அளவு இருக்குமானல் நாடு அயல்நாட்டுச் செலுத்துநிலை உபரியைப் பெறுகிறது என்பது பொருள். இத்தகைய உபரியானது நாட்டின் கணக்கீட்டு நோக்கங்களுக்காக முதலீடுகள் எனக் கருதப்படுகின்றன. எனவே, உள்நாட்டில் மேற்கொள்ளப்பட்ட முதலீட்டு அளவையும் அயல்நாட்டு வணிகத்தின் மூலம் சம்பாதிக்கப்பட்ட உபரி என்ற வடிவத்திலான அயல் முதலீட்டு அளவையும் கூட்டி வருவதே குறிப்பிட்டதொரு காலத்தில் (ஓர் ஆண்டில்) ஒரு நாட்டிற்கான மொத்த முதலீடு ஆகும். உள்நாட்டு முதலீட்டையும் அயல்நாட்டு முதலீட்டையும் கூட்டி வருவதற்குச் சமமானதாகவே பெறப்

பட்ட சேமிப்புகளின் அளவு இருக்க வேண்டும். எனவே, அயல் நாட்டுச் செலுத்துநிலை சமநிலையிலிருக்குமானால் அயல்நாட்டு வணிகத்திலிருந்து தோன்றத் தக்க அமித முதலீடு எதுவுமில்லை என்பதோடு அமிதச் சேமிப்பும் எதுவுமில்லை என்பதையே இது காட்டுகிறது. ஆனால், அயல்நாட்டுச் செலுத்துநிலை உபரி இருக்குமானால் பணவீக்க விளைவையுடைய அல்லது பெருக்க விளைவையுடைய அமித முதலீடு இருக்கிறதென்பது பொருள். அதைப் போன்று அயல்நாட்டுச் செலுத்துநிலையில் பற்றுக்குறை இருப்பின் அமிதச் சேமிப்பு இயல்புடையதாகவும் எதிர்மறையின் சுருக்க விளைவுடையதாகவும் இருக்கும்.

ஏற்றுமதி உபரியால் காட்டப்படும் மொத்த முதலீட்டு நிலையில் அதிகரிப்பு, பன்னாட்டு வணிகத்தின் மூலமாக வெளி வணிகத்தின் சமன்பாட்டைக் கொண்டுவரத் தக்க வகையில் இயல்பாகவே வேலையைச் செய்யும். உள்நாட்டு முதலீடாயினும் அயல்நாட்டு முதலீடாயினும் முதலீட்டில் தோற்றுவிக்கப்படும் அதிகரிப்பு ஆகியவை செலவுகளின் நிலையையும் வருமானத்தின் நிலையையும் அதிகரிக்கும். ஆனால். உள்நாட்டு வருமானத்திலான இந்த அதிகரிப்பு அதிகமான இறக்குமதிகளைக் கவரும். அதன் காரணமாக அதிகமான இறக்குமதிகளை உள்ளார்ந்திருக்கும் கசிவு களுக்குச் சமமான அளவுக்கு ஏற்றுமதி உபரியின் மொத்தப் பெருக்க விளைவு குறைக்கப்படுகிறது. எந்த நாட்டின் பண்டங்கள் இறக்குமதி செய்யப்படுகின்றனவோ அந் நாட்டின் அதிகரித்த இறக்குமதி பொருளாதார நடவடிக்கைகளை அதிகரிக்கும் என்பதால்தான் இது இவ்வாறாக அமைகிறது. இதன் காரணமாக இறக்குமதி செய்யும் நாட்டின் நோக்கிலிருந்து பார்க்கும்போது வருமானத்தின்மீது பெருக்கமில்லாதவைகளைப் பொறுத்த மட்டி லும் அல்லது பணவாட்ட விளைவைப் பொறுத்தமட்டிலும் சேமிப் புக்குச் சமமாக இது கருதப்படவேண்டும்.

நாடொன்றின் புறச்செலுத்தல்கள் தொடர்பில் சம நிலையிலிருந்து தொடங்கும்போது, நாடு ஒன்று அதன் ஏற்று மதிகள் நிலையானதாக இருந்து இறக்குமதியில் அதிகரிப்பைப் பெறுமானால், பொருளாதார நடவடிக்கையின்மீதும் உள்நாட்டு வருமானத்தின்மீதும் குறைவைத் தோற்றுவிக்கும் விளைவைப் பெற்றிருக்கும். இருப்பினும், அயல்நாடுகளில் வருமானத்தின் அதிகரிப்பின் காரணமாக அதிகரிக்கும் இந்த நாட்டின் ஏற்றுமதிக் கேற்ப ஒரு மொத்தமான விளைவு மாற்றப்பட்டதாக இருக்கும்.

## அயல்நாட்டு வணிகத்திலிருந்து குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பெறும் நன்மைகள்
## (The Gains of Underdeveloped Countries from International Trade)

பொதுவாக, நாடொன்றின் பொருளாதார வளர்ச்சியோடு சேர்ந்து அந்த நாட்டின் வெளி வணிகமும் அதிகரிக்கின்றது. அயல் நாட்டு வணிகப் பெருக்கமானது உண்மையிலேயே பொருளாதார முன்னேற்றத்தைக் காட்டக்கூடியதொரு சுட்டிக் காட்டும் கருவியாகும். நாட்டு விளைவு அதிகரிக்கும்போது உடனிகழ்வாகவே அயல்நாட்டு வணிகத்தின் பெருக்கமும் தோன்றியிருந்ததை இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்சு, ஜப்பான் போன்ற ஏறத்தாழ எல்லாவிதமான வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார வரலாறுகளும் தெளிவாகக் காட்டுகின்றன. ஆனால், இத்தகைய பொது விதிக்கு ஒரே ஒரு விலக்காகத் திகழ்வது சோவியத் யூனியன் மட்டும்தான். இந்த நாட்டின் சிறப்புத் தன்மைக்குப் பல காரணங்கள் உண்டு. அதாவது, அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கை ஓரளவுக்கும், நாட்டின் பெரிய பரப்பளவு ஓரளவுக்கும் பல்வேறு விதமான மூலவளங்கள் பேரளவில் கிடைத்தமை ஓரளவுக்கும் இதற்கான காரணங்களாக அமைந்தன. மூலவளங்கள் பலதரப்பட்டவைகளாகவும் ஏராளமான அளவிலும் கிடைத்த காரணத்தால் தன்னைத் தானே முன்னேற்றுவித்துக்கொள்ளுதல் என்ற நிலையை இந் நாடு பெறுவதற்கு நல்ல உதவியாக இவை அமைந்தன. இருப்பினும், நாட்டு வருமானம், அயல்நாட்டு வணிகம் ஆகிய இரண்டுமே ஒன்றாக அதிகரித்திருந்தன என்பது தான் பொதுவான நோக்காகக் காணப்படுகிறது. அதிகமான அளவினவாகவும் நல்ல தரமுள்ளவைகளாகவும் உள்ள பண்டங்களை உற்பத்தி செய்வதுதான் பொருளாதார முன்னேற்றம் எனப் படுகிறது. அதன் வாயிலாக ஏற்றுமதிச் சக்தி அதிகரிக்கப் படுகிறது. முதலீட்டு நிலையில் அதிகரிப்பு, அதிகமான வேலை, மொத்த வருமானத்திலும் தலா வருமானத்திலும் அதிகரிப்பு, அதிகமான நுகர்வுத் தேவைகள் என்பனவற்றையெல்லாம் அது உள்ளடக்கியிருக்கிறது. நுகர்விலும் முதலீட்டிலும் தோன்றும் மாற்றங்கள் உள்நாட்டுப் பொருளாதார நடவடிக்கைகளை முன்னேற்றுவிக்கும் என்பதோடு, அதிகமான ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்கும் வகை செய்யும். எனவே, நாடுகளின் வளர்ச்சி விகிதங்களில் உள்ள வேறுபாடுகளினால்தான் இவைகளின் அயல் நாட்டுச் செலுத்துநிலைகளின் மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பது இதிலிருந்து தெளிவாகப் பெறப்படுகிறது. பொதுவாக

உலக நாடுகளில் செல்வம் மிகுந்தவைகளாகவும் மிகவும் வளர்ச்சி பெற்றவைகளாகவும் உள்ள நாடுகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளைக் காட்டிலும் அதிகமான பொருளாதார வளர்ச்சி விகிதங்களைப் பெற்றிருக்கின்றன. வருமானப் பெருக்க விகிதங்களில் உள்ள இத்தகைய வேறுபாடுகளுக்குமேல் அயல்நாட்டுச் செலுத்து நிலை அனுபவத்தில் அமைப்புக் காரணிகளும் நிலையக் காரணிகளும் இத்தகைய வேறுபாடுகளுக்கான காரணங்களாக இருக்கின்றன. இதை வேறு விதமாகவும் குறிப்பிடலாம். அதாவது வளர்ச்சியடைந்த நாடுகள், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஆகிய இருவகை நாடுகளிலும் அயல்நாட்டுச் செலுத்து நிலைச் சிரமங்களுக்கான அடிப்படைக் காரணிகள் ஒரே மாதிரியானவைகளாக இருந்தாலும் செல்வமிக்க தொழில்மயமான நாடுகள் மிகவும் வளர்ச்சி பெற்றவைகளாகவும் மிக எளிதாக மாற்றப்படத்தக்க மூலவளங்களை அதிகமான அளவில் பெற்றவைகளாகவும் இருக்கின்றன. அயல்நாட்டுச் செலுத்துநிலையின் கடுமையை அவைகளால் குறைக்க முடிகிறது என்பதோடு, ஏழ்மை நாடுகளைக் காட்டிலும் மிக எளிதான முறையில் அவைகள் சிக்கல்களிலிருந்து விடுபடமுடிவதற்கான காரணத்தையும் இவ்வுண்மை தெளிவுபடுத்துகிறது.

மூலதன ஆக்கத்தை அதிகரிப்பதற்கு அயல்நாட்டு வணிகம் உதவுகின்ற காரணத்தால் தடையற்ற வணிகம் நிலவும்போது, குறைந்த வளர்ச்சியுடையதொரு நாடு அயல்நாட்டு வணிகத்தால் நன்மையைப் பெறுகிறது இந் நாடுகளில் காணப்படும் உற்பத்தி நிலையும், தலா வருமானமும் மிகவும் குறைவான அளவிலேயே இருக்கின்றன. இந் நாடுகளில் பலவற்றில் ஏற்கெனவே மிகவும் குறைவான நிலையிலிருக்கும் நுகர்வு நிலையை இன்னும் குறைப்பதென்பது முடியாததாக இருக்கிறது. எனவே, இத்தகைய சூழ்நிலையில் குறைந்த உற்பத்தி, குறைந்த சேமிப்பு என்ற நச்சுச் சுழல்கள் வெளிநாட்டு மூலவளங்களைக் கிடைக்குமாறு செய்தால்தான் உடைக்கப்பட முடியும். தடையற்ற முறையில் உள்நாட்டுக்குள் வரத்தக்க அயல்நாட்டு மூலதனம் அல்லது அயல்நாட்டு உதவி இல்லாதிருக்குமானால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குக் கிடைக்கத்தக்க ஒரே வழி அவைகளின் ஏற்றுமதி வருமானத்தை அதிகரித்துக்கொள்வதுதான். ஏற்றுமதி வருமானங்கள் நாட்டு வருமானத்திற்கு இறுதிநிலை அதிகரிப்பாக அமைகின்றன என்ற காரணத்தாலும், அதனால் இந் நாடுகளின் உள்நாட்டு மூலதனத் திரட்சியை விரைவுபடுத்துவதற்கு மிகச் சிறந்த பங்காற்ற முடியும் என்ற காரணத்தாலும் பொருளாதார வளர்ச்சி என்ற நோக்கிலிருந்து பார்க்கும்போது, ஏற்றுமதி

வருமானங்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவைகளாகும். இப்போதிருக்கும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளிடம் இருக்கக்கூடிய மூலவளங்களைக் கொண்டும் பின்தங்கிய தொழில்நுட்ப நிலைகளைக் கொண்டும் இத்தகைய மூலதனப் பண்டங்களை இறக்குமதி செய்வதென்பது இயலாது. எனவே, உலகில் மிகவும் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளிலிருந்து குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குத் தேவைப்படத்தக்க மூலதனப் பண்டங்களை இறக்குமதி செய்துகொள்வதற்கு ஏற்றுமதி வருமானங்கள் மிகவும் உதவி செய்கின்றன. இது தவிர, அயல்நாட்டு வணிகத்தின் பெருக்கம் என்ருல் அது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பொருள்களுக்கான அயல்நாட்டில் உள்ள தேவையின் அதிகரிப்பு என்றும், சந்தையின் விரிவு என்றும்தான் பொருளாகிறது. 'புதிய' பண்டம் ஒன்று உற்பத்தி செய்யப்படுகிறது என்ற வழியில் புதுமையைப் புகுத்தும் முறை என்பது எதுவும் இல்லாதிருக்கும்போது, பொதுவாக ஒரு தொழிலின் பெருக்கும் இன்னொரு தொழிலின் பெருக்கத்தைப் பாதிப்பதன் மூலமாகவே தோன்றுகிறது. மேலும், புதுமையைப் புகுத்துதல் என்பது குறைந்த வளர்ச்சியுடைய நாட்டில் மிகவும் கடினமானது என்பதோடு மிகவும் அரிதானது என்பதாகவும் இருக்கிறது. ஒன்று அல்லது ஒன்றுக்கு அதிகப்பட்ட தொழில்களிலிருந்து தோன்றும் அதிகரிக்கும் விளைவுகளை ஏற்றுமதி செய்து வெளிநாட்டுச் சந்தைகளில் விற்பனை செய்துவிட முடியுமானுல் இச் சிக்கல் தீர்க்கப்பட முடியும் ஏற்றுமதித் துறை மிக எளிதாகக் கட்டுப்படுத்தப்படத்தக்க துறையாக இருப்பதால், அதிகரித்த ஏற்றுமதிகளின் மூலமாகப் பெறப்படும் அதிகரித்த வருமானங்கள் முதலீட்டு நோக்கங்களுக்காக ஆதாயம் தரத்தக்க வகையில் பயன்படுத்தப்படலாம் ஏற்றுமதிக்காகச் சிறப்பிடம் தரப்படும் பெருந்தொழிலின் முன்னேற்றம் மற்றத் தொழில்களின் வளர்ச்சிக்கு வகை செய்வதோடு உதவியும் செய்கின்றது. இது பொதுவான பொருளாதார வளர்ச்சிக்குத் துணை செய்கிறது. பெரும்பாலும் குறிப்பிட்ட தொழில்கள் தோன்றுவதும், பெருகுவதும் பொருளாதாரம் முழுமைக்குமான வெகுவேகமான வளர்ச்சியை உறுதி செய்வதற்கானதொரு வழியாகவும் அதைப் பெறுவதற்குத் தேவையான ஊக்கு விசையாகவும் அமைகிறது. ஒரு நாட்டில் ஒருதொழிலின் விளைவு அல்லது ஒருசில தொழில்களின் விளைவுகளை மற்றத்தொழில்களின் விளைவுகளோடு ஒப்பிடுகையில் விகிதாசார அடிப்படையில் அதிகமானதாக இருக்கலாம். உள்நாட்டுச் சந்தையின் பெருக்கமும், நுகர்வின் உயர்ந்த நிலையும் அதிகமான உற்பத்திக்கும் முதலீட்டிற்குமான ஊக்கு விசையைத் தருகின்றன. அயல்நாட்டு வணிகத்திஞல் தோன்றத்தக்க இன்றியமையாத

நன்மைகளில் ஒன்று என்று போட்டியின் இத்தகைய அதிர்ச்சி விளைவுகளுக்குப் பேராசிரியர் ஹேபர்லெர் (Prof. Haberler) அதிகமான சிறப்பிடம் தருகிறார். இந்த விளைவு புதிய தொழில்களைத் தொடங்குவதற்கும் முன்னேற்றுவிப்பதற்குமான வலுவான ஊக்கச் சக்தியாக இருக்குமென்றும் அவர் இதற்குச் சிறப்பிடம் தருகிறார். ஏற்றுமதித் தொழில்களுக்காகத் தரப்படவேண்டிய பின்னமைப்பு வசதிகள் இவ் வேற்றுமதித் தொழில்களோடு நேரடியாகத் தொடர்பு உள்ளவைகளாக அல்லது தொடர்பற்றவைகளாக உள்ள பிற தொழில்களுக்குப் பெரிய அளவிலான புறச் சிக்கன மூலங்களாக அமைகின்றன.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அயல்நாட்டு வணிகத் துறை, உள்நாட்டுத் துறை என்ற வடிவத்தில் தனக்குத் தேவையானவற்றையெல்லாம் தானே நிறைவேற்றிக்கொள்ளும் வகைகளும், போட்டி போடாத வகைகளும் இத்தகைய பொருளாதாரங்களின் வளர்ச்சிக்கான வாய்ப்பைக் கட்டுப்படுத்திய காரணிகளில் சிலவாகும். பொறிசெய் பண்டங்கள், வேளாண்மை உற்பத்தி ஆகியவைகளுக்கிடையே மூலப் பொருள்களின் உற்பத்திச் செலவு, வினை முற்றுப் பெற்ற பண்டங்களின் மதிப்புகள் ஆகியவைகளுக்கிடையேயான வேறுபாடு முதல் வகையில் பேரளவிலும், இரண்டாவது வகையில் குறைவான அளவிலும் இருக்கின்றது. எனவே, தொடக்கநிலை முதலீட்டின் பெருக்கு விளைவு பொறிசெய் தொழில்களில் அதிகமான அளவில் இருக்கின்றது. முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகள் சிலவற்றில் 19ஆம் நூற்றுண்டில் நிலவிய அயல் நாட்டு வணிகமானது அதிகமான அளவிலான அயல்நாட்டுச் செலாவணியைப் பெறுவதற்கும் அதிகரித்த மூலதன ஆக்கத்திற்கும் பேரளவு உதவி செய்திருக்கிறது என்பது மறுக்கமுடியாத செய்திதான். ஆனால், முதன்மைப் பண்டங்களின் உற்பத்திக்குப் பதிலாக இரண்டாம் தரத் தொழில்களின் பெருக்கத்திற்காக முதலீடுகள் செய்யப்பட்டிருக்குமானால் இந்த நாடுகளின் நாட்டு வருமானம் பேரளவில் அதிகரித்திருக்கும் என்ற உண்மையும், பொருளாதார வளர்ச்சி மிகவும் விரைவானதாகவும் வியப்படையத் தக்க அளவினதாகவும் இருந்திருக்கும் என்ற உண்மையும் நிலைத்திருக்கின்றன. அயல்நாட்டு வணிகத்தினால் சீன, இந்தியா, மலேயா போன்ற நாடுகள் அதிகமான அளவில் நன்மைகளைப் பெறமுடியவில்லை என்பதை இந் நாடுகளின் பொருளாதார வரலாறு காட்டுகின்றது. ஏற்றுமதித் தொழில்களை முன்னேற்றுவிப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட அயல்நாட்டு முதலீடுகள் இந் நாடுகளின் பொருளாதார அமைப்புகளோடு தகுதியான முறையில்

பொருந்தவில்லை என்பதுதான் இதற்கான காரணமாகும். அயல் நாட்டுத் தொழில் நிறுவனங்களாலும், வணிகர்களாலும் உணவு உற்பத்தியிலும், தொழிலுக்கான மூலப் பொருள்களின் உற்பத்தி யிலும் அதிகமான அளவுக்கு ஆதாயத்தைப் பெறும் நோக்குடன் முதலீடுகள் மேற்கொள்ளப்பட்டன. இந்த நாடுகள் எல்லாம் மிகவும் வளர்ச்சி பெற்ற நாடுகளின் சுற்றுப்புறக் காவல் நிலையங்கள் போலவே இருந்தன. மேற்கொள்ளப்பட்ட அயல் நாட்டு மூலதனமானது முதலீடு செய்த நாட்டின் முன்னேற் றத்தை இலக்காகக் கொண்டிருந்ததே தவிர, முதலீடு செய்யப் பட்டிருக்கும் நாட்டைப்பற்றிய அக்கரை எதுவும் கொண்டவை களாக இல்லை. பெரும்பாலும் அயல்நாட்டு நிறுவனங்கள் யாவும் விற்பனைச் சுவாதீனத்தைப் பெற்றவைகளாக அல்லது வாங்கும் சுவாதீனத்தைப் பெற்றவைகளாகவே இருந்தன. வெளிநாடு களிலிருந்து மூலதனத்தைக் கவர்ந்த முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகளின் நோக்கிலிருந்து பார்க்கும்போது, உணவு உற்பத்தியின்மீதும், வளம்பறித் தொழில்களின்மீதும் சிறப்புத் தேர்ச்சி பெற்றிருந்த நிலையானது முதலீடுகளின் இரண்டாந்தர விளைவுகளையும், திரள்விளைவுகளையும் விலக்கி விட்டது. இந்த நாடுகளின் பொருளாதார அமைப்பு முன்னேற்ற மடைந்த நாடுகளின் தேவைக்கேற்ற முறையில் அமைக்கப் பட்டது. இந் நாடுகளின் பொறிநுட்ப முன்னேற்றம் அகச் சிக்கனங்கள், புறச் சிக்கனங்கள் ஆகியவைகளுக்கு உள்ள வாய்ப்பை . இந் நாடுகளின் பொருளாதார அமைப்பு தரவில்லை.[1] குறிப்பிட்ட நிறுவனங்களின் உற்பத்தித் திறன் அதிகமான அளவில் இருந்தாலும்கூட, உற்பத்தி வசதிகள் அயல் நாடுகளில் உள்ளவர்களின் உரிமைகளாக இருக்கும் அளவுக்கேற்படி அதிகமான வருமானம் என்ற வடிவத்திலான ஆதாயங்கள் அயல் நாட்டினருக்கே உடைமையாகிவந்தன.

## குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் அயல்நாட்டு வணிகச் சிக்கல்கள்

## [The Foreign Trade Problem of Underdeveloped Countries]

ஏற்றுமதி வணிகத்திஞல் நாடொன்று பெறத்தக்க நன்மை யைப் பற்றிதொரு அளவையாக ஏற்றுமதியிலிருந்து பெறப்படும் நிகர வருமானத்தின் அளவு அமைந்துள்ளது ஏற்றுமதிப் பண்டங்

1 Singer, H. W., 'The Distribution of Gains between Investing and Borrowing Countries,' *The American Economic Review—Papers and Proceedings*, May 1950, pp. 473-85.

களின் அளிப்பு, அயல் நாடுகளில் உள்ள சந்தைகளில் இப் பண்டங் களுக்கான தேவையின் இயல்பு, நாட்டின் இறக்குமதித் தேவைகள், இறக்குமதிகளோடு ஒப்பிடுகையில் ஏற்றுமதிப் பண்டங்களின் ஒவ்வொர் அலகின் மதிப்பு ஆகியவைகளால் ஏற்றுமதியிலிருந்து பெறப்படும் நிகர வருமானம் நிருணயிக்கப்படுகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் ஏற்றுமதி வருமானத்தின் அளவை நிருணயிக்கக்கூடிய மூன்று காரணிகளாகிய ஏற்றுமதிகள், இறக்குமதிகள், வணிகப் பேரங்கள் ஆகிய காரணிகளின் சிறப்பு உலக வணிகத்தின் அடிப்படையில் இப்போது ஆராயப்படலாம்.

**(அ) ஏற்றுமதிகள்** (Exports)

ஏற்றுமதி வருமானத்திற்கும் உள்நாட்டு முதலீட்டிற்கு மிடையே நெருக்கமான நேர் உடன்தொடர்பு இருக்கின்ற காரணத்தால் இந்தியா போன்ற குறைந்த வளர்ச்சியுடைய நாடு களில் ஏற்றுமதியை ஊக்குவிப்பதற்கு மிகவும் சிறப்பிடம் தரப் படுகின்றது. ஆண்டுதோறுமான மொத்த ஏற்றுமதி வருமானத் தில் மிகச் சிறியதொரு பங்குதான் நாட்டின் மூலதன இருப் போடு அதிகமாகச் சேர்ப்பதற்குக் கிடைக்கின்றது. அவசியம் தேவைப்படத்தக்க இறக்குமதி என்று விளக்கப்படும், தொடர்ச்சி யாக மேற்கொள்ளப்படும் ஒழுங்கான இறக்குமதிக்கான நிதியாக்கத்திற்கு ஏற்றுமதி வருமானத்தின் பெரும்பகுதி தேவைப் படுவதினாலேயே இந் நிலை இருக்கிறது. ஒரு நாடு பிற நாடு களிடம் கடன்பட்டு அயல்நாட்டுக் கடன் பொறுப்புகளை ஈடு கட்டுவதற்காக அந் நாடு பெறும் அயல்நாட்டுச் செலாவணியால் பெரும்பகுதியைச் செலுத்த வேண்டியிருக்குமானால், தவிர்க்க முடியாத இறக்குமதிகள் அயல் நாட்டுக் கடன்களின் பணி களுக்கான கட்டணங்கள் ஆகியவைகளுக்காவதைச் செலுத்திய பின் மிச்சமாகக் கிடைப்பதைத்தான் உள்நாட்டு மூலதன ஆக்கத் திற்காகப் பயன்படுத்தமுடியும்.[1] எனவே, இறக்குமதி நாட்டம் அதிகமானதாகவும், கடன் பணிக்கான கட்டணங்கள் அதிகமான தாகவும் இருந்தால் உள்நாட்டு முதலீட்டிற்காக மிகக் குறைந்த அளவு ஏற்றுமதி வருமானமே பயன்படுத்தப்பட முடியும். அயல் நாடுகளிலிருந்து புதிய கடன்கள் எதுவும் வாங்கப்படாத நிலையில் மூலதனத் திரட்சியை முன்னேற்றுவிக்க வேண்டுமானால், ஏற்று மதியைப் பேரளவில் அதிகரிக்க வேண்டியது மிக மிக அவசிய மானதாகும். ஒரு ரூபாய் மதிப்புள்ள அதிகப்படியான அயல் நாட்டுக் கடன் பணியின் நிதியாக்கத்திற்காகத் தேவைப்படும்

[1] Mandelbaum, K., *The Indsutrialization of Underdeveloped Areas* Basil Blackwell, Oxford, 1945, p. 89.

அதிகப்படியான ஏற்றுமதியானது ஒன்றிலிருந்து இறக்குமதி நாட்டத்தைக் கழித்து வருவதன் தலைகீழ்ப் பின்னம் (Reciprocal of one minus the propensity to import) கடன் பணியானது ஒரு ரூபாயாகவும், இறக்குமதி நாட்டம் 10-ல் 6 ஆகவும் இருந்தால், ஏற்றுமதியானது ரூ. 2½ அளவுக்கு அதிகரிக்க வேண்டும். இதில் ரூ.1 கடன் பணிக்காகப் போய்விடும். பொருளாதார வளர்ச்சியின் காரணமாகத் தோன்றும் நுகர்வுத் தேவைகளை ஈடு செய்வதற்கு ரூ 1½ கிடைக்கிறது. அதிகப்படியான முதலீட்டை மேற்கொள்வதற்கென மிச்சம் எதையும் இது தரவில்லை. எனவே, அதிகப்படியான முதலீட்டைப் பெற விரும்பினுல் ஏற்றுமதியை இன்னும் அதிகமான அளவிற்கு அதிகரிக்க வேண்டும்.

வளர்ச்சி பெற்ற நாடுகள் இறக்குமதி செய்யக்கூடிய பண்டங்களுக்கான வருமானத் தேவைநெகிழ்ச்சி முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகள் இறக்குமதி செய்யக்கூடிய பண்டங்களுக்கான வருமானத் தேவைநெகிழ்ச்சியைக் காட்டிலும் குறைவானதாகப் பொதுவாகக் காணப்படுகின்றது. முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் வகையைச் சேர்ந்த நாடுகளின் வருமானம் அதிகமாகும்போது அவைகளின் முதலீட்டிற்காக மென்மேலும் அதிகமான அளவு இயந்திரங்களையும், தொழிற்சாலைகளையும், மற்றும் பல மூலதனப் பண்டங்களையும் விரும்புகின்றன. தவிர, அவ்வாறு வருமானம் அதிகரிக்கும்போது நுகர்வுக்காக ஆடம்பரப் பொருள்களையும், மற்றப் பல பொறிசெய் பண்டங்களையும், பேரளவில் விரும்புகின்றன. ஆனுல், தொழில் மயமான நாடுகளின் இறக்குமதியில் உணவுப் பண்டங்களும் மூலப் பொருள்களும் பெரும் பகுதியாக அமைந்திருக்கின்றன. வருமானம் அதிகரிக்கும்போது இத்தகைய பண்டங்களுக்கான தேவை அதிகரிப்பதில்லை. இவ்வாறுக 1938, 1954 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் தொழில் மயமான நாடுகளின் மொத்த உற்பத்தி 77% அளவுக்கு அதிகரித்தது. ஆனுல், அவைகள் இறக்குமதி செய்த உணவுப் பண்டங்களின் அளவு 35% அளவுக்கே அதிகரித்தது.[1]

உலகத்தின் வருமானம் அதிகரித்துக்கொண்டு செல்லும் வணிக மறுமலர்ச்சிக் காலத்தில் தொழில் மயமான நாடுகளுக்குள் வரும் மொத்த இறக்குமதியைக் காட்டிலும் வேளாண்மை நாடுகளுக்குள் வரும் மொத்த இறக்குமதியின் அளவு மிக வேகமாக அதிகரித்துச் செல்லத்தக்கதாக இருக்கும். அதைப்போன்று

[1] *Trends in International Trade* GATT, Geneva, 1958, p. 43.

தொழில் மந்தக் காலத்தில் வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளுக்குள் வரும் இறக்குமதியின் அளவைக் காட்டிலும் மிகவும் அதிகமான அளவுக்குக் குறைந்த வளர்ச்சியுள்ள நாடுகளுக்குள் வரும் இறக்குமதியின் அளவு சுருங்கும்.[1]

பொருளாதார வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளிலிருப்பதைக் காட்டிலும் உலகின் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் ஏற்றுமதிச் செறிவின் அளவு அதிகமானதாக இருக்கிறது என்ற உண்மையின் காரணமாகத் தொழில் மயமான பொருளாதாரங்களின் வருமானத்தில் தோன்றும் சுழல் மாற்றங்களினால் பேரளவில் பாதிக்கத்தக்க வகையில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் அயல் நாட்டு வணிகம் அமைந்திருக்கிறது. வளர்ச்சி பெற்ற நாடுகள், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஆகிய இரு வகை நாடுகளிலும் ஏற்றுமதிப் பண்டங்கள், இறக்குமதிப் பண்டங்கள் ஆகிய இருவகைப் பண்டங்களிலும் 150 பண்டங்களைப் பற்றி அண்மையில் ஒரு ஆய்வு நடத்தப்பட்டது. ஏற்றுமதிச் செறிவுக்கும். பொருளாதார முன்னேற்ற அளவுக்கும் இடையே தலைகீழ் உடன்தொடர்பு இருப்பதை அந்த ஆய்வு காட்டியது. பொருளாதாரம் எந்த அளவுக்கு முன்னேற்றமடைந்ததாகவும், தொழில்மயம் ஆனதாகவும் இருக்கின்றதோ அந்த அளவுக்கு அதன்ஏற்றுமதிகளும் பலதரப்பட்டவைகளாக இருக்கின்றன.[2] குறைந்த வருமான நாடுகளின் அயல்நாட்டுச் செலாவணி வருமானத்தில் ஏறத்தாழ 90% அளவு முதன்மைப் பண்டங்களின் ஏற்றுமதியிலிருந்து பெறப்படுகின்றன. அவைகளின் நாட்டு வருமானத்திற்கு ஏற்றுமதி வருமான விகிதமும் அதிகமாக இருப்பதால், அந் நாடுகளின் ஏற்றுமதிப் பண்டங்களின் தேவையில் தோன்றும் எந்த ஓர் ஏற்றத்தாழ்வும் அவைகளின் வருமானத்தைப் பேரளவில் பாதிக்கின்றன.

வளர்ச்சி பெற்ற நாடுகளிலிருப்பதைக் காட்டிலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் ஏற்றுமதி வருமானத்தில் தோன்றும் ஏற்றத்தாழ்வுகள் அதிகமான அளவில் இருக்கின்றன என்பதோடு மட்டுமல்லாமல், நாட்டு வருமானத்தின்மீதான அவைகளின் விளைவும் அதிகமான அளவில் இருக்கின்றது. அயல்நாட்டுச் செலாவணி இருப்புகளுக்கும், உள்நாட்டுப் பண அளிப்புக்கும் இடையே குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மிகவும் நெருக்கமான

[1] Chang, Tse Chun, *Cyclical Movements in the Balance of Payments*, Cambridge, 1951, p. 51

[2] Michaely, Michael, 'Concentration of Exports : an International Comparison,' *Economic Journal*, December, 1958,' pp. 725-28.

தொடர்பு பொதுவாகக் காணப்படுகிறது. எனவே, சாதகமான அயல்நாட்டுச் செலுத்துநிலையானது பணத்தின் அதிகமான நீர்மைத் தன்மைக்கு வகை செய்கிறது. இத்தகைய அதிகரித்த நீர்மைத் தன்மை மேல் நோக்கிய போக்கை மிகவும் வலிமைப்படுத்துகிறது. பணத்தின் நீர்மைத் தன்மை ஊக வணிகத்திற்கு உதவி செய்கிறது. ஊக வணிகம் பணவீக்கத்தை அதிகரிக்கச் செய்கிறது. ஏற்றுமதியில் குறைவு தோன்றும்போது அந்நியச் செலாவணியின் இருப்பு குறைந்து, பணத்தின் அளிப்பு குறைந்து, வங்கி இருப்புகளும் குறைந்து. அதன் காரணமாகக் குறைந்து செல்லும் போக்கு மிகவும் விரைவுபடுத்தப்படுகிறது.[1]

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் தேவைக்கேற்ப அவைகளின் ஏற்றுமதிகள் தவறிவிட்டதை வளர்ச்சியடைந்த நாடுகளில் அத்தகைய பண்டங்களுக்கான தேவையில் நெகிழ்ச்சியின்மை, அந் நாடுகளின் இறக்குமதிக் கொள்கை ஆகியவைகளின் அடிப்படையில் மட்டும் விளக்குவது தவறாகும் செல்வமிகு நாடுகளில் சிறுதொழில்களிலிருந்து பொறியியல் தொழில்கள், வேதியல் தொழில்கள் போன்ற கனரகத் தொழில்களுக்கு மாறும் போக்கு காணப்பட்டது. மேலும், மொத்த விளைவில் பணிகளின் பங்கு அதிகரித்துக்கொண்டு சென்றது. இவைகளின் வளர்ச்சி விகிதத்திற்கேற்ப மூலப் பொருள்களை இறக்குமதி செய்வதும் தடை செய்யப்பட்டது என்பதும், மறுக்க முடியாததாகும்.[2] ஆனாலும், ஏழ்மை நாடுகளின் பொருளாதாரக் கொள்கையின் ஒரு சில பகுதிகளும் அவைகளின் ஏற்றுமதிப் பெருக்கத்திற்கு உதவி செய்யத் தக்கவைகளாக இல்லை. இந்த நாடுகளில் தொழில் முன்னேற்றத்திற்கு மென்மேலும் அதிகமான சிறப்பிடம் தருவது அத்தகைய பகுதிகளில் ஒன்றாகும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் மிகவும் பேராவல் மிக்க தொழில் மயமாக்கும் திட்டங்களை மேற்கொள்ளும்போது அவைகளின் முதன்மைப் பண்டங்களின் ஏற்றுமதியானது அவைகளின் நாட்டு வருமானத்தின் அதிகரிப்போடு ஒப்பிடுகையில் குறைந்து சென்றுவிடும் என்பது தவிர்க்க முடியாததாகும். ஏற்றுமதி நடவடிக்கைகளில் பயன்படுத்தியிருக்கத்தக்க உற்பத்திக் காரணிகளை இரண்டாம் தரத் தொழில்களின் பெருக்கமானது போட்டியின் அடிப்படையில் இரண்டாம் தரத் தொழில்களில் செல்லவைத்துவிடுகிறது. பொருளாதார வளர்ச்சி என்பது

1 Wallich, C. Henry, 'Underdeveloped Countries and the International Monetary Mechanism' in *Money Trade and Economic Growth* in honour of J. H., Williams, Macmillan, New York, 1951, pp 24-45.

2 Nurkse, Ragnar, *Patterns of Trade and Development*, Wicksell Lectures, 1959, Stockholm, 1959, p. 23.

தொழில்மயமாதல்தான் என்று கருதப்படும்போது இது தவிர்க்க முடியாதது. ஆனால், தொழில்மயம் ஆவதற்கான திட்டங்களுக்கு மிகுதியான அளவு சிறப்பிடம் தரும்போதுதான் ஏற்றுமதி வளர்ச்சிக்கான உண்மையான பாதிப்பை அது தோற்றுவிக்கிறது.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் அயல்நாட்டு வணிகத்தைக் கீழே அமுக்கிவைக்கும் இன்னோர் இயல்பும் இருக்கிறது. அந் நாடுகளின் ஏற்றுமதி வருமானங்கள் பற்றாக்குறை அளவிலிருந்தாலும்கூட, அவைகளை உள்நாட்டு முதலீடாக மாற்றுவதில் அவைகள் பெறும் இடையூறுகள்தான் அந்த இயல்பாகும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் ஏற்றுமதி வருமானங்களின் முதலீட்டு வாய்ப்புகளைக் கருத்தில் கொள்ளும்போது, அவ் வருமானத்தின் பருமனை மட்டுமில்லாமல், அதன் பகிர்வையும் கருத்தில் கொள்ள வேண்டும் என்று பேராசிரியர் டட்லிசீர்ஸ் (Prof. Dudly Seers) குறிப்பிட்டுக் காட்டுகிறார். மலேயாவில் ரப்பரும், தகரமும் முக்கியமான ஏற்றுமதிப் பண்டங்களாக விளங்குகின்றன. ரப்பரின் ஏற்றுமதி வருமானம் தனிப்பட்ட தொழில் முயல்வோர்களின் கைகளுக்குச் சென்றது. அதே நேரத்தில் தகரத்தின் ஏற்றுமதியினால் பெறப்பட்ட வருமானம் அரசிடமும், பெரும் கம்பெனிகளிடமும் சென்றது.[1] தவிரக் கட்டுப்பாடுகள் அதிகமாக இருந்தால் ஏற்றுமதி வருமானமானது தனியார் துறையில் மிக எளிதாக முதலீடு செய்யப்பட மாட்டாது. அயல்நாட்டு வணிகத்தின் மூலம் பெறப்படும் வருமானத்தை முதலீட்டிற்காகப் பயன்படுத்தும் அளவு அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைகளாலும் நிர்ணயிக்கப்படுகிறது. ஏற்றுமதியின் மூலம் அந்நியச் செலாவணி ஏராளமாகக் கிடைப்பதாக இருந்தாலும், ஏழ்மை நாடுகளில் உள்ள தொழில் முயல்வோர் பல இடையூறுகளை எதிர் நோக்க வேண்டியிருக்கிறது. அவர்களுக்குப் பழக்கமில்லாத மூலங்களின் வழியாகத்தான் விரும்பத்தக்க மூலதனச் சாதனங்களை அவர்கள் பெறவேண்டியிருக்கிறது. பெரும்பாலும் நடைமுறையில் இருப்பதைப் போன்று பல நாடுகளிலுமுள்ள பல நிறுவனங்களிலிருந்தும் அவர்கள் அவற்றைப் பெற வேண்டியிருக்கிறது. அதோடு எந்த விதமான பொறிநுட்ப உதவி கிடைக்கிறதோ அதைப் பயன்படுத்தியே அம் மூலதனச் சாதனங்களை அவர்கள் நிறுவ வேண்டியவராக இருக்கிறார்கள் குறிப்பிட்ட நோக்கங்களுக்காகப் பல அளவுகளிலான தொழிற்கூடங்களை முழு அளவில் அமைத்தும் உருவாக்கியும் தருபவர்கள்

[1] Seers, Dudley, 'An Approach to the Short Period Analysis of Primary Producing Economies,' *Oxford Economic Papers*, February 1859, p. 8.

பலர் தோன்றியுள்ளதால் அண்மையில் இத்தகைய இடையூறுகள் ஓரளவுக்கு எளிமைப்படுத்தப்பட்டிருக்கின்றன. பொதுவான நுகர்வுப் பண்டங்கள் பலவற்றில் ஏதாவதொன்றை உற்பத்தி செய்யத்தக்க வகையில் தொழிற் கூடங்களை ஆசிய நாடுகளிலும், தென்கிழக்காசிய நாடுகளிலும், இந்தியாவிலும் அமைத்துத் தரவும் விற்கவும் ஜப்பானிய நிறுவனங்கள் முன்வந்திருக்கின்றன.

(ஆ) இறக்குமதிகள் (Imports)

பொருளாதார வளர்ச்சி பொதுவாக அதிகமான இறக்குமதியை அவசியமாக்குகிறது. அதிகமான பண வருமானத்தினால் தோன்றத்தக்க முதலீட்டுத் தேவைகளின் காரணமாகவும் நுகர்வுத் தேவைகளின் காரணமாகவும் இது தெளிவாகக் காணப்படுகிறது. நாட்டின் அளவு, உள்நாட்டு மூலவளங்கள் கிடைத்தல், வருமானப் பகிர்வின் மாதிரி ஆகியவைகளைப் பொறுத்தே இறக்குமதிப் பண்டங்களின் அமைப்புகள் அமைகின்றன நாடொன்றில் உணவு உற்பத்தி பேரளவிற்கு அதிகரிக்க முடியாமல் இருக்கும்போது மொத்தக் கூலிப் பட்டியலில் உயர்வும் மக்கள் பெருக்கமும் உணவின் இறக்குமதியை அவசியமாக்குகின்றன. சமுதாயத்தில் உயர்நிலையில் இருப்பவர்களின் வருமானம் அதிகரிக்கும்பொழுது, அது நல்ல வகையிலான நுகர்வுப் பண்டங்களின் இறக்குமதியை அவசியமாக்குகிறது, அல்லது உள்நாட்டு மூலவளங்களை இவ் வகைப் பண்டங்களின் உற்பத்தியில் மாற்றுகிறது. இறுதியாக, தனிப்பட்ட தொழில் முயல்வோர்களின் ஆதாயத்தில் தோன்றும் அதிகரிப்பும், அரசாங்கத்தின் அதிகரித்த தொழில் முயல்வோர் நடவடிக்கைகளும் தொழில் மூலப் பொருள்களையும் மூலதனப் பண்டங்களையும் இறக்குமதி செய்வதை அவசியமாக்குகின்றன.

உலகத்திலுள்ள வளர்ச்சியடைந்துள்ள நாடுகளின் அயல் வணிக விகிதங்களின் நீண்ட காலப் போக்கைப் பற்றியதொரு ஆராய்ச்சி சைமன் குஸ்னெட் (Simon Kuznet) அவர்களால் மேற்கொள்ளப்பட்டது. தராதரமாகக் குறுகிய காலத்தில் சிறிய அளவிலான ஏற்றத்தாழ்வுகள் காணப்பட்டாலும்கூட, கிட்டத்தட்ட நூறு ஆண்டுகளுக்குப் பார்க்கும்போது இந்த விகிதம் கிட்டத்தட்ட நிலையானதாகவே காணப்பட்டதாக அந்த ஆராய்ச்சி குறிப்பிடுகிறது. அயல்நாட்டு வணிகத்தின் போக்குகளை நிருணயிக்கத்தக்க பல விதமான சிக்கல் மிகுந்த காரணிகள்தான் இவ் விகிதத்தின் இத்தகைய நிலைத்த தன்மைக்குக் காரணம் என்று குஸ்னெட் அவர்களால் குறிப்பிடப்படுகிறது. தொழில் நுண்ணியல் மாற்றங்கள், செய்தித் தொடர்பிலும் போக்குவரத்திலும்

முன்னேற்றங்கள், தொழில் அமைப்பில் மாற்றங்கள், சமுதாயப் பொருளாதாரக் காரணிகள் போன்றவைகளை இத்தகைய காரணி களில் சிலவாகக் குறிப்பிடலாம். வளர்ச்சியடைந்த நாடுகள் பலவற்றிலும் 19ஆம் நூற்றாண்டின் மையப் பகுதியிலிருந்து 20ஆம் நூற்றாண்டின் முதல் கால்பகுதி வரையிலும் இவ் விகிதம் உறுதி யாக அதிகரித்துச் செல்லும் போக்கைப் பெற்றிருக்கிறது என்பதே இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா ஆகிய நாடுகளில் இது மிகவும் முனைப் பாக இருக்கின்றது. ஜப்பானில் இந்த நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளிலிருந்து இரண்டாவது உலகப் பெரும் போரின் தொடக்கக் காலம் முடிய இத்தகைய அதிகரிப்பு மிகவும் குறிப்பிடத்தக்க அளவில் இருந்தது. இதற்கு மாறாக, இறக்குமதி ஏற்றுமதி விகிதங்களும் அயல்நாட்டு வணிக விகிதமும் மிகவும் குறைவான அளவிலிருக்கும் ஐக்கிய அமெரிக்க நாட்டில் இறக்கு மதி விகிதத்தில் மென்மேலுமான உறுதியான இறக்கம் காணப் பட்டது.[1] ஏறத்தாழ 1925ஆம் ஆண்டிலிருந்து இங்கிலாந்திலும் பிரான்ஸிலும், கனடாவிலும் இறக்குமதி விகிதங்கள் குறைந்து செல்லும் போக்கைக் காட்டுகின்றன. பேரளவிலான இயற்கை மூலவளங்களைக் கொண்டிருக்கும் ஐக்கிய அமெரிக்க நாடு சோவியத் யூனியன் போன்ற பெரிய நாடுகளைப் போல அல்லாமல் தொழில் உற்பத்திக்காகத் தராதரமாகக் குறைந்த அளவு முதன்மை மூலவளங்களைக் கொண்டிருக்கும் சிறிய நாடுகள் அவைகளின் தொழில் பெருக்கம் அதிகரிக்க அதிகரிக்க மென் மேலும் அதிகமான அளவில் இறக்குமதியைச் சார்ந்திருக்க வேண்டியிருக்கின்றன என்ற பொது அறிவுக்கு இது பொருத்த மானதாக இருக்கிறது. தொழில் உற்பத்தியில் நுகர்வுப் பண்டங்களை உற்பத்தி செய்வதிலிருந்து மூலதனப் பண்டங்களை உற்பத்தி செய்வதற்கான மாற்றம் ஏற்படும்போது குறைந்த அளவிலான இறக்குமதிப் பண்டங்கள்தான் தேவைப்படுகின்றன. இத்தகைய மாற்றங்கள் நிகழ்வதைத்தான் இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா போன்ற நாடுகளின் இறக்குமதி விகிதத்தில் குறைவும், அண்மை ஆண்டுகளில் ஜப்பானின் இறக்குமதி விகிதத்தில் குறைவும் பிரதிபலிக்கின்றன.

தராதரமாக மூலதனப் பற்றாக்குறை, அமித உழைப்பு என்ற அடிப்படையில் பார்க்கும்போது, குறைந்த வளர்ச்சியுடைய

[1] Export ratio is $\frac{\text{Commodity exports}}{\text{National Income } \textit{Plus} \text{ Imports}}$ and Import ratio is $\frac{\text{Commodity imports}}{\text{Nationl Income } \textit{Plus} \text{ Imports}}$ Simon Kuznets, *Six Lectnres on Economlc Growth* Free Press, Glencoe, Illinois, 1959, p. 96

நாடுகளில் மூலதனத்தின் விளைவுகள் விகிதாச்சார அடிப்படையில் அதிகமானதாக இருக்கும் போக்கைப் பெற்றிருக்கும் அளவுக் கேற்ப ஊக்கியின் மதிப்பு குறைவாக இருப்பதற்கான வாய்ப்பு களும் இருக்கின்றன; தவிர, வருமான அதிகரிப்போடு ஒப்பிடும் போது மூலதனப் பண்டத்தின் தேவைக்கான பங்குக்கும் குறை வானதாக இருக்கின்றன. ஆனால், இதற்கு மாறானதொரு உண்மை யும்குறிப்பிடப்படவேண்டும். இறக்குமதிசெய்யப்படும் முதலீட்டுப் பண்டங்களுக்கான தேவை வருமான நெகிழ்ச்சியற்றதாகவும் விலை நெகிழ்ச்சியற்றதாகவும் இருக்கிறது. ஆனால், எந்த நாடுகளிலிருந்து இவ் வகைப் பண்டங்கள் இறக்குமதி செய்யப்படுகின்றனவோ அந்த முன்னேற்றமடைந்த நாடுகளில் அப் பண்டங்களின் அளிப்பு மிகவும் நெகிழ்ச்சி உடையதாக இருக்கிறது.

குறைந்த நெகிழ்ச்சியுடைய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் அதிகமான இறக்குமதிகளுக்கு வகை செய்த வேறு இரு காரணிகளும் இருக்கின்றன. பொருளா தார வளர்ச்சியைத் தொடங்கிவைப்பதிலும் அமைத்துத் தருவதிலும் இந் நாடுகளின் அரசுகள் அதிகமான அளவிற்கு ஆர்வம் காட்டுகின்றன. இதன் காரணமாகப் பணவீக்க இயல் புடையவைகளாக உள்ள நிதியாக்க முறைகளைப் பெரும்பாலும் இந் நாடுகள் பயன்படுத்துகின்றன. இதன் விளைவாக, வருமானம் அதிகரிக்கிறது; பண வருமானம் மிக அதிகமான அளவுக்கு அதிகரிக்கிறது. இவ்வாறு தோற்றுவிக்கப்படும் பணவீக்க அழுத்தம் இந் நாடுகளில் அயல்நாட்டுச் செலுத்து நிலையில் மிகவும் பாதகமான விளைவுகளைப்பெற்றிருக்கிறது. உண்மை வருமானத்தில் தோன்றும் அதிகரிப்பு மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்து கிறது; அவர்களின் நுகரும் சக்தியை அதிகரிக்கிறது; அதிகமான முதலீட்டிற்கு வகை செய்கிறது; அதன் வழியாக நுகர்வுப் பண்டங்கள், முதலீட்டுப் பண்டங்கள் ஆகிய இருவகைப் பண்டங் களின் தேவையையும் அதிகரிக்கிறது. ஆனால், உண்மை வருமானத்தைக் காட்டிலும் மிக வேகமாகப் பண வருமானம் அதிகரித்தால் (இது பண வீக்கத்தின் ஒரு இயல்பாகும்) அமிதத் தேவையானது உள்நாட்டு மூலவளங்களின்மீதும் அயல் நாட்டு இருப்பின்மீதும் துன்பங்களைத் தோற்றுவிக்கிறது. பரிமாற்ற விகிதம் மாறுமலிக்குமானால், முதலாவதாக விலைக் காரணிகளால் கவரப்பட்டு இறக்குமதிகள் அதிகரிக்கும் போக்கு தோன்றுகிறது. தவிர, பணவீக்கம் என்பது வருமானத்தைச்செல்வ மிக்க பிரிவினர்களிடம் மாற்றுவதையும் உட்கொண்டிருக்கிறது. இஃது ஆடம்பரப் பண்டங்களுக்கான தேவையில் அதிகரிப்பைத் தோற்றுவித்துவிடலாம். அத்தகைய பண்டங்களின் இறக்கு

மதியின்மீது தடைகள் விதிக்கப்பட்டால் இறக்குமதி செய்யப் படத்தக்க ஆடம்பரப் பண்டங்களுக்கான உள்நாட்டுப் பதிலி களின்மீது அமிதத் தேவை இருப்பது உணரப்படலாம். அதன் விளைவாக ஏற்றுமதிப் பண்டங்களின் உற்பத்திக்காகக் கிடைக்கத் தக்க மூலவளங்கள் மிகச் சிறிய அளவினவாகப் போய்விடலாம். அல்லது மிகவும் முக்கியமானவைகளான நுகர்வுப் பண்டங்களின் உற்பத்திக்குத் தேவையான மூலவளங்களின் அளவில் சரிவை இது தோற்றுவிக்குமானால், இத்தகைய பற்றாக்குறை வழக்கமான கூலி உற்பத்திச் செலவுக் கோட்டோடு பணவீக்க அழுத்தத்தை மிகுதிப் படுத்திவிடலாம். சுருக்கமாகக் கூறினால், அயல்நாட்டு இருப்பின் மீதான அழுத்தம் உள்நாட்டுச் சமநிலைமை இன்மையில் பிரதி பலிக்கிறது. உள்நாட்டு அளிப்பு குறிப்பிட்ட அளவினதாக இருக்கும்போது உள்நாட்டில் பணவீக்கம் என்பதில் அமிதத் தேவை தெளிவாகத் தென்படுகிறது அல்லது வெளிநாடுகளி லிருந்து வரத்தக்க பண்டங்களுக்கான தேவை என்பதில் காணப் படுகிறது அல்லது இரண்டிலுமே தென்படுகிறது. பின்னர்க் குறிப்பிட்டதன் விளைவாக அயல்நாட்டுச் செலுத்துநிலைச் சிரமங் களும் அயல்நாட்டுச் சமன்பாட்டு நிலையில் மோசமாதல் என்பதும் தோன்றுகின்றன.[1]

இரண்டாவதாக, முன்னேற்றத்திற்கான பணவீக்க முறை யைத் தவிர மக்கள் பெருக்கத்தின் காரணமாகத் தோன்றும் அதி கரித்த தேவையின் மூலமாகவும் வெளிநாட்டுச் சமன்பாடுகளின் மீதான அழுத்தம் தோற்றுவிக்கப்படுகிறது. பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மக்கள் பெருக்க விகிதம் அதிகமான அளவில் இருக்கின்றது. மூலதனம் பற்றாக்குறை அளவில் இருப்பதால் மக்கள் பெருக்கமானது வேலையின்மையை அதிகரிக்கிறது; உற்பத்தித்திறனைக் குறைக்கிறது; தலா வருமானத்தின் அளவைக் குறைந்த அளவிலேயே நிறுத்துகிறது; வருமான நிலையை அதிகரிப்பதற்கு மிகவும் அசியமான சேமிப்பு விடுமுதலை விரிவாக்குவதைத் தடை செய்கிறது. இன்னொரு புறத்தில் அதிகப்படியான உணவு அளிப்பு அவசியமாகிறது. உள்நாட்டு அளிப்பு நெகிழ்ச்சியற்றதாக இருந்தால் மென்மேலும் அதிகப்படியான அளவிலான இறக்குமதிகள் அவசியமாகிறது. இஃது அயல்நாட்டுச் செலுத்துநிலையின்மீது பல விளைவுகளைத்

[1] The effect of excess demand caused by inflation on external trade may be made clear by the following identity: $Y = C + I + (X - M)$; $Y = S + C$; $S = I + (X - M)$; $S - I = X - M$. If $I > S$ then $M > X$; Y is national income, C consumption, investment, X exports and M imports.

தோற்றுவிக்கிறது. இந்தியாவின் அண்மைக்காலப் போக்குகளால் இது நல்ல முறையில் விளக்கப்படுகிறது.

(இ) வணிக விலைமுறைத் திட்டம் (Terms of Trade)

இறக்குமதிகளுக்கெதிராக ஏற்றுமதிப் பருமனினால் மட்டுமல்லாமல் இறக்குமதிப் பண்டங்களின் விலைகளோடு ஒப்பிடத்தக்கதாக அயல்நாட்டுச் சந்தைகளில் விற்பனையாகத்தக்க ஏற்றுமதிப் பண்டங்களின் மதிப்பினாலும் ஒரு நாட்டின் ஏற்றுமதி வருமானங்களின் அளவு நிருணயிக்கப்படுகிறது. இவ்வாறாக, ஒரு அயல்நாடு நாட்டு வணிகத்தினால் பெறத்தக்க ஆதாயத்தை நிர்ணயிப்பதில் வணிக விலைமுறைத் திட்டங்கள் மிகவும் இன்றியமையாத பங்கு வகிக்கின்றன. வணிக விலைமுறைத் திட்டங்கள் சாதகமானவைகளாக இல்லாமலிருந்தால் இறக்குமதிகளைக் காட்டிலும் ஏற்றுமதிகளின் அளவு மிக வேகமாக அதிகரித்துக்கொண்டு சென்றாலும்கூட ஆதாயமானது மிகவும் நிராகரிக்கத்தக்க அளவிலிருக்கும் அல்லது எதிர்மறையிலிருக்கும் என்பதை உணரமுடியும். இதற்கு மாறாக, ஏற்றுமதிகளின் அளவுகளின் பருமன் எந்த அளவுக்குக் குறைகிறதோ அதை ஈடுசெய்து அதற்கும் அதிகமான அளவில் இருக்கும்வண்ணம் வெளிநாட்டுச் சந்தைகளில் ஏற்றுமதிகளின் விலைகளில் அதிகரிப்பு இருக்குமானால் ஏற்றுமதிகள் குறைந்து செல்லும்போதும்கூடப் பேரளவிலான ஆதாயத்தைப் பெறுவதென்பது முடியத்தக்கதாகும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பாலான நாடுகள் பெரும்பாலும் பொறிசெய் பண்டங்களை இறக்குமதி செய்யும் நாடுகளாகவும் மூலப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் நாடுகளாகவும் இருக்கின்றன. இவ்வாறிருப்பதனால் இத்தகைய மூலத்திலிருந்து பெறப்படும் நன்மைகள் தொழில்களுக்குத் தேவையான மூலப் பொருள்களின் விலைகளோடும் உணவுப் பண்டங்களின் விலைகளோடும் ஒப்பிடத்தக்கதாகப் பொறிசெய் பண்டங்களின் உலக விலைகளில் தராதரமான ஏற்றத்தாழ்வுகளால் நிருணயம் செய்யப்படுகின்றன. வணிக விலைமுறைத் திட்டத்தின் போக்கு முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகளுக்குச் சாதகமானதாக இருக்கிறதா அல்லது தொழில் பெருக்கமடைந்துள்ள நாடுகளுக்குச் சாதகமாக அமைந்திருக்கிறதா என்பதில் கருத்தொற்றுமை காணப்படவில்லை. பொருளாதார முன்னேற்றம் தோன்றும்போது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் வணிக விலைமுறைத் திட்டம் முன்னேறுகிறது என்றும், வளர்ச்சியடைந்த நாடுகளின் வணிக விலைமுறைத் திட்டம் பாதகமாக மாறுகிறது என்றும் குறிப்பிடுவதான ஒரு கருத்து பொறிசெய் பண்டங்களின் உற்பத்தி அளவு மிக எளிதாக அதிகரிக்கப்படலாம் என்றும்,

அவைகளின் உற்பத்திச் செலவுகள் குறைக்கப்படலாம் என்றும் இருக்கும்போது முதன்மைப் பண்டங்களின் அளிப்பு மிகவும் குறைந்த அளவிலான நெகிழ்ச்சித் தன்மையைப் பெற்றிருக்கிறது என்றும், அவைகளின் உற்பத்தி அளவை அதிகரிக்க ஏதாவது முயற்சிகள் மேற்கொள்ளப்படும்போது அவைகளின் விலைகள் உயருகின்றன என்றும் இக் கற்பிதக் கோட்பாட்டை விளக்கும் போது குறிப்பிடப்படுகிறது. முன்னேற்றம் தோன்றும்போது வளர்ச்சியடைந்த நாடுகள், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஆகிய இருவகை நாடுகளுக்கிடையேயும் உள்ளகாரணிப் பங்கீட்டில் உள்ள வேறுபாடுகள் குறைந்து செல்லும் போக்கைப் பெறுகின்றன என்ற உண்மையாலும் பொறிசெய் பண்டங்களோடு ஒப்பிடும்போது முதன்மைப் பண்டங்களின் விலைகளில் அதிகரிக்கும் போக்கு தென்படுகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தோற்றுவிக்கப்படும் மூலதனத் திரட்சியானது அதன் உற்பத்திப் பண்டங்களின் மூலதனப் பகுதியை அதிகரிக்கும். அதோடு இறக்குமதிகளுக்குப் பதிலாக இருக்கத்தக்க ஒரு சில பொறிசெய் பண்டங்களை உற்பத்தி செற்வதற்கும் வகை செய்கின்றது. அதிகரித்த உள்நாட்டு அளிப்பின் உத்திரவாத அளவுக்கு இத்தகைய பண்டங்களின் விலைகள் குறையாவிட்டால் இத்தகைய பண்டங்கள் இறக்குமதி செய்யப்படமாட்டா என்பதையே இது காட்டுகிறது. இரண்டாவதாக, தொழிற்பெருக்கம் தோன்றும் போது பொருளாதாரத்தின் பின்தங்கிய துறைகளிலிருக்கும் குறைந்த வேலை பார்க்கும் காரணிகளின் அளவு குறைக்கப்படும். அதன் காரணமாக ஏற்றுமதித் தொழில்கள் உள்படப் பலதரப்பட்ட தொழில்களிலும் பணி புரியும் உழைப்பின் உற்பத்திச் செலவு அதிகரித்து அதன் வாயிலாக இந்தப் பண்டங்களின் விலைகள் அதிகரித்துவிடும். இதை வேறொரு விதமாகவும் குறிப்பிடலாம். குறைந்த வேலையின் பருமன் குறையும்போது, முன்னேற்றம் தொடங்கப்பெறுவதற்கு முன்னால் இருந்ததைக் காட்டிலும் விலைகளின் அதிகரிப்பைப் பொறுத்தமட்டிலும் ஏற்றுமதிகள் குறைந்த நெகிழ்ச்சி உடையவைகளாக மாறுகின்றன.[1]

குறிப்பிட்டதொரு காலத்தில் ஏதாவதொரு நாட்டிற்குச் சாதகமானதாக அல்லது பாதகமானதாக விலைமுறைத் திட்டம் செல்லுவதற்கான காரணிகளைச் சுட்டிக் காட்டுவது உண்மையிலேயே மிகவும் சிரமமானதாகும். பெரும்பாலும் ஒரு சில இன்றியமையாத பண்டங்களின் விலைகளின் அதிகரிப்பால் அல்லது

[1] Wolf, Charles (Jr.), *Foreign Aid: Theory and Practice in Southern Asia*, Princeton, 1960, p. 273.

குறைவால் வணிக விலைமுறைத் திட்டங்கள் பாதிக்கப்படுகின்றன. இத்தகைய பண்டங்கள்பேரளவில் பன்னாட்டு வணிகத்தில் புகும் என்ற நிலையிருந்தால் வணிக விலைமுறைத் திட்டத்தின்மீதான அவைகளின் விளைவுகள் மிகவும் குறிப்பிடத்தக்க அளவினவாக இருக்கும். ஆனால், அவைகளின் விலை உயர்வு பல்வேறு விதமான காரணிகளால் தோன்றியிருக்கலாம். அத்தகைய பல்வேறு காரணிகளின் தராதரமான இன்றியமையாத தன்மையையும் துல்லியமாக உறுதிப்படுத்த இயலாது. இவ்வாறாக வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகள். இறக்குமதிப் பண்டங்கள் ஏற்றுமதிப் பண்டங்கள் ஆகிய இருவகைப் பண்டங்களின் குறுகிய கால அளிப்பு நெகிழ்ச்சிகள் தேவை நெகிழ்ச்சிகள் ஆகியவைகள், அறுவடைக் கால ஏற்றத்தாழ்வுகள், பெரிய அளவிலான தொழிலாளர் தகராறுகள், ஏறத்தாழத் திடீரெனத் தோன்றத்தக்க விளைவுகள் ஆகிய பல்வேறு இன்றியமையாத காரணிகளையும் இங்குக் கருத்தில் கொள்ள வேண்டும்[1] இருப்பினும் முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகளின் நோக்கிலிருந்து வணிக விலைமுறைத் திட்டத்தைப் பற்றிய ஒரு சில பொதுவான கருத்துகளைக் குறிப்பிடுவது இயலக்கூடியதே.

எல்லாவிதமான சிறிய காரணிகளையும் உள்ளடக்கியதாக உள்ள பெரும் காரணியாக இறக்குமதிக்கான தேவையின் இயல்பையும் ஏற்றுமதி அளிப்பிற்கான இயல்பையும் குறிப்பிடலாம். நடொன்றின் இறக்குமதிக்கான தேவை நெகிழ்ச்சி அதிகமானதாகவும், அதன் ஏற்றுமதிக்கான தேவை நெகிழ்ச்சி குறைவானதாகவும் இருக்குமானால், அந்த நாட்டிற்குச் சாதகமானதாக வணிக விலைமுறைத் திட்டம் மாறுவதற்கான வாய்ப்புகளும் அதிக அளவில் இருக்கின்றன. ஏற்றுமதியின் அளிப்பு தராதரமாக நெகிழ்ச்சியற்றதாக இருந்தால், அதிகமான அயல்நாட்டுத் தேவை இருக்கும்போது, உலக விலைகள் அதிகரிக்கும். ஆனால் அயல்நாட்டுத் தேவை நிலையானதாக அல்லது குறைந்து செல்லத்தக்கதாக இருந்தால். அளிப்பைக் குறைப்பதில் உள்ள சிரமம் விலைகளைக் குறைத்துவிடும். தொழில் பெருக்கமானது மூலப் பொருள்களின் இறக்குமதியை அவசியமாக்குகின்ற காரணத்தால், வேளாண்மை நாடுகளின் ஏற்றுமதிகளுக்குச் சாதகமானதாக விலைகளில் மாற்றம் இருப்பதற்கானவாய்ப்பு இருக்கிறது. ஆனால், பின்னர்க் குறிப்பிட்ட நாடுகளின் வருமானங்களில் தோன்றும் அதிகரிப்பு பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் அளவை அதிகரிக்கச் செய்யும். இறுதியாக இருவகை நாடுகளின் தேவை,

1 Rostow, W. W., *Process of Economic Growth*, Oxford, London 1953, pp. 202-08.

அளிப்பு தராதரமான நெகிழ்ச்சிகளைச் சார்ந்ததாக வணிக விலை முறைத் திட்டத்தின் விளைவு இருக்கும்.[1] இதற்கு முன்னர்க் குறிப்பிட்டபடி, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வளர்ச்சியடைந்த நாடுகளின் ஏற்றுமதிப் பண்டங்களின் தேவை நெகிழ்ச்சியைக் காட்டிலும் வளர்ச்சியடைந்த நாடுகளில் குறைந்த வளர்ச்சியடைந்த நாடுகளின் ஏற்றுமதிப் பண்டங்களுக்கான தேவை நெகிழ்ச்சி அதிகமான அளவில் இருக்கிறது. இந்தக் காரணத்தினுல் அயல் நாட்டு வணிகத்தில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பேர சக்தி மிகவும் பலவீனமான போக்கைப் பெற்றிருக்கிறது. பொறிசெய் பண்டங்களின் அடிப்படையில் வேளாண்மைப் பண்டங்களின் விலைகளில் பல ஆண்டுகளாகக் குறைந்து செல்லும் போக்கு இருந்திருக்கிறது. இது ஐக்கிய நாடுகளின் ஆராய்ச்சியால் தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. 1930ஐச் சேர்ந்த பொருளாதார மந்தக் காலத்தின் இறுதி நிலைகளில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஏற்றுமதி செய்யும் குறிப்பிட்டதோர் அளவினுல் பெறப்படும் வருமானத்தைக் கொண்டு, 19ஆம் நூற்றுண்டின் இறுதிக் காலத்தில் அவைகள் இறக்குமதி செய்த பொறிசெய் பண்டங்களின் மதிப்பில் 60% அளவுக்கே பணம் செலுத்த முடியும் என்றிருந்தது என்று அந்த ஆராய்ச்சி தெளிவாகக் காட்டியது.[2] பாதியளவு தொழில்மயமான நாடுகளிலும் முன்னேற்றமடைந்து வரும் நாடுகளிலும் அதிகமான அளவிலான தேவையைப் பெற்றிருக்கும் மூலதனப் பண்டங்களை ஏற்றுமதி செய்யும் வளர்ச்சி பெற்ற நாடுகளில் உள்ள உயர்ந்த வேலைநிலையின் காரணமாகவும் முழுச் சக்தியும் பயன்படுத்தப்படுவதன் காரணமாகவும் இத்தகைய பண்டங்களுக்கான அளிப்பு தராதரமாக நெகிழ்ச்சியற்றதாக இருக்கிறது இப் பண்டங்களை முதலீட்டிற்காக விரும்பும் நாடுகளால் அவைகளைப் பயன்படுத்துவதைத் தடை செய்யத்தக்க அளவிலான விலைகள் இப் பண்டங்களுக்குச் செலுத்தப்படுவதை இது விளக்குகிறது.

குறிப்பிட்டதொரு நேரத்தில் வணிக விலைமுறைத் திட்டத்தின் மீது செயல்படத்தக்க காரணிகள் எவைகளாக இருந்தாலும் நாடுகளின் பொருளாதாரத்தின்மீதும், அயல்நாட்டுச் செலுத்து நிலைகளின்மீதும் அத்தகைய மாற்றங்களின் விளைவுகள் மிகவும்

[1] See for a detailed analysis of this point, Johnson, Harry, *International Trade and Economic Growth*, Allen and Unwin, London, 1958, pp. 65-93.

[2] *Relative Prices of Exports and Imports of the Underdeveloped Countries*, U. N. 1949, p. 7.

சிறப்பானவைகளாகும். குறிப்பாக இது முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகளைப் பொறுத்தமட்டிலும் மிகவும் முக்கியமானதாகும் ஏனென்றால், இந் நாடுகளில் நாட்டு விளைவுக்கு அதிகமான அயல்நாட்டு வணிக விகிதம் இருக்கின்றது. எனவே, வணிக விலைமுறைத் திட்டத்தில் தோன்றும் மிகச் சிறிய தொரு மாற்றமும் உள்நாட்டுப் பொருளாதாரத்தில் மிகப் பெரிய அளவிலான விளைவைப் பெற்றிருக்கும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் வணிக விலைமுறைத் திட்டங்களில் தோன்றும் 10% அளவு மாற்றம் அவைகளின் இறக்குமதி செய்யும் ஆற்றலை ஆண்டொன்றுக்கு 1,00 மில்லியன் டாலர் என்ற அளவுக்குப் பெரிய அளவில் மாற்றிவிடுமெனக் கணக்கிடப்பட்டுள்ளது. 1946ஆம் ஆண்டிலிருந்து 1952ஆம் ஆண்டு முடிய உள்ள காலத்தில் இலத்தீன் அமெரிக்க நாட்டிற்கான வணிக விலைமுறைத் திட்டத்தினால் தோற்றுவிக்கப்பட்ட முன்னேற்றமானது அந்த நிலப் பகுதிக்கு 11,000 மில்லியன் டாலர் தொகை கிடைக்குமாறு செய்தது. அதாவது, அந்த ஏழு ஆண்டுகளுக்குமான மொத்தக் காலத்திற்கு அந்த நிலப்பகுதியின் மொத்த விளைவில் ஏறத்தாழ 4·3% அளவு கிடைக்குமாறு செய்தது என்று இலத்தீன் அமெரிக்கா விற்கான பொருளாதாரக் குழுவின் செயலகம் (The Secretariat of the Economic Commission for Latin America) மதிப்பிட்டிருக்கிறது.[1]

## குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் ஏற்றுமதி வணிகத்தின் அண்மைக்காலப் போக்குகள்

(Recent Trands in External Trade of Underdeveloped Countries)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் ஏற்றுமதி, இறக்குமதி வணிக விலைமுறைத் திட்டம் ஆகியவைகளின் அண்மைக்காலப் போக்குகள் இந் நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கான வாய்ப்புகளிலும், பொருளாதார நிலைகளிலும் இக் காரணிகளின் இன்றியமையாத தன்மையை வெளிப்படுத்துகின்றன. பொது வாகக் குறிப்பிட வேண்டும் என்றால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் நான்கு இன்றியமையாத இயல்புகளை வேறுபடுத்திக் காட்ட முடியும். முதலாவதாக, தொழிற் பெருக்கமுடைய நாடு களிலிருந்து அவைகள் இறக்குமதி செய்த அளவு பேரளவில் அதிகரித்துவிட்டது. இரண்டாவதாக, வளர்ச்சியடைந்த நாடு

[1] Quoted in Myrdal, G., *International Economy*, Routledge and Kegan Paul, London 1956, p. 234

களுக்கு இந் நாடுகள் ஏற்றுமதி செய்தவற்றின் அளவு தராதரமாகக் குறைந்துவிட்டது. மூன்ருவதாக, ஏற்றுமதி அங்காடிகளில் உள்ள உறுதியின்மையால் இந்த நாடுகள் மிகவும் துன்பப்பட்டிருக்கின்றன. இறுதியாக, பாதகமான விலைப்போக்குகளால் அவைகளின் அயல் நாட்டுச் செலுத்துநிலைத் துயரங்கள் அதிகரிக்கப் பட்டுள்ளன.

(அ) வளர்ச்சியடைந்த நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் அளவில் அதிகரிப்பு (Increase in Imports from Developed Countries)

வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதார முன்னேற்றமானது வளர்ச்சியடைந்த நாடுகளிலிருந்து மென்மேலும் அதிகமான அளவிலான இறக்குமதிகளை அவசியமாக்கியிருக்கிறது. 1938, 1957 ஆகிய இரு ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் உலக வணிகம் 21,400 மில்லியன் டாலரிலிருந்து 97,500 மில்லியன் டாலராக அதிகரித்து. அதே காலத்தில் தொழில் மயமாகாத நாடுகளுக்குள் இறக்குமதி செய்யப்பட்ட அளவு 6,600 மில்லியன் டாலரிலிருந்து 34,300 மில்லியன் டாலருக்கு அதிகரித்தது. இவ்வாருக, இவ் விரு காலத்திற்கும் இடையே உலக வணிகமானது $4\frac{1}{2}$ மடங்காக அதிகரித்தது, ஆனுல், தொழில் மயமாகாத நாடுகளுக்குள் இறக்குமதி செய்யப்பட்ட அளவு 5 மடங்கிற்கும் அதிகமானதாக அதிகரித்தது. இறக்குமதியில் தோன்றிய இத்தகைய அதிகரிப்புக்கு மிக முக்கியமான காரணமாக மூலதனப் பண்டங்கள் தான் அமைந்திருந்தன. போருக்கு முந்திய ஆண்டிலிருந்த நிலைகளோடு ஒப்பிடுகையில் மொத்த இறக்குமதியில் மூலதனப் பணடங்களின் இறக்குமதி அளவு 19.7%-லிருந்து 1954- 5ஆம் ஆண்டில் 27.8% அளவுக்கு அதிகரித்தது. ஆனுல், இக் காலங்களுக்கிடையில் மூலப் பொருள்களின் இறக்குமதி 29 0%–லிருந்து 32·7% அளவுக்குத்தான் அதிகரித்தது. ஓரளவுக்குப் பொறி செய் பண்டங்களாக இருக்கும் பண்டங்களின் இறக்குமதி அளவு 26·4%–லிருந்து 26·1% என்று ஏறத்தாழ ஒரே அளவாக இருந்தது. ஆனுல். நுகர்வோர் பண்டங்களின் இறக்குமதி பேரளவில் 24·9%–லிருந்து 13·4% அளவாகக் குறைந்துவிட்டது. மொத்த இறக்குமதி அளவு குறைந்துவிட்ட நாடுகள், மொத்த இறக்குமதி அளவு அதிகரித்துவிட்டநாடுகள் ஆகிய இருவகை நாடுகளிலுமே மூலதனப் பண்டங்களின் இறக்குமதியின் அளவு அதிகரித்தது. இரண்டாவது உலகப்போர் முடிவடைந்ததிலிருந்து முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகளில் பேரளவில் முதலீட்டு நடவடிக்கைகள் விரிவு

படுத்தப்பட்டதோடு, இறக்குமதியிலான இத்தகைய மாற்றம் மிகவும் தொடர்புபடுத்தப்பட்டிருக்கிறது. இத்தகைய நாடுகள் பலவற்றிலும் இறக்குமதிப் பண்டங்களின் இறக்குமதிக்கு அரசாங்கங்களே மிகவும் சிறப்பிடம் தந்தன.

இறக்குமதிகளில் இன்னொரு குறிப்பிடத்தக்க மாற்றமும் தோன்றியிருக்கிறது. நிகர உணவு இறக்குமதி செய்யும் நாடுகளில் உணவின் இறக்குமதிக்கான தராதரமான பங்கு குறைந்து விட்டது. போருக்கு முந்திய ஆண்டுகளில் மலேயா, சிலோன் ஆகிய நாடுகளின் மொத்த இறக்குமதியில் உணவின் பங்கு முறையே 47% 57% ஆக இருந்தது. 1948–49, 1954-55 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் இவ் விரு நாடுகளின் மொத்த இறக்குமதியில் உணவின் இறக்குமதி மலேயாவில் 5% ஆகவும், சிலோனில் 30% ஆகவும், இருந்தது. உண்மையான அடிப் படையில் பார்க்கும்போது, எகிப்து, பாக்கிஸ்தான், பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளில் உணவு இறக்குமதி குறைந்துவிட்டது. தொழில் வளர்ச்சியில் ஓரளவுக்கு முன்னேற்றத்தைப் பெற்ற நாடுகளில் பொறிசெய் பண்டங்களின் இறக்குமதியில் முனைப்பான இறக்கம் காணப்பட்டது. இத்தகைய போக்கு இலத்தீன் அமெரிக்க நாடுகளில் குறிப்பாகக் காணப்பட்டது. ஆனால், பொறிசெய் பண்டங்களின் உற்பத்திப் பெருக்கமானது தொழிற் பண்டங்களின் இறக்குமதித் தேவையை அதிகரித்தது.

(ஆ) வளர்ச்சியடைந்த நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட அளவில் சரிவு (Decrease in Exports to Developed Counties)

தொழில் வளர்ச்சி பெறுத நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தோடு இணைந்து முன்னேற்றமடைந்த நாடுகளின் ஏற்றுமதித் தேவை அதிகரித்தது. ஆனால், வளர்ச்சியடைந்த நாடுகளின் நாட்டு வருமான அதிகரிப்பு தோன்றியபோது அதனுடன் சேர்ந்து (குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் ஏற்றுமதிப் பண்டங்களுக்கான) முதன்மைப் பண்டங்களுக்கான தேவை அதிகரிக்கவில்லை. 1955–57 ஆகிய மூன்று ஆண்டுகளில் (ரஷ்யா, கிழக்கு ஐரோப்பா, சீன ஆகிய நாடுகள் நீங்கலாக உள்ள) தொழில்மயம் ஆகாத நாடுகளின் ஏற்றுமதி 28,220 மில்லியன் டாலரிலிருந்து 30,880 மில்லியன் டாலராக அதிகரித்தது; அதாவது, 9% அளவுக்கு அதிகரித்தது. ஆனால், அதே காலத்தில் தொழில்மயமான நாடுகளின் ஏற்றுமதி அளவு 53,440 மில்லியன் டாலரிலிருந்து 66,590 மில்லியன் டாலருக்கு அதாவது 25% அளவுக்கு அதிகரித்தது.[1] எரிபொருள்கள் தவிர, குறிப்பாகப்

[1] *Trends in International Trade*, GATT, Geneva, 1958, p. 20.

பெட்ரோலியம் தவிர, மற்ற வகையான தொழில்-மூலப் பொருள்களுக்கான உலக அங்காடித் தேவை தேக்கமடைந்திருந்தது, அல்லது தடைப்பட்டுத் தடைப்பட்டு அதிகரித்தது. 1928-ல் மொத்த ஏற்றுமதி மதிப்பில் 5% அளவாக இருந்த பெட்ரோலியம், பெட்ரோலியப் பண்டங்கள் ஆகியவைகளின் தராதரமான சிறப்புத் தன்மை 1937-38-ல் 10%-க்கும் 1955-ல் 20-%க்கும் அதிகரித்தது. இதற்கு மாறாக இயற்கை இழைகள் போன்ற ஒரு சில வேளாண்மைப் பண்டங்களின் தேவை மிகமிகக் குறைவான அளவிலிருந்தது. தொழில் மயமான நாடுகளில் தோற்றுவிக்கப்பட்ட தொழில் நுண்ணியல் முன்னேற்றமே இதற்கான பெரும் காரணமாகும். இத்தகைய தொழில் நுண்ணியல் முன்னேற்றங்கள் இறக்குமதி செய்யப்பட்ட மூலப் பொருள்களின் தொழில்களைக் குறைந்த அளவிலேயே சார்ந்திருக்கச் செய்தன. இது தவிர, ஒரு சில வளர்ச்சி பெற்ற நாடுகள் வேளாண்மைப் பண்டங்களைப் பொறுத்த மட்டிலும் முடிந்த அளவு தன்னிறைவு நிலையைப் பெறுவதற்கான முயற்சிகளை மேற்கொண்டு அவற்றில் வெற்றியையும் கண்டன.

மரபு வழியாக ஏற்றுமதி செய்துகொண்டிருந்த பண்டங்களில் குறைவு தோன்றியதற்கு அயல் நாடுகளில் குறைந்துவிட்ட தேவை மட்டுமல்லாமல், அவைகளின் அளிப்பு நிலைகளும் காரணமாக இருந்தன. அயல்நாட்டுச் சந்தைகளின் தேவைகளுக்கேற்றவண்ணம் ஏற்றுமதிப் பண்டங்களைப் பலதரப்படுத்தியதன் மூலமாகவும், விளைவை அதிகரித்ததின் மூலமாகவும் மாறிவரும் தேவைகளுக்கேற்ப ஏற்றுமதி அமைப்பில் ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் மிக விரைவாக இசைவிப்புகளைத் தோற்றுவித்துக்கொண்டன. 1950, 1955 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் உலகச் சந்தையில் இந்தியாவின் தேயிலை ஏற்றுமதியின் பங்கு 46%-லிருந்து 48%-க்குக் குறைந்தது. ஆனால், சிலோன் அதன் தேயிலை ஏற்றுமதி அளவை ஏறத்தாழ ஒரே நிலையிலேயே நிலைநிறுத்திக்கொண்டது. இதே காலத்தில் எகிப்தின் பருத்தி ஏற்றுமதியின் பங்கு 15%-லிருந்து 12%-க்குக் குறைந்தது. ஆனால், மெக்ஸிகோவும், பிரேசிலும் அவைகளின் பருத்தி ஏற்றுமதியை முறையே 5%-லிருந்து 10%-க்கும், 7%-லிருந்து 10%-க்கும் அதிகரித்துக்கொண்டன. இது தவிர, ஏற்றுமதிப் பண்டங்களின் உள்நாட்டு நுகர்வின் அளவு அதிகரித்ததன் காரணமாகவும் பல நாடுகளில் ஏற்றுமதியின் அளவு குறைந்துவிட்டது. பணவீக்க நிலைகள், அதிகரித்த உற்பத்திச் செலவு, அரசாங்கத்தின் ஒழுங்கு படுத்தும் முறைகள், பணத்தைப் பொன்னாக மாற்ற

முடியாமை, மற்றும் இவை போன்ற வேறு சில காரணிகளும் ஏற்றுமதிப் பெருக்கத்திற்குத் தடையாக அமைந்திருந்தன.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் வளர்ச்சி விகிதத்தில் உள்ள வேறுபாடுகளுக்கு, இந் நாடுகளின் ஏற்றுமதியின் போக்கில் உள்ள வேறுபாடு ஓரளவுக்குக் காரணமாக இருக்கிறது. ஒரு மொத்தமாகப் பார்த்தால், ஏற்றுமதியின் அளவு பேரளவிற்கு அதிகரித்திருந்த நாடுகளில் மிக உயர்ந்த உள்நாட்டுப் பொருளாதார வளர்ச்சி விகிதம் காணப்பட்டது. அதைப்போன்று ஏற்றுமதியில் மிகவும் குறைவைப் பெற்றுவிட்ட நாடுகளில் குறைவான உள்நாட்டுப் பொருளாதார வளர்ச்சி விகிதம் காணப்பட்டது. தவிர, எந்தெந்த நாடுகள் உள்நாட்டுப் பெருக்கத்தோடு ஏற்றுமதியின் அளவையும் அதிகரித்தனவோ, அந்த நாடுகள் எல்லாம் அவைகளின் அயல்நாட்டுச் செலுத்து நிலையில் மிகக் குறைவான அளவு சிரமங்களையே அனுபவித்தன என்றும் தெரியவருகிறது. இதற்கு மாறாக அர்ஜென்டைனா, இந்தியா, பாக்கிஸ்தான் போன்ற நாடுகளில் ஏற்றுமதியின் அளவு பேரளவிற்கு அதிகரிக்கவில்லை. அதன் காரணமாக இந் நாடுகளின் இறக்குமதிச் சக்தியும் அதிகரிக்கவில்லை. இத்தகைய நாடுகளெல்லாம் அவைகளின் அயல்நாட்டு இருப்புகளில் தொடர்ச்சியான சிரமங்களை அனுபவித்திருக்கின்றன. பிரேசில், கொலம்பியா, மெக்ஸிகோ, பெரு வெனிசுலா ஆகிய நாடுகளில் காணப்பட்ட மிக அதிகமான (ஆண்டு ஒன்றுக்கு 5 முதல் 7 விழுக்காடு என்று அதிகமான) அளவில் காணப்பட்ட பொருளாதார வளர்ச்சிக்கு இந்த நாடுகளின் ஏற்றுமதியில் காணப்பட்ட சாதகமான போக்குகளே முக்கியமான காரணங்களாக அமைந்திருந்தன. ஆனால், கியூபா போன்ற நாடுகளில் காணப்பட்ட (ஆண்டொன்றுக்கு ஏறத்தாழ 2·5 விழுக்காடு அல்லது அதற்குக் குறைவான அளவு என்று) குறைவான உண்மை உற்பத்தியின் மெதுவான அதிகரிப்புக்கு ஏற்றுமதியில் தேக்கம் அல்லது ஏற்றுமதியின் குறைவே முக்கியமான காரணமாகக் குறிப்பிடப்படுகிறது.

உள்நாட்டுப் பொருளாதார வளர்ச்சி எந்த அளவுக்கு ஏற்றுமதியைப் பாதிக்கின்றதோ அந்த அளவுக்கு ஏற்றுமதிப் போக்கும் உள்நாட்டுப் பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கிறது என்றும் குறிப்பிடப்பட வேண்டும். குறிப்பிட்டதொரு காலத்தில் வெளிக் காரணிகள் உள்நாட்டுக் காரணிகள் என்று இருவகை காரணிகளும் ஒரு நாட்டின் ஏற்றுமதியின் பருமனை நிருணயிக்கின்றன ஏற்றுமதி வருமானத்தின் குறைவு அயல்நாட்டுத் தேவைக் குறைவினாலும் தோன்றலாம்; உள்நாட்டில் அதிகரித்த

நுகர்விலும் தோன்றலாம். உள்நாட்டில் பொருளாதாரப் பெருக்கத்தோடு இணைந்ததாக உள்நாட்டின் அதிகரித்த நுகர்வு இருக்கலாம். இது தவிர, மிக வேகமான பொருளாதார வளர்ச்சி அதிகரித்துச் செல்லும் விலைகளோடு சேர்ந்து தோன்றுமானால் அது அதிகமான இறக்குமதிகளைக் கவர்ந்து ஏற்றுமதிப் பருமனைப் பாதகமான அளவில் பாதிக்கின்றது. எனவே, உள்நாட்டுப் பொருளாதாரப் பெருக்கம் இத்தகைய பெருக்கம் எந்த அளவுக்கு இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்களைச் சார்ந்திருக்கிறது, இத்தகைய பெருக்கம் எந்த அளவுக்கு ஏற்றுமதிப் பண்டங்களின் அளிப்பைப் பாதிக்கிறது என்பனவற்றைப் பெரும்பாலும் பொறுத்தமைகிறது.

**(இ) ஏற்றுமதி அங்காடியில் உறுதியினமை (Instability in Export Markets)**

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் ஏற்றுமதிச் சந்தைகளில் உறுதியின்மையினால் அயல்நாட்டு வாணிகக் கொடுக்கல் நிலையின் சிக்கல்கள் அதிகப்படுத்தப்படுகின்றன. ஏற்றுமதிப் பண்டங்களின் விலைகளும், பருமனும் பேரளவில் மாறுபட்டிருக்கின்றன. அதன் காரணமாக மொத்த ஏற்றுமதி வருமானங்கள் பெரும்பாலும் நிலையற்றவைகளாக இருந்திருக்கின்றன. இதன் காரணமாக உள்நாட்டு மூலதனத் திரட்சிக்காக அவைகளைப் பேரளவில் பயன்படுத்த முடியாது. இந்த நூற்றாண்டின் முதல் பாதிப் பகுதியில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் ஏற்றுமதிப் பண்டங்களின் ஆண்டுதோறுமான விலை ஏற்றத்தாழ்வுகள் சராசரியாகப் 14% அளவு எனக் கணக்கிடப்பட்டது. ஆனால், முதன்மைப் பண்டங்களின் ஏற்றுமதிப் பருமனில் உள்ள ஏற்றத் தாழ்வுகள் ஆண்டொன்றுக்கு 18% முதல் 19% வரை இருந்தது. ஒவ்வொரு சுழலின் அளவும் $4\frac{1}{2}$ ஆண்டுகளாக உள்ள வணிகச் சுழல்களில் ஏற்றத் தாழ்வுகளின் சராசரிகள், விலையைப் பொறுத்த மட்டிலும் 27%என்றும், பருமனைப் பொறுத்தமட்டிலும் 10% முதல் 50%-க்கும் அதிகமானது என்றும் கணக்கிடப்பட்டது. ஒவ்வொரு வழியிலும் ஆண்டு ஒன்றுக்கு 4%, 5% ஆகியவைகளுக்கிடையேயான தாக நீண்ட கால விலைமாற்றங்கள் இருந்தன. நீண்ட கால விலைப் போக்குகளின் அளவைப் போலவே நீண்ட காலக் காரணிகளினால் தோன்றும் ஏற்றுமதிப் பருமனில் மாற்றங்களும் இருந்தன; அதாவது கிட்டத்தட்ட ஆண்டொன்றுக்கு 4% அளவாக இருந்தது. விலைகள், பருமனில் வேறுபாடுகள் ஆகிய இவைகளின் கூட்டு விளைவானது ஏற்றுமதி வருமானத்தின் அளவில் காணப்பட்டது. இது 1901, 1950 ஆகிய ஆண்டுகளுக்கிடையே 23% ஆண்டுதோறு

மான வேறுபாட்டையும், (ஒவ்வொரு சுழல் காலத்திற்கும் 4 ஆண்டிற்கும் சற்று அதிகமான காலத்தைக் கொண்டிருக்கும் சுழல் காலத்தில்) 37% வேறுபாட்டையும் காட்டியது. நீண்டகாலக் காரணிகளால் ஏற்றுமதி வருமானங்களில் தோன்றும் மாற்றங்கள் ஆண்டொன்றுக்கு ஏறத்தாழ 6% என்ற அளவிலிருந்தன. விலை ஏற்றத்தாழ்வுகள் அல்லது பருமனின் ஏற்றத்தாழ்வுகள் என்பதைத் தனியாகக் கருதும்போது இருக்கும் அளவைக் காட்டிலும் அதிகமான அளவில் ஏற்றுமதி வருமானங்கள் அதிகரித்தன என்ற உண்மையானது விலைகளில் மாற்றமும், அளவுகளில் மாற்றமும் ஒன்றையொன்று அழிக்கத்தக்க விளைவையே பெற்றிருந்தது என்பதைத்தான் சுட்டிக் காட்டுகின்றன. ஏற்றுமதி வருமானங்களில் இருந்த உறுதியின்மையின்மீது இதே காலத்தில் அயல்நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட மூலதனமானது இழப்பு ஈடுசெய்யும் விளைவைப் பெற்றிருக்கவில்லை என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டியது மிகவும் அவசியமானதாகும். நீண்ட கால மூலதனம். குறுகிய கால மூலதனம் ஆகியவைகளின் மொத்தத்தைக் கூட்டிப் பார்த்தாலும் அது ஏற்றுமதியிலிருந்து பெறப்பட்ட அந்நியச் செலாவணி அளவில் 10% அளவுவாகத்தான் இருந்தது. இது மிக அண்மைக்காலம்வரை குறைந்து செல்லும் போக்கையே காட்டியது. ஏற்றுமதி வருமானங்களின் ஏற்றத்தாழ்வுகளைக் காட்டிலும் அதிகமான அளவுக்கு மூலதன வரவின் ஏற்றத் தாழ்வுகள் அதிகமாக இருந்தன என்பது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். இப் போக்கு குறிப்பாக 1939-க்கு முன்னால் காணப்பட்டது. ஏற்றுமதி வருமானங்களின் ஏற்றத்தாழ்வுகள் எந்த அளவுக்கு இருந்தனவோ அதைப் போன்று மூன்று மடங்கிற்கும் அதிகமான அளவுக்குச் சராசரியாக மூலதன வரவின் ஆண்டுதோறுமான ஏற்றத் தாழ்வுகள் இருந்தன. ஏற்றுமதி வருமானங்கள் ஏற்றத் தாழ்வுகளைப் பெற்றிருக்கும் அதே திசையில் மூலதன வரவின் ஏற்றத் தாழ்வும் இருக்கிறதென்ற தன்மை சிக்கலை மேலும் அதிகப்படுத்திவிடுகிறது.[1]

### (ஈ) பாதகமான விலைப் போக்குகள் (Adverse Priec Trends)

1949ஆம் ஆண்டிலிருந்து கொரியப் போர்க்காலம், அதை யடுத்துள்ள காலம் ஆகியவைகளைக்கொண்ட ஆறு ஆண்டுகளில் பர்மா, சிலோன், மலேயா, தாய்லாந்து போன்ற தென் கிழக்காசியப் பகுதியில் உள்ள சில முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகள் வணிக விலைமுறைத் திட்டத்தின்

1 *Instabilltity in Export Markets of Underdeveloped Countries*, U. N. 1952, pp. 3-7,

சாதகமான போக்கினால் நன்மைகளைப் பெற்றன. இந்த நன்மைகள் இந் நாடுகளின் உள்நாட்டு மூலதனத் திரட்சிக்குப் ்பரமளவில் உதவி செய்தன எனக் கருதப்படலாம். ஏற்றுமதிப் பண்டங்களின் விலைகளும், இறக்குமதிப் பண்டங்களின் விலைகளும் மாறுதிருக்கும்போது, வணிக விலைமுறைத் திட்டத்தில் சாதக மான மாற்றங்களிலிருந்து பெறும் அதிகப்படியான வருமானங் களைத்தான் வணிக விலைமுறைத் திட்டங்களிலிருந்து பெறும் நன்மைகள் குறிப்பிடுகின்றன. இத்தகைய அதிகப்படியான வரு மானங்கள் எதிர்பாராத வருமானங்களாக இருக்கின்ற காரணத் தால் அரசாங்கத்தாலோ தனிப்பட்டவர்களாலோ முதலீட்டிற் காகப் பயன்படுத்தப்படலாம். ஆனல், அதே காலத்தில் பருத்தித் துணிகளின் விலைகளில் தோன்றிய இறக்கத்தால் ஏற்றுமதியி லிருந்து பெறப்படும் நன்மையானது ஜப்பானிலும், இந்தியாவிலும் குறைந்தது. வணிக விலைமுறைத் திட்டத்திலிருந்து ஆதாயம் பெறுவதற்கான முக்கியமான மூலமாக ஏற்றுமதிப் பக்கத்தில் ரப்பர், மற்றும் ஒரு சில கனிப் பொருள்கள் என்றும்.இறக்குமதிப் பக்கத்தில் பருத்தித் துணி என்றும் இருந்தது. சுருங்கக் கூறின், கிழக்காசிய நாடுகளின் வணிக விலைமுறைத் திட்டத்தின் ஆதாயங்கள் இந்த நாடுகளில் பேரளவில் ஏற்றத் தாழ்வுகளைப் பெற்றிருந்தன. இந்த நிலப் பகுதியின் வணிக ஆதாயங்கள் 1949ஆம் ஆண்டிலிருந்து எவ்வாறு இருந்தன என்று பார்த்தால் 1951-ல் அது உச்ச நிலையைப் பெற்றது என்றும் 1953-ல் 4-ல் ஒரு பங்காகக் குறைந்தது என்றும், மீண்டும் 1955-ல் இரட்டித்தது என்றும் தெரிய வருகிறது.[1] ஆனல், 1955-க்குப் பிறகு வணிக விலை முறைத் திட்டமானது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குப் பாதகமானதாக மாறிவிட்டது. இவ்வாறாக, 1954ஆம் ஆண்டின் இறுதிக் கால்பகுதி, 1958ஆம் ஆண்டின் முதல் கால்பகுதி ஆகியவை களுக்கிடையே முதன்மைப் பண்டங்களின் விலைகளின் அளவுக் குறியீட்டு எண் (1953=100) 103-லிருந்து 96ஆகக் குறைந்தது. அதே நேரத்தில் தொழிற் பண்டங்கள் 98-லிருந்து 107-க்கான அதிகரிப்பைப் பதிவு செய்தன. முதன்மைப் பண்டங்களுக்குள் எரிபொருள்கள் உள்ளிட்ட கனிப் பொருள்கள் 1954-ல் 99-லிருந்து 1957-ன் முதல் கால்பகுதியில் 119ஆக அதிகரித்தது. பின்னர் அது 1958ஆம் ஆண்டின் முதல் கால்பகுதியில் 109ஆகக் குறைந்தது. பொறிசெய் பண்டங்கள், முதன்மைப் பண்டங்கள் ஆகியவை வைகளின் விலைகளில் தோன்றும் மாற்றங்களின் காரணமாகப் பின்னர்க் குறிப்பிட்டவைகளின் வணிக விலைமுறைத் திட்டம் முன்னர்க் குறிப்பிட்டவைகளுக் கெதிராக 105-லிருந்து 90-க்குக்

[1] *Economic Bulletin for Asia and the Far East*, U.N, May, 1957, pp. 18-33

குறைந்தது.[1] இன்னொரு நோக்கிலிருந்து பார்க்கும்போது, (ரஷ்யா, கிழக்கு ஐரோப்பா, சீனா, நீங்கலாக உள்ள) உலகின் தொழில்மயம் ஆகாத நாடுகளிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும். பொருள்களின் அளவைப்பற்றிய அளவுக் குறியீட்டெண் 1955-ல் 138-லிருந்து 1957-ல் 151-க்கு அதிகரித்தது. ஆனால், அதே நேரத்தில் அலகு மதிப்பு (Unit Value) ஏறத்தாழ மாறுமல் ஒரே நிலையில் (107ஆக) இருந்தது. இதற்கு மாறாக, இதே காலத்தில் தொழில் மயமான நாடுகளிலிருந்து ஏற்றுமதியான பண்டங்களின் அளவுக்கான அளவுக் குறியீட்டெண் 139-லிருந்து 162-க்கு அதிகரித்தது. ஆனால், அவைகளின் ஏற்றுமதியின் அலகு மதிப்பு (Unit Value) 63-லிருந்து 133-க்கு அதிகரித்தது. அதாவது, 133% அதிகரித்தது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள் ஓரளவுக்கே தொழில்மயம் ஆகியுள்ள இந்தியா போன்ற நாடுகள் பேரளவிற்குப் பாதிக்கப்பட்டுள்ளன என்று காட்டுவதற்குச் சான்றுகள் இருக்கின்றன.

## உலக வணிகத்தில் இந்தியாவின் நிலை
## (India's Position in World Trade)

உலக வணிகத்தில் இந்தியாவின் பங்கு ஏறத்தாழ 3·5% அளவாகும். மொத்த நாட்டு விளைவின் பங்காக அண்மைக் காலத்தில் ஏற்றுமதிகள் 6% அளவாகவும் இறக்குமதிகள் 7% அளவாகவும் இருந்தன. அயல்நாட்டு வணிக விகிதத்தின் அண்மைக் காலப் போக்குகள் அட்டவணை 16-ல் காட்டப்பட்டுள்ளன. மொத்த விளைவு கிடைக்கும் அளவுக்கு அதாவது நாட்டு விளைவு + இறக்குமதிகள் என்பதற்குநடப்பு விலைகளில் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்படும் பண்டங்களின் மதிப்பின் பகுதி என அயல்நாட்டு வணிக விகிதம் கணக்கிடப்படுகிறது. 1957-58ஆம் ஆண்டில் உச்ச நிலையாகிய 0·14 என்ற அளவை அது அடைந்தது. அடுத்த ஆண்டில் அது 0·11 என்று குறைந்தது. அடுத்து வந்த ஆண்டுகளில் ஏறத்தாழ அது நிலையாகவே இருந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்திலிருந்து ஏற்றுமதி விகிதம் பேரளவிற்குக் குறைந்து சென்றது என்பதையும் இறக்குமதி விகிதம் ஏறத்தாழ மாறுமல் ஒரே அளவிலிருந்தது என்பதையும் இங்குக் கவனிக்க வேண்டும்.

ஒரு நாட்டின் அயல்நாட்டு வணிகம் கீழ்க்கண்டவைகளின் அடிப்படையில் விளக்கப்படலாம்.

[1] *Monthly Bulletin of Statistics*, U. N., June, 1958.

அட்டவணை 16

## இந்தியாவின் ஏற்றுமதியும் இறக்குமதியும் 1950-51 முதல் 1970-71 வரை

| ஆண்டு | இறக்குமதி C.I F. | ஏற்றுமதி F.O.B | வாணிக எச்சம் (Balance of Trade) |
|---|---|---|---|
| | (ரூபாய் மில்லியன் | கணக்கில்) | |
| 1950-51 | 6,503 | 6,468 | — 35 |
| 1951-52 | 9,629 | 7,301 | —2,328 |
| 1952-53 | 6,330 | 6,019 | — 311 |
| 1953-54 | 5,918 | 5,397 | — 521 |
| 1854-55 | 6,897 | 5,966 | — 931 |
| 1955-56 | 7,731 | 6,403 | —1,328 |
| 1950-51 முதல் 1955-56 வரை மொத்தம் | 36,505 | 31,086 | —5,419 |
| ஆண்டுதோறும் சராசரி | 7,300 | 6,220 | —1,080 |
| 1956-57 | 11,021 | 6,352 | —4,669 |
| 1957-58 | 12,332 | 5,942 | —6,390 |
| 1958-59 | 10,293 | 5,763 | —4,530 |
| 1959-60 | 9,323 | 6.274 | —3,049 |
| 1960-61 | 11,057 | 6,305 | —4,752 |
| 1956-57 முதல் 1960-61 வரை மொத்தம் | 54,026 | 30,635 | —23,381 |
| ஆண்டுதோறும் சராசரி | 10,805 | 6,127 | —4,676 |
| 1961-62 | 10,060 | 6,683 | —3.377 |
| 1962-63 | 10,968 | 6,809 | —4,159 |
| 1963-64 | 12,450 | 8.016 | —4,434 |
| 1964-65 | 14,208 | 8,009 | —6.199 |
| 1865-66 | 13,500 | 7,833 | —5,667 |
| 1961-62 முதல் 1965-56 வரை மொத்தம் | 61,186 | 37,350 | —23,836 |
| ஆண்டுதோறும் சராசரி | 12,237 | 7,470 | —4,767 |
| 1966-67 | 19,914 | 10,856 | —9.058 |
| 1967-68 | 20,428 | 12,546 | —7,882 |
| 1968-69 | 17,405 | 13,674 | —3.731 |
| 1969-70 | 15,823 | 14,039 | —1,784 |
| 1970-71 | 17,204 | 14,027 | —3,177 |
| 1966-67 முதல் 1970-71 வரை மொத்தம் | 90,774 | 65,142 | —25,632 |
| ஆண்டுதோறும் சராசரி | 18,155 | 1,308 | —5,126 |

மூலம்: *Reserve Bank of India Bulletins*

(அ) ஏற்றுமதிகளைப் பாதிக்கத்தக்க அயல்நாட்டு காரணிகள்

(ஆ) இறக்குமதிக்கான தேவையைப் பாதிக்கத்தக்கதாக உள்ள நாட்டுக் காரணிகள்.

(இ) அரசாங்கத்தின் இறக்குமதி, ஏற்றுமதிக் கொள்கை.

1951-52-ல் இறக்குமதிகள், ஏற்றுமதிகள் ஆகிய இரண்டுமே மிகவும் அதிகமான அளவிலிருந்தன. இதற்குக் காரணம் அயல் நாட்டுக் காரணிகளாகும்; குறிப்பாகக் கொரியாவில் நடைபெற்ற சண்டையாகும். இரண்டாவது உலகப் பெரும் போர்க் காலத்திலேயே மேலை நாடுகளில் பேரளவிலான பணவீக்க உள்ளாற்றல்கள் தோன்றியிருந்தன. அரசாங்கத்தின் வரவு செலவுத்திட்டப் பற்றுக்குறையை அதிகரித்ததன் காரணமாகவும், உள்நாட்டு முதலீட்டு நடவடிக்கைகளின் காரணமாகவும், குறிப்பாகக் கொரியப் போரை அடுத்து இருப்பைச் சேகரித்ததன் காரணமாகவும் இத்தகைய பணவீக்கப் போக்கு மேலும் அதிகரித்தது. இந்தியாவில் ஏற்றுமதி அதிகரித்ததற்கும், இறக்குமதிச் செலவு அதிகரித்ததற்கும் இதுவே காரணமாக அமைந்தது. நாடு பிரிவினையைப் பெற்றதன் காரணமாகக் கச்சாப் பருத்தி, கச்சாச் சணல் போன்ற தொழில் மூலப் பொருள்களுக் கான மிக அதிகரித்த பற்றுக்குறையானது அந்த ஆண்டின் இறக்குமதியை அதிகரிக்கச் செய்தது. அதே நேரத்தில் பருவ மழை பொய்த்ததன் காரணமாக. உணவு உற்பத்தியில் தோன்றிய குறைவும் நிலைமையை இன்னும் மோசமாக்கியது. அடுத்த இரண்டாண்டுகளில் இறக்குமதி ஏற்றுதிமதி ஆகிய இரண்டுமே குறைந்தன. இந்தியாவிலும் வெளி நாடுகளிலும் தொழில் மந்தப் போக்கு நிலவியதுதான் நாட்டின் வணிகப் பருமனில் இத்தகைய குறைவுக்கான பெரும் காரணமாகும். கொரியப்போர் முடிந்து மலர்ச்சி வணிக முதலீட்டு நடவடிக்கைகளும், இருப்பைச் சேர்க்கும் நடவடிக்கைகளும் தொழில் மயமான நாடுகளில் குறைந்தபோது, மேலும் 1953-ல் ஐக்கிய அமெரிக்க நாட்டில் மென்மையான மந்த நிலைகள் தோன்றியபோது, இந்திய நாட்டு ஏற்றுமதிப் பண்டங்களின் விலைகள், பருமன் ஆகிய இரண்டிலும் குறைவு தோன்றியது. ஏற்றுமதியில் தோன்றிய குறைவைக் காட்டிலும் இறக்குமதியில் தோன்றிய குறைவு மிகவும் முனைப்பாக இருந்தது. நாட்டில் பொருளாதார நடவடிக்கைகள் தளர்ந்துவிட்ட காரணத்தால் ஓரளவுக்கும், இக் காலத்தில் அரசு கையாண்ட மிக இறுக்கமான இறக்குமதிக் கொள்கையால் ஓரளவுக்கும் இந் நிலை தோன்றியது.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திற்குப் பிறகு குறிப்பிடத்தக்க அளவில் உறுதியான இறக்குமதி அதிகரிப்பும் அதே நேரத்தில் நிலையான அல்லது குறைந்து செல்லும் ஏற்றுமதியும் காணப்பட்டன. நாட்டில் மேற்கொள்ளப்பட்ட மென்மேலும் அதிகரித்துவரும் முதலீட்டு நடவடிக்கைகள்தான் இதற்கான*முக்கியமான காரணங்களாகும் இந்தியாவில் திட்ட மிட்ட பொருளாதார முன்னேற்றச் செலவு (அரசு முதலீடு) முதல் திட்டத்தின் தொடக்கத்தில் ரூ.2,000 மில்லியனிலிருந்து இரண்டாம் திட்டத்தின் முதல் ஆண்டில் (1956-57) ரூ 5,000 மில்லியனுக்கும், அத் திட்டத்தின் இறுதி ஆண்டில் (1960-61) ரூ.8,000 மில்லியனுக்கும் அதிகரித்தது. இறக்குமதிகள் 1953-54-ல் ரூ 6,000 மில்லியனுக்கும் குறைவானதாக இருந்தது அதிலிருந்து இரண்டாம் திட்டத்தின் முதல் ஆண்டில் ரூ.7,500 மில்லியனுக்கும் அதிகரித்தது. இரண்டாம் திட்டத்தின் இறுதியில் அது ரூ.10,000 மில்லியனுக்கும் அதிகமாகிவிட்டது. ஆனால், இந்தக் காலத்தில் சராசரி ஏற்றுமதி அளவு ஏறத்தாழ ரூ.6,500 மில்லியனுக்குச் சமமாக இருந்தது. முதலில் எதிர்பார்க்கப்பட்டதைக் காட்டிலும் முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலை மிகவும் மன நிறைவைத் தரத்தக்க தாக இருந்தது. ஆண்டுதோறுமான பற்றுக்குறை ரூ.1,800 ரூ 2,000 மில்லியன் என்ற முறையில் இருக்குமென எதிர்பார்க்கப் பட்டது. அதற்கு மாறாக உண்மையான பற்றுக்குறையின் அளவு 1951-52-ல் ரூ.1,630 மில்லியனாகத்தான் இருந்தது அது மட்டுமல் லாமல் அடுத்து வந்த நான்கு ஆண்டுகளிலும் முறையே ரூ.600 மில்லியன் ரூ.470 மில்லியன், ரூ.60 மில்லியன், ரூ 150 மில்லியன் என்ற உபரிகளையும் பெறமுடிந்தது. இந்த ஐந்தாண்டுகளுக்குமாகச் சேர்த்து மொத்தப் பற்றுக்குறை ரூ 300 மில்லியனாகவே இருந்தது. இதற்கு மாறாக, அதிகார பூர்வமான நன்கொடைகள் நீங்கலாக நடப்புக் கணக்கில் உள்ள பற்றுக்குறை இரண்டாம் திட்டக் காலத்தில் மொத்தமாக ரூ 19,200 மில்லியனுக்குச் சென்று விட்டது. ஆண்டுதோறுமான பற்றுக்குறை ரூ.2,240 மில்லியன் என எதிர்பார்த்த அளவையும் மிஞ்சிச் சென்று ஆண்டொன்றுக் கான சராசரிப் பற்றுக்குறையின் அளவு ரூ.3,840 மில்லியனுக்குச் சென்றுவிட்டது. ஐந்தாண்டுகளுக்குமாக மதிப்பிடப்பட்ட பற்றுக்குறையைக் காட்டிலும் ரூ.8,000 மில்லியன் அதிகமான தாகப் பற்றுக்குறை இருந்தது. இரண்டாவது திட்டக் காலத்தில் எதிர்பார்க்கப்பட்ட ஆண்டொன்றுக்கான சராசரி ஏற்றுமதி வருமானமான ரூ.6,120 மில்லியன், மதிப்பிடப்பட்ட அளவைவிட ரூ.190 மில்லியன் அதிகமாக இருந்தது. ஆனால், முதல் திட்டக் காலத்தில் பெறப்பட்ட அளவைக் காட்டிலும் இது ரூ.100

மில்லியன் குறைவாகவே இருந்தது. இதற்கு மாறாக ஆண்டு தோறும் சராசரியாக ஏற்றுமதிகளுக்காகச் செலுத்தப்படும் தொகையின் அளவு ரூ.10,740 மில்லியனாக இருந்தது. இது இரண்டாம் திட்ட மதிப்பீட்டைக் காட்டிலும் 24% அளவு அதிக மாகும். மேலும், முதல் திட்டத்தில் பெறப்பட்ட இலக்குகளைக் காட்டிலும் 50% அதிகமாகும்.

இறக்குமதிகளில் தோன்றிய குறிப்பிடத்தக்க அதிகரிப் புக்கு முதலீட்டு நடவடிக்கைகளின் அதிகரிப்பு, குறிப்பாக அரசாங்கத் துறையின் முதலீட்டு நடவடிக்கைகள் பெரும் காரணங்களாக இருந்திருக்கின்றன. இரண்டாம் திட்டக் காலத்தில் ஆண்டொன்றில் சராசரியாக இறக்குமதிசெய்யப்பட்ட மொத்த இறக்குமதி முந்திய ஐந்தாண்டுகளில் (முதல் திட்டக் காலத்தில்) இறக்குமதி செய்யப்பட்ட சராசரி அளவைக் காட்டி லும் ஏறத்தாழ 50% அளவுக்கு அதிகமாக இருந்தது. ஆனால், (அதனைப் பகுத்துப் பார்க்கும்போது) 140% அளவுக்கு அரசுக் கணக்கின் இறக்குமதி அதிகரித்திருந்தது. அதே நேரத்தில் தனிப் பட்டவர்களின் இறக்குமதி அளவு 25%-க்கும் குறைவாகவே இருந்தது. இரண்டாம் திட்ட ஆண்டுகள் முழுவதையும் கருத்தில் கொண்டு பார்க்கும்போது, உண்மை அளவுகளின் அடிப்படையில் அரசாங்கக் கணக்கிலான இறக்குமதிகள் பேரளவிற்கு அதிகரித் திருக்கின்றன. ஆனால், தனியார் துறைக்கான இறக்குமதி குறைந் திருக்கிறது. அரசாங்க இறக்குமதிப் பண்டங்களில் பெரும் பகுதி மூலதனப் பண்டங்களாக இருந்தன என்பதும் குறிப்பிடப் படவேண்டும். 1956–57 முதல் 1958–59 முடிய உள்ள ஆண்டு களில் அரசாங்கம் இறக்குமதி செய்த மொத்த இறக்குமதிகளில் உணவுப் பண்டங்கள் ரூ.3,900 மில்லியன் அளவுக்குத்தான் இருந்தன. எஞ்சியுள்ள ரூ.9,300 மில்லியன் தொகைக்கும் இயந்திரங்களும் மூலதனப் பண்டங்களுமே இறக்குமதி செய்யப் பட்டிருந்தன. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இயந்திரங் களுக்காகவும் போக்குவரத்துச் சாதனங்களுக்காகவும் சராசரியாக ஆண்டொன்றுக்குச் செலவழித்த உண்மையான தொகை ரூ.1,500 மில்லியன்தான். இதற்கெதிராக, இந்த நோக்கத்திற்காக இரண்டாம் திட்டக் காலத்தில் சராசரியாக ஆண்டொன்றுக்குச் செலவழித்த தொகை ரூ.3,250 மில்லியனாக இருந்தது என்ற உண்மையிலிருந்து அதிகமான உள்நாட்டு முதலீட்டு நடவடிக்கை களின் விளைவு நன்கு தெரிகிறது. இதைப்போல, முதல் திட்டத்தில் சராசரியாக இரும்பு, உருக்கு ஆகியவைகளின் இறக்குமதி ரூ.320 மில்லியனாக இருந்தது. இது இரண்டாம் திட்டக் காலத்தில் ஆண்டொன்றுக்குச் சராசரியாக ரூ 950 மில்லியனாக உயர்ந்தது.

இறக்குமதிகளுக்கு எதிராக இரண்டாம் திட்டக் காலத்தின் பெரும்பாலான ஆண்டுகளில் ஏற்றுமதி வருமானம் குறைந்து விட்டது. முதல் திட்டக் காலத்தைக் காட்டிலும் இரண்டாம் திட்டக் காலத்தில் வழிவழியாக ஏற்றுமதி செய்யப்படும் பண்டங்களில் சணல், பருத்தித் துணிகள், கச்சாப் பருத்தி, தாவர எண்ணெய்கள் போன்ற பல பொருள்களும் குறைவான அளவு ஏற்றுமதி வருமானத்தைத்தான் தந்தன. இந்தியாவின் இறக்குமதிப் பண்டங்களின் அளவுகளுக்கான அளவுக் குறியீட்டெண் (1953=100) 1951-55 ஆகிய ஆண்டுகளுக்கான சராசரியான 118–லிருந்து 1957-ல் 168-க்கு அதிகரித்தது. ஆனால், ஏற்றுமதிக்கான இத்தகைய அளவுக் குறியீட்டெண் 1955–ல் 102 முதல் 115–லிருந்து 1957-ல் 119-க்கு அதிகரித்தது. 1956-ல் 110–க்குக் குறைந்துவிட்டது. ஏற்றுமதிப் பண்டங்களின் உற்பத்தி குறிப்பிடத்தக்க அளவிலான அதிகரிப்பு எதையும் காட்டவில்லை. இந்தியா ஏற்றுமதி செய்த நாடுகளில் இறக்குமதி நிலையானதாக அல்லது குறைந்துவிட்டதாகக் காணப்பட்டதோடு, ஒரு சில வளர்ந்துவரும் புதிய நாடுகளில் கிடைக்கத்தக்க வாய்ப்புகளினால் நன்மை பெறத் தவறிவிட்டன என்பதும்தான் இத்தகைய நெகிழ்ச்சியின்மைக்குச் சொல்லப்படும் காரணங்களாகும். வளர்ச்சியடைந்த நாடுகளின் நாட்டு வருமானங்கள் மிக வேகமாக அதிகரித்தாலும்கூட. (குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஏற்றுமதி செய்யும்) இத்தகைய பண்டங்களுக்கான தேவை அதிகரிப்பை, பதவிகளைப் பயன்படுத்தல், செயற்கைப் பண்டங்களை உற்பத்தி செய்தல், உள்நாட்டுப் பண்டங்களை வீணாக்காமல் நல்ல முறையில் பயன்படுத்திச் சிக்கனமாகப் பயன்படுத்துதல், ஒரு சில இறக்குமதி செய்யப்படத்தக்க மூலப் பொருள்களில் தன்னிறைவைப் பெறுவதற்கான முயற்சிகளை மேற்கொள்ளுதல் போன்றவைகள் தடை செய்துவிட்டன இவைகள் தவிர, இந்தியா போன்ற ஓரளவுக்குத் தொழில்மயம் ஆகியுள்ள நாடுகள், முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகள் ஆகியவைகளின் அயல் நாட்டு வணிகத்தின்மீது தொழில்மயமான நாடுகளின் பொருளாதார நடவடிக்கைகளில் தோன்றும் ஏற்றத்தாழ்வுகள் பாதகமான விளைவுகளை இன்னும் தோற்றுவித்துக்கொண்டே இருக்கின்றன. ஐக்கிய அமெரிக்க நாட்டிலும் மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் 1957-58ஆம் ஆண்டில் தோன்றிய தொழில் மந்த நிலைமையின் காரணமாகத் தேயிலை, சணல் பொருள்கள், பருத்தித் துணிகள், கச்சாப் பருத்தி, தாவரஎண்ணெய்கள் போன்ற இந்தியாவின் ஏற்றுமதிப் பொருள்களில் மிகுதியான அளவுக்குக் குறைவு தோன்றியது.

## பொருளாதார முன்னேற்றத்திற்கான வணிகக் கொள்கை
## (Commercial Policy for Economic Development)

ஏற்றுமதியின் அளவை அதிகரிப்பதற்காக எடுக்கப்பட்ட எந்த முயற்சியும். 19ஆம் நூற்றுண்டில் இருந்த குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதார வளர்ச்சியைத் தோற்றுவித்த மூல இயந்திரமாக இருந்த அயல்நாட்டு வணிகத்தை 20ஆம் நூற்றுண்டில் அவ்வாறு இருக்கச் செய்ய உதவவில்லை என்ற உண்மையை ஒத்துக் கொள்ளவைக்கத்தக்க அடிப்படையிலேயே அமைந்தது. 18ஆம் நூற்றுண்டிலும் 19ஆம் நூற்றுண்டிலும் இங்கிலாந்தில் தோன்றிய பொருளாதார முன்னேற்றமானது மூலப் பொருள்களுக்கான தேவையில் உறுதியான அதிகரிப்பு, இம் மூலப் பொருள்களை இங்கிலாந்திற்கு ஏற்றுமதி செய்த நாடுகளுக்குள் இங்கிலாந்தின் மூலதன இறக்கம் ஆகியவைகளோடு சேர்ந்து தோன்றியதாக இருந்தது. இத்தகைய மூலனதம் முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்த நாடுகளில் சாலைகளையும் இருப்புப் பாதைகளையும் அமைப்பதிலும் ஒருசில முதன்மைத் தொழில்களின் முன்னேற்றத்திலும், குறிப்பாகத் தோட்டத் தொழில்களின் முன்னேற்றத்தின்மீதும் பயன்படுத்தப்பட்டதனுல் முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் ஒரு சில நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைத் தூண்டிவிட்டது. பொருளாதார அடிப்படையைப் பரவலாக்கிக் கொள்வதற்காக இம் மூலதனத்தைப் பயன்படுத்தியதில் வெற்றிபெற்ற கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகள் புறச் சிக்கனங்களைப் பெற்றன. அத்தகைய புறச் சிக்கனங்கள் பொருளாதார வளர்ச்சிப் போக்கில் உதவிசெய்தன. ஆனுல், பன்னாட்டு வாணிகத்தின் அமைப்பு அப்போதிருந்து பேரளவில் மாறிவிட்டது. 19ஆம் நூற்றுண்டின் பின் பகுதியிலும் 20ஆம் நூற்றுண்டிலும் வடக்கு அமெரிக்காவும், மேற்கு ஐரோப்பாவும் முந்தைய ஆண்டுகளில் இங்கிலாந்து பெற்றிருந்த பொருளாதார முன்னேற்றத்தைப் போன்ற வேகத்தில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றன. ஆனுல், இந்த நாடுகளின் பொருளாதார முன்னேற்றமானது முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்த நாடுகளின் முன்னேற்றத்திற்கு நன்மைகளைத் தரவில்லை. ஒரு புறத்தில் முன்னேற்றமடைந்த நாடுகளில் வருமான அதிகரிப்பு விகிதத்திற்கேற்ப மூலப் பொருள்களுக்கான தேவை அதிகரிக்கவில்லை. இன்னெரு புறத்தில் அயல்நாட்டு மூலதனமானது வேறு சில தொழில்மயமான நாடுகளுக்குள் அல்லது ஒருசில எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகளுக்குள் சென்றதே தவிர, மரபு வழியாக முதன்மைப் பண்டங்களை உற்பத்தி

செய்துவந்த நாடுகளுக்குச் செல்லவில்லை. வேளாண்மைப் பண்டங்களுக்கு எதிரான வகையில் வணிகமுறைத் திட்டம் அமைந்ததும், இந் நாடுகளின் ஏற்றுமதிப் பண்டங்களின் நெகிழ்ச்சியற்ற தேவையும், மரபு வழியாக ஏற்றுமதி செய்யும் பண்டங்களைத் தவிரப் பிற பண்டங்களின் உற்பத்தியில் அவைகளின் மூலவளங்கள் மாறுமலிருந்ததும், ஆகிய இவைகளெல்லாம் சேர்ந்து இந் நாடுகளை மிகவும் பரிதாபமான நிலையில் நிறுத்திவிட்டன. இத்தகைய சூழ்நிலையில் பொருளாதார நிலையில் தங்களைத் தூக்கிவிடுவதற்கானதொரு வழியாக அயல்நாட்டு வணிகத்தை அவைகள் எதிர்பார்க்க முடியாது.

இப்போதிருக்கும் வளர்ச்சியடைந்த நாடுகளுக்கும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கும் தடையற்ற வணிகக் கோட்பாடு பொருத்தமானதன்று என்ற குறிப்பைப் பன்னாட்டு வணிகத்தின் தொன்மைக் கோட்பாட்டு வரையறைகள் சுட்டிக்காட்டுகின்றன. பொருளாதார வளர்ச்சி நிலையில் ஏறத்தாழ ஒரே மாதிரியான நிலையைப் பெற்றுள்ள நாடுகளுக்கிடையே தடையற்ற போட்டி சரியான போட்டியாக அமையலாம். ஆனால், மிகவும் தொழிற்பெருக்கம் அடைந்த நாடுகளாக உள்ள நாடுகள் ஒரு புறமும், முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் ஏழ்மை மிக்க குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஒரு புறமும் இருக்கும் நிலையில் இப் போட்டி சரியானதாக இருக்க முடியாது. ஒபபீட்டுக் கிரையக் கோட்பாடும், அதன் வழித் தோன்றும் தடையற்ற வணிக கோட்பாடும் அப்படியே ஏற்றுக்கொள்ளப்பட்டால், அவை உலகில் உள்ள ஏழ்மை மிக்க நாடுகளை அதே ஏழ்மை நிலையிலேயே நிறுத்தத்தக்கவைகளாக இருக்கும். வளர்ச்சி பெற்ற நாடுகளுக்கும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கும் இடையேயான அயல் நாட்டு வணிகத்தில் ஒரு நாட்டுக்கு எது நன்மையானதோ அது மற்றொரு நாட்டிற்குத் தீமை தரத்தக்கதாக இருக்கின்ற காரணத்தால், பன்னாட்டு வணிகத் தொடர்பில் இரு திட்ட ஒழுங்கைப் பேராசிரியர் மிர்தல் பரிந்துரைக்கிறார். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளிலிருந்து வளர்ச்சியடைந்த நாடுகளில் இறக்குமதி செய்வதைப் பொருத்தமட்டிலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் மிகத் தீவிரமான தடையற்ற வணிகர்களாக இருக்கலாம்; ஏற்றுமதிச் சலுகைகள் தரும் உரிமையைக்கூடப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால், அவைகளின் இறக்குமதிகளைப் பொருத்த மட்டிலும் அவைகள் பல கட்டுத்திட்டங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.

திட்டமிட்ட பொருளாதாரத்தில் பொருளாதார வளர்ச்சி தோற்றுவிக்கப்பட்டு ஒழுங்குபடுத்தப்படுகிறது. இத்தகையதொரு

பொருளாதாரத்தில் ஒருசில தொழில்களுக்குத் தரப்படும் பாது காப்பு பொருளாதாரத்தின் பொதுவான முன்னேற்றத்திற்கு உதவி செய்யத்தக்கதாக இருக்கிறதா என்பதையும், பாதுகாப்புத் தரப்படாத தொழில்களை அது பாதித்துவிடுகிறதா என்பதையும் கவனித்துக் கொள்ள வேண்டும். இதை வேருெரு விதமாகக் குறிப் பிட்டால், பொருளாதார வளர்ச்சியின் பொதுவான திட்டத்திற் கேற்ற வகையில் பொருத்தமானதாகப் பாதுகாப்பு அமைதல் வேண்டும். பாதுகாப்புத் தருதல் என்பது செலவைக் குறிப்பிடு கிறது எனவே, பாதுகாப்பைப் பெறுவதற்காக வேண்டும் தொழில்களின் நடவடிக்கைகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடு களில் மிகவும் கிடைப்பதற்கரிய காரணியாக உள்ள அந்நியச் செலாவணியின் நிகரச் சேமிப்பை வகை செய்யத் தக்கதாக இருக்குமா என்பதை ஆராய வேண்டியதும் மிகவும் அவசியமாகும். இத்தகைய தொழில் அயல்நாட்டு மூலதனத்துடன் தொடக்கப் படுமாஞல் வெளிநாட்டு உதவிக்காக அந்நியச் செலாவணியைச் செலுத்த வேண்டிய அவசியம் இருக்கிறது. இது அந்நியச் செலாவணி இழப்பைக் குறிப்பிடுகிறது. இன்னெரு புறத்தில் குறிப்பிட்ட தொழில் அதன் வளர்ச்சிக்காக உள்நாட்டு மூலவளங்களை ஈர்த்துக் கொள்ளலாம். இத்தகைய மூலவளங்கள் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்குமாஞல் அந்நியச் செலாவணியில் ஆதாயம் கிடைத்திருக்கும். பாதுகாப்புத் தரும்போது இஃது இழக்கப்படுகிறது. ஒரு தொழில் வளர்ச்சி பெற்று அந்நியச் செலாவணியை ஈட்டித் தரும் என்று எண்ணும்போது அந்நியச் செலாவணி ஆதாயத்தையும் மேற்குறிப்பிட்ட வண்ணம் அந்நியச் செலாவணி இழப்பையும் கவனத்தில் கொள்ள வேண்டும். தொழில்களுக்குப் பாதுகாப்புத் தரும்போது அது பணவீக்க அழுத்தத்தைத் தோற்றுவிக்கிறது. இதுவும் கவனத்தில் கொள்ளப் படவேண்டும். இறக்குமதியைத் தவிர்த்தால், அது நுகர்வுக் காக உள்நாட்டில் கிடைக்கத்தக்க பண்டங்களின் அளவையும் குறைத்துவிடும். இது வாழ்க்கைச் செலவை அதிகப்படுத்தி விடலாம் அல்லது பிற தொழில்களில் பயன்படுத்தப்படத்தக்க பண்டங்களின் உற்பத்திச் செலவை அதிகரித்துவிடலாம். இவ் வாருக, பாதுகாப்புத் தருவதானது, விளை முற்றுப்பட்ட பண்டங் களின் விலைகளை உயர்த்திவிடலாம்.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கு அயல்நாட்டு வணிகம் மிகவும் இன்றியமையாததாக இருப்பதஞல், பாதுகாப்புத் தரும் வணிகக் கொள்கையானது, அயல்நாடுகளில் உள்ள அங்காடி களில் நன்கு விற்பனையாகத்தக்க பண்டங்கள் உற்பத்தி செய்யும் தொழில்களின் வளர்ச்சிக்கு உதவி சய்யுமாஞல், மிகவும்

வெற்றியுடைய கொள்கை எனக் கருதப்படலாம். இதைப் பாது காப்புத் தருவதானது பேரளவிலான ஏற்றுமதி வருமானத்திற்கு வழி செய்ய வேண்டும் என்று இன்னொரு விதமாகவும் குறிப்பிட லாம். அண்மை ஆண்டுகளில் அரசுகளிடமிருந்தும் பன்னாட்டு நிதி நிறுவனங்களிடமிருந்தும் அயல்நாட்டு மூலதனம் குறைந்த வருமான நாடுகளுக்கு மிக எளிதாக வருகிறது என்றிருந்தாலும் கூட, அவ் வுதவியைப் பெறும் நாடு அந்நியச் செலாவணி வருமானத்திற்கானதொரு பதிலியாக அந்நியச் செலாவணி கடனைக் கருதாமலிருந்தால் அந் நாடு மிகவும் அறிவுடையதொரு நாடாகும். வணிக இருப்பு நிலையில் உள்ள தற்காலிக இடை வெளியை நிரப்புவதற்காக அந்நிய மூலதனம் கிடைத்தாலும்கூட வெளிநாடுகளிலிருந்து பெறும் அத்தகைய பணிகளுக்காகக் கட்டணங்களை செலுத்துவதற்கு ஏற்றுமதி உபரி மிகவும் அவசிய மாகிறது. இப்போதுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் காணப்படும் சூழ்நிலைகளில் ஏற்றுமதிப் பெருக்கம் என்பது மூன்று வழிகளில் முடியத்தக்கதாகக் காணப்படுகிறது.

(அ) ஏற்றுமதியைப் பரவலாக்குதல். அதாவது, ஏற்றுமதிக் கான புதிய பண்டங்களைக் காணுதல்.

(ஆ) ஏற்றுமதிச் சந்தையைப் பரவலாக்குதல். அதவாது, உள்நாட்டுப் பண்டங்களை விற்பதற்கேற்ற புதிய சந்தைகளைக் காணுதல்.

(இ) உள்நாட்டில் உள்ள விலைநிலைகள் எந்த அளவுக்கு அனுமதிக்கிறதோ அந்த அளவுக்கு ஏற்றுமதி செய்யத்தக்க பண்டங்களின் உள்நாட்டு நுகர்வைக் கட்டுப்படுத்துதல்.

### (அ) ஏற்றுமதியைப் பரவலாக்குதல் (Diversifying Exports)

முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகள் வழக்க மாக ஏற்றுமதி செய்யும் பண்டங்களுக்கான சந்தை வெகுவேக மாகச் சுருங்கிக்கொண்டே வருகிறது என்பது மிகவும் தெளி வாகக் காணப்படுகிறது. சோவியத் ரஷ்யா, எண்ணெய் ஏற்றுமதி செய்யும் நாடுகள் ஆகியவைகள் நீங்கலாக தொழில் மயமாகாத நாடுகளின் ஏற்றுமதிகளின் மதிப்பு உலக வணிகத்தில் 1928ஆம் ஆண்டு 32·2% அளவிலிருந்து 1957-ல் 24·4% ஆகக் குறைந்தது. ஆனல், அதே நேரத்தில் ஏற்றுமதிக்கான விழுக்காடு அளவு இதே காலத்தில் 26·9% அளவிலிருந்து 30·4% அளவாக அதிகரித்தது. 1920ஐச் சேர்ந்த ஆண்டுகளின் பிற்பகுதி ஆண்டு களில் ஐக்கிய அமெரிக்க நாட்டிற்கும், மேற்கு ஐரோப்பாவுக்கும் முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகளின் ஏற்றுமதி

அளவு தொழில் மயமான நாட்டின் ஒன்று சேர்க்கப்பட்ட மொத்த நாட்டு விளைவில் 3·5% அளவிலிருந்து 3% அளவாகக் குறைந்தது. பெட்ரோலியத்தின் ஏற்றுமதியை நீக்கிப் பார்த்தால் குறைவானது 3·5%–லிருந்து 2·5%-க்கும் குறைவானதாக இருந்தது. இந்தியாவின் வணிக அமைப்பும் இதே போக்கையே விளக்கு கிறது. ஏற்றுமதியை ஊக்குவிப்பதற்கான எல்லாவிதமான நடவடிக்கைகளையும் முழு முயற்சியுடன் மேற்கொண்டபோதும் இந்தியாவின் மிக முக்கியமான ஏற்றுமதிப் பண்டங்களான சணல், தேயிலை, பருத்தித் துணிகள் ஆகியவைகளின் ஏற்றுமதியின் அளவு அண்மை ஆண்டுகளில் மிகமிகக் குறைந்த அளவிலேயே காணப் பட்டது அல்லது குறைந்தும் காணப்பட்டது. 1930–39, 1950-54 ஆகிய ஆண்டுகளுக்கிடையே ஆண்டுதோறும் சராசரியாக 1·7 மில்லியன் டன் அளவிலிருந்து 1·8 மில்லியன் டன் அளவுக்கும் குறைவாகவே சணல், சணல் பண்டங்களின் உலக நுகர்வு அளவு அதிகரித்தது. ஆனால், இந்தியாவிலும் பாக்கிஸ்தானிலும் சணலின் உற்பத்தி அளவு 1·5 மில்லியன் டன் அளவிலிருந்து 1·7 மில்லியன் டன் அளவாக அதிகரித்தது. இந்தியாவின் தேயிலையின் அளிப் பிற்குகந்த அளவுக் குறியீட்டெண்கள் 1952–54–ல் 160 எனச் சிறிதளவுக்கு அதிகரித்தது. ஆனால், ஏற்றுமதியோ, 138–லிருந்து 136 ஆகக் குறைந்துவிட்டது. 1950-ல் பருத்தித் துணித் தொழிலின் உற்பத்தி 3,660 மில்லியன் கெஜம் என்ற அளவில் இருந்தது இது 1956-ல் 5,306 மில்லியன் கெஜம் என்ற அளவுக்கு அதிகரித்தது. இதே ஆண்டுகளில் ஏற்றுமதியின் அளவு 1116 மில்லியன் கெஜம் என்ற அளவிலிருந்து 744 மில்லியன் கெஜம் என்ற அளவாக அல்லது மொத்தவிளைவில் 30%–லிருந்து 14.% அளவாகக் குறைந்தது. 'ஒரே மாதிரியான பண்டங்களை ஒரே விதமான மக்களுக்கு நாம் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். அவர்கள் அப் பொருள்களை இப்போது விரும்பவில்லை' என்பதே நமது ஏற்றுமதியில் உண்டான தேக்கத்திற்கான அடிப்படையான காரணமாகும். இத்தகைய தாழ்வு நிலை இருந்த போதிலும் இந்தியா. தனது ஏற்றுமதி வணிகத்திற்கு இத்தகைய பண்டங்களையே இன்னும் பேரளவில் சார்ந்திருக்கின்றது. தேயிலை. சணல் பண்டங்கள், பருத்தித் துணிப பண்டங்கள், உலோகத் தாதுப்பொருள்கள், உலோகத் துண்டுகள் போன்றவைகள் நமது அந்நியச் செலாவணி வருமானத்தில் ஏறத்தாழ -% ஈட்டுவதாக அமைந்துள்ளன.

(ஆ) ஏற்றுமதிச் சந்தைகளைப் பரவலாக்குதல் (Diversifyiug Export Markets)

பொறிசெய் தொழில்களை ஊக்குவிப்பதன் மூலம் ஏற்று மதியைப் பரவலாக்குவதற்கான அவசியம் இருப்பது போல,

ஏற்றுமதி அங்காடிகளைப் பரவலாக்குவதன் அவசியமும் இருக்கிறது. மிகவும் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் நமது வழி வழியான ஏற்றுமதிப் பண்டங்களை அதிகமாக ஏற்றுமதி செய்வதற்கு எடுக்கப்படும் முயற்சிகளுக்குப் பதிலாக, நமது ஏற்றுமதிப் பண்டங்களுக்காகச் சிறிய தொழில் நாடுகளையும், வேறுபல குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளையும் நாடுவது மிகவும் நல்லதாக அமையும். நமது நாட்டின் பொறிசெய் பண்டங்கள் நம்மைக் காட்டிலும் மிகவும் வலுவுடைய போட்டியாளர்களால் உற்பத்தி செய்யும் பண்டங்களோடு போட்டிப் போடவேண்டியிருக்கிறது என்ற நோக்கில் பார்க்கும்போது இது மிகவும் சிறப்புடையதாக இருக்கின்றது. இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்க நாடு, ஐரோப்பிய பொதுச் சந்தை உறுப்பினர்கள் ஆகிய நமது வணிகப் பங்காளிகளிடம் பேரளவில் வணிகப் பற்றுக்குறையை நாம் பெற்றிருக்கிறோம். ஐரோப்பியப் பொதுச் சந்தை நாடுகளுக்குள் மிகச் சிறப்பாக மேற்கு ஜெர்மனி நாட்டிலிருந்து நாம் இறக்குமதி செய்த அளவு 1959-60-ல் ரூ.1.910 மில்லியன் அளவிலிருந்து 1960-61-ல் ரூ.1.950-க்கு அதிகரித்தது. ஆனால், அந்தப் பகுதிக்கு நாம் ஏற்றுமதி செய்த அளவு மேற்குறிப்பிடப்பட்ட இரண்டு ஆண்டுகளிலும் முறையே ரூ.500 மில்லியன், ரூ.520 மில்லியன் என்றிருந்தது. எனவே, ஏற்றுமதியைக் காட்டிலும் இறக்குமதியின் அளவு 1959-60-ல் ரூ.1,410 மில்லியனாகவும், 1960-61-ல் ரூ.1,430 மில்லியனாகவும் இருந்தது. இங்கிலாந்து நாடும் ஐரோப்பியப் பொதுச் சந்தையில் சேர்ந்துவிடும்போது நிலைமை இன்னும் மோசமாகும். எனவே, புதிய அங்காடிகளைக் காணவேண்டியதை இது மிகவும் அவசியமாக்குகிறது. நமது நாட்டில் உற்பத்தியாகும் பொறிசெய் நுகர்வுப் பண்டங்களையும், சிறிய இயந்திரப் பண்டங்களையும் நம்மைக் காட்டிலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குப் பேரளவில் ஏற்றுமதி செய்வதற்கான வாய்ப்புகள் பேரளவில் ஆராயப்பட்டுப் பயன்படுத்தப்படவேண்டும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் என்று வகைப்படுத்தப்பட்டிருக்கும் நாடுகளுக்குள்ளேயே முன்னேற்றத்தின் அளவில் பலவித வேறுபட்ட நிலைகள் காணப்படுகின்றன. அத்தகைய நாடுகள் எல்லாமே தொழில் மயமாதலின் மூலம் முன்னேறுவதற்கு விரும்புகின்றன. இந்த நிலை இருப்பதால் ஓரளவுக்குத் தொழில்மயம் ஆகியுள்ள நாட்டின் பண்டங்களை அந்நாட்டைக் காட்டிலும் இன்னும் குறைந்த வளர்ச்சியுடைய நாட்டில் விற்பனை செய்வதற்கான வாய்ப்பு இருக்கிறது. லிபியா, மேற்கு ஆப்பிரிக்கா, பூமத்திய ரேகைக்கு அருகில் உள்ள ஆப்பிரிக்கா, பெல்ஜியன் காங்கோ, போன்ற ஆப்பிரிக்கப் பகுதிகளிலும், மத்தியக் கிழக்கு நாடுகளிலும், இந்தோசீனா, தாய்லாந்து,

இந்தோனேசியா போன்ற தென்கிழக்காசிய நாடுகளிலும், கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும், இலத்தீன் அமெரிக்காவிலும் நமது பண்டங்களுக்கான அங்காடியை அதிகரிப்பதற்கான நல்ல பல வாய்ப்புகள் இருக்கின்றன. இந்த நிலப் பகுதிகளில் உள்ளவற்றில் ஒருசில நாடுகள் மிகவும் தீவிரமான பொருளாதார முன்னேற்றத்தையும் தொழிற் பெருக்கத்தையும் நோக்கிச் சென்றுகொண்டிருக்கின்றன. இந்த நாடுகளின் வாழ்க்கைத் தரம் அதிகரிக்கும் அளவுக்கு நமது ஏற்றுமதிகளின் வாய்ப்புகள் மிகவும் நல்ல முறையில் இருக்கின்றன. இந்த நாடுகளுக்கிடையே தொழிற் பெருக்கத்தில் இந்தியா முன்னிலையில் இருக்கின்றது என்பதால், நமது ஏற்றுமதிகள் நல்ல முறையில் மிக விரைவாகச் செய்யப்பட்டால், இத்தகைய அயல்நாடுகளில் நமது ஏற்றுமதியை அதிகரிப்பதற்கு நல்லதொரு வாய்ப்பு இருக்கிறது. இந்த நோக்கத்திற்காக ஏற்றுமதி வாய்ப்புகளைப் பற்றிய தெளிந்த முழு விபரங்களையும் பெறுவது மிகவும் அவசியமாகும். நமது ஏற்றுமதிப் பண்டங்களின் விலைகள் குறைக்கப்பட்டுத் தரம் மிகவும் உயர்ந்த நிலையில் நிலைநிறுத்தப்படுமானால் நல்ல முறையிலான போட்டி போடும் சக்தி தோன்றும் என்பதையும் மறுக்க முடியாது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கிடையே மிகுதியான அளவுக்குக் கூட்டுறவு இருக்கவேண்டும் என்று குறிப்பிடுவதும் மேலே குறிப்பிட்டதைப் போன்று மிகவும் இன்றியமையாததாகும். இதன் காரணமாகக் கீழ்க்கண்டவற்றில் அரசு மிகுந்த கவனத்தைச் செலுத்துகிறது பண்டங்களின் தரம் மிக உயர்ந்த ரகமாகவும், விலைகள் மிகவும் குறைந்ததாகவும் இருப்பதற்கு அண்மை ஆண்டுகளில் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. தொழில்மயமான நாடுகளிலிருந்து பெறப்படும் அதிகரித்த போட்டியின் காரணமாகத் தென்கிழக்காசிய நாடுகளுக்கிடையே ஆசியப் பொதுச் சந்தை (Asian Common Market) ஒன்றைத் தோற்றுவிப்பதற்கான முயற்சிகளும் மேற்கொள்ளப்படுகின்றன. இவைகள் யாவும் வரவேற்கத்தக்க போக்குகளாகும்.

(இ) உள்நாட்டு நுகர்வின் அளவைக் கட்டுப்படுத்துதல் (Restraining Domestic Consumption)

ஏற்கனவே குறிப்பிட்டதைப் போன்று, அடுத்த சில ஆண்டுகளில் மூலதனப் பண்டங்களின் இறக்குமதிகள் பேரளவில் அதிகரித்தே தீரும் எனலாம். உணவில் நாடு தன்னிறைவைப் பெறும்போது உணவின் இறக்குமதி தவிர்க்கப்படலாம். இதைத் தவிர ஒரு சில பொறிசெய் நுகர்வுப் பண்டங்களின்

இறக்குமதியை இப்போதிருக்கும் அளவைக் காட்டிலும் குறைப் பதற்கான வாய்ப்பும் அதிகமான அளவில் இல்லை. நமது நுகர்வு நிலை ஏற்கனவே மிகவும் குறைந்த நிலையிலிருப்பதால் அதனை மேலும் குறைக்க எண்ணுவது சரியன்று. ஏற்றுமதியின் அளவை அதிகரிக்கும் அளவுக்கு இறக்குமதியின் அளவைப் பேரளவில் தடை செய்யாதவண்ணம் உள்நாட்டு நுகர்வின் அளவு ஒழுங்கு படுத்தப்படலாம். ஒருசில பொறிசெய் பண்டங்கள் தரப்படுத்தப் பட்டால், ஒரே விதமான நுகர்வுப் பண்டங்களைப் பலவிதமாக உற்பத்தி செய்வதில் உண்டாகும் வீணுதலை தவிர்க்கலாம். தலா வருமானம் குறைவாகவும், மூலவளங்கள் மிகவும் வரையறைக்குட்பட்டனவாகவும் இருக்கும் நாட்டில் ஏறத்தாழ ஒரே மாதிரியான பண்டங்களை, குறிப்பாகப் பாதி ஆடம்பரப் பொருள்களாக உள்ளவற்றை உற்பத்தி செய்வதும் பகிர்வதும் நிச்சயமாகச் சிக்கனமானவையல்ல. செயற்கையான கவர்ச்சியைத் தருவதைக் காட்டிலும், பலவிதங்களில் உற்பத்தி செய்வதைக் காட்டிலும், பயன்பாட்டிற்கே மிகுந்த சிறப்பிடம் தரப்பட வேண்டும். ஏற்றுமதிக்காகவும் உள்நாட்டு நுகர்வுக்காகவும் உற்பத்தி செய்யப்படும் நுகர்வுப் பண்டங்களைப் பொறுத்த மட்டிலும் இரண்டையும் வேறுபடுத்திக் காணவேண்டும் என்பதோடு உள்நாட்டு நுகர்வுக்கான பண்டங்களைத் தரப் படுத்தவும் வேண்டும். உள்நாட்டில் உற்பத்தி செய்யப்படும் நுகர்வுப் பண்டங்களைப் பொறுத்தமட்டிலும் அவைகள் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பண்டங்களோடு போட்டி போடத் தக்கவைகளாக இருக்கும்போது, தரப்படுத்தப் பட்ட உற்பத்தி முறையில் பேரளவில் உள்நாட்டு உற்பத்தியைப் பெருக்குவதும், முடிவில் இறக்குமதிகளை அறவே நிறுத்திவிடுவதும் நன்மை தரத்தக்கனவாகும். அத்தகைய தரப்படுத்தப்பட்ட பண்டங்கள் இறக்குமதிக்கான தகுதியான பதிலிகளாக அமையும். பலவிதமான பண்டங்களை உற்பத்தி செய்யும்போது அவை எந்த அளவுக்கு மூலவளங்களைப் பயன்படுத்துவதை அவசியமாக்கு கின்றனவோ அந்த அளவுக்குத் தரப்படுத்தப்பட்ட பண்டங்களின் உற்பத்திப் பெருக்கம் மூலவளங்களைப் பயன்படுத்துவதை அவசியமாக்காதவரை உண்மையான சிக்கனம் அங்கு இருக்கிறது என்பது பொருள். அதோடு ஏற்றுமதி செய்யத்தக்க பிற பண்டங் களின் உற்பத்தி அளவுகளில் எந்த விதமான பாதகமான விளைவு களையும் அது பெற்றிருக்காது. உண்மையிலேயே ஏற்றுமதிப் பெருக்கத்திற்கான முயற்சிகளும், இறக்குமதிகளைக் கட்டுப்படுத்து வதற்கான முயற்சிகளும் எல்லாவகைப் பிரிவு மக்களின் நுகர்வுப் பழக்கத்தையும், குறிப்பாக மிகவும் வசதி படைத்த செல்வச் செழிப்புள்ள பிரிவினரின் நுகர்வுப் பழக்கத்தையும் பாதிக்கும்.

ஆனால், உள்நாட்டு உறுதித் தன்மைக்கும் வெளிநாட்டு உறுதித் தன்மைக்கும் மிகக் குறைவான அளவில் பாதக விளைவைத் தந்து நமது பொருளாதாரத்தை மிக வேகமாக நாம் வளர்ச்சியுறச் செய்வதற்கு இந்த சிரமத்தை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

# 9. அயல்நாட்டு மூலதனம்: வகைகளும் போக்குகளும்

## (External Capital: Types and Trends)

அயல்நாட்டு மூலதனத்தைப் பெறும் நாடுகளின் நோக்கிலிருந்து பார்க்கும்போது, அந்நிய மூலதனமானது கடன் மூலதனம் நேரடி முதலீடு, நிதி உதவிகள், மற்ற உதவிகள் என வகைப் படுத்தப்படலாம். அயல்நாட்டு மூலதனத்தின் மோதல் (Impact), அவைகள் தரக்கூடிய நன்மைகள், அவைகளைப் பெறும் நாடுகள் மீது அவைகள் தோற்றுவிக்கக்கூடிய சிரமங்கள் ஆகியவைகளைப் பொறுத்தமட்டிலும் இவ் வகை மூலதனங்களுக்கிடையே வேறு பாடுகள் அதிகம் காணப்படுகின்றன. வட்டியையும், கடன்தீர் நிதியையும் செலுத்துதல் என்பதைக் கடன் மூலதனம் உட்கொண் டிருக்கிறது. ஆனால், நிதி உதவிகள், மற்ற உதவிகள் என்ற வடிவத்தில் பெறப்படுபவைகள். அவைகள் செல்லும நாட்டின் நிகர ஆதாயத்தைக் குறிப்பிடுகின்றன. நேரடி முதலீடுகளுக்கு வட்டி எதுவும் செலுத்த வேண்டியதில்லை. ஆனால், அத்தகைய முதலீடுகளைப் பெற்றிருக்கும் நாடுகளிலிருந்து காலந்தோறும் ஆதாயம், ஆதாய ஈவு என்ற வடிவத்தில் மூலவளங்கள் மாற்றப் படுவதை இவை அவசியமாக்குகின்றன. தோற்றுவாயைக் கருத்தில் கொண்டு அயல் மூலதனத்தை இன்னொரு விதமாகவும் வகைப்படுத்தலாம். இந்த அடிப்படையில் அயல்நாட்டு மூல தனத்தின் மூன்று பெரும் பிரிவுகளை வேறுபடுத்திக் காட்ட முடியும்.

1. தனியார் அந்நிய மூலதனம்,

(2) அந்நிய நாடுகளுக்கு அரசுகளினால் கொடுக்கப்படும் கடன்களும், நிதி உதவிகளும்.

*(3) பன்னாட்டுப் பதிலாண்மைகளிலிருந்து பெறப்படும் கடன் களும், நிதி உதவிகளும்.*

*அந்நிய மூலதனத்தின் இத்தகைய மூன்று பிரிவுகளின் தராதரமான சிறப்புத் தன்மையையும், அவைகளின் பெயர்ச்சியில் அண்மைக் .காலப் போக்குகளையும் பற்றி மிகச் சுருக்கமாக ஆராய்வது நன்று.*

(1) தனியார் அந்நிய மூலதனம் (Private Foreign Capital)

*தனியார் மூலதனம் அல்லது தொழில் முயற்சி மூலதனம் கடன்கள் அதாவது கைப்பை முதலீடு* (Portfolio Investment) *என்ற வடிவத்திலும், சரி ஒப்பு மூலதனம்* (Equil Capital) *அதாவது நேரடி முதலீடு என்ற வடிவத்திலும் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்கு வருகிறது. இது தவிர, அயல் நாடுகளில் முதலீடு செய்வதற்காக வணிக வங்கிகள் மூலமாகவும் தனியார் மூலதனம் செல்கிறது. கடன் கொடுக்கும் நாடுகளில் உள்ள தனி நபர்கள், கடன் பெறும் நாட்டில் உள்ள பங்கு நிறுவனம், கம்பெனி ஆகியவைகளின் பத்திரங்களையும் கடன் பத்திரங்களையும் பெற்றுக்கொள்வதன் மூலமாக ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குக் கைப்பை முதலீட்டின் மாற்றம் அமைகிறது. ஆனால், நேரடி முதலீடு வேறொரு விதமாக மேற்கொள்ளப்படுகிறது. ஒரு நாட்டிலிருக்கும் நிறுவனத்தைச் சேர்ந்த தொழில் முயல்வோர்கள் இன்னொரு நாட்டிலிருக்கும் துணைத் தொழில் நிறுவனத்தின் மீது முதலீடு செய்வதையே நேரடி முதலீடு குறிப்பிடுறது. இது தவிர, அயல் நாடொன்றிலிருக்கும் நிறுவனம் வளர்ச்சியையும் பெருக்கத்தையும் பெறுவதன் காரணமாகத் தோன்றும் ஆதாயம் மீண்டும் அதே தொழிலில் மறுமுதலீடு செய்யப்படுமானல், அதுவும் (அந் நிறுவனம் இருக்கும் நாட்டில்) நேரடி முதலீடு என்றே குறிப்பிடப்படுகிறது. நேரடி முதலீடு என்பது எந்தத் தொழிலில் முதலீடு மேற்கொள்ளப்படுகிறதோ, அத் தொழிலின்மீது முதலீடு செய்தவரின் கட்டுப்பாடு இருக்கும் என்பதே இங்கு அடிப்படையாகக் குறிப்பிட வேண்டியதாகும்.*

(அ) கைப்பை முதலீடு (Portfolio Investment)

*ஒரு நாட்டிலிருக்கும் தனிப்பட்ட நபர்களின் அல்லது அரசாங்கத்தின் மூலம் தனியார் கைப்பை முதலீடு மேற்கொள்ளப் படுகிறது. பாண்டுகளையும்* (Bonds) *கடன் பத்திரங்களையும் அயல்நாட்டுப் பங்குப் பரிமாற்ற அங்காடியில் விற்பதன் மூலம் இம் முதலீடு பெறப்படுகிறது. இவ்வாறாக, தனிப்பட்ட நபர்களால் அவர்களைப் போன்று அயல்நாட்டிலிருக்கும் தனிப்பட்ட*

நபர்களுக்கு அல்லது அயல்நாட்டின் அரசுக்கு மூலதனம் கடனாகக் கொடுக்கப்படுகிறது. அரசுகள் கடன் பெறும்போது, அரசுத் திட்டங்களின் நிதியாக்கத்திற்கு அல்லது தனிப்பட்ட தொழில் முயல்வோர்களுக்கு மறுகடன் கொடுப்பதற்கு அக் கடன்கள் பயன்படுத்தப்படுகின்றன. இத்தகைய அயல்நாட்டுக் கடன் வாங்குதலில் கடன் வாங்கும் நாடுதான் தொடக்கநிலை முயற்சியை மேற்கொள்கிறது. அந் நாடுதான் ஆயத்தையும் மேற்கொள்கிறது. கடன் வாங்குபவர் அயல்நாட்டு அங்காடியில் தோற்றுவிக்கும் நம்பிக்கையைப் பொறுத்து இத்தகைய கடன்களுக்கான வட்டிக் கட்டணங்கள் அமைகின்றன.

(ஆ) நேரிடையான முதலீடு (Direct Investment)

ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போன்று தாய் நிறுவனங்கள் துணைத் தொழில்களின் நிதியாக்கத்தின் மூலமாகவும், வெளிநாடு களில் இருக்கும் துணைத் தொழில்கள் பெற்ற ஆதாயங்களை முதலீடு செய்வதன் மூலமாகவும் அயல்நாட்டுத் தனியார் முதலீடு மேற் கொள்ளப்படுகிறது. அண்மைக் காலத்தில் குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளில் ஒருசில பண்டங்களின், குறிப்பாக பொறிசெய் நுகர்வுப் பண்டங்களின் இறக்குமதிகளுக்கெதிராகச் சுங்கத் தடைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இந் நிலையானது பெரும் அயல்நாட்டு நிறுவனங்கள் துணைத் தொழில்களை நிறுவுவதையும் அவைகளை விரிவுபடுத்துவதையும் உற்சாகப்படுத்தியிருக்கின்றன. நேரிடையான மாற்றங்கள் நீங்கலாகத் ·தாய் நிறுவனத்தால் கடனாகக் கொடுக்கப்பட்ட இயந்திரங்களும் மற்றப் பல சாதனங் களும் மொத்த நேரிடை முதலீட்டிற்கு உதவி செய்திருக்கின்றன. ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, இந்தியா போன்ற நாடுகளில் இத்தகைய முதலீடுகளைப்பற்றி மேற்கொள்ளப்பட்ட உராய்வுகள் கீழ்க்கண்ட உண்மையைக் காட்டுகின்றன. அதாவது, இத்தகைய முதலீடுகளில் பணமாகக் கொடுக்கப்பட்டது ஏறத்தாழ 23% ஆகவும், கடனாகக் கொடுக்கப்பட்டது 40% ஆகவும், பங்கு தாரர்களுக்குப் பிரித்து கொடுக்கப்படாமல் வைக்கப்பட்டிருந்த ஆதாயம் ஏறத்தாழ 37% ஆகவும் இருக்கின்றன.

நேரடி முதலீடு, அது தோற்றுவிக்கும் ஆதாயத்திலிருந்து வருமானத்தைப் பெறுகிறது. நெகிழ்வற்ற தன்மையில் பணிக் கட்டணங்கள் அங்கு இல்லை. மேலும், மூலதனத்தை இறக்குமதி செய்யும் நாட்டில் அத்தகைய முதலீட்டின் வருமானத்தோடு முதலீடு செய்யும் நாட்டிற்கு மாற்றப்படும் வருமானம் நேரடி யாக மாறுபடுகின்றது. இதை வேறொரு விதத்திலும் குறிப் பிடலாம். அதாவது, கடன் வாங்கும் நாட்டில் பொருளாதார

நிலைகளும் வணிக நிலைகளும் குறைந்து செல்லக்கூடியதொரு காலத்தில் நிகரச் செலுத்துதலுக்கானதொரு நிலையான பளுவை அது சுமத்தாது. மேலும், தனிப்பட்ட முதலீடு செய்பவர்கள் அவர்களின் முதலீடுகளிலிருந்து ஓரளவுக்கு நல்ல முறையிலான ஆதாயத்தைப் பெறுவதில் மிகவும் கவனமாக இருப்பார்கள் என்பதால் அவர்களுடைய மூலதனத்துடன் வேலை செய்வதற்கான திறமையான உழைப்பாளர்களையும் மற்றவைகளையும் கொண்டு வருவார்கள். மூலதனம், தொழில் நுண்ணியல், நிருவாகத் திறன் ஆகியவைகள் எல்லாம் ஒன்றாகச் சேருவது அயல்நாட்டு மூலதனத் திறன் இத்தகைய வடிவத்திற்கு அதிகமான அளவிற்குக் கடுவினை ஊக்குவிப்பதாக இருப்பதற்கு வகை செய்யும். இத்தகைய முதலீடுகள் வணிக நோக்கத்துடன் மேற்கொள்ளப்படுகின்ற காரணத்தால் தவறான வழியில் பயன்படுத்துவதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவாக இருக்கின்றன. மறுமுதலீட்டின் மூலமாக அயல்நாட்டுத் தனியார் மூலதனம் கொடுக்கத்தக்க பெருக்கத்திற்கான அதிகமான வசதியும் உள்நாட்டு மூலதனத்துடன் பல அளவுகளில் பங்காற்றுவதற்காக அது கொடுக்கும் வாய்ப்புகளும் இம் மூலதனங்களுக்குச் சாதகமாகக் குறிப்பிடப்படும் அதிகப்படியான குறிப்புகளாகும். அந்நிய முதலீட்டைப் பெறும் நாட்டினால் பண்டங்கள் இறக்குமதி செய்யப்படுதல் என்பதையே பெரும்பாலும் நேரடி முதலீடுகள் உட்கொண்டிருப்பதால், இத்தகைய முதலீடுகளில் பணவீக்க வாய்ப்பு மிகவும் குறைவாக இருக்கின்றது.

ஆனால், நேரிடையான அந்நிய முதலீடு என்பது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் போக்கிலிருந்து பார்க்கும்போது முழு அளவில் எப்போதும் நன்மை தரத்தக்கது அன்று. இத்தகைய வகையைச் சேர்ந்த நேரடி முதலீடானது கைப்பை முதலீட்டோடு ஒப்பிடும்போது கடன் வாங்கும் நாட்டால் குறைவான அளவுக்கே கட்டுப்படுத்தத் தக்கதாக இருக்கிறது. பொருளாதார மலர்ச்சிக் காலத்தில் இத்தகைய முதலீட்டிலிருந்து பேரளவு ஆதாயம் தோன்றுகிறது. இதன் தன்மையைப் பார்த்தால், இது கடன் பெறும் நாட்டிற்கு அதிகமான அளவு நன்மையைக் கொடுப்பதாக அமைந்திருக்கிறது இதுவே இதன் பெரும் குறையாகும். ஆதாயப் பங்கு ஈவு விகிதம் நெகிழ்ச்சியுடையதாக இருந்தாலும், இத்தகைப் முதலீட்டிற்கான தெளிவான ஒப்பளவுக் கருவி (Criteria), பேரளவு ஆதாயத்தைப் பெறுவதற்கான வாய்ப்புகள் கிடைத்தல் என்பதேயாகும். பொறிசெய் நிறுவனங்கள் நன்கு செயல்படுவதற்கு மிகவும் அவசியமான பொருளாதாரப் பின்னமைப்பு வசதிகளும், பெருகிவரும் உள்நாட்டு அங்காடியும் இல்லாதிருக்கும்

போது, அயல்நாடுகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மேற்கொள்ளும் நேரிடையான முதலீடு வளம்பறித் தொழில்களிலேயே செறிவாக மேற்கொள்ளப்படுகின்றது. 1930ஐச் சேர்ந்த ஆண்டுகளில் உண்டான தொழில் மந்தக் காலத்திற்கு முன்பு இங்கிலாந்திலும், ஐக்கிய அமெரிக்காவிலும் மேற்கொள்ளப்பட்ட மொத்த நேரடி முதலீட்டில் 3% அளவே தொழில்களின் மீது மேற்கொள்ளப்பட்டது. முதலீட்டைப் பெறும் நாட்டின் உண்மையான முன்னேற்றத் தேவைகளைக் கருத்தில் கொள்ளாமல், உலகப் பெரும் போர் முடிந்த பின்னர் வந்த ஆண்டுகளில் பெட்ரோலியத்தின்மீதான முதலீடுகளைப் போன்று. முதலீடு செய்யும் நாட்டின் தேவைகளையே கருத்தில் கொண்டு இத்தகைய முதலீடுகள் மேற்கொள்ளப்படுவதால் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இத்தகைய முதலீடுகளைப் பொறுத்தமட்டிலும் மனநிறைவின்மை காணப்படுகின்றது. இத்தகைய முதலீடுகள் குறைந்த வருமான நாடுகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் மறைமுகமாகத்தான் உதவ முடியும். இது தவிர, மூலதனத்தை இறக்குமதி செய்யும் நாட்டில் நிலவும் வணிக நடவடிக்கையோடும், ஆதாயம் பெறும் நிலையோடும் இத்தகைய தனியார் அயல் மூலதன வருகை நேரடியாக மாறுபடுவதோடு, பின்னர்க் குறிப்பிடப்பட்ட நாட்டின் உண்மையான தேவைகளோடு பெரும்பாலும் தலைகீழான தன்மையிலேயே மாறுபடுவதாகவும் இருக்கிறது வணிக மலர்ச்சிக் காலத்தில் தங்குதடை இல்லாமல் இது வருகிறது. ஆனால். பணவாட்டக் காலத்தில் இது வற்றி விடுகிறது. பணவாட்டக் காலத்தில் இத்தகைய உதவி நிறுத்தப் படுமானால் அது உலகத்தின் செழிப்புக்கு மிகவும் ஆபத்தை உண்டு பண்ணும் என்றிருந்தாலும் பணவாட்டக் காலத்தில் இது வற்றி விடுகிறது. மூலதனத்தை இறக்குமதி செய்யும் நாடுகள் அந்நியர்களைப் பற்றிச் சந்தேகப்படுகின்றன; அயல் நாட்டினரை வேலைக்கமர்த்தியிருப்பதையும். உரிமையை அந்நியர்கள் வைத்துக் கொண்டு வேலை பார்க்காமலிருக்கும் இயல்பைப் பற்றியும் குறை கூறுகின்றன; பெரும் அந்நியக் கம்பெனிகளின் இணைப்பு நிறுவனங்கள் அல்லது துணைத் தொழில்கள் நாட்டில் அரசியல் செல்வாக்கைப் பெற்றுவிடுகின்றன என்பதைப் பற்றியும் குறை கூறுகின்றன. அதே நேரத்தில் நாட்டுடைமையாக்கப்பட்டுவிடுதல், பரிமாற்றக் கட்டுப்பாடுகள், வரிக் கொள்கை, நாட்டிலிருக்கும் அரசாங்கத்தின் அரசியல் கொள்கை, பொருளாதாரக் கொள்கை ஆகியவைகளைப்பற்றி நேரடி முதலீடுகளை மேற்கொள்பவர்களுக்கு இருக்கும் பயம் இத்தகைய முதலீடுகளின் ஓட்டத்தைத் தடை செய்திருக்கின்றது.

**(இ) அந்நியத் தனியார் மூலதனப் பெயர்ச்சியின் போக்குகள் (Trends in the Movement of Foreign Private Capital)**

இங்கிலாந்தின் மூலதன அங்காடியில் அயல் வெளியீட்டு மிதப்பின் பொதுவான போக்கு ஐக்கிய அமெரிக்க நாட்டின் அமைப்புக்கு ஒத்து வரக்கூடியதாக இருக்கிறது. அயல் நாட்டு மூலதன வெளியீடுகளின் அளவு இங்கிலாந்து நாட்டில் 1920-1 30 ஆகிய ஆண்டுகளில் ஆண்டொன்றுக்குச் சராசரியாக $500 மில்லியன் அளவிலிருந்து 1532-38-ல் $143 மில்லியன் அளவாகக் குறைந்திருந்தாலும், இரண்டாம் உலகப் பெரும் போருக்குப் பின்னர்த் தோன்றிய மறுமலர்ச்சி அதிகமான அளவினதாக இல்லை. போருக்குப் பின்னர் வந்த ஆண்டுகளில் மூலதன வெளியீடுகளின் மீது இங்கிலாந்தின் அரசு ஒரு சில தடைகளைக் கொண்டுவந்தது. மேலும், வெளிநாடுகளில் கிடைக்கும் மூலவளங்கள் யாவும் காமன்வெல்த் தனியார் வெளியீடுகளுக்காகவும், பொது வெளியீடு களுக்காகவும் என்று ஒதுக்கி வைக்கப்பட்டது. 1955-ல் இங்கிலாந்தின் அயல்நாட்டுச் செலுத்துநிலை மோசமாகியது. எனவே, உள்நாட்டிலும் அயல்நாடுகளிலும் புதிய முதலீடு களுக்கான திட்டங்களுக்கு அனுமதியளிப்பதில் மிகவும் கட்டுப் பாட்டுடன் நடந்துகொள்ளுமாறு மூலதன வெளியீட்டுக்குழு (Capital Issues Committee) கேட்டுக்கொள்ளப்பட்டது. மேலும், இங்கிலாந்து வங்கியின் கடன் கழிவு விகிதம் 4½% அளவாக அதிகரிக்கபப்பட்டது. அரசாங்கத்தினல் கடைப்பிடிக்கப்பட்ட இறுக்கமான பணக்கொள்கையும், வட்டி விகிதத்தை அதிகரித் ததும் பலவிதமான காமன்வெல்த் நாடுகள் கடன் வாங்குவதற்கும், புதிய கடன்களை வெளியீடுவதற்கும் தடையாக இருந்தன. இங்கிலாந்தில் வட்டி விகிதங்களைக் கட்டுப்படுத்தியதன் விளைவாக நியூசிலாந்து தென் ஆப்பிரிக்க யூனியன், ஆஸ்திரேலியா போன்ற காமென்வெல்த் நாடுகளின் வட்டி விகிதங்கள் இங்கிலாந்தில் இருந்ததைக் காட்டிலும் குறைவான அளவிலேயே இருந்துவரும் போக்கைப் பெற்றிருந்தன. இத்தகைய காரணி இருந்த போதிலும் காமன் வெல்த் நாடுகளுக்காக இலண்டன் அங்காடியில் பத்திரங்களை வெளியிடுவதற்கான விண்ணப்பங்கள் 1959ஆம் ஆண்டின் தொடக்க நிலையில் அதிகரித்துவந்தது. அதோடு இங்கிலாந்து அரசு தனியார் முதலீட்டைத் தூண்டிவிடுவதற்கான தொரு முயற்சியை மேற்கொண்டது; கடன்மீதும் செலவுகளின் மீதும் இருந்த தடைகளைத் தளர்த்தும் முயற்சிகளையும் மேற் கொண்டது. உலகப் பெரும் போர் முடிந்த உடனடி ஆண்டுகளில் மிகவும் குறைந்துவிட்ட அயல்நாடுகளின்மீதான மூலதன வெளி யீடுகள் 1950-ல் £50 மில்லியனுக்கும் அதிகமாக அதிகரித்தன.

1954-ல் அசாதாரணமான உயர்நிலையான $80 மில்லியன் அளவை இது அடைந்தது. அதிலிருந்து ஏறத்தாழ ஆண்டொன்றுக்குச் சராசரியாக $60 மில்லியன் என இது அமைந்திருக்கிறது. 1958-ல் வெளியிடப்பட்ட மூலதன வெளியீடு களின் மொத்த அளவான $74 மில்லியனில் காமன்வெல்த் நாடுகள் மட்டும் $67·5 மில்லியன் அளவுக்கு அல்லது 91% அளவுக்குக் காரணமாக அமைந்தன.

இங்கிலாந்தின் தனியார் தொழில் முயற்சி மூலதனம் காமன் வெல்த் நாடுகளில் செறிவாகச் சென்றது. ஆனல், ஐக்கிய அமெரிக்க நாட்டின் கைப்பை முதலீடு கனடா போன்ற முன்னேற்ற மடைந்த நாடுகளில் உள்ள பொறிசெய் நிறுவனங்களினுல் ஈர்க்கப் பட்டது. மேலும், இம் முதலீடு இலத்தீன் அமெரிக்க நாட்டிலும் ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பெட்ரோலியத் தொழிலாலும் கவரப்பட்டது. 1957-ல் ஐக்கிய அமெரிக்க நாட்டின் மொத்த வெளிநாட்டுக் கைப்பை முதலீடு $5,919 மில்லியனுக இருந்தது. இதில் $ 3,894 அல்லது 66% கனடாவினுல் பெறப் பட்டதாகவும், $709 மில்லியன் மேற்கு ஐரோப்பா மற்றும் சார்ந் திருக்கும் நாடுகள் ஆகியவைகளினுல் பெறப்பட்டதாகவும், $160 மில்லியன் இலத்தீன் அமெரிக்காவினுல் பெறப்பட்டதாகவும், $585 மில்லியன் மற்ற நாடுகளால் பெறப்பட்டதாகவும், $571 மில்லியன் பன்னுட்டு நிலையங்களால் பெறப்பட்டதாகவும் தெரிய வருகிறது. இங்கிலாந்தின் மூலதன அங்காடியிலிருந்து கடன்பெற்ற ஒரு சில காமன்வெல்த் நாடுகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடு களாக இருந்த போதிலும் இங்கிலாந்து, ஐக்கிய அமெரிகக நாடு, மற்ற நாடுகள் ஆகியவைகளின் அந்நியக் கடன் அங்காடிகளை ஒரு மொத்தமாகப் பார்த்தால், இரண்டாம் உலகப் போர் முடிந்த பிறகு பெரும் மூலதன அங்காடிகளில் வெளியிடப்பட்ட அயல் நாட்டுக் கடன் பத்திரங்களில் மிகச் சிறியதொரு பகுதியையே குறைந்த வருமான நாடுகளெல்லாம் சேர்ந்து பெற முடிகிறது என்பதை நாம் காண முடிகிறது. அதிக வருமானமுடையவை களாகவும், நீண்ட காலமாக நற்பெயர் உடையவைகளாகவும் உள்ள நாடுகளுக்கு இடையே கடன் வாங்குவதில் இருந்த போட்டி யின் காரணமாகப் பலவீனமான நாடுகளும், சிறிய நாடுகளும் ஒதுக் கப்பட்டுவிட்டன என்பதே இதற்கான தெளிவான காரணமாகும். இவ்வாருக, இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்க நாடு ஆகியவைகளின் கைப்பை முதலீட்டில் பெரும் பகுதியைக் கனடாவும், ஆஸ்திரேலி யாவும் பெற்றன. ஆசிய நாடுகளுக்குள் ஐக்கிய அமெரிக்க நாட்டின் மூலதன அங்காடியில் புதிய வெளியீடுகளை வெளியிடு பெற்றியடைந்த நாடு ஜப்பான் நாடு மட்டுமே. பின்னல்,

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பொருளாதாரங்கள் வளர்ச்சியையும் பெருக்கத்தையும் பெற்ற பிறகு, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் கடன் வாங்கும் சக்தி அதிகரித்திருக்கிறது என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும். தொழில் நிதிக் கார்ப்பொரேசன்கள் (Industrial Finance Corporations) முன்னேற்ற வங்கிகள் (Development Banks) அல்லது இதைப் போன்ற பொது நிலையங்கள் ஆகியவைகளின் மூலமாகக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளின் கடன் பத்திரங்களை அயல் நாடுகளில் விற்பனை செய்யும் தகுதியை அதிகரித்திருக்கின்றன. ஒருசில குறைந்த வருமானமுடைய நாடுகளில் நன்கமைக்கப்பட்ட மூலதன அங்காடிகளும் தோன்றிவருகின்றன.

ஐக்கிய அமெரிக்க நாட்டிலிருந்து வெளியேறிய தனியார் மூலதனத்தின் நோக்குக்கு இரு காரணங்கள் குறிப்பிடப்படலாம். முதலாவதாக, பல நாடுகளும் எதிர்நோக்கிய டாலர் பற்றுக்குறை இருந்ததன் காரணமாக இத்தகைய தொந்தரவுகள் இல்லாத நாடுகளில் முதலீடு செய்வதன் மூலம் அந்நிய முதலீடுகளிலிருந்து ஒழுங்கான முறையிலும் நம்பிக்கையான முறையிலும் முதலீடு செய்வது மிகவும் பாதுகாப்பானதாக இருக்கும் என்று அமெரிக்க வணிகர்கள் கருதினார்கள். எனவே, டாலர் ஏற்றுமதி அல்லது 'வெளியே செல்லும் ஓட்டப் பண்டங்களின்' ('outward flow') இத்தகைய நோக்கு செறிந்து காணப்பட்டது. ஆனால், இத்தகைய தொழில்கள் பொதுவாகக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் காணப்படவில்லை. இரண்டாவதாக, உள்நாட்டு ஆதாய வாய்ப்புகளோடு ஒப்பிடும்போது வெளிநாடுகளில் அம் மூலதனத்தின் ஆதாய வாய்ப்புகளே ஒரு நாட்டின் எல்லையைத் தாண்டி மூலதனம் வெளியே செல்லக் கூடியதை நிருணயிக்கும் இறுதிக் காரணிகள் என்று கருதப்படுகின்றன. வெளிநாடுகளில் மேற்கொள்ளப்படும் முதலீடுகளினால் தோன்றும் ஆபத்துகளை ஈடு செய்யும்வண்ணம் இத்தகைய முதலீடுகளிலிருந்து நிகர ஆதாயம் எதுவும் பெறப்படாவிட்டால் மூலதனம் வெளியேறாது. பயன்படுத்தப்படாத மூலவளங்கள் இருக்கின்ற காரணத்தினால்குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மூலதனத்தின் இறுதிநிலை விளைவு தராதரமாக அதிகமாக இருக்கலாம். ஆனால், இதற்கு எதிராகக் கீழ்க்கண்டதைக் குறிப்பிடலாம். இத்தகைய நாடுகளில் பொருளாதாரப் பின்னமைப்புகளும் மற்ற மூலவளங்களும் கிடைப்பதில்லை. இஃது இந் நாடுகளின் உற்பத்தித் திறனைக் குறைத்துவிடுகிறது. உண்மை நிலையைப் பார்க்கும்போது, அமெரிக்கர்களால் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் முதலீடு செய்யப்பட்டிருக்கும் மூலதனத்தின் விளைவு, ஐக்கிய அமெரிக்க நாட்டிலேயே முதலீடு

செய்யப்படும் மூலதனத்தின் விளைவு ஆகிய இரண்டிற்குமிடையே உள்ள வேறுபாடு, ஏழ்மை நாடுகளுக்குள் மூலதனம் செல்வதற்கு எந்த விதமான அளவிலும் கவர்ச்சியானதாக இல்லை என்பதைக் காட்டுகிறது. 1948ஆம் ஆண்டில் ஐக்கிய அமெரிக்க நாட்டில் மேற்கொள்ளப்பட்ட முதலீட்டினால் பெறப்பட்ட விளைவு மூலதனத்தில் 14% ஆகவும், வெளிநாடுகளில் பெறப்பட்ட விளைவு 17% ஆகவும் இருந்தன. அயல்நாடுகளில் மேற்கொள்ளப்படும் முதலீடுகளில் உள்ளார்ந்திருக்கும் ஆபத்துகளினாலும் மற்றப் பல பாதகமான விளைவுகளினாலும், தோன்றக்கூடியவற்றை ஈடுசெய்யும் அளவுக்கு இது மிகவும் அதிகமான அளவன்று பின்தங்கிய நாடுகளில் முதன்மைத் தொழில்களிலும் அல்லது வளம்பறித் தொழில்களிலும் வளர்ச்சியடைந்த நாடுகளில் பொறிசெய் தொழில் நிறுவனங்களிலும் ஏன் மூலதனம் சென்றது என்பதற்கான காரணத்தை இது விளக்குகிறது.

இதற்கு மாறாக, பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இருந்த பொருளாதார, சமுதாய நிலைகள் தனியார் மூலதனத்தின் பேரளவிலான ஓட்டத்திற்கு வகை செய்யக்கூடியனவாக இல்லை. இந் நாடுகளில் பெரும்பாலான நாடுகள் மிகவும் அண்மையில்தான் அரசியல் தன்னாட்சியைப் பெற்றவைகளாக இருக்கின்றன. எனவே, நாட்டு உணர்வு அவர்களிடம் அதிகமான அளவில் இருக்கின்றது. எனவே, அவர்கள் அயல்நாடுகளிலிருந்து வரக்கூடிய எத்தகைய பொருளாதாரத் தலையீட்டையும், பகைமையுணர்வோடு பார்க்காவிட்டாலும்கூட, நட்புணர்ச்சி இல்லாமலேயே பார்க்கின்றார்கள். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள அரசாங்கங்களால் விதிக்கப்படும் பலவிதமான தடைகளாலும் அயல்நாடுகளில் முதலீட்டை மேற்கொள்பவர்கள் அதைரியப்படுத்தப்படுகிறார்கள். அயல்நாட்டு முதலீடுகளின் வருகையிலும், நடவடிக்கைகளிலும் விதிக்கப்படும் கட்டுப்பாடுகள் நாட்டுடைமையாக்கப்படுதல், பறிமுதல் செய்யப்படுதல் என்பன போன்ற பயமுறுத்தல்கள், ஒரு சில தொழில்களில் முதலீடு செய்வதைத் தடை செய்தல், ஆதாயத்திற்கு உச்ச வரம்பை நிருணயித்தல், ஆதாயத்தின்மீது மிகவும் அதிகமான அளவில் வளர்விகித முறையிலான வரிகளை விதித்தல், உள்நாட்டு நபர்களைக் குறிப்பிட்ட அளவுக்கு வேலையில் அமர்த்திக் கொள்ள வேண்டுமென்ற விதிகள், மூலதனச் சாதனங்கள்மீது மிகவும் அதிகமான அளவிலான இறக்குமதி வரிகள் விதித்தல், உள்நாட்டு மூலதனத்துடன் கட்டாயமாகப் பங்கேற்க வேண்டும் என்று குறிப்பிடுதல், ஆதாயத்தைப் பரிமாறிக் கொள்வதில் தடைகள் மற்றும் இவை போன்றவைகளை இதில் குறிப்பிடலாம்.

இத்தகைய அரசியல் காரணிகள் நீங்கலாகப் பொருளாதார நிலைகளும் அயல்நாட்டு முதலீடு செய்பவருக்குச் சாதகமானதாக இல்லை. பணத்தின் மதிப்பில் உறுதியின்மை, பணத்தை மாற்ற முடியாமை, அந்நியச் செலாவணிப் பற்றுக்குறை, செலாவணிக் கட்டுப்பாடுகள், அயல்நாட்டுச் செலுத்துநிலையில் சமநிலையின்மை ஆகியவைகள் யாவும் அந்நிய முதலீட்டின் ஆபத்துகளையும் உறுதியின்மையையும் அதிகரிக்கின்றன. அமெரிக்க மூலதனச் சொந்தக்காரர்களுக்கு எண்ணெய்த் தொழில் மிகவும் கவர்ச்சி யானதாக இருந்ததற்கு இதுதான் முக்கியமான காரணமாக இருந்தது குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் மிகவும் குறைவான அளவுக்கே முன்னேற்றமடைந்துள்ளன. அவைகளிடம் தொழில் முயல்வோர் திறமை இல்லாதிருக்கின்றது. இவைகளும் பொறி நுட்பத் திறமையின்மை, தொழில் நுண்ணியல் அறிவின்மை ஆகியவைகளும் அந்நிய முதலீட்டிற்கான தடைகளாக இருக் கின்றன. உள்நாட்டு அங்காடிகளின் அளவு மிகவும் குறைவாக இருக்கிறது. எனவே, தொழிலில் பெறப்படும் புதிய பண்டங்கள் உள்நாட்டிலேயே முழுவதும் ஈர்க்கப்பட முடியாமல், வெளி நாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்படத்தக்கவைகளாக இருக்கும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் முதலீட்டு வாய்ப்புகளும், குறைந்துவிட்டன என்று இப்போது குறிப்பிடப்படுகிறது. ஐக்கிய அமெரிக்க நாடு, கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடு களுக்குள் புதியனவாகவும் வளம் பறிக்கப்படாதவைகளாகவும் உள்ள தொழிலகளில் 19ஆம் நூற்றுண்டில் சென்ற மூலதனத் துடன் முதலாளித்துவ உற்பத்தி முறைகளில் பழக்கப்பட்ட மக்களும் சேர்ந்து சென்றனர். ஆனால், முற்றிலும் வேறுபட்ட பொருளாதாரச் சமுதாய நிலைகளுடன் இப்போதுள்ள நாடுகளில் அந்நிய மூலதனம் விரும்பப்படுகின்றது. இத்தகைய நாடுகளில் தொழில்மயமாகும் எந்த விதமான திட்டத்திற்கும் மக்களின் அழுத்தம் மிகவும் தீவிரமான தன்மையில் இருக்கின்றது. இது தவிர குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிலும் அந்நியக் கடன்களின் தேவைகள் அரசின் கொள்கையால் கட்டுப்படுத்தப் படுகின்றன அல்லது தடை செய்யப்படுகின்றன. இந் நாடுகளில் வங்கி நிறுவனங்களும், மற்ற நிதி நிறுவனங்களும் மிக அண்மைக் காலத்தில் நல்ல வளர்ச்சி பெற்றிருக்கின்றன. இந் நிலையங்களின் முன்னேற்றம் உள்நாட்டு மூலதனத் திரட்சி நல்ல முறையில் இருப்பதற்கு உதவி செய்திருக்கின்றது. அந்த அளவிற்கு வெளி நாட்டு உதவியின்மீதான அழுத்தத்தை இது குறைத்திருக்கிறது. இது தவிர அந்நியச் செலாவணி மூலவளங்களின்மீதான துன்பத்தைக் குறைப்பதற்கும், அயல்நாட்டுச் செலாவணிச் சமநிலையை உறுதிப்படுத்துவதற்கும் ஒரு வழியாக இறக்குமதி

நாட்டத்தின்மீது கட்டுப்பாடுகளைக் கொண்டுவருதல் என்பதைத் திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றம் என்பது உட்கொண்டிருக்கிறது. நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்ற வகையில் மிகக் குறைவான அளவில் எவ்வளவு தேவைப்படுமோ அந்த அளவுக்குப், பொருளாதார முன்னேற்றத் தொடர்புடன் அந்நியச் செலாவணித் தேவைகள் குறைக்கப்படுகின்றன. ஆதாய வாய்ப்புகள் குறைவாக இருக்கின்ற காரணத்தால் மட்டுமல்லாமல் தேவையின் அளவு குறைந்துவிட்ட காரணத்தாலும், அந்நியத் தனியார் மூலதனம் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குச் செல்வது குறைந்திருக்கிறது என்பதையே இது காட்டுகிறது.

(ஈ) வணிக வங்கிகளின் மூலம் மாற்றப்பட்ட தனியார் மூலதனம் (Private capital transferred through commercial banks)

நேரடி முதலீடு, கைப்பை முதலீடு என்பனவற்றோடு வணிக வங்கிகளின் மூலமாகவும் மற்ற நிதி நிலையங்களின் மூலமாகவும் அயல் நாடுகளுக்குள் முன்னேற்றமடைந்த நாடுகளின் தனியார் நிதி மூலதனங்கள் சென்றன. இத்தகைய கடன் ஒட்டங்கள் நடுத்தரக் காலக் கடன்கள், குறுகிய காலக் கடன்கள் என்ற இயல்புகளைப் பெற்றிருந்தன. இத்தகைய வகையிலான அயல் நாட்டு உதவி மூன்று வகைப்படும். (i) பன்னாட்டு வங்கியும், ஐக்கிய அமெரிக்க நாட்டின் ஏற்றுமதி இறக்குமதி வங்கியும் கொடுக்கும் கடன்களில் வணிக வங்கிகள் பங்கேற்றுக்கொள்ளுதல். (ii) பெரும்பாலும் அரசாங்க உத்தரவாதத்துடன் வணிக வங்கிகளால் அயல்நாட்டுக் கடன் பெறுவோர்களுக்குக் கொடுக்கப்படும் கடன்கள். (iii) அயல்நாட்டுத் தொழில்களில் வணிக வங்கிகளால் மேற்கொள்ளப்படும் நேரடி முதலீடுகள்.

(i) புனரமைத்தலுக்கும் முன்னேற்றத்திற்குமான உலக வங்கியின் கடன்களில் பங்குகொள்வதன் மூலமாக உலகின் முன்னேற்றமடைந்த நாடுகள் சிலவற்றின் வணிக வங்கிகள் அயல் நாட்டுக் கடன்களைக் கொடுக்கின்றன. 1958ஆம் ஆண்டின் மையப்பகுதிவரை உலக வங்கியால் 201 கடன்கள் கொடுக்கப்பட்டிருந்தன. அதில் 132-ல் தனியார் பங்கீடு இருந்தது. இது தவிர வணிக வங்கிகளுடன் சேர்ந்தும், அங்காடியிலான வெளியீடுகளோடு சேர்ந்தும் உலக வங்கி ஒருசில கடன்களைக் கொடுத்திருக்கிறது. இவ்வாறாக, 1957-ல் இந்திய அரசாங்கக் கார்ப்பொரேஷன் ஒன்று, உலக வங்கியிடமிருந்து $ 5.6 மில்லியனைப் பெற்ற அதே நேரத்தில் ஐக்கிய அமெரிக்க நாட்டில் உள்ள 5 தனியார் வங்கிகளில் கடன் பத்திரங்களை விற்றதன் மூலம் $ 11.2 மில்லியன்

கடனையும் பெற்றது. இதைப் போன்று ஓரளவுக்கு உலக வங்கிகளிடமிருந்தும் கடன்களாக ஐக்கிய அமெரிக்க நாட்டில் ஜப்பானும் இத்தாலியும் 1959-ல் கடன்களைப் பெற்றன. ஐக்கிய அமெரிக்க நாட்டின் ஏற்றுமதி இறக்குமதி வங்கியின் கடன் கொடுக்கும் நடவடிக்கைகளுடன் தனியார் கடன் கொடுத்தல்கள் தொடர்புடையவைகளாக இருக்கின்றன. 1958ஆம் ஆண்டின் பின் பாதிப் பகுதியில் உலக வங்கியில் அனுமதிக்கப்பட்ட 117 புதிய கடன்களின் மொத்த மதிப்பு $ 605.6 மில்லியனாக இருந்தது. இதில் தனியார் பங்கீடு உள்ளிட்ட $162 மில்லியன் மொத்தத் தொகையைக் கொண்டிருந்த 73 கடன்கள் இருந்தன.

(ii) தனியார் மூலதன வெளியோட்டத்திற்கான இன்னொரு வழியாகத் தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளில் மூலதனப் பண்டங்களை உற்பத்தி செய்பவர்கள் குறைந்த வருமான நாடுகளில் உள்ள இறக்குமதியாளர்களுக்கு அனுமதித்த ஏற்றுமதிக் கடன்கள் அமைந்திருந்தன. அத்தகைய ஏற்றுமதிக் கடன்களில் பெரும் பகுதி மூலதனத்தை ஏற்றுமதி செய்யும் நாடுகளில் உள்ள அரசுகளால் காப்பீடு செய்யப்பட்டவைகளாக இருந்தன. அண்மையில் ஏற்றுமதிக் கடனைக் கொடுக்கும் இத்தகைய முறை இங்கிலாந்து, பிரான்சு, செர்மனி, இத்தாலி போன்ற நாடுகளில் மிகவும் முக்கியமான முறையாக மாறிக்கொண்டுவருகிறது. 1957-58-ல் உலக வணிகம் மந்த நிலையடைந்ததும், அயல்நாட்டு அங்காடிகளை நிலையானவைகளாக்கிக் கொள்வதிலும் பெருக்கிக்கொள்வதிலும் தொழில்மயமான நாடுகளுக்கிடையேயான போட்டி அதிகரித்துக் கொண்டுவந்ததும் இத்தகைய புதிய முன்னேற்றத்திற்கான முக்கியமான காரணங்களாக இருந்தன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் நோக்கில் பார்க்கும்போது, அவைகளின் முன்னேற்றத் திட்டங்களின் நிதியாக்கத்திற்கு மேற்கு ஐரோப்பிய நாடுகளால் அனுமதிக்கப்பட்ட ஏற்றுமதிக் கடன்கள் பேரளவில் உதவி செய்திருக்கின்றன. இருப்பினும், இத்தகைய வடிவத்திலான அயல்நாட்டு உதவியிலும் குறைகள் இல்லாமல் இல்லை. பெரும்பாலானவைகளில் இத்தகைய கடன்களைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய கால அளவு 5 ஆண்டுகள் காலத்திற்கு அதிகப்படாமலேயே இருக்கின்றன. இத்தகைய முறையில் மூலதனத்தை ஏற்றுமதி செய்யும் நாடுகள் செய்யும், கொடுக்கும் மூலதனங்கள் அவைகளின் அயல்நாட்டுச் செலுத்துநிலையைப் பொறுத்திருக்கின்ற காரணத்தால் குறுகிய காலக் கடன்கள், நடுத்தரக் காலக் கடன்கள் ஆகியவைகளின் பெருக்கமானது நீண்ட காலக் கடன்களுச்குக் கிடைக்கும் மூலவளங்களின் அளவுகளைக் குறைத்துவிடலாம்.• மிக எளிதான கடன்முறைத் திட்டங்கள் மூலதனத்தை ஏற்றுமதி செய்யும்

நாடுகளில் பணவீக்க விளைவுகளைத் தோற்றுவித்துவிடலாம். இத்தகைய கடன்கள் யாவும் முக்கியமாகக் கட்டப்பட்ட கடன்களே (Tied Loans) ஆகும். எனவே, இவைகள் இத்தகைய கடன்களின் எல்லாவிதமான குறைகளையும் கொண்டிருக்கின்றன. மிக எளிய முறையிலான திட்டங்களில் கடன் கிடைத்தால், அயல்நாட்டுச் செலுத்துநிலைக் குறைகளைத் தீர்ப்பதற்கான அவசரத்தை அது மறைத்துவிடும். அயல்நாட்டுச் செலுத்துநிலையில் உறுதித்தன்மை இல்லாதிருக்கும்போதே, அத்தகைய உறுதித் தன்மை இருப்பது போன்றதொரு பொய்த்தோற்றத்தை அவைகள் தோற்றுவிக்கின்றன. மேலும், ஏற்றுமதிக் கடன்கள் கால நிறைவைப் பெறும்போது, இறக்குமதி செய்த நாட்டின்மீது அவைகள் பெரும் சுமையைச் சுமத்திவிடுகின்றன. கடன்களைப் பெறும் இத்தகைய பொறுப்புகளின் முக்கியத்துவத்தை நன்கு உணராத நாடுகளாக அவை இருக்கின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் ஏற்றுமதி வருமானங்கள் பொதுவாக அதிகமான அளவில் ஏற்றத் தாழ்வுகளையுடைய பண்புகளைக் கொண்டவைகளாக இருக்கின்றன. இவ்வாறிருக்கும் இயல்புடைய ஏற்றுமதி வருமானங்களையுடைய நாடுகளில் இத்தகைய பளு மிகவும் அதிகமான அளவில் அமைந்துவிடுகிறது. ஒரு சில இலத்தீன் அமெரிக்கக் குடியரசுகளின், குறிப்பாக அர்ஜென்டைனா, பிரேசில் போன்றவைகளின் அனுபவமாக இது இருக்கிறது.

(iii) வணிக வங்கிகள் அவைகளே தனியாக அல்லது நாட்டுச் சிண்டிகேட்டில் அல்லது பன்னாட்டுச் சிண்டிகேட்டில் வளர்ச்சியடைந்துவரும் நாட்டில் மூலதனத் திட்டங்கள் பலவற்றிக்கு நிதியாக்கம் செய்துள்ளன. 1950ஆம் ஆண்டிலிருந்து தனியார் பிரான்சு வங்கிகள் இலத்தீன் அமெரிக்காவில் பல திட்டங்களுக்கு நிதியாக்கம் செய்திருக்கின்றன. இத்தகைய கடன் வசதிகளை அர்ஜென்டைனா, இந்தியா, துருக்கி ஆகியவைகளுக்கு இங்கிலாந்து வங்கிகள் கொடுத்திருக்கின்றன. ஐக்கிய அமெரிக்க நாட்டின் தனியார் வங்கிகளும், பெல்ஜியம், செர்மன் கூட்டரசு, நெதர்லாந்து, சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளின் தனியார் வங்கிகளும் அயல்நாட்டுத் தொழில் நிறுவனங்களுக்குக் கடன் கொடுத்திருக்கின்றன அல்லது அயல்நாட்டுக் கடன் பத்திரங்களை வாங்கியிருக்கின்றன. இதற்கும் மேலாக பொருளாதாரத்தில் முன்னேற்றத்தைப் பெற்றுள்ள நாடுகளின் தனியார் வங்கிகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிற்கும் நிதியுதவி அளித்திருக்கின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஏற்கனவே பெற்றிருந்த கடன்களின் நிதியாக்கத்திற்கும் குறுகிய காலக் கடன்களையும், நடுத்தரக் காலக் கடன்களையும் நீண்ட காலக் கடன்

களாக மாற்றுவதற்கும், கடன்தீர் நிதிச் செலுத்தல்கள் பணிகளைச் செய்வதற்கும் குறைந்த வருமானமுடைய நாடுகளுக்கு இத்தகைய கடன்கள் மிகவும் உதவி செய்திருக்கின்றன. குறைந்த வருமானமுடைய நாடுகளின் முதலீடுகளில் நேரடியான நடவடிக்கைகள் காரணமாகவும், ஒரு சிலவற்றில் முறைமைப் படுத்தப்பட்ட இணைக் கடன்களைக் கொடுத்ததன் காரணமாகவும், பன்னாட்டு மூலதன அங்காடியில் கடன்களை எழுப்ப முடியாமல் இருந்த ஏழ்மை நாடுகளின் திறமையின்மையைத் தனியார் வங்கிகள் ஓரளவுக்கு ஈடு செய்தன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளின் வளர்ச்சித் திட்டங்களை நிறைவேற்று வதற்கு அதிக வருமானமுடைய நாடுகளிலிருந்து பெற வேண்டுமென்றிருந்த நிதி உதவிகளை இவைகள் அதிகரித்திருக் கின்றன என்ற கருத்தில் ஐயம் எதுவுமில்லை.

(உ) தனியார் மூலதனத்தின் அதிகமான ஓட்டத்திற்கு வகை செய் வதற்கான வழிகள் (Measures to Facilitate Increased Flow of Private Capital)

அண்மைக் காலத்தில் அயல்நாட்டுத் தனியார் மூல தனத்தின் பெயர்ச்சிப் போக்குகளைப்பற்றி மிகச் சுருக்கமான மதிப்புரை மேலே தரப்பட்டிருக்கிறது. தொழில் முயற்சி முதலீடுகள், கைப்பை மூலதனம், வணிக வங்கிகளால் அனுமதிக்கப் பட்ட கடன்கள் என்ற வடிவத்தில் 1955ஆம் ஆண்டிலிருந்து அதிக மான வருமானமுடைய நாடுகளிலிருந்து சென்ற மூலதனத்தின் அளவு அதிகமாக இருந்தாலுங்கூட, உலகின் குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகள் பெற்ற அளவு இத்தகைய பெரும் அளவில் மிகச் சிறியதொரு பகுதியாகவே இருந்தது.

1956-58 ஆகிய ஆண்டுகளில் தனியார் மூலதனத்தின் பன்னாட்டு ஓட்டத்தைப் பற்றிய ஐக்கிய நாடுகளின் ஆராய்ச்சி (United Nations Study on the International flow of Private Capital 1956–58) மூலதனத்தை இறக்குமதி செய்த நாடுகளை 4 வகை களாகப் பிரித்தது.

(i) ஒன்றுக்கொன்று பேரளவுச் சந்தைகளையும், முதலீட்டு வாய்ப்புகளையும் கொடுத்துக் கொண்ட முன்னேற்றமடைந்த தொழில்மயமான நாடுகள்.

(ii) அதிகமான அளவுக்குத் தொழில்துறையைக் கொண் டுள்ள மிக வேகமாகப் பெருகிவரும் ஆஸ்திரேலியா, கனடா, தென் ஆப்பிரிக்க யூனியன், மெக்சிகோ, பிரேசில் போன்ற நாடுகள்.

(iii) எண்ணெய், இரும்பல்லாத உலோகம் என்ற வடிவத்தில் பெரும்பாலும் இயற்கை மூலவளங்களைக் கொண்டுள்ள குறைந்த வருமானமுள்ள நாடுகள்.

(iv) முக்கியமான இயற்கை மூலவளங்களையோ, பேரளவுத் தொழில்களின் விளைவுகளை ஈர்த்துக்கொள்ளத்தக்க வகையில் சந்தைகளையோ பெற்றிருக்காத குறைந்த வருமானமுடைய நாடுகள்.

ஆசியாவில் உள்ள நாடுகளில் பெரும்பான்மையான நாடுகள் இவ் வகையைச் சேர்ந்தவைகளே. தொழில் முயற்சி மூல தனத்தின் பெரும்பகுதியும், கைப்பை முதலீட்டின் பெரும் பகுதியும் முன்னேற்றமடைந்த தொழில்மயமான நாடுகளுக்குச் சென்றன என்று தெரிகிறது. இரண்டாவது வகையைச் சேர்ந்த நாடுகளும் அயல்நாட்டு மூலதனத்தைக் கவர்ந்திருக்கின்றன. ஆனால் மூலதனத்தை ஏற்றுமதி செய்யும் நாடுகளில் உள்ள பெரும் தொழில் நிறுவனங்களின் துணைத் தொழில்கள், கிளைகள் ஆகியவைகளைத் தொடங்குதல் என்ற வடிவத்தில்தான் இத்தகைய மூலதனம் சென்றிருக்கிறது. இந்த நாடுகளில் பயன் படுத்தப்பட்ட தனியார் அயல் மூலதனத்தின் மொத்த ஆதாயத்தையும், கைப்பை முதலீட்டையும் மறுமுதலீடு செய்தல் என்பது மிகவும் அதிகமாகக் கொடுத்திருக்கிறது மூன்றாவது வகை நாடுகளில் உள்ள இயற்கை மூலவளங்களைக் வளம் பறித்தல், முன்னேற்றுவித்தல் என்பதற்காகவே பெரும் பன்னாட்டுக் கம்பெனிகளால் இந்த நாடுகளில் முதலீடுகள் மேற்கொள்ளப்பட்டன. மூலதனத்தை இறக்குமதி செய்யும் நாடுகளில் கடைசிப் பிரிவைப் பொறுத்தமட்டிலும் தனிமூலதன ஓட்டம் மிகவும் குறைவானதாகவே இருந்தது. உள்நாட்டு மூலதனத் திரட்சி விகிதம் மக்கள் பெருக்க விகிதத்திற்குச் சமமாக இல்லாமல் இருந்தவைகளாகவும். அதிகமான அளவில் மூலதனத் தேவை உள்ளவைகளாகவும் இருந்த ஆப்பிரிக்கா, ஆசியா, தூரக்கிழக்கு ஆகிய பகுதிகளில் தனியார் நீண்ட கால மூலதன வருகை மிகவும் குறைவாகவே இருந்தது.[1]

இந்து இவ்வாறிருந்தாலும், இத்தகைய வகையைச் சேர்ந்த அயல் மூலதனம் பொருளாதார முன்னேற்றத்திற்கு மிகவும் முக்கியமானது என்ற உண்மை மூலதனத்தை ஏற்றுமதி செய்யும் நாடுகளாலும், மூலதனத்தை இறக்குமதி செய்யும் நாடுகளாலும் ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. அதற்கேற்பத் தனியார் மூலதன வெளியேற்றத்தையும், வருகையையும் உறுதிசெய்யும் வகையில்

[1] *International Flow of Private Capital, 1956-58*, U. N, 1959. p. 11.

பல விதமான முயற்சிகள் இருவகை நாடுகளாலும் மேற் கொள்ளப்பட்டுவருகின்றன.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் உள்நாட்டு அல்லது வெளிநாட்டு உறுதித் தன்மையை அயல்நாட்டு மூலதனம் எந்த அளவுக்குக் குறைத்துவிடாமல் பொருளாதார வளர்ச்சிக்கு உதவுவதாக இருக்கிறதோ அந்த அளவைப் பொறுத்துத்தான் இந் நாடுகள் அந்நிய மூலதனத்தை வரவேற்கும் அளவும் அமையும். இந் நாடுகளில் பெரும்பாலான நாடுகள் பொருளாதார முன்னேற்றத்திற்காகத் திட்டமிடுதல் என்ற முயற்சியை மேற் கொண்டிருக்கின்றன. எனவே, அவைகளின் திட்டங்களில் வகுக்கப்பட்டிருக்கும் முன்னேற்ற அமைப்பிற்கு ஏற்றவண்ணம் உள்நாட்டு மூலவளங்களையும் வெளிநாட்டு மூலவளங்களையும் வழிப்படுத்துவதை அவைகள் விரும்புவது நன்கு புரிந்துகொள்ளத் தக்கதே. இதைப் பொறுத்தமட்டிலும் இந்திய அரசின் கொள்கை மிகவும் தெளிவாக இருக்கிறது. அயல்நாட்டு மூலதனத்தைப் பயன்படுத்துவதானது உள்நாட்டு மூலவளங்களைப் பயன் படுத்துவதை அவசியமாக்குகின்றது. உள்நாட்டு முதலீட்டிற் காகப் பேரளவில் மூலவளங்களைப் பெறுவதற்குரிய ஊக்கும் பதிலாண்மையாக அயல் மூலதனத்தைப் பயன்படுத்துவது அமைந்திருக்கிறது.

எனவே, மிகவும் முக்கியமானவைகளிலேயே இத்தகைய முதலீடுகள் வழிப்படுத்தப்பட வேண்டும் என்பது மிகவும் விரும்பத்தக்கதாகும். புதிய உற்பத்தி முறைகள் முன்னேற்று விக்கப்பட வேண்டிய இடங்களிலும், சிறப்பு வகையிலான அனுபவமும், பொறிநுட்பத் திறமையும் தேவைப்படும் இடங் களிலும், அல்லது தேவையோடு ஒப்பிடுகையில் உள்நாட்டு உற்பத்தி அளவுகள் குறைவாக இருக்கும் இடங்களிலும், உள்நாட்டுத் தொழில் மிக வேகமான அளவில் மிக விரைவாக வளர்ச்சியடையாது என்றிருக்கக்கூடிய இடங்களிலும் அயல் நாட்டு முதலீடு அனுமதிக்கப்பட வேண்டும் என்பது பரவலான கொள்கையாக இருக்க வேண்டும். இதுவே இந்திய அரசின் கொள்கையாகும்.[1]

இந்த அடிப்படைக் கொள்கைக்கேற்ப, அயல்நாட்டு முதலீட்டிற்கு அனுமதியளிப்பதற்கு முன்னுல் நான்கு முக்கிய மான குறிப்புகள் அரசாங்கத்தால் கவனிக்கப்படுகின்றன.

1 *The First Five—Year Plan*, Government of India, New Delhi, 1951, p. 438.

முதலாவதாக, உண்மையான பொறிசெய் தொழில் திட்டம் இருக்க வேண்டும். இரண்டாவதாக, உள்நாட்டு மூலதனப் பற்றுக் குறையும், பொறிநுட்ப அறிவும் இல்லாதிருக்கும் இடங்களில் முதலீடுகள் மேற்கொள்ளப்பட வேண்டும். மூன்றாவதாக, இத்தகைய முதலீடு அந்நியச் செலாவணியில் சேமிப்பைத் தோற்றுவிக்கத் தக்கதாக இருக்க வேண்டும். நான்காவதாக, திட்டமானது அதிகமான உற்பத்தித் திறனுக்கு வகை செய்யக் கூடியதாக இருக்கவேண்டும். இரண்டாவது குறிப்பும் மூன்றாவது குறிப்பும் மிகவும் அதிகமாகக் கவனிக்கப்பட வேண்டியவைகளாகும்.

பொதுவாக, இந்தியாவில் முதலீடு செய்வதற்காக அந்நிய நிறுவனங்களின் விண்ணப்பங்கள் பெறப்படும்போது, உள்நாட்டு மூலவளங்களை வைத்துக்கொண்டு முன்னேற்றுவிக்கப்பட முடியாத தொழில் திட்டங்களுக்கும் திறம்பட்ட அறிவையும், பொறிநுட்பத் திறனையும் நாட்டுக்குள் கொண்டுவரத்தக்க திட்டங்களுக்கும் முதன்மையிடம் கொடுக்கப்படுகிறது.

மூலதனத்தை ஏற்றுமதி செய்யும் நாடுகளில் முதலீடு உத்திரவாதமளித்தல், வரிச்சலுகைகள் கொடுத்தல், வெளிநாடுகளில் உள்ள முதலீட்டு வாய்ப்புகளைப் பற்றிய தகவல்களைக் கொடுத்தல் என்பனவற்றின் மூலமாகப். புதிதாக வளர்ச்சி பெற்ற நாடுகளுக்குத் தனியார் மூலதன வெளியேற்றத்தை ஊக்கும் விக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. அயல்நாடுகளில் அவர்களின் மூலதனத்தை முதலீடு செய்வதால் தோன்றும் ஆபத்துகளிலிருந்து தப்பிப்பதற்குத் தனியார் முதலீடு செய்பவர்களுக்கு உத்திரவாத மளிப்பதில் ஐக்கிய அமெரிக்க நாடும், ஜப்பானும் தலைமை வகித்து நடத்திச்சென்றிருக்கின்றன. ஜப்பானின் ஏற்றுமதிக் காப்பீட்டுச் சட்டத்துறை (Japani's Export Insurance Law) திருத்தியமைத்ததன் மூலம், அயல்நாடுகளில் முதலீடு செய்யும் சப்பானியர்களுக்கு என 1956–ல் முதலீட்டு உத்திரவாத முறை (Investment Insuranee) புகுத்தப்பட்டது. அதன்படி மூலதன இழப்பு, அரசினுல் ஒப்புக் கொள்ளப்பட்ட பன்னாட்டு முதலீடுகளில் ஆதாயத்தைக் கொண்டு வருவதில் தடைகள் போன்றவைகளிலிருந்து தொழில் முயல்வோர்களைப் பாதுகாப்பதற்கு அரசு உத்தரவாதமளித்தது. 1948–லிருந்து முதலீட்டு உத்தரவாத (Investment Guarantee) முறையை நடைமுறையில் ஐக்கிய அமெரிக்க அரசு வைத்திருக்கிறது. பன்னாட்டு அரசுகளின் ஒப்பந்தங்களின் மூலம், அந்நிய நாட்டுப் பணத்தை மாற்ற முடியாமை என்பதாலுண்டாகும் ஆபத்துகள்,

பறிமுதல் எடுத்துக்கொள்ளுதல் போன்றவைகளினுல் தோன்றும் இழப்புகள் போன்றவைகளிலிருந்து ஐக்கிய அமெரிக்க நாட்டு முதலீடு செய்பவருக்குக் காப்பீட்டுப் பாதுகாப்பை அரசு கொடுக்கிறது. ஆனுல், அதிகமான செலவு, கால தாமதம், கார்ப்பொரேசன் பதிவேடுகளையும் கணக்குகளையும் தணிக்கை செய்தல் போன்றவைகள் இதற்குக் தேவைப்படுகின்றன. ஆனுல் தனியார் நிலுவனங்களில் பெரும்பாலானவை இதை விரும்புவது கிடையாது. இக் காரணத்தால் இத்தகைய முறைகள் ஓரளவுக்கே வெற்றியைத் தந்திருக்கின்றன. இது தவிர, வெளிநாட்டு முதலீடுகளிலிருந்து பெறப்படும் வருமானங்களின் வரிப் பொறுப்பு களைக் குறைப்பதில் ஐக்கிய அமெரிக்க அரசு, இங்கிலாந்து ஆகியவைகளில் அன்மை காலத்தில் முயற்சிகள் மேற்கொள்ளப் படுகின்றன 195 ஆம் ஆண்டு நிதிச் சட்டத்தின் மூலம் அயல் நாட்டு வணிகக் கார்ப்பரேசன்களை (Overseas Trade Corporations) இங்கிலாந்து தோற்றுத்திருக்கின்றது. அத்தகைய நிறுவனங்களின் வணிக ஆதாயங்கள் இங்கிலாந்தில் உள்ள பங்குதாரர்களுக்கிடையே பகிர்ந்தளிக்கப்பட்டால்தான் வரி விதித் தலுக்கு உட்படுத்தப்பட்டன. இத்தகைய வகையைச் சேர்ந்த கார்ப்பொரேசன்களைத் தொடங்குவதற்கு ஐக்கிய அமெரிக்க நாடும் கருதியிருக்கிறது. உள்நாட்டில் மூலதனச் சொந்தக் காரர்களுக்கு அயல்நாடுகளில் உள்ள முதலீட்டு வாய்ப்புகளைப் பற்றித் தேவையான தகவல்களைத் தருதல் என்பது முன்னேற்ற மடைந்துள்ள நாடுகள் இவ் வழியில் கடைப்பிடிக்கும் மூன்றுவது முறையாகும். ஐக்கிய அமெரிக்க நாட்டில், அயல்நாட்டு வணிகத் துறையின் பொருளாதார நடவடிக்கைகள் பற்றிய அலுவலகம் (Office of the Economic Allains in the Bureau of Foreign Commerce) முதலீட்டைப் பாதிக்கக்கூடிய அயல்நாட்டு முதலீட்டு நிலைகள், அயல்நாட்டு விதிகள், கட்டுப்பாடுகள் ஆகியவைகளைப் பற்றிய விரிவான செய்திகளை நாட்டு வணிகர்களுக்குக் கொடுக் கிறது. இதற்கும் மேலாக 195 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் அயல்நாட்டு முதலீட்டு அலுவலகம் (Office of Foriegn investment) ஒன்று தொடங்கப்பட்டதிலிருந்து இத்தகைய தகவல்களை கொடுக்கும் பணி இன்னும் அதிகரித்திருக்கிறது. அயல்நாடு களிலிருக்கும் முதலீட்டு வாய்ப்புகளைப் பொறுத்தமட்டிலும் "காசோலைத் தீர்வகம்" போன்று இது செயல்படுகிறது.

அயல்நாட்டு மூலதன ஒட்டத்தை உற்சாகப் படுத்துவதற் காக முன்னேற்றமடைந்த நாடுகளும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளும் தனித்தனியாக மேற்கொள்ளும் முயற்சிகளுக்கும் மேலாக, இருவகை நாடுகளும் இதே நோக்கத்திற்காகச் செய்து

கொள்ளும் ஒப்பந்தங்களின் மூலமாகவும் இவ் வோட்டத்தை அதிகரிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. முதலாவதாக இரு நாடுகளுக்கிடையேயான வணிக ஒப்பந்தங்களைக் குறிப்பிடலாம். ஒப்பந்தத்தில் ஈடுபடும் இரு நாடுகளும் அந்நிய முதலீட்டை ஒரே மாதிரியாகக் கருதவேண்டும். இவ்வாறு கருதுவதால் அந்நியர்களால் மேற்கொள்ளப்படும் முதலீடுகளுக்கு எதிராகப் பேதம் காட்டும் முறையினுல் தோன்றக்கூடிய ஆபத்துகள் குறைகின்றன. இத்தகைய ஒப்பந்தங்களை கொலம்பியா, எதியோப்பியா, கெயிட்டி (Haiti) இஸ்ரேல், உருகுவே, கொரியக் குடியரசு, நெதர்லாந்து, நிகராகுவே (Nigaragua), ஜெர்மன் கூட்டுக் குடியரசு ஆகிய நாடுகளுடன் ஐக்கிய அமெரிக்க நாடு செய்திருக்கிறது. 1957ஆம் ஆண்டிலிருந்து இத்தகைய இரு நாட்டு ஒப்பந்தங்கள் ஏராளமாக நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. மூலதனத்தை ஒரு நாட்டிலிருந்து மற்ருெரு நாட்டிற்கு எடுத்துச் செல்வதை இது எளிதாக்கியிருக்கிறது. இரண்டாவதாக முதலீடு செய்யும் அந்நியர்கள். முதலீடு செய்யும் உள்நாட்டினர், மூலதனத்தை இறக்குமதி செய்யும்நாடுகள் ஆகியவைகளின் கூட்டு முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இத்தகைய முறைகள் இலத்தீன் அமெரிக்கா, தூரக்கிழக்கு, இந்தியா ஆகியவைகளில் அதிகமான அளவில் காணப்படுகின்றன. மெக்சிகோ, நேசியோனல் பினன்செரா (Nacciona! Financiera) மிக முக்கியமான தொழில் முயற்களில் அமெரிக்கத் தனியார் வணிகர்களுடன் சேர்ந்துகொண்டிருக்கிறது. இறுதியாக இரு முறை வரி விதித்தலிலிருந்து (Double taxation) பாதுகாக்கப்படுவதற்கென்று பல முன்னேற்றமடைந்த நாடுகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுடன் ஒப்பந்தங்களைச் செய்துகொண்டிருக்கின்றன. சப்பான் ஐக்கிய அமெரிக்க நாட்டின் 1954ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் கன்வென்சன்களும், (Japan-USA Conventions of April, 1954) பர்மா, சிலோன், மலேயக் கூட்டாட்சி, சிங்கப்பூர், வடக்குப் போர்னியோ, பாக்கிஸ்தான் ஆகிய நாடுகளுடன் இங்கிலாந்து செய்துகொண்ட ஒப்பந்தங்களும் இவ்வகையைச் சேர்ந்தவைகளாகும். 1953ஆம் ஆண்டு நிதிச்சட்டத்தின் மூலம் இந்திய அரசு அயல்நாட்டு அரசுகளுடன் இரு முறை வரி விதித்தல் என்பதிலிருந்து பாதுகாத்துக்கொள்ளப்படுவதற்கான ஒப்பந்தங்களை மேற்கொள்ளுவதற்கு அதிகாரம் அளித்தது. அண்மையில் கனடா, இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்க நாடு ஆகிய நாடுகள் குறைந்த வருமானமுடைய நாடுகளுடன் செய்துகொண்ட வரி ஒப்புதல் ஒப்பந்தங்கள் விரிவாக்கப்பட்டிருக்கின்றன. 1956-ல் ஐக்கிய அமெரிக்க நாடு, ஹோன்டுராஸ் (Honduras) நாட்டோடும் அதற்கடுத்த ஆண்டில் பாக்கிஸ்தான் நாட்டோடும் ஒப்பந்தங்

களைச் செய்துகொண்டது. ஐக்கிய அமெரிக்க நாட்டிற்கும் இங்கிலாந்திற்குமிடையே 1946–ல் செய்துகொள்ளப்பட்ட ஒப்பந்தங்கள் 1958-ல் இங்கிலாந்தின் பன்னாட்டுப் பகுதிகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டன.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பொதுவாக அயல்நாட்டு மூலதனத்தின்மீது சந்தேகப் பார்வையுடையவைகளாக இருக்கின்றன. இதனை நீக்கி உள்நாட்டு மூலதனத் திரட்சிக்கு அயல் நாட்டு மூலவளங்களின் முக்கியத்துவத்தை இந் நாடுகள் உணர்ந்து வருகின்றன. இது தவிர, வளர்ச்சி பெற்ற நாடுகள் அவைகளிடம் இருக்கும் உபரி மூலவளங்களை ஏழ்மை நாடுகளின் பொருளாதார முன்னேற்றங்களுக்குக் கிடைக்கும்படியாகச் செய்வதன் மூலம் உதவ வேண்டிய பொறுப்புகளைப்பற்றி அதிகமான அளவில் உணரத் தலைப்பட்டிருக்கின்றன. பொருளாதார நிலையில் முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் பன்னாட்டு மூலதன மாற்றத்திற்கு வசதி செய்வதற்காக மேற்கொண்ட முயற்சிகளின் காரணமாகவே இவைகள் யாவும் தோன்றியிருக்கின்றன. எனவே, பன்னாட்டு உறவுகளில் முன்னேற்றம், உலக நாடுகளின் தேவைகளையும் பொறுப்புகளையும் நன்கு உணர்தல் என்ற நிலைகளில் முன்னேற்றம் தோன்றும்போது, தொழில் முயற்சி முதலீடு, கைப்பை முதலீடு என்ற இரு வடிவங்களிலும் பன்னாட்டு மூலதனத்தின் ஓட்டத்திற்கான வாய்ப்புகள் மிகவும் சிறந்த முறையில் இருக்கும் என நம்பப்படலாம்.

## அரசுகளிடமிருந்து வரும் கடன்களும் நிதி உதவிகளும்
## (Loans and Grants from Governments)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கு வெளிநாட்டு மூலதன ஓட்டத்திற்கான அண்மைக் காலப் போக்கில் சிறப்பானதொரு இயல்பு இருக்கின்றது. அதாவது, தனியார் மூலங்களிலிருந்து பெறப்பட்ட அயல்நாட்டு மூலதன அளவில் குறைவு மிக வேகமாகத் தோன்றியது. ஆனால், அரசுகளிடமிருந்தும் பன்னாட்டுப் பதிலாண்மைகளிடமிருந்தும் பெறப்பட்ட பங்கு அதிகரித்ததன் மூலமாக இக் குறைவு ஈடு செய்யப்பட்டது. அரசாங்க அளவில் மூலதனத்தின் பன்னாட்டு மாற்றங்கள் மூன்று விதங்களில் மேற்கொள்ளப்படுகின்றன.

(அ) கடன்களும் நிதி உதவிகளும்.

(ஆ) பொறிநுட்ப உதவி.

(இ) உணவு உபரிகளை ஏற்றுமதி செய்தல்.

(அ) அரசுக் கடன்களும் நிதி உதவிகளும் (Loans and Grants)

அரசாங்கக் கடன்களுக்கான இறுதியான மூலம் மக்களின் சேமிப்பே. அவ்வாறிருப்பதால் கடன்தீர் நிதியையும் வட்டியையும் செலுத்துவதில் உள்ளார்ந்திருக்கும் ஆபத்தானது அரசாங்கத்தின் மூலமாக நாட்டு மக்கள் அனைவராலுமே பகிர்ந்துகொள்ளப் படுகிறது. நாட்டின் அயல்நாட்டு வணிகத்தை முன்னேற்று விப்பதில் உதவி செய்வதற்காக 1934-ல் ஐக்கிய அமெரிக்க நாட்டில் ஏற்றுமதி இறக்குமதி வங்கி அமைக்கப்பட்டது. அயல் நாடுகளில் அமெரிக்கப் பண்டங்களின் இறக்குமதிக்கு வசதி செய்வதற்காகப் பொது மூலதனத்தை மாற்றச் செய்யத்தக்க தொரு பதிலாண்மையாக (Agency) இஃது இருக்கிறது. குறுகிய கால மூலதன முலவளங்கள், தனியார் துணை மூலதன மூலவளங்கள் ஆகியவைகளுக்காகவே இப் பதிலாண்மையின் மூலமாகக் கடன்கள் தரப்பட்டன. இதனுடைய முதன்மை நோக்கம் உள்நாட்டுப் பன்னாட்டு வணிகத்தை முன்னேற்றுவிப்பதாக இருந்தது. அதன் காரணமாகக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கு நிராகரிக்கத் தக்க குறைந்த அளவிலேயே இது நன்மையைத் தந்தது. மேலும், இதனால் பெறப்படும் நன்மைகள் மறைமுகமான நன்மைகளின் இயல்புகளைப் பெற்றிருந்தன. இதைப்போல இங்கிலாந்து நாடும் அதன் காலனி நாடுகளில் பெரும்பான்மையானவற்றிற்குப் பொது மூலதனம் கிடைக்குமாறு செய்தது. இதுபோலப் பிரான்சு நாடு வடக்கு ஆப்பிரிக்காவில் தன்னைச் சார்ந்துள்ள நாடுகளுக்குப் பொது மூலதனம் கிடைக்குமாறு செய்தது. அண்மையில் சோவியத் யூனியனும் இத் துறையில் புகுந்திருக்கிறது. கடன் களைப் பெறும் நாடுகளுக்கு மிகவும் குறைந்த வட்டி விகிதத்தில்—2% வட்டி விகிதத்தில்—மூலதனப் பண்டங்களைக் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாகப் பின்னொரு காலத்தில் கடனைப் பெற்றுக் கொண்ட நாடுகளிடமிருந்து முதன்மைப் பண்டங்களாக, இக் கடன்களைத் திரும்பப் பெறும்வண்ணம் சோவியத் யூனியன் இக் கடன்களைக் கொடுக்கின்றது. தனிப்பட்ட நபர்கள் அல்லது வணிக நிறுவனங்கள் கடன் வாங்குவதைக் காட்டிலும் அரசாங்கமே நேரிடையாக மற்றொரு அரசாங்கத்திடமிருந்து கடனைப் பெறுவதில் ஒரு நன்மை இருக்கிறது. எத்தகைய இயல் புடைய முன்னேற்றம் தேவைப்படுகிறது, எந்த அளவுக்கு முன்னேற்றம் தேவைப்படுகிறது, இந்த நோக்கங்களை நிறை வேற்றுவதற்காக எந்தெந்த வழிகளில் அயல்நாட்டு மூலதனம் சிறந்த முறையில் பயன்படுத்தப்படவேண்டும் என்பனவற்றை அறிந்துகொள்வதில் தனிப்பட்டவர்களைக் காட்டிலும் அரசு நல்ல நிலையிலிருக்கிறது என்பதுதான் இந்த நன்மை. அயல்நாட்டு

மூலதனத்தை அரசாங்கங்கள் மிகச் சிறந்த முறையில் வெற்றி தரும்வண்ணம் பயன்படுத்துவதானது தனிப்பட்ட வணிகங்களின் மீதான முதலீட்டு ஆபத்துகளைக் குறைக்கிறது. இதற்குமாருகக் குறைந்த வட்டி விகிதங்களில் பொதுக் கடன்கள் கிடைப்பதானது தனியார் மூலதன வெளியேற்றத்தைப் பாதிக்கலாம் என்றும் அச்சுறுத்தப்படுகிறது.

பன்னாட்டு நிதியாக்கத்தில் பொருளாதார முன்னேற்றத்திற் காகத் தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளிலிருந்து குறைந்த வருமான நாடுகளுக்கு நிதி உதவிகளும் மற்ற உதவிகளும் வருவது மிகவும் அண்மையில் தோன்றியதாகும் இரண்டாம் உலகப் போர் முடிந்தவுடனேயே ஐரோப்பாவில் போரினால் அழிவுகளைப் பெற்ற நாடுகளின் புணரமைப்புக்கு உதவுவதற்காக அமெரிக்க நாட்டின் பொது மூலதனம் பேரளவில் வெளியேறியது. தவிர, கொரியா, தைவான், வியட்நாம் ஆகிய நாடுகளில் போர்த் தளவாடங்களை அமைப்பதற்காக நிதி உதவிகள் என்ற வடிவத்தில் பெரும்பாலும் பேரளவிலான நிதி உதவிகளை ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசுத் துறையின் கீழ்ப் (Department of Stali) பன்னாட்டுக் கூட்டுறவு நிருவாகம் (International Co operation Administration) கொடுத்தது. இவ்வாறு இருப்பினும், கடந்த சில ஆண்டுகளில் இத்தகைய வகையைச் சேர்ந்த அயல்நாட்டு உதவிகளைக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளின் வளர்ச்சித் திட்டங்களை நிறைவேற்றுவதற்காகப் பெற்றன. கடன்களைப் பெறும் நாடு களின் நிகர மூலதனங்களின் ஒரு பகுதியாக அவை அமைந்தன. இத்தகைய கடன்களில் பணிக்கான கட்டணங்களும் திரும்பச் செலுத்த வேண்டிய அவசியமும் இல்லாதிருக்கின்றன என்ற காரணத்தால் சமுதாயப் பின்னமைப்புகளை அமைப்பதிலும், பொருளாதாரப் பின்னமைப்புகளை அமைப்பதிலும், தொழில் வளர்ச்சிக்குத் தேவையான பின்னமைப்பு வசதிகளை அமைப் பதிலும் பயன்படுத்தப்படுவதற்குப் பொருத்தமானவைகளாக இவைகள் இருந்தன. எனவே, நல்ல முறையிலான போக்குவரத்து வசதிகளை அமைப்பதிலும், கல்வி வசதிகள், பொது மருத்துவ வசதிகள் ஆகியவைகளை அமைப்பதிலும் இந் நிதி உதவிகளில் பெரும்பான்மையான அளவு பயன்படுத்தப்பட்டது. இவை தவிர, நிதி உதவிகளுக்குச் சாதகமான மற்றொரு குறிப்பும் தரப்படுகிறது, அதாவது, இத்தகைய நிதி உதவிகள், உதவிகளைப் பெறும் நாட்டில் கிடைக்கத்தக்க உண்மை மூலவளங்களுடன் ஒரு நிகர அதிகரிப்பாகவே அமைகின்றன அதன் காரணமாக இவை பண வீக்கத்தைத் தோற்றுவிப்பதில்லை. ஒரு சில கடன்களைப் பயன் படுத்தினால் அவை பணவீக்கத்தைத் தோற்றுவிப்பதுபோல

இவைகள் பணவீக்கத்தைத் தோற்றுவிப்பதில்லை. நிதி உதவிகளைப் பெறும் நாடுகள் வட்டியாகவோ, கடன்தீர் நிதிகளாகவோ உதவி செய்த நாடுகளுக்குத் திருப்பிச் செலுத்த வேண்டிய அவசியம் எதுவுமில்லை. இதன் காரணமாக, உதவி செய்த நாடுகள் உதவி பெற்ற நாடுகளிலிருந்து எந்த விதமான இறக்குமதிகளையும் பெறுவதற்கான அவசியமும் இருக்காது. ஆதலால், கடன்களைக் கொடுப்பதனாலுண்டாகும் விளைவுகளைப்போல் அல்லாமல் நிதி உதவிகளைக் கொடுப்பதால் அவ் வுதவியைக் கொடுக்கும் நாட்டிற்கு அதன் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் தோன்றத்தக்க சிரமங்களையும், வெளிநாட்டு வணிகத்தில் தோன்றத்தக்க சிரமங்களையும் அந் நிதி உதவிகள் தோற்றுவிக்கமாட்டா. இவ் வகையில் பார்த்தால் நிதி உதவிகளைக் கொடுக்கும் வளர்ச்சி பெற்ற நாடுகளும் நன்மைகளைப் பெறுகின்றன எனலாம். கடன்களைக் கொடுக்கும்போது அக் கடன்கள் எந்த வழிகளில் பயன்படுத்தப்பட வேண்டும் என்பதைப் பற்றிய கட்டுப்பாடுகளைக் கடன் கொடுக்கும் நாடு விதிப்பதைக் காட்டிலும் அதிகமான அளவிலான கட்டுப்பாடுகளை நிதி உதவியைக் கொடுக்கும்போது விதிக்க முடிகிறது. பொதுவாகக். குறிப்பிட்ட திட்டங்களின் நிதியாக்கத்திற்கே நிதி உதவிகள் தரப்படுகின்றன. நிதி உதவிகளுக்கான ஒப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ள முறையியேலே நிதி உதவிகளைச் செலவிடுவதற்கு அவற்றைப்பெறும் நாடுகள் கடமைப்பட்டிருக்கின்றன. இருப்பினும் நிதி உதவிகளைப் பெறும் நாடுகளில், நன்கொடை தருவோர் பெறுவோர் உறவுகளைப் பொறுத்தமட்டிலும் மகிழ்ச்சி நிலைமை காணப்படுவதில்லை. இந்த உண்மையான பொருளாதாரக் காரணங்கள் மட்டும் கருத்தில் கொள்ளப்பட்டிருக்குமானல், எந்த அளவுக்கு இருந்திருக்குமோ அதைக் காட்டிலும் குறைவான அளவுக்கே பன்னுட்டு நிதிஉதவிகளைப் பிரபலமானவைகளாக அவை ஆக்கியிருக்கும்.

### (ஆ) பொறிநுட்ப உதவி (Technical Assistance)

குறைந்த வளர்ச்சியுடைய பல நாடுகளிலும் கல்வியறிவின்மையும், பொறிநுட்பத் திறன் இன்மையும், பொறிநுட்ப அறிவின்மையும் பொருளாதார வளர்ச்சிக்கான பெரிய முக்கியமான தடைகளாகவே இருந்துவந்திருக்கின்றன என்பதை அனுபவம் காட்டுகிறது. இக் குறையை நீக்குவதற்காக வளர்ச்சி பெற்ற நாடுகளில் உள்ள பொறிநுட்ப அறிவு பயன்படுத்தப்படுகிறது. பொறிநுட்பத் திறன் பெற்ருேர், பொறியியலாளர்கள், மற்றும் பலவிதமான நிபுணர்கள் ஆகியோர்களின் பணிகளைக் கடனாகத் தருதல் என்ற வடிவத்திலும், பொருளாதார அடிப்

படையில் பின்தங்கிய நாடுகளில் உள்ள மக்களுக்குப் பயிற்சி தருதல் என்ற வடிவத்திலும் இந்த உதவிகள் தரப்படுகின்றன. இத்தகைய உதவிகளைத் தரும் நாடுகள் இவற்றைத் தருவதற்காகப் பணத்தைச் செலவு செய்ய வேண்டியிருப்பதால் ஏழ்மை நாடுகளுக்குக் கிடைக்கச் செய்யப்படும் மூலதனம் என்ற அடிப்படையில்தான் இவைகள் கருதப்பட வேண்டும். 18ஆம் நூற்றாண்டிலும், 19ஆம் நூற்றாண்டிலும் முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாடுகளுக்குத் தொழில்மயமான நாடுகளிலிருந்து சென்ற தனியார் மூலதனமானது பொறிநுட்பத் திறன் பெற்ற உழைப்பு, தொழில் முயற்சி ஆகியவைகளோடு சேர்ந்து தொடர்ச்சியாகவே இடம் பெயர்ந்தது. எனவே, அயல்நாட்டு மூலதனத்தைச் சரியான முறையில் பயன்படுத்துதல் என்ற வினாவே எழவில்லை. ஆனால், பிற்காலத்தில் இத்தகைய இணைந்த இடப்பெயர்ச்சி மிகவும் அரிதாகிவிட்டது அதன் விளைவாக, உடன் செயல்படும் காரணிகள் கிடைக்காமலிருந்தமை தனியார் மூலதனத்தின் தடையற்ற வெளியேற்றத்திற்கான பெரும் தடையாக இருந்தது. எனவே, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள இந்தக் காலியிடத்தை நிரப்பும் சிறப்பான நோக்கத்திற்காகத் தன்னிச்சையான முறையிலும் தனிப்பட்ட வழிகளிலும் பொறிநுட்ப உதவியும், துணையும் அமைக்கப்பட்டன. அண்மைக் காலத்தில் பெரிய அளவில் அமைந்துவிட்ட இத்தகைய உதவிகள், இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்க நாடு, சோவியத் யூனியன் போன்ற நாடுகளின் அரசுகளாலும், அரசுகள் அல்லாத சில நிலையங்களாலும், பன்னாட்டுப் பதிலாண்மைகளாலும் தரப்படுகின்றன.

மூலவளங்களைச் சரியான முறையில் பயன்படுத்துவதற்கு மக்களின் தகுதியை முன்னேற்றுவிப்பதுதான் பொறிநுட்ப உதவியின் முதன்மையான நோக்கமாக இருப்பதால் குறைந்த வளர்ச்சியுடைய நாட்டைத் தொழில் மயமாக்கும் நேரடியான பணியில் இரண்டாந்தர இடத்தையே இது வகிக்கிறது. 192' ஆம் ஆண்டுக் காலத்திலேயே ஒரு சில வடிவங்களிலான பொறிநுட்ப உதவியை இங்கிலாந்து நாடு அதனுடைய பின்தங்கிய காலனி நாடுகளுக்கு. இங்கிலாந்து நாட்டின் காலனி முன்னேற்றம், நல்வாழ்வுச் சட்டத்தின் (United Kingdom Colonial Development and Welfare Act) அடிப்படையில் அளித்துவந்தது. அப்போதிருந்த காலனிகளின் தொழில் வளர்ச்சி வேளாண்மை வளர்ச்சி ஆகியவைகளுக்காக ஆண்டுதோறும் £1 மில்லியன் தொகையை இங்கிலாந்து ஒதுக்கியது. 19+0ஆம் ஆண்டில் ஆண்டுதோறுமான முதலீடு £5·5 மில்லியனாக உயர்த்தப்பட்டது.

பின்னர், 1945ஆம் ஆண்டில் இது $12 மில்லியனுக உயர்த்தப் பட்டது. இருப்பினும். இந்த ஏற்பாட்டின் அடிப்படையில் 1945, 1953 ஆகிய ஆண்டுகளுக்கிடையே தரப்பட்ட கடன்களிலும் நிதி உதவிகளிலும் நேரிடையான தொழில் வளர்ச்சிக்கு என 5% அளவு தான் பயன்படுத்தப்பட்டது. அடுத்த சில ஆண்டுகளில் கொடுக்கப்பட்ட உதவி பலவிதமான திட்டங்களுக்கானதாக இருந்தது. எடுத்துக்காட்டாக, வடக்கு ரொடீசியா, டிரினிடாட் (Trinidad) ஆகியவற்றின் சிமெண்டு உற்பத்தி வேலைகளையும், கென்யாவின் மண்பாண்டத் தொழில்களையும் ரசாயனத் தொழில்களையும், சிங்கப்பூரின் துணித் தொழில்களையும் உணவிற் கான எண்ணெயின் சுத்திகரிப்பு ஆலைகளையும், பெச்சானலாந்தின் (Bechuanaland) கால்நடைப் பண்ணை வளர்ச்சியையும், நைஜீரியா வின் சாக்குத் தொழிற்சாலைகளையும், மரம் அறுக்கும் மில்களையும், பிரிட்டீஷ் கயானுவின் (British Guiana) மரத் தொழிற்சாலை களையும் மற்றப் பலவற்றையும் குறிப்பிடலாம். தூய வணிக நோக்கத்துடன் மட்டும் பார்க்கப்படும்போது இம் முயற்சிகள் வெற்றியுடையவைகள் அல்ல. ஆனுல், புதிய பொறிநுட்பங் களையும், திறனையும் மூலதனச் சாதனங்களையும் புகுத்துவதன் விளைவாக உலகில் மிகக் குறைவான முன்னேற்றத்தைப் பெற்றிருந்த ஒரு சில நிலப் பகுதிகளில் பொருளாதார வளர்ச் சிக்கான அடிப்படைகளை வலிமைப்படுத்துவதற்கு இத்தகைய உதவிகள் பேரளவில் உதவி செய்திருக்கின்றன.

1950ஆம் ஆண்டின் பொறிநுட்பக் கூட்டுறவு நிருவாகம் (Technical Co-operation Administration in 1950) ஏற்படுத்தப் பட்ட பின்புதான் ஐக்கிய அமெரிக்க நாட்டின் பொறிநுட்ப உதவி குறிப்பிடத் தக்கவாருன பேரளவில் தொடங்கியது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள பொது நலத்தின் தரம், வேளாண்மைத் தரம், கல்வித் தரம் ஆகியவைகளை முன்னேற்றுவிப்பதையே அமெரிக்கத் தொழில்நுட்ப உதவி முதன்மை நோக்கமாகக் கொண்டிருந்தாலும்கூட, உலகத்தின் பல பகுதிகளில் சில தொழில்கள், துணைத் தொழில்கள் ஆகியவை களின் வளர்ச்சியையும் இது முன்னேற்றுவித்தது. அமெரிக்கத் தொழில்நுட்ப அதிகாரிகளின் பணிகளைத் தருவதற்கும், அமெரிக்கப் பல்கலைக் கழகங்களிலும் பொறிநுட்ப நிலையங் களிலும் உள்நாட்டவர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கும் வேண்டிய ஏற்பாடுகள் செய்து தரப்பட்டன. மெக்சிகோ, இந்தியா, இந்தோனேசியா. பாக்கிஸ்தான், டொமினிகன் குடியரசு (Dominican Republic), கியூபா ஆகிய நாடுகளிலும் பல இலத்தீன் அமெரிக்க நாடுகளிலும் சிறு தொழில்கள், கைத்தொழில்கள்

ஆகியவைகளை அமைப்பதற்கான தொழில் நுட்ப உதவி என்ற வடிவத்தில் அமெரிக்க நாட்டின் மூலதனம் பேரளவில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குச் சென்றது. ஈரான், எகிப்து, ஈராக், ஜோர்டான், லெபனுன் ஆகியவைகளில் தொழில் பணி உழைப்பின் உற்பத்தித் திறனை அதிகரிப்பதற்காகப் பயிற்சி வசதிகள் செய்து தரப்பட்டன. இங்கிலாந்திஞல் தரப்பட்ட இத்தகைய உதவிகளோடு ஒப்பிடுகையில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் உதவிகள் தராதரமாகத் தொழில் திட்டங்களில் அதிக மான முக்கியத்துவத்தைத் தந்தவைகளாகக் காணப்படுகின்றன.

அரசுகள் பன்னுட்டுப் பதிலாண்மைகள் ஆகியவைகளிட மிருந்து பெறப்பட்ட பொறிநுட்ப உதவி உலகில் உள்ள ஏழ்மை நாடுகளின் பொருளாதார உள்ளாற்றல்களின் முன்னேற்றத் திற்குப் பேரளவில் உதவி செய்திருக்கிறது என்பது தெளிவான தொரு உண்மையாகும். இத்தகைய உதவிகளைப் பெறும் நாடுகள் அவைகளின் தேவைகளின் பருமன், இயல்புகள் ஆகியவைகளைப் பற்றி முழுமையாகத் தெரிந்துகொள்ள வேண்டியதும், இத்தகைய உதவிகளைத் தரக்கூடிய நாடுகளோடு முழு அளவில் ஒத்துழைப்புத் தரவேண்டியதும், இத்தகைய உதவிகள் நிறுத்தப் பட்டதும் திட்டங்களைத் தொடர்ந்து நிறைவேற்ற வேண்டியதும் மிகவும் அவசியமானவை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதற்கு மாருக, உதவி பெறும் நாட்டின் பழக்க வழக்கங்கள், இயல்புகள் ஆகியவைகளையும் மேலை நாட்டு முறைகளையும் ஒருங்கிணைக்கத்தக்க நல்லதொரு கலவையைத் தோற்றுவிக்காமல் தொழில் வளர்ச்சி பெருத நாடுகளில் மேலை நாடுகளின் முறை களைப் புகுத்துவதற்கு முயற்சி செய்தால் அதற்குத் தொழில் நுணுக்க உதவி பயன்தராமல் போகலாம் என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும். குறைந்த வளர்ச்சியுடைய நிலப் பகுதி களின் தேவைகளைப் பற்றியும் சிக்கல்களைப் பற்றியும் வளர்ச்சி பெற்ற நாடுகள் மிக நல்ல முறையில் அறிந்திருக்க வேண்டும். அதே நேரத்தில் தரப்படும் உதவிகளைப்பற்றி மிக நல்ல முறையில் பின்தங்கிய நாடுகள் உணர்ந்திருக்க வேண்டும். இத்தகைய உதவி முயற்சிகள் முழுப் பலனையும் தரவேண்டுமென்ருல் இவ் விரண்டும் மிகவும் அடிப்படையாகத் தேவைப்படுபவை களாகும். பொறிநுட்ப உதவியுடன் மூலதன உதவியைப் பற்றிய தொரு தகுதியான கலவையும் மிகவும் அவசியமானதாகும். நாட்டின் ஒரு மொத்தமான முதலீட்டு உள்ளாற்றல்கள், அதன் பொருளாதார வாய்ப்புகள், பொருளாதார முன்னேற்றத்திற் கான வாய்ப்புகள் ஆகியவைகளைப் பற்றிச் சரியான முறையிலான மதிப்பீடும் இத்தகைய உதவியைக் கொடுப்பதற்கு மிகவும்அவசிய

மானவைகளாகும். மிகவும் உறுதியானதாகவும் நம்பிக்கை வைக்கத் தக்கதாகவும் இருப்பதோடு தொழில்நுட்ப உதவிகள் தொடர்ந்து நீண்டகால அளவுக்குக் கொடுக்கப்படவேண்டும் என்பதும் மிகவும் இன்றியமையாததாகும். பொருளாதார வளர்ச்சியைப் பாதுகாப்பதற்காகத் தனது சொந்த மூலவளங்களைப் பயன்படுத்துதல், தனது சொந்தத் திறமையை வளர்த்துக் கொள்ளுதல் ஆகியவைகளில் கடன்பெறும் நாடு எந்த அளவுக்கு மிக வேகமாக முன்னேற்றத்தைப் பெறுகிறதோ அந்த அளவைப் பொறுத்துத்தான் எந்த வடிவத்திலுமான அயல்நாட்டு உதவியில் உண்மையான நன்மைகள இருக்கின்றன.

(இ) உபரி உணவை ஏற்றுமதி செய்தல் என்ற வடிவத்தில் வெளி நாட்டு உதவி (External Assistance in the form of Export of Food Surpluses)

பின்தங்கிய நாடுகளுக்கு அதிகான வருமானமுள்ள நாடுகள் உதவிகளைக் கொடுப்பதில் அதிகமான வருமானமுள்ள நாடுகளில் உள்ள உபரி உணவுகளை ஏற்றுமதி செய்வதும் ஒரு வகையாகும். மோர்டெகாய் எசிகீல் (Mordecai Exekiel) அவர்களின் மேற்பார்வையில் 1954–55–ல் இந்தியாவில் ஒரு முன்னோடி உசாய்வை (Pilot Survey) ஐக்கிய நாடுகளின் உணவு, வேளாண்மை நிறுவனத்தின் (F. A. O.) நிபுணர்கள் குழு நடத்தியது. உழைப்புச் செறிவு மிகுந்ததாகவும், நாட்டின் உற்பத்தித்திறனை அதிகரிப்பதாகவும், முன்னேற்றத்தை விரைவுபடுத்தத்தக்கதாகவும் உள்ள சாலை அமைப்புகள், நீர்ப்பாசனத் திட்டங்கள், பள்ளிகளைக் கட்டுதல், கிடங்குகளைக் கட்டுதல், மற்றும் இவை போன்ற வேலைகளில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வேலையற்றிருக்கும் உழைப்பிற்கு வேலை தருவதற்காக ஒரு நாட்டின் வேளாண்மைப் பண்டங்கள் பயன்படுத்தப்படலாம் என்று அந்த உசாய்வு குறிப்பிட்டது. ஆனல் புதிதாகத் தோற்றுவிக்கப்படும் வசதி அதிகரித்த உற்பத்திகளைத் தோற்றுவிப்பதற்கு ஒரு சில காலமாகுமாதலால் அதன் வழியாகத் தோன்றும் உறுதித்தேவை உயர்வு பணவீக்கத்தைத் தோற்றுவித்துவிடும். ஆனல், வளர்ச்சியடைந்து வரும் நாடுகளின் திட்டங்களுக்கான நிதியாக்கத்திற்கு உதவி செய்வதன் மூலமாகவும், உதவியைப் பெறும் நாட்டின் உற்பத்தி தேவையான அளவுக்கு அதிகரிக்கும் வரையில் புதிதாகத் தோன்றும் தேவையை ஈடுகட்டுவதன் மூலமாகவும் மற்ற நாடுகளின் உணவு உபரிகள் இந் நாடுகளுக்கு மாற்றப்பட்டால் இது தவிர்க்கப்படலாம்.[1] குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின்

[1] *Uses of Agricultural Surpluses to Finance Economic Development in Underdeveloped Countries*, F. A. O., Rome, 1955.

நோக்கிலிருந்து பார்க்கும்போது, செல்வமிகு நாடுகளிலிருந்து பெறப்படும் உணவு உபரிகளில் பொருளாதாரச் சிறப்பு ஒன்றும் இருக்கிறது. அதாவது, நுகர்வுப் பண்டங்களை இறக்குமதி செய்வதால், இறக்குமதி செய்யும் பொருள்களைத் தன் நாட்டிலேயே உற்பத்தி செய்யத் தேவைப்படும் முயற்சியும் பொருளும் திசை திருப்பப்பட்டு அந்நியச் செலாவணியைப் பெறத்தக்க ஏற்றுமதிப் பண்டங்களை உற்பத்தி செய்து முன்னேறும் வாய்ப்பைப் பெற முடியும். குறைந்த வருமான நாடுகளின் மூலதனத் திரட்சியை அதிகரிப்பதோடு இந்த நாடுகளின் அயல்நாட்டுச் செலாவணி நிலையை வலிமைப்படுத்துவதிலும் இது பயன்படுகின்றது. இது தவிர, இறக்குமதி நாடுகளில் வேளாண்மைப் பண்டங்கள், பொறிசெய் பண்டங்கள் ஆகியவைகளின் இடையே வணிக விலைமுறைத் திட்டத்தில் பாதகமான போக்கு ஏதாவது இருக்குமானால் அதையும் உணவு உபரிகளை இறக்குமதி செய்வது சரிசெய்து விடும். இத்தகைய உணவு உபரி என்பது ஏற்றுமதி செய்யும் நாடுகளில் அமித உற்பத்தியைக் குறிக்கும். அத்தகைய அமித உற்பத்தியானது ஒரு சில பாதகமான விளைவுகளைத் தோற்றுவிக்கலாம். இதனை உணர்ந்து ஏற்றுமதி செய்யும் நாடு முன் கூட்டியே தன்னைச் சீர்செய்து கொள்ளும் வாய்ப்பினைப் பெறுகிறது. இந்த அடிப்படையில் பார்க்கும்போது உணவு உபரியை ஏற்றுமதி செய்யும் நாடும் நன்மையைப்பெறும்.

இத்தகைய அயல்நாட்டுஉதவியைக்கொடுத்து உதவிய முக்கியமான நாடு ஐக்கிய அமெரிக்க நாடாகும். 1954ஆம் ஆண்டின் வேளாண்மை வணிக முன்னேற்றமும் உதவிச்சட்டமும் (Agricultural Trade Development and Assistance Act of 1954) என்பதன் வாயிலாக உதவியைக் கேட்கும் நாடுகளுக்கு உணவு உபரியை ஏற்றுமதி செய்யும் திட்டம் இந்த நாட்டில் 1954-ல் தொடங்கப்பட்டது. பொதுச்சட்டம் 480 (Public Law 480) என்பதன்படி ஐக்கிய அமெரிக்க நாட்டின் வேளாண்மை உபரிப் பண்டங்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இச் சட்டத்தின் முதல் தலைப்பில் (Under Titie I) உள்நாட்டுப் பணத்திற்கான விற்பனை என்ற வடிவத்தில் இத்தகைய பண்டங்களின் மாற்றங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன. இரண்டாம் தலைப்பு மற்றும் மூன்றும் தலைப்புப் பகுதிகளில் இத்தகைய பண்டங்களின் ஏற்றுமதி நன்கொடைகள் என்ற வடிவத்திலும் பண்டமாற்றுப் பரி மாற்றங்கள் என்ற வடிவத்திலும் செய்திகள் உள்ளன. 1957ஆம் ஆண்டு ஜூலை முதல் நாளிலிருந்து 1959ஆம் ஆண்டு ஜூன் மாதம் 30ஆம் நாள் முடிய உள்ள இரண்டாண்டுகளில் ஆப்பிரிக்கா, அமெரிக்கா, ஆசியா ஆகிய பகுதிகளில் உள்ள ஏழ்மை நாடுகளுக்குப்

பொதுச்சட்டம் 480—ன் இரண்டாவது தலைப்பின்கீழ் ஐக்கிய அமெரிக்கா நாட்டினால் கொடுக்கப்பட்ட பண்டங்களின் மாற்றங்கள் $101·3மில்லியன் அளவாகவும், உண்மையான செலவு $80·0மில்லியன் அளவாகவும் இருந்தன. இதே காலத்தில் ஐக்கிய அமெரிக்க நாட்டால் குறைந்த வளர்ச்சியுடைய நாட்டிற்குப் பொதுச்சட்டம் 480-ன் மூன்றாவது தலைப்பின்கீழ் கொடுத்த நன்கொடைகளின் அளவு $150 மில்லியனாக இருந்தது. இதில் ஆசியா மட்டும் மூன்றில் இரண்டு பங்கைப் பெற்றது. ஆசிய நாடுகளுக்கு இந்த இரண்டு ஆண்டுகளிலும் கொடுத்த மொத்த நன்கொடையான $105·4மில்லியனில் இந்தியா ஏறத்தாழ $27 மில்லியனுக்குச் சிறிது அதிகமாகவும், கொரியக் குடியரசு ஏறத்தாழ $2 மில்லியனுக்குச் சிறிதளவு அதிகமாகவும் பெற்றிருந்தன.[1]

## 3. பன்னாட்டுப் பதிலாண்மைகளால் கொடுக்கப்படும் கடன்கள்

### (Loans by International Agencies)

கடன் கொடுக்கும் நாடுகளுக்கும் கடனைப் பெறும் நாடுகளுக்கும் இடையே அயல்நாட்டு மூலவளங்களை மாற்றுவதில் பன்னாட்டுப் பதிலாண்மைகள் இடைத்தரகர்களாகப் பணியாற்றுகின்றன. பன்னாட்டுப் பதிலாண்மைகள் கொடுக்கும் கடன்களுக்கான மூலவளங்கள். கடனைக் கொடுக்கும் நாடுகளின் மூலதன அங்காடிகளில் வசூலிக்கப்படும் தொகையாகும். இத்தகைய பதிலாண்மைக்கு முதலில் முன்பணம் கொடுக்கப்படுகிறது. இறுதியாகக் கடன்களைக் கொடுக்கும் நாடுகளிலிருந்து இந் நிறுவனங்கள் எந்த அளவு தொகையைத் தோற்றுவிக்க முடியும் என்ற நம்பிக்கையைச் சார்ந்தே கடன்களைக் கொடுக்கும் இத்தகைய நோக்கங்களுக்காகத் திரட்டப்படும் நிதி மூலவளங்கள் இருக்கின்றன. ஆனால், தொடக்க நிலையில் கடன் வாங்குபவர்கள் நிபுணர்கள் குழுவாக இருப்பதால் பாதுகாப்பு என்ற உறுதி இருக்கிறது. எனவே இத்தகைய கடன்களுக்காகக் கொடுக்கப்படும் விலை, மிகவும் குறைவானதாகவே இருக்கிறது. இத்தகைய தொகைகள் ஒழுங்கான முறையில் பயன்படுத்தப்படுகின்றனவா என்று பார்க்க வேண்டிய பொறுப்பு இத்தகைய நிறுவனங்களுக்கு இருக்கின்றது.

இத்தகைய பணியைச் செய்யும் மிகவும் இன்றியமையாத நிறுவனம் புணரமைப்புக்கும், முன்னேற்றத்திற்குமான பன்னாட்டு

[1] *International Economic Assistance in the Less Developed Countries,* U N., 1960, pp. 35 & 36.

வங்கியாகும். இதன் பணிகள் 1946ஆம் ஆண்டு ஜுன் திங்கள் 25ஆம் நாளில் தொடங்கப்பட்டன. நிதிகளை விரும்பும் நாடுகளுக்கு அவைகளின் பொருளாதாரப் புணரமைப்புக்காகவும், வளர்ச்சித் திட்டங்களுக்காகவும் அவைகளின் சொந்த மூலவளங்களோடு அதிகப்படியான நிதி வசதிகளைக் கொடுப்பதுதான் இதன் சிறப்பான பணிகளில் மிகவும் முக்கியமானதாக இருக்கிறது. அதனுடைய கடன் கொடுக்கும் கொள்கையில் மூன்று நோக்கங்களால் வங்கி இயக்கப்படுகிறது. முதலாவதாக. கடன் வாங்குபவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கும் சக்திகளுக்குட்பட்டதாகக் கொடுக்கப்படும் கடன்கள் இருக்க வேண்டும். இரண்டாவதாக, நிதியாக்கம் செய்யப்படும் திட்டங்கள் உற்பத்தி செய்பவைகளாக இருக்க வேண்டும். மூன்றாவதாக, வங்கிக்கும் கடன் வாங்கும் நாட்டிற்கும் இடையே உள்ள ஒப்பந்தத்தின்படி இக் கடன் தொகைகள் பயன்படுத்தப்படுகின்றனவா என்று பார்க்க வேண்டும். ஒரு கடனுக்கான ஒப்புதலைத் தருவதற்கு முன்னர், வங்கிகளின் கொள்கை எல்லைக்குள் இந் நிதியாக்கம் இருக்கிறதா என்பதையும், ஒப்பந்த விதிகளின்படி (Articles of Agreement) இஃது அமைந்திருக்கிறதா என்பதையும் வங்கியின் நிபுணர் குழு முதன் முதலில் ஆராய்ச்சி செய்கின்றது. இரண்டாவதாக, எந்தத் திட்டத்திற்காக நிதி உதவி கேட்கப்படுகிறதோ, அந்தத் திட்டம் முழு அளவில் நுணுக்கமாக ஆராய்ச்சி செய்யப்படுகிறது. இவை தவிர, நாட்டின் பொருளாதார நிலை, அதன் நிதி நிலைகள் திட்டத்தை முன்னேற்றுவிப்பதற்கான வாய்ப்பு, உள்நாட்டில் கிடைக்கத்தக்க மூலவளங்களின் அளவு, திட்டத்தை வெற்றியுடன் நடத்திச் செல்வதற்கான வாய்ப்புகள், பொதுவான பொருளாதார முன்னேற்றத்திற்கு இஃது எந்த அளவுக்கு உதவி செய்யத்தக்கதாக இருக்கிறது என்பன போன்ற பல கருத்துகளைப் பற்றியும், விழிப்புணர்ச்சியுடன் கூடிய ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. பொறிநுட்ப அடிப்படையில் திட்டத்தை வெற்றியுடையதாகச் செய்யத்தக்க வாய்ப்பைப்பற்றிய ஆய்வுகளை மேற்கொள்ளுதல் அங்காடி பற்றிய உசாய்வுகளை மேற்கொள்ளுதல், திட்டங்களையும், நிதி ஏற்பாடுகளையும் நுணுகி ஆராய்தல் போன்றவற்றையும் வங்கியின் நிபுணர்கள் மேற்கொள்கிறார்கள். இவைகள் யாவும் மனநிறைவு தரத்தக்கவைகளாக இருந்தால் அடுத்த முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. அதாவது, கடன் ஒப்பந்தத்திற்கான பேச்சு வார்த்தைகள் மேற்கொள்ளப்படுகின்றன. கடன்கள், உத்திரவாதம் ஆகியவற்றிற்கான ஒப்பந்தங்கள், கடன் தொகையைக் கொடுக்கும் விதம், வட்டி விகிதங்களை நிருணயித்தல், மற்றக் கட்டணங்களை நிருணயித்தல், கடனுகப் பெற்ற தொகையைத் திரும்பச் செலுத்துவதற்கான

விதிமுறைகள் ஆகியவைகளை எழுதுவதையே இது கொண்டிருக்கிறது. கடனைக் கொடுப்பதுடன் வங்கியின் பொறுப்புகள் நின்றுவிடுவது கிடையாது. நான்காவதாக, வங்கியானது நிலையாக இக் கடன்களை நிருவகிக்கவும் செய்கிறது. இதன்படி கடனைப் பெற்ற திட்டம் எந்த அளவுக்கு வெற்றியுடன் செயல்படுத்தப்படுகிறது என்பதையும் வங்கி கவனித்துவருகிறது. அதோடு, கடன் தொகைக்கான காலம், நடைமுறையில் இருக்கும் வரையில் கடன் வாங்கியவருக்குத் தேவையான எல்லா விதமான ஆலோசனைகளையும் கூறுகிறது. கடன் தொகையினால் வாங்கப்பட்ட பண்டங்கள் சரியான முறையில் நிருமானிக்கப்பட்டிருக்கின்றனவா என்பதை உறுதி செய்வதற்காகவும், திட்டம் மனநிறைவு தரத்தக்க வகையில் முன்னேற்றத்தைப் பெறுவதற்கு இன்றியமையாத நடவடிக்கைகள் யாவும் எடுக்கப்பட்டு வருகின்றனவா என்பதை உறுதி செய்வதற்காகவும், "இறுதிப் பயன்" மேற்பார்வையையும் (End Use Supervision) வங்கி மேற்கொள்கிறது.

தனித் தொழிலாளர் குறைந்த அளவு மூலதனத்தைப் பயன்படுத்துவதற்கு ஏற்றதாகவும், குறைந்த வருமான நாடுகளில் கிடைக்கத்தக்க மரபுவழித் திறமைகளின் அடிப்படையில் அமைப்பதற்கு ஏற்றதாகவும் உள்ள சிறிய நுகர்வோர் பண்டங்கள், பண்டங்களை ஆக்கும் தொழில்கள் ஆகியவைகளின் நிதியாக்கத்தையே இவ் வங்கி செயல்படத் தொடங்கிய தொடக்க நிலையில் விரும்பியது. ஆனால், பின்னர்த் தனிப்பட்ட தொழில் முயல்வோர்களிடமிருந்து சிறிய தொழில்கள் அவைகளின் முதலீட்டிற்குத் தேவையான நிதியாக்கத்தைக் கவர முடியும் என்பதை வங்கி உணர்ந்துகொண்டது. எனவே, செய்தித் தொடர்புகள், குடிநீர்த் திட்டங்கள், மின்சாரத் திட்டங்கள் மற்றும் இவைபோன்ற அடிப்படைப் பொருளாதார வசதிகளில் முதலீடு செய்வதில் வங்கி அதிகமான கவனத்தைச் செலுத்தத் தொடங்கியது. இத்தகைய திட்டங்கள் நாட்டின் பொருளாதார நோக்கில் பார்க்கும்போது மிகவும் இன்றியமையாதவைகளாக இருந்தும்கூட, தனிப்பட்ட வணிகர்களின் நோக்கிலிருந்து பார்க்கும்போது இவைகள் கவர்ச்சியானவைகளாக இல்லை. இவ்வாறாக, மின்சார நீர்ப்பாசன வேலைகள், போக்குவரத்து, செய்தித் தொடர்பு மற்றும் இவை போன்றவற்றிற்காகப் பெருந்தொகைகள் கடனாகக் கொடுக்கப்பட்டன.

வங்கியின் நிருவாகத்தில் அதன் கடன் தரும் நடவடிக்கைகளில் ஒரு சில குறைகளும் வெளிப்பட்டிருக்கின்றன. அவற்றில்

சில குறைகள் நீக்கப்பட்டிருக்கின்றன. கடனைப் பெறும் முன்னர் மேற்கொள்ள வேண்டிய நடைமுறை விதிகளில் உள்ள சிரமங்களைப் பற்றிக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் குறை கூறியுள்ளன. மேலும், குறிப்பிட்ட திட்டங்களுக்கான அந்நியச் செலாவணியைக் கொடுப்பதற்கு வங்கியின் கடன் கொடுக்கும் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தத்தக்க ஒப்பந்த விதிகளுக்குக் கொடுக்கப்படும் குறுகிய நோக்கம் கொண்ட விளக்கங்கள் ஆகியவைகளைப் பற்றியும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் குறை கூறியுள்ளன. கடன்களைக் கேட்கும் நாடுகளின் பொருளாதார நிலைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது பல கடன்களின் வட்டி விகிதங்கள் மிகவும் அதிகமானவைகளாகவும் இருந்தன. ஒரு சில நேரங்களில் வங்கி விதிக்கும் மிகக் குறைந்த வட்டியைக் கூடச் (5–5%) செலுத்த முடியாத அளவுக்குக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் அயல்நாட்டுச் செலுத்துநிலைச் சிக்கல்கள் அமைந்திருக்கின்றன. தொழில் முயற்சிகளுக்கான மிகப் பொருத்தமானதொரு மூலமாகப் பெரும்பாலும் இருக்கக்கூடிய சரிஒப்புரவு நிதியாக்கத்தைச் (Equity Financing) செய்வதிலிருந்து ஒரு சில நேரங்களில் வங்கி தடுக்கப்படுகிறது என்ற உண்மையும் குறையுள்ள மற்றொரு காரணியாக இருக்கிறது. தவிர, வங்கியால் கொடுக்கப்படும் கடன்களுக்குக் கடன் பெறும் நாட்டின் மைய வங்கி அல்லது அரசாங்கம் உத்திரவாதமளிக்க வேண்டும் என்ற நிலை இருக்கிறது. இவ்வாறிருப்பதால் உத்திரவாதம் அளிப்பதற்கு முன்னால் கடன்களைப் பெறும் தனியார் நிறுவனங்களின் கணக்குகளை மைய வங்கி அல்லது அரசாங்கம் தணிக்கை செய்ய வேண்டியிருக்கிறது. இதனைத் தனியார் துறை பெரும்பாலும் விரும்புவதில்லை. எனவே, இதுவும் ஒரு குறையெனக் குறிப்பிடப் படுகிறது.[1] இதற்கு மாறாக, வங்கியின் நோக்கிலிருந்து குறிப்பிடும்போது, ஒரு சில பொறிசெய் தொழில் முயற்சிகளில் உள்ளார்ந்திருக்கும் ஆபத்துகளின் அளவுகள், அவ் வாபத்துகளின் இயல்புகள், தகுதியான வழிகளில் முன்னேறிக்கொள்வதற்கு ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஆயத்தமாக இல்லாதிருக்கும் நிலை, திறமையின்மை, தொழில் முயற்சித்திறன் இன்மை, பொருளாதாரப் பின்னமைப்புகளும் சமுதாயப் பின்னமைப்புகளும் இன்மை போன்றவற்றினால் மூலதனத்தை மிக விரைவாக ஈர்த்துக்கொள்ளும் தகுதி அம் மக்களுக்கு இல்லாதிருத்தல் ஆகியவைகள் யாவும் அதிகமான அளவில் கடன் கொடுப்பதற்கான உண்மையான பெரும் தடைகளாக இருக்கின்றன.

[1] பன்னாட்டு நிதிக் கார்ப்பொரேசனின் நிறுவனம் (The Institute of International Finance Corporation) இந்த இடரைத் தவிர்ப்பதை நோக்கமாகக் கொண்டிருக்கிறது.

**அயல்நாட்டுப் பொது மூலதன ஓட்டத்தின் பொருளாதாரச் சிறப்பு (The Economic Significance of the Flow of Foreign Public Capital.)**

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள் அண்மை ஆண்டுகளில் வந்த அயல்நாட்டுப் பொது மூலதனத்தைப் பற்றிய தொரு மதிப்புரையானது. மூன்று முக்கியமான தன்மைகளைக் குறிப்பிடுகிறது. இம் மூன்றும் பொருளாதார அடிப்படையில் மிகவும் சிறப்புடையவைகளாகும். முதலாவதாக, மூலதன வருகையின் அளவு மிக வேகமாக அதிகரித்திருக்கிறது. இரண்டாவதாக, வெளிநாடுகளிலிருந்து தனியார் மூலதனம் கிடைக்கும் அளவிலிருந்த குறைவைப் பேரளவில் ஈடு செய்யும் வகையில் பொது மூலதனம் மிகுதியாக வந்தது. அதன் வாயிலாக, நிதிகளைப் பெறும் நாடுகளுக்கிடையே வெளிநாட்டு மூலவளங்களை நல்ல முறையில் பகிர்ந்தளிப்பதற்கு இது வகை செய்தது. மூன்றாவதாக, குறைந்த வருமானமுள்ள நாடுகளில் உள்நாட்டு மூலதனத் திரட்சிக்கு வெளிநாட்டுப் பொது மூலதனம் குறிப்பிடத்தக்க அதிகமான அளவில் உதவி செய்திருக்கிறது.

மையத்திலிருந்து திட்டமிடப்பட்ட முறையில் இயங்கிக் கொண்டிருக்கும் பொருளாதாரங்கள் நீங்கலாக உள்ள மற்ற அரசுகள், பன்னாட்டுப் பதிலாண்மைகள் ஆகியவைகளிடமிருந்து சட்ட அடிப்படையிலான கடன்கள் என்ற வடிவத்திலும், இரு நாடுகளுக்கிடையே ஏற்படும் நிதி உதவிகள் என்ற வடிவத்திலும் குறைந்த வளர்ச்சியுடைய பொருளாதாரங்களுக்கு வந்த பொது மூலதனம் பேரளவில் அதிகரித்தது. 1954–56-ல் இதன் ஆண்டு தோறுமான சராசரி அளவு $2 பில்லியனாக இருந்தது. இந்த அளவு 1958-59-ல் $3·3 பில்லியனாக அதிகரித்தது. இந்த அதிகரிப்பு 60% அளவு அதிகரிப்பைக் குறிப்பிடுகிறது. இந்த ஓட்டத்தின் ஆண்டுதோறுமான சராசரி அளவு ஏறத்தாழ 15% அளவுவரை இருந்தது. இத்தகைய வளர்ச்சி மிகவும் உறுதியானதாக இருந்தது என்பதோடு மட்டுமல்லாமல் மூலதனத்தை ஏற்றுமதி செய்யும் நாடுகளின் நாட்டு வருமான வளர்ச்சி விகிதத்தின் அதிகரிப்பைக் காட்டிலும் அதிகமானதாகவும், அந் நாடுகளின் ஏற்றுமதி வருமானங்களின் அளவைக் காட்டிலும் அதிகமானதாகவும் இருந்தது; என்பது குறிப்பிடத்தக்கதாகும். தொழில் மயமான நாடுகளின் நாட்டு வருமான அதிகரிப்பினாலும் அவைகளுக்குள்ளே பொருளாதார வலிமை மிகவும் அதிகமான அளவில் பகிர்ந்தளிக்கப்பட்டதாலும்தான் இது முடியத்தக்கதாயிற்று. சட்ட அடிப்படையிலான வழிகளின் மூலமாக மூலதனத்தில்

ஏழ்மை நிலையிலிருக்கும் உலகநாடுகளுக்கு மூலதனத்தை அளித்த தில் தோன்றிய மிகவேகமான அதிகரிப்பு அவ்வாறு மூலதனத்தை அளித்த முன்னேற்றமடைந்த நாடுகளின் பொருளாதாரங்களில் மிகுதியான அளவுக்குச் சிரமத்தைக் கொடுத்திருக்காது. தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளின் நுகர்வுக்கேற்ற செலவுகளின் அதிக ரிப்பில் இத்தகைய உதவிகள் 3% முதல் 4% வரையில்தான் இருந்ததென மதிப்பீடு செய்யப்படுகிறது இத்தகைய சேமிப்புகள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படாமல் வளர்ச்சி பெற்ற நாடுகளின் மூலதன ஆக்கத்தோடு சேர்க்கப்பட்டிருக்குமானால் 1958-59ஆம் ஆண்டைப் பொறுத்தமட்டிலும் அது உள்நாட்டு மூலதன ஆக்கத்தோடு ஒரேஒரு விழுக்காட்டு அளவைத்தான் சேர்த் திருக்கும். அதற்கு மாறாக இத்தகைய உதவிகளினால் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பெற்ற நன்மைகளின் அளவு மிகவும் அதிகமானதாக இருந்திருக்கிறது.

மூன்றாண்டுகளில் வளர்ச்சி பெற்ற நாடுகளினால் கொடுக்கப் பட்ட நிதி உதவிகள் அவைகளால் கொடுக்கப்பட்ட கடன் களைக் காட்டிலும் இரண்டு மடங்கிற்கும் சற்று அதிகமாகவே இருந்தன. மூலதனத்தை ஏற்றுமதி செய்யும் பெரும்பாலான நாடுகளில் கடன்கள் குறைந்து செல்லும் போக்கைப் பெற்றிருக் கின்றன. ஆனால், அதிகமான அளவில் கொடுத்த நாடுகளான இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்க நாடு, பிரான்ஸ் ஆகியவற்றில் நிதி உதவிகளின் அதிகரிப்பைக் காட்டிலும் மிக விரைவாகக் கடன்கள் அதிகரித்தன. அரசுகளாலும் பன்னாட்டுப் பதிலாண்மை களாலும் கொடுக்கப்பட்ட மொத்த உதவியில் பின்னர் குறிப் பிட்டதன் பங்கு மிக வேகமாக அதிகரித்தது. 1953-54 முதல் 1958-59 வரையிலான ஆண்டுகளில் பன்னாட்டுப் பதிலாண்மை களிலிருந்து பெறப்பட்ட உதவி $2·0பில்லியனிலிருந்து $0.4 பில்லி யனாக அல்லது ஏறத்தாழ மொத்தஅளவில் 10%-லிருந்து 12% ஆக அதிகரித்தது. 1959ஆம் ஆண்டுவரையில் குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளுக்கு உதவிகளைத் தந்த மிக இன்றியமையாத பன்னாட்டுப் பதிலாண்மையாக உலக வங்கி விளங்கியது. 1960-வது நிதியாண்டின் தொடக்கத்திலிருந்து ஐரோப்பியப் பொருளா தாரச் சமுதாய முன்னேற்ற நிதி( European, Economic Commu nity Development Fund), கடல் கடந்த நாடுகள், நாட்டுப் பகுதிகள், ஐக்கிய நாடுகள் ஆகியவற்றின் சிறப்பு நிதி, (Overseas Countries and Territories andthe United Nations Special Fund) முதலானவை தம் நடவடிக்கைகளைத் தொடங்கின.

ஒரு புறத்தில், வளர்ச்சியடைந்த நாடுகள், குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகள் ஆகியவைகளுக்கிடையே அயல்நாட்டு மூலவளங்

களின் பகிர்வில் இருந்த வேறுபாட்டையும், மற்ருெரு புறத்தில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள்ளேயே இருந்த இத்தகைய வேறுபாட்டையும் பொது மூலதனத்தின் இத்தகைய வெளியேற்றத்தின் அதிகரிப்பு சீர் செய்தது. அண்மை ஆண்டு களில் அதிக வருமானமுள்ள நாடுகளின் தனியார் மூலதனம் பெரும்பாலும் தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளுக்கு அல்லது இலத்தீன் அமெரிக்காவிலும், மத்தியக் கிழக்கிலும் உள்ள எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகளுக்குப் பேரளவில் சென்றது என்பதை நாம் கண்டோம். இப் போக்கு இன்னும் தொடர்ந்து இருந்துவருகிறது. ஆனுல், இப்போது குறிப்பிடத்தக்க நிலையிலுள்ள பேரளவிலான பொது மூலதன வெளியேற்றம் குறைந்த வளர்ச்சியுள்ள நாடுகளுக்குச் செல்கிறது. 1956-58-ல் வெளிநாடுகளுக்குச் சென்ற அயல்நாட்டுத் தனியார் மூலதனத்தில் 34·8% பெட்ரோலியம் ஏற்றுமதி செய்பவர்களிடம் சென்றது. ஆனுல், இந் நாடுகளுக்குள் சென்றபோது மூலதனத்தின் அளவு 4·1% என்றுதான் இருந்தது. மறுபுறத்தில் முறைமைப்பட்ட (Official) மூலதனத்தில் ஏறத்தாழ 96% அளவை மற்ற நாடுகள் ஈர்த்துக்கொண்டன. தனியார் மூலதனம் வரும் அளவில் ஏழ்மை நாடுகளுக்குள்ளேயே வேறுபாடுகள் இருந்தன. குறிப்பாக இலத்தீன் அமெரிக்கா, ஆசிய நாடுகள், தூரக் கிழக்கு நாடுகள் ஆகியவைகள் பெற்றிருந்த தொகைகளுக்குள் அதிகமான அளவு வேறுபாடுகள் இருந்தன. இலத்தீன் அமெரிக்க நாட்டுக்குள் சென்ற ஐக்கிய அமெரிக்க நாட்டின் தனியார் மூலதனம் மிகவும் அதிகமான அளவில் இருந்தது. ஆனுல், ஆசிய நாடுகள், தூர கிழக்கு நாடுகள் ஆகியவைகளில் அண்மை ஆண்டு களில் தனியார் முதலீட்டு மூலதனத்தை மிகவும் அதிகமான அளவில் கவர்ந்த ஒரேயொரு குறைந்த வளர்ச்சியுடைய நாடு பிலிப்பைன்ஸ் மட்டும்தான் என்று தெரிகிறது. இலத்தீன் அமெரிக்க நாடுகளுக்கும் மற்றக் குறைந்த வளர்ச்சியுடைய நாடு களுக்கும் தனியார் மூலதன வருகையில் உள்ள சமநிலையற்ற ஓட்டமும், அதிகமான அளவில் பின்னர் குறிப்பிட்ட குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள் சென்ற முறைமைப்பட்ட மூல தனத்தின் அதிகரித்த அளவும் பேரளவுக்கு இழப்பீடு செய்யப் பட்டன. இவ்வாருக 1957-ல் இலத்தீன் அமெரிக்காவிற்குள் வந்து சேர்ந்த தனியார் நீண்ட கால மூலதனத்தின் அளவு ஏறத்தாழ $1500மில்லியனுக இருந்தது. ஆனுல், இந் நிலப் பகுதிக்குள் வந் தடைந்த முறைமைப்பட்ட நீண்ட கால மூலதனத்தின் (Official-long term Capital) அளவு $130மில்லியனுக மட்டுமே இருந்தது. இது தனியார் மூலதனத்தில் பத்தில் ஒரு மடங்கிற்கும் குறை வானதாகும். இதற்கு மாருக, பர்மா, சிலோன், சீனக் குடியரசு,

இந்தோனேசியா, இந்தியா, ஈராக், பாக்கிஸ்தான், பிலிப்பைன்ஸ், தாய்லாந்து, வியட்நாம் குடியரசு ஆகிய ஆசியாவின் குறைந்த வளர்ச்சியுள்ள நாடுகள் பத்துமாகச் சேர்ந்து பெற்ற தனியார் நீண்டகால மூலதனத்தின் அளவு $100மில்லியனுகை மட்டுமே இருந்தது. ஆனுல் முறைமைப்பட்ட நீண்டகால மூலதனம் (Official Long Term Capital) அளவு, நிதி உதவிகள் ஆகிய இரண்டுமாகப் பெற்ற அளவு $500மில்லியனுக்கும் அதிக மாக இருந்தது.[1]

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள் அதிகமான அளவில் வந்த பொது மூலதனத்தில் இன்னொரு இயல்பும் உண்டு. அதாவது. இத்தகைய கடன்களைப் பெற்ற நாடுகள் கடன்தீர் நிதிகளையும், வட்டியையும் செலுத்த வேண்டியிருந்ததால் அவை களின் அந்நியச் செலாவணி நிலையில் பல சிரமங்களை அவைகள் கொண்டிருந்தன. இந்த நாடுகளின் ஏற்றுமதி வருமான அதிகரிப்பு விகிதத்தோடு ஒப்பிடும்போது, பொது மூலதன வருகையின் அதிகரிப்பு விகிதமானது உள்நாட்டு மூலவளங்களோடு வெளிநாட்டுப் பொது உதவி எந்த அளவுக்குச் சேர்க்கப்பட வேண்டியிருந்தது என்பதைச் சுட்டிக் காட்டுவதோடு அயல் நாட்டுக் கடன் கட்டணங்களை ஈடுகட்டுவதற்கு அவர்களின் சக்திக்கப்பாற்பட்டு அதிகரித்துவரும் சிரமங்களையும் சுட்டிக் காட்டுவதாக அமைந்திருக்கிறது. 1955-56, 1958-59 ஆகிய ஆண்டுகளில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் ஏற்றுமதி வருமானம் 5% அளவுக்கே அதிகரித்தது. ஆனுல், இந்த ஆண்டுகளுக்கு இடைப் பட்ட காலத்தில் அயல்நாட்டுப் பொது உதவி 60%-க்கும் மேலாக அதிகரித்திருக்கிறது. அதன் விளைவாக ஏற்றுமதி வருமானத்திற்குப் பொது அயல் உதவியின் விகிதம் 9%-லிருந்து 16%-ஆக அதிகரித்தது. இந்தியாவில் 1953-56-ல் அயல்நாட்டுப் பொது மூலதனம் நாட்டின் ஏற்றுமதி வருமானத்தில் 8% அளவுக்கே இருந்தது. 1958-59-ல் இது 23% அளவாக அதிகரித்தது. இதைப் போன்ற அளவுகள் பர்மாவிற்கு 3%. 16% என்றும், இந்தோனேசியாவிற்கு 1%, 13% என்றும் இருந்தன. அயல்நாட்டுச் செலுத்துநிலையில் உள்ள சிரமங்கள் கடன்களையும் நிதி உதவி களையும் பெறும் போக்கைப் பெற்றிருந்த ஆசிய நாடுகளில் மிகவும் அதிகமான அளவில் இருந்தன. 1955ஆம் ஆண்டின் இறுதிக்காலம், 1958ஆம் ஆண்டின் இறுதிக்காலம் ஆகிய வற்றிற்கு இடைப்பட்ட காலத்தில் பொதுக் கடனின் பருமன் இந்தியாவில் $308மில்லியனிலிருந்து $1442மில்லியனுகவும்,

[1] *The International Flow of Private Capital, 1956-58*, U.N., 1959, pp. 13 & 14.

பர்மாவில் $17 மில்லியனிலிருந்து $84 மில்லியனுகவும், பிலிப்பைன்சில் $91 மில்லியனிலிருந்து $198 மில்லியனுகவும், தாய்லாந்தில் $73 மில்லியனிலிருந்து $143 மில்லியனுகவும், பாக்கிஸ்தானில் $148 மில்லியனிலிருந்து $200 மில்லியனுகவும் அதிகரித்தது. உடனிகழ்வாக அயல்நாட்டுப் பொதுக்கடன் பணி விகிதம் (அதாவது, வெளிநாட்டுப் பொதுக்கடன்களின் மீது கடன் தீர் நிதி வட்டி ஆகியவற்றிற்கான செலுத்தல்களை நடப்புக் கணக்கு வருமானத்தின் விகிதமாகக் குறிப்பிடப்படுவது) பர்மாவில் 0·5%-லிருந்து 1·5% ஆகவும், இந்தியாவில் 7%-லிருந்து 1·7% ஆகவும், பிலிப்பைன்ஸில் 1.5%-லிருந்து 2.1% ஆகவும், ஈரானில் 13%-லிருந்து 5.5% ஆகவும், பாக்கிஸ் தானில் 2.3%-லிருந்து 5.3% ஆகவும் அதிகரித்தது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளை ஒரு மொத்தமாகக் குறிப்பிடும்போது இந்த விகிதம் 4.9%-லிருந்து 5.8%-க்கு அதிகரித்தது. அயல்நாட்டுக் கடன் பணிகளின் பளுவை எளிதாக்குவதற்குக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவைகளின் அந்நியச் செலாவணி அளிப்பை அதிகரிக்கவேண்டிய அவசியத்தை இதுசுட்டிக் காட்டுகிறது. இருப்பினும், செல்வம் மிக்க அயல்நாடுகளிலிருந்து நிலையான புதிய உதவிகள் உறுதியாகக் கிடைத்தால் சிக்கலின் கடுமை ஓரளவுக்குக் குறைக்கப்படலாம்.

கடன்களைப் பெற்ற நாடுகளின் மூலதனத் திரட்சிக்கு வெளிநாட்டுப் பொது உதவி மிகவும் அதிகமான அளவுக்கு உதவி செய்திருக்கின்றது என்பதைக் குறைத்து மதிப்பிடுவதற்கு மேற்கண்ட பகுத்தாய்வு வழி வகுத்துவிடக்கூடாது. 1953-54ஆம் ஆண்டு முதல் உள்நாட்டு முதலீட்டிற்குப் பொது உதவியின் விகிதம் குறிப்பிடத்தக்க பேரளவில் அதிகரித்திருக்கிறது. இத்தகைய அதிகரிப்பு உடனிகழ்வான மூலதனத் திரட்சி விகிதத்தின் அதிகரிப்போடு சேர்ந்தே நிகழ்ந்திருக்கிறது. 1953-54 முதல் 1953-57 வரையுள்ள ஆண்டுகளின் சராசரியை 1957-58 முதல் 1958-59 வரையுள்ள ஆண்டுகளின் சராசரியோடு ஒப்பிடும்போது, மொத்தநிலை முதலீட்டின் விகிதமாகக் குறிப்பிடப்படும் அயல்நாட்டுப் பொது உதவியானது இந்தியாவில் 5·6-லிருந்து 10·6ஆக அதிகரித்தது. ஆனால், இதே காலத்தில் மொத்த நாட்டு விளைவின் விழுக்காடாகக் குறிப்பிடப்படும் மொத்த உள்நாட்டு நிலைமுதலீடு 8·0-லிருந்து 11·5ஆக அதிகரித்தது. இதையே வேறொரு விதமாகவும் குறிப்பிடலாம். உள்நாட்டு முதலீட்டின் விகிதம் என்று குறிப்படப்படும்போது அயல்நாட்டுப் பொது உதவியானது உள் நாட்டு முதலீட்டு அதிகரிப்பு விகிதத்தைக் காட்டிலும் அதிகமான வேகத்தில் அதிகரித்திருக்கிறது என்று குறிப்பிடலாம். அயல் நாட்டுப் பொது உதவிகளெல்லாம் குறைந்த வளர்ச்சியுடைய நாடு

களின் முதலீடுகளிலேயே பயன்படுத்தப்பட்டன என்று நாம் கருதிக்கொள்வோமானால், இந்த நாடுகளின் உள்நாட்டு மூலதனத் திரட்சி அதிகரிப்பில் 5–ல் ஒரு பாகத்திற்கும் அதிகமான அளவு அல்லது மூன்றில் ஒரு பங்கு அளவு அயல்நாட்டுப் பொது மூலதனத்தின் காரணமாகவே தோன்றியது எனலாம்.

இத்தகைய வடிவத்திலான உதவி பெரும்பகுதி நுகர்வை அதிகரிப்பதற்கு உதவியிருக்கலாம். இதற்கு மாருக. இம் முறையில் கிடைத்த அதிகப்படியான மூலவளங்கள் அடிப்படைத் தொழில்களிலும் சமுதாயப் பின்னமைப்புகளிலும், பொதுப் பயன்பாடுகளிலும் முதலீடு செய்யப்பட்டுமிருக்கலாம். இவ்வாறு செய்யப்பட்டிருந்தால், குறைந்த வருமானமுடைய நாடுகளில் பொருளாதார வளர்ச்சிக்கான சக்திகளைத் தோற்றுவிப்பதில் அவைகள் பேரளவிற்கு உதவி செய்துமிருக்கலாம். அவ்வாறு செய்யும்போது. உள்நாட்டு மூலவளங்களையும், அயல்நாட்டு மூலவளங்களையும் மிகவும் அதிகமான அளவுக்குச் செயல்படச் செய்திருக்கலாம். அவ்வாறு இருக்குமானுல் மொத்த முதலீட்டின் பங்கு என்ற வகையில் அயல்நாட்டுப் பொது மூலதனம் எந்த அளவைச் சுட்டிக் காட்டுமோ அதைக் காட்டிலும் அதிகமான அளவில் பொருளாதார முன்னேற்றத்திற்கு இதன் பங்கு இருக்கும்.

அயல்நாட்டு மூலதனம், இந்தியாவின் பொருளாதார முன்னேற்றம் ஆகியவற்றிற்கானதொரு குறிப்பு. (A Note on External Capital and Economic Development in India.)

1948ஆம் ஆண்டின் மையப்பகுதியில் இந்தியாவின் அயல் நாட்டுக் கடன் பொறுப்புகளின் மொத்தம் ரூ. 5,012 மில்லியனுக இருந்தது. இதில் முறைமைப்பட்ட துறையில் (Official Sector) ரூ.1,781 மில்லியனும், முறைமைப்படாத துறையில் (Non–Official Sector) ரூ. 3,261 மில்லியனும் இருந்தன. மைய அரசு, மாநில அரசுகள், துறைமுகப் பாதுகாப்புகள், முன்னேற்ற நல்லெண்ண அமைப்புகள். உள்ளூர் அதிகாரமுடையவர்கள், கார்ப்பொரேசன்கள், ரிசர்வ் வங்கியுள்பட சட்ட அடிப்படையில் அமைந்துள்ள கார்ப்பொரேசன்கள் ஆகியவைகள் முறைமைப்பட்ட துறையில் (Official Sector) இருக்கின்றன. முறைமைப்பட்ட துறையின் பொறுப்புகளில் பெரும்பகுதியாக அயல் நாடுகளின் அரசாங்கங்களிலிருந்தும் பன்னுட்டுப் பதிலாண்மைகளிலிருந்தும் பெறப்பட்ட கடன்கள் அமைந்திருக்கின்றன. முறைமைப் படாத துறையின் (Non–offiicial sector) அயல்நாட்டுக் கடன் பொறுப்புகள், நேரடியான முதலீடுகள், கைப்பை முதலீடுகள்,

மற்றும் பலவிதமான பொறுப்புகள் ஆகியவைகளால் அமைக்கப் படுகின்றன. அயல்நாடுகளிலிருந்து முதலீடு செய்பவர்களால் நிறுவனத்தைக் கட்டுப்படுத்துதல் வழிப்படுத்துதல் என்பனவும் சேர்ந்துவரும் அந்நிய முதலீடுகள்தான் நேரடி முதலீடுகள் என வரையறை செய்யப்படுகின்றன. உரிமையும், வழிநடத்தும் கட்டுப்பாடுகளும் முழு அளவில் அந்நியர்களிடமே இருக்கக்கூடிய அந்நியக் கம்பெனிகளின் கிளைகளை நேரடி முதலீட்டிற்கான தெளிவான எடுத்துக்காட்டுகளாகக் குறிப்பிடலாம். பொதுத் துறையில் பெறப்பட்ட அயல்நாட்டு மூலதனம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு, துறைமுக வளர்ச்சி, நீர்ப்பாசன மின்சாரத் திட்டங்கள், இன்னும் இவை போன்ற பொருளாதார உள்ளமைப்புகளை அமைப்பதிலேயே பெரும்பாலும் பயன்படுத்தப் பட்டது. ஆனால், தனியார்களால் பெறப்பட்ட அல்லது முறைமைப்படாத துறையால் பெறப்பட்ட அயல்நாட்டு மூலவளங்கள் யாவும் பொறிசெய் தொழில்களிலும், மலைத் தோட்டத் தொழில்களிலும். வணிகத்திலும் மற்றும் இவை போன்றவற்றிலும் பயன்படுத்தப்பட்டன. பகுத்தாய்வு நோக்கத் திற்காக இவ் விரண்டு துறைகளிலும் பெறப்பட்ட அயல் மூலவளங் களின் போக்குகளையும் பயன்படுத்தல்களையும் தனித்தனியே காண்பது நன்மையைத் தருவதாக அமையும்.

## முறைமைப்படாத துறையில் அயல் மூலதனம் (External Capital in the Non-official Sector)

ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆட்சி செய்துகொண்டிருந்த காலத்தில் இருப்புப் பாதைகளின் முன்னேற்றம், வேறு பல பொதுப் பயன்பாடுகளின் முன்னேற்றம், மலைத்தோட்டத் தொழில்களின் முன்னேற்றம், சுரங்கங்களின் முன்னேற்றம், சணல் போன்ற பொறிசெய் தொழில்களின் முன்னேற்றம், ஆகியவைகளில் அயல்நாட்டுத் தனியார் முதலீடுகள் மிகவும் இன்றி யமையாத அங்கம் வகித்தன. இரண்டாவது உலகப் பெரும்போர் தொடங்குவதற்கு முன்னால் இந்தியாவின் அயல்நாட்டுத் தனியார் முதலீட்டின் மதிப்பு ஏறத்தாழ ரூ.8,500மில்லியனிலிருந்து ரூ.9.500மில்லியன் வரையிலான அளவில் இருந்திருக்கும் என மதிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால், இந்திய ரிசர்வ் வங்கியின் மதிப்பீட்டின்படி 1948ஆம் ஆண்டின் மையப் பகுதியில் இத் தகைய தொகை ஏறத்தாழ ரூ.2,560மில்லியன்தான். இவ் விரண்டு தொகைகளையும் கணக்கிடுவதற்கு வெவ்வேறு விதமான முறைகள் பயன்படுத்தப்பட்டன. மேலும், இவற்றின் கணக்கீட்டில் பயன் படுத்தப்பட்ட நிலப்பரப்புகள், கருத்துகள் ஆகியவைகளும் வேறுபட்டிருந்தன. எனவே, இவ் விரண்டும் ஒப்பிட முடியாதவை

களாக இருக்கின்றன. இருப்பினும், 1939 முதல் 1948 வரை யிலான பத்தாண்டுக் காலத்தில் இந்தியாவில் அயல்நாட்டு வணிக முதலீட்டில் பேரளவிலான சரிவு தோன்றியிருந்ததென்ற உண்மை மறுக்க முடியாதது. ஏறத்தாழ இத்தகைய சரிவு ரூ.5,000 மில்லியனிலிருந்து, ரூ.6,000மில்லியன் வரையிலிருந்திருக்கலாம்.

இந்தியாவில் தனியார் வணிக முதலீடுகளை மேற்கொண்டி ருக்கும் நாடுகளில் இங்கிலாந்து மிகவும் அதிகமான அளவில் முதலீடு செய்த மிக முக்கியமான நாடாகும், 1955ஆம் ஆண்டு இறுதிக் காலத்தில் இந்தியாவின் வணிகத்தின் அயல்நாட்டுக் கடன் பொறுப்புகளின் மொத்தம் ரூ.5,220மில்லியனாக இருந்தது. இதில் இங்கிலாந்தின் பங்கு ரூ.4,020மில்லியனுக்குக் குறையாமல் அல்லது 77%-க்குக் குறையாமல் இருந்தது. ஐக்கிய அமெரிக்க நாடு ரூ.460மில்லியன் தொகையையும், சுவிட்சர்லாந்து ரூ.70மில்லியன் தொகையையும், ஜெர்மனி ரூ.30மில்லியன் தொகையையும், மற்ற நாடுகள் ரூ.640மில்லியன் தொகையையும் தந்திருக்கின்றன. ஆனால், இங்கிலாந்திலிருந்து 1956, 1958ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் வந்த தனியார் மூலதனம் ஏறத்தாழ ரூ 4,000மில்லியன் என நிலையாக மாறாமலிருந்த போது, வேறு சில நாடுகளிலிருந்து வந்த தொகையில் அதிக அளவிலான அதிகரிப்பு இருந்தது. 1958ஆம் ஆண்டில் மேற்கு ஜெர்மனியிலிருந்து பெறப்பட்ட தொகை ரூ.25மில்லியனிலிருந்து ரூ.78மில்லியனுக்கு அதிகரித்தது. அதே காலத்தில் ஜப்பானி லிருந்து பெறப்பட்ட தொகை ரூ.160மில்லியனிலிருந்து ரூ.520 மில்லியனாக அதிகரித்தது. 1955ஆம் ஆண்டு முதல் முறைமைப் படுத்தப்படாத துறைக்கு இரண்டு விதமான மூலங்கள் (Sources) அமைந்திருந்தன. அதாவது, வழிவழியாகப் பெறக்கூடிய தனியார் மூலங்களோடு முன்னேற்றத்திற்கும் புணரமைப்புக்கு மான பன்னாட்டு வங்கி (I. B. R. D.) போன்ற நிதி நிறுவனத்தி லிருந்தும் கடன்களைப் பெற்று இத் துறை நன்மைகளைப் பெற்றது. 1952ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் தனியார் துறையிலிருந்த இந்திய ஈரான் உருக்குக் கம்பெனிக்கு (Indian Iron Steel Company) உலக வங்கி முதன் முதலாக ரூ.150 மில்லியன் கடனைக் கொடுத்தது. பின்னர் 1954ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் டிராம்பே திட்டத்திற்காக (Trombay Proiect) ரூ.77மில்லியன் கடனைக் கொடுத்தது. பின்னர் 1955ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் தொழில் கடன் மற்றும் முதலீட்டுக் கார்ப்பொரேசனுக்கு (Industrial Credit and Investment Corporation) ரூ.48மில்லியன் கடன் கொடுத்தது. இந்தப் பதிலாண்மை யிலிருந்து பெறப்பட்ட மொத்த மூலதனம் 1956-ல் ரூ.121

மில்லியனாகவும், 1957-ல் ரூ. 321மில்லியனாகவும், 1958-ல் ரூ. 253 மில்லியனாகவும் இருந்தது. 1955-58 ஆகிய ஆண்டுகளில் தனியார் துறையில் பெறப்பட்ட அயல்நாட்டு மூலதன வருவாயின் மொத்தம் ரூ.1,737 மில்லியனாக அல்லது ஆண்டுதோறும் சாராசரியாக ரூ.434 மில்லியனாக இருந்தது. இதில் உலக வங்கி மட்டும் ரூ.709மில்லியனைக் கொடுத்திருக்கிறது. 1957-ல் தனியார் துறையில் உலக வங்கியிலிருந்து பெறப்பட்ட தொகையானது [ரூ.321 மில்லியன்], மற்றப் பல மூலங்களிலிருந்து பெறப்பட்ட தொகையைக் காட்டிலும் ரூ.62மில்லியன் அதிகமானதாக இருந்தது. 1958-ல் தனியார் மூலங்களிலிருந்து பெறப்பட்டதற்கு ஏறத்தாழச் சமமான அளவாக இஃது இருந்தது.

1948-ல் தனியார் துறையில் பெறப்பட்டிருந்த அயல்நாட்டு வணிக முதலீடுகளின் அளவு ரூ.2,559மில்லியனாக இருந்தது. இதில் 5-ல் 4 பங்கிற்கும் அதிகமான அளவு நேரடி முதலீடுகளே. இத்தகைய நேரடி முதலீடுகளின் பெரும் பகுதி இந்தியாவில் செயல்பட்டுக்கொண்டிருக்கும் அந்நியக் கம்பெனிகளின் கிளைகளில் உள்ள 1948-59ஆகிய 12 ஆண்டுக் காலத்தில் இந்தியாவின் அந்நிய வணிக முதலீடுகள் இரண்டு மடங்காக இருப்பதைப் புள்ளிவிவரங்களிலிருந்து காணமுடிகிறது மொத்த அதிகரிப்பாகிய ரூ.2,554மில்லியனில் பெட்ரோலியம், பொறிசெய் தொழில்கள் ஆகியவைகள் மட்டும் ரூ 2.339மில்லியனுக்குக் குறையாமல் அல்லது 92%-க்குக் குறையாத அளவைப் பெற்றிருக்கின்றன. இதற்கானதொரு காரணமும் உண்டு. மலைத்தோட்டத் தொழில்களில் சொத்துகளை உயர்த்தி மதிப்பிட்டதுதான் (Revaluation) முதலீட்டில் தோன்றிய இத்தகைய அதிகரிப்புக்குக் காரணமாகும். பொறிவழித் தொழில்களைப் பொறுத்தமட்டிலும் எல்லா அலகுகளும் அயல் முதலீடுகளின் மதிப்பில் அதிகரிப்பைப் பெறவில்லை. உண்மையாகப் பார்த்தால் பருத்தித்துணித் தொழில், சணல் தொழில், கயிற்றுத் தொழில் ஆகியவைகளில் நிகரக் குறைவு காணப்பட்டது. வணிக முதலீடுகளிலும் பேரளவில் குறைவு தோன்றியிருந்த நிலையும் காணப்பட்டது. அயல்நாட்டு வணிக முதலீடுகளின் அதிகரிப்பிற்கு இக் காலத்தில் உண்மையான பொறுப்பாக இருந்தவைகள் பெட்ரோலியப் பொருள்கள், பருத்தித் துணித் தொழில் நீங்கலான பொறிசெய் தொழில்கள் ஆகியவைகளாகும்.

1948-59ஆகிய 12 ஆண்டுக் காலத்தில் அயல்நாட்டு வணிக முதலீடுகளின் போக்கில் இன்னோர் இயல்பும் இருந்தது. அதாவது, இக் காலத்தில் தோன்றிய அதிகரிப்பில் பெரும்பகுதி

தொடக்கக் காலத்தில், அதாவது 1948, 1955 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் ஏற்பட்டதாகும். இந்த ஏழு ஆண்டு களின் அதிகரிப்பு ஏறத்தாழ 77% அளவில் இருந்தது. ஆனால், 1956–59-ல் அயல்நாட்டு முதலீடு 23% அளவுக்கு அதிகரித்தது. 1948, 1955 ஆகிய ஆண்டுகளுக்கிடையே தோன்றிய அதிகரிப்பு ஏறத்தாழ ரூ. 1980மில்லியனாக இருந்தது. இதில் சொத்துகளின் மதிப்பை உயர்த்தி மதிப்பிட்டதனால் தோன்றிய அதிகரிப்பு ரூ. 470மில்லியனாக இருந்தது. இதை நீக்கிப் பார்த்தாலும்கூட, இந்தக் காலத்தில் அயல்நாட்டு வணிக முதலீடுகளில் தோன்றிய அதிகரிப்பு 1948-1949 ஆகிய ஆண்டுகளில் தோன்றிய மொத்த அதிகரிப்பில் ஏறத்தாழ நான்கில் மூன்று பங்காக அமைந்திருந்தது. இத்தகைய போக்கின் அமைப்பானது பெரும்பாலும் பெட்ரோலி த் தொழிலாலும், சிகரெட் தொழில், புகையிலைத் தொழில் ஆகியவைகளாலும் நிர்வாகப் பதிலாண்மைக் கம்பெனிகளாலும் தான் தோன்றியது. முதலில் குறிப்பிட்ட தொழிலில் 1942-53-ல் ஏறத்தாழ ரூ.200மில்லியன் அளவுக்கு முதலீட்டு அதிகரிப்பு இருந்தது. அடுத்து வந்த ஆண்டுகளில் இதே தொழிலில் ஏறத்தாழ ரூ 20மில்லியன் அளவுக்குக் குறைவும் இருந்தது. 1948–59 ஆகிய ஆண்டுகளை ஒருமொத்தமாகக் கொண்டு பார்க்கும்போது அயல் மூலதன வருகையின் அளவில் குறைந்து செல்லும் தன்மை தோன்றியது அயல் நாடுகளிலிருந்து முதலீடு செய்பவர் களிடையே தொடக்கக் காலத்தில் மிகவும் புகழ் மிக்கதாக இருந்த மலைத்தோட்டத் தொழில்கள். பருத்தித்துணித் தொழில்கள், வணிகம் போன்றவற்றில் ஓரளவுக்குக் குறைவும் தோன்றி யிருந்தது.

இந்தியாவிலிருந்து வெளியேறிய மூலதனத்தின் மதிப்பை ரூ.2,524மில்லியனோடு சேர்ப்பதன் மூலம் மேற்குறிப்பிட்ட காலத்தில் முறைமைப்படுத்தப்படாத துறையில் அயல்நாட்டுத் தனியார் மூலதனத்தின் மொத்தத் திரட்சியைக் காணமுடியும். 1948–53 ஆகிய ஆண்டுகளில் திருப்பி அனுப்பப்பட்ட மூலதனத்தின் அளவை ரிசர்வ் வங்கி ரூ.500மில்லியன் என மதிப்பிட்டது. இதோடு, அடுத்த 6 ஆண்டுகளில் இருந்த மூலதன வெளியேற்ற மான ரூ.870மில்லியனையும் கூட்டினால் 1948-59ஆம் ஆண்டுக்கான மொத்தம் என நாம் ரூ.1,370மில்லியனைப் பெறுகிறோம். எனவே, இந்த ஆண்டுகளில் அயல் வணிக முதலீடுகளின் மொத்த அதிகரிப்பு ஏறத்தாழ ரூ.3,920 மில்லியன் என்று இருந்திருக்கும். இதில் சொத்துகளின் மதிப்பை அதிகரித்து மதிப்பிட்டதால் தோன்றியது ரூ.490மில்லியன் என்றிருந்தது (1948–55-ல் ரூ.470 மில்லியனாகவும் 1958-ல் ரூ.20மில்லியனாகவும் இருந்தன.)

ஆதாயத்தில் ரூ.1700 மில்லியன் அளவு மறு முதலீடு செய்யப் பட்டிருக்கலாம் என மதிப்பிடப்பட்டது. எஞ்சியுள்ள ரூ 1,730 மில்லியனில் பணம் என்ற வடிவத்தில் ரூ.550 மில்லியன் அளவும் பண்டங்களாகப் பெறப்பட்ட முதலீடுகள் என்ற வடிவத்தில் ரூ.1 180 மில்லியன் அளவும் பெறப்பட்டதனுல் இது ஈடு செய்யப் பட்டது.

1948–59 ஆகிய ஆண்டுகளில் அயல் நாடுகளிலிருந்து வந்த புதிய முதலீடுகளின் அளவு ரூ 1730 மில்லியன் என்றும், மூலதன வெளியேற்றத்தின் அளவு ரூ.1,370 மில்லியன் என்றும் இருந்த தால் அயல்நாட்டு மூலதனத்தின் நிகர வரத்து ரூ.360 மில்லி யனுக இருந்தது. இவ்வாருக, இக் காலத்தில் நாட்டில் தோன்றி யிருந்த அயல்நாட்டு வணிக முதலீடுகளின் அதிகரிப்பிற்குப் பெரும்பான்மையான காரணமாக பகிர்ந்தளிக்காமல் வைத் திருந்த ஆதாயமும் அமைந்திருந்தது. மேலும், இந்நிலைக்கு, சொத்துகளின் மதிப்பை அதிகரித்து மதிப்பிட்டதும் ஓரளவுக்குக் காரணமாக அமைந்திருந்தது. 1955-59 ஆகிய நான்கு ஆண்டு களில், அயல்நாட்டு நிறுவனங்களால் கட்டுப்படுத்தப்பட்டுவந்த மலைத்தோட்டத் தொழில்கள், பெட்ரோலியத் தொழில்கள் பொறிசெய் தொழில்கள், மற்ற விதமான தொழில்கள் ஆகிய வற்றில் (வரி செலுத்தியது போகப்) பெறப்பட்ட ஆதாயத்தின் மொத்த அளவு ரூ.1,554 மில்லியனுக இருந்தது. இந்த ஆதாயத்தில் மூன்றில் இரண்டு பங்கிற்குச் சிறிதளவு குறைவான தொகை பங்குதார்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டுவிட்டது. மூன்றில் ஒரு பங்கிற்கும் சிறிதளவு அதிகமான தொகை மறுமுதலீடு செய்யப் பட்டது. மலைத்தோட்டத் தொழிலில் பகிர்ந்தளிக்கப்படாமல் வைத்திருந்த ஆதாயம் எதிர்மறையிலிருந்தது. ஆனல், அதே நேரத்தில் பெட்ரோலியத் தொழிலில் மொத்த ஆதாயமாகிய ரூ.507 மில்லியனில் ரூ.268 மில்லியன் மறுமுதலீடு செய்யப் பட்டது. இதைப் போன்று பொறிசெய் நிறுவனங்களின் மொத்த ஆதாயமாகிய ரூ.521 மில்லியனில் ரூ.216 மில்லியன் மறுமுதலீடு செய்யப்பட்டது. கடன்களைப் பெற்ற தாய்க் கம்பெனிகளுக்கு அக் கடன்களைத் திருப்பிச் செலுத்துவதற்காகப் பெட்ரோலியத் தொழிலின் வருமானத்தில் பெரும்பகுதி பயன்படுத்தப்பட்டது என்ற நோக்கிலிருந்து பார்க்கும்போது மேற்கொண்ட எண்கள் குறிப்பிடுவதைக் காட்டிலும் குறைவானதாகவே உண்மையான மொத்த ஆதாய முதலீட்டின் விகிதம் அமைந்திருந்தது. இக் காரணியும் கருத்தில் கொள்ளப்படும்போது, ஆதாயத்தைத் திரும்ப முதலீடு செய்வதைப் பொறுத்தமட்டிலும் பொறிசெய் தொழில்கள் மிகவும் இன்றியமையாத ஒரு துறையாகத் தோன்று

கின்றன. இந்தத் துறையின் மிக வேகமாக அதிகரித்துவரும் ஆதாயத்தின் பருமனில் மென்மேலும் மிக அதிகமான பங்கை மறுமுதலீடு செய்வதற்கு இத் துறையே பொறுப்பாக இருந்தது. அயல் நாடுகளால் கட்டுப்படுத்தப்படும் தொழில் முயற்சிகளால் தெரிவிக்கப்பட்ட மொத்த ஆதாயத்தின் விகிதமாகக் குறிப்பிட்டால் பொறிசெய் தொழில் முயற்சிகளின் ஆதாயங்கள் 1953-ல் 20%ஆக இருந்தன. இவ் விழுக்காடு 1959-ல் ஏறத்தாழ 42%ஆக அதிகரித்தது. ஆனால், இதே காலத்தில் அயல்நாடுகளால் கட்டுப்படுத்தப்படும் தொழில்கள் எல்லாவற்றிலும் பகிர்ந்தளிக்கப்படாமல் வைத்திருந்த ஆதாயத்தின் மொத்தத்திற்கு இத் துறையில் பகிர்ந்தளிக்கப்படாமல் வைத்திருந்த ஆதாயத்தின் விகிதமானது 27%-க்கும் குறைவானதொரு அளவிலிருந்து 47% அளவாக அதிகரித்தது. வளர்ச்சிக்கான இவ் வகை நிதியாக்கம் தவிர, தனியார் மூலதனத்தின் புதிய வருகைகளாலும் இப் பொறிசெய் துறை நன்மைகளைப் பெற்றது. 1958, 1959 ஆகிய ஆண்டுகளில் பொருளாதாரத்திற்குள் வந்து சேர்ந்த தனியார் மூலதனத்தின் நிகர அளவு ரூ.230மில்லியன் என மதிப்பிடப்பட்டது. இதில் பெரும்பகுதி பொறிசெய் தொழிலுக்கே சென்றது. பொறிசெய் தொழில்களுக்குள்ளே பார்க்கும்போது மருந்துகள், மருந்தியல் ரசாயனம், மின்சாரப் பண்டங்கள், ரசாயனங்கள், ரசாயனத்தோடு தொடர்புடைய பண்டங்கள் ஆகியவற்றின் வளர்ச்சி மிகவும் அதிகமான அளவில் இருந்தது.

பொறிசெய் தொழில் துறைக்குள் அயல்நாட்டுத் தனியார் மூலதனத்தின் வரத்து அதிகமான அளவில் இருந்ததற்கான மிக முக்கியமான காரணி அரசாங்கத்தின் நடவடிக்கைதான் என்பதில் சிறிதுகூட ஐயமில்லை. அரசாங்கத்தின் நடவடிக்கைகள் இந்த வகையைச் சார்ந்த அயல்நாட்டு முதலீட்டிற்கு மிகவும் சாதகமானவைகளாக இருந்தன. பல தனிப்பட்ட தொழில்களில் பெரும்பான்மையான அளவில் அயல்நாட்டினர் பங்கு பெறுவதற்கு அனுமதிக்கப்பட்டார்கள் என்பதோடு, பொதுத் துறைக்கென ஒதுக்கப்பட்ட தொழில்களை முன்னேற்றுவதற்கும் தனியார் துறை அதிகமான அளவுக்கு அதன் விருப்பம்போல் நடந்துகொள்வதற்கும் அரசாங்கம் அனுமதியளித்தது. இதற்கான சில எடுத்துக்காட்டுகளைக் குறிப்பிடலாம். உருக்குத் தொழில் முழு அளவில் பொதுத் துறைக்கெனவே ஒதுக்கப்பட்டதாகும். இருந்தாலும் தனியார் உருக்குக் கம்பெனி நடவடிக்கைகளின் பெருக்கத்திற்கான அனுமதியும் வழங்கப்பட்டது. உர உற்பத்திக்கும், அலுமினியத் தொழிற்சாலை, செயற்கை ரப்பர் உற்பத்தி ஆகியவைகளுக்கும் இத்தகைய

சலுகைகள் காட்டப்பட்டிருக்கின்றன. அரசாங்கம், தனியார் நிறுவனங்கள் ஆகியவற்றின் கூட்டு முயற்சியால் பல நிறுவனங்கள் தொடங்கப்பெற்றிருக்கின்றன. இவைகளுக்கு எடுத்துக் காட்டாக, எண்ணெய்த் தொழிலைக் குறிப்பிடலாம். இத் தொழிலில் அரசாங்கத்தின் சரி ஒப்புரவுப் பங்கு பெறுதல் பாதி அளவுக்கும் குறைவானதாக இருக்கிறது எனவே, இது ஊக்கமளிக்கும் அரசு நடவடிக்கையின் மரபுவழிக் கொள்கையி லிருந்து விலகிச் செல்லும் ஒரு இயல்பாகும். இது தவிர, ஐக்கிய அமெரிக்க நாடு, மேற்கு ஜெர்மனி. நார்வே, ஜப்பான், ஆகிய நாடுகளோடு இருதடவை வரி விதித்தலைத் தவிர்க்கும் ஒப்பந் தங்களை அரசு செய்துகொண்டதும், இங்கிலாந்து, டென்மார்க், பிரான்ஸ் ஆகிய நாடுகளுடன் இத்தகைய ஒப்பந்தங்களைச் செய்து கொள்வதற்கான பேச்சு வார்த்தைகளில் அரசு ஈடுபட்டதும், நாட்டுடைமையாக்குவதாலும், பறிமுதல் செய்வதாலும் தோன்றக் கூடிய ஆபத்துக்களுக்கான காப்பீட்டுத் திட்டங்களில் சேர்ந்து கொள்வதற்கு இந்தியா முடிவு செய்ததும் ஆகிய இவையெல்லாம் அயல்நாட்டு முதலீடுகளுக்கான நோக்கத்தில் முன்னேற்றம் தோன்றியதற்குப் பேரளவில் காரணமாக இருந்தன.

இஃது இவ்வாறிருப்பினும், தனியார் துறையின் மொத்த முதலீட்டிற்கு அயல்நாட்டுத் தனியார் மூலதனத்தின் பங்கு மிகவும் குறைவானதாக இருந்ததாகவே காணப்படுகிறது. 1956-1959ஆகிய நான்கு ஆண்டுக் காலத்தில் தனியார்துறையின் மொத்த அயல்நாட்டு முதலீடுகள் ரூ.1,350மில்லியன் என மதிப் பிடப்பட்டுள்ளது. இதில் உலக வங்கியின் மூலதனம் ரூ.720 மில்லியனாக இருந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் தனியார்துறை முதலீட்டின் மொத்தம் ரூ 31,000 மில்லியனாக இருக்கும் என்று கருதப்படுகிறது.[1] பொதுத் துறையி லிருந்து மாற்றப்பட்ட மூலவளங்களிலிருந்து நிதியாக்கம் செய்யப் பட்ட தனியார் துறையின் முதலீடுகளை இத் தொகை உள்ளடக்கி யிருக்கவில்லை. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட ஆண்டுகளின் முதல் நான்கு ஆண்டுகளில் தனியார் துறையில் மேற்கொள்ளப் பட்ட தொகை இந்த மொத்தத்தில் 5-ல் 4 பங்காக இருக்குமென்று கருதப்பட்டால், தனியார் துறையில் அயல்முதலீடுகள் 5% அளவுக்குச் சிறிதளவு அதிகமான அளவுக்கே உதவி செய்திருக்க முடியும்.

இந்தியப் பொருளாதார அமைப்பின் இந்தப்படிப்படியான வளர்ச்சியைச் சுட்டிக் காட்டுவதாக அமைந்திருக்கிறது என்ற

[1] *Third Five Year Plan — A Draft Outline*, Planning Commission, Government of India, New Delhi, June, 1960, p. 16

உண்மையில்தான் பொறிசெய் தொழில் துறையில் அயல்நாட்டுத் தனியார் முதலீட்டு வளர்ச்சியின் உண்மையான சிறப்புத் தன்மை இருக்கிறது. நாட்டுக்குள் வந்த அயல்நாட்டு மூலதனத்தின் வகையும், அதன் முதலீட்டின் இயல்பும், பகிர்வும் பொருளாதார முன்னேற்றத்தின் தரம், நாட்டின் அரசியல் நிலை ஆகியவைகளைப் பொதுவாகப் பிரதிபலிக்கின்றன. அரசியலில் தன்னாட்சி நிலவாத மிகவும் பின்தங்கிய நிலையில் உள்ளதொரு பொருளாதாரத்தில் அயல்நாட்டு மூலதனம் பெரும்பாலும் ஏற்றுமதிக்கான வளம்பறித் தொழில்களிலேயே பயன்படுத்தப்படுகின்றது. மேலும், இத்தகைய தொழில்களை மிகச் சிறந்த முறையில் வளம்பறிப்பதற்கு உதவக்கூடியவைகளாக உள்ள போக்குவரத்து, செய்தித் தொடர்பு ஆகியவைகளின் முன்னேற்றத்திலும் இவைகள் பயன்படுத்தப்படுகின்றன. அரசியல் தன்னாட்சி பெறுவதற்கு முன்னால் இந்தியாவில் இதே நிலைதான் இருந்தது. பிறகு, நாடு அரசியலில் தன்னாட்சி பெற்று அதன் சொந்தமான பொருளாதாரக் கொள்கைகளை வகுக்கத் தலைப்பட்ட பிறகு அயல்நாட்டு மூலதனம் வரவேற்கப்பட்டது. அதுவும் பொருளாதார வளர்ச்சியில் உறுதியானதொரு வளர்ச்சி விகிதத்தைப் பெறும் வகையில் குறிப்பிட்ட வழிகளில் அம்மூலதனங்கள் பயன்படுத்தப்பட்டன. இங்கு அயல்நாட்டு மூலதனத்தின்மீது அதிகமான கட்டுப்பாடு இருக்கிறது. அத்தகைய முதலீடானது நாட்டின் ஒருமொத்தமான நாட்டுத் தேவைகளோடு பொருந்தக்கூடிய வகையில் பயன்படுத்தப்படுகின்றது. இந்த நிலையில் அயல்நாட்டு அரசுகள் பன்னாட்டு நிலையங்கள் ஆகியவைகளிடமிருந்து பெறப்படும் அயல்நாட்டு மூலவளங்கள் தனியார் மூலதனங்களைக் காட்டிலும் அதிகமான அளவில் விரும்பப்படுகின்றன. ஏனென்றால், முதலில் குறிப்பிட்டவைகளை மிக எளிதாகக் கட்டுப்படுத்தி நாட்டின் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்கு உதவக்கூடிய வழிகளிலேயே பயன்படுத்தமுடியும். அயல்நாட்டுப் பொது உதவியினால் அண்மை ஆண்டுகளில் இந்தியாவில் நிதியாக்கம் செய்யப்பட்ட முறைமைப்படுத்தப்பட்ட துறைகளின் முதலீடுகளைப் பொறுத்த மட்டிலும் இது பொதுவாக உண்மையானதுதான். அரசுகளின் மூலமாகவும், பாதியளவிலான பொது நிலையங்களின் மூலமாகவும் கிடைக்கும்படி செய்யப்பட்ட அயல்நாட்டு மூலதன முதலீட்டின் விளைவாகப் பொருளாதாரம் வளர்ச்சி பெற்று, தொழில்கள் வளர்ச்சி பெற்று, நாட்டு வருமானம் அதிகரித்து, உள்நாட்டு அங்காடி பெருக்கமடையும்போது மூன்றாவது நிலையை நாடு அடைகிறது. இந்த நிலையை அடைந்தவுடன் அயல்நாட்டு மூலதனங்களைப் பொறிசெய் தொழில்களில் முதலீடு செய்வதற்கான வாய்ப்புகளை நாடு தருகிறது. உள்நாட்டு அங்காடியின்

பெருக்கத்தினுலும், முதலீட்டின்மீது அதிகமான ஆதாயத்தைத் தருவதற்கான உறுதியைத் தரத்தக்க பின்னமைப்பு வசதிகள் கிடைப்பதன் காரணத்தினுலும் அயல்நாடுகளிலிருந்து தனியார் மூலதனம் பொறிசெய் தொழில்களில் இந் நிலையில் கவரப்படுகிறது. கடந்த சில ஆண்டுகளில் இந்தியாவில் தொழில் முன்னேற்றம் குறிப்பிடத்தக்க அளவில் அதிகமாக இருந்துவருகிறது. மேலும், அண்மை ஆண்டுகளில் நாட்டு வருமானமும் அதிகரித்துவருகிறது. இவை தவிர, பொறிசெய் தொழில்களில் அயல்நாட்டு மூலதனம் முதலீடு செய்யப்படும் போக்கும் அதிகரித்துக்கொண்டுவருகிறது. இந்திய நாடு மாறிக்கொண்டிருக்கும் நிலையில் இருக்கிறது என்பதையும், அடுத்தடுத்த திட்டங்களில் பொறிசெய் தொழில்களிலும் நுகர்வோர் பண்டங்கள் தொழில்களிலும் அயல்நாட்டுத் தனியார் மூலதனம் முதலீடு செய்யப்படுவதற்கான வாய்ப்பும் தேவையும் மென்மேலும் அதிகமான அளவில் இருக்கும் என்பதையும் இவைகள் யாவும் சுட்டிக் காட்டுகின்றன.

முறைமைப் படுத்தப்பட்ட துறையில் அயல் மூலதனம் (External Capital in the Official Sector.)

வணிக நோக்கிலிருந்தும் வியாபார நோக்கிலிருந்தும் பார்க்கும்போது உற்பத்தி செய்பவைகளாக இருக்கும் தனியார் துறைத் தொழில் முயற்சிகளில், உலக வங்கியால் கொடுக்கப்பட்ட நேரடி முதலீடுகள், கைப்பை முதலீடுகள் (Portfolio investment) என்ற வடிவத்திலான அயல் மூலதனங்கள் ஏற்றுக் கொள்ளப் பட்டபோது, பொதுத் துறை அல்லது முறைமைப்படுத்தப்பட்ட துறை பெற்ற அயல் மூலவளங்கள் பொதுப் பயன்பாடுகள் சமுதாயப் பின்னமைப்புச் செலவுகள், ஒரு சில தொழில்கள், வேளாண்மை முன்னேற்றம் ஆகியவைகளில் சென்றது. மேலும் இது ஐந்தாண்டுத் திட்டங்களில் குறிப்பிட்டுள்ள அமைப்புகளுக் கேற்பப் பகிர்ந்தளிக்கப்பட்டது. 1950-லிருந்து முறைமைப்படுத் தப்பட்ட துறையினுல் பெறப்பட்ட மூலதன வருகை திட்ட முன்னேற்றத்துடன் இணைக்கப்பட்டிருந்ததோடு, திட்டங்களில் குறிப்பிடப்பட்டுள்ள வளர்ச்சித் திட்டங்களுக்குத் தேவைப்படும் அந்நியச் செலாவணியை ஈடுகட்டுவதற்காகப் பயன்படுத்தப் பட்டது. முறைமைப்படுத்தப்பட்ட துறையின் அயல்நாட்டுக் கடன் பொறுப்புகளை 1955-ஆம் ஆண்டு இறுதியில் ரூ.2,00 மில்லியனிலிருந்து 1959ஆம் ஆண்டு இறுதியில் ரூ.9,466மில்லியனுக அதிகரித்தது. இத் தொகை பெறப்பட்ட முக்கியமான தோற்று வாய்கள் ஐக்கிய அமெரிக்க நாடும், உலக வங்கியுமேயாகும். இவைகள் இரண்டும் 1959-ல் முறைமைப்படுத்தப்பட்ட துறையின் மொத்த அயல்நாட்டுக் கடன் பொறுப்பில் 70%

அளவான ரூ.6.538மில்லியனைக் கொடுத்திருந்தன. இங்கிலாந்து சோவியத் யூனியன், மேற்கு ஜெர்மனி, பாக்கிஸ்தான் ஆகிய நாடுகளும் கடன் கொடுத்த பிற நாடுகளாகும்.

முதல் திட்டத்தில் ரூ. 2,964மில்லியன் அனுமதிக்கப் பட்டிருந்தது. இது, ஐக்கிய அமெரிக்க நாடு, உலக வங்கி (ரூ.1,421 மில்லியன்) ஆகியவைகளிலிருந்து பெறப்பட்ட கடன், 1952ஆம் ஆண்டு ஜனவரி மாதம் தொடங்கிய இந்திய-ஐக்கிய அமெரிக்க உதவித் திட்டத்தின்கீழ் உள்ள நிதி உதவியாலும், கொழும்புத் திட்ட நாடுகளின் போர்டு நிதி நிறுவனம் (Bord Foundation) இந்தோ-நார்வேஜியன் திட்டம்ஆகியவைகளிலிருந்து பெறப்பட்ட நிதிஉதவிகளினுலும் ஈடு செய்யப்பட்டது. இவற்றிலிருந்து பெறப் பட்ட மொத்தத் தொகை ரூ.1,543மில்லியனுக இருந்தது! ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்தின் கோதுமைக் கடனுகிய ரூ.903 மில்லியன் திட்டத்தின் முதல் இரண்டு ஆண்டுகளிலேயே முழு அளவில் பயன்படுத்தப்பட்டுவிட்டது. இதைத் தவிர்த்துப் பார்த்தால் திட்டத்தின் இறுதிக் காலம்வரையில் ஆண்டொன் றுக்குப் பெறப்பட்ட தொகை சராசரியாக ரூ.140மில்லியன் அளவாகவே இருந்தது. திட்டத்தின் இறுதி ஆண்டில் பயன் படுத்தப்பட்ட தொகை ரூ.420மில்லியனுகும். இவ்வாருக ஐந்தாண்டுகளிலும் பயன்படுத்தப்பட்ட மொத்தத் தொகை ரூ.1,380மில்லியனுக அமைந்து அடுத்த ஆண்டுகளில் பயன்படுத்து வதற்கென ரூ. 1,080மில்லியன் என்று அமைந்தது.

ஐக்கிய அமெரிக்க நாடு, கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளிலிருந்து கோதுமையைப் பெறுதல் என்ற வடிவத்தில் முறைமைப்படுத்தப்பட்ட துறையால் பெறப்பட்ட அயல் மூலதனத்தின் ஒரு பகுதி மூலதனத் திரட்சிக்கு நேரடியாக உதவி செய்திருக்க முடியாது. அயல் உதவியின் பெரும் பகுதி தொழில் களுக்குத் தேவையான கச்சாப் பொருள் உருக்கு இயந்திர நிருமானம், நீர்ப்பாசனத்திற்கும் மின்சார நிலையங்களுக்குமான சாதனங்கள், இருப்புப் பாதைகளுக்கான இரும்புச் சாதனங்கள் மற்றும் இவை போன்றவற்றை வாங்குவதற்காகவே பயன் படுத்தப்பட்டது இவ்வாருக இந்திய—ஐக்கிய அமெரிக்க நாட்டு உதவித் திட்டத்தின்கீழ் பெறப்பட்ட உதவியானது சமுதாய நலத் திட்டங்களுக்கான இணைப்பு வளர்ச்சித் திட்டங்களின் மீதும், குழாய்க் கிணறுகளைத் தோண்டுதல், நதிப் பள்ளத்தாக்கு முன்னேற்றம் ஆகியவைகளின்மீதும், உரங்கள், வேளாண்மை நோக்கங்களுக்கான உருக்கு ஆகியவைகளை வாங்குவதற்கும் பயன்படுத்தப்பட்டது. பின்னர் இது போக்குவரத்து, தொழில் முன்னேற்றம் ஆகியவைகளுக்கான திட்டங்களின் நிதியாக்கத்

திற்கும் பயன்படுத்தப்பட்டது. அதாவது ரயில் எஞ்சின்களை வாங்குவதற்கும், ரயில்வேக்கான பெட்டிகளை வாங்குவதற்கும், தொழில் பயன்களுக்கான உருக்கை வாங்குவதற்கும் பயன் படுத்தப்பட்டது. மேலும், ரிகாண்டு மின்சாரத் திட்டம் (Rihand Power Project) போன்ற பெரும் திட்டங்களின் நிதியாக்கத் திற்கும் இது பயன்படுத்தப்பட்டது. உலக வங்கியால் கொடுக்கப் பட்ட கடன்கள் மின்சாரத் திட்டங்களுக்காகவும், வேளாண்மை இயந்திரங்களை வாங்குவதற்காகவும் என்றிருந்தன. போக்கு வரத்துச் சாதனம், வயர், கேபிள் தொழில்களுக்கான பண்டங்கள், இரயில் எஞ்சின் கொதிகலன்கள், மின்சாரச் சாதனங்கள் ஆகியவைகளை வாங்குவதற்கும் மயூராக்சித் திட்டம் (Mayurakshi Project), குந்தா நீர்ப்பாசன மின்சாரத் திட்டம் (Kunda Hydro Electric Project), துங்கபத்திரா திட்டம் (Tungabadra Project) இராம குண்டம் திட்டம் (Ramagundam Project) ஆகியவை களின் நிதியாக்கத்திற்கும் கனடாவிலிருந்து பெறப்பட்ட நிதி உதவி பயன்படுத்தப்பட்டது இந்தக் கடன் நீங்கலாக ஐக்கிய நாடுகள் நிறுவனத்திடமிருந்தும் அதனுடைய சிறப்பான பதிலாண்மைகளிடமிருந்தும் பேரளவிலான தொழில் நுட்ப உதவி பெறப்பட்டது. இவ்வாறாக பொதுத் துறையால் அயல்நாட்டு அரசுகளிடமிருந்தும் பன்னாட்டுப் பதிலாண்மைகளிலிருந்தும் பெறப்பட்ட அயல்நாட்டு மூலதனம் பொதுப் பயன்பாடுகள் மின்சாரத் திட்டங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள் ஆகியவைகளின் மீதே முக்கியமாகச் செலவிடப்பட்டன. இவ்வாறாகப் பொருளா தாரத்தின் மூலதன அடிப்படையை விரிவாக்குவதற்கு அவைகள் உதவிசெய்திருக்கின்றன.

முறைப்படுத்தப்பட்ட துறைக்குக் (தொழில்களில் பயன் படுத்துவதற்காக ஓரளவுக்குத் தனியார் துறையிடமும்) கிடைத்த மொத்த அயல்நாட்டு உதவி 1-4-56 முதல் 31-3-61 முடிய உள்ள இரண்டாம் திட்ட காலத்தில் ரூ.27,615மில்லியனாக இருந்தது. இதில் ரூ.13,918மில்லியன் கடனாகவும், ரூ.13,697 மில்லியன் நிதி உதவிகளாகவும் மற்றப் பல உதவிகளாகவும் இருந்தன. கிடைத்த தோற்றுவாய்க்கேற்ப மொத்தத் தொகை பகுக்கப்பட்டிருந்தன.

முதல் திட்ட ஆண்டுகளில் பயன்படுத்தப்பட்ட தொகையைப் போல ஏறத்தாழ 8 மடங்கு அதிகமானதாக இரண்டாம் திட்டக் காலத்தில் பயன்படுத்தப்பட்ட அயல்நாட்டு உதவி அமைந் திருந்தது. பொதுத் துறையிலான மொத்த முதலீட்டின் விகிதம் என்ற அடிப்படையில் பார்க்கும்போது முதல் திட்டத்தில் இது

12%ஆக இருந்தது இரண்டாம் திட்டத்தில் 40%ஆக அதிகரித்தது இரண்டு திட்டங்களிலுமே கிடைத்த அயல்நாட்டு உதவியில் ஏறத்தாழப் பாதியளவு கடன்களாகவே இருந்தன. கடன்களின் தோற்றுவாயைப் பொறுத்தமட்டிலும், சோவியத் யூனியனி லிருந்து பெறப்பட்ட கடன் மிகவும்அதிகமான அளவிலிருந்தது என்பது மிக முக்கியமானதொரு இயல்பாகும். இரண்டாம் திட்டக் காலத்தில் அனுமதிக்கப்பட்ட மொத்தக் கடன் ரூ.12,789 மில்லியனுகும். இதில் (ரூபாயாகத் திருப்பிச் செலுத்தப்படக் கூடியது உள்பட) ஐக்கிய அமெரிக்க நாட்டின் கடன் ரூ.3,301ஆக இருந்தது. சோவியத் யூனியனுக்கான தொகை ரூ.3,190மில்லியனுக இருந்தது. மேற்குச் செர்மனியால் அனுமதிக்கப்பட்ட கடன்கள் ரூ.1,339மில்லியனுகவும், இங்கிலாந்திஞல் அனுமதிக்கப்பட்ட கடன்கள் ரூ.1,226மில்லியனுகவும் இருந்தன. இந் நான்கும் சேர்ந்து அளித்த மொத்தக் கடன் 70% அளவிலானதாக அமைந் திருந்தது. ஐக்கிய அமெரிக்க நாட்டின் பங்கு நிதி உதவியிலும் மற்றப் பல உதவிகளிலும் அதிகமான அளவிலிருந்தது. இவ் விரண்டு தலைப்புகளிலும் பெறப்பட்ட மொத்த நிதி உதவி ரூ.12,901மில்லியனுகும். இதில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் பங்கு ரூ.12,235மில்லியன் அல்லது 95% ஆக இருந்தது. எஞ்சியுள்ளதில் பெரும்பகுதி கொழும்புத் திட்ட நாடுகளால் கொடுக்கப் பட்டவை.

1956ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 31ஆம் நாளுக்குப் பிறகு பயன்படுத்துவதற்காகக் கிடைத்த நிதி உதவிகள், கடன்கள் ஆகியவற்றின் மொத்தத் தொகையில் (ரூ.27,615மில்லியனில்) ஏறத்தாழ பாதி (ரூ.14,664மில்லியன்) இரண்டாம் திட்டக் காலத்திலேயே பயன்படுத்தப்பட்டது. எல்லா மொத்தத் தொகையும் 1961ஆம் ஆண்டுக்கு முன்னதாகவே பயன்படுத்தப்பட வேண்டுமென அமைக்கப்படவில்லை என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியம். இவ்வாருக, சோவியத் யூனியனுல் அனுமதிக்கப்பட்ட கடனில், ரூ,3,190 மில்லியன் தொகையில் நான்கில் மூன்று பங்கு மூன்ரும் திட்டத்தில் பயன்படுத்துவதற் கென்று ஒதுக்கப்பட்டது. மேலும், முறைமைப்படுத்தப்பட்ட துறையில் பல தலைப்புகளில் பெறப்பட்ட அயல்நாட்டு உதவியின் பெரும்பங்கு, தனியார் துறையால், குறிப்பாக உருக்குத் தொழில் திட்டங்களிலும் மற்றப் பல தொழில்களிலும் பயன்படுத்தப்படு வதற்கென்றும், பொதுத் துறையாலும் தனியார் துறையாலும் பயன்படுத்தப் படுவதற்கென்றும் ஒதுக்கி வைக்கப்பட்டது. ரூர்கேலா கடனிலிருந்து தோன்றும் கடனைத் திருப்பிச் செலுத்தும் பொறுப்புகளுக்காக மேற்கு ஜெர்மனி ரூ.112மில்லியன் கடனைக்

கொடுத்தது. இதை நீக்கிப் பார்த்தால் இரண்டாம் திட்டத்தில் பயன்படுத்தப்பட்ட மொத்த நிரக் கடன்களின் அளவு ரூ.7132 மில்லியன் ஆகும். இதில் பொதுத்துறை ரூ.4.124மில்லியன் அல்லது 58% அளவை ஏற்றுக்கொண்டது. தனியார்துறை பெற்ற தொகையின் அளவு ரூ.886மில்லியனுக இருந்தது. பொதுத்துறை, தனியார்துறை ஆகிய இரு துறைகளும் சேர்ந்து செலவழித்த தொகையின் அளவு ரூ.2,122 மில்லியன் அல்லது ஏறத்தாழ 3 0%ஆக இருந்தது. 1951-52 முதல் 1955-56 வரையில் நோக்கத்தின் அடிப்படையிலான கடன்களின் பகிர்வு அட்டவணை 17-ல் காட்டப்பட்டிருக்கிறது.

### அட்டவணை 17

அயல்நாட்டுக் கடன்களின் வரவு நோக்க அடிப்படையிலான பகிர்வு இரண்டாம் திட்டக் காலத்தில் பயன்படுத்தப்பட்ட மதிப்பீட்டு அளவு
(Purpose-wise Distribution of Foreign Loans/Credits Estimated Utilisation during the Second Plan.)

| | ரூபாய் (மில்லியனில்) | மொத்தத்தில் விழுக்காட்டு அளவு |
|---|---|---|
| இருப்புப்பாதை முன்னேற்றம் | 1,434 | 20 |
| மின்சாரத் திட்டங்கள் | 293 | 4 |
| உருக்கு, உருக்குத் திட்டங்கள் | 2,540 | 36 |
| துறைமுக வளர்ச்சி | 68 | 1 |
| போக்குவரத்து | 90 | 1 |
| தொழில் முன்னேற்றம் | 2,550 | 36 |
| கோதுமைக் கடன்கள் | 157 | 2 |
| மொத்தம் | 7,132 | 100 |

மூலம் : *Report on Currency and Finance*, 1961-62, Reserve Bank of India, Bombay Statement, 89.

மேலே குறிப்பிட்டுள்ள காலத்தில் உருக்கு, உருக்குத் திட்டங்கள், தொழில் முன்னேற்றம் ஆகியவைகள் மொத்தத்தில் 72% அளவைப் பெற்றிருந்தபோது இருப்புப்பாதை முன்னேற்றம்

பயன்படுத்தப்பட்ட மொத்தக் கடனில் ஏறத்தாழ ஐந்தில் ஒரு பங்கையே பெற்றிருந்தது. 1951ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களி லிருந்து 1961ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் முடிய உள்ள காலத்தில் மொத்தப் பொது முதலீடு ரூ.52,100மில்லியனுக இருந்தது. இதில் முறைமைப்படுத்தப்பட்ட துறையால் நிதி உதவிகள், கடன்கள் என்ற வடிவத்தில் பெறப்பட்ட அயல்நாட்டு உதவியின் மொத்தத் தொகை ரூ.16,545மில்லியனுக இருந்தது. இது மொத்தத்தில் 32% உள்நாட்டு மூலதன ஆக்தத்திற்கு முறைமைப்படுத்தப்பட்ட துறையில் அயல்நாட்டு மூலதனத்தின் பங்கைப்பற்றி ஓரளவுக்குத் தெரிந்துகொள்ள இது உதவுகிறது. ஆனுல். மொத்த முதலீட்டுச் செலவின் பங்கு அல்லது பகுதி என்ற அடிப்படையில் அயல்நாட்டு மூலதனத்தின் பங்கை அளவிடுவது, அது பொதுத் துறையாக இருந்தாலும் சரி, தனியார் துறையாக இருந்தாலும் சரி, சரியானதாகாது என்பது ஏற்கனவே குறிப் பிடப்பட்டிருக்கிறது. இந்த அயல்நாட்டு மூலதனம் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதையும், அது அமைப்பதற்கு உதவக் கூடிய உண்மை மூலதனத்தின் இயல்பு எவ்வாறிருக்கிறது என்பதையும் பொறுத்துத்தான் பெரும்பாலும் இதன் நன்மையை மதிப்பிட முடியும். அயல்நாட்டுப் பொது மூலதனத்தின் பெரும் பகுதி இந்தியாவில் பொருளாதாரப் பின்னமைப்புகளை அமைப் பதிலேயே பயன்படுத்தப்பட்டிருப்பதாலும், மனித மூலதனத்தை அமைப்பதிலும் ஓரளவுக்கு உதவி செய்திருக்கிறது என்பதாலும் அயல்நாடுகளிலிருந்து பெறப்பட்ட பொது மூலதனம் இந்தியாவில் பொருளாதார வளர்ச்சிச் சக்திகளை உற்பத்தி செய்வதற்குப் பேரளவில் உதவி செய்திருக்கின்றது என்றும், தன்னைத்தானே வளர்த்துக்கொள்ளத்தக்க நிலைக்கு நாட்டைக் கொண்டு வருவதற்குப் பேரளவில் உதவி செய்திருக்கிறது என்றும் பொது வாகக் குறிப்பிடுவது நல்லது.

முதலீட்டு அளவை உயர்த்துதல், உணவுப்பண்டங்களில் விலை நிலை உயர்வை ஓரளவுக்குக் கட்டுப்படுத்துதல், கச்சாப் பொருள் களின் இறக்குமதியை அதிகரித்தல், நீர்ப்பாசனம், மின்சாரம் ஆகியவைகளின் உள்ளாற்றலை விரிவுபடுத்துதல், போக்கு வரத்து வசதிகளைப் பெருக்குதல், உருக்குத் தொழிற்சாலைகளை அமைத்தல், பொறிநுட்ப மூலவளங்களைப் பெருக்குதல், அந்நியச் செலாவணி நெருக்கடிகளைச் சமாளித்தல், பொதுவான முன்னேற்றம் ஆகியவைகளில் அயல்நாட்டு முலதனமும் நிதி உதவியும் பெரும் பங்கு வகித்திருக்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மைதான் என்ருலும்கூடக் கடன் வாங்கும்போது அக் கடனைத் திருப்பிக் கொடுக்கவேண்டிய பொறுப்பும் சேர்ந்தே வந்துவிடுகிறது என்ப தையும் மனதில் கொள்ளவேண்டியது மிகவும் அவசியமாகும்.

அந்நியக் கடன்களைத் தீர்க்கும் சுமையைப் பற்றிய செய்திகளை அட்டவணை 18 தெளிவாக்குகிறது.

அட்டவணை 18

கடன்களைக் திருப்பிச் செலுத்தும் சுமை (ரூ. மில்லியன் கணக்கில்)

| காலம் | கடன்தீர் நிதிச் செலுத்துதல் | | வட்டிச் செலுத்துதல் | | மொத்தச் செலுத்துதல் | |
|---|---|---|---|---|---|---|
| | தொகை | % | தொகை | % | தொகை | % |
| A. முதல் திட்டம் | 1,050 | | 133 | | 238 | |
| இரண்டாம் திட்டம் | 5,520 | | 642 | | 1,194 | |
| மூன்றும் திட்டம் | 30,560 | | 2,370 | | 5,426 | |
| A-யின் மொத்தம் | 37,130 | 54·1 | 3,145 | 45.9 | 6,588 | 100·0 |
| B. 1966—67 | 1,597 | | 1,148 | | 2,745 | |
| 1967—68 | 2,107 | | 1,223 | | 3,330 | |
| 1968—69 | 2,362 | | 1,388 | | 3,750 | |
| 1969—70 | 2,685 | | 1,440 | | 4,125 | |
| 1970—71 | 2,895 | | 1.605 | | 4,500 | |
| 1971—72 * | 2,843 | | 1,657 | | 4,500 | |
| B-யின் மொத்தம் | 14,489 | 63·1 | 8,461 | 36.9 | 22,950 | 100·0 |
| A,B ஆகியவைகளின் மொத்தம் | 18,202 | 61.6 | 11,606 | 39.4 | 29,538 | 100·0 |

மூலம்: *Economic Survey* 1971-72

* மதிப்பீடுகள்

கடன்களைத் திருப்பிச் செலுத்த வேண்டிய சுமை இருக்கின்ற காரணத்தால் கடன்களைப் பெறும்போது மிகவும் விழிப்புணர்ச்சி

காட்டவேண்டியது அவசியம். குறிப்பிட்டவைகளுக்காக என்று மட்டுமல்லாமல், கடன் கொடுக்கும் நாட்டிலிருந்தே பண்டங்களை வாங்குதல் என்பதையும் உள்ளடக்கியிருக்கும் கடன்களைப் பெறுவது நல்லதன்று. அதாவது, கட்டுப்பாடுள்ள கடன்களைப் (Tied loans) பெறுவதைக்காட்டிலும் கட்டுப்பாடில்லாத கடன்களையே (Untied loans) பெறுவது விரும்பத்தக்கது. கடன்களைப் பெறும்போது அக் கடன்களைத் திருப்பிக் கொடுக்கவேண்டிய காலம் மிகவும் நீண்டகாலமாக இருப்பது அவசியம் என்பதோடு வட்டியும் மிகக் குறைவாக இருக்க வேண்டும். பொறிநுட்ப உதவிகளைப் பொறுத்தமட்டிலும் இந்தியர்களுக்குப் பிற நாடுகளில் பயிற்சி அளித்தல் என்பதை விடுத்து இந்திய நாட்டிலேயே பயிற்சி நிறுவனங்களை அமைத்துப் பயிற்சி அளிப்பதும் அவசியம் என்று குறிப்பிடப்படுகிறது. மேலும் தன்னைத்தானே வளர்த்துக்கொள்வதற்குத் தேவையான அடிப்படையை அமைக்கும்வண்ணமும், குறுகிய காலத்தில் வேளாண்மை உற்பத்தி, தொழில் உற்பத்தி ஆகியவைகளை அதிகரிக்கும்வண்ணமும் இக் கடன்கள் பயன்படுத்தப்படவேண்டும். இறுதியாகக் குறிப்பிடவேண்டுமானால், பொருளாதாரம் எந்த அளவுக்கு மாற்றமடைந்திருக்கிறது என்பதைப் பொறுத்துத்தான் அந்நியக் கடன் பொறுப்புகளைத் திருப்பிச் செலுத்துதல், பணிகளுக்கு ஈடுசெய்தல் ஆகியவைகளுக்கான தகுதி ஒரு நாட்டிற்கு அமைகிறது என்று குறிப்பிடலாம்.

# 10. வேளாண்மையின் பங்கு

## (The Role of Agriculture)

### வேளாண்மை முன்னேற்றமும் பொருளாதார வளர்ச்சியும்
(Agricultural Development and Economic Expansion)

வேளாண்மை முன்னேற்றம் பொருளாதார முன்னேற்றத்திற்கு எந்த அளவிற்கு உதவி செய்ய முடியும் என்பதை இன்றைய வளர்ச்சி பெற்ற பல நாடுகளின் பொருளாதார வரலாறுகள் நல்ல முறையில் காட்டுகின்றன. இங்கிலாந்தில் 18ஆம் நூற்றாண்டின் முதல் கால் பகுதியில் வேளாண்மைத் துறையில் காணப்பட்ட குறிப்பிட்ட பேரளவிலான முன்னேற்றம் அந்த நாட்டின் தொழில் வளர்ச்சிக்கான அடிப்படையை உறுதியாக அமைத்துத் தந்தது. 18ஆம் நூற்றாண்டின் இரண்டாம் கால் பகுதியில் இங்கிலாந்து நாட்டில் விளைந்த கோதுமையில் விதைக்காக ஒதுக்கியது போக உள்ள நிகர விளைவு ஏக்கர் ஒன்றுக்கு 12½ மரக்காலிருந்து (Bushels) 20 மரக்கால் அளவாக உயர்ந்தது. ஒரு நூற்றாண்டிற்குப் பிறகு ஜெர்மனியில் தோன்றிய தொழில் புரட்சி வேளாண்மைத்துறை உற்பத்தியின் மிக விரைவான முன்னேற்றத்தோடு சேர்ந்தே தோன்றியது. 1850, 1950 ஆகிய ஆண்டுகளுக்கு இடையே ஒரு ஹெக்டேர் ((Hectare) நிலத்தின் கோதுமை விளைவு 1.2 டன்னிலிருந்து 2.7 டன்னுக்கும், உருளைக் கிழங்கின் உற்பத்தி 8 டன்னிலிருந்து 22 டன்னுக்கும் அதிகரித்தது.[1]

வேளாண்மைத் துறையில் தோன்றிய உற்பத்தித் திறன் அதிகரிப்பு அத் துறையின் வருமானத்தில் குறிப்பிடத்தக்கவாறு

[1] Clark, Colin, 'The Development of Agricultural Productivity', *The Eastern Economist*, New Delhi, Blue Supplement, April 26, 1957.

அதிகமான அதிகரிப்பைத் தோற்றுவித்தது. மேலும் சேமிப்பு விடுமுதலையும் அதிகரித்தது. இவற்றோடு தன்னிச்சையாகவோ, கட்டாயச் சேமிப்பு வரி விதித்தல் வேளாண்மைப் பொருள்களைக் கட்டாயமாகக் கொடுத்தல் என்பதன் மூலமாகவோ வேளாண்மைத்துறை மூலவளங்கள் பிற துறைகளில் செல்வதற்கும் உற்பத்தித் திறனின் இத்தகைய அதிகரிப்பு வகை செய்தது. ஜப்பானின் மிக விரைவான பொருளாதார வளர்ச்சிக் காலமான ஏறத்தாழ 1885ஆம் ஆண்டு முதல் 1915ஆம் ஆண்டு வரையுள்ள ஆண்டுகளில் மேம்பாடடைந்த உழவு முறையின் காரணமாகப் பண்ணைத் தொழிலாளியின் உற்பத்தித் திறன் இரண்டு மடங்கிற்கும் அதிகமாகியது என்பதும், வேளாண்மைக் குடிமக்களின் இத்தகைய அதிகரித்த வருமானத்தின் பெரும்பகுதி பளு மிகுந்த வரி விதித்தலின் மூலமாக எடுத்துக்கொள்ளப்பட்டுத் தொழில் துறைக்குச் செல்லுமாறு செய்யப்பட்டது என்பதும் அண்மைக் கால ஜப்பான் நாட்டுப் பொருளாதார வரலாற்றில் காணப்படும் நன்கறிந்ததொரு உண்மையாகும். இத்தகையதொரு முன்னேற்றம் தோன்றியிருந்தபோதும்கூடக் கிராமப் பகுதிகளில் வாழும் மக்களின் வாழ்க்கைநிலை மிகவும் மோசமானதாகவே இருந்தது. ஆனால், அதற்கு முந்தி இருந்ததைக் காட்டிலும் தாழ்ந்துவிடவில்லை. மைய அரசாங்கத்தின் வரி வருமானத்தில் 93.3% அளவு நிலவரியின் மூலம் பெறப்பட்டதாகவே காணப்பட்டது. இந்த நூற்றாண்டு தொடங்கிய பிறகும்கூட நில வரியின் பங்கு 50%-க்கும் அதிகமானதாகவே இருந்தது. மிக அண்மைக் காலத்தில் சோவியத் யூனியனும் சீனாவும் இதுபோன்றதொரு கொள்கையைக் கடைப்பிடித்தன. இரண்டு உலகப் போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் வேளாண்மைத் துறையின் உற்பத்தி ஏராளமான அளவுக்குப் பெருகியிருந்தபோதும், தொழிலாளர்கள் நகரங்களுக்கு இடம் பெயர்ந்து சென்றிருந்தபோதும் தனிநபரின் பண்ணை வருமானம் சோவியத் யூனியனில் மிகவும் குறைவான அளவிலேயே வைக்கப்பட்டிருந்தது. இதைப் போன்று சீனாவில் 1953–57 ஆகிய ஆண்டுகளில் வேளாண்மைத் துறை வருவாய்களிலிருந்து பெறப்பட்ட வரி வருமானத்தில் 40%-க்கும் அதிகமான பங்கு வேளாண்மைத்துறை தவிரப் பிற துறைகளில் பயன்படுத்தப்பட்டது.

சேமிப்புகளை அதிகரிப்பதன் மூலமாகவும், பொருளாதாரத்தின் தொழில் துறையில் பயன்படுத்தப்படும்வண்ணம் மென்மேலும் அதிகப்படியான அளவில் முதலீட்டு நிதிகளை வழிப்படுத்துவதற்கான மூலங்களை விரிவாக்குவதன் மூலமாகவும் வேளாண்மைத்துறை முன்னேற்றம் பொருளாதார வளர்ச்சிக்கு உதவி

செய்கிறது என்பது மேற்கண்ட குறிப்புகளிலிருந்து தெளிவாக்க காணப்படுகிறது. உண்மையிலேயே பொருளாதார முன்னேற்றத்தின்மீது வேளாண்மை முன்னேற்றத்தின் விளைவு அதிக அளவிலான நல்ல வாய்ப்புகளைப்பெற்றிருக்கிறது. வேளாண்மைத் துறையின் முன்னேற்றம், பொருளாதாரத்தில் முதலீடு செய்வதற்கான சேமிப்புகளை அதிகரிக்க உதவுகிறது.

மிக அதிகமான விகிதத்தில் பெருகிவரும் மக்கள் தொகை, மக்களின் நுகர்வுத் தரத்தை முன்னேற்றுவிக்க வேண்டிய அவசியம் ஆகிய இரண்டும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உணவு உற்பத்தி மிக விரைவாக அதிகரிக்க வேண்டியதை மிகவும் அவசியமாக்குகின்றன. பொருளாதார அடிப்படையில் பின் தங்கிய நிலையில் உள்ள பல நாடுகள் அமித மக்களைக் கொண்டுள்ளவைகளாக இருக்கின்றன. இப்போது அதிகரித்துவரும் மக்களின் தேவைகளை இப்போதுள்ள நிலையிலேயே நிலைநிறுத்த வேண்டுமானால் ஆசியா, தூரக்கிழக்கு ஆகிய பகுதிகளில் உள்ள குறைந்த வருமானமுடைய நாடுகளின் உணவு உற்பத்தி ஆண்டொன்றுக்கு 1.5.% என்ற அளவில் அதிகரிக்க வேண்டும். இந்த நாடுகளுக்குள் இந்தியா போன்ற ஒரு சில நாடுகளில் ஆண்டுதோறும் மக்கள் பெருக்க விகிதம் 2.%-க்கும் அதிகமானதாக இருக்கிறது. எனவே அதற்கேற்ப உணவு உற்பத்தியும் அதிகரிக்கப்பட வேண்டும். இங்குக் குறிப்பிடப்பட வேண்டிய மற்றுமொரு சிறப்பான காரணியும் உண்டும். இப்போதுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் காணப்படும் உணவின் தரம் வருந்தத்தக்க அளவில் மிகமிகக் குறைவானதாகவே இருக்கிறது. உணவின் தரத்தில் முன்னேற்றத்தைத் தோற்றுவிப்பதற்குப் பொருளாதார முன்னேற்றம் உதவி செய்யாவிட்டால் பொருளாதார முன்னேற்றம் என்று குறிப்பிடுவதில் எத்தகைய பொருளும் இல்லாமல்தான் இருக்கும். உட்கொள்ளப்படும் உணவுச் சத்துகளின் சராசரி அளவுகளைப்பற்றி ஐக்கிய நாட்டு மன்றம் ஓர் ஆய்வை மேற்கொண்டது. உலக நாடுகளுக்குள் ஆசியா, தூரக்கிழக்கு ஆகிய பகுதிகளில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் சராசரி அளவுதான் மிகமிகக் குறைந்த அளவில் இருக்கிறது என்றும், இயல்பான நல்ல நலத்தை நிலைநிறுத்துவதற்குத் தேவைப்படும் அளவைக் காட்டிலும் குறைவான அளவில் இருக்கிறது என்றும் அந்த ஆய்வில் காணப்பட்டது. உண்மையான உணவின் நுகர்வு மிகவும் குறைவான தேவையைக் (Minimum requiement) காட்டிலும் சிலோன், இந்தியா, பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளில் .12%–18% வரையிலும், ஜப்பான், பாக்கிஸ்தான் ஆகிய

நாடுகளில் 5%–7%வரையிலும் குறைவாக இருக்கிறது.[1] இதிலிருந்து இந்த நாடுகளில் ஆண்டுதோறுமான மக்கள் தொகை அதிகரிப்பு விகிதத்தைக் காட்டிலும் அதிகமான விகிதத்தில் உணவு உற்பத்தி அதிகரிக்க வேண்டும் என்பது மிகவும் தெளிவாகக் காணப்படுகிறது.

இது தவிர, பொருளாதார வளர்ச்சி தோன்றும்போது நாட்டு வருமானமும், தனிநபர் வருமானமும் அதிகரிக்கின்றது. அப்போது உணவின்மீதான தனிநபர் செலவும் அதிகரிக்கின்றது. வருமானம் அதிகரிக்கும் அதே வேகத்தில் உணவின்மீதான நகர்புறச் செலவும் அதிகரிக்கும் என்று இல்லாவிட்டாலும்கூட உணவின் நுகர்வு மீதான செலவு முன்பு இருந்ததைக் காட்டிலும்அதிகமானதாகவே இருக்கும். அதாவது உணவிற்கான வருமானத் தேவைநெகிழ்ச்சி பூச்சியத்திற்கு அதிகமாக, ஆனால் ஒன்றுக்குக் குறைவாக இருக்கும் இந்தியா. ஜப்பான் ஆகிய நாடுகளில் நகர்வாழ் மக்களின் வீட்டு வரவுசெலவுத் திட்டத்திற்கான புள்ளிவிவரங்களின் அடிப்படையில் வீடுகளில் நுகரப்பட்ட எல்லா விதமான உணவுகளின் மீதான செலவுகளுக்கான வருமான நெகிழ்ச்சிக் கெழுக்கள் (Income elasticity coefficents) இவ் விரு நாடுகளுக்கு முறையே ஏறத்தாழ 0.7 என்றும், 0.6 என்றும் மதிப்பிடப்பட்டிருக்கின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இப்போதுள்ள தனிநபர் நுகர்வுநிலையின் அளவு மிகவும் குறைவானதாக இருக்கிறது. இதன் அடிப்படையில் பார்க்கும்போது வருமானத் தேவை நெகிழ்ச்சி செல்வமிகு நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் அதிகமாக இருக்கும் போக்கைத்தான் பெற்றிருக்கும். மேலும், இந் நாடுகளில் நகர்ப்பகுதி மக்கள் அளவு மிக விரைவாக அதிகரித்துக்கொண்டு வருகிறது. இதன் காரணமாக, நுகர்வின் தரமும் அதிகரிக்கும். சமுதாய நிலைகளிலும், போக்கு வரத்து, செய்தித் தொடர்பு ஆகியவற்றில் தோன்றும் முன்னேற்றமும், கிராமப்பகுதி மக்களின் பணத்தைச் செலவழிக்கும் சக்தியை அதிகரிக்கலாம். நகர்ப்பகுதி மக்கள் அளவில் தோன்றும் அதிகரிப்பு வேளாண்மைப் பண்டங்களில் அங்காடிக்கு வரத்தக்க உபரியின் அளவை அதிகரிக்க வேண்டிய அவசியத்தைக் கோடிட்டுக் காட்டுகிறது. எனவே வருமானம் அதிகரிக்கும்போது உணவுப் பண்டங்களுக்கான தேவையின் கலவையில் மாற்றம் தோன்றுவதற்கு எல்லா விதமான வாய்ப்புகளும் உண்டு. காய்கறிகள், பழங்கள், பால், முட்டைகள், கால் நடைகள், மீன் பண்டங்கள் போன்ற சத்து மிகுந்த உணவுப் பண்டங்கள் விலை அதிகமான உணவுப்

[1] *Economic Bulletin for Asia and the Far East*, U. N., November 1957, p. 24 f n.

பண்டங்கள் ஆகியவைகளுக்குச் சாதகமானதொரு மாற்றம் தோன்றும்: அதாவது இத்தகைய பண்டங்களின் தேவை அதிகரிக்கும். தேவையில் தோன்றத்தக்க இத்தகைய மாற்ற மானது வளர்ச்சிபெற்ற நாடுகளிலும் பின்தங்கிய நாடுகளிலும் காணப்படுபவைகள்தான். ஜப்பானில் எல்லா வகையான உணவுப் பண்டங்களையும் உள்ளடக்கிப் பார்க்கும்போது அதன் தேவைநெகிழ்ச்சி 0 6 என்று இருந்தது. முக்கியமான உணவுகள், அரிசி வகைகள். பருப்பு வகைகள், ரொட்டி மற்றும் புரதச் சத்துள்ள பிறவகை உணவுகளுக்கான தேவைநெகிழ்ச்சி ஏறத் தாழ ்2 என்றிருந்தது. ஆனால் இறைச்சிக்கான தேவை நெகிழ்ச்சி 1·1 என்றிருந்தது. அதே நாட்டில் 1951, 1954 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் மேற்கொள்ளப்பட்ட உசாய்வு தேவைநெகிழ்ச்சியானது உணவு வகைகளுக்குள்ளும் பலவகைகளுக்கேற்ப வேறுபட்டிருந்தது என்பதைக் காட்டு கின்றன. கோதுமை, பார்லி ஆகியவைகளின் செலவுகளுக்கான தேவைநெகிழ்ச்சி எதிர் மறையில் காணப்பட்டது. ஆனால், அரிசியின் செலவுக்கான தேவைநெகிழ்ச்சி நேர்விகிதத்தில் இருந்தது. அந் நெகிழ்ச்சி 0·09 முதல் 0·55 வரையிலான வீச்சில் இருந்தது. எனவே தேவையில் தோன்றும் இத்தகைய போக்கு வேளாண்மைப் பண்டங்களின் உற்பத்தி முறையிலும் ஒரு மாற்றத்தை அவசியமாக்குகின்றது. உற்பத்தியானது திட்ட மிடப்பட்டதாகவும் விளைவைப் பொறுத்த மட்டிலும் இலக்குகள் நிருணயிக்கப்படுவதாகவும் இருக்குமானல் வேளாண்மைப் பண்டங்களின் மொத்தத்திற்கான தேவை நெகிழ்ச்சியைக் கருத்தில் கொள்ளுவதைக் காட்டிலும் தனிப்பட்ட பண்டங்களின் தேவை நெகிழ்ச்சி மதிப்பீடுகளைக் கருத்தில் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

இறுதியாக, தொழிலுக்குத் தேவையான உழைப்பாளர்களின் அளிப்பிற்கு உறுதியளிப்பதன் மூலம் தொழில் வளர்ச்சிக்கு வேளாண்மைத் துறை உதவி செய்கிறது. வேளாண்மைத் துறையில் தோன்றக்கூடிய அதிகரித்த திறனின் காரணமாக நாட்டிலிருக்கும் மொத்த மக்களுக்கு உணவளிப்பதில் வேளாண் மைத் துறைக்குத் தேவைப்படும் எண்ணிக்கை குறைகிறது. முதன்மைத் துறையில் இருப்பதைக் காட்டிலும் வேலைவாய்ப்பு உள்ளாற்றல் தொழில்துறையில் அதிகமான அளவில் இருக்கிறது. தொழில் துறையில் உழைப்பாளர்களைக் கவரும் விகிதம் மக்கள் பெருக்க விகிதத்தைக்காட்டிலும் அதிகமாக இருந்தால் தொழில் துறைக்கு வேளாண்மைத் துறையிலிருந்து தொழிலாளர்கள் மாற்றபபட்டால்தான் தொழிற்றுறையில் உழைப்பாளர்களை

ஈர்த்துக்கொள்ளும் விகிதம் நிலைநிறுத்தப்பட முடியும். இவ்வாருகப் பொருளாதார வளர்ச்சி ஏற்படும்போது நாட்டு வருமானத்திற்குத் தொழில்துறையின் பங்கு அதிகரித்துக் கொண்டும், வேளாண்மைத்துறையின் பங்கு குறைந்துகொண்டும், செல்லும். உடனிகழ்வாகத் தொழில்துறையில் பணியாற்றும் தொழிலாளர்களின் அளவில் அதிகரிப்பும், வேளாண்மைத் துறையில் பணியாற்றும் தொழிலாளர்களின் அளவில் குறைவும் தோன்றும். தொழிலாளர்களின் இத்தகைய இடப்பெயர்ச்சி தெளிவான பல சமுதாய நன்மைகளைக் கொண்டிருக்கிறது. உழைப்பாளரின் இறுதிநிலை மதிப்புப் பண்டம், (Marginal Value Product) அதிகரிப்பதற்கு இது உதவுகிறது. பண்ணை வருமானத்தின்மீது உரிமை கொண்டாடுபவர்களின் எண்ணிக்கையை இது குறைக்கிறது. தொழிலில் இருப்பதைக்காட்டிலும் வேளாண்மைத் துறையில் உழைப்பின் இறுதிநிலைப் பண்டத்தின் மதிப்பு குறைவாக இருக்கிறது. இதன் காரணமாக வேளாண்மைத் துறையிலிருந்து தொழில்துறைக்கு உழைப்பு மாற்றப்படுகிறதென்ருல், வேளாண்மைத்துறைஅல்லாதவைகளுக்குத் தராதரமாக் குறைந்த விலையில் உழைப்பு அளிக்கப்படுகிறது என்பதையே இது குறிக்கிறது. பொருளாதாரத்தில் உழைப்பு மூலவளங்களின் பகிர்வில் உள்ள திறனை இஃது உயர்த்துகிறது. மேலும் உழைப்பு, மூலதனம் ஆகியவைகளின் வளர்ச்சியில் நல்ல முறையிலான சமநிலையை இது தோற்றுவிக்கவும் செய்யலாம்.

பொருளாதாரத்தில் தொழில் பெருக்கத்திற்கு வகை செய்வதன் மூலமாகப் பொருளாதார முன்னேற்றத்திற்கு வேளாண்மைத்துறை ஆற்றும் பங்கைப் பற்றியதொரு கருத்தை மேற்கண்ட பகுத்தாய்வு விளக்கமாகக் காட்டுகிறது. தொழில்துறையின் வளர்ச்சியும் வேளாண்மைத் துறையின்மீது நன்மை தரத்தக்க விளைவுகளைக் கொண்டிருக்கிறது. உற்பத்தி செய்யப்படும் பண்டங்களை நல்ல முறையில் விற்பதற்கான பெருகிவரும் சந்தைக்குரிய வாய்ப்பு இல்லாவிட்டால், வேளாண்மை செய்யும் நில அளவை அதிகரிப்பதன் மூலமாகவும், புதிய பயிர் வகைகளைப் புகுத்துவதன் மூலமாகவும், புதிய உற்பத்தி முறைகளைப் பயன்படுத்துவதன் மூலமாகவும் முதன்மைப் பண்டங்களை உற்பத்தி செய்பவர்களுக்கு எந்த விதமான உற்சாகமும் இருக்காது. இவ்வாருக, பண்ணையற்ற துறையில் உற்பத்தி செய்யப்படும் பண்டங்களை ஈர்த்துக்கொள்வதற்கு வேளாண்மைத் துறையில் தோன்றும் அதிகரித்த வருமானம் உதவி செய்வதைப் போன்று, வேளாண்மைத் துறையில் உற்பத்தி செய்யப்படும் பண்டங்களுக்கான

தேவையைத் தொழில்துறையில் தோன்றும் உயர்ந்த நிலையிலான நடவடிக்கைகளும், வருமான நிலைகளும் உயர்த்துகின்றன. நகர்ப் பகுதியின் அங்காடியின் பெருக்கமானது செய்தித் தொடர்பு வசதிகளில் முன்னேற்றத்திற்கு உதவி செய்வதுடன் வேளாண்மைத் துறையை வணிக மயமாக்குவதற்கும், வேளாண்மைத் துறையின் மாற்றத்திற்கும் உதவி செய்கிறது. தொழில் வேலைகளில் உள்ள அதிகமான வாய்ப்புகள் வேளாண்மைத்துறை மக்களிடையே உபரியாக இருப்பவர்களை எடுத்துக்கொண்டு வேளாண்மைத் துறையைச் சார்ந்திருப்பவர்களின் எண்ணிக்கையைக் குறைக்கிறது. அதன் வழியாகத் தனிநபரின் விளைவு அதிகரிக்கிறது. தவிர, வேளாண்மைத் துறைக்குத் தேவையான உர வகைகள், இயந்திரங்கள், மற்றப் பல சாதனங்கள், மின்சாரம், இன்னும் இவைபோன்ற உற்பத்திச் சாதனங்களைத் தேவையான அளவுக்கு வேளாண்மைத் துறைக்குக்குத் தருவதன் மூலம் தொழில் வளர்ச்சி வேளாண்மைத்துறை முன்னேற்றத்திற்கு நேரிடையாகவே உதவி செய்கிறது எனலாம். இறுதியாகப் பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வேளாண்மைத்துறை பற்றுக்குறைத் துறையாகவே இருந்துவருகிறது முன்னேற்றத்திற்குத் தேவையான அளவுக்குச் சேமிப்பைத் தோற்றுவிப்பது இத் துறையில் முடியாததாக இருக்கிறது. எனவே வெளியிலிருந்து வரும் நிதி மூலவளங்கள் இத் துறைக்கு அவசியமாகின்றன. தொழில் துறையோடு சேர்ந்து வேளாண்மைத் துறையும் முன்னேற்றம் அடையும் இடத்தில்கூடச் சேமிப்பின் ஓட்டம் இரு வழிகளிலும் இருக்கும் என்பதைக் காண முடியும்.

### தாழ்த்தப்பட்ட துறையான வேளாண்மைத் துறை (Agriculture, the Depressed Sector)

நாடுகளின் பொருளாதார வளர்ச்சியின் ஒரு நிலையில் நிலத்தைப் பயன்படுத்துதல். இயற்கை மூலவளங்களைப் பயன்படுத்துதல் ஆகியவைகள் ஏறத்தாழ நாட்டு வருமானம் முழுவதையுமே தரத்தக்கவைகளாக இருந்தன. வேளாண்மைத் துறையின் உற்பத்தி அதிகரித்துச் சேமிப்பு அளவும் அதிகரித்த போது, நில மூலவளங்களின்மீது குறைந்த அளவில் நேரடியாகச் சார்ந்துள்ள மற்றப் பல உற்பத்தி வழிகளும் உற்பத்திமுறைகளும் காணப்பட்டன அதன் காரணமாக, நிலத்தை உழுது பெறப் படும் வருவானம் நாட்டு வருமானத்திற்குக் கொடுத்த பங்கு குறைந்துசென்றது. தொழில் துறையின் முன்னேற்றம், மூன்றும் துறைப் பணிகளின் முன்னேற்றம் ஆகியவைகளுக்கு வேளாண்மைத்துறை தெளிவாக உதவி செய்திருக்கிறது. அதாவது,

வேளாண்மைத் துறையின் உற்பத்தி அளவு, நுகர்வுக்காகத் தேவைப்படும் அளவுக்கும் அதிகமானதாக இருந்ததன் காரண மாகவே மற்றத் துறைகளில் முன்னேற்றம் தோன்றியிருக்கின்றது. தொழில்துறை முன்னேற்றத்திற்கும், பொதுவான பொருளா தார முன்னேற்றத்திற்கும் வேளாண்மைத்துறை முன்னேற்றம் பேரளவில் உதவி செய்திருந்தாலும்கூட, இரண்டாம் முறையோடு ஒப்பிடும்போது. முதல்துறை தாழ்த்தப்பட்ட துறையாகவே தொடர்ந்து இருந்துவந்திருக்கிறது. இது வளர்ச்சி பெற்ற நாடு களிலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளிலும் காணப்படும் உண்மையாகும்.

1951ஆம் ஆண்டு மக்கள் கணக்கின்படி, இந்தியாவின் மக்கள் தொகையில் 70% அளவு மக்கள் வேளாண்மைத் துறையில் இருந்து வந்தனர். ஆனால், மொத்த நாட்டு விளைவுக்கு இத் துறையின் பங்கு ஏறத்தாழ 50% அளவாகவே இருந்தது. முதன்மைத் துறையின் தனிநபர் வருமானம், தொழில் துறையின் தனிநபர் வருமானத்தில் ஏறத்தாழ7-ல்3பங்காகவே இருந்ததுஎன்பதை இது காட்டுகிறது. தொழில் பெருக்கம் முன்னேற்றமடையும்போது வேளாண்மைத்துறை வருமானத்தின் பங்கு குறிப்பிட்டதொரு நிலையை அடையும்வரை குறைந்துசெல்லும் போக்கைப் பெறுகிறது. குறிப்பிட்டதொரு நிலையை அடைந்தவுடன் ஏறத்தாழ அந் நிலையில் அது நிலைத்து நின்றுவிடுகிறது. தனிநபர் உண்மை வருமானத்தில் தோற்றுவிக்கப்படும் ஒவ்வொரு 10% அளவுக்கும் வேளாண்மைத் துறையிலிருந்து தோற்றுவிக்கப்படும் நாட்டு வருமானத்திற்கான பங்கு 1½% அலகுக்கும் குறைந்து விடுகிறது என்று டாக்டர் எக்பெர்ட்டி விரீஸ் (Dr. Egbert de Vries) கருதுகிறார். 'இரண்டாம் துறை, மூன்றாம் துறை ஆகிய வற்றின் உற்பத்தியாளர்களின் சராசரி வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கு, இரண்டில் ஒரு பங்கு ஆகியவற்றிற்கிடையே ஏதாவதொரு வருமான அளவை வேளாண்மைத் துறைத் தொழி லாளர்கள் பெறும்போது நிலையானது (Situation) ஏறத்தாழ மாறாத நிலையைப் பெறுகிறது' என்ற கருத்தைக் காலின் கிளார்க் (Colin Clark) கொண்டிருக்கிறார். பொருளாதாரத்தின் வேளாண்மைத்துறை, தொழில்துறை ஆகியவைகளின் வருமானங் களின் இத்தகைய தராதரமான போக்கு மிகவும் அவசியமானது என்பதோடு பொருளாதார முன்னேற்றத்தைச் சுட்டிக் காட்டுவ தாகவும் அமைகிறது. ஆனால், பொருளாதாரம் முன்னேற்ற மடையும்போது, நாட்டு வருமானத்தில் பெரும்பகுதியை ஈர்த்துக் கொள்வதாகவும், நாட்டு வருமானத்தில் பெரும்பகுதியை உற்பத்தி செய்வதாகவும் தொழில்துறை இருப்பதைப் போன்று

முதன்மைத்துறை ஏன் இருக்கத் தவறிவிடுகின்றது என்பதே இங்குத் தோன்றும் மிக முக்கியமான வினாவாகும்.

வேளாண்மைத்துறை தராதரமாகத் தாழ்த்தப்பட்ட துறையாக இருப்பதற்குக் காரணங்கள் பல இருக்கின்றன. ஆனால், அவைகள் யாவும் வேளாண்மையின் அடிப்படை இயல்புகளிலிருந்தே தோன்றுகின்றன. ஏறத்தாழ எல்லா நாடுகளிலுமே இரண்டாம் துறையோடும் மூன்றும் துறையோடும் ஒப்பிடும் போது, வேளாண்மைத் துறையில் பயன்படுத்தப்படும் உற்பத்திக் காரணிகளின் அளவு குறைந்துசெல்லும் போக்குடையதாக இருக்கிறது என்பதுதான் அடிப்படைக் காரணியாகும். தொழில் துறையில் பயன்படுத்தப்படும் எல்லாவிதமான உற்பத்திக் காரணிகளுமே அளவிலும், தரத்திலும் மாற்றப்படுவதற்கு ஏற்றவைகளாக இருக்கின்றன. ஆனால், வேளாண்மைத்துறையில் இவ்வாறு இல்லை. நாட்டின் பரப்பளவோடு ஒப்பிடுகையில் மிகவும் செறிவற்ற மக்கள் தொகையையும் அதிகமான நிலப் பரப்பையும் கொண்டுள்ள நாட்டில், நிலமானது உற்பத்தியைத் தடை செய்யும் காரணியாக இருக்காது. ஆனால், மக்கள்தொகை அதிகரித்து கிடைக்கத்தக்க நிலங்கள் யாவும் வேளாண்மை செய்வதிலும் பிற வழிகளிலும் பயன்படுத்தப்பட்ட பிறகு காரணி அளிப்பு நிலையில் உள்ள நெகிழ்வின்மை உணரப்படுகிறது. சதுப்பு நிலங்களையும் காட்டு நிலங்களையும் விவசாயத்திற்குக் கொண்டு வருவதன் மூலமாகவும், நில அரிப்பைத் தடுப்பதன் மூலமாகவும் நிலத்தின் அளவு அதிகரிக்கப்பட்டாலும்கூட அது மிகவும் குறைவானதொரு அதிகரிப்பையே தோற்றுவிக்கும். நிலத்தின் அளவு அதிகரிக்கப்படமுடியாது என்பதால் அதனை ஈடு செய்ய நிலத்தின் உற்பத்தித் திறன் அதிகரிக்கப்படவேண்டும். இதைச் செய்யாவிட்டால், நிலத்தில் பயன்படுத்தப்படும் உழைப்பின் அதிகரிப்பு விகிதத்திற்குக் குறைவான விகிதத்திலேயே வேளாண்மைத்துறையால் பெறப்படும் வருமான அதிகரிப்பு விகிதம் இருக்கும். அறிவியல்துறை முன்னேற்றங்களும் தொழில் நுண்ணியல் முன்னேற்றங்களும் நிலத்தில் பயன்படுத்தப்படுவது எதிர்பார்க்கப் படாதபோது, குறிப்பிட்டதொரு நிலத்தில் அதிகப்படியாகப் பயன்படுத்தப்படும் உழைப்பு குறைந்துசெல் விளைவு விதியைத் தோற்றுவிக்கும். இக் கோட்பாடு இன்றைக்கும் உண்மையான தொன்றாக இருக்கிறது இவ்வாறாக, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள மூலதனப் பற்றாக்குறையும் தொழில்முயற்சி இன்மையும் தொழில் நுண்ணியலை முழு அளவில் பயன்படுத்துவதைத் தடைசெய்து, அதிகரித்துவரும் மக்கள் தொகையோடு சேர்ந்துகொண்டு வேளாண்மைத் துறைத்

தொழிலாளரின் இறுதிநிலே உற்பத்தித் திறனே ஏறத்தாழப் பூச்சிய அளவுக்குக் குறைத்திருக்கிறது.

நிலத்தின் அளிப்பு நிலேயாக இருக்கிறது. மக்கள் தொகை அதிகரித்துக்கொண்டுவருகிறது. இதன் காரணமாக உற்பத்திக் காரணி என்ற அடிப்படையில் நிலத்தின் பங்கு குறைகிறது. உண்மையில் பார்க்கும்போது, தராதரமான குறைவு என்பதோடு உண்மையான அளவு என்ற அடிப்படையிலும் வேளாண்மைக் காகப் பயன்படுத்தப்படும் நிலத்தின் அளவு குறைந்துசெல்லும் போக்கைப் பெற்றிருக்கிறது. ஐக்கிய அமெரிக்க நாட்டில் வேளாண்மைக்காகப் பயன்படுத்தப்பட்ட நிலத்தின் அளவு 1910-ல் 1,618 மில்லியன் ஏக்கர் அளவிலிருந்து 19›5-ல் 1,540 மில்லியன் ஏக்கர் அளவாகக் குறைந்துவிட்டது என்று பேராசிரியர் சுல்ட்ஸ் (Prof. Schultz) குறிப்பிடுகிருர். ஆனுல், இதே காலத்தில் வேளாண்மைத் துறையின் உற்பத்தி 70% அளவிற்கு அதிகரித்தது. பிரான்சில் 1910, 1948-47 ஆகிய ஆண்டுகளுக்கிடையே வோளண்மை வருமானத்திற்கு வோளண்மை வார வருமானத்தின் (Rent) பங்கு 25•2% அளவிலிருந்து 9·0% அளவுக்குக் குறைந்தது. இங்கிலாந்தில் 1925, 1946 ஆகிய ஆண்டுகளுக்கிடைப்பட்ட காலத்தில் நிகர வோளண்மை வருமானத்தின் விழுக்காடு என்ற அடிப்படையில் நிகர வார வருமானத்தின் அளவு 16·8-லிருந்து 5·6 ஆகக் குறைந்தது. மிகவும் மேம்பாடடைந்த உற்பத்தி முறையைப்பயன்படுத்துதல், உரங்களேப்பயன்படுத்துதல், மற்றும் இவை போன்றவற்றிஞல் நிலத்தின் உற்பத்தித்திறன் உறுதியாக அதிகரித்துக்கொண்டே சென்ருலும்கூட, பண்ணேக் கட்டடங்கள், மற்றப் பல முன்னேற்றங்கள் ஆகியவைகளுக்காக நிலத்தைப்பயன் படுத்தவேண்டியிருந்த காரணத்தால் வேளாண்மையில் பயன் படுத்தப்பட்ட நிலத்தின் அளவு குறைந்திருந்ததுதான் இதற் கான காரணமாகும். இதன் விளேவாக ஐக்கிய அமெரிக்க நாடு, இங்கிலாந்து போன்றவற்றின் வளர்ச்சியடைந்த பொருளா தாரம் நிலத்தின் ஆதியானதும் அழிக்க முடியாததுமான சக்திகளே மிகவும் குறைந்த அளவிலேயே சார்ந்திருக்க வேண்டியதாகி விட்டது.

மூலதனம், உழைப்பு ஆகிய பிற காரணிகளேப் பொறுத்த மட்டிலும், முக்கியமாகப் பல வழிகளிலும் மூலதனத்தை அதிக மான அளவில் பயன்படுத்தியதஞல், வளர்ச்சி பெற்ற பொருளா தாரங்களில் வேளாண்மைத் துறை வளர்ச்சி முடியத்தக்கதாக இருந்தாலும், நகர்ப் பகுதிகளுக்கான மூலதன ஓட்டத்தோடு ஒப்பிடுகையில், கிராமப் பகுதிகளுக்கான மூலதன ஓட்டம்

குறைவாக இருக்கிறது. குறிப்பாக ஆசியா, ஆப்பிரிக்கா போன்ற குறைந்த வருமானமுடைய நாடுகளில் முதலீட்டிற்கானமூலதனப் பற்றுக்குறையின் காரணமாகத் தொழில் துறையில் இருப்பவரைக் காட்டிலும் மிகவும் பின்தங்கிய நிலையில் வேளாண்மை செய்பவர் இருக்கிறார். தொழில் முயற்சி இல்லை என்பதற்காக அல்லாமல் நிதிகள் கிடைக்கவில்லை என்பதற்காகவே தொழில்நுட்ப அடிப் படையில் முடியத்தக்கவைகளாக உள்ள முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகள் பயன்படுத்தப்படாமலிருந்தன. மக்களின் அடிப்படைத் தேவைகளை மட்டுமே ஈடு கட்டுவதற்குப் போது மானதாக உள்ள தனிநபர் வருமானத்துடன் கூடிய தாழ்த்தப் பட்டதொரு துறையாக இருப்பதால், மூலதனத் திரட்சியை விரைவுபடுத்துவதற்கேற்றவாறு அதிகமான அளவிலான சேமிப்பு களைத் தோற்றுவிப்பதற்கு இயலாத துறையாக வேளாண் மைத்துறை இருக்கிறது. வேளாண்மைத்துறையல்லாத துறைக்குச் சேமிப்புகளை மாற்றுவதன் மூலம் தொழில் முயற்சிக்கு உதவி செய்யக்கூடியதொரு நிலையில் இருந்த நிலைமையும் மாறி வேளாண் மைத்துறை இப்போதிருக்கும் நிலையை நிலைநிறுத்துவதற்குக் கூடப் பொருளாதாரத்தின் பிற துறைகளின் சேமிப்புகளைச் சார்ந் திருக்க வேண்டிய நிலையில் குறைந்த வருமானமுள்ள நாடுகளின் கிராமப் பொருளாதாரம் இருக்கிறது. வேளாண்மைத் துறை யிலான முதலீடுகளின் கவர்ச்சியின்மை காரணமாக மூலதனப் பற்றுக்குறையின்போது இத் துறையில் பயன்படுத்தப்பட்ட மூலதனத்தின் அளவு குறைந்துவிட்டது. தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரங்களில் விலை உறுதிப்பாடின்மையும், வருமான உறுதிப்பாடின்மையும் வேளாண்மைத்துறையில் காணப்படும் இயல்புகளாக இருக்கின்றன. இத்தகைய உறுதி இன்மைகள் மூலதனத்தைப் பயன்படுத்துவதை இரு வழிகளில் தடை செய்கின்றன. அதாவது, வேளாண்மை செய்பவர் தனது சொந்தப் பணத்தை முதலீடு செய்வதற்கு விருப்பமில்லாதவராக இருக்கிறார். அதே நேரத்தில் வெளியில் இருப்பவரும் வேளாண்மை செய்பவர்க்குக் கடன் கொடுப்பதற்கு விருப்பமில்லாதவராக இருக்கிறார். எனவே, எதிர்பார்க்கப்படுவது போல, ஆசியா, ஆப்பிரிக்கா ஆகிய பகுதிகளில் உள்ள ஏழ்மை நாடுகளிலும், செல்வமிகுந்தவைகளாகவும் தொழில் வளர்ச்சி பெற்றவை களாகவும் உள்ள நாடுகளிலும் கிராமம் அல்லாத துறையில் இருப்பதோடு ஒப்பிடும்போது கிராமத்துறையில் வட்டிவிகிதம் அதிகமான அளவில் இருக்கிறது.

உற்பத்தியில் பயன்படுத்தப்படும் காரணி என்று கருதப்படும் போது, முதன்மைத் துறையிலிருந்து இரண்டாந்தரத் துறைக்கும்

மூன்றாந்தரத் துறைக்கும் இக் காரணி மாறுவதையும், அத்தகைய மாற்றம் நிலத்தை உழுவதில் பயன்படுத்தப்படும் தொழிலாளர் களின் பங்கில் உடனிகழ்வதொரு குறைவோடு சேர்ந்துநிகழ்வதை யும் பொருளாதார வளர்ச்சி உட்கொண்டிருக்கிறது. ஏற்கெனவே குறிப்பிட்டதைப் போன்று, தொழில் பெருக்கம் முன்னேற்றம் அடையும்போது நகர்ப்பகுதிகளுக்கும், தொழில் மையங்களுக்கும் மக்களின் இடப்பெயர்ச்சி பொருளாதார வளர்ச்சியைச் சுட்டிக் காட்டக்கூடிய தொரு குறிப்பாகும். ஏனென்றால் அத்தகைய போக்கு வேளாண்மைத் துறையில் உழைப்பின் உற்பத்தித்திறனை அதிகரித்து, அதன் வாயிலாக வேளாண்மைத் துறையிலும் தொழில்துறையிலும் வளர்ச்சியைமுடியத்தக்கதாக்குகிறது. ஆனால் பொருளாதாரம் என்று வளர்ச்சியடையும்போது பயன்படுத்தப் படும் எல்லாவற்றிலும் குறைந்துசெல்லும் அளவுகளையே தொழில் அல்லாத துறை ஈர்த்துக்கொள்ளும் என்ற குறிப்பு இங்கு நினை விற்கொள்ள வேண்டிய முக்கியமான குறிப்பாகும். அதிகமான அளவு நிலத்தையும், அதிகமான அளவு மூலதனத்தையும். அதிக மான அளவு உழைப்பையும் முதன்மைத் துறையில் பயன்படுத்தும் போது வேளாண்மைத்துறையின் மொத்த வருமானமும், மொத்த நாட்டு வருமானத்தில் அதன் பங்கும் அதிகரிக்கும் என்பது தெரிந்ததுதான். தொடக்கநிலைப் பொருளாதாரத்தில் இருந்த குடும்பங்களில் சம்பாதிக்கும் உறுப்பினர்கள் உற்பத்தி செய்த அளவு அக் குடும்பத்தின் நுகர்வுத் தேவைகளை ஈடு கட்டுவதற்குத் தேவையான அளவாக மட்டுமே இருந்திருக்கும். பொருளாதார முன்னேற்றத்தின் விளைவாக இப்போது 20 குடும்பங்களுக்கு அல்லது 100 குடும்பங்களுக்குத் தேவைப்படும் உணவை ஒரு மனிதன் உற்பத்தி செய்ய முடிகிறது. இதை இன்னொரு விதத்தில் குறிப்பிட்டால், மக்கள் தொகையில் 5% அல்லது 1% அளவு மக்கள் வேளாண்மை நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தால் போது மானதாகும். இருப்பினும், தராதரமாகக் குறைந்த அளவுள்ள மக்கள்தான் வேளாண்மைத் துறையில் பாதுகாக்கப்படுகிறார்கள் என்ற உண்மை வேளாண்மையைத் தாழ்த்தப்பட்ட தொன்றாக ஆக்குகிறது. 1900, 1943 ஆகிய ஆண்டுகளுக்கிடைப்பட்ட காலத்தில் வேளாண்மைத் துறையில் இருந்த பணிபுரியும் மக்களின் (Working populatnion) விகிதம் ஐக்கிய அமெரிக்க நாட்டில் 37%லிருந்து 15% ஆகவும், கனடாவில் 40%–லிருந்து 22%ஆகவும் குறைந்துவிட்டது.

இது தொழிலாளர் வகுப்புகளுக்கும் பெருந்தக்கூடிய உண்மைதான். வேளாண்மைத் தொழிலாளர்களில் பணம் சார்ந்த நன்மைகளைப் பெறவேண்டும் என்ற நோக்கமும், செல்வத்தைக்

குவிக்க வேண்டும் என்ற அவாவின் அடிப்படையிலான நோக்கமும் தொழில்துறையில் இருப்பதைக் காட்டிலும் குறைவான அளவி லேயே இருக்கிறது. கிராமப் பகுதியில் இருக்கும் தொழிலாளர் களிடம் குறைவான கல்வித்தரம், மரபுகள், வழிவழியாக வரும் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் மிக அதிகமான பளு, இடப் பெயர்ச்சியின்மை, இன்னும் இவை போன்ற பல இயல் புகள் காணப்படுகின்றன. செல்வச் செழிப்பைப் பெறுவதில் இவைகள் யாவும் உறுதியாகத் துறைத் தொழிலாளர்களிடையே சோம்பியிருக்கும் இயல்பைத் தோற்றுவிக்கின்றன. வழக்கமாகப் பெறக்கூடிய வருமானம் உறுதியாகக் கிடைக்கும் என்ற எண்ணத்தினுல் அவர்கள் ஓய்வையே விரும்புகிருர்கள். வேளாண் மைத்துறையில் காணப்படும் இயல்புக்கு முரணுன அளிப்பு வளை கோட்டை இவ் விரண்டும் விளக்குகின்றன. குறைந்த வருமான முடைய நாடுகளில் சிறுசிறு விவசாயிகள் பேரளவில் இருக்கின் றனர். அதோடு அவர்கள் நாடு முழுவதிலும் பரவலாக இருக் கிருர்கள். இவை இரண்டும் அவர்களின் உற்பத்தி முயற்சியில் அவர்களை ஒருங்கிணைப்பதையும், ஒன்று சேர்ப்பதையும் மிகவும் கடினமானதாக்குகின்றன. பொறிநுட்ப அறிவை எல்லோருக்கும் கொடுப்பதை வேளாண்மைத்துறையில் உள்ள குறைந்த கல்வியின் தரம் மிகவும் கடினமானதாக்குகிறது

ஆனுல், குறைந்த அளவில் உற்பத்திக் காரணிகளைப் பயன் படுத்துதல், சாதகமற்ற சமுதாய நடவடிக்கைகள் ஆகிய இரண்டு காரணிகளுக்கும் பின்புறத்தில் வேளாண்மைத் துறையின் அடிப் படை இயல்புகள் பல அமைந்திருக்கின்றன. வேளாண்மைத் துறையின் தேவைப்பகுதி, அளிப்புப் பகுதி ஆகிய இரண்டு பகுதிகளிலுமே நெகிழ்ச்சியற்ற தன்மை இருக்கிறது. விலை, உணவிற்கான வருமானத் தேவைநெகிழ்ச்சி ஆகிய இரண்டுமே குறைவான அளவில் இருக்கிறது என்பதுதான் வேளாண்மைத் துறையில் உள்ள குறைந்த வருமான நிலைக்கான முக்கியமான காரணிகளில் ஒன்ருக இருக்கிறது. பல நாடுகளிலும் விலை, பெரும் பான்மையான வேளாண்மை-உற்பத்தி ஆகியவைகளின் வருமானத் தேவை நெகிழ்ச்சி குறைவாக இருக்கிறது. தனிநபர் வருமானம் அதிகரிக்கும்போது, உணவின்மீதான செலவின் பங்கு குறை கிறது. இதற்கு மாருக வருமானம் அதிகரிக்கும்போது பொறிசெய் பண்டங்களுக்கான தேவை அதிகரிக்கிறது அதோடு உருவாக்கச் செலவுகள் அதிகமான அளவில் இருக்கக்கூடிய பல தரப்பட்ட பண்டங்களுக்கான தேவை அதிகமாக இருக்கிறது பலதரப்பட்ட வருமான நிலைகளில் இருப்பவர்களின் குடும்பங் களின் வரவுசெலவுத் திட்டங்களில் காணப்படும், அடிப்படை

உண்மையிலிருந்து இக் கருத்து பெறப்படுகிறது. குடும்பம் ஒன்றில் வருமானம் அதிகரிக்கும்போது இன்றியமையாத பண்டங்களின் மீது செலவிடப்படும் தொகையின் பங்கு உறுதியாகக் குறைகிறது. முன்னேற்றமடைந்த நாடுகளில் அறிவியல் சார்ந்த உற்பத்தி முறைகளையும் மேம்பாட்டைந்த தொழில் நுண்ணியலையும் பயன் படுத்தியதால் வேளாண்மைத்துறை உற்பத்தியை அவைகள் பேரளவில் அதிகரித்திருக்கின்றன. இத்தகைய நாடுகளில் உணவுத் தேவையில் தோன்றிய பற்றுக்குறை கிராமப் பொருளா தாரத்தில் மிகவும் தீவிரமான சிக்கலைத் தோற்றுவித்திருக்கிறது. ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்ற நிலை, உணவிற்கான வருமானத் தேவைநெகிழ்ச்சி ஆகிய இரண்டுக்குமிடையே தலை கீழ்த் தொடர்பு இருக்கிறது என்பதைக் கீழ்க்கண்ட புள்ளி விவர அட்டவணையிலிருந்து பெறமுடிகிறது.[1]

| நாடு | | உணவிற்கான வருமானத் தேவைநெகிழ்ச்சி |
|---|---|---|
| ஐக்கிய அமெரிக்க நாடு | ...... | 0·27 |
| சுவீடன் | ...... | 0·32 |
| இங்கிலாந்து | ...... | 0·33 |
| செர்மனி | ...... | 0·36 |
| சிலோன் | ...... | 0·79 |

ஐக்கிய அமெரிக்க நாட்டின் எல்லாவகையான உணவுகளுக்கு மான வருமானத் தேவைநெகிழ்ச்சி ஏறத்தாழ 0·25 என்று பேராசிரியர் சுல்ட்ஸ் (Porf. Schultz) மதிப்பிடுகிறார். எவ்வொரு வருமான அதிகரிப்பின்போதும் உணவின்மீது செல விடப்படும் நாட்டு வருமானப் பங்கு குறைந்துசெல்லுமென்றால், வேளாண்மைத்துறை மென்மேலும் குறைவான விகிதாச்சார வருமானத்தையே பெறும். வேளாண்மைத் துறையிலிருந்து தேவையான அளவுக்குத் தொழிலாளர்களின் இடப்பெயர்ச்சி இல்லாவிட்டால் முதன்மைத் துறையில் இது தனிநபர் வருமானத் தை உறுதியாக குறைத்துவிடும். வருமானம் 20% அளவுக்கு அதிகரிக்கும்போதும், (நுகர்வோரால் வாங்கப்படும் உணவு அளவிலிருந்து பண்ணை உற்பத்திப் பண்டங்களோடு சேர்க்கப்படும் பணிகளின் செலவு போன்றவைகளைக் கழித்துப் பெறப்படுவதன்

[1] Martin, Anne. *Economics and Agriculture*, Routledge and Legan Paul, Mondon; 1958, p. 21.

அடிப்படையில்[1]) உணவின் வருமான நெகிழ்ச்சி 0.5—லிருந்து 0·25 ஆகக் குறையுமென்றால் பண்ணை உற்பத்தில் பண்டங்களின் நுகர்வு 10% அளவுக்குப் பதிலாக 5% அளவுக்கு அதிகரிக்கும். எனவே ஐக்கிய அமெரிக்க நாடு போன்ற முன்னேற்றமடைந்த பொருளாதாரத்தில் முதன்மைத் துறையில் இருக்கக்கூடிய சிக்கல், உணவுக்கான குறைவான வருமானத் தேவைநெகிழ்ச்சி, பண்ணைத் தொழில் நுண்ணியலில் மிக விரைவான முன்னேற்றம் ஆகிய இரண்டுக்குமிடையே இணக்கத்தைத் தோற்றுவிப்பதாகவே இருக்கிறது பண்ணை உற்பத்தில் பண்டங்களுக்கான தேவை நெகிழ்ச்சி குறைவாக இருக்கிறது என்பதோடு மட்டுமல்லாமல் குறைந்துகொண்டும் வருகிறது என்று பேராசிரியர் சுல்ட்ஸ் கருதுகிறார்.[2]

அளிப்புப் பக்கத்தில் தோன்றும் விலை மாற்றங்கள் முதன்மைப் பண்டங்களின் விளைவுகள் என்ற வடிவத்தில் குறைவான அளவிலான எதிர்விளைவுகளையே தோற்றுவிக்கின்றன என்பது பொதுவாகக் காணப்படும் உண்மையாகும். விலை மாற்றங்களுக்கு வேளாண்மை செய்பவர்களின் தராதரமான உறுதியற்ற தன்மைக்கான பெரும் காரணம், வேளாண்மைத் துறையில் தவிர்க்கக் கூடிய செலவுகளுக்கு எதிராகத் தவிர்க்க இயலாத செலவுகள் மிகுதியான அளவிலிருபதாகும். விளைவுக்கான தேவை குறையும்போது குறைக்கத்தக்க வகையில் இருக்கக்கூடிய உற்பத்திச் செலவினங்கள் தவிர்க்கமுடியும் செலவுகளாகும். குடும்பத்திற்குத் தேவையான குறைந்த அளவு வருமானம், வாரச் செலுத்துதல்கள், வட்டிக் கட்டணங்கள் மற்றும் இவை போன்ற நிலையான கட்டணங்களைப் போன்ற இயல்புடைய செலவுகள் தவிர்க்க இயலாதன. தொழிலில் கூலிச் செலுத்தல்கள் போன்ற விரிக்கக்கூடிய செலவுகள் பெரும் பங்கு வகிக்கின்ற காரணத்தால், வினை முற்றுப்பெற்ற பண்டங்களின் விலைகளில் மாற்றங்கள் தோன்றும்போது ஒரு சில தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கிவிடுவதன் மூலமாக மொத்த விளைவு அளவைக் குறைத்துவிட முடியும். ஒப்பிடும்போது சிறிய அளவிலான பண்ணைத் தொழில், வேளாண்மைத் தொழிலில் தகுதியான அமைப்பு இன்மை, வேளாண்மைத்துறை நீங்கலான பிற துறைகளில் குறைவான அளவிலான வேலை வாய்ப்புகள் போன்றவை

[1] (In terms of the food purchased by consumers minues the cost of the services that have been added to farm product)

[2] Schultz Theodore W., 'Two Condition Necessary for Economic Progress in Agriculture,' *Contemporary Readings in Agricultural Economic*, Ed. by Halcrow, Harold G., Prentice-Hall, New York, 1955, p. 205.

களும் வேளாண்மைப் பண்டங்களின் அளிப்பில் தராதரமான நெகிழ்வின்மைக்கான மற்றக் காரணிகளாகும், இக் காரணிகள் யாவும், வேளாண்மைத்துறை வருமானத்தை மிகக் குறைவான அளவில் இருக்கச் செய்வதோடு, பொருளாதாரத்தில் நிலையற்ற தன்மையை மிக எளிதாக வேளாண்மைத் துறையில் உண்டாக்கு வனவாகவும் உள்ளன. குறைந்த வருமானமுடைய நாடு களின் மூலவளங்களும் அதன் வழியாக அவைகளின் தாங்கும் சக்தியும் மிகவும் குறைவான அளவிலிருப்பதால் இத்தகைய ஏற்றத் தாழ்வுகள் இந் நாடுகளில் மிகவும் அதிகமான அளவில் காணப்படுகின்றன.

## குறைந்த வளர்ச்சியுடைய பொருளாதாரங்களில் வேளாண்மைத் துறையின் நிலை

(The State of Agriculture in Underdeveloped Countries)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பெரும்பாலும் வேளாண்மை நாடுகளாகவே இருக்கின்றன. ஆனுல் நாட்டு வருமானத்திற்குப் பங்காற்றுதல், பொருளாதார முன்னேற்றத் திறன் ஆகியவற்றின் அடிப்படையில் பார்க்கும்போது, முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் மிகவும் பின் தங்கிய நிலைகளில் இந் நாடுகளின் வேளாண்மைத் துறை இருக்கிறது. ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் 70% அளவுக்கும் அதிகமான மக்கள் கிராமப்பகுதியில் வாழ்கின்றனர். ஆனுல் ஐரோப்பாவிலும் வடக்கு அமெரிக்காவிலும் கிராமப்பகுதி மக்களின் பங்கு மொத்தத்தில் $\frac{1}{3}$ பங்கிலிருந்து ஐந்தில் ஒரு பங்கு வரையிலான வீச்சில் இருக்கிறது. பெரும்பாலும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளாக இருக்கக்கூடிய ஆசியா, தென் அமெரிக்கா ஆகிய பகுதிகளில் வேளாண்மைத் துறையின் தனி நபர் வருமானம் ஆறு கண்டங்களுக்குள்ளேயே மிகவும் குறை வானதாக இருக்கிறது. வேளாண்மைப்பகுதி மக்களிடையேயுள்ள தனிநபரின் உற்பத்தி அளவானது தூரக்கிழக்கிலும் அருகிலான கிழக்கிலும் (Near-East), லத்தீன் அமெரிக்காவிலும்இருப்பதைப் போன்று பத்து முதல் இருபது மடங்குவரை அதிகமானதாக ஓசியானியா, வடக்கு அமெரிக்கா, வடமேற்கு ஐரோப்பா ஆகியவைகளில் காணப்படுகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வேளாண்மைத்துறையில் ஒரு தொழிலாளரின் உற்பத்தி அளவு சராசரியாக ஏறத்தாழ 250 பன்னுட்டு அலகுகள் என்று (250 International units) இருக்கின்றன எனக் காலின் கிளார்க் கண்டிருக்கிருர். நியூசிலாந்தின் உற்பத்தித் திறனில் இது ஏறத்தாழ பதினுறில் ஒரு பங்காகவும், வளர்ச்சி பெற்ற நாடுகளின் உற்பத்தித்

திறனில் இது ஏறத்தாழ நான்கில் ஒரு பங்கு முதல் ஆறில் ஒரு பங்கு வரையுள்ள அளவாகவும் இருக்கிறது. குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளுக்குள்ளே பார்த்தாலும்கூட இந்தியாவின் இடம் மிகவும் தாழ்ந்ததாகவே இருக்கிறது. இந்தியாவின் உற்பத்தித் திறன் சிலோன், எகிப்து, ஜாவா ஆகிய நாடுகளின் உற்பத்தித் திறனில் ஏறத்தாழப் பாதி அளவாகவும், பிரேசில் நாட்டின் உற்பத்தித் திறனில் ஏறத்தாழ ஏழில் ஒரு பங்காகவும் இருக் கின்றது ஒரு பரப்பளவு அலகின் உற்பத்தி என்ற அடிப்படையில் பார்க்கும்போதும் உலகின் செல்வமிகு நாடுகளுக்கும், உலகின் குறைந்த வருமான நாடுகளுக்கும் இடையே பேரளவிலான வேறு பாடு இருந்துவருகிறது. ஒரு ஹெக்டேரின் கோதுமை விளைவு தொழில்பெருக்கமுடைய நாடுகளாகவும், அதே நேரத்தில் மக்கள் அடர்த்தி மிகுந்திருக்கக் கூடிய நாடுகளாகவும் உள்ள பெல்ஜியம், மேற்கு செர்மனி, சுவிட்சர்லாந்து, இங்கிலாந்து, போன்ற நாடு களில் இருப்பதைப் போன்று ஏறத்தாழ 6–ல் ஒரு மடங்காகவே இந்தியாவில் இருக்கிறது. துருக்கி, எகிப்து, பாக்கிஸ்தான் ஆகிய நாடுகளோடு ஒப்பிடும்போதும் இவ் விளைவு குறைவானதாகவே இருக்கிறது. இந்தியாவில் நெல் உற்பத்தி ஒரு ஹெக்டேருக்கு 10.3 குவிண்டால் அளவாகவே இருக்கிறது. ஆனுல், இந்த அளவு இத்தாலியில் 47.8 ஆகவும், ஸ்பெயினில் 48.8 ஆகவும் ஜப்பானில் 39.5 ஆகவும், ஆஸ்திரேலியாவில் 48.6 ஆகவும் இருக்கிறது. பருத்தி உற்பத்தியிலும் இந்தியாவின் தராதரமானநிலை இதே மாதிரி தான் இருக்கிறது.[1]

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வேளாண்மை உற்பத்தி குறைவாக இருக்கிறது என்பதோடு, இந் நிலை பல்லாண்டுக் காலமாக நிலைத்திருக்கிறது என்பதும் குறிப்பிடத் தக்கது. முன்னேற்றம் அடைந்துள்ளஒரு சிலநாடுகளில் கடந்த சில பத்தாண்டுகளில் குறிப்பிடத்தக்கவாறு பேரளவில் வேளாண்மை உற்பத்தி அதிகரித்திருக்கிறது. இருந்தாலும் ஏழ்மை நாடுகளில் ஏமாற்றம் தரத்தக்க அளவில் இது நிலையாகவே இருந்துவருகிறது. 1930ஆம் ஆண்டைச் சேர்ந்த பிற்பகுதி ஆண்டுகளுக்கும் இந்த நூற்றுண்டின் மையப்பகுதிக்கும் இடைப்பட்ட காலத்தில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் வேளாண்மை உற்பத்தி ஏறத்தாழ 45% அளவிற்கு அதிகாரித்திருக்கிறது. 19ஆம் நூற்றுண்டின் முடி

[1] Clerk, Colin, *Conditions of Economic Progress*; 3rd edition, Macmillan, London, 1957, pp, 257-77.
இங்குக் கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளிவிவரங்கள் 1950ஆம் ஆண்டிற்குரிய வைகளாகும். வேளாண்மை உற்பத்தி என்பது காட்டு உற்பத்தியையும் உள்ளடக்கியதாக இருக்கிறது.

விலிருந்து 60 ஆண்டுகளில் ஜப்பானில் நெல் உற்பத்தி செய்யும் நிலத்தின் அளவு 25% அளவுக்கு அதிகரித்தது. ஆனால், நெல்லின் உற்பத்தி 70%அளவுக்கும் மொத்த வேளாண்மை உற்பத்தி 113% அளவுக்கும் அதிகரித்தது. 1800-1940 ஆகியவைகளுக்கிடையே 100 மரக்கால் (Bushels) கோதுமையை உற்பத்தி செய்வதற்குத் தேவைப்படும் மனித மணிகளின் (Man-hours) எண்ணிக்கை 37?-லிருந்து 47ஆகக் குறைந்துவிட்டது. ஜப்பான் நாட்டில் 1?0ஆம் ஆண்டில் ஒவ்வொரு பண்ணைத் தொழிலாளரும் 0·5 மக்களைக் காப்பாற்றமுடிந்தது. ஆனால், 1946-ல் ஒவ்வொரு பண்ணைத் தொழிலாளரும் 14·5 மக்களைக் காப்பாற்ற முடிந்தது. இதற்கு மாறாக, 1952–56 ஆகிய ஆண்டுகள் நீங்கலாக இரண்டாம் போர்க் காலத்திலிருந்து ஆசியா, தூரக் கிழக்கு ஆசியா ஆகிய நிலப் பகுதியின் உணவு உற்பத்தி மக்கள் பெருக்கத்திற் கேற்பவே அதிகரித்திருப்பதன் காரணமாக உலகம் போர்க் காலத்திற்கு முன்பிருந்த அளவைக் காட்டிலும் 8% அளவு குறைவாகவே 1955-56-ல் இருந்தது என்று இந் நிலப்பகுதிகளில் உள்ள நாடுகளை மொத்தமாகப் பார்க்கும் ஐக்கிய நாடுகளின்குழு (United Nation's Commission) உணருகிறது.[1]

மூலதனத்தின் பற்றுக்குறையும் உழைப்பு அதிகமான அளவில் இருப்பதும் கிராமப் பகுதிகளில் இருக்கும் வேலையின்மை மறைமுக வேலையின்மை ஆகியவைகளில் பிரதிபலிக்கின்றன. ஆசிய நாடுகளில் ஒரு சதுரக் கிலோமீட்டர் நிலத்தில் முழு அளவில் பயன்படுத்தப்படத்தக்க நபர்களின் எண்ணிக்கை நெல் உற்பத்தியில் 42 என்றும், சோளம் உற்பத்தியில் 25 என்றும்,ரப்பர் உற்பத்தியில் 35 என்றும் மதிப்பிடப்பட்டிருக்கிறது. குறிப்பிடப்பட்ட நிலப் பரப்பில் பயன்படுத்தப்படும் கலப்பைகளின் எண்ணிக்கையின் அடிப்படையில் அந்த நிலப்பகுதியில் முழு அளவில் பயன்படுத்தத் தக்க நபர்களின் எண்ணிக்கையை 1945-ல் டார்லோக்சிங் (Tarlok Singh) இந்தியாவிற்காக மதிப்பிட்டிருக்கிறார். ஒரு சதுரக் கிலோ மீட்டர் நிலத்திற்கு அவர் கீழ்க்கண்ட அளவுகளைத் தந்திருக்கிறார். சிந்து 12, பம்பாய் 13, பஞ்சாப், மத்திய மாநிலங்கள் (Central Provinces), வடமேற்கு எல்லை மாநிலம் ஆகியவைகள் 21, சென்னை 25, ஐக்கிய மாநிலங்கள், பீகார், ஒரிசா, அசாம் ஆகியவைகள் 21, வங்காளம் 35. வேலைகளுக்குக் கிடைக்கும் உண்மையான நபர்களின் எண்ணிக்கை அதிகமாகவே இருக்கிறது இத்தகைய உழைப்பாளர்களின் நிலை உபரியாக இருந்தது. உழைப்பின் இறுதிநிலை உற்பத்தித் திறனை குறைத்துவிட்டது அல்லது பூச்சியமாகச் செய்துவிட்டது. மறைமுக வேலை

[1] *Economic Bulletin for Asia and the Far East*, U.N., Nov 1975 pp. 23 & 24.

யின்மையைப் பெற்றிருக்கும் உழைப்பாளர்களை வேளாண்மைத் துறையிலிருந்து வெளியேற்றுவதால் வேளாண்மை உற்பத்தி குறையாது என்றிருப்பதால், இறுதி நிலையில் உழைப்பின் பங்கு எதுவுமே இல்லாமலிருக்கிறது. பலதரப்பட்ட உழைப்பு அளவு களைப் பயன்படுத்தும்போது, குறிப்பிட்டதொரு நிலத்தில் உழைப்பின் பங்கைக் கவனித்துச் சீனுவில் நெல் உற்பத்தி செய்யப் படும் நிலங்களின் இறுதிநிலை உற்பத்தியைப் பற்றியதொரு முதனிலை (Rough) மதிப்பீட்டை 'சீனுவில் நிலத்தைப்பயன் படுத்துதல்' (Land Utlisation in China) என்ற தனது நூலில் பேராசிரியர் பக் (Prof. Buck) செய்திருக்கிருர். நெல்லை உற்பத்தி செய்ய நிலப்பரப்பில் தனிநபருக்கான ஹெக்டேர்களின் வீச்சு எல்லைகள் சராசரியாக 0·53 முதல் 1·25வரை இருந்தது அதாவது, பின்னர்க் குறிப்பிட்டதில் இருப்பதைக் காட்டிலும் பயன்படுத்தப்படும் உழைப்பின் அளவு முன்னர்க் குறிப்பிட்டதில் அதிகமானதாக இருக்கிறது. உழைப்பைப் பயன்படுத்துவதில் அதிகமான வேறுபாடுகளைக் கொண்ட பலவிதமான நிலைகள் இருந்ததுடன், இக் காலம் முழுவதிலும் ஒரு ஆண்டிற்குத் ஒரு ஹெக்டேருக்கு (குறிப்பிட்ட அளவு தானிய அளவோடு ஒப்பிடும் போது அவைகளின் சந்தை மதிப்பின் அடிப்படையில். தானியமாக வோளண்மைப் பண்டங்கள் எல்லாவற்றையும் மாற்றும்போது) ஏறத்தாழ 1800 கிலோ தானியத்திற்குச் சமமான அளவில் ஒரு அலகின் விளைவு நிலையாகவே இருந்தது. இதையே வேருெரு விதமாகச் சொன்னுல் நிலத்தின்மீது இங்குக் குறிப்பிட்டிருப் பதைப் போன்று அதிகமான அளவிலான கூட்டம் இருக்கும் போது, உழைப்பின் இறுதிநிலை உற்பத்தித்திறன் பூச்சியத்திற்குச் சமமாக இருக்கிறது. கோதுமையை உற்பத்தி செய்யும் நிலப் பகுதிகளுக்கும் இதைப் போன்றதொரு கணக்கீடு மேற்கொள்ளப் பட்டது. அதில் ஒரு மனித ஆண்டுக்குத் தானியச் சமானமான (Grain equalant) அளவு 80 கிலோவாகவே இருக்கிறது. ஆனுல், பண்ணைத் தொழிலாளி வேலையில் ஈடுபடுத்தப்பட்டால் அவரின் கூலியானது 660 கிலோ தானியத்திகுச் சமமான அளவிலிருக்கும். குறைந்த வளர்ச்சியுடைய பல நாடுகளில் இருக்கும் நிலை களையும் பிரதிபலிப்பதாக இந்தப் புள்ளி விவரங்கள் இருக் கின்றன. குறிப்பிட்ட நிலப் பரப்பில் தேவைக்கும் அதிகமான தொழிலாளர்கள் இருக்கின்ற காரணத்தால் ஒரு தொழிலாளியின் விளைவு மிகவும் குறைவாக இருக்கிறது அல்லது பூச்சியமாக இருக் கிறது.

குறைந்த வருமானமுடைய நாடுகளில் கிராமப் பகுதி களிலிருந்து தொழில் துறைக்கு மக்கள் மாற வேண்டிய

அவசியத்தை இத்தகையதொரு நிலை அவசியமாக்குகிறது. இத்தகைய முறையிலான மூலதன மாற்றம் மிகவும் உதவி செய்து அதன் வழியாகத் தொழில் பெருக்கத்திற்கு வகை செய்கிறது. இதைப் பொறுத்தமட்டிலும் தொழில் நாடுகளுக்கும், தொழில் வளர்ச்சி பெறுவதற்கு முன்பிருந்த நாடுகள், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஆகிய நாடுகளுக்கும் இடையே குறிப்பிட்ட அளவிலான வேறுபாடு இருக்கிறது. நிலம்–உழைப்பு விகிதம் அதிகமாக இருக்கக் கூடிய வளர்ச்சியடைந்த நாடுகள் இத்தகைய இடரிலிருந்து எளிதாகத் தப்பித்துக்கொண்டன. ஏனென்றால் சிக்கலைச் சமாளிப்பதற்குரிய பொறிநுட்ப அறிவு, மூலதனம், திறமை ஆகியவைகளை இந் நாடுகள் ஏற்கெனவே பேரளவில் பெற்றிருந்தன என்ற அளவில் நன்மையைப் பெற்றிருந்தன. 1938-1948 ஆகிய பத்தாண்டுகளில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் அனுபவத்தால் இது தெளிவாகக் காட்டப் படுகிறது. இந்த ஆண்டுகளில் அளிப்பு மிகவும் குறைவாகவும் தேவையின் அளவு மிகவும் அதிகமாகவும் இருந்து பண்ணையில் விளையும் பண்டங்களுக்கான மொத்த விலைகள் மிக விரைவாக அதிகரித்தன, ஆனால், தொழில் நுண்ணியல் ஏற்கனவே மிக நல்ல முறையில் முன்னேற்றம் அடைந்திருந்ததால் அதனை வேளாண்மையில் பயன்படுத்த முடிந்தது. அதன் காரணமாக வேளாண்மை உற்பத்தி மிக வேகமாக அதிகரித்தது. தொழில் நுண்ணியலில் தோன்றிய மிக விரைவான முன்னேற்றம் மிக விரைவாக மக்கள் வேளாண்மைத் துறையிலிருந்து வெளியேறிச் செல்வதற்கு வகை செய்தது. 1910–1950 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் தொழில் நுண்ணியல் முன்னேற்றத்தினால் ஐக்கிய அமெரிக்க நாட்டில் வேளாண்மையில் பயன்படுத்தப்பட்ட தலா அலகின் விளைவு ஆண்டொன்றுக்கு 1·35% என்ற விகிதத்தில் அதிகரிக்குமாறு செய்யப்பட்டது. ஒரு மொத்தமான வேளாண்மை உற்பத்தி ஆண்டொன்றுக்கு இரண்டு விழுக்காட்டிற்கும் அதிகமான அளவில் அதிகரித்திருந்ததால், வேளாண்மைத்துறை முன்னேற்றத்தில் ஏறத்தாழ 60%—70% வரையில் உள்ள அளவுக்குத் தொழில் நுண்ணியல் முன்னேற்றமே காரணமாக அமைந்திருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. பொருளாதாரத்தின் இரண்டு துறைகளிலுமே வளர்ச்சியடைந்த நாடுகளில் தலா வருமானம் அதிகமான அளவிலேயே இருக்கிறது என்பதோடு குறைந்த வருமான நாடுகளில் இருக்கும் தனிநபர் வருமான அளவைக் காட்டிலும் மிகவும் அதிகமான அளவிலும் இருக்கிறது என்ற உண்மையானது வேளாண்மைத்துறை எவ்வளவு நபர்களைக் காக்க முடியுமோ அவ்வளவு நபர்களைக்

காக்காமல் இருக்கிறது என்று அறியச் செய்கிறது. பொருளாதார உறுதித் தன்மைக்கு நன்மை செய்யத்தக்க வேகத்தைக் காட்டிலும் மிகவும் அதிகமான வேகத்தில் அத்தகைய மாற்றம் நிகழுகிறதா என்பதே இங்கு எழுப்படும் வினுவாக இருக்கிறது

கிராமப் பகுதிகளில் உபரி மக்கள் இருக்கின்ற காரணத்தால் அவர்களின் மாற்றம் பின்தங்கிய நாடுகளில் அவசியமாகின்றது ஆனால், வேளாண்மைத் துறையில் இருந்த அதிகமான அளவு உற்பத்தி இத்தகைய மாற்றத்தை அவசியமாக்கியது. ஐக்கிய அமெரிக்க நாடு போன்றதொரு நாட்டில் அண்மை ஆண்டுகளில் வேளாண்மை உற்பத்தி மிக விரைவாக அதிகரித்திருக்கிறது. எனவே, வேளாண்மைத் துறையில் பயன்படுத்தப்படும் உற்பத்திச் சாதனங்களை வேறு பல துறைகளில் மாற்றுவதால் தேவைக்கேற்ப அளிப்பைக் குறைக்கும் சிக்கல் அந் நாடுகளில் தோன்றியுள்ளது. அதாவது. வாழ்க்கைத் தரத்தில் குறிப்பிட்டதொரு நிலையை அடைந்தவுடன் அதிகரித்த வருமானம் பண்ணைகளில் உற்பத்தி செய்யப்படும் பண்டங்களைத் தவிரப் பிற பண்டங்களுக்கான தேவையை (பொறிசெய் பண்டங்களுக்கான தேவையை) அதிகரிக்கிறது. மேலும் இது, மற்றத் துறைகளின் பெருக்கத்திற்கு உதவி செய்து, அதிகமான அளவில் தொழிலாளர்களை கவரும் அதன் சக்தியை அதிகரிப்பதற்கும் உதவி செய்கிறது. ஆனால், வாழ்க்கைக்குத் தேவைப்படும் அடிப்படைத் தேவைகள் ஈடு செய்யப்பட்ட பிறகுதான் பண்ணையற்ற துறைகளில் உற்பத்தி செய்யப்படும்பண்டங்களின் தேவைக்கான விருப்பம் அதிகரிக்கும். நிலம்-உழைப்பு விகிதம் சாதகமானதாக இருந்தால் நிலம் முழு அளவில் பயன்படுத்தப்படாவிட்டாலும் இத்தகைய தேவைகள் நிறைவேற்றப்படலாம். ஆனால், நிலம்-உழைப்பு விகிதம் பாதகமானதாகவும், உணவிற்கான அடிப்படைத் தேவைகள் நிறைவேற்றப்பட முடியாததாகவும், இவற்றிற் கெல்லாம் மேலாக மக்கள் பெருக்கச் சிக்கல் உடையதாகவும் உள்ளதொரு நாட்டில் இருக்கக்கூடிய சிக்கலானது மக்கள் பெருக்க விகிதம், பண்ணை விளைபொருள்களின் உற்பத்தி விகிதம் ஆகியவைகளுக்கிடையே ஒப்பிட்டுப் பார்த்தல் என்பதுதான் சிக்கலாக இருக்கிறது. பண்ணை விளைபொருள்களின் உற்பத்தி விகிதத்தைக் காட்டிலும் மக்கள் பெருக்க விகிதம் அதிகமானதாக இருந்தால் உணவிற்கான தேவை மிகவும் தீவிரமானதாகிவிடுகிறது. எனவே வேளாண்மையைச் சார்ந்திருக்கும் மக்களின் பங்கு நிலையானதாக அல்லது அதிகரித்துச் செல்வதாக இருக்கிறது. தற்காலத் தொழில் நுண்ணியல் எந்த விதமான செலவும் இல்லாமலேயே இறக்குமதி செய்யப்பட முடியும் என்று கருதிக் கொண்டால் முதன்மைத்

துறையில் ஈடுபட்டிருக்கும் மக்களில் குறைவான எண்ணிக்கையுள்ள நபர்களால் வேளாண்மை உற்பத்தி நிலைநிறுத்தப்பட முடியும். ஆனால் பிற துறைகளில் உற்பத்தி செய்யப்படும் பண்டங்களுக்குத் தேவை இல்லாமலிருக்கின்ற காரணத்தால் இத் துறையில் (தற்காலத் தொழில் நுண்ணியல்களைப் பயன்படுத்துவதால்) மிச்சமிருக்கும் தொழிலாளர்களை மாற்றுவது இயலாது. மூலதன மூலவளங்கள் முழு அளவில் பற்றுக்குறையாக இருக்கின்ற காரணத்தால், வேளாண்மைத் துறைக்குள்ளேயும்கூட மூலவளங்களை மாற்றுவது மிகவும் கடினமானதாக இருக்கிறது. அதாவது, உணவுத் தானியங்கள் போன்ற குறைந்த விளைவைத் தரத்தக்க பண்டங்களிலிருந்து மீன் பண்ணைகள், காடுகள், பால் பண்ணைகள், கால்நடைப் பண்ணைகள் மற்றும் இவை போன்ற அதிக விளைவைத் தரத்தக்க வேளாண்மை நடவடிக்கைகளில் மூலவளங்களை மாற்றுவது மிகவும் கடினமானதாக இருக்கிறது. வெப்பநிலப் பகுதிகளிலுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வேளாண்மைத் துறையில் உள்ள தொழிலாளர்களின் உற்பத்தித் திறன் மிகவும் குறைவாக இருக்கிறது. இது ஓர் ஆண்டுக்கு ஒரு பண்ணைநபருக்கு 400 கிலோ தானியச் சமானம் (Grain-equalent) என்று மிகக் குறைவாக, பிழைப்பூழிய நிலைக்குச் சமமானதாகவே இருக்கிறது. தலா நபருக்கான உற்பத்தி ஓர் ஆண்டுக்கு 600 கிலோ என்று அதிகரித்தால் ஒழிய நிலத்தின் மீதான அழுத்தத்தைக் குறைப்பது முடியவே முடியாததாகும் என்றும், அதன் காரணமாக, பால்பண்ணை அல்லது தொடர்புடைய பிற நடவடிக்கைகளில் மாற்றுவதும் முடியவே முடியாது என்றும் கருதுவது உண்டு.

## வேளாண்மை முன்னேற்றத்தில் ஆர்வப் புத்தெழுச்சி
## (The Revival of Interest in Agricultural Development)

இரண்டாம் உலகப்போரின் முடிவுக் காலத்திலிருந்து, வளர்ச்சி பெற்ற நாடுகள், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஆகிய உலகத்தில் உள்ள எல்லா நாடுகளும் அவைகளின் வேளாண்மைத் துறையை நன்கமைப்பதற்காகவும், வேளாண்மைத்துறை உற்பத்தியைப் பேரளவில் அதிகரிப்பதற்காகவும் பேரார்வமிக்க வேளாண்மைத்துறை முதலீட்டுத் திட்டங்களை மேற்கொண்டன. இந் நாடுகளில் உள்ள அரசியல் அமைப்புகள், பொருளாதார அமைப்புகள் ஆகியவற்றிலும், மூலவளங்களின் அளவுகளிலும் பொருளாதாரச் சூழ்நிலைகளிலும் பேரளவிலான வேறுபாடுகள் இருக்கின்ற காரணத்தால், அவைகளின் நோக்கங்களிலும், முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு அவைகள்

மேற்கொண்ட முறைகளிலும் பேரளவிலான வேறுபாடுகள் காணப்படுகின்றன. இத்தகைய மாற்றங்கள் இருந்தாலும்கூட, கூட்டாண்மை முறையைக் கையாண்ட சோவியத் யூனியன், யூகோஸ்லேவியா, போலந்து உள்ளிட்ட கிழக்கு ஐரோப்பாவின் சில நாடுகளில் வேளாண்மைத் துறையில் காணப்பட்ட முன்னேற்றத்திற்கும், தடையற்ற முயற்சியில் நம்பிக்கை கொண்டுள்ள மேற்கு ஐரோப்பாவைச் சேர்ந்த நாடுகளில் காணப்பட்ட முன்னேற்றத்திற்கும் இடையே உள்ள வேறுபாடுகள் மிகவும் அதிகமான அளவில் உள்ளன. தொழில் முன்னேற்ற வேகத்திற்கேற்ப வேளாண்மைத்துறை முன்னேற்றம் அதிகரிக்கா விட்டாலும், மொத்த நாட்டு விளைவில் வேளாண்மைத் துறை வருமானத்தின் பங்கு குறைந்துவிட்டாலும், உண்மை அளவுகளின் அடிப்படையில் பார்க்கும்போது வேளாண்மைத்துறை உற்பத்தி தொழில்வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளில் பேரளவில் அதிகரித்திருக்கிறது. மொத்த உள்நாட்டு உற்பத்தியில் வேளாண்மை உற்பத்தி விழுக்காட்டின் பங்கு 1950, 1959 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் மேற்கு ஐரோப்பிய நாடுகளில் குறைந்துவிட்டது. இவ் விழுக்காடு பெல்ஜியத்தில் 9-லிருந்து ஆகவும் மேற்கு ஜெர்மனியில் 11-லிருந்து ஆகவும். இங்கிலாந்தில் 6-லிருந்து ஆகவும் குறைந்தது. இவ் விழுக்காடு டென்மார்க்கில் 21-லிருந்து 17 ஆகவும். இத்தாலியில் 29-லிருந்து 19 ஆகவும், நெதர்லாந்தில் 14-லிருந்து 10 ஆகவும் குறைந்து விட்டது. கிரீஸ், துருக்கி ஆகிய நாடுகளில் தோன்றிய குறைவு மிகவும் குறைவான அளவிலிருந்தது. இவ் விழுக்காட்டு அளவு கிரீஸில் 34-லிருந்து 32 ஆகவும், துருக்கியில் 49-லிருந்து 44 ஆகவும் இருந்தது. அயர்லாந்து, நார்வே, போர்ச்சுக்கல், சுவீடன் ஆகிய நாடுகள நீங்கலாக ஐரோப்பாவில் உள்ள எல்லா நாடுகளிலும வேளாண்மை உற்பத்தியின் மொத்த அளவு பேரளவில் அதிகரித்தது. இத்தகைய அதிகரிப்பானது, கிரீஸ், இத்தாலி, இங்கிலாந்து, யூகோஸ்லேவியா ஆகியவற்றில் மிகவும் அதிகமான அளவில் இருந்தது. யூகோஸ்லேவியாவில் 1952–56, 1956–60 ஆகிய இரண்டாண்டுகளுக்கும் இடைப்பட்ட காலத்தில் வேளாண்மை உற்பத்தி இரண்டு மடங்கிற்கும் மேலாக அதிகரித்தது. இந்த எட்டு ஆண்டுகளில் மொத்த வேளாண்மை உற்பத்தி கிரீஸில் 57% அளவுக்கும். இத்தாலியில் 30% அளவுக்கும் யூகோஸ்லேவியாவில் 141% அளவுக்கும் அதிகரித்தது. இத்தகைய நாடுகளில் பெரும்பான்மையானவற்றை ஒரு மொத்தமாகப் பார்க்கும்போது இந்த ஆண்டுகளில் வேளாண்மை உற்பத்தியின் மொத்த அதிகரிப்பு விகிதம் ஆண்டொன்றுக்கு 2%—2·5% அளவில் இருந்தது.

தங்களது பொருளாதாரங்களின் வேளாண்மைத் துறை உற்பத்தியைப் பெருக்குவதற்காக உணர்ச்சி பூர்வமாகவும் தொடர்ச்சியாகவும் மக்கள் மேற்கொண்ட முயற்சியின் காரண மாகவே பண்ணை உற்பத்தியில் இத்தகைய முன்னேற்றம் காணப் பட்டது. இந் நாடுகளில் பெரும்பான்மையானவற்றில் உணவில் தன்னிறைவைப் பெற வேண்டும் என்பதே வேளாண்மைக் கொள்கையின் முதன்மையான நோக்கமாக இருந்தது. போர்க் காலம் தோன்றிவிடுமானால் உணவின் அளிப்பில் உறுதியான நிலை இருக்க வேண்டும் என்ற வடிவத்தில் நாட்டுப் பாதுகாப்பைப் பெறுவதற்காக மக்களிடையே காணப்பட்ட புதிய உணர்வின் விளைவாகவே அதிகரித்த உணவின்மீது அதிகமான கவனம் செலுத்தப்பட்டது. மரபு வழியாக உற்பத்தி செய்யப்படும் உணவுப் பயிர்களை உற்பத்தி செய்வதில் மட்டுமல்லாமல் நாட்டு உணவுகளில் உள்ள எல்லாவிதமான உணவுப் பயிர்களையும் பேரளவில் உற்பத்தி செய்வதற்கான முயற்சிகளிலும் அதிகப் படியான கவனம் செலுத்தப்பட்டது. வேளாண்மைத்துறை விளைவை அதிகரிப்பதற்கு அதிகமான அளவில் சிறப்பிடம் தந்ததற்கு மீண்டும் மீண்டும் தோன்றக்கூடிய அயல்நாட்டு செலுத்துநிலை இடர்ப்பாடுகளும் காரணமாக இருந்தன. அயல் நாடுகளில் மிகவும் தேவைப்படக்கூடிய பண்டங்களை உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்வதன் மூலம் அந்நியச் செலாவணியைச் சம்பாதித்தல் அல்லது இறக்குமதிகளின்மீது சார்ந்திருக்கக்கூடிய தன்மையைக் குறைப்பதன் மூலம் அந்நியச் செலாவணியை மிச்சம் செய்தல் ஆகியவற்றில் ஏதாவதொன்றாக நோக்கம் அமைந்திருந்தது. சமுதாய அரசியல் காரணியும் இதே வழியில் செயல்பட்டது. உலகின் பண்ணைவாழ் மக்களின் வளர்ந்துவரும் அரசியல் ஆதிக்கமும் தோன்றியது. வேளாண்மைத் துறையில் பெறப்படும் வருமானத்திற்கு ஏற்ப ஏறத்தாழ அதே அளவில் பண்ணை வருமானமும் அதிகரிக்கப்பட வேண்டும் என்று அதிக மான அளவில் வலியுறுத்தப்படுவதில் இது பிரதிபலிக்கிறது.

ஏறத்தாழ 1956ஆம் ஆண்டுவரை மெதுவான வளர்ச்சி இருந்ததென்று குறிப்பிடப்படுகிறது. பயிர்களின் உற்பத்தி, மிருகங்களிலிருந்து பெறப்படும் விளைவுகளின் அளவு ஆகிய வைகளைப் பொறுத்தமட்டிலும் 1956ஆம் ஆண்டிற்கான இலக்குகள் மிக உயர்ந்த நிலைகளில் குறிப்பிடப்பட்டிருந்தன. ஆனால், கடந்த சில ஆண்டுகளில் பெறப்பட்ட முன்னேற்றம் மனநிறைவு தரத்தக்க வகையில் இருந்தாலும்கூட, விளைவின் கடந்த காலப் போக்குகளின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட எதிர்கால மதிப்பீடுகள் இத்தகைய இலக்குகள் வெற்றியுடன்

அடையப்படும் என்ற நம்பிக்கையைத் தருபவைகளாக இல்லை. இதற்கு மாறாக. இப்போதிருக்கும் போக்கை மேற்கு ஐரோப்பிய நாடுகள் நிலைநிறுத்த முடியும் என்றால் 1970ஆம் ஆண்டு வாக்கில் அரிசி உருளைக்கிழங்கு, முட்டைகள் போன்றவைகளில் அதிகமான அளவு உபரியையும் மற்றவைகளில் உள்ள பற்றாக்குறை அதிக மான அளவுக்குக் குறைக்கப்பட்ட நிலையையும் பல நாடுகளும் பெற்றிருக்கும். உலகத்தின் குறைந்த வருமான நாடுகளும் உணவில் தன்னிறைவைப் பெறுவதில் ECAFE நிலப் பகுதி களில்பொருளாதார அடிப்படையில் மிகவும் பின்தங்கிய நிலையில் உள்ள நாடுகள் அவைகளின் பொருளாதார முன்னேற்றத் திட்டப் களில் வேளாண்மைத்துறைப் பெருக்கத்திற்கான விரிவான வளர்ச்சித் திட்டங்களைச் சேர்த்திருக்கின்றன. திட்டமிட்ட பொது முன்னேற்றச் செலவில் வேளாண்மைத் துறையின் பங்கு சீனாவில் (மெயின்லாந்து) 8% அளவிலிருந்து, ஆப்கானிஸ்தானம், பாக்கிஸ்தான் ஆகியவற்றில் 45% அளவுவரை இருக்கிறது. வேளாண்மைத் துறைக்கு ஒதுக்கப்பட்ட செலவின் பங்கு இந்தியாவின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 20% அளவாக இருந்தது. ஆனால், இந்த அளவு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 23%ஆக இருக்கிறது. பொருளாதார முன்னேற்றம், சமுதாய முன்னேற்றம் ஆகிய பொதுவான நோக்கங்களையும், அதிகமான தனிநபர் வருமான அளவைப் பெறும் நோக்கத்தையும் தவிர இந் நாடுகளின் வேளாண்மை முன்னேற்றத் திட்டங்கள் கீழ்க்கண்ட பெரும் நோக்கங்களையும் கொண்டிருக்கின்றன. இவ் வகையைச் சார்ந்த ஏறத்தாழ எல்லா நாடுகளுமே அவைகளின் அந்நியச் செலாவணி நிலையை முன்னேற்றுவித்து வலிமைப்படுத்தும் நோக்கத்துடன்தான் வேளாண்மைத் துறையை நன்கமைப்பதற்கு மிகுந்த கவனம் செலுத்துகின்றன இந் நாடுகளின் அயல்நாட்டு வணிகத்தில் அண்மை ஆண்டுகளின் ஏமாற்ற அனுபவத்தின் அடிப்படையில் பார்க்கும்போது இது புரிந்துகொள்ளத் தக்கதே. இந் நாடுகளின் வேளாண்மைப் பண்டங்களுக்கான அயல்நாட்டுத் தேவையில் ஏற்பட்டிருக்கும் குறைவு, உள்நாட்டிலிருக்கும் பணவீக்க நிலைகள், பேரளவிலான உணவை ஆண்டுதோறும் இறக்குமதி செய்ய வேண்டிய தேவை ஆகியவைகள் யாவும் அவைகளின் அயல்நாட்டுச் செலுத்து நிலையில் தீவிரமான பற்றாக்குறையைத் தோற்றுவித்திருக்கின்றன. எனவே, இந் நாடுகளில் வேளாண்மை முன்னேற்றத்திற்கான திட்டங்களில் மேற்கண்ட நோக்கங்கள் அமைக்கப்பட்டிருக் கின்றன. இழை உணவு வகைகளைப் பொறுத்தமட்டிலும் தன்னிறைவு நிலையைப்,பெறுதல், சர்க்கரை, பழங்கள், இழைகள், எண்ணெய் வித்துகள், மற்றும் இவை போன்று வழிவழியாகப்

பேரளவில் இறக்குமதி செய்யப்படும் வேறுவிதமான வேளாண்மைப் பண்டங்களைப் பேரளவில் உள்நாட்டில் உற்பத்தி செய்தல், ஏற்கனவே அதிகமான அளவுக்கு நிலையாக ஏற்றுமதி செய்யப் பட்டுவரும் பயிர்களின் உற்பத்தியையும் ஏற்றுமதியையும் அதிகரித்தல், காப்பி. பெட்டிகளில் அடைக்கப்பட்ட பழங்கள், கடல் பண்டங்கள் போன்ற வெளிநாடுகளில் அதிகமான தேவையிருக்கக் கூடிய மற்ற வகைப் பண்டங்களின் உற்பத்தியில் அதிகமான அளவில் கவனத்தைச் செலுத்துதல் ஆகியவைகள் இந் நாட்டுத் திட்டங்களில் சிறப்பிடம் பெறுகின்றன. வேளாண்மையைப் பரவலாக்குதல், உள்நாட்டுப் பொறிசெய் தொழில்களின் வளர்ச்சிக்கான வேளாண்மை மூலப்பொருள்களின் அடிப்படையைப் பரவலாக்குதல் ஆகியவைகள் இந் நாடுகளில் உள்ள பிற நோக்கங்களாகும். ஏதாவது ஒரு பயிரை அல்லது ஒரு சில பயிர்களையே அவைகளின் முக்கியமான ஏற்றுமதி வருமானங்களாகக் கருதிவரும் பர்மா, கம்போடியா, மலேயா போன்ற நாடுகளிலும் உண்மையான தலா வருமானங்களில் தோன்றும் அதிகரிப்பினுல் எதிர்பார்க்கப்படும் அல்லது திட்டமிடப்படும் பலதரப்பட்ட உணவு வகைகளை உறுதி செய்வதற்காக இந்தியா, பாக்கிஸ்தான், சப்பான் போன்ற நாடுகளிலும் பலதரப்பட்ட பண்டங்களை உற்பத்தி செய்தல் என்பது வலியுறுத்தப்படுகிறது.

## இந்தியாவின் அனுபவம்
## (The Experience in India)

இரண்டாம் உலகப்போர் முடிந்த காலத்திலிருந்து உடனடியான ஆண்டுகளில் இந்தியாவின் வேளாண்மை நிலைகள் மிகவும் தெளிவாகத் தென்படும்வண்ணம் குறைந்துவிட்டன என்பதைக் காட்டுவதற்கான சான்றுகள் இருக்கின்றன. 1910 முதல் 1950 வரையிலான நாற்பதாண்டுக் காலத்தில் இருபோக உற்பத்தியின் காரணமாக மொத்த விளைச்சல் நிலத்தின் அளவு அதிகரிக்கப் பட்டாலும், விளைச்சலுக்குச் கொண்டுவரப்பட்ட புதிய நிலங்களின் அளவு மிகவும் குறைவாக இருந்தது ஆனுல், மக்கள் பெருக்கம் விரைவானதாக இருந்த காரணத்தால் வேளாண்மையில் பயன்படுத்தப்பட்ட நிலத்தின் தலா அளவு குறைந்து விட்டது. பர்மா தனியாகப் பிரிந்ததன் காரணமாக, உணவு அளிப்பு ஏறத்தாழ 1·3 மில்லியன் டன் அளவுக்குக் குறைந்தது. இந்தியா (1947-ல்) பிரிக்கப்பட்டுவிட்டதால் இந்த அளவு மேலும் 0·3 மில்லியன் டன் அளவுக்குக் குறைந்தது. உள்நாட்டு அளிப்பில் தோன்றிய குறைவு இறக்குமதிகளால் ஈடுசெய்யப்பட நேர்ந்தது. இத்தகைய இறக்குமதியானது 1946முதல் 1952 முடிய

உள்ள ஆண்டுகளில் ஓர் ஆண்டிற்குச் சராசரியாக 3மில்லியன் டன் அளவுக்கு இருந்தது. இவ்வாறாக உணவு உற்பத்தியின் பற்றாக்குறை உற்பத்தியில் சராசரியாக 6%—7% அளவாக இருந்தது. 1948, 1952 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் இறக்குமதி செய்யப்பட்ட மொத்த உணவின் மதிப்பு ரூ.7 500மில்லியனுக்கும் அதிகமாக இருந்தது. இது நாட்டின் அந்நியச் செலாவணிப் பற்றாக்குறையில் ஏறத்தாழ 60% அளவாக இருந்தது. அதே நேரத்தில் உணவுப் பண்டங்கள், மற்ற வகை வேளாண்மைப் பண்டங்கள் ஆகியவைகளின் உள்நாட்டு உற்பத்தி மிகவும் குறைவாகவே இருந்தது. ஒரு சில பண்டங்களின் உற்பத்தி உண்மையிலேயே குறைந்துவிட்டது. எண்ணெய் வித்துகளின் நிலை ஏறத்தாழ ஒரே அளவாக நிலைத்திருந்திருக்கிறது. ஆனால், பருத்தியின் விளைவு குறைந்துவிட்டது. போருக்கு முந்திய நிலையில் இருந்த அளவைக் காட்டிலும் 5·5% அளவுக்கு உணவுப் பொருள்களின் உற்பத்தி 1950-51-ல் குறைந்துவிட்டது. ஒரு மொத்தமாகப் பார்க்கும்போது, 1948–52 ஆகிய ஐந்தாண்டுகளில் உணவு தானியங்களின் உற்பத்தியானது போருக்கு முந்தியிருந்த நிலைக்கு மிகவும் குறைவாகவே இருந்தது. போருக்கு முந்தியிருந்த காலத்திலேயே மிகக் குறைவான அளவில் இருந்த உணவின் தலா நுகர்வு போருக்குப் பின் வந்த ஆண்டுகளில் இன்னும் குறைவாக இருந்திருக்கும் என்பது சொல்லாமலேயே தெரியக் கூடியதாகும். ஏற்கெனவே இருந்த தரத்தைக்கூட நிலைநிறுத்துவதற்கு வேளாண்மைத்துறையில் முடியாமல் போனதற்குப் பருவக்காலக்காரணிகள் தவிர, இறுதிநிலை நிலங்களிலும் வேளாண்மை விரிவுபடுத்தப்பட்டதும் ஒரு காரணமாகும். இதைக் காட்டிலும் முக்கியமானது வேளாண்மைத் துறையில் மேற்கொள்ளப்பட்ட முதலீடு மிகவும் குறைவாக இருந்ததேயாகும். பல நோக்குத் திட்டங்கள் உள்படச் சராசரியாகப் புதிய முதலீடுகள் ரூ.700மில்லியனுக்கும் அதிகமாக இல்லை. இந்த ஆண்டுகளில் இருந்த வேளாண்மைத் துறை மக்கள் 250மில்லியன் என்றும் விளைச்சலுக்குப் பயன்படுத்திய நிலத்தின் அளவு 300மில்லியன் ஏக்கர் என்றும் இருந்ததால் இது ஒரு விவசாய நபருக்கு ரூ 2·8 என்றும் விவசாயம் செய்யப்படும் தலா ஏக்கருக்கு ரூ.2 3 என்றும் அமைகிறது.

திட்டமிட்ட பொருளாதார முன்னேற்ற யுகம் தொடங்கியதிலிருந்து வேளாண்மைத்துறை முன்னேற்றத்தை மிகவும் தீவிரமாக இந்தியப் பேரரசு மேற்கொண்டிருக்கிறது. மிக விரைவான முன்னேற்றத்தைப் பெறுவதற்காக வேளாண்மைத் துறைக்கான விரிவான திட்டங்களையும் தீட்டியிருக்கிறது. நாட்டின் ஒரு மொத்தமான பொருளாதார முன்னேற்றத்தில் வேளாண்மைத்

துறை ஆற்ற வேண்டிய சிறப்பு மிகுபங்கை அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிறது என்பது இங்கே குறிப்பிடத்தக்க முக்கியமான குறிப்பாகும். 'வேளாண்மையில் பயன்படுத்தப்படும் நிலம், உழைப்பு ஆகிய மூலவளங்களை மிகவும் அதிகமான அளவில் நன்மை தரத்தக்க முறையில் பயன்படுத்துவதை மிகவும் முக்கியமாகச் சார்ந்திருப்பதாகவே பொருளாதார முன்னேற்றத்திற்கான முழுத்திட்டத்தின் வெற்றி அமைந்திருக்கும்' என்று உணரப்படுகிறது. உணவுப் பண்டங்கள், தொழில்களுக்கான மூலப் பொருள்கள் ஆகியவைகளின் விளைவை அதிகரிக்கும் நோக்கத்திற்காக மட்டுமல்லாமல், மனிதசக்தியையும் மற்றப் பல மூலவளங்களையும் திரட்டுவதற்கும், கிராமப் பகுதி மக்களிடையே விழிப்புணர்ச்சியைத் தோற்றுவிப்பதற்கும், தொழில் முயற்சி உணர்வையும் கூட்டுறவு மனப்பான்மையையும் அவர்களிடம் படிப்படியாகப் புகுத்துவதற்கும், பொருளாதார வளர்ச்சிக்கான சமுதாய நிலையத் தடைகளை நீக்குவதற்கும், பொருளாதார முன்னேற்றத்திற்கு மிக மிக அதிகமான அளவில் அதன் பங்கை ஆற்றும்வண்ணம் பொருளாதாரத்தின் கிராமத் துறையில் விழிப்புணர்ச்சியைத் தோற்றுப்பதற்கும் உதவி செய்யும்வண்ணம் வேளாண்மைத்துறைத் திட்டம் அமைக்கப்படுகிறது. வேளாண்மைத்துறைக்குரிய முன்னேற்றத் திட்டமானது பொருளாதார அடிப்படையில் அமைந்தது என்பது மட்டுமல்லாமல் வேளாண்மைச் சிக்கலின் நிலையப் பகுதிகளையும் சமுதாயப் பகுதிகளையும் அதன் எல்லைக்குள் உள்ளடக்கியதாக மிகவும் விரிவானதாகவும் இருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

1950-51 முதல் 1960-61 வரையுள்ள பத்தாண்டுகளைக் கொண்டிருந்த முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் வேளாண்மை முன்னேற்றம், சமுதாய வளர்ச்சித் திட்டம் ஆகியவற்றில் பயன்படுத்தப்பட்ட பொதுச் செலவின் அளவு ரூ 8,210 மில்லியனாகு அல்லது இந்தக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட மொத்த முதலீட்டுச் செலவில் 12·5% ஆக இருந்தது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் ரூ-10,890மில்லியன் தொகையைச் செலவிட்டது இது மொத்த முதலீடான ரூ.85,770மில்லியனில் 12·7% அளவாகும். அடுத்து வந்த மூன்று ஓராண்டுத் திட்டங்களிலும் சேர்த்து (1966-69) வேளாண்மைத்துறைக்கென 14·6% அளவு செலவிடப்பட்டது. நான்காம் திட்டத்தில் (1969-74) ரூ 27,280மில்லியன் செலவிடப்படுவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது மொத்தச் செலவான ரூ.159,020மில்லியனில் 17 1% அளவாகும். எல்லாத் திட்டங்களிலும் உணவு உற்பத்தியை அதிகரிப்பதிலும், தொழில் துறைக்குத் தேவையான மூலப்

பொருள்களை அதிகரிப்பதிலும் பேரளவிலான முக்கியத்துவம் தரப்பட்டிருக்கின்றது. உணவுத் தானியத்தில் 14% அதிகரிப்பு என்ற அளவை முதல் திட்டமும், 15% அதிகரிப்பு என்ற அளவை இரண்டாம் திட்டமும் இலக்குகளாகக் கொண்டிருந்தன. 1960-61 முதல் 1965-66 வரையிலான ஐந்தாண்டுக் காலத்தில் 31·6% அளவுக்கு உணவு விளைவை அதிகரிக்க வேண்டும் என்ற இலக்கை மூன்றும் திட்டம் பெற்றிருந்தது. ஆனால், மூன்றும் திட்டத்தில் சராசரியாக ஆண்டொன்றுக்கு 6% அதிகரிப்பு என்று எதிர் பார்த்தற்கு மாறாக உணவு உற்பத்தி சராசரியாக 2 விழுக்காட்டு அளவிலேயே அதிகரித்தது. 1962-ல் சீனு இந்தியப் பகுதிகளின் மீது ஆக்கிரமிப்பு நடத்தியதும், பருவ மழை தவறியதுமே இதற்கான பெரும் காரணங்களாகும். 1965-ல் பாக்கிஸ்தான் தோற்றுவித்த போரும் இதற்கு வகை செய்தது. 1966-67-ல் கடுமையான வரட்சி நிலைமை தோன்றியது. ஆனால், 1967-க்குப் பிறகு நிலைமை ஓரளவுக்குச் சீர்திருத்தப்பட்டது. 1968-69-ல் உணவு உற்பத்தியின் இலக்கு 102 மில்லியன் டன்கள் எனக் குறிப்பிடப்பட்டது. இந்த அளவுக்கு உற்பத்தி பெருகாவிட்டாலும் இந்த ஆண்டில் உணவு உற்பத்தி 95·6 மில்லியன் டன் அளவை எட்டியது. விளைநிலத்தின் அளவை அதிகரித்தல், உற்பத்தித் திறனைப் பெருக்குதல் அதிக விளைவைத் தரும் விதைகளைப் பயன் படுத்துதல் போன்ற பல முறைகளைப் பயன்படுத்துவதன் மூலம் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதை நான்காம் திட்டம் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது. தொழில்களுக்கான மூலப் பொருள்களைப் பொறுத்தமட்டிலும், குறிப்பாகப் பருத்தி, சணல் போன்ற பொருள்களைப் பொறுத்தமட்டிலும் மூன்றும் திட்டத்தில் அதிகமான இலக்குகள் நிருணயிக்கப்பட்டன. இத்தகைய பண்டங்களுக்கான இறக்குமதியின்மீது மிகவும் குறைவான அளவில் நாடு சார்ந்திருக்கும்வண்ணம் செய்வதற்கு இத்தகைய பண்டங்களின் உற்பத்தி மிகவும் தேவையானதாகும் என்ற அடிப்படையில் அதிகமான இலக்குகள் நிர்ணயிக்கப் பட்டன. 'பொருளாதாரம் வளர்ச்சியடைதல், உள்நாட்டுத் தேவை அதிகரித்தல், வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் அளவை அதிகரிப்பதற்கான தேவை ஆகியவைகளுடன் வணிகப் பயிர்களின் உற்பத்தியையும் அதிகரிப்பதன் வெற்றி, உணவுப் பொருள்களின் உற்பத்தியை அதிகரிப்பது எந்த அளவு முக்கிய மானதோ அந்த அளவுக்கு முக்கியமானதாகும்.' ஆனால் மூன்றும் திட்டக்கால முடிவில் கரும்பு உற்பத்தி நீங்கலாக மற்றப் பண்டங் களில் திட்ட இலக்கைப் பெற முடியாமல் போய்விட்டது. உற்பத்தி ஓரளவுக்கு அதிகரித்திருந்தாலும் அவை நான்காம் திட்டக் காலத்திலும் இலக்குகளுக்குக் குறைவாகவே இருக்

கின்றன. உற்பத்தி இலக்கான 65லட்சம் பேல்களுக்குப் பதில் 1970–71-ல் பருத்தி உற்பத்தி 45·6 லட்சம் பேல்களாகவே இருந்தன. இது 1971-72-ல் 56 முதல் 57லட்சம் பேல்களாக இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. இதைப் போன்று சணல் உற்பத்திக்கான இலக்கான 67லட்சம் பேல்களுக்குப் பதில் 1970-71-ல் சணல் உற்பத்தி 4( லட்சம் பேல்களாகவே இருந்தன. 1971-72-ல் சணல் உற்பத்தி 55 முதல் 56லட்சம் பேல்களாக இருக்கும் என எதிர் பார்க்கப்படுகிறது. ஆனால், எண்ணெய் வித்துகள், கரும்பு போன்றவைகளின் உற்பத்தியில் மிகவும் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் தோன்றியுள்ளது.

உற்பத்தியில் முன்னேற்றம் என்று பார்க்கும்போது, திட்ட மிட்ட பொருளாதார முன்னேற்றத்தின் முதல் பதினறு ஆண்டுக் காலத்தில் வேளாண்மைத் துறையில் பெறப்பட்ட முன்னேற்றம் மனநிறைவைத் தராததாக இல்லை. ஆனல் 1967–68-க்குப் பிறகுத் தோன்றிய பசுமைப் புரட்சி ஓரளவுக்கு மனநிறைவைத் தருகிறது. இருந்தபோதிலும் அண்மை ஆண்டுகளில் நாடு முழுவதிலும் தோன்றிய வரட்சி நிலைமையைக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது இந்தியாவில் தோன்றியுள்ள பசுமைப் புரட்சி வெறும் தற்காலிகமானதே என்ற எண்ணம் தோன்றுகிறது. சராசரி மனிதன் பெறும் உண்மை அளவுகள் அதிகரிக்காதவரையில் பசுமைப் புரட்சியானது ரத்தப் புரட்சிக்கு வழிசெய்துவிடும் என்றும் குறிப்பிடப்படுகிறது. திட்டமிடுதல் என்பது தொடங்கிய திலிருந்து தோற்றுவிக்கப்பட்டிருக்கும் வேளாண்மைத்துறை முன்னேற்றம் நாட்டின் பொதுவான பொருளாதார முன்னேற்றத் திற்கு எந்த அளவுக்கு உதவி செய்திருக்கிறது என்பதுதான் இங்குத் தோன்றும் வினவாகும். நன்கமையப் பெருத வேளாண்மைத் துறை, நன்கமையப்பெருத தொழில்துறை, அமித மக்கள்தொகை, மூலதனமின்மை ஆகிய 'இயல்புகளைக் கொண்டிருக்கும் இந்தியா போன்றதொரு குறைந்த வளர்ச்சியுடைய நாடொன்றில் பொருளாதார வளர்ச்சிக்கு வேளாண்மைத்துறை அதன் பங்கை ஆற்ற வேண்டுமானல்,

(i) உள்நாட்டுத் தேவைகள் யாவும் நிறைவு செய்யப்படும் அளவுக்கு வேளாண்மைப் பண்டங்களின் உற்பத்தி பேரளவிற்கு அதிகரிக்கப்பட வேண்டும்.

(ii) தொழில்களுக்கான மூலப் பொருள்களின் இறக்கு மதியைக் குறைக்கும்வண்ணம் அல்லது நிறுத்திவிடும்வண்ணம் அம் மூலப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படவேண்டும்.

(iii) வேளாண்மைத் துறையில் உள்ள மக்கள் மற்றத் துறைகளுக்கு மாற்றப்பட்டு மூலதனத் திரட்சி விரைவுபடுத்தப்படும் அளவுக்கு வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களின் உற்பத்தித் திறனும் தலா வருமானமும் அதிகரிக்கப்படவேண்டும்.

(iv) இறுதியாக, கிராமப்பகுதி மக்களிடையே பொதுவான விழிப்புணர்ச்சி தோற்றுவிக்கப்படவேண்டும்.

உணவுப் பொருள்களின் உற்பத்தி ஓரளவுக்கு அதிகரித்திருந்தாலும், மிகவும் விரும்பப்படும் உணவில் தன்னிறைவு என்றதொரு நிலையைத் திட்டமிட்ட முதல் பத்தாண்டுக் கால முயற்சி ஏற்படுத்தவில்லை, 13·67 அவுன்ஸ் உணவு நாள்தோறும் தலா நபருக்குத் தேவை என்ற அடிப்படையில் முதல் திட்டத்தின் இறுதிக் காலத்தில் நாட்டின் உணவுத் தேவை 52.4 மில்லியன் டன்களாக இருக்கும் என 1850–ல் திட்டக்குழு மதிப்பிட்டது. தலா நுகர்வு அளவில் முன்னேற்றம் விரும்பப்படுமானல் தேவைப்படும் மொத்த அளவும் அதற்கேற்ப அதிகரிக்கப்படவேண்டும் என்றும் குறிப்பிட்டது. இவ்வாருக, தனிநபர் நுகர்வு அளவு 14 அவுன்ஸ் என்ருல் 1956–ல் மொத்தத் தேவை 53·7மில்லியன் டன்களாக இருக்கும் என்றும், தலா நுகர்வு அளவு 16 அவுன்ஸ் என்ருல் 1956-ல் மொத்தத் தேவை 61·4மில்லியன் டன்களாக இருக்கும் என்றும் மதிப்பிடப்பட்டது. நல்ல பருவ நிலைகள் இருந்ததன் காரணமாக உணவுப் பொருள்களின் உற்பத்தி 1954-5–ல் 54 மில்லியன் டன்கள் அளவிலிருந்து 195[illegible]-5 -ல் 6[illegible] மில்லியன் டன்களாக அதிகரித்தது. ஆனுல், 1955-56-ல் இது 64·8மில்லியன் டன்களாகக் குறைந்துவிட்டது. 195[illegible]–56-ல் பெறப்பட்டிருக்கும் அளவைக் கணக்கில் கொண்டு பார்த்தாலும் முதல் திட்டத்தின் இலக்கு அளவோடு ஒப்பிடும்போது இலக்கு அளவுக்கு 3மில்லியன் டன்கள் அதிகமாகவே உணவு உற்பத்தியின் அளவு அமைந்திருந்தது. இருப்பினும் மிக விரைவாக அதிகரித்துவந்த மக்கள் தொகையின் காரணமாக உணவில் தன்னிறைவு என்ற நிலையை அடைய முடியவில்லை. எனவே 1951–55 ஆகிய ஆண்டுகளில் அரசு இறக்குமதி செய்த அளவு 12மில்லியன் டன்களுக்கும் அதிகமாக இருந்தது. மக்கள் தொகைப் பெருக்க விகிதம் 1·25% அளவிலிருக்கும் என்றும் கருதிக்கொண்டு ஐந்தாண்டுக் காலத்தில் முன்னேக்கி மதிப்பீடு செய்யப்பட்ட தலா நாட்டு வருமான உயர்வு 17·8% என்ற அளவைக் கருத்தில் கொண்டு, 1955-56-ல் ஒவ்வொரு வயது வந்தவர்கள் என்ற அலகிற்கு நாள் ஒன்றுக்கு கிடைக்கும்படியாகச் செய்யப்பட்ட உணவுப் பண்டங்களின்

அளவான 17 அவுன்சுகளுக்கு மாறாக, 1960-51-ல் 18.3 அவுன்சுகளாக இருக்க வேண்டும் என்ற இலக்கையும் கருத்தில் கொண்டு, 1960-61-ல் 10மில்லியன் டன்கள் அதிகப்படியாக உற்பத்தி செய்யப்பட வேண்டும் என்று இரண்டாவது திட்டம் ஒரு எல்லையை நிருணயித்தது- இவ்வாறாக. இரண்டாவது திட்டத்தின் இறுதி ஆண்டில் பெறப்பட வேண்டிய உற்பத்தியின் அளவு 75 மில்லியன் டன்களாகக் குறிப்பிடப்பட்டது. இந்த அளவு பின்னர் மாற்றியமைக்கப்பட்டது. ஆண்டுதோறுமான மக்கள் பெருக்க விகிதம் 2% என்று இருக்கும் என்றும், நாட்டு வருமான அதிகரிப்பு 25% அளவில் இருக்க வேண்டும் என்றும். கருதிக்கொண்டு 1957ஆம் ஆண்டில் உணவு தானிய விசாரணைக்குழு (Food Grains Enquiry Committee) மொத்தத் தேவையின் அளவு 79மில்லியன் டன்களாக இருக்கும் என மதிப்பிட்டது. எனவே, (மனிதநுகர்வு, விதைதலுக்கான தேவை, கால் நடைகளுக்குப் பயன்படுத்தப் படுவதற்கான தேவை, வீணுதலுக்கான தேவை ஆகியவைகள் உள்பட) உணவுத் தானியங்களின் மொத்தத் தேவையை 80·4 மில்லியன் டன்கள் என திட்டக்குழு உயர்த்தி மதிப்பிட்டது. இவை இவ்வாறிருப்பினும், 1960–61-ல் கண்ட உண்மை விளைவு 76மில்லியன் டன்களாகவே இருந்தன. எனவே, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இறக்குமதி செய்யப்பட்ட உணவுத் தானியங்களின் மொத்த அளவு 12·7மில்லியன் டன்களாக இருந்தன.

முதல் திட்டம், இரண்டாவது திட்டம் ஆகியவற்றிற்கான ஆண்டுகளில் அதிகரிக்கப்பட வேண்டுமென்ற முதன்முதலான மதிப்பீடுகள் யாவும் நிறைவு செய்யப்பட்டிருந்தாலும், தொடர்ச்சியாக இறக்குமதிகளையே நம்பியிருக்க வேண்டியிருந்த நிலையானது உண்மையான தேவையைக் காட்டிலும் மதிப்பிடப் பட்ட தேவைகளின் அளவுகள் மிகவும் குறைவாகவே இருந்தன என்பதையே சுட்டிக் காட்டுகின்றன. இதற்கு இரண்டு காரணங்கள் தென்படுகின்றன. முதலாவதாக, மக்கள் பெருக்க விகிதம் குறைத்து மதிப்பிடப்பட்டிருக்கிறது. இரண்டாவதாக, பொருளாதார முன்னேற்றத்தின் காரணமாகத் தேவை அதிகரித்திருக்கிறது. ஒரு நாளுக்கு ஒவ்வொரு நபரும் ஓர் அவுன்சு உணவுத் தானியங்களை அதிகமாக நுகர்வதாகக் கருதிக்கொண்டால், மக்கள் தொகையில் பாதி நபர்களின் இத்தகைய நுகர்வு அதிகரிப்பு மொத்தத் தேவையை இரண்டுமில்லியன் டன்களுக்கும் அதிகமான அளவிற்கு அதிகரிக்கச் செய்துவிடும் என்று 1957ஆம் ஆண்டின் உணவுத் தானிய விசாரணைக்குழு மதிப்பிட்டுள்ளது. எனவே மொத்த இறக்குமதித் தேவையின் அளவு இரண்டாம்

திட்டத்தில் குறிப்பிட்டதுபோல ஆறு மில்லியன் டன் அளவாக இல்லாமல் பத்துமில்லியன் டன்களாக இருக்கும் என்பதை இது உணர்த்தியது. மக்கள் பெருக்கம் என்பதோடு வளர்ந்து வரும் பொருளாதாரம் ஒன்றில் உணவுத் தேவையின் அதிகரிப்பை மதிப்பீடு செய்வதில் வேறு பல காரணிகளும் மனத்தில் கொள்ளப் படவேண்டும். மக்கள் பெருக்கத்தின் காரணத்தினுல் மட்டுமல் லாமல், வருமான அதிகரிப்பு, வருமானப் பகிர்வு அமைப்பு. விலைத் தேவை நெகிழ்ச்சி, உணவின் நுகர்வுப் பழக்கத்தில் மாற்றங்கள், வேளாண்மைப் பண்டங்கள் மற்றும் தொழில்பண்டங்கள் ஆகியவைகளுக்கிடையேயான வணிக விலைமுறைத் திட்டங்கள் மற்றும் இவைபோன்ற பலவற்றினுலும் உணவின் தேவை மாற்ற மடைகிறது மக்கள் பெருக்க விகிதம் அதிகமாகவும், உணவிற் கான வருமானத் தேவைநெகிழ்ச்சி அதிகமாகவும் விலைத் தேவை நெகிழ்ச்சி குறைவாகவும் பண்ணைப் பண்டங்களுக்கு வணிக விலைமுறைத் திட்டங்கள் பாதகமானவைகளாகவும் இருந்தால் உணவிற்கான தேவை அதிகமாகும். இவைகள் யாவும் வேறு விதமாக இருந்தால் அப்போது உணவுத் தேவை குறையும். ஒவ்வொரு காரணியின் சிறப்புத் தன்மையும் மிகவும் விரிவாகக் காணப்பட வேண்டும். தனிநபர் வருமானம் அதிகரிக்கும்போது மட்டமான தன்மையுடைய உணவுப் பண்டங்களிலிருந்து உயர்ந்த தன்மையுடைய உணவுப் பண்டங்களுக்கான தேவை அதிகரிக்கும் என்பதால், பலவகையான உணவுப் பண்டங்களுக்குமான வருமானத் தேவை நெகிழ்ச்சியைக் கணக்கிடுவது மிகவும் அவசிய மாகிறது. அரிசி வகைகளின் தனிநபர் நுகர்வு அளவு நகர்ப் பகுதிகளில், கிராமப்பகுதிகளில் இருப்பதைக் காட்டிலும் சிறிது அதிகமான அளவில் இருக்கிறது. எனவே, பலவிதமான மக்கள் பெருக்க விகிதத்திஞல் தோன்றும் உணவுத் தேவையின் அதிக ரிப்பைக் கிராமப்பகுதிகளுக்கென்றும் நகர்ப்பகுதிகளுக்கென்றும் தனித் தனியே கணக்கிட வேண்டும். உணவுப் பண்டங்களின் விலைகளின் மாற்றங்களும் அவற்றின் தேவைகளைப் பாதிக்கின்றன. பொதுவாக உணவற்ற பண்டங்களுக்கான விலைத் தேவை நெகிழ்ச்சியைக் காட்டிலும் குறைவான அளவிலேயே உணவுப் பண்டங்களுக்கான விலைத் தேவைநெகிழ்ச்சி அமைந்திருக்கும். இறுதியாக, வேளாண்மைப் பண்டங்கள் மற்றவற்றின் பண்டங்கள் ஆகியவைகளுக்கிடையேயான வணிக விலைமுறைத் திட்டமும் உணவிற்கான தேவையை மாற்றமடையச் செய்கிறது பண்ணைப் பண்டங்களுக்குச் சாதகமானதாக வணிக விலைமுறைத் திட்டங்கள் அமைந்திருக்கும் என்ருல், அதாவது உணவுப் பண்டங்களின் விலைகள் உணவற்ற பண்டங்களின் விலைகளைக் காட்டிலும் அதிக மான அளவில் அதிகரித்தால், தராதரமான விலைகளில் எந்த

விதமான மாற்றமும் இல்லாதிருக்கும்போது இருக்கத்தக்க பண்ணைப் பண்டங்களின் நுகர்வைக் காட்டிலும் சிறிதளவு குறைவானதாகவும் மற்றப் பண்டங்களின் நுகர்வின் அளவு சிறிதளவு அதிகமானதாகவும் இருக்கும்.

சிக்கலின் இத்தகைய பகுதிகளையெல்லாம் கருத்தில் கொண்டு இந்தியாவின் உணவு உற்பத்தி அதிகரிப்பு விகிதம் மூன்று மடங்காக்கப்பட்டு 1965–66ஆம் ஆண்டில் 110மில்லியன் டன்கள் அளவுக்கு இதிகரிக்கப்படாவிட்டால் இந்திய நாடு அதன் பொருளாதார முன்னேற்ற முயற்சியில் மிகவும் தீவிரமான இடையூற்றை எதிர்நோக்க வேண்டியிருக்கும் என்று 1959ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் போர்டு நிறுவனத்தின் நிபுணர் குழு (Board Foundation Team) இந்தியாவின் உணவுச் சிக்கலுக்கான அதன் அறிக்கையில் (Report on India's Food Problem) குறிப்பிட்டது. அப்போது நடைமுறையிலிருந்த விகிதங்களில் உணவு உற்பத்தி அதிகரித்துக்கொண்டு செல்லுமானால் உணவின் அளிப்புக்கும் திட்ட இலக்குகளுக்கும் இடையேயான வேறுபாடு 1965-66 ஆண்டு வாக்கில் 28 மில்லியன் டன்களாக இருக்குமென இக் குழுவின் நிபுணர்கள் கருதினார்கள். மூன்றும் திட்டத்தின் தொடக்கத்திலிருக்கும் நிலையைக் காட்டிலும் ஏறத்தாழ 32% அளவு அதிகரிப்பைக் காட்டக்கூடியதாக 1965–66ஆம் ஆண்டில் உணவு தானிய உற்பத்தியின் அளவு 100மில்லியன் டன்களாக அதிகரிக்கப்படவேண்டுமென மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் விரும்பப்பட்டது. 1960-61ஆம் ஆண்டில் கிடைக்கத்தக்க உணவு தானியத்தின் மொத்த அளிப்பு இறக்குமதிகளும் உள்பட ஏறத்தாழ 78 மில்லியன் டன்களாக இருந்தது. மூன்றும் திட்டக் காலத்தில் மக்கள் 10% அளவில் அதிகரித்து வருமானம் 34% அளவுக்கு அதிகரித்து வருமானத் தேவைநெகிழ்ச்சி 0·7 என்று இருந்தால், அளிப்பு ஏறத்தாழ 31மில்லியன் டன்கள் அதிகரிக்கப் படவேண்டும். அல்லது 110மில்லியன் டன்கள் என்ற மொத்த அளவைப் பெறவேண்டும். இது மூன்றும் திட்டத்தில் குறிப் பிடப்பட்டுள்ள இலக்குகளைக் காட்டிலும் அதிகமானதாகும்.

தொழில்களுக்கான மூலப் பொருள்கள் பக்கத்தைப் பார்த் தாலும்கூட முதல் பத்தாண்டுகளில் பெற்ற வெற்றிகள் உற்சாகம் தருபவைகளாக இல்லை. 1960-61ஆம் ஆண்டிற்கான இலக்குகளைப் பெறும்வண்ணம் பருத்தி, சணல் ஆகியவற்றின் விளைவு இருக்கவில்லை. 1960–61ஆம் ஆண்டில் இருக்க வேண்டிய பருத்தி, சணல் ஆகியவைகளின் மதிப்பிடப்பட்ட உற்பத்தி அளவுகள் முறையே 5·5 மில்லியன் பேல்கள், 5 மில்லியன் பேல்கள்

என்று இருந்தன. ஆனால், இந்த ஆண்டின் உண்மையான பருத்தி உற்பத்தியின் அளவு 5·1 மில்லியன் பேல்கள் என்றும், சணல் உற்பத்தியின் அளவு 4 மில்லியன் பேல்கள் என்றும் இருந்தன. இந்த ஐந்தாண்டுகளில் ஒவ்வொன்றின் உற்பத்தியும் சராசரியாக ஆண்டொன்றுக்கு 4·5 மில்லியன் பேல்கள் என்றிருந்தன. உள்நாட்டு உற்பத்தியில் உள்ள பற்றாக்குறை இரு வழிகளில் பாதகமான விளைவுகளைத் தந்தது. முதலாவதாக, இது தொழில்களின் வளர்ச்சியைப் பாதித்தது இரண்டாவதாக, பேரளவிலான இறக்குமதியையும் இது அவசியமாக்கியது. பருத்தித் துணியின் உற்பத்தி 1955-ல் 4,658 மில்லியன் மீட்டர்களிலிருந்து 1957-ல் 4.869 மில்லியன் மீட்டர்களாக அதிகரித்தது. ஆனால், அடுத்து வந்த ஆண்டுகளில் இந்த அளவு குறைந்து, 1960-ல் 4.615 மில்லியன் மீட்டர்கள் என்றும் அமைந்தது. சணல் துணிகளின் (முரட்டுச் சணல் துணி வகை, சாக்குத் துணி வகை ஆகியவைகளின்) உற்பத்தி 1655ஆம் ஆண்டில் 992,000 மெட்ரிக் டன்களாக இருந்தது. 1956ஆம் ஆண்டிலும் 1958ஆம் ஆண்டிலும் இது ஓரளவுக்கு அதிகரித்தது. ஆனால் 1960ஆம் ஆண்டில் இது 980,000 மெட்ரிக் டன்களாகக் குறைந்துவிட்டது. 1958-59ஆம் ஆண்டிலிருந்து சணல், பருத்தி ஆகிய இரு வகைகளின் உற்பத்தியிலும் தோன்றிய இறக்கம் மிகவும் அதிகமானதாக இருந்தது. இதன் காரணமாகக் கச்சாப் பருத்தி இறக்குமதியின் மதிப்பு 1958-59-ல் ரூ.283.5 மில்லியனிலிருந்து 1960-61-ல் இறக்குமதி மதிப்பு ரூ 817.5 மில்லியனாக அதிகரித்தது. 1965-66ஆம் ஆண்டில் பருத்தி உற்பத்தி மேலும் குறைந்து விட்டது. ஆனால், 1968-69-ல் உற்பத்தி நல்ல நிலையில் இருந்தது. 1967ஆம் ஆண்டுக் கணக்கின்படி உலகத்தில் பருத்தி உற்பத்தி செய்யப்படும் விளைநிலத்தில் 26% நிலம் இந்தியாவில் பயன்படுத்தப்பட்டாலும், உலக உற்பத்தியில் 10% அளவுதான் இந்தியாவில் உற்பத்தி செய்யப்படுகிறது. மேலும் தலா ஹெக்டேருக்கான உற்பத்தித் திறனும் இந்தியாவில் குறைவாக இருக்கிறது. 1968-69-ல் இத்தகைய உற்பத்தித்திறன் சோவியத் ரஷ்யாவில் 840 கிலோ கிராம் ஆகவும் ஐக்கிய அமெரிக்க நாட்டில் 500 கிலோகிராம் ஆகவும் இருந்தது. ஆனால், இந்தியாவில் இது 122 கிலோ கிராம் அளவில்தான் இருந்தது.

உழுது பயிரிடுவதற்காக நிலத்தின் எல்லையை அதிகரிப்பதற்கான வாய்ப்பு இந்தியாவில் மிகவும் குறைவாக இருக்கிறது. (ஏதாவது ஓர் இடத்தில் இது முடிகிறதென்றால் இறுதி நிலை நிலத்தை விரிவாக்குவதையே இது குறிக்கிறது.) இதன் காரண மாகப், பயன்படுத்தப்படும் நிலத்தின் ஓர் அலகின் உற்பத்தித்

திறனில் அதிகரிப்பு என்பனவற்றைத்தான் பண்ணை உற்பத்தியில் அதிகரிப்பு என்பது குறிப்பிடுகிறது. நாட்டின் சேமிப்புக்கும் முதலீட்டிற்கும் வேளாண்மைத் துறை ஆற்றும் பங்கு அதன் உற்பத்தித்திறன், நுகர்வின் அளவு ஆகியவைகளை நேரடியாகவே சார்ந்திருக்கிறது. கடந்த சில ஆண்டுகளில் முக்கியப் பயிர்கள் சிலவற்றின் தலா நிலை அலகின் (Per unit area) உற்பத்தித்திறன் ஓரளவுக்கான முன்னேற்றத்தைக் காட்டியிருக்கிறது. ஆனால் இவைகளைப் பொறுத்தமட்டிலும் இந்தியாவில் காணப்பட்ட முன்னேற்றம் மேலை நாடுகளோடு ஒப்பிடும்போது மிகவும் குறைவானதாகவே இருக்கிறது. முக்கியமான வேளாண்மைப் பயிர்கள் எல்லாவற்றையும்கணக்கில்எடுத்துப்பார்த்தால்,ஒருஹெக்டேரின் அதிகரிப்பு விகிதம் இந்தியாவில் முதல் இரண்டு திட்டக் காலங்களில் ஆண்டொன்றுக்கு 1·7% இருந்தது, ஆனால் இத்தகைய அதிகரிப்பு விகிதம் பெரும்பலான ஐரோப்பிய நாடுகளில் 2%—25.% அளவாக இருந்தது. இந்தியாவின் மக்கள் தொகையில் வேளாண்மைத் துறையில் இருக்கும் உழைப்பளர்கள் 12%அளவில் இருந்தனர் என்றும், அவர்களின் தலா வருமானம் 1950–51ல் ரூ 104-லிருந்து 1956-57–ல் ரூ.98·4ஆகக் குறைந்துவிட்டது என்றும் இரண்டாவது அகில இந்திய வோளண்மைத்துறை உழைப்பாளர்களின் விசாரணையிலிருந்து (1956-57 Second All India Agricultural Labour Enquiry) தெரியவருகிறது. இந்த ஆண்டுகளில் பொருளாதாரம் முழுமைக்குமான சராசரியான தனிநபர் வருமானம் முறையே ரூ. 265•2 ஆகவும் ரூ.291·5 ஆகவும் இருந்தது. அதாவது, நாட்டின் தனிநபர் வருமானம் 10% அளவுக்கு அதிகரித்திருந்தபோது, வேளாண்மைத் துறையின் தலா வருமானம் 5% அளவுக்குக் குறைந்திருக்கிறது. எனவே, கிராமச் சேமிப்பில் எந்த விதமான நிகர அதிகரிப்பையும் எதிர்ப்பார்ப்பது முடியாததாகும். இதோடு இந்தியாவின் வேலை அமைப்பிலும் (Occupational Pattern) எந்த விதமான குறிப்பிடத்தக்க மாற்றமும் இருக்க முடியாது.

## முன்னேற்ற வாய்ப்பிற்கான வழிகள்
### (Possible Lines of Improvement)

இந்தியா போன்ற நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு வேளாண்மைத்துறை எந்தெந்த வழிகளில் பங்காற்ற முடியும்? முதன் முதலாக, தொழில்துறையிலிருந்தாலும் சரி, வேளாண்மைத் துறையில் இருந்தாலும் சரி, பொருளாதார வளர்ச்சி எனப்படுவது முயற்சியும் ஆர்வமும் மிக்க தலைமைப்

பொறுப்பேற்று நடத்திச் செல்பவர்கள் எவ்வளவு நபர்கள் இருக்கிறார்கள் என்பதையே சார்ந்திருக்கிறது. சர்வாதிகாரப் பொருளாதாரத்தில் இத் தலைமைப் பொறுப்பு அரசாங்கத்தால் மேற்கொள்ளப்படுகிறது. ஆனால் தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரத்தில் தொழில் முயற்சித் திறமையும், வணிக முயற்சியும் மக்களிடமிருந்தே தோன்ற வேண்டும். இவைகள் யாவும் எங்குப் பற்றாக்குறை உடையனவாக இருக்கின்றனவோ அங்குத் தொழில் முயற்சி முன்னேற்றத்தைத் தோற்றுவிப்பதற்குச் சாதகமான சூழ்நிலைகளை உருவாக்கித் தருவதை அரசாங்கத்தின் கொள்கைகள் நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டும். 18ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் வேளாண்மைத் துறையில் தோற்றுவிக்கப்பட்ட குறிப்பிடத்தக்க பேரளவிலான முன்னேற்றம் பேரளவு நில உரிமை தோன்றியதாலேயே பெரும்பாலும் தோன்றியது என்று எங்சன் (Youngson) குறிப்பிடுகிறார். வேலியிடும்முறை (Enclosure Movement) கோதுமை விலைகளில் சாதகமான உயர்வு, உலகின் மற்றப் பகுதிகளோடு மிகவும் நெருக்கமான தொடர்பு ஆகியவைகள் இங்கிலாந்தின் பொருளாதார வளர்ச்சி வரலாற்றில் இந்தக் காலத்தில் வேளாண்மைத் துறையின் மிக வேகமான முன்னேற்றத்திற்கு வகை செய்த முக்கியமான காரணிகளாக இருந்தாலும்கூட, வேளாண்மை வணிகத்தை வாழ்க்கை முறையாகக் கருதாமல், சமுதாயத்தில் உயர்ந்த மதிப்பைப் பெறுவதற்கானதொரு வழியைக் கருதிக் கொண்டு தேவையான அளவுக்கு முயற்சியும், ஆக்கமும், ஊக்கமும் நிதி மூலவளங்களையும் கொண்டிருந்த நபர்கள் கிடைத்ததுதான் வேளாண்மைத்துறை முன்னேற்றத்திற்கு மிகவும் முக்கியமான காரணியாக இருந்தது. வணிகத்தில் ஈடுபட்டிருந்த நகர்வாழ் மக்களும் தொழில் அதிபர்களும் வேளாண்மையை ஒரு வழியாகக் கொண்டிருந்தனர். மேலும் நிலப் பிரபுத் தன்மையை மட்டுமல்லாமல் வணிகப் பண்பாக நில உடைமையையும் அவர்கள் கருதினார்கள்.[1] இதற்குமாறாக இப்போதிருக்கும் குறைந்தவளர்ச்சியுடைய நாடுகளில் இத்தகைய நபர்கள் வேளாண்மைத் துறையில் மிக மிகப் பற்றாக்குறையான அளவிலேயே இருக்கிறார்கள். வெளியிலிருந்து எந்த விதமான சேமிப்பையும் வேளாண்மைத் துறையால் கவர முடியவில்லை. அதற்குப் பதிலாகக் கிராமப் பகுதிகளில் காணப்படும் மிகக் குறைந்த அளவிலான மூலதனமும் திறமையும் நகர்ப் பகுதிகளுக்குச் செல்லும் போக்குடையவைகளாக இருக்கின்றன.

1 Youngson, A.J., *Possibilities of Economic Progress*, Cambridge, 1959. pp. 119-24.

குல மரபுக் குழுவைச் சார்ந்தவர்களிடையே உள்ள நில உடைமையில் ஸ்பெயின், மொராக்கோ ஆகியவைகளிலிருந்து ஈராக், ஏபர்சியா மற்றும் இவை போன்றவைகள் வரை தொழில் முயற்சி மிக்க நிலப் பெருங்குடி மக்கள் இல்லாதிருத்தல் மிகவும் முனைப்பாகக் காணப்படுகிறது என்று மத்திய தரைக் கடல் நாடுகளைப் பற்றி எழுதும்போது பேராசிரியர் பாலோக் (Prof. Balogh) குறிப்பிடுகிருர். பேரளவில் நிலம் வைத்திருப்பவர்கள் நிலத்தின் முன்னேற்றத்தில் அக்கறை உள்ளவர்களாக இல்லை. மாருக, அவர்கள் அதிகமான கால அளவுக்கு விலகியிருப்பதற்கு ஏற்றவகையிலும் தராதரமாகக் மிகக் குறைந்த அளவில் மேற்பார்வை தேவைப்படக்கூடிய வகையிலும் உள்ள பயிர்களை வளர்ப்பதிலும், மிருகங்களை வளர்ப்பதிலும் முதலீடுகள் செறிவான முறையில் மேற்கொள்ளப்பட்டன.[1] உலகின் மற்றப் பகுதிகளில், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளாக உள்ளவற்றிற்கும் இது பெரும்பாலும் பொருந்துவதாக இருக்கிறது.

மிக நீண்ட காலமாக நிலைத்திருந்துவரக்கூடிய சமுதாயக் காரணிகள், அரசியல் காரணிகள் ஆகியவைகளாலேயே இந் நிலை தோன்றியிருக்கிறது என்பதில் சிறிதுகூட ஐயமில்லை. ஆனல், வேளாண்மைத்துறையின் பின்தங்கிய நிலைக்கான பல காரணங்களில் இதுவும் ஒரு காரணமாக இருந்தால், அத்தகைய நிலைகள் தொடர்ந்து இருக்காதவண்ணம் சமுதாய அமைப்பில் மாற்றங்களைக் கொண்டுவரவேண்டியது மிகவும் அவசியமாகும். இதற்கு இரு வழிகள் காணப்படுகின்றன. முதலாவதாக நிலத்தை உழுது பயிரிடும் தொழிலை மேற்கொள்ளாமல் நில உரிமையை மட்டும் வைத்திருக்கும் உரிமையை ஒழித்தலும், நிலத்தை உழுபவரே உரிமையையும் பெற்றிருக்கும் முறையைப் புகுத்தலும் அமையும். இரண்டாவதாக, பெரும் நிலக்கிழார்களை வேளாண்மைத்துறை முன்னேற்றத்தில் அதிகமான அளவுக்கு ஆர்வம் காட்டும் வண்ணமும், வேளாண்மையை ஒரு வணிகம் என்று கருதும் வண்ணம் முயற்சிகளை மேற்கொள்ளும்வண்ணமும் உற்சாகத்தையும் வாய்ப்புகளையும் உண்டாக்கிக் கொடுத்தல் அமையும், மிகவும் காலம் தாழ்த்தி மேற்கொள்ளப்பட்ட நிலச்சீர்திருத்தங்கள் இந்தியா போன்ற நாடுகளில் முதல் வழியில் மேற்கொள்ளப்பட்டவைகளாக இருக்கின்றன. (சர்வாதிகாரமான முறையில் நடப்பதற்குரிய சக்திகள் அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்டால் ஒழிய அல்லது அத்தகைய சக்திகளை அரசே மேற்கொண்டால் ஒழிய) வேளாண்மைத் துறையில் தோற்றுவிக்கப்படும் முன்னேற்

[1] Balogh, T., 'Agricultural and Economic Development—Linked Public Works,' *Oxford Economic pap*ers, February, 1961, p 29.

றங்கள் யாவும் தடைப்பட்டுத் தோன்றுவதாகவும், மிகவும் காலதாமதமாகத் தோன்றுவதாகவும் இருக்கும். அதன் காரணமாக வேளாண்மைத்துறையின் முன்னேற்றம் நன்மை செய்வதைக் காட்டிலும் அதிகமாகத் தீமை பயக்கும் விளைவுகளைக் கொண்டிருக்கும் நிலை காணப்படும் நிலச் சீர்திருத்தங்கள் மிகவும் விரிவானவைகளாகவும் முழு அளவில் செய்யப்படுபவைகளாகவும் இருந்தால்தான் உற்பத்தி அதிகரிப்புக்கு உதவி செய்து வெற்றியைத் தரத்தக்கவைகளாக இருக்கமுடியும் தவிர அவைகள் ஒரு மொத்தமாக மேற்கொளப்படும் சீர்திருத்தங்களாக அமைய வேண்டும். அத்தகைய சீர்திருத்தங்களில் நில உரிமையானது முழுவதுமாக அரசுக்கு மாற்றப்பட வேண்டும் அல்லது இந்தியாவில் மேற்கொள்ளப்பட்டது போன்று கூட்டுப்பண்ணை முறையைப் புகுத்துதல் என்று இருக்க வேண்டும் கூட்டுப்பண்ணை முறையைப் புகுத்துவதில் குறைந்தது தொடக்க நிலைகளிலாவது அமைப்பு, மேற்பார்வை ஆகியவைகள் பேரளவில் அரசினால் மேற்கொள்ளப் படவேண்டியிருக்கின்றன. நிருவாகமானது மிகவும் அதிகமான அளவுக்குத் திறமை வாய்ந்ததாகவும், விரும்பப்படக்கூடிய தொழில் முயற்சியை முழு அளவில் தரத்தக்கதாகவும் அதற்கேற்ற வகையில் வலிவுள்ளதாகவும் அரசு இருந்தால்தான் இத்தகைய கொள்கை வெற்றியுடைய கொள்கையாக அமையமுடியும். இவ்வாறாக, நில முன்னேற்றத்திற்கான பொறுப்பை மேற்கொண்டிருந்த நிலச்சுவான்தார்களின் மறைவின் காரணமாகவே ஜப்பானில் அண்மைக் காலத்தில் நிலச் சீர்திருத்தங்கள் தோற்றுவிக்கப்பட்டதிலிருந்து வேளாண்மை உற்பத்தித் திறனை அதிகரிப்பதில் அரசின் பங்கு பேரளவிற்கு அதிகரித்திருக்கிறது. இருப்பினும் நிலச் சீர்திருத்தங்கள் மிக நல்ல முறையில் நிறைவேற்றப்பட்டாலும்கூட அவைகள் உற்பத்தியை அவசியம் அதிகரிக்கத்தான் வேண்டும் என்பதில்லை. குறைந்த அளவு வருமானம், குடிவாரப் பாதுகாப்பு ஆகியவைகள் எந்த அளவுக்குத் தரப்படுகின்றனவோ அந்த அளவுக்கு அவைகள் மக்களைச் சோம்பேறிகளாகவும் ஆக்கிவிடலாம். தவிர, நிலம் உழைப்புவிகிதம் மிகவும் குறைவாக உள்ள அதாவது சமுதாயத்தின் நிலப்பசியை அடக்குவதற்கேற்ற அளவுக்கு நிலம் இல்லாமல் இருக்கக்கூடிய அமித மக்கள் தொகையைக் கொண்டுள்ளதொரு நாட்டில் வேளாண்மையை முன்னேற்றுவிப்பதற்கான இறுதியான வழியாக நிலச் சீர்திருத்தங்கள் கருதப்படக் கூடாது. அண்மையில் யூகோஸ்லேவியாவில் நிலத்தைப் பிரித்தது உற்பத்தித் திறனை அதிகரிப்பதற்கு உதவி செய்யவில்லை. அதன் காரணமாகக் கூட்டாண்மை பயன்படுத்தப்பட்டது. ஆனால் சிறிய அளவில் இருந்த நிலத்தைச் சார்ந்து அதிகமான அளவு மக்கள் இருந்த

காரணத்தால் கூட்டாண்மையும் தோல்வியடைந்தது. பேராசிரியர் கோஸ்லிட்ஸ் (Prof. Hoselitz) குறிப்பிடுவதுபோலப் பயன்படுத்தப்படும் அலகாகப் பண்ணையின் அளவு மாருமல் இருக்கும்போது, நிலத்தின் உரிமைமாற்றம் மட்டும் அதிகரித்த உற்பத்திக்கு வகைசெய்யமுடியாது. நிலத்தின் உரிமையை மட்டும் வைத்துக்கொண்டு உழவுத் தொழிலை மேற்கொள்ளாமலிருக்கும் நபர்களிடமிருந்து உழவுத் தொழிலை மேற்கொள்பவருக்கே நிலத்தின் உரிமை பேரளவில் மாற்றப்படலாம். ஆனுல் பயன்படுத்தப்படும் நிலத்தின் அலகு மாருமல் சிறிய அளவிலேயே இருக்குமானுல் அதாவது வேளாண்மை அமைப்பு மாருல் பழைய நிலையிலேயே இருக்குமானுல், இத்தகைய உரிமை மாற்றத்தினுல் எந்த விதமான அதிகமான நன்மையையும் எதிர்பார்க்கமுடியாது. இதை வேருெரு விதமாகச் சொன்னுல், நிலச் சீர்த்திருத்தங்கள் தொழில் நுண்ணியலில் மாற்றங்களை ஏற்படுத்துகின்றனவா இல்லையா என்பதைப் பொறுத்துத்தான் நிலச் சீர்த்திருத்தங்களிலிருந்து பெறப்படும் உற்பதித் திறன் அமைந்திருக்கும். நிலச் சீர்திருத்தங்கள் குடிவாரப் பாதுகாப்பை மட்டும்தான் நிலத்தை உழுபவர்களுக்குத் தருகின்றன என்பதையும் மறந்துவிடக்கூடாது. நிலத்தின் உரிமையாளர்களின் தொழில் முயற்சி எந்தளவுக்கு நன்மைகளைத் தரத்தக்கதோ அந்த அளவுக்கு வேளாண்மை உற்பத்திக்குப் பங்காற்றக்கூடிய வகையில் பணிகளையும் முயற்சிகளையும் தரக்கூடிய நிலமற்ற தொழிலாளர்கள் பேரளவில் இருக்கிருர்கள். அவர்களின் சிக்கலை இந் நிலச் சீர்திருத்தங்கள் தீர்த்துவைப்பதில்லை, ஆதலால் வேளாண்மையில் அதிகமான அளவுக்குக் குறைந்த வேலைநிலை இருக்கக்கூடிய இந்தியா போன்ற தொரு நாட்டில் நிலச் சீர்திருத்தம் என்பது மிகவும் குறைவான பலனையே தரத்தக்கதாக இருக்கும் என்பதையே இது குறிப்பிடுகிறது.

இன்னெரு முக்கியமான உண்மையும் உணரப்பட வேண்டும். அதாவது, நிலச் சீர்த்திருத்தங்கள் புகுத்தப்பட்ட பிறகு அச் சீர்திருத்தங்களை விரைவாக · நிறைவேற்றுவதில் அரசு எந்த அளவுக்கு விறுவிறுப்பற்றதாக இருக்கிறதோ, எந்த அளவுக்கு முயற்சி மிக்க நிலச் சொந்தக்காரர்களின் பணியை அரசு தராதிருக்கிறதோ அந்த அளவுக்கு அச் சீர்திருத்தங்கள் உற்பத்தி அதிகரிப்பைத் தோற்றுவிக்க மாட்டா என்பதோடு ஏற்கெனவே நடைமுறையில் இருக்கக்கூடிய (நடை முறையில் இருக்கக்கூடிய முறைகள் குறையுள்ளவைகளாக இருந்தாலும் கூட) முறைகளைப் பேரளவில் பாதிக்கக்கூடிய காரணத்தால் உற்பத்தி முயற்சியை அதிகமான அளவில் குறைந்துவிடலாம். பல நாடுகளில்

பொருளாதார முன்னேற்றத்தை மனதில் கொள்ளாமல் சமுதாயச் சீர்திருத்தங்களைப் பெறுவதற்காகவே நிலச் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. அரசியல் காரணங்களால், அரசுகளால் நிறைவேற்றுவதற்கியலாத திட்டங்களையெல்லாம் அரசு சட்டமாக்கிவிடலாம். இந்தியாவின் குடிவாரச் சட்டத்தைக் (Tenancy Act of India) இங்குக் குறிப்பிடலாம். வார அளவுகளை ஒழுங்குபடுத்துவதிலும். குத்தகைக்கு உழுபவர்களை வெளியேற்றுவதைத் தடைசெய்வதிலும் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் எல்லாம் வெற்றியைத் தரத்தக்கவைகளாக இல்லை. இதற்கான காரணங்கள் இரண்டு குறிப்பிடப்படுகின்றன. முதலாது: இச் சீர்திருத்தங்களை நிறைவேற்றுவதற்குப் பொறுப்பாக உள்ளவர்களுக்கு இவற்றின்மீது நம்பிக்கை இல்லாதிருந்தால் அவர்கள் அரைமனதுடன் செயல்பட்டார்கள். இரண்டாது: சட்டங்களில் ஏராளமான ஓட்டைகள் இருந்தன. இத்தகைய ஓட்டைகள் யாவும் நிலச்சுவான்தார்களால் அவர்களுக்கு நன்மை தரத்தக்க முறைகளில் பயன்படுத்திக்கொள்ளப்பட்டன. இதற்கு மாறாக, அரைகுறை இயல்புடைய நிலச் சீர்திருத்தங்களாக இருத்தல், நிலச் சீர்திருத்தங்களை நிறைவேற்ற வேண்டும் என்ற விருப்பத்திற்கும்,அதற்கான சட்டங்களை இயற்றுவதற்கும் இடையே காலவெளி அதிகமாக இருத்தல் ஆகியவைகள் கிராமங்களில் சமுதாயக் குழப்பங்களையே அதிகமான அளவில் தோற்றுவித்திருக்கின்றன. நில உச்சவரம்பை நிருணயித்தல் மற்றும் இவை போன்ற தடைகளை விதித்தல் ஆகியவைகள், நல்ல மனதுடைய பெருநிலக் கிழார்களின் வேளாண்மையைப் பெருக்க வேண்டும் மென்ற ஆர்வம் தளர்ந்துவிடுவதற்கு வழிவகுத்துவிட்டன. உண்மையாகப் பார்த்தால் இத்தகைய நபர்களின் ஊக்கத்தையும் தொழில் முயற்சியையும் பொறுத்துத்தான் வேளாண்மைத்துறை முன்னேற்றத்தின் பெரும்பகுதி அமைந்திருக்கிறது. எனவே, நிலச் சீர்திருத்த வழிகளைக் கையாளும் போது உண்மையிலேயே வேளாண்மைத்துறை முன்னேற்றத்தில் அக்கறை கொண்டுள்ள நிலக் கிழார்களின் ஊக்கத்தையும் ஆர்வத்தையும் அவைகள் கெடுக்காமலிருக்கின்றனவா என்பதையும் கருத்தில் கொள்ளவேண்டியது மிகவும் முக்கியமானதாகும். சமுதாய நன்மைக்கு எது நல்லது எனத் தென்படுகிறதோ அது பொருளாதார முன்னேற்றத்திற்கு மிகச் சிறந்ததாக இல்லாமலும் இருக்கலாம். பெருநிலக் குடியானவர்களை உச்ச அளவில் மேற்கொள்ளுமாறு செய்யத்தக்க நேரடியான வழிகளைக் கையாளுவது முடியாமல் போனால், குறைந்த அளவு எதிர்மறை விளைவுகளைத் தவிர்க்கத்தக்கவாறான வழிகளைக் கையாள வேண்டியது மிகவும் அவசியமாகும். எதிர்மறை விளைவுகளைக்

குறைப்பதால் இருக்கக்கூடிய சிறிதளவு முயற்சிகளும் கெட்டுப் போவதைத் தவிர்க்கலாம். தவிர இன்னொரு முக்கியமான உண்மையும் கருத்தில் கொள்ளப்பட வேண்டும். அதாவது கிராமங்களின் பெரும்பகுதிச் சேமிப்புகள் பெரும்நிலச்சுவான் தார்களிடமிருந்துதான் வருகின்றன. அவர்களை அழித்துவிடுதல் என்பது சேமிப்பிற்கான முக்கியமானதொரு வழி மூடிவிடப் படுகிறது என்பதேயாகும். இந்தியாவில் உத்தரப் பிரதேசத்தில் அண்மையில் ஒரு ஆராய்ச்சி நடத்தப்பட்டது. அதிக வருமான முடையவர்களால் வைத்திருக்கப்படும் பெரிய அளவிலான நிலங் களிலிருந்தும் வட்டார வளர்ச்சிப் பகுதிகளிலிருந்தும்தான் (Blockareas) மூலதனத் திரட்சி அதிகமான அளவிலிருந்தது என்பதை அந்த ஆராய்ச்சி தெளிவாகக் காட்டுகிறது.

பொருளாதார அடிப்படையில் பின்தங்கிய நிலைகளில் உள்ள நாடுகளில் தொழில்களைப் பரவலாக்குவதற்கு ஏற்றுக்கொள்ளத் தக்கதொரு வேண்டுகோளாக இது அமைந்திருக்கிறது. தொழில் வளர்ச்சியில் ஏற்கெனவே முன்னணி நிலையிலிருக்கும் பகுதி களிலேயே பெரும் தொழில் திட்டங்களைச் செறிவாக அதிகரிப் பதற்குப் பதிலாக, நகரங்களாக முன்னேற்றம் அடைவதற்கான இயற்கை நன்மைகளைக் கொண்டுள்ள கிராமப் பகுதிகளில் சிறு தொழில்களைத் தொடங்குவதற்கான திட்டங்களைத் தீட்டுவது மிகவும் அறிவுள்ள கொள்கையாக இருக்கும். பல பகுதி களுக்கிடையேயான வேறுபாடுகள் பேரவில் காணப்படத்தக்க தாகவும், குறைந்த வருமானமுடைய மற்றப் பல நாடுகளைக் காட்டிலும் செய்தித் தொடர்பு வசதிகள் நல்ல முறையில் வளர்ச்சி பெற்றுள்ளதாகவும் உள்ள இந்தியா போன்ற பெரியதொரு நாட்டில் இது மிகவும் அவசியமானது என்பதோடு மிகவும் முடியத் தக்கதாகவும் இருக்கிறது. புதிய தொழில்களைப் புணர்வாழ்வு அளிக்கப்படும் வேளாண்மையுடன் இணைத்துவிடுவதுதான் இங்கு மேற்கொள்ளப்பட வேண்டிய மிகவும் உயர்ந்த கொள்கையாகும் சர்க்கரைச் சுத்திகரிப்பு, தகர டப்பாக்களில் அடைக்கப்படும் உணவின் உற்பத்தி, சோப்பு உற்பத்தி, தோல் பண்டங்கள் உற்பத்தி, தோல் பண்டங்கள், அலங்காரப் பொருள்கள் மற்றும் இவை போன்ற பலவிதமான வேளாண்மைப் பண்டங்களை முறைப்படுத்துவதற்கான வாய்ப்புகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிலும் அதிகமான அளவில் இருக்கின்றன. நடப்பில் இருக்கும் காரணி அளிப்பு நிலைகள் மிகவும் அதிகமான நன்மைகளைத் தரத்தக்க வகையில் மூலவளங்களைப் பயன்படுத்து தலும், உள்ளூர்த் தேவைகளுக்கேற்பத் தொழில் நுண்ணியலை மாற்றி அமைத்துக்கொள்வதும் அத்தகைய தொழில்களில் மிகவும்

கடினமானவைகள் அல்ல. இத்தகைய திட்டம் ஒன்றை இந்தியப் பேரரசு அண்மையில் தொடங்கிவைத்திருக்கிறது. கிராமப் பகுதிகளில் சிறு தொழில்களின் செறிவான முன்னேற்றத்திற்கான திட்டம் ஒன்றைத் தீட்டும் நோக்கத்துடன் 1962ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் கிராமத் தொழில் திட்டக் குழு (Rural Industries Planning Committee) அமைக்கப்பட்டது. கிராமத் தொழில்கள் உள்பட பலவகைப்பட்ட சிறு தொழில்களின் முன்னேற்றத்தை, குறிப்பாக வேளாண்மையை அடிப்படையாகக் கொண்டு உற்பத்தி செய்யப்படும் தொழில்களின் முன்னேற்றத்தை இக் குழுவினால் தீட்டப்படும் திட்டங்கள் குறிப்பிட்டன. குறிப்பிட்ட நிலப்பகுதிகளின் தேவைகள், மூலவளங்கள், வாய்ப்புகள் ஆகியவைகளின் அடிப்படையின் உள்ளூர்ப் பகுதியிலேயே கிடைக்கத்தக்க பண்டங்கள், திறமை ஆகிய மூல வளங்களை அல்லது உள்ளூர்ப் பகுதிகளில் மிகவும் குறுகிய காலத்திற்குள்ளாக உற்பத்தி செய்யப் படத்தக்க பண்டங்கள், திறமை ஆகிய மூலவளங்களைக் கருத்தில் கொண்டு தொழில்கள் மிகவும் கவனமாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. இருப்பினும் சுற்றுப்புறங்களின் வேளாண்மை வளர்ச்சிக்கு நகர்ப் புறமாதல் உதவி செய்யும் என்ற கருத்து சரியானதாக இருந்தால். தொழில்கள் தொடங்கப்படும் இடங்களில் நகர்ப்பகுதிகளை அமைக்கவேண்டிய சிறப்பும் நன்கு கருத்தில் கொள்ளப்பட வேண்டும். நிதிப் பதிலாண்மைகள், போக்குவரத்து வசதிகள் ஆகியவைகளின் முன்னேற்றம், பண்டங்களை அங்காடிகளில் விற்பதற்கான வசதிகளைச் செய்துகொடுத்தல் தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்புகளைச் செய்துகொடுத்தல் ஆகியவைகளும் திட்டத்தின் பகுதிகளாக அமையவேண்டும். இத்தகைய திட்டங்களுக்குத் தேவைப்படும் மூலதனத் வேவைகள் மிகவும் குறைவான அளவில இருக்கும் என்பதாலும், அவைகளுக்கு அதிகமான அளவில் அந்நியச் செலாவணி தேவைப்படாது என்பதாலும் இப்போது இந்தியாவில் உள்ள நிலைகளில் கிராமப் பகுதிகளில் இத்தகைய தொழில்களைத் தொடங்குதல் நன்மையைத் தரத்தக்கதாக இருக்கும் இவைகள் நீங்கலாக, சிறிய தொழில்களைத் தொடங்குதல் என்பதோடு நகர்ப்புறமாதல் என்பதையும் உட்கொண்டிருக்கக் கூடிய விரிவான திட்டத்தை நிறைவேற்றுதல். அது பருவக்கால வேலையில்லாச் சிக்கலைக் குறைப்பதற்கும், புதிய பண்டங்களின் உற்பத்தியைத் தோற்றுவிப்பதற்கும் கிராமப் பகுதிகளின் வருமான நிலைகளை உயர்த்துவதற்கும், கிராமப் பகுதித் தொழிலாளர்களின் திறமை, தொழில் முயற்சி, அறிவுக் கூர்மை ஆகியவைகளை அதிகரிப்பதற்கும், பருப்பொருள் சார்ந்த நன்மைகளின்மீதும் முன்னேற்றத்தின்மீதும் அவர்களுக்கு ஓர் ஆர்வத்தைத் தூண்டுவதற்கும் வகைசெய்யும்

இத்தகைய முறையான 'மொத்த மூலத்தொழில் வளர்ச்சி' ('Gross roots industrialisation') பேரளவிலான தொழில் வளர்ச்சிக்கு வழி வகுத்துக் கொடுக்கும்.

இறுதிப் பகுத்தாய்வின் அடிப்படையில் பார்த்தால், குறைந்த வளர்ச்சியுடைய பெரியதொரு நாடாகிய இந்தியா போன்ற நாட்டில் உள்ள வேளாண்மைச் சிக்கல் முக்கியமாக மில்லியன் கணக்கல் உள்ள மக்களை இடம் பெயரச்செய்வதென்பதாகவே காணப்படுகிறது. ஒருபுறத்தில் பார்க்கும்போது, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிலும் பேரளவில் காணப்படும் குறைந்த வேலையுள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கை இந் நாடுகளில் மறைந்து கிடக்கும் சொத்து போலக் காணப்படுகிறது. இத்தகைய செழிப்பை ஒன்றுதிரட்டுவதையும், பொருளாதார வளர்ச்சிக்காக எந்த அளவுக்கு அதிகமான நன்மையைத் தர முடியுமோ அந்த அளவுக்கு இவற்றைப் பயன்படுத்துதையும் பொறுத்துத்தான் பொருளாதார வளர்ச்சி அமைகின்றது. மூலதனம் என்ற வடிவத்திலான உடன் பயன்படுத்தத்தக்க மூலவளங்களின் பற்றுக்குறைதான் குறைந்த வேலைநிலைக்கானதொரு காரணமாகப் பெரும்பாலும் சுட்டிக்காட்டப்படுகிறது. ஆனால் இந் நூலில் ஏற்கனவே குறிப்பிட்டபடி எந்த விதமான அதிகப்படியான மூலதனத்தின் உதவியும் இல்லாமலேயே மனித சக்தியைப் பயன்படுத்துவதற்கான வாய்ப்புகள் பேரளவில் இருப்பதானது இக் கருத்தைப் பலவீனப்படுத்துகின்றது. பொருளாதார முன்னேற்றத்திற்கான ஆர்வம் பெரிய நிலக்கிழார்களிடம் மட்டுமல்லாமல் எண்ணிறந்த தொழிலாளர்களிடமும் தோன்ற வேண்டும். மிக நீண்ட காலமாகவே ஏழ்மையில் இருந்து, நலமின்மை, மற்றவர்களால் வளம் பறித்துக்கொள்ளப்படுதல் ஆகியவைகள் யாவும் கிராமப் பகுதி மக்களிடையே சோர்வு மனப்பான்மைக்கும், விழிப்புணர்ச்சி இன்மைக்கும் காரணமாக இருக்கலாம். ஆனால் வாழ்க்கைக்கு எதிர்மறையிலான இத்தகைய நோக்குகள் மாற்றமடைந்தால் ஒழிய, பொருளாதார வளர்ச்சி என்பது இயலக்கூடியதன்று. கிராமங்களில் இருப்போர் அவர்களின் முன்னோர்களால் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்ட பழைய சாதனங்களையும், உற்பத்தி முறைகளையும் இன்னும் பயன்படுத்திவருகிறார்கள். இவர்களிடையேயுள்ள முயற்சியின்மையையும், ஆர்வமின்மையையும் இது தெளிவாகக் காட்டுகிறது. பயன்படுத்தப்படும் சாதனங்களோடு அதிகப்படியாகச் சேர்க்கப்படுவது எண்ணிக்கையின் அடிப்படையில் மட்டுமல்லாமல் தன்மையின் அடிப்படையிலும் கணக்கிடக்க வேண்டும் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஏற்கெனவே நடைமுறையில்

இருக்கக் கூடியதைப் போன்ற இன்னேர் ஏர் அல்லது கலப்பை என்ற வடிவத்தில் முதலீடு இருக்குமானால், அத்தகைய முதலீடு மொத்த உற்பத்திக்கு மிகவும் குறைவான அளவிலேயே அதன் பங்கை அளிக்கமுடியும். ஆனால் அதே தொகையானது, நல்ல முறையில் அமைக்கப்பட்டதும், கையாளுவதற்கு எளிதானதும், பயன்படுத்துவதில் மிகவும் திறனுள்ளதும் ஆக உள்ள புதிய வகையான சாதனத்தை அமைப்பதில் பயன்படுத்தப்படுமானால், அது அதிகப்படியான மூலதனம் என்பதைக் குறிப்பிடுவது மட்டுமல்லாமல் உற்பத்தியின்மீது அதிகமான நன்மை தரும் விளைவுகளையுடைய அதிகப்படியான மூலதனம் என்பதையும் குறிப்பிடத் தக்கதாக அமையும். தனிப்பட்ட உழவர்களின் திறமையையும், வருமானம் பெறும் தகுதியையும் அதிகரிப்பதில் உதவக்கூடிய மாற்றங்கள் இத்தகைய சிறுசிறு மாற்றங்களே. முன்னேற்றம் அடையவேண்டும் என்ற பேரார்வம் இல்லாத மக்களைக் கொண்டுள்ள சமுதாயத்தில் இத்தகைய முன்னேற்றங்கள் யாவும் எதிர்பார்க்கமுடியாதவைகளாகும்.

# 11. அரசின் பங்கு

## (The Role of Government)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியில் இரு முக்கியமான தெளிவான இயல்புகள் அண்மைக் காலத்தில் காணப்படுகின்றன. முதலாவது: பொருளாதார வளர்ச்சியைத் தொடங்குவதிலும், வளர்ப்பதிலும் அரசாங்கம் மென்மேலும் அதிகரித்துவரும் பங்கை வகிக்கிறது. இரண்டாவது: உலகிலுள்ள ஏறத்தாழ எல்லாக் குறைந்த வளர்ச்சியுள்ள நாடுகளிலும் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்காகத் திட்டமிட்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. இப் போக்குகள் இயல்பாகவே கீழ்க்கண்ட வினுக்களைத் தோற்றுவிக்கின்றன. பொருளாதார நடவடிக்கைகளில் அரசாங்கம் புகுவதற்கும், அரசாங்கத்தின் நடவடிக்கைகளைச் சரியெனக் கருதுவதற்குமான சூழ்நிலைகள் யாவை? முன்னேற்றத்திற்கான திட்டமிடுதல் ஏன் அவசியமாகியது? பொருளாதார முன்னேற்றத்திலும் பொருளாதாரத் திட்டமிடுதலிலும் அரசாங்கத்தின் அதிக அளவிலான ஆர்வம் தற்காலத்தில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மிக விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கு எந்த அளவில் உதவி செய்திருக்கின்றன? மேற்கண்ட வினுக்கள் கேட்கப்பட்டிருக்கும் வரிசைப்படி அவ் வினுக்களுக்குரிய விடைகளைத் தருவதற்கு இந்த அத்தியாயத்திலும் அடுத்துவரும் அத்தியாயங்களிலும் முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன.

### அரசாங்கத் தலையீட்டின் இயல்பு
### (The Nature of Government Intervention)

வளர்ச்சி பெற்ற நாடுகள், பிற குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஆகியஇருவகை நாடுகளிலுமே பொருளாதாரத்துறையில்

அரசின் நடவடிக்கை அதிகரித்திருக்கிறது. உற்பத்திச் சாதனங்கள் யாவுமே அரசாங்கத்தின் உடைமைகளாக இருக்கும் சோசலிசநாடுகளில் நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளில் அரசாங்கத்தின் பங்கு ஏறத்தாழ முழு அளவில் இருக்கிறது. ஆனால், முன்னேற்ற மடைந்திருக்கும் தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரங்களிலும்கூட, ஏதாவது ஒரு நிலையில் அந் நாடுகளின் தொழில் நுண்ணியல் அடிப்படைகளையும் விரிவாக்குவதற்கான முயற்சிகளை அந் நாடுகளின் அரசுகள் வலிந்து மேற்கொண்டிருந்தன. தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரத்திற்குத் தலை சிறந்த எடுத்துக்காட்டாக இன்று ஐக்கிய அமெரிக்க நாடு விளங்குகிறது. அங்கு மொத்த விளைவில் 8–ல் 7 பங்கு தனியார் நிறுவனங்களால் உற்பத்தி செய்யப்படுகிறது. நாட்டு வருமானத்தின் பெரும்பகுதி தனி நபர்களால் எந்த விதமான கட்டுப்பாடுகளும் இல்லாத வகையில் செலவிடப்படுகிறது. பொருளாதார முடிவுகளை மேற்கொள்வதிலும், தொழில்களைத் தேர்ந்தெடுப்பதிலும் அதிக அளவுக்குத் தன்னிச்சையாக நடக்கும் நிலைமை நிலவுகிறது. எல்லா விதமான சொத்துகளிலும் பெரும்பகுதி தனிநபர்களின் தனி உடைமைகளாக இருக்கின்றன. தொழிலாளர்கள் அதிக அளவு தன்னிச்சையுடன் செயல்படும் நிலையும் இருக்கிறது. இவ்வாறு இருப்பினும்கூட உறுதித்தன்மையை நிலைநாட்டும் நோக்கத்திற்காகப் பொருளாதார வாழ்க்கையில் அரசின் தலையீடு அவசியமாகியிருக்கிறது. தடையற்ற அங்காடி இயந்திர அமைப்பின் மூலம் சமுதாயச் சமநிலையும், பொருளாதாரச் சமநிலையும் கடந்த காலத்தில் பெறப்பட்டன என்றும், ஆனால், அத்தகைய சமநிலைகள் இன்று சந்தையில் ஒன்றுதிரட்டப்பட்ட பொது நடவடிக்கை, தனியார் நடவடிக்கை ஆகியவற்றின் இணைக்கப்பட்ட செயல்களின் மூலமாகப் பெறப்படுகின்றன என்றும் ஸ்டீனர் (Steiner) குறிப்பிடுகிறார். நாட்டில் அதிகமான பொருளாதார நடவடிக்கைகளை உள்ளடக்கிய பொருளாதார ஒழுக்கத்தைப் பற்றிய விதிகளை ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசு அமைத்திருக்கிறது. அமெரிக்க அரசு அதன் உடைமைகளையும், உற்பத்தி வசதிகளுக்கான செயல்களையும் அதிகரித்திருக்கிறது. அதோடு, வணிக நிர்வாகத்தின் அளவையும் அதிகரித்திருக்கிறது. இவை தவிர, விலைக்கட்டுப்பாடுகளை நேரடியாகவும் மறைமுகமாகவும் கொண்டுவருதல், பொருளாதார அமைப்பில் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றைப் பகிர்ந்தளிப்பதை நிர்ணயம் செய்தல், அரசாங்கத்தின் பணவாக்கக் கொள்கை அரசிறைக் கொள்கை, கடன் கொள்கை ஆகியவற்றின் மூலமாக நாட்டின் பொருளாதார நடவடிக்கையை இயக்குதல் என்பன போன்ற பலவற்றிலும் அரசாங்கம அதிக அளவில் ஆர்வம் காட்டு

கிறது. பொருளாதார வாழ்க்கையில் அரசின் அதிகரித்த ஆர்வமானது வரவுசெலவுத் திட்டத்தின் வாயிலாக வழிப்படுத்தப்படும் நாட்டு வருமானப் பகுதியின் அளவை அதிகரித்திருக்கிறது.

ஆனல், பொதுவாகக் குறிப்பிடவேண்டுமென்றல், முன்னேற்ற அடைந்துள்ள தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரங்களில் அரசின் நடவடிக்கை கட்டுப்படுத்தும் இயல்பைப் (Restrictive Nature) பெற்றிருந்தபோது இன்றைய குறைந்த வருமானமுள்ள நாடுகளில் அரசாங்க நடவடிக்கைகள் பெரும்பாலும் உதவி செய்யும் இயல்புடையனவாக (Assistive Nature) இருக்கின்றன என்று குறிப்பிடலாம். பொருளாதார நிகழ்ச்சிகளில் அரசாங்கத்தின் இயக்க விளைவு மூன்று வழிகளில் குறிப்பிடப்படுகிறது.

(1) நாட்டு வருமானத்தின்மீது அல்லது மனித சக்தியைப் போன்ற மூலவளங்களின்மீது பொதுத் துறையின் உரிமைக் கோரிக்கை.

(2) அரசாங்க ஊழியர்கள் எல்லோருக்கும் கூலி கொடுத்தல் என்ற வடிவத்திலும், பொது வணிக நிறுவனங்களின் மூலமாகப் பெறப்படும் ஆதாயம் என்ற வடித்திலும் பொதுத் துறையால் கொடுக்கப்படும் நாட்டு வருமானத்தின் பங்கும், வரிகளின் மூலமாகவும் கடன் வாங்குவதன் மூலவாகவும் அரசாங்கத்தால் கவர்ந்துகொள்ளப்படும் நாட்டு வருமானத்தின் பங்கும்.

(3) நாட்டு வருமானத்தைச் செலவழிப்பதில் பொதுத் துறையின் பங்கு.

பொருளாதார வாழ்வில் அரசின் தராதரமான முக்கியத்தைக் காட்டக்கூடிய நல்ல சுட்டிக்காட்டும் கருவிகளாக இவை இருக்கின்றன. இவ் வினங்களில் பெரும்பாலானவற்றைப் பற்றிய புள்ளி விவரங்கள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மிகவும் குறைவான அளவிலேயே கிடைக்கின்றன. எனவே, பொருளாதார நடவடிக்கைகளில் அரசு மேற்கொள்ளும் இயக்க விளைவுகளின் பருமனை மதிப்பிடுவதில் இந்த ஒப்பளவுக் கருவி அதிக மதிப்பைப் பெற்றிருக்கவில்லை இருப்பினும், கிழக்காசிய நாடுகள் சிலவற்றில் பொது நிர்வாகம், தற்காப்பு ஆகியவற்றிலிருந்து பெறப்படும் வருமானத்தின் போக்குகளைக் காட்டும் புள்ளிவிவரங்கள் கடந்த சில ஆண்டுகளில் அரசின் பொருளாதார நடவடிக்கைகளில் தோன்றியுள்ள அதிகரிப்பைச் சுட்டிக் காட்டுகின்றன. நிர்வாகத்திலிருந்தும் தற்காப்பிலிருந்தும் வந்த வருமானத்தின் அளவு பர்மாவில் 1950 ல் மொத்த வருமானத்தில்

7·6% அளவாக இருந்தது. இது 1958-ல் 1 ‘6%ஆக அதிகரித்தது. இத்தகைய அதிகரிப்பானது கம்போடியாவில் 1951-ல் 6·5%-லிருந்து 1957-ல் 12·7%ஆக இருந்தது. இதே காலத்தில் சிலோனில் இவ் விழுக்காடு 8·1%-லிருந்து 11·6%-க்கு அதிகரித்தது. 1950, 1958 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட ஆண்டுகளில் இவ் விழுக்காடு இந்தியாவில் 4·5-லிருந்து 5·9-க்கும் பாக்கிஸ்தானில் 4·8-லிருந்து 7·0-க்கும், பிலிப்பைன்சில் 6·5-லிருந்து 7·9-க்கும் தாய்லாந்தில் 4·4-லிருந்து 5·4-க்கும் அதிகரித்தது. அரசு நிருவாகம், அரசுத்துறை நிறுவனங்கள் ஆகியவைகளிலிருந்து பெறப்பட்ட நிகர வருவாயின் விழுக்காட்டு அளவு இந்தியாவில் 1950–51-ல் 7·5-லிருந்து 1960–61-ல் 10·6ஆகவும் 1968–69-ல் 13·6 ஆகவும் அதிகரித்திருக்கிறது.

அரசின் செலவில் தோன்றியுள்ள இத்தகைய அதிக அளவிலான அதிகரிப்புக்கு, நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் அரசுகள் மென்மேலும் அதிக அளவிலான ஆர்வம் காட்டியது காரணமாக அமைந்தது என்று தெரிகிறது என்ற குறிப்பு மிகவும் முக்கியமனாதாகும். ஆசியாவின் ஒரு சில நாடுகளில் முன்னேற்றத் திட்டங்களுக்காக மிகவும் அதிகரித்துவரும் பொதுச் செலவைப் பற்றியதொரு மதிப்புரையானது இப் போக்கின் மூன்று முக்கிய பகுதிகளைத் தெளிவாகக் காட்டுகிறது. முதலாவது: நாட்டு வருமனத்தின் விகித அளவில் அரசங்காத்தின் முதலீட்டுச் செலவு அதிகரித்திருக்கிறது. இரண்டாவகது: மொத்த முதலீட்டில் பொது முதலீட்டின் பங்கு அதிகரித்திருக்கிறது. அதாவது, தனியார் முதலீட்டிற்கான பொதுமுதலீட்டின் விகிதம் தொடர்ச்சியாக அதிகரித்துக்கொண்டுவருகிறது. மூன்ருவது: அரசின் மொத்தச் செலவு விகிதம் என்ற அளவில் அரசின் முதலீட்டுச் செலவு விகிதமும் அதிகரித்திருக்கிறது. சீனாவில் 1950-ல் GNP-ல் 2·4%-லிருந்து 1958-ல் 17·1% என்று மிக அதிக அளவில் உயர்வு காணப்படுகிறது. இந்தியாவில்2·7%-7·1%-க்கும் உறுதியான அதிகாரிப்பு தோன்றியிருக்கிறது. இவை இரண்டையும் நீக்கிப் பார்த்தால் மற்ற நாடுகளின் விகிதங்கள் பேரளவிலான ஏற்றத் தாழ்வுகளைப் பெற்றிருப்பதைக் காட்டுகின்றன. இவ் வாண்டுகளில் இருந்த அளவுகளின் சராசரியைப் பார்த்தால், GNP-க்கு அரசாங்கச் செலவின் விழுக்காடு ஜப்பானில்10%ஆவும்பிலிப்பைன்சில் 2.7% ஆகவும், சிலோனில் 7%ஆகவும், பர்மாவில் 9%ஆகவும் காணப்பட்டது. அரசின் அமைப்பும் வடிவமும் மற்ற நாடுகளிலிருப்பதற்கு முற்றிலும் வேறுபட்டதாக இருக்கக்கூடிய சீனாவை நீக்கிப் பார்த்தால், நாட்டில் மிக விரைவான பொருளாதார முன்னேற்றத்தைக் கொண்டுவரும் நோக்குடன் பொது

முதலீட்டைக்கொண்டு வலிய அதிகரித்த ஒரே நாடு இந்தியா மட்டும்தான் என்பதைக் காணமுடிகிறது. இந்தியாவில் மைய அரசு, மாநில அரசு ஆகியவற்றின் வரவு செலவுத்திட்ட மூல வளங்களிலிருந்து பெறப்பட்ட (நிலையான விலைகளிலான) நிகர மூலதன ஆக்கமானது 1950, 1957 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப் பட்ட காலத்தில் மூன்று மடங்காக இருந்தது. முதல் திட்டத்தில் வளர்ச்சித் திட்டங்களின்மீதான பொது முதலீடு ரூ·15.6பில்லியன் அளவுக்கு இருந்தது. இஃது இரண்டாம் திட்டக்காலத்தில் 36·5பில்லியனாக அதிகரித்தது. இத்தகைய அதிகரிப்பானது நாட்டு வருமானத்தில் ஏறத்தாழ 3%அளவிலிருந்து 6%-க்குச் சற்றே குறை வான அளவைக் குறித்தது. மூன்றும் திட்டத்தில் பொது முதலீடு கள் ரூ.63 பில்லியனாக இருக்குமென மதிப்பிடப்பட்டுள்ளது,

## அரசுப் பங்கு அதிகரிப்பின் காரணங்கள் (Causes for Expansion of Government's Role)

இத்தகைய போக்கிற்குப் பல காரணங்கள் உதவி செய்திருக் கின்றன. நீண்ட காலமாகத் தடையற்ற தன் முயற்சிப் பொருளா தாரங்களில் வலிமை பெற்றவைகளாக இருந்த நாடுகளிலும்கூடத் தலையிடாக் கொள்கை இருந்துவந்ததென்ற அடிப்படை எடுகோள் உண்மை நிலவரத்தின்படி பார்த்தால் சரியான முறையில் நடைமுறையில் கடைப்பிடிக்கப்படவில்லை. அவ் வாறிருந்ததனுல் முதலாளித்துவ முறையிலான தடையற்ற தன் முயற்சிப் பொருளாதார அமைப்பை நடைமுறையில் செயல் படுத்துவதற்காக இக் கொள்கையை மென்மேலும் தளர்த்துவது மிகவும் அவசியமாயிற்று. முற்றுரிமை நிறுவனங்கள் தோன்றும் போக்கு, பொதுமக்கள் எல்லோருக்கும் பயனைத் தரத்தக்க திட்டங்களில் முதலீடுகளை மேற்கொள்வதற்குத் தனியார் தொழில் முயல்வோர்களின் தயக்கமும் விருப்பமின்மையும் இருக்கும் நிலை, பொருளாதாரத்தின் நீண்ட காலச் சிக்கல்களின் மீது கவனமின்மை, உடனடியாகக் கிடைக்கும் ஆதாயத்தின்மீது அதிக அளவில் கவனத்தைச் செலுத்துதல்.பொருளாதாரத்தின் பலதரப்பட்ட துறைகளுக்குமிடையே ஒருங்கிணைக்கப்பட்ட தன்மை இல்லாதிருத்தல் ஆகியவைகள்யாவும் தனியார் தொழில் முயற்சி முறையின் குறைகளாக அமைந்துள்ளன. ஒரு பொருளா தாரக் கொள்கையின் அல்லது முடிவுகளின் இறுதி நிலைச் சமுதாயச் நண்மையும், இறுதிநிலைச் சமுதாயச் செலவும் ஏறத்தாழச் சரிசமமாக இருக்கக்கூடியதொரு நிலையில் அல்லது அத்தகையதொரு கொள்கையின் இறுதிநிலைத்தனியார்நன்மையும், அதன் இறுதிநிலைத் தனியார் செலவும் ஏறத்தாழச் சரிசமமாக இருக்கக்கூடியதொரு நிலையில் உள்ள வேறுபாடுகள் என்ற

வடிவத்திலானதனியார் தொழில் முயற்சியின் இத்தகையகுறைகள் யாவும் காணப்படுகின்றன. இதை இன்னொரு விதத்திலும் குறிப் பிடலாம். குறிப்பிட்ட வழிகளில் அல்லது குறிப்பிட்ட அளவில் மேற்கொள்வகென்றமுதலீடுகளைப் பொறுத்தமட்டிலுமான தனிப் பட்ட. தொழில் முயல்வோர்களின் பொருளாதார முடிவுகள் தனிப்பட்ட முதலீடு செய்வோரின் நோக்கில் அவருக்கு உச்ச அளவு நன்மையைத் தரத்தக்கதாக இருந்தாலும், சமுதாய நன்மையை உச்ச அளவிலாக்க வேண்டுமென்பதில்லை.

முதலாளித்துவப் பொருளாதார அமைப்பில் உள்ளார்ந் திருக்கும் உறுதியற்ற தன்மையைக் கொண்டுவரும் சக்திகளை 1930ஐச் சார்ந்த ஆண்டுகளில் காணப்பட்ட பொருளாதார மந்த நிலைகள் வெளிக்கொணர்ந்தன. முதலாளித்துவ அமைப்பின் உறுதியின்மையை அதிகரிப்பதற்கானதொரு வழியாகத் தனியார் துறை முதலீட்டின் பற்ருக்குறைகளை இழப்பீடு செய்வதற்கான தொரு வழியாக முதலீட்டு நடவடிக்கைகளில் அரசு தலையிட வேண்டிய அவசியத்தின்மீது கவனத்தைத் திருப்பும் வகையில் 1930ஐச் சார்ந்த பத்தாண்டுகளின் பின் பகுதியில் கீன்ஸ் அவர் களின் எழுத்துகள் அமைந்தன. அண்மைக் காலத்தில் தோன்றிய இரண்டாம் உலகப் பெரும் போர், பொருளாதாரத்தை வழி நடத்திச் செலவதிலும், ஒழுங்குபடுத்தி அமைப்பதிலும் அரசு களின்மீது சுமத்தப்பட்ட அதிகமான பங்கு ஆகியவை சூழ்நிலைகள் தோன்றும்போது. திறமையான முறையில் பொருளா தார நடவடிக்கையை அமைப்பதில் அரசின் சக்தியை வெளிக் கொணர்ந்தன. கடந்த பல ஆண்டுகளாக நிர்வாக இயந்திரத்தின் திறமை அதிக அளவுக்கு அதிகரித்திருக்கிறது. அதன் காரணமாக, நூறு ஆண்டுகளுக்கு முன்னுல் எத்தகைய சிக்கல்களைத் தீர்க்க முடியும் என்று கருதப்பட்டதோ அதைக் காட்டிலும் அதிக அளவில் குழப்பம் மிகுந்தவைகளாக உள்ள சிக்கல்களைத் தீர்ப்பதற்குத் தகுதியுள்ளவைகளாகத் தற்கால அரசுகள் இருக் கின்றன. அரசுக்கு என்னென்ன பொறுப்புகள் கொடுக்கப் பட்டிருக்கின்றனவோ அத்தகைய பொறுப்புகள் எல்லாவற்றையும் நிறைவேற்றுவதற்குத் தகுதியானதாக அரசாங்கம் இருக்கிறதா இல்லையா என்பதைப் பொறுத்துத்தான் மக்களாட்சி முறையில் அரசு அதன் நடவடிக்கைகளுக்கான வாய்ப்பை அதிகரிப்பதற்கு அனுமதிக்கப்பட வேண்டும் என்று கான்சன் (Hansan) குறிப் பிட்டிருக்கிறுர். ஆடம்ஸ்மித், மற்றும் தொடக்கக் காலப் பொருளாதாரப் புலவர்கள் காலத்தில் இருந்த அரசுகள் திறமை யற்றவைகளாகவும், தவறுகள் மலிந்தவைகளாகவும் இருந்த காரணத்தால்தான் தலையிடாக் கொள்கையை அவர்கள்

பின்பற்றினர்கள் என்று அவர் கருதுகிறார். ஆனால், இப்போது நிர்வாகத்தின் முறைகள் மிக நல்ல முறையில் முன்னேற்றமடைந்திருக்கின்ற காரணத்தால் பொருளாதாரப் பகுதி, அரசியல் பகுதி ஆகிய இரு வகைப் பகுதிகளிலுமே புதிய புதிய பொறுப்புகளை அதிக நம்பிக்கையுடன் தற்கால அரசுகள் மேற்கொள்கின்றன.

முன்னேற்றமடைந்த பொருளாதாரங்களிலும்கூடப் போர்க் காலத்திலிருப்பதைப் போன்ற பற்றுக்குறைக் காலங்களிலும், போதுமான அளவில் பண்டங்கள் கிடைக்காத காலங்களிலும் அரசின் தலையீடு அவசியமாகியிருக்கிறது. மூலவளங்களின் பற்றுக் குறை குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தீவிரமான இயல்பாக இருக்கிறது. தடையற்ற தன் முயற்சியான இயந்திர அமைப்பில் உள்ளார்ந்திருக்கும் வீணுதலைத் தடுப்பதற்காக அரசாங்க நிர்வாகத்தின் குறைகளும், பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்துவதற்கான முயற்சிகளில் உள்ள குறைகளும் பொறுத்துக்கொள்ளப் படுகின்றன. மூலவளங்கள் ஏராளமாக இருக்கும்போது இத் தகைய வீணுதல்கள் மிகக் குறைவானவைகளாகவே இருக்கும் ஆனால், மூலவளங்கள் பற்றுக்குறையானவைகளாக இருக்கும் போது, இத்தகைய வீணுதல்கள் தடுக்கப்பட வேண்டியது அவசியமாகும். கூட்டு முயற்சி குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் கவர்ச்சியானதாக ஏன் இருக்கிறது என்பதையும், இத்தகைய கூட்டு முயற்சி ஏன் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் முதன் முதலலாகத் தோன்றின என்பதையும் இதுவே விளக்குகிறது. மூலவளங்களின் பற்றுக்குறையும் பலவிதமான சமுதாயத் தடைகளும் பொருளாதாரத் தடைகளும் குறைந்த வருமான நாடுகளில் இயல்பான வளர்ச்சியை இயலாததாக்குகின்றன. எனவே, ஆர்தர் லூயீஸ் குறிப்பிடுவதுபோல, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அரசுப் பதிலாண்மைகளின் மூலம், பொருளாதார நடவடிக்கைகளை மேற்கொள்வது முன்னேற்றமடைந்த நாடுகளில் மேற்கொள்ளப்பட்ட போது இருந்ததைக்காட்டிலும் மிக அவசியமானதாகவும் மிகக் கடினமானதாகவும் இருக்கிறது.

பொருளாதாரப் புரட்சி தோன்றுவதற்கு முன்னரே இந் நாடுகளில் அரசியல் புரட்சி தோன்றிவிட்டது என்ற உண்மையானது மூலதனத் திரட்சிக்கு மற்றுமொரு தடையாக அமைந்திருக்கிறது. தொழில் புரட்சி முடிவடைவதற்கு முன்பாகவே உழைப்பின் பங்கு அதிகரிக்கத் தொடங்கிவிட்டது. சமுதாயச் சமநிலையையும், பொருளாதாரச் சமநிலையையும் கொண்டுவரத்தக்கதாகவும் உற்பத்தி முயற்சிகளில் பொது மக்களின் கூட்டுறவை உறுதி செய்பவைகளாகவும் இருக்கும் வழிகளைக் கையாளுவது முற்றிலும்

சரியானதே. முன்னேற்ற மடைந்த நாடுகளில் பொது நல அரசுக் கொள்கையை அரசு கையாளுவதால், அக் கொள்கை வருமான ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்திருக்கிறது. ஆனால் தொழில் வளர்ச்சி மிக உயர்ந்த நிலையில் இருப்பதாகவும், ஒரு நாட்டு வருமானம் மிக அதிக அளவில் இருப்பதாகவும் உள்ளதொரு நிலையை வளர்ச்சியடைந்த நாடுகள் அடைந்துவிட்ட காரணத்தால் அத்தகைய பொருளாதாரச் சமநிலையைத் தோற்றுவிப்பதற்கான முறைகள் பொருளாதார அமைப்பை மேலும் வலிமைப் படுத்தி அதிக உறுதித் தன்மைக்கும், அதிகமான முயற்சிக்கும் வழி வகுக்கின்றன. ஆனால், மிக விரைவாகத் தொழில் மயமாகிய தொடக்கக் காலத்தில் வருமான ஏற்றத் தாழ்வுகள்தொடர்ந்து இருந்தன. அத்தகைய வருமான ஏற்றத்தாழ்வுகள் இருந்த காலத்தில் கூலிகளின் அளவு மிகக் குறைவாக இருந்ததால் அவை பேரளவிலான தொழில் சேமிப்புகளுக்கு உதவி செய்தன என்பதோடு, மிக விரைவான மூலதனத் திரட்சிக்கும் வகை செய்தன. இதற்கு நேர் மாறாக, இன்றைய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதாரச் சமநிலையைக் கொண்டு வருததற்கு மேற்கொள்ளப்படும் முயற்சிகள் ஏழ்மையைச் சமமாகப் பங்கிட்டுக்கொள்வதற்குத்தான் வகை செய்வதாக இருக்கின்றன. அப்போதுதான் அதிகமான உற்பத்தி முயற்சிகளின் பொருளாதார நோக்கத்தைப் பெறுவதற்கு நல்ல முறையிலான பகிர்வு உதவி செய்யும் என எதிர்பார்க்கப்பட முடியும். எனவே, ஒருபுறத்தில் பொருளாதார முன்னேற்றம், மூலதனத் திரட்சி ஆகியவற்றின்மீதும் மற்றொருபுறம் வருமானம் செல்வம் ஆகியவற்றின்மீதும் நல்ல முறையிலான பகிர்வு ஆகியவற்றின் மீதும் ஆக இரு முனைகளின்மீதும் அரசாங்கம் அதன் கவனத்தைச் செலுத்தினால்தான் இச் சிக்கலைத் தீர்க்கமுடியும்.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதார வளர்ச்சிக்கான சக்திகள் தோற்றுவிக்கப்பட வேண்டும் என்பதோடு அத்தகைய சக்திகள் மிக விரைவவாகத் தோற்றுவிக்கப் படவேண்டும் என்பதும் முக்கியமானதாகும். அரசியல் காரணிகளினாலும் பொருளாதாரக் காரணிகளினாலும் பல காலத்திற்கு இந் நாடுகள் தேக்க நிலையைப் பெற்றிருக்கின்றன, அவற்றின் பொருளாதார நிலைக்கும், அதிக வருமானமுடைய நாடுகளின் பொருளாதார நிலைக்கு மிடையேயான வேறுபாடு மிக விரைவாக அதிகரித்துக்கொண்டு செல்கிறது. வளர்ச்சி பெற்ற நாடுகளில் பெறப்பட்டிருக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கானதொரு காரணமாக அமைந்துள்ள தொழில் நுண்ணியல் முன்னேற்றங்கள் அந் நாடுகளில் முன்னேற்றத்தை அண்மை ஆண்டுகளில் மிக விரை

வானதாக்குகின்றன என்பதே இதற்கான காரணமாகும். இது தவிர மக்கள்பெருக்கக் காரணியினாலும் மிக விரைவாக முன்னேற்றத்தைப் பெறவேண்டும் என்ற உணர்வு தோன்றியுள்ளது. மக்களின் எண்ணிக்கையில் பெருக்கமும், அதிகரித்துவரும் மக்கள் தொகை அழுத்தமும் இன்றைய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இப்போதிருக்கும் வாழ்க்கைத் தரத்தை நிலைநாட்டுவதற்குக்கூட இந் நாடுகள் மிக விரைவான முன்னேற்றத்தைப் பெறவேண்டிய அவசியத்தைத் தோற்றுவித்திருக்கின்றன. பேரளவிலான முதலீடுகள் மிகப் பரவலான முறையில் மேற்கொள்ளப்பட்டால்தான் மக்கள்தொகை இடர்கள் உடைக்கப்பட்டுப் பொருளாதார வளர்ச்சிக்கான போக்கு, தொடங்கிவைக்கப்பட முடியும் என்று பல பொருளாதாரப் புலவர்கள் சுட்டிக் காட்டியுள்ளார்கள். அரசாங்கம் முயற்சிகளை மேற்கொண்டால்தான் அத்தகைய பெரும்தள்ளல் (Big push) முடியத்தக்கதாக இருக்கும். பின்தங்கிய நாடுகள் பலவற்றிலும் இப்போது காணப்படும் நாட்டு வருமானத்தில் 6% அளவிலான மூலதனத் திரட்சியானது 15% அளவுக்கு அல்லது அதற்கும் அதிக அளவுக்கு அதிகரிக்கப்படுதல், தலா நபருக்குக் கிடைக்கும் மூலதனத்தின் அளவு பேரளவிற்கு அதிகரிக்கப்படுதல் ஆகியவை உடனடியாகத் தோற்றுவிக்கப்பட்டால் ஒழிய, ஏழ்மையினாலும் தேக்க நிலையினாலும் உண்டான நச்சுச் சுழலைப் போக்குவதற்கான வழி எதுவும் இல்லை எனலாம். மிக விரைவான தொழில்மயமாதல் என்பதன் மூலமாகவே பொருளாதாரத்திலும் பொது நலத்திலும் எல்லா வகையான முன்னேற்றங்களையும் பெறுவது இயலத்தக்கதாக இருக்கிறது. இது ஒன்றுதான் மூலவளங்கள், எண்ணிக்கைகள் ஆகியவற்றின் கத்தரிகளை (Scissors) மூடுவதற்கான ஒரே வழியாகும்.

சுருங்கக் கூறின், பொருளாதாரத்தில் பின்தங்கிய நிலையில் உள்ள நாடுகளில் இருக்கக்கூடிய தனித்தன்மை வாய்ந்த சூழ்நிலைகளின் காரணமாகப் பொருளாதார முன்னேற்றத்தில் மென்மேலும் அதிக அளவுக்கு அரசு பங்கேற்றுக்கொள்வது சரியானதென ஏற்றுக்கொள்ளப்படுகிறது. நீண்ட காலத் தேக்க நிலை, சமுதாயக் கட்டுப்பாடுகள், மூலதன மூலவளங்கள் இன்மை, மக்களிடையே முயற்சியின்மை, மக்களிடையே தொழில் முயற்சியின்மை, மக்கள்தொகை அழுத்தம், சமுதாயப் பின்னமைப்புகளிலும் பொருளாதாரப் பின்னமைப்புகளிலும் மேற்கொள்ள வேண்டிய பேரளவுத் தொடக்கநிலை முதலீடுகளைப்பற்றிய தேவை, அதன் அவசரம், நூறு ஆண்டுகளின் வளர்ச்சியைப் பத்தாண்டுகளில் காணவேண்டிய அவசியம், ஆகியவையெல்லாம் பொருளா

தார முன்னேற்றத்தில் அரசாங்கத்தின் தலையீட்டை அவசிய மாக்கியிருக்கின்றன. இத்தகைய சிறப்பான இடத்தை அரசுக்குத் தருவது நாட்டுடைமையாக்கப்பட்ட துறையில் பெருக்கத்தைத் தோற்றுவிக்கும். ஆனால், இது மென்மேலும் வளர்விகித முறையில் தனியார் துறையைத் தவிர்ப்பதைக் கொண்டிருக்க வில்லை திறமையான முறையில் வழிப்படுத்தப்பட்டு நிர்வகிக்கப் பட்டால் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைக் கொண்டுவருவதில் மிகமிக முக்கியமான தொரு கருவியாக அது பயன்பட முடியும். அப்போது ஒருமொத்த மான முழுப் பொருளாதாரத்தையும் முன்னேற்றுவிக்கும் இயக்கும் சக்தியாகத் தனியார் துறை விளங்கும். புதிய வேலை வாய்ப்புகளைத் தருதல், புதிய வருமானங்களைத் தோற்றுவித்தல், அதிகப்படியான தேவைகளைத் தோற்றுவித்தல் ஆகியவற்றைச் செய்வதன் மூலமாகவும், உள்நாட்டுச் சந்தையில் விரிவைத் தோற்றுவித்தல் மூலமாகவும் பொது முதலீட்டின் வளர்ச்சி யானது நேரடியாகவும் மறைமுகமாகவும் தனியார் துறையின் வளர்ச்சிக்கு உதவுவதோடு பொருளாதாரம் முழுமையும் வளர்ச்சி பெறவும் உதவி செய்கிறது

## எந்த அளவுக்கு அரசு செயல்பட முடியும்?

பொருளாதாரத்தில் பின்தங்கியுள்ள நாடுகளில் பொது முதலீடு மிக முக்கியமானதுதான் என்பது ஒத்துக்கொள்ளப் படும்போது, இந்த வழியில் எந்த அளவுக்கு அரசு செல்ல வேண்டும் என்றதொரு வினாவும் தொடர்ந்து தோன்றுகிறது. பொருளாதார முன்னேற்றத்திற்கு அரசாங்கம் தீவிரமான பங்கு ஏற்க வேண்டும் என்ற தேவையையும், அவ்வாறு பங்கு ஏற்க வேண்டியதன் முக்கியத்துவத்தையும் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் எல்லாம் உணர்ந்திருந்தாலுங்கூட, அரசாங்கத்தின் பொருளாதார நடவடிக்கைகள் எந்த அளவுக்கு இருக்க வேண்டும் என்ற கருத்தில் அந் நாடுகளுக்கிடையே அதிக அளவுக்கு வேறு பாடுகள் காணப்படுகின்றன. ஓர் எல்லையில் சீனாவும், கிழக்கு ஐரோப்பாவின் ஒரு சில சிறிய நாடுகளும் இருக்கின்றன. இந் நாடுகளில் பொருளாதார நடவடிக்கைகள் ஏறத்தாழ முழு அளவிலும் நாட்டுடைமையாக்கப்பட்டிருக்கின்றன. உற்பத்திச் சாதனங்கள் பெரும்பாலும் அரசாங்கத்தின் உடைமைகளாகவே இருக்கின்றன. நாட்டுப் பொருளாதாரத்தில் வெறும் பின் சேர்ப்பாக மட்டுமே இருக்கத்தக்க வகையில் தனியார் துறையின் பங்கு அதிக அளவுக்குக், குறுகலாக்கப்பட்டிருக்கிறது. சேமிப்பு களும் முதலீடுகளும் அரசின் பொறுப்புகளாக இருக்கின்றன.

முதலீட்டின் அளவும், பகிர்வும் அல்லது வழிப்படுத்துதலும் அதோடு நாட்டு விளைவின் பகிர்வும் அரசாங்கப் பதிலாண்மையால் நிர்ணயம் செய்யப்பட்டு நிறைவேற்றப்படுகின்றன. இதற்கு மாறாக, பிலிப்பைன்சிலும், தென் அமெரிக்காவின் பெரும் பாலான நாடுகளிலும் தனியார் துறையானது வலிமை மிகுந்ததாக இன்னும் இருப்பதோடு, நாட்டுப் பொருளாதாரத்தின் அலைகளில் மிகவும் தீவிரமானதாகத் தொடர்ந்து இருந்துவருகின்றது. அரசின் செயல்பாடு உதவி செய்யத்தக்க தன்மையுடையதாக இந் நாடுகளில் இருக்கிறது அடிப்படையான பின்னமைப்பு வசதிகளைத் தரத்தக்க பொறுப்புடையதாகவும், தனியார் துறைக்குத் தேவையான நிதிவசதிகளையும் மற்றப் பல வசதிகளையும் தரத்தக்க தாகவும் இந் நாடுகளின் அரசுப் பொறுப்பு அமைந்திருக்கிறது. 1951ஆம் ஆண்டில் திட்டமிடுதல் தொடங்கியதிலிருந்து பொதுத் துறை இந்தியாவில் உறுதியான வளர்ச்சியைப் பெற்றுவருகிறது. இந்தோனேசியாவில் பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலைத் திட்டங்களில் அரசாங்கத்திற்கு மிகவும் முக்கியமான பங்கு கொடுக்கப்பட்டது. அந்த நாட்டில் 1951ஆம் ஆண்டின் G.N.P–ல் பொது முதலீடு 2.7% அளவாக அமைந்திருந்தது. பொது முயற்சி, தனியார் முயற்சி ஆகிய இரண்டிலுமே சிலோன் மாறி மாறிக் காணப்பட்டது. இந் நிலை ஒட்டுப்பலகைத் தொழிலின் நிலை மாற்றங்களினால் தெளிவாகக் காட்டப்படுகிறது. முதலில் தனியார் துறையிடமிருந்து இத் தொழிலை அரசு ஏற்றுக்கொண்டது. பின்னர், அரசுத்துறை முயற்சி தோல்வியுற்றதால் மீண்டும் தனியார் துறையிடமே இத் தொழில் விடப்பட்டது. ஆனால், தனியார் துறையிலும் சரி, பொதுத் துறையிலும் சரி எந்த விதமான குறிப்பிடத்தக்க வளர்ச்சியையும் இத் தொழில் காண முடியவில்லை.

பொருளாதார நடவடிக்கையில் முழுஅளவில் அரசின் தலையீடு இருக்க வேண்டுமா, அரசாங்கம் மெதுவாகச் செல்லும் கொள் கையைக் கடைப்பிடிக்க வேண்டுமா என்பது நாட்டு மக்களின் சமுதாயக் கொள்கையையும், அரசியல் கொள்கையையும் மட்டு மல்லாது, நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலைகளையும் பொறுத் திருக்கிறது. அரசாங்கத்தின் நிர்வாகத் திறமை, பொருளாதார வளர்ச்சித் திட்டங்களில் மக்களைத் தன்னுடன் அழைத்துச் செல்லும் அரசின் தகுதி, தேவைப்படக்கூடிய முதலீடுகளின் இயல்புகள் ஆகியவை நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலைகளில் அடங்குபவையாகும். அதிகார வர்க்கத்தின் தரம் பொருளாதார முன்னேற்றச் சிக்கல்களைச் சமாளிப்பதற்குக் கிடைக்கத்தக்க நிலையங்களின் வகைகள் ஆகியவை போன்று சமுதாயமும்

பொருளாதாரமும் எந்த அளவுக்கு வளர்ச்சி பெற்றவைகளாக இருக்கின்றன என்பதைத் தெரிவிக்கும் காரணிகளைப் பொறுத்து முன்னேற்றத் திட்டங்களில் குறிக்கப்பட்டுள்ள குறிக்கோள் களையும், இலக்குகளையும் பெறமுடியத்தக்க அரசின் தகுதி அமைகின்றது. மக்கள் தொகையால் தரப்படுபவைகளோடு குறிக் கோள்கள் ஒத்துப்போகத் தக்கவைகளாக இருக்கும் அளவையும் பொறுத்து அரசின் தகுதி அமைந்திருக்கிறது. தேவைப்படும் முதலீட்டு வகையும் அரசின் நடவடிக்கைக்கான வாய்ப்பை நிர்ணயம் செய்யும் ஒரு முக்கியமான காரணியாக இருக்கிறது. பொருளாதாரப் பின்னமைப்புகளைத் தருவதன் மூலமாக மட்டுமே வளர்ச்சியானது தொடங்கிவைக்கப்பட முடியும் என்றால், சாலைகள், இருப்புப்பாதைகள், மின்சார நீர்ப்பாசனத் திட்டங்கள் மற்றும் இவை போன்ற பலவற்றையும் அரசு மேற்கொண்டேயாக வேண்டும். இத்தகையவை யாவும் ஏற்கெனவே அதிகமான அளவுக்கு நிலைபேற்றைப் பெற்றிருக்கும் நாடுகளில் பொருளா தார வளர்ச்சிக்காக இவ் வாய்ப்புகளை மிக நல்ல முறையில் பயன் படுத்திக்கொண்டு முன்னேற்றமடைவதற்குத் திறமையுடைய தாகவும் சுறுசுறுப்புள்ளதாகவும் தனியார் துறை காணப்படுகிறது. அந் நாடுகளில் முன்னேற்றச் செயல்களுக்கான அரசின் வாய்ப்புகள் மிகவும் அதிக அளவுக்கு வரையறைக்குட்பட்டவைகளாக இருக்கலாம். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும் பாலானவை கலப்புப் பொருளாதார அமைப்பைப் பெற்றிருக் கின்றன. இத்தகைய கலப்புப் பொருளாதாரத்தின் குறிப்பிட்ட தொழில்களை முன்னேற்றுவிக்கும் பொறுப்பும், பின்னமைப்பு வசதிகளை உருவாக்கித் தரும் பொறுப்பும் பொதுத் துறையிடம் இருக்கின்றது.

மேற்கண்ட காரணங்களால் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைக் கொண்டுவருவதில் எந்த அளவுக்கு அரசாங்கத்தின் கட்டுப்பாடுகள் அதிகரிக்கப்பட வேண்டும் என்று வரையறைக்குட்பட்டதொரு கருத்தைக் குறிப்பிடுவது சரியான தாக இருக்காது. முற்றிலும் கட்டுப்படுத்தப்பட்ட சர்வாதிகாரப் பொருளாதாரத்தின் சமுதாயச் சிக்கல்களையும் மற்றப் பல சிக்கல் களையும் நீக்கிவிட்டுப் பார்த்தால், பொருளாதார விளைவுகளைப் பெறுதல் என்பதைப் பொறுத்தமட்டிலும் தடையற்ற பொருளா தாரத்தைக் காட்டிலும் சர்வாதிகாரப் பொருளாதாரம் மிகவும் வெற்றியுடையதாக இருக்கிறது என்பதைக் காணமுடியும். தடையற்ற பொருளாதாரத்தில் இருப்பதைப் போலல்லாமல் சர்வாதிகாரப் பொருளாதாரத்தில் மக்களின் உணர்ச்சிகளையும், விருப்பு வெறுப்புகளையும், மதிப்புகளையும் சிறிதுகூட மதிக்காமல்

பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் சமுதாயத் தடைகளையும், நிலையத் தடைகளையும் சிறிதுகூடத் தயக்கமில்லாமல் நீக்குவது இயலக்கூடியதாகும் என்பதாலேயே இந் நிலை இருக்கிறது.[1] மிகவும் முக்கியமான பங்கை வகிக்கின்ற காரணத்தால் நாட்டுடைமையாக்கப்பட்ட துறை அவசியம் பெருகியே தீர வேண்டுமென்று ஆஸ்கார் லாஞ்ச் (Oskar Lange) கருதுகிறார். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இப்போது காணப்படும் நிலைகளில் பொதுத்துறை மிக விரைவாக வளர்ச்சி பெற்ற அரசுசியல் சோசலிசம் என்பது கொண்டுவரப்பட்டால்தான் இந் நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கானகுறைகள் நீக்கப்பட்டு வளர்ச்சிப்பாதையில் செல்வதற்கான வகையில் இந் நாடுகள் திருத்தியமைக்கப்பட முடியும். நாட்டுடைமையாக்கப்பட்ட துறைக்கான வாய்ப்பு வரையறைக்குட்படுத்தப்பட்டு, மென்மேலும் வளர்ச்சி பெறுவதற்குத் தடையும் விதிக்கப்படுமானால், அதன் விளைவாக இங்கிலாந்திலும், ஐக்கிய அமெரிக்க நாட்டிலும் தோன்றியது போன்ற முற்றுரிமை முதலாளித்துவ முறைதான் (Monopoly Capitalism) தோன்றும். ஒருமொத்தமாகப் பார்க்கும்போது அரசு முதலாளித்துவ முறையை (State Capitalism) மிக முன்னேற்றமானதொன்றாகக் குறைந்த வருமானமுடைய நாடுகள் கருதலாம். ஆனால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தை இது தொடங்கிவைக்குமே தவிர, அம் முன்னேற்றம் நீண்ட காலத்திற்குத் தொடர்ந்திருக்க வகை செய்யாது. நாளாவட்டத்தில் தனியார் முதலாளித்துவத்தின் துணையென அரசுமுதலாளித்துவம் மாறிவிடும். சோசலிசச் சமுதாயத்தின் பொருளாதார அடிப்படைகளின் முன்னேற்றத்தினால் மட்டுமே குறைந்த வளர்ச்சியுடைய நாட்டில் நீண்ட காலப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறமுடியும் என்று லாஞ்ச் (Longe) கருதுகிறார். இதிலிருந்து பெறப்படும் முடிவு நம்பிக்கையளிக்கத்தக்கதாக இல்லை. இந் நாடுகளுக்குள் பொருளாதார நிலைகளில் அதிக அளவிலான வேறுபாடுகள் மலிந்து காணப்படுகின்றன. மக்களின் சமுதாய நாட்டங்கள் பண்பாட்டு அமைப்புகள் ஆகியவற்றிலும், நிர்வாகத் திறனிலும் வேறுபாடுகள் அதிகமாக இருக்கின்றன. இத்தகைய நிலைகள் இருக்கின்ற காரணத்தால், இந் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்குக் குறிப்பிட்ட வகையிலான பொருளாதார அமைப்புத்தான் சிறந்தது என்று குறிப்பிடுவது முடியாததாகும். ஒன்றுக்

[1] Spengler, J. J., 'The Social Structue, the State and Economic Growth, '*Economic Growth: Brazil, India, Japan*, Kuznets Simon, Wilburt E. Moore and J. J, Spengler, Eds., Duke, Durham, N. C; 1955, p. 370.

கொன்று முற்றிலும் எதிரானதாக உள்ள அமைப்புகளைக் கொண்டுள்ள நாடுகளில் மிக விரைவான பொருளாதார முன்னேற்றம் பெறப்பட்டிருக்கிறது என்பதுதான் உண்மை. பொருளாதார முன்னேற்றத்திற்கான பாதையில் செயல்பட வேண்டுமென அரசு தீர்மானித்து அதன்படி நடக்கத் தொடங்கி விடுமானால், தொடர்ந்து அத்தகைய பாதுகாப்பை அளிக்க நேர்ந்துவிடும் என்ற குறிப்பும் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும். தொடக்கநிலை முயற்சிகள் அரசாங்கத்தினால் மேற் கொள்ளப்பட்டவுடன் மற்றவற்றைத் தனியார் துறை கவனித்துக் கொள்ளும் என்ற கருத்து தவறானதென்று பல குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளின் அனுபவம் காட்டுகிறது. தனியார் துறைக்கு மிகவும் சிறப்பிடம் தரப்பட்டிருக்கும் தென் அமெரிக்க நாடு களிலும்கூட, உலகப் போருக்குப் பின் வந்த ஆண்டுகளில் பொருளாதார முன்னேற்றத்தை நிலைத்திருக்கச் செய்வதற்கு நாட்டு வருமானத்தில் 30%-லிருந்து 40% வரையிலான பொது முதலீட்டு விகிதம் தேவைப்பட்டிருக்கிறது என்று கான்சன் (Hanson) குறிப்பிட்டுக் காட்டுகிறார். மேலும், 1953-ல் பொதுச் செலவைச் சிக்கனமாக்கும் வழிகளில் ஒரு பகுதியாகப் பொது முதலீடு குறைக்கப்பட்டபோது, தனியார் முதலீட்டில் அதிகரிப்பு எதுவும் தோன்றவில்லை. அதற்கு மாறாகத் தனியார் முதலீடு குறைந்துவிட்டது. தனியார் துறையில் உள்ளார்ந்திருக்கும் வலிமை, அதன் பொருளாதார அமைப்பு, அதன் சமுதாய அமைப்பு, நாட்டின் பண்பாடுகள், சமுதாய நாட்டங்கள் போன்றவைகளாலேயே பெரும்பாலும் அரசிடமிருந்து தனியார் துறை பொருளாதார நடவடிக்கைகளை எளிதாக மேற்கொள்ள முடியுமா, முடியாதா என்பதும், பொருளாதார நடவடிக்கைகளின் போக்குகளை நிலைபேறுடையவைகளாக்குமா, இல்லையா என்பதும் நிர்ணயிக்கப்படுகிறது.

## பொருளாதார வளர்ச்சியை முன்னேற்றுவிப்பதற்கான அரசின் முயற்சிகள்

**(Governmental Measures to Promote Economic Growth)**

நாட்டின் பொருளாதார வாழ்க்கையை முன்னேற்றுவிப்பதற் காகவும், பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவி செய்வதற் காகவும் தற்கால அரசுகள் மேற்கொள்ளும் முயற்சிகளை நேரிடை யான முயற்சிகள் என்றும், மறைமுகமான முயற்சிகள் என்றும் இருவகைப்படுத்தமுடியும். பணவாக்கக் கொள்கை, அரசிறைக் கொள்கை, அயல்நாட்டு வணிகத்தையும் அந்நியச் செலா வணியையும் கட்டுப்படுத்தி வழிப்படுத்தும் கொள்கை ஆகியவை மறைமுகமான முயற்சிகளில் சேரும் கடன் பெருக்கத்தைக்

கட்டுப்படுத்துதல், பணப் பரிமாணத்தைக் கட்டுப்படுத்துதல் என்பனவற்றின் மூலமாகப் பொதுவான பொருளாதார நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதற்காக மைய வங்கி கடைப்பிடிக்கும் மரபுவழிப் பணவாக்கக் கட்டுப்பாட்டு முறைகளான வெளி அங்காடி நடவடிக்கைகள், பாங்குவீதக் கொள்கை ஆகியவற்றோடு, அண்மை ஆண்டுகளில் புதிய முறைகள் மிகவும் பிரபலமாகியிருக்கின்றன. பொருளாதார முன்னேற்றத்தைப் பொறுத்த மட்டிலும் இப் புதிய முறைகள் மிகவும் சிறப்பு வாய்ந்தவைகளாக இருக்கின்றன. நல்ல முறையிலான வங்கி முறை அமைந்திருக்கும் எல்லா நாடுகளிலும் வணிக வங்கிகளின் இருப்புத் தேவைகளை மாற்றியமைத்தல் முறை, பொறுக்குக் கடன் கட்டுப்பாட்டு முறை ஆகிய முறைகள் மென்மேலும் அதிக அளவில் பிரபலமாகி விடுகின்றன, பணவாக்க முறைகளைப் பயன்படுத்துதல் என்பதோடுகூட, வரவு செலவுத் திட்டத்தின் மூலமாகவும், பொதுக் கடன் கொள்கையின் மூலமாகவும் அரசு பொருளாதார நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தமுடியும். பொதுச் செலவின் பகிர்வு, வரிவிதித்தல் முறை, பொதுக் கடன் திட்டங்கள் ஆகியவை தனியார் நுகர்வையும், சேமிப்பையும், முதலீட்டையும் பாதிக்கின்றன. நுகர்வைக் கட்டுப்படுத்துவதன் மூலமாக உள்நாட்டுச் சேமிப்பை அதிகரிப்பதற்காவும், விரும்பப்படாத வழிகளில் முதலீடுகள் மேற்கொள்ளப்படுவதைத் தடுப்பதற்காகவும், பொருளாதார வளர்ச்சிக்கு உதவக்கூடிய வழிகளில் முதலீட்டை வழிப்படுத்துவதற்காகவும் வரிவிதித்தல் பயன்படுத்தப்படுகிறது. மேலும், செல்வம், வருமானம் ஆகியவற்றை நல்ல முறையில் பகிர்ந்தளிப்பதற்கானதொரு வழியாகவும் வரிவிதித்தல் பயன்படுத்தப்படுகிறது. இதைப் போன்று கட்டாயச் சேமிப்புகளின்மூலம் முதலீட்டு நிலையை அதிகரிப்பதில் பற்றுக்குறை நிதியாக்கம் உதவி செய்கிறது அயல்நாட்டு வணிகத்தைக் கட்டுப்படுத்துதல், ஏற்றுமதியை அதிகரித்தல், ஆடம்பரப் பண்டங்களின் இறக்குமதியை ஒழுங்குபடுத்துதல், அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்துதல் ஆகியவற்றிற்கு ஏற்றவண்ணம் அரசிறைக் கொள்கை அமைக்கப்படலாம். அந்நியச் செலாவணி, பரிமாற்றக் கட்டுப்பாடுகள் ஆகியவற்றை ஒழுங்குபடுத்துவதன் மூலம், பொருளாதாரத்தின் அயல் இருப்பு நிலையை நன்னிலைப்படுத்தவும் முன்னேற்ற நோக்கங்களுக்காக அந்நிய மூலவளங்களைப் பேதங்காட்டும் முறையில் பயன்படுத்துவதை உறுதி செய்யவும் அரசு எண்ணுகிறது.

பொருளாதார வளர்ச்சிக்கு உதவி செய்யக்கூடிய அரசாங்கத்தின் கடன் பணிகளைப் பின்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

(1) பொருளாதார, சமுதாயப் பின்னமைப்புகளைத் தருதல்.

(2) நிலைய மாற்றங்களையும் அமைப்பு மாற்றங்களையும் கொண்டுவருதல்.

(3) உற்பத்திக் காரணிகளின் அளிப்பை அதிகரித்து அவற்றின் இடப்பெயர்ச்சியை அதிகப்படுத்துதல்.

(4) தொழில் பெருக்கத்தில் நேரடியாகப் பங்குகொள்ளுதல், தனியார் துறைத் தொழில்களுக்கு உதவி செய்தல்.

பொருளாதார, சமுதாயப் பின்னமைப்புகள் (Economic and Social Overhead Facilities)

மிக விரைவான பொருளாதார வளர்ச்சி விகிதத்தை உறுதிப்படுத்துவதற்குப் பொருளாதார, சமுதாயப் பின்னமைப்பு மூலதனத்தையும், பணிகளையும் கொடுக்கவேண்டியது மிக அவசியமானதாகும். (இருப்புப்பாதைகள், சாலைகள், துறைமுகங்கள், விமானத் தளங்கள் ஆகிய) போக்குவரத்துகள், செய்தித் தொடர்பு, மின்சார சக்தி, நீர்ப்பாசன வசதி, தரிசு நிலத்தைப் பயிர் செய்து நிலமாக்குதல், மற்றும் இவை போன்றவற்றின் மீதான முதலீடுகளைப் பொருளாதாரப் பின்னமைப்பு மூலதனம் அல்லது பொருளாதார உள்ளமைப்புகள் உள்ளடக்கியிருக்கின்றன. கல்வி, பொதுநலம், வீட்டு வசதி, மற்றும் பலவிதமான பொது நலத் திட்டங்கள் ஆகியவற்றின்மீதான செலவுகளைப் சமுதாயச் பின்னமைப்பு மூலதனம் உட்கொண்டிருக்கிறது. போதுமான அளவுக்குப் பின்னமைப்பு வசதிகள் இருக்குமானால், அது மற்றத் தொழில்களுக்குப் புறச்சிக்கனங்களைக் கொண்டுவருகிறது. அவற்றின் மூலதனக் கெழுக்களைக் (Capital Coefficients) குறைக்கிறது. இவ்வாருகப் பொதுவான முதலீட்டின் திறமையை அதிகரிப்பதன் மூலமாக மிக விரைவான பொருளாதார வளர்ச்சியை முடியத்தக்கதாக்குகிறது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பான்மையான நாடுகள் இத்தகைய வசதிகளில் போதுமான அளிப்பைப் பெற்றிருக்கவில்லை. இம் முயற்சிகளில் தனியார் துறை அதிக அளவில் ஈடுபடாது என்ற காரணத்தால் இக் குறையை நீக்குவதற்குப் பேரளவிலான முதலீட்டுத் திட்டங்களை அரசுகள் மேற்கொள்கின்றன. சிலோன், கம்போடியா ஆகிய நாடுகளின் முன்னேற்றத் திட்டங்களில் நீர்ப்பாசனம், வேளாண்மை ஆகியவற்றின்மீதான முதலீடுகள் முதன்மையான இடத்தைப் பெற்றன. பர்மா, இந்தியா, நேபாளம் ஆகிய நாடுகளின் வளர்ச்சித் திட்டங்களில் போக்குவரத்து, செய்தித் தொடர்பு ஆகியவற்றின்மீதான முதலீடுகள் முதன்மை இடத்தைப் பெற்றன.

## 2. நிலைய மாற்றங்கள் (Institutional Changes)

அரசாங்கத்தினால் கொண்டுவரப்படும் நிலைய மாற்றங்களாகக் கீழ்க்கண்டவைகள் குறிப்பிடப்படலாம். முதலாவதாக, குடிவாரப் பாதுகாப்பை உறுதிசெய்வதற்குத் தேவையான நிலச்சீர்திருத்தங்கள். வாரிசு உரிமைச் சீர்திருத்தங்கள், குடிவாரச் சட்டச் சீர்திருத்தங்கள் ஆகியவை அமையும். இரண்டாவதாக, கம்பெனிகளை அமைத்தலும், பேரளவு, சிற்றளவுத் தொழில் முயற்சிகளை அமைத்தலும் அமையும் மூன்றாவதாக, மிக நல்ல முறையிலான உற்பத்தி முறைகளையும், மூலவளங்கள் வீணாவதைத் தடுப்பதையும் உறுதி செய்வதற்காகப் போட்டிகளை ஒழுங்குபடுத்தி, முற்றுரிமைகளைக் கட்டுப்படுத்துதல் அமையும். நான்காவதாக, நுகர்வோர் கூட்டுறவுகளையும் உற்பத்தியாளர்களின் கூட்டுறவுகளையும் அமைத்தல் அமையும். ஐந்தாவதாக, சமுதாய வளர்ச்சித் திட்டங்களின் மூலமாகவும், கிராம மறுவாழ்வுத் திட்டங்களின் மூலமாகவும் கிராமங்களின் தலைமைப் பொறுப்பேற்கத் தகுதியுள்ளவர்களை உருவாக்குதல் அமையும். இறுதியாகத் தொழிலாளரின் நல்ல முறையிலான இடப் பெயர்ச்சி, சமுதாயத்தினரிடம் ஒழுக்கக்கட்டுப்பாடுகள், பண்பாட்டு நிலைகள் ஆகியவற்றிற்கு வசதி செய்துதரல் நல்ல முறையிலான உற்பத்தி அமைப்புகளைக் கொண்டுவருவதன் மூலமாகவும், உற்பத்தி முயற்சிக்கு அமையும் பருப்பொருள் சார்ந்த மூலதனம் எவ்வளவு சிறப்புடையதோ அந்த அளவுக்குச் சிறப்புடைய பருப்பொருள் சாராத மூலதனத்தையும் கண்ணுக்குப் புலனாகாத மூலதனத்தையும் நன்கு அமைப்பதன் மூலமாகவும் இம் முயற்சிகள் யாவும் பொருளாதார வளர்ச்சிக்கு நேரிடையாகவே உதவி செய்கின்றன. இத்தகைய முன்னேற்றங்களில் பலவும் முன்னேற்றமடைந்த நாடுகளில் இயற்கையாகவே தோன்றின. அல்லது தனிப்பட்டவர் முயற்சிகளின் மூலமும், தனியார் துறை முயற்சிகளின் மூலமும் தோன்றின. ஆனால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இவை யாவும் விரைவாகக் கொண்டுவரப்படவேண்டும் என்பதோடு, நீண்டகாலமாகவே இருந்துவரும் பொருளாதாரத் தேக்கநிலையில் நன்மை தரத்தகாத வகையில் வடித்திருக்கும் சமுதாய நோக்கங்கள், மக்களின் ஒழுக்கம், நடவடிக்கை முறைகள் ஆகியவற்றைப் புரட்சியான முறையில் மாற்றியமைக்க வேண்டும் என்ற நிலையும் இருக்கின்றது. இது தவிர, மூலதனத்திற்கும் உழைப்பிற்கும் இடையே நல்ல முறையிலானதொரு தொடர்பைக் கொண்டுவரும் பொறுப்பையும் அரசே மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. சமுதாயச் சட்டங்கள், தொழிலாளர் சட்டங்கள் ஆகியவற்றை நிறைவேற்றுவதன் மூலமாகவும், தனியார் துறையைச்

சரியான முறையில் ஒழுங்குபடுத்துவதன் மூலமாகவும் நிர்வாகத்திற்கும் உழைப்பிற்குமிடையேயான மோதலை அரசு தவிர்க்க முடியும். மேலும் இதன்மூலம் வேலைநிறுத்தங்களின் மூலமாகவும், கதவடைப்புகளின் மூலமாகவும் தோன்றக்கூடிய உற்பத்தி இழப்புகளை அதிக அளவிற்குக் குறைப்பதற்கும். உற்பத்தியை அதிகரிப்பதற்கான பொறுப்புணர்ச்சியைத் தொழிலாளர்களிடையே தூண்டுவதற்கும் அரசினால் முடியும்

பொருளாதார வளர்ச்சியை அரசின் நடவடிக்கையின் மூலம் பெருக்குவதற்கானதொரு முறை அங்காடிகளின் முன்னேற்றமாகும், பண்டங்களை வாங்குபவர்களின் வருமானநிலை குறிப்பிட்ட வகைப் பண்டத்தின்மீதான செலவுப்பங்கு நாட்டின் பரப்பளவு, மக்கள் தொகையின் அளவு ஆகியவற்றைச் சார்ந்திருக்கிறது. உள்நாட்டுச் சந்தையின் அளவு பல்வேறு நிலையக் காரணிகளும், வரையறைக்குட்பட்டிருக்கும் பணம் புழங்கும் அளவும் குறைந்த வளர்ச்சியுடையதொரு நாட்டில் உள்ள அங்காடியின் அளவைக் கட்டுப்படுத்துகின்றன. இங்கும்கூட, நிலையத் தடைகளை நீக்குவதற்காக அரசு மிக வலிவுள்ள பங்கை ஆற்றமுடியும். மூலதன அங்காடி போன்ற தகுதியான நிலையங்களை அமைப்பதன் மூலமாக அரசு நிதி நடவடிக்கைகளை விரிவாக்க முடியும். இவ்வாறாக, பெல்ஜியத்தில் கடன் கம்யூனலைத் (Credit Communal) தோற்றுவித்து அதன்மூலம் சிறிய நடுத்தரமான கம்யூன்கள் (Communes) அவற்றின் சேமிப்புகளைத் திரட்டி. ஆதாயம் தரத்தக்க முதலீடுகளில் அச் சேமிப்புகளை வழிப்படுத்த அரசு உதவி செய்தது. புதிய போக்குவரத்துகளைத் தொடங்குவதன் மூலமாக ஏற்கெனவே இருக்கும் அங்காடியின் அளவை அரசு மாற்றமுடியும். அங்காடி அளவின் அதிகரிப்பு மிகவும் நிலையான விலைகளை உறுதி செய்கிறது. மேலும், அங்காடி அளவின் அதிகரிப்பு மிக நல்ல முறையிலான போட்டியின்மூலம் நிறுவனங்கள் அவற்றின் உத்தம அளவிற்கு வளர்ச்சி பெறுவதற்கும் உதவி செய்கிறது. அளிப்பை அல்லது தேவையை மாற்றியமைப்பதன்மூலம் அங்காடி நடவடிக்கைகள் நடைபெற வேண்டிய வழிகளையும், முறைகளையும் மாற்றி அமைப்பது அரசுக்கு முடியும். இவ்வாறாக நுகர்வோர் கடன் வசதிகளைக் கொடுப்பதனால் தேவைநிலையை அதிகரிக்கமுடியும். உழைப்பாளர்களுக்கான குறைந்த அளவுக் கூலியை நிர்ணயம் செய்து அதனை நிறைவேற்றுவதன் மூலம் காரணி அங்காடியில் அளிப்பு நிலைகளை மாற்றமடையச் செய்யமுடியும். அங்காடிகளை அமைப்பதற்கும் முன்னேற்றுவிப்பதற்குமான இத்தகைய நேரிடையான முறைகளோடு தொழில் வளர்ச்சியை முன்னேற்றுவிப்பதன் மூல

மும், வருமான நிலை, வேலை நிலை ஆகியவற்றை அதிகரிப்பதன் மூலமும் அங்காடிகளின் பெருக்கத்திற்கு அரசு மறைமுகமாக உதவிசெய்ய முடியும். தனியார் தொழில் முயற்சியும், கலப்புப் பொருளாதாரங்களும் பொருளாதார நடவடிக்கையின் 'திசை திருப்பும் இயக்கியாக' (Steering gear) இருக்கும்வரை, இந்த நிலையத்தின் வளர்ச்சி பொருளாதாரத்திற்குக் குறிப்பிட்ட வழியைக் கொடுத்து, முதலீட்டு நடவடிக்கையை உற்சாகப் படுத்தும்.

### 3. உற்பத்திக் காரணிகளின் அளிப்பையும் இடப்பெயர்ச்சியையும் அதிகரித்தல் (Increasing the Supply and Mobility of Factors of Production)

முன்னர்க் குறிப்பிட்டுள்ள அத்தியாயங்களில் இன்றியமையாத மூலவளங்களின் பற்றுக் குறையும் அவற்றின் தராதரமான இடப் பெயர்ச்சி இன்மையும்தான் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள அடிப்படைச் சிக்கல்கள் எனக் கண்டோம். உடன் செயல் படும் மூலவளங்களோடு ஒப்பிடுகையில் உழைப்பு பொதுவாக அதிக மானதாக இருக்கிறது. ஆனால், திறம்பட்ட உழைப்புக் கிடைக்க வில்லை. இந் நாடுகளின் தொழில்வளர்ச்சி முன்னேற்றத்திற்கு இது மிகப் பெரியதொரு தடையாக இருந்துவருகிறது. பயன்படுத்தப் படாமலிருக்கும் முதலீட்டு வாய்ப்புகள் இருக்கின்றன என்பது தொழில் முயற்சியின்மையைத்தான் சுட்டிக் காட்டுகிறது. பொரு ளாதாரத்தின் பொதுவான பின்தங்கிய தன்மைக்கான அறிகுறி யாக இது பெரும்பாலும் அமைந்திருக்கிறது. தொழில் முயற்சித் திறமையின் வளர்ச்சிக்குத் தேவையான சூழ்நிலைகளையும், முன்மாதிரி நிலையங்களையும் அரசு தோற்றுவிக்கமுடியுமானால் இந்த வழியில் மிக அதிக அளவிலான முன்னேற்றத்தைப் பெற முடியும். கல்வித்தரம், தேவையான திறமைகள், அறிவு ஆகிய வற்றை அதிகரிப்பதற்கானதொரு தகுதியான கருவியாகக் கல்வி முறை இருக்கிறது. பேரளவிலான உற்பத்தி அலகுகளைத் தோற்று விப்பதன் மூலமாக நிர்வாகத் திறமை, தொழில் முயற்சித் திறமை ஆகியவற்றிற்கான வாய்ப்புகளை அரசு கொடுக்கிறது. இது தவிர, சிறிய தொழில் முயல்வோர்களுக்குத் தனிப்பட்ட பாது காப்பையும், உற்சாகத்தையும் தருவதற்கான நடவடிக்கைகளையும் அரசு மேற்கொள்ள முடியும். தேவைப்படுமானால், பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் அயல்நாட்டுத் தொழில் முயல்வோர்களின் பணிகளையும் அரசு பெறமுடியும். நிர்வாக அமைப்பில் அயல்நாட்டவர்களின் பங்கு அதிக அளவிற்குக் குறைகூறப்பட்டிருக்கிறது என்றாலும்கூட, தொழில் வளர்ச்சிக்

கான மிக முக்கியமான தடையாகத் தொழில் முயற்சியின்மை இருக்கும் நாடுகளில் நிர்வாக முறைகள், தொழில் முயற்சித் திறமை முறைகள் ஆகியவற்றில் மக்களைப் பழக்கமடையச் செய்வதற்கு அயல்நாட்டுத் தொழில் நிறுவனங்களின் கிளைகளைத் திறப்பதற்கான வசதி செய்துகொடுத்தல் உதவி செய்யும் என்ற உண்மையை மறுக்கமுடியாது. தொழில் நுட்பத்திறமை வாய்ந்த தொழிலாளர்களின் பற்றுக்குறையைப் பொறுத்தமட்டிலும் பொதுவான கல்வியை முன்னேற்றுவித்தல் என்பதோடு, தொழில் பயிற்சி மையங்களைத் தொடங்குதல், பொறிநுட்பக் கல்விக்கு அதிகமான சிறப்பிடம் கொடுத்தல், விடுமுறைக் காலப் பள்ளி முறையைக் கொண்டுவருதல், வேலை வாய்ப்புகளைப் பற்றிய செய்திகளைக் கொடுப்பதன் மூலமாக உழைப்பின் இடப்பெயர்ச்சியை அதிகரிக்கச் செய்தல், வேலை தேடித் தரும் நிலையங்களைத் தோற்றுவித்தல் போன்றவைகளும் உதவி செய்பவைகளாகும். தொழில் முயற்சியும் திறம்பட்ட உழைப்பும் தொழில் முன்னேற்றத்தில் பின்தங்கிய நிலையில் இருப்பதற்கு எந்த அளவுக்குக் காரணங்களாக இருக்கின்றனவோ அந்த அளவுக்கு அதன் விளைவுகளாகவும் இருக்கின்றன. இதையே வேறொரு விதமாகச் சொன்னால், தொழில் வளர்ச்சிக்கும், பொதுவான பொருளாதார முன்னேற்றத்திற்கும் அரசு மேற்கொள்ளும் அல்லது அரசால் தொடங்கிவைக்கப்படும் திட்டங்கள் திறன் மிகுந்த உழைப்பு, தொழில் முயல்வோர் திறமை ஆகியவற்றினால் தோன்றும் சிக்கலைத் தீர்ப்பதற்கான, உறுதியான, சரியான வழியாகக் கருதப்படலாம்.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் மூலதனம், நிதி மூலவளங்கள் ஆகியவை மிகக் குறைவான அளவுக்கே கிடைக்கின்றன என்பது தெளிவான உண்மையே. அயல்நாட்டு மூலதனத்தின் இறக்குமதி மூலமும், உள்நாட்டு மூலவளங்களை மிகவும் விழிப்புடனும், மிக நல்ல முறையுடனும் பயன்படுத்துவதன் மூலமும் இம் மூலவளங்களின் அளவை அதிகரிப்பதற்கு இந் நாடுகளின் அரசுகள் முயற்சிகளை மேற்கொண்டுவருகின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் பலவற்றிலும் நன்கு திட்டமிடப்பட்ட நிதி நிலையங்கள் இல்லாமலிருத்தலானது கிடைக்கக்கூடிய சிறிதளவு சேமிப்பையும்கூட நல்ல முறையில் திரட்டுவதற்குத் தடையாக இருக்கின்றது. தனியார் துறைக்கு மிக அதிகமான வாய்ப்புக் கொடுக்கத்தக்கதாகவும், தொழில்துறையில் தலையிடுவதற்கு அரசு தயக்கம் உடையதாகவும் உள்ள நாடுகளிலும்கூட மிகவும் மனநிறைவு தரத்தக்க வகையிலான நிதி வசதிகளைத் தருவதன் மூலமாகத் தனியார் துறைக்கு உதவி செய்ய

வேண்டியது அவசியமானது மட்டுமன்று; நேர்மையானதும்கூட. தனியார் தொழில் முயற்சி அதிக அளவில் இருப்பதற்கு அனுமதிக்கப்பட்டிருக்கும் இன்றைய குறைந்த வருமானமுடைய நாடுகளில் தனியார் வணிகத்தின் தேவைகளை ஈடுசெய்யக்கூடிய நிதிப் பதிலாண்மைகள், கடன் நிலையங்கள் ஆகியவற்றின் அமைப்பின்மீதும், முன்னேற்றத்தின்மீதும் அரசின் நடவடிக்கைகள் அதிக அளவில் செறிந்து காணப்படுகின்றன. சீனு (தைவான்), சப்பான், தென் கொரியா, பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளிலும் வேறு பல நாடுகளிலும் உலகப் போருக்குப் பின்வந்த ஆண்டுகளில் அந் நாடுகளின் தொழில் புனரமைப்பிற்கு அதிக அளவு கடன்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தனியார் துறைக்கு, குறிப்பாக இரும்பு, உருக்குத் தொழிலுக்கு இந்திய அரசு அதிக அளவிளான கடன்களைக் கொடுத்திருக்கிறது. ஏற்றுமதி வங்கிகளை அமைப்பதன் மூலமும், பலவிதமான ஏற்றுமதி ஆபத்துகளைத் தவிர்ப்பதற்காகக் காப்பீட்டுத் திட்டங்களை செயல்படுத்துவதன் மூலமும் ஏற்றுமதியை அதிகரிப்பதற்கும், உள்நாட்டுத் தொழில்களின் வளர்ச்சிக்கான மூலதனப் பண்டங்களையும் கச்சாப் பொருள்களையும் இறக்குமதி செய்வதற்கும், ஏற்றுமதி இறக்குமதி வசதிகள் அரசாங்கத்தால் செய்து கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவை தவிர, நிதி உதவிகளையும் கடன் உதவிகளையும் சிறு தொழில்களுக்குக் கொடுப்பதற்கான சிறப்பான சில ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கின்றன. தொழில்களுக்குத் தேவையான நீண்டகால நிதித் தேவைகளையும் குறுகிய கால நிதித் தேவைகளையும் ஈடுசெய்வதற்கான பதிலாண்மை என்ற வடிவத்தில் தென் அமெரிக்கா, ஆசியா ஆகிய பகுதிகளில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தொழில்நிதிக் கார்ப்பொரேசன் (Industrial Finance Corporation) மென்மேலும் அதிமான புகழைப் பெற்றுவருகின்றது. முன்னேற்றமடைந்த நாடுகளில் கிடைக்கும் போதிய அளவிலான நிதி வசதிகள் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் கிடைக்கவில்லை என்ற உண்மையானது, இந் நாடுகளில் இத்தகைய நிதி நிறுவனங்களைத் தோற்றுவிப்பதை மிக அவசியமானதாக்கியிருக்கிறது. அதன் காரணமாக, இத்தகைய பதிலாண்மைகளை நடத்திச்செல்வது நல்ல முறையிலான வணிகக் கொள்கைகளின் படி நடத்தப்பட வேண்டும். இருப்பினும் இத்தகைய நிலையங்களின் நோக்கமானது பொருளாதார முன்னேற்றம் என்றிருப்பதனுல் அவற்றின் உதவியில் அவை பேதங்காட்டும் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டும். அதாவது, மிக விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்கு மிக அவசியமானதாகவும், ஆனுல், அதே நேரத்தில் வங்கிகளிடமிருந்தும், பொதுமக்களிட

டமிருந்தும் இயல்பான வழிகளில் நிதிகளைப்பெற இயலாதவை களாகவும் உள்ள தொழில்களுக்கு அதிக அளவில் உதவி செய்ய வேண்டும். இதைப் போன்று தொழில் முயல்வோரின் நோக்கத்திலிருந்து பார்க்கும்போது ஆதாயம் தரத்தக்கதாக வும், நாட்டின் ஒருமொத்தமான பொருளாதார முன்னேற் றத்துக்கு உதவி செய்யக்கூடியதாகவும் உள்ள தொழில் முயற்சிகளில் கிடைத்தற்கரிய மூலதன மூலவளங்களை முதலீடு செய்வதிலும், உறுதிப்படுத்துதலிலும் மூலதனத்தைக் கட்டுப் படுத்துவதன் மூலம் தனியார் முதலீட்டை ஒழுங்குபடுத்துதல் பயனுடையதாகும்.

4. தொழில் பெருக்கத்தில் நேரடியாகப் பங்குகொள்தல் (Direct piractipation in Industrialisation)

ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் தொழிற் பெருக்கத்திற்குத் தேவையான நிதி உதவிகளையும், மற்ற உதவி களையும் கொடுக்கும் பங்கைமட்டும் மேற்கொண்டு, தொழில் பெருக்கத்திற்குத் தனியார் துறையையே அதிக அளவிற்கு நம்பி இருக்கின்றன. ஆனால், வேறு சில நாடுகளில் உள்ள அரசுகள் தொழில்துறையில் நேரிடையாகவே பங்கேற்றுக்கொள்ளுதல் என் பதை உட்கொண்டிருக்கும் மிகத் தீவிரமான கொள்கைகளை மேற்கொண்டிருக்கின்றன. அடிப்படைத் தொழில்களை நாட்டு டைமையாக்குதல் என்பதற்கும் ,தனியார் துறைக்கும், பொதுத் துறைக்குமான தொழில் நடவடிக்கைகளைப் பகிர்ந்து கொடுத்தல் என்பதற்கும் இது வழி வகுத்திருக்கிறது. இது தவிர, புதிய தொழில்களைத் தொடங்குவதில் தொழில் முயல்வோரின் பங்கை யும் அரசு மேற்கொண்டிருக்கிறது. மேலும் தனியார் துறைக்குத் தலைமையேற்று வழிநடத்தும் பங்கையும் அரசு மேற்கொண் டிருக்கிறது. தொழில்துறையில் அரசின் நடவடிக்கைகளை அதி கரிக்கச் செய்வதானது தொழில் வளர்ச்சிப் போக்கைத் தொடங்கிவைத்தல் என்ற நோக்கத்தையும் பெற்றிருப்பதோடு பெரிய முற்றுரிமை நிறுவனங்கள் தோன்றுவதையும், செல்வக் குவிப்பைத் தடுப்பதையும் நோக்கமாகக் கொண்டிருக்கிறது. இந்தியா போன்ற ஒரு சில நாடுகளில் தொழில் துறையில் அர சின் நடவடிக்கைகள் மென்மேலும் அதிகரித்துகொண்டே வரு கின்றன. இதற்கு மாறாக, மற்றும் சில நாடுகளில் அரசுகள் தொழில்களைத் தொடங்கி, நல்ல முறையில் நடத்திப் பின்னர்த் தனியார் துறையிடம் ஒப்படைக்கின்றன.

இப்போது வளர்ச்சிபெற்றுள்ள நாடுகள் அவற்றின் தொழில் வளர்ச்சியை 18ஆம் நூற்றுண்டிலும், 19ஆம் நூற்றுண்டிலும் பெற்றபோது பொருளாதார வாழ்க்கைக்கான அரசாங்கத்தின்

பங்கு மிகவும் குறிப்பிட்ட எல்லைக்குட்பட்டதாகவே இருந்தது. இங்கிலாந்து நாட்டில் தொழில்பெருக்கத்தின் தொடக்க காலத்தில் தலையிடாக் கொள்கை வலிமையைப் பெற்றிருந்தது. பழமையான அரசின் கட்டுப்பாடுகளிலிருந்து பொருளாதாரத் துறையின் தொழில் முயற்சியைப் புதிதாகத் தோன்றிய தொழில் செல்வந்தர்களும், வணிகச் செல்வந்தர்களும் உண்மையிலேயே விடுவித்துவிட்டனர் என்றுகுறிப்பிடப்படுகிறது. தனியார் முயற்சியாலும் ஆர்வத்தாலும்தான் அந்த நாட்டில் தொழில்பெருக்கமும், வணிகப் பெருக்கமும் தோன்றின. பொருளாதார முன்னேற்றத்தில் அதைப்போன்றதொரு நிலையில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசு, குறைந்த அளவுக்கே நடு நிலைமைத் தன்மையைப் பின்பற்றித் தனியார் தொழில் முயற்சிக்கு ஒருசில வடிவங்களிலான உதவியைத் தந்தது. ஆனால் குடிபெயர்ந்து வந்தவர்களுக்கும், நிலத்தை வைத்திருந்து இருப்புப் பாதைகளை அமைக்க விரும்புபவர்களுக்கும், சாலைகளையும் துறைமுகங்களையும் முன்னேற்றுவிப்பவர்களுக்கும் சுங்கவரிப் பாதுகாப்புடனும் நிதி உதவிகளுடனும் சில தொழில்களை முன்னேற்றுவிப்பவர்களுக்கும் மட்டுமே இத்தகைய உதவிகள் கொடுக்கப்பட்டன. இவற்றிற்கு நேர்மாறானவைகளாகச் சோவியத் ரஷ்யா, சீனா போன்ற பொதுவுடைமை நாடுகள் இருக்கின்றன. இந் நாடுகளில் தனியார் தொழில் முயற்சியானது அடிப்படையான சமுதாய விரோதச்செயல் என்றும், அதன் காரணமாகப் பொருளாதார முன்னேற்றத்தில் தாற்காலிகமான அல்லது மென்மேலும் அதிக அளவுக்குக் குறைந்து செல்லும் அளவிலுமானதோர் இடத்தைத்தான் தனியார் தொழில் முயற்சிக்குக் கொடுக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. இந் நாடுகளில் மிக விரைவான பொருளாதார முன்னேற்றமே அரசின் பொருளாதாரக் கொள்கையின் மிகச் சிறந்த குறிக்கோளாக இருக்கின்றது. பொருளாதாரத்தின் உற்பத்தி மூலவளங்களின்மீது முழு அளவிலான கட்டுப்பாடுகளைக் கொண்டிருப்பதன் மூலமும், திட்டமிட்ட வழிகளில் முதலீட்டை வழிப்படுத்துவதன் மூலமும், ஒரு மொத்தமான பொருளாதாரத் திட்டங்களின் நோக்கங்கள் நிறைவேற்றப்படுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. கிழக்காசிய நாடுகளும், சோவியத் அரசு முறையின் சுழலுக்குள் வரக்கூடியவைகளும் இவ் வகையைச் சேர்ந்தவைகளாகும்.

இவ் விரண்டு எல்லைகளுக்கும் இடைப்பட்ட நிலையில் மற்ற நாடுகள் இருக்கின்றன. பிலிப்பைன்ஸ், தென்கிழக்காசியா, தென் அமெரிக்காவில் சில்லி, மெக்சிகோ ஆகியவற்றைப் போன்ற

ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தொழில் துறையில் புகுவதற்கு அரசுகள் தயக்கம் காட்டுவதோடு, தனியார் துறைக்குத் தேவையான நிதி உதவிகளையும் பொறிநுட்ப உதவிகளையும் கொடுத்துத் தனியார் துறைக்குத் தடையற்ற வாய்ப்பைக் கொடுப்பதன் மூலம் நல்ல முறையிலான தொழில் முன்னேற்றத்திற்கு வகைசெய்யமுடியும் என்றும் கருதுகின்றன. மெக்சிகோவில் நாட்டு விளைவின் வளர்ச்சி விகிதம் (1955–56-ல் 10 விழுக்காடு என்ற அளவில்) மிக அதிகமானதாக இருந்தது. தனியார் தொழில் முயற்சியே இதற்கான முக்கியமான காரணமாக இருக்கிறது. சுங்கவரிப் பாதுகாப்பு, வரிவிலக்குகள் ஆகிய வடிவங்களில் தனியார் தொழிலுக்கான உதவியை அரசு கொடுத்ததுடன் பொதுப் பணிகளை நிர்மாணித்துக் கொடுப்பதன் மூலமாகவும், போக்குவரத்து, நீர்ப்பாசனம், மின்சார அளிப்பு ஆகியவற்றைக் கொடுப்பதன் மூலமாகவும் அரசு தனியார் துறைக்கு மிகவும் உதவி செய்தது. இலத்தீன் அமெரிக்காவின் மற்றப் பகுதிகளில் இருக்கும் 'ஃபொமன்டோஸ்' (Fomantos) போன்று தனியார் வணிகத்தாலும், பொதுப் பதிலாண்மைகளினுலும் நிதியாக்கம் செய்யப்பட்ட கலப்புக் கார்ப்பொரேசன்களை அமைப்பதன்மூலம் தனியார்வணிகத்திற்குத் தேவையான நிதி வசதிகளையும் அது கொடுத்திருக்கிறது. கனரகத் தொழில்களின் நிதியாக்கத்திற்கும் நாட்டின் நதிப்பள்ளத்தாக்கு முன்னேற்றத்திற்கும் இக் கலப்புக் கார்ப்பொரேசன்கள் உதவி செய்திருக்கின்றன. ஆனுல், பொறிசெய் தொழிலில் அரசின் பங்கு மிகவும் வரையறைக்குட்பட்டதாகவே இருந்தது. நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்காக ஐந்தாண்டு அல்லது ஆருண்டுக் காலத்திற்கான சால்டி திட்டத்தை (Salte plan) மெக்சிகோவின் அரசு கொண்டுவந்தது. ஆனுல், தொழில் துறையில் நேரடியான முதலீடு எதையும் செய்வதிலிருந்து தன்னைத் தானே தவிர்த்துக்கொண்டது அரசியல் காரணங்களுக்காக 1938-ல் பெட்ரோலியத் தொழிலை நாட்டுடைமையாக்கியதையும், 1937-ல் இருப்புப் பாதைகளின் உடைமையை மக்களின் பொது உடைமையாக்கியதையும் தவிர இக் காலத்தில் நாட்டில் நாட்டுடைமையாக்கப்பட்ட நிகழ்ச்சி எதுவும் இருக்கவில்லை. இதைப்போன்றதொரு நடவடிக்கை பிரேசில் அரசாங்கத்தாலும் மேற்கொள்ளப்பட்டது. பன்னுட்டு வங்கிநிபுணர் குழுவின்கணக்குகளின்படி நாசியோனல் ஃபினுன்சிரே (Nacional Financiera) அல்லது பிரேசிலின் முதலீட்டு வங்கி (Investment Bank of Brazil) பொருளாதாரத்தின் தொழில் துறைக்கு 1946, 1950 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் நாட்டில் நிதித்தேவையில் 9·6 விழுக்காட்டு அளவை மட்டுமே கொடுத்திருக்கிறது.

இதற்கு மாறாகக் 1939, 1946 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட எட்டாண்டுக் காலத்தில் வேளாண்மையில் மேற்கொள்ளப்பட்ட மொத்த முதலீட்டில் 9·5 விழுக்காட்டு அளவுக்குக் காரணமாக இருந்த நீர்ப்பாசனத் திட்டங்களின்மீது பொது முதலீடு செறிந்து காணப்பட்டது. தனியார் தொழில் முயற்சிக்கு வழியைக் காட்டும்வண்ணம் புதிய தொழில்களைத் தொடங்குவதன் மூலம் தொழில்மயம் ஆவதற்குத் தேவையான தொடக்க நிலை ஏற்பாடுகளைச் செய்தால், அதுதான் மிகவும் பொருத்தமானதாக இருக்கும் என்று ஒரு சில நாடுகளின் அரசுகள் கருதியிருக்கின்றன. தொழில் பெருக்கம் நன்கு விரைவான வளர்ச்சியைப் பெற்றவுடன் அரசுத் தொழில் நடவடிக்கைகளை அப்படியே தனியார் துறையிடம் கொடுத்துவிடவேண்டும் என்பதே அங்குள்ள கருத்தாகும். பேரளவு மூலவளங்களையும், அரசிடமிருந்து தொழில்களைப் பெற்றுக்கொள்வதற்கு ஆயத்தமான தொழில் அதிபர்களையும் கொண்டிருந்த நாடுகளில் இம் முயற்சிகள் வெற்றியைத் தந்திருக்கின்றன. இவ்வாறாக 19ஆம் நூற்றாண்டின் முதல் பாதிப் பகுதியில் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கான உறுதியான அடிப்படையை அமைக்கும் நோக்கத்துடன் இரும்பு உற்பத்தியிலும், நிலக்கரி உற்பத்தியிலும் நேரிடையாகப் பங்கு பெறுதல், புதியவைகளைக் கண்டுபிடிப்பதிலும், தொழில் நுண்ணியலிலும் ஆராய்ச்சிகளை நடத்துதல், பொறி நுட்பக் கல்வியை வளர்த்தல், இணைந்திருக்கும் அறிவியலையும் ஆராய்ச்சியையும் முன்னேற்றுவித்தல் ஆகியவற்றில் முதலீடுகளைச் செய்தல் என்ற வடிவத்தில் தொழில் வளர்ச்சியைத் தொடங்கிவைத்ததானது, நாளாவட்டத்தில் மிக உயர்ந்த தொழில் நுண்ணியல் தரப்படுத்தப்பட்டதாகவும், தனியார் துறை முழுமைக்கும் தெரிந்ததாகவும் மாறிவிட்டது இந்த வாய்ப்புகளைத் தனியார்துறை மிக நல்ல முறையில் பயன்படுத்திக்கொண்டு அரசினால் அமைத்துத் தரப்பட்ட அடித்தளத்தின்மீது மிக விரைவான வளர்ச்சியைப் பெற்றது. தொழில் முன்னேற்றம் நிகழ்ந்தபோது தடையற்ற தன்முயற்சி அமைப்பின் வளர்ச்சிக்கேற்ற நிலைகளை அரசு தருவதற்குத் தேவையான அழுத்தத்தைக் கொடுக்கும் அளவுக்குத் தனியார் துறை வலிமையைப் பெற்றது. தொழிலைப் பொறுத்தமட்டிலும் பொருளாதார நடு நிலைமைத் தன்மையையும் அரசியல் நடுநிலைமைத் தன்மையையும் கொண்டுள்ளதொருகொள்கையைச் சுவிட்சர்லாந்தின் அரசு கடைப்பிடித்தது. இருப்பினும் அந் நாட்டின் கிராமத் தொழில்களில் உற்பத்தியாகும் பண்டங்களுக்கு அந்நிய நாடுகளில் அங்காடிகளைத் திறப்பதன்மூலம் தனியார் தொழில் உள்நாட்டில் சிறந்த வளர்ச்சியைப் பெறு

வதற்கும் உதவி செய்திருக்கிறது. கனடாவின் முன்னேற்றத்திற்கு அடிப்படையான கொள்கைகள் யாவும் அரசாங்கத்தால் நிர்ணயம் செய்யப்பட்டன. இக்கொள்கைகளை நிறைவேற்றுவதற்கான தொடக்கநிலை முயற்சிகள் யாவும் அரசாங்கத்தால் மேற்கொள்ளப்பட்டிருந்தாலும், 19ஆம் நூற்றாண்டில் தொழில் வளர்ச்சியில் பேரளவிலான பங்கைப் பெறுவதற்குத் தேவையான வாய்ப்புகள் தனியார் துறைக்குக் கொடுக்கப்பட்டன. இந் நாடுகள் எல்லாவற்றிலும் தொழில்களின்மீது உண்மையில் மேற்கொள்ளப்படும் முதலீட்டில் எந்த விதமான சிறப்பான பங்கையும் எடுத்துக்கொள்ளாமல், உதவி, வழிகாட்டுதல் ஆகியவற்றைக் கொடுத்தல் தொடக்க நிலை ஆபத்துக்களை ஏற்றுக்கொள்ளுதல், போன்றவற்றை மேற்கொண்டு தனியார் தொழில் முயற்சிக்குப் பாதையைக் காட்டின. ஆனால் இந்தத் தன்மையுடைய உதவியானது எந்த அளவுக்கு ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறதென்பது அந்த நாட்டின் பருப்பொருள் சார்ந்த மூல வளங்களின் அளவையும் மனித மூல வளங்களின் அளவையும் பொறுத்துத்தான் அமையும் என்பது தெளிவு. அரசாங்கத்தின் கவனத்துடன் வளர்ச்சியடையும் இத்தகைய இயல்புடைய பொருளாதார முன்னேற்றத்தின் தொடர் நிகழ்ச்சிகளைப் பெர்ட் கோஸ்லிட்ஸ் (Bert Hoselitz) என்பவர் மூன்று பகுதிகளாகப் பிரித்திருக்கிறார். முதலாவது: ஒருங்கிணைத்தல் பகுதி (Solidarity phas). இப் பகுதிக்கான காலத்தில் எல்லாமே ஒன்றாக இணைக்கப்பட்டு ஒருமைப்படுத்தப்படுகின்றன. இக் காலத்தில் அரசின் உறுதிப்பாடும், திட்டமிட்டு நன்கமைக்கப்பட்ட அரசும் நிலைநிறுத்தப்படுகின்றன. இரண்டாவது: இலக்கை அடையும் பகுதி. (Goal attainment phase) இப் பகுதியில் பொருளாதாரம் வளருவதற்குத் தேவையனா பின்னமைப்புகளையும் பிற வகைப் பின்னமைப்புகளையும் தோற்றுவிப்பதற்கு அரசு வழிபடுத்துகிறது. மூன்றாவது: தனக்குத் தேவையான முறையில் கிடைப்பவற்றை மாற்றியமைத்துக்கொள்ளும் பகுதி (Adaptation phase) இக் காலத்தில் தனியார் தொழில் முயற்சி நன்கு வளர்ச்சி பெற்றிருக்கக் கூடிய அரசியல் அமைப்பிற்கேற்ப அதனை இசைவிப்புச் செய்து கொள்கிறது. அதன் வளர்ச்சி உள்ளாற்றல்களை அதிகரித்துக்கொள்கிறது. தன்னிச்சையான வழிகளில் மென்மேலும் பெருகிச் செல்வதற்குத் தேவையான சக்தியைப் பெற்றுக்கொள்கிறது. தனியார் துறையின் அடிப்படையில் வலுவானதொரு பொருளாதாரத்தை அமைக்க வேண்டுமென்ற நோக்கத்தை அரசு கொண்டிருக்கும்போது இப்போக்கு இயல்பானதாகவும் சரியானதாகம் இருந்தாலும்கூட இத்தகைய போக்கில் அரசியல் காரணி

களினுல் அல்லது வாய்ப்புகளைத் தனியார்துறை நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளத் தவறிவிட்ட காரணத்தால் இன்னும் பலவிதமான நிலைகள் அதிகரிக்கப்படலாம் அல்லது குறைக்கப் படலாம்.

தொழில் முன்னேற்றத்திற்கான இத்தகைய வழிமுறை மிகவும் வெற்றியுடையதாகக் காணப்பட்டது. மெய்ஜியின் (Maiji) தலைமையின் கீழ் 19 ஆம் நூற்றுண்டின் பின்பகுதியில் வலிமை மிக்க மைய அரசு தோற்றுவிக்கப்பட்ட பிறகு தொழில் முன்னேற்றத்தை மிக வேகமாக அதிகரிக்கும் பொறுப்பை அரசு மேற்கொண்டது. அந்த நாட்டில் தொடக்கநிலையில் தொழில் முயல்வோர் போலவே அரசு செயல்பட்டது. அதனுடைய நட வடிக்கையானது தொழில் முயற்சியின்; ஒவ்வொரு வகையையும் உள்ளடக்கியதாக இருந்தது. ரயில்வேக்களை அமைத்து நிர்வாகம் செய்தல், போக்குவரத்துச் சாதனங்களை முன்னேற்றுவித்தல் ஆகியவற்றை அரசு மேற்கொண்டது. இவற்றைத் தவிர புதிய பல நிலக்கரிச் சுரங்கங்களைக் காணுதல், வேளாண்மைப் பரி சோதனை நிலையங்களைத் தொடங்குதல், இரும்புப் பட்டறைகளை யும், கப்பல் கட்டும் தளங்களையும், இயந்திரங்கள் விற்பனை செய்யப்படும் கடைகளையும் அமைத்தல் என்பனவற்றையும் அரசு மேற்கொண்டது. துணித் தொழிலைப் பாதுகாப்பதற்காகவும், உற்சாகப்படுத்துவதற்காகவும் அயல்நாட்டுச் சாதனங்கள் அரசினுல் இறக்குமதி செய்யப்பட்டன. இது போன்று பட்டு நூலைச் சுற்றுவதிலும், பருத்தி நூலை நூற்பதிலும் முன்னேற் றத்தைப் புகுத்துவதற்கும், இயந்திரமயம் ஆக்குவதற்கும் அயல் நாட்டு நிபுணர்கள் வரவழைக்கப்பட்டார்கள். உள்நாட்டுத் தொழில்கள் அரசின் முயற்சியினுல் பலவாறுகத் திருத்தியமைக்கப் பட்ட தோடு மேலைநாட்டு முறையிலான புதிய பல தொழில்களும் தொடங்கப்பட்டன. தொடக்கநிலை ஆபத்துகள் அரசினுல் ஏற்றுக்கொள்ளப்பட்டன. பொறிநுட்ப முன்னேற்றத்திற்கான வழியும் வகுக்கப்பட்டது. தனியார் முயற்சிகள் ஊக்குவிக்கப் பட்டு, அரசினரால் பாதுகாக்கப்பட்டு, அரசாங்கச் சக்கரங்களில் ஓடும்வண்ணம் செய்யப்பட்டன[1]. தொடக்க ஆண்டுகளில் தொழில் முயற்சிப் பணிகளில் ஈடுபட்டிருந்த அரசு, நாளாவட் டத்தில் தொழில்களையெல்லாம் தனியார் துறை மேற்கொள்ளத் தலைப்பட்டபோது அப் பணிகளைச் செய்வதிலிருந்து விலகிக் கொண்டது. இருந்தாலும் இந்த நிலையில் ஜெய்பட்சு (Zaibatsu)

[1] Lockwood, William W., 'The State and Economic Enterprise in Japan, 1868-1935,' '*Economic Growth Brazil, India, Japan* Kuznets, Simon and others Eds., Duke, Durham, N. C., 1955, pp. 537-602,

எனப்பட்ட பெரும் தனியார் வணிக நிறுவனங்கள் மென்மேலும் பெருகி வளருவதற்கான எல்லா வசதிகளையும் தருவதை அரசு தொடர்ந்து நீடித்துவந்தது. கல்வி மறுமலர்ச்சியில் மேலை நாட்டுக் கல்வியையும், அறிவியலையும் கற்பதற்கு உற்சாக மூட்டுவதில் அரசு காட்டிய ஆர்வம், பணம், கடன், அரசிறை ஆகியவற்றைப் பற்றிய அரசின் கொள்கைகள், உள்நாட்டுச் சேமிப்புக்களின் திரட்சிக்கு வகை செய்த பாதி–பொது வங்கிகளைத் தோற்றுவித்தல், ஆராய்ச்சிக்கும், பிற நாடுகளில் கிடைப்பவைகளைத் தங்களின் மூலவளங்கள் இருப்புநிலை போன்ற பல நிலைகளுக்கேற்ப மாற்றியமைத்துக்கொள்வதற்கும். அரசின் உதவி, பழமையான நிலப் பிரபு முறையிலிருந்த கட்டணங்களை பணவரியென்று மாற்றியமைத்த 18[illegible]ஆம் ஆண்டின் முக்கியமான நிலவரிச் சீர்திருத்தம், அரசாங்கத்தின் அயல்நாட்டு வணிகக் கொள்கை, அரசின் சுங்கவரிக் கொள்கை, அந்த நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தொழில்களுக்குப் பாதுகாப்புத் தருதல் என்ற உறுதியான கொள்கையைக் கையாண்டது, உழைப்பாளர்களைப் பாதுகாப்பதற்கும், மிக நல்ல முறையிலான தொழில் உறவைத் தோற்றுவிப்பதற்குமான வழிகளை மேற்கொண்டது, வேளாண்மையைச் சீர்திருத்தி அமைத்தல் ஆகிய இவை எல்லாமே பொருளாதார வளர்ச்சிக்கு உதவி செய்தன. பொருளாதார முன்னேற்றத்திற்கான அதன் கொள்கையில் அரசாங்கத்தின் பங்குதாரர்களாகவே பெரும் வணிக நிறுவனங்கள் மாறிவிட்டன. இந் நிறுவனங்கள் அரசியல் செல்வாக்கு, மதிப்பு, அதிகாரம் ஆகியவற்றையெல்லாம் பெற்றிருந்தன. இப் போக்கு 19[illegible]ஐச் சார்ந்த ஆண்டுகளின் இறுதி ஆண்டுகள்வரையில்தொடர்ந்தது. இவ் வாண்டுகளில் தோன்றிய உலகப் பெருமந்தமும் சீனு–சப்பான் போரும் இக் கொள்கையில் ஒரு மாற்றம் ஏற்படவேண்டியதையும் அரசு அதிக அளவுக்குப் பொருளாதாரத்தைக் கட்டுப்பாடுகளுக்குள் வைத்திருக்கவேண்டியதையும் அவசியமாக்கின ஆனால் அதற்குள்ளாகப் பொருளாதாரம் முற்றிலும் மாற்றமடைந்திருந்தது. உலகத்தில் உள்ள தலை சிறந்த தொழில் நாடுகளுக்குள் ஒரு நாடாகச்சப்பான் விளங்கத் தொடங்கியது. இவ்வாறாக, தொழில் முயல்வோரின் பணிகளைச் செய்வதன்மூலம் தொழில் வளர்ச்சிப் போக்கு சப்பானில் அரசினரால் இம் முறையில் தொடங்கப்பட்டது. ஆனால் பின்னர்த் தோன்றிய முன்னேற்றமும் பெருக்கமும் தனியார் உடைமை என்பதாலும் அங்காடிப் போட்டி என்பதாலுமே முக்கியமாகத் தோன்றியிருக்கின்றன.

லாக்வுட் (Lockwood) குறிப்பிடுவதுபோல, மக்களின்திறனும் அறிவும், பண்பும் வளர்ந்தநிலையில் இருந்ததாலேயே விரை

வான முன்னேற்றத்தின் பெரும்பகுதி இருந்ததெனலாம். அரசாங்கத்தின் முயற்சிமட்டும் மிக விரைவான பொருளாதார முன்னேற்றத்தைக் கொண்டுவந்துவிடும் என்று கூறுவது தவறாகும் என்பதைத் துருக்கியின் அனுபவம் படம்பிடித்துக் காட்டுகிறது. 1920ஐச் சேர்ந்த ஆண்டுகளில் அடாடர்க் (Ataturk) நிர்வாகத்தில் கொண்டுவரப்பட்ட அரசியல் மாற்றங்களும், சமுதாய மாற்றங்களும் அந்த நாட்டின் (துருக்கியின்) பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவி செய்யும் என்று எதிர் பார்க்கப்பட்டது. ஆனால் தனியார் தொழில் முயற்சிக்குத் தொடக்கத்தில் கொடுக்கப்பட்ட உற்சாகமும். ஊக்கமும் 1930ஐச் சார்ந்த ஆண்டுகளில் மறைந்துவிட்டன. எனவே கொள்கையின் அடிப்படையை வைத்துக்கொண்டு பொதுத் துறைக்குச் சிறப்பிடம் தரப்படவில்லை. தேவையை வைத்துத்தான் பொதுத் துறைக்குச் சிறப்பிடம் தரப்படுகிறது. இப்போதைய தொழில், நிதிக் கார்ப்பொரேசனைப் (Industrial, Finance Corporation) போன்று அடாடர்க்கினல் (Ataturk) 1924-ல் தோற்றுவிக்கப்பட்ட இஸ் வங்கி (Iz Bank) மிக விரைவாக வளர்ச்சி பெற்று 1930ஐச் சேர்ந்த ஆண்டுகளில் பல தொழில் நிறுவனங்களையும் கட்டுப்படுத்தத் தொடங்கியது. 1934-ல் பொருளாதார முன்னேற்றத்திற்காக ஓர் ஐந்தாண்டுத் திட்டம் வெளியிடப்பட்டது. சூமெர் வங்கி (Sumer Bank) என்ற புதிய அரசு அமைப்பொன்றும், பொதுக் கார்ப்பொரேசன் வடிவத்திலான அரசுத் தொழில் முயற்சியொன்றும், திட்டமிடுவதற்கும் முன்னேற்றத்தைப் பெறுவதற்கும் பொறுப்பாக வைக்கப்பட்டன. ஆனால் இவற்றாலெல்லாம் பொருளாதார வளர்ச்சி எதுவும் தோன்றவில்லை. வேளாண்மைத்துறை நிராகரிக்கப்பட்டது. தவறாகத் திட்டமிட்டதும், தவறான யோசனைகளின் அடிப்படையில் பொருத்தமில்லாத இடத்தில் இரும்பு உருக்குத் தொழிற்சாலையை அமைத்ததும் செலவு மிகுந்த முயற்சியாகக் காணப்பட்டன. அதன் பிறகு எட்டி வங்கி (Eti Bank) அமைக்கப்பட்டு நாட்டுடைமையாக்கப்பட்ட சுரங்கங்களையெல்லாம் நடத்திச் செல்லும் பொறுப்பு அதனிடம் விடப்பட்டது. சுரங்கத் தாதுப்பொருள்கள், சுரங்கச் சாதனங்கள் ஆகியவற்றில் வணிகம் செய்யவும், சுரங்கங்களையும் எண்ணெய் வயல்களையும் வளம்பறிக்கவும், மின்சாரத்தை உற்பத்திசெய்து பகிர்ந்தளிப்பதற்கும் எல்லாவிதமான வங்கிப் பணிகளையும் கொடுப்பதற்கும் அதற்கு அதிகாரம் அளிக்கப்பட்டது (1887-ல் நிறுவப்பட்ட) வேளாண்மை வங்கி என்ற பதிலாண்மையின் (Ageney of Agricultural Bank) மூலமாகக் கடன் வசதிகளைக் கொடுப்பதன் மூலமாகவும், வேளாண்மைப் பண்டங்களுக்கு உத்திரவாத விலைகளைக் கொடுப்பதன் மூல

மாகவும் வேளாண்மையை முன்னேற்றுவிப்பதற்கான முயற்சிகள் யாவும் மேற்கொள்ளப்பட்டன. ஒரு மொத்தமாகப் பார்த்தால் 1929 முதல் 1938வரையிலான ஆண்டுக் காலத்தில் அரசின் தொழில் முயற்சியால் தொழிலும், வேளாண்மையும் பேரளவில் பெருகியது. தொழிற்சாலைகள் உற்பத்தி இரண்டு மடங்காகியது. தொழில், நிருமாணம் ஆகியவற்றின் பங்கு நாட்டு வருமானத்தில் 13விழுக்காட்டு அளவிலிருந்து 16விழுக்காட்டு அளவாக அதிகரித்தது. இருந்தாலும் 1950-ல் குடியரசுக் கட்சி, (Democratic Party) ஆட்சிக்கு வந்தபோது தனியார் தொழில் முயற்சிக்குப் புத்துயிர் அளிக்கப்பட்டது. அதிலிருந்து தனியார் துறை பொதுத் துறையைக் காட்டிலும் மிக விரைவாக வளர்ச்சியடையத் தொடங்கியது. ஆனால் சிறப்பிடத்திற்கான இத்தகைய மாற்றம் பக்குவமடைவதற்கு முன்னரே தோற்றுவிக்கப்படும் மாற்றமாகத் தென்படுகிறது. பொருளாதாரத்தின் தொழில் அமைப்பைக் கட்டுவதற்கு ஏற்றவண்ணம் வலிமை நிறைந்ததாகத் தனியார் துறை தகுதி பெற்றிருக்கவில்லை. 1938-க்கு முன்னால் அரசுக் கட்டுப்பாட்டினாலும் ஒழுங்குபடுத்துதலாலும் கொண்டுவரப்பட்டவை யாவும் வளர்ச்சிச் சக்திகளைப் பொருளாதாரத்தில் தோற்றுவிப்பதற்கு உதவி செய்யவில்லை.

மேற்கண்ட காரணங்களால் தொழில்துறையில் அரசாங்கத்தின் தொடக்க முயற்சியினால் தோன்றக்கூடிய வெற்றியானது நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலைகளையும், சமுதாயச் சூழ்நிலைகளையும் கிடைக்கக்கூடிய மனித மூலவளங்களின் அளவையும், தகுதியையும் பொறுத்து அமைகின்றது. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தொழில் முயல்வோராக அரசு ஒருமுறை முயற்சிகளை மேற்கொண்டுவிடும் என்றால் அரசின் உதவி இல்லாமலேயே வளர்ச்சியானது நிலைநிறுத்தப்படக்கூடியதொரு நிலையை அடையும்வரை அப் பொறுப்பை நிறைவேற்றுவதை அரசு மேற்கொள்ளவேண்டும் என்ற முடிவுக்கும் இது வழி வகுக்கிறது. இரு துறைகளின் தராதரமான உள்ளாற்றல்களைப் பற்றியும் தகுதியைப் பற்றியும் நல்ல விதமானதொரு மதிப்பீட்டை முதலிலேயே அரசு செய்துகொள்ளவேண்டும். மிகவும் வலிமையானதொரு தொழில் அடிப்படை அமைக்கப்பட்ட பிறகும் தனியார் துறையால் மிக உயர்ந்த வளர்ச்சி விகிதத்தை நிலைநிறுத்தமுடியும் என்று நன்கு தெரிந்துகொண்ட பிறகுதான் பொருளாதாரத்தை அமைக்கும் பணியை அரசு தனியார் துறையிடம் கொடுக்கலாம். பொருளாதாரம் வளர்ச்சியடையும்போது தனியார் துறையும் வளர்ச்சியடையும்வண்ணம் தனியார் துறைக்கு வாய்ப்புகளைக் கொடுக்கவேண்டுமென்ற இந்திய

அரசின் கொள்கையானது இந்நோக்கில் பார்க்கும்போது, மிகவும் சரியான கொள்கையாகவே தென்படுகிறது. இதனை இந்திய அரசின் 1948ஆம் ஆண்டிற்கான தொழில்கொள்கையைப் பற்றிய தீர்மானம் தெளிவாக்கியிருக்கிறது. உற்பத்தியின் அதிகரிப்பு என்பது ஒரு நோக்கம்; செல்வம், வருமானம் ஆகியவற்றின் பகிர்வு என்பது இன்னொரு நோக்கம் என்று இருவகை நோக்கங்களையும் அடையும்வண்ணம்தான் தொழில்துறையில் அரசின் பங்கு எவ்வாறு இருக்கிறது என்பதையும், தனியார் துறை செயல்படுவதற்கு அனுமதிக்கப்பட வேண்டிய சூழ்நிலைகள் எவ்வாறிருக்கவேண்டும் என்பதையும் இத் தீர்மானம் தெளிவாக வரையறை செய்து காட்டியிருக்கிறது. திட்டமிட்ட பொருளாதாரத் திட்டங்களின் மூலமாக இந் நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு அரசு மேற்கொள்ளும் முயற்சியானது பொதுத்துறையின் விரிவை 1951ஆம் ஆண்டிலிருந்து மென்மேலும் அதிகரித்துக்கொண்டு செல்வதைத் தோற்றுவித்திருக்கிறது. பொதுத்துறை தனியார் துறை ஆகியவற்றில் உள்ள முதலீடுகளுக்கிடையே முக்கியமான வேறுபாடு இருக்கின்ற காரணத்தால் இரண்டின் தராதரமான செயல்பாட்டையும் மதிப்பிடுவது முடியத்தக்கதன்று பொது முதலீட்டின் பெரும்பகுதி சமுதாயப் பின்னமைப்புகளின்மீதும் பொருளாதாரப் பின்னமைப்புகளின்மீதும் செறிவாக மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் தனியார் முதலீடு பொறிசெய் தொழில்களின்மீதும் நுகர்வோர் பண்டங்களின் உற்பத்தியின் மீதும் செறிவாக மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. கடந்த 10 ஆண்டுக் காலத்தில் அல்லது கடந்த ஆண்டுகளில் மேற்கொண்டுள்ள நிலையில் முதலீடுகள் நாட்டின் நிலை மூலதனத்துடன் அதிக அளவைச் சேர்த்திருக்கிறது என்பதிலும் விரைவான வளர்ச்சியைப் பெறுவதற்கான உள்ளாற்றலை அதிகப்படுத்தியிருக்கிறது என்பதிலும் சிறிதுகூட ஐயமில்லை.

இஃதிவ்வாறிருப்பினும், பொதுத்துறையின் பெருக்கமானது மென்மேலும் அதிக அளவுக்கும தவிர்க்கமுடியாதவண்ணமும் இந்தியாவில் அரசு சோசலிசத்தை (State Socialism) ஏற்படுத்திவிடும் என்று கருதுவது தவறாகும். இக் கருத்திற்கு ஆதரவாக இக் குறிப்புகளைக் குறிப்பிடலாம், முதலாவது, திட்டமிடுதல் என்பது இந்த நாட்டில் மக்களாட்சி முறையில் நடத்திவரப்படுகிறது. அத்தகைய திட்டமிடுதலானது, அரசியல் மக்களாட்சி முறை என்ற அரசியல் சட்ட அமைப்புக்குள்ளேயே செயலாற்றிக்கொண்டுவருகிறது. பொருளாதார முன்னேற்றமும், மக்களின் வருமான நிலைகளைச் சமமான நிலையில் ஆக்குவதற்காக மேற்கொள்ளப்படும் கொள்கைகளும் மக்களாட்சி

முறையின் அடிப்படையை விரிவுபடுத்துமே தவிர, அதனை அழித்துவிடமாட்டா. இரண்டாவது, பொதுத்துறைக்கும் தனியார் துறைக்குமிடையேயான வரையறைக்கோடு மிக நெகிழ்ச்சியுடையதாக வைக்கப்பட்டிருக்கிறது. உண்மையாகப் பார்த்தால் அண்மைக் காலத்தில் தனியார் தொழில்முயற்சி அதன் வாய்ப்பை அதிகரித்துக்கொள்வதற்கான வாய்ப்புகளை அரசு கொடுத்திருக்கிறது. உரத் தொழிலுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் சலுகைகளும், செயற்கை ரப்பரை உற்பத்தி செய்யும் தொழில்களுக்கும், அயல்நாட்டு மூலதனத்துடன் கூட்டுத் தொழில்களைத் தொடங்கும் தொழில்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கும்சலுகைகளும் இக் குறிப்பைத்தெளிவாக விளக்குகின்றன. ஒரு தொழில் நாட்டுடைமையாக்கப்பட்டுவிட்டதென்றால் அது தொடர்ச்சியாக முடிவில்லாத கால அளவுக்குப் பொதுத்துறையிலேயே தொடர்ந்திருக்கும் என்று எண்ணுவதும் சரியானதன்று. ஒருபுறம் புதிய புதிய நடவடிக்கைகள் அரசினால் மேற்கொள்ளப்பட்டுவரும்போது மற்றொரு புறம் படிப்படியாக அரசின் கட்டுப்பாடுகளில் தளர்த்தல்கள் தோன்றுகின்றன; அல்லது அரசு கட்டுப்பாட்டை விட்டுக்கொடுத்தல் என்பது ஏற்படுகிறது. மக்களாட்சி முறையில் நாட்டுடைமையாக்கப்பட்டதொரு தொழில் தனியார் துறையில் மேற்கொள்ளப்பட்டால் சமுதாயத்திற்கு நன்மை கிடைக்கும் என்பதற்கான சூழ்நிலைகள் உருவாகும்போது ஏன் மறுபடியும் தனியார் துறையிடமே விடப்படக்கூடாது என்பதை மறுப்பதற்கான காரணம் எதுவுமில்லை. இவை எல்லாவற்றிற்கும் மேலாக, பொருளாதார வாழ்க்கையில் அரசு தலையீட்டைக் காட்டக்கூடியதொரு அளவுக் குறியீட்டெண்ணாக அரசுத் தொழில் முயற்சியின் அளவு இருப்பதில்லை. சுவீடன் குறைவான நாட்டுடமையாக்கப்பட்ட தொழில்களைக் கொண்டிருந்தது என்பதற்காக இங்கிலாந்தைக் காட்டிலும் ஸ்வீடன் குறைவான அளவுக்குச்சோசலிசத் தன்மையுடையதாக இருந்ததாகாது. இவ்வாறு ஹான்சன் கருதுகிறார். முன்னேற்றத்தைப் பற்றிய முறைகளும், கொள்கைகளும் அனுபவத்தின் விளைவாக மாற்றங்களைப் பெறலாம்.[1]

## அரசுத் தொழில்முயற்சியின் வரையறைகள்
## (Limitations of Government Enterprise)

மேற்கண்ட பக்கங்களில், பொருளாதார முன்னேற்றத்தில் அரசின் பங்கு எவ்வாறிருக்கும் என்பதைப் பற்றித் தெளிவாகக்

[1] Hanson A. H. *Public Enterprise and Economic Development*,- Routledge and Kegan Paul, London, 1959, pp. 16-18.

குறிப்பிடப்பட்டிருகிறது. அவற்றிலிருந்து குறைந்த வருமான முடைய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அரசு அதன் மிக முக்கியமான பங்கை ஆற்றமுடியும் என்பது மிகத் தெளிவாகக் காணப்படுகிறது. ஆனால், அரசுத் தொழில் முயற்சிக்கு ஒரு சில தெளிவான வரையறைகள் இருக்கின்றன என்பதையும், கருத்தில் கொள்ளவேண்டும். தனியார் தொழில் முயற்சிகளோடு ஒப்பிடுகையில் அரசுத்துறை மிகவும் திறமையுடையதாகத்தான் இருக்கவேண்டும் என்பதில்லை. மென்மேலும் பொருளாதாரப் பொறுப்புகளை அரசு மேற்கொள்கிறதென்றால் அது அரசாங் கத்தின் நிர்வாகச் செலவிலும், பளுவிலும் அதிகப்படியாகச் சேர்ப்பதையே பொருளுணர்த்துகிறது. நிர்வாக இயந்திர அமைப்பு அளவுக்கும் அதிகமாக வளருகிறது. பொதுப்பணி மிக விரைவாகப் பெருகுகிறது. திறமையுடைய மக்களுக்கான தேவையானது அதன் அளிப்பையும் மிஞ்சிச் செல்கிறது. இவ்வாறு நிகழ்ச்சிகள் நடக்கும்போது நிர்வாகப் பணியின் தரத்தை நிலை நாட்டுவது மிகவும் கடினமானதாகும். எனவே குறைந்த திறமை யும், குறைந்த தகுதியுமுடைய மக்களும் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றனர். அந்த அளவுக்குத் திறமை நீர்மைப் படுத்தப்படுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. தவிர, பொருளா தாரத் துறையில் மேன்மேலும்அதிக அளவிலான பொறுப்பு களை அரசு மேற்கொள்ளும்போது புதிய அலுவலகங்கள் திறக் கப்பட்டுக் கட்டுப்பாடுகளின் எண்ணிக்கையும், ஒழுங்கு விதி முறைகளின் எண்ணிக்கையும் அதிகரிக்கப்படுகிறது. அதோடு சேர்ந்து அதற்கேற்பக் கையூட்டுகளும், தவறான முறைகளும் வளர்ச்சிபெறுகின்றன. பொதுமக்களின் பொது ஒழுக்கம் வளர்ச்சிபெறாத நிலையிலுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இதற்கெல்லாம் தேவையான பாதுகாப்புகளை மேற் கொள்ளவேண்டியது மிக அவசியமாகும். அரசாங்கமானது அரசியல் அழுத்தங்களுக்குக் கட்டுப்பட்டதாகும். இவ் வழுத் தங்கள் யாவும் சேர்ந்து அரசின் நோக்கங்களைச் சிதையவிட லாம் என்பதோடு உண்மையிலேயே சிறந்த பொருளாதார முயற்சிகளைச் செறிவாக மேற்கொள்வதில் அரசின் தகுதியைப் பாதித்துவிடலாம். செயல்களைச் செய்துமுடிக்க வேண்டும் என்ற பேரார்வத்தினால் தனியார் தொழில் முயற்சியின்மீது ஈவிரக்கமற்ற முறையில் நடந்துகொள்வதற்கான ஆபத்தும் இருக்கிறது. அதன் விளைவாகத் தனியார்துறை முழுமையாக அழிக்கப்பட்டுவிடலாம். இறுதியாக, அரசின் செயல்கள் அதி கரித்துகொண்டு செல்லும்போது, அரசாங்கம் சர்வாதிகாரச் சக்திகளைப் பெற்றுக்கொள்வதற்தான வாய்ப்பும் இருக்கிறது. அப்போது பொதுப்பணி வேலைகளில் உழைப்பாளர்களைக் கட்டாய

மாக வேலைசெய்யச் சொல்லலாம் என்பதோடு, மிகமிக உயர்ந்த அளவுக்கு வரி விதித்தலை அதிகரிக்கவும் செய்யலாம்; அல்லது பொதுவான நுகர்வுத் தரங்களை மிகவும் பாதிக்கும் வண்ணம் குறைத்துத் தேவையான அளவுக்கு மூலதனத் திரட்சியை விரைவுபடுத்தலாம். இத்தகைய ஆபத்துகளிலிருந்து விடுபடுவதற்கான பாதுகாப்பு மக்களின் நடவடிக்கையிலும். மக்களாட்சிக் கொள்கைகளில் அவர்களுக்கு இருக்கக்கூடிய நம்பிக்கையின் வலிமையிலும் இருக்கிறது. நல்ல முறையிலான தேர்ந்த மக்களாட்சி முறையாது அரசு அதன்மீது நம்பிக்கையை மக்கள் வைக்கத்தக்க அளவுக்கு நடந்துகொள்வதற்கும், ஓட்டுப் போடுபவர்களுக்குஅரசு அது மேற்கொள்ளப் போகும் நடவடிக்கைகளை விளக்குவதற்கும், முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றுவதில் முக்கியமான நிலைகளில் அவர்களிடம் கலந்து ஆலோசனை பெறுவதற்கும், அரசு நடவடிக்கைகளில் அவர்களின் கூட்டுறவையும் சேர்த்துக்கொள்வதற்கும் ஏற்றதாக இருக்கும். இது முடியுமென்றால் அரசினால் தோற்றுவிக்கப்படும் பொருளாதார முன்னேற்றமானது மக்களாட்சி முறைக்கு அல்லது தனியார் தொழில்முயற்சிக்கு ஒரு பயமுறுத்தலாக இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை.

# 12. பொருளாதார முன்னேற்றத்திற்காகத் திட்டமிடுதல்

## (Planning for Economic Development)

முன்னேற்றம் அடைந்த நாடுகளிலும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளிலும் அண்மைக் காலத்தில் கையாளப்படும் பொருளாதாரத் திட்டமிடுதல் பொருளாதார வாழ்வில் அதிக அளவுக்கு அரசின் தலையீட்டை உள்ளடக்கிக்கொண்டுள்ளது. பொருளாதாரத் திட்டமிடுதல் என்பது வரையறை செய்யப்பட்ட சமுதாய இலக்குகளின் அடிப்படையில் உச்ச அளவு நன்மையைக் கொடுக்கும் வகையில் மூல வளங்களை அமைப்பதற்கும், பயன் படுத்துவதற்குமானதொரு வழியாகவே இருக்கிறது. திட்ட மிடுதல் என்ற கருத்தின் இரண்டு இன்றியமையாப் பகுதிகள்:

(i) பெறவேண்டிய முடிவுகளின் முறை.

(ii) கிடைக்கக்கூடிய மூலவளங்களைப்பற்றிய அறிவும் அவற்றை மிகச் சிறந்த முறையில் பகிர்ந்தளித்தலும். [1]

'பெரிய பொருளாதார முடிவுகளைச் செய்தல்'; எது உற்பத்தி செய்யப்பட வேண்டும், எவ்வளவு உற்பத்தி செய்யப்பட வேண்டும், பொருளாதார முழுமையைப் பற்றி விரிவான ஆராய்ச்சியின் அடிப்படையில் உறுதியானதொரு அதிகாரியால் (மூலவளங்கள்) எவ்வாறு பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என்பன பற்றிய உறுதியான தீர்மானம்' என்பதே பொருளாதாரத் திட்டம் என டிக்கின்சன் (H. D. Dickinson) திட்டமிடுதல் என்பதற்கு விளக்கம் கொடுக்கிறார்.[2]

1 *First five-year plan*, Government of India. New Delhi, 1951, p.7.

2 Dickinson, H. D,, *Economic of Socialism*,Oxford London, 1939, p.41

பொருளாதாரத்தை அதிக அளவுக்குச் சிரமப்படுத்தாமல் அல்லது தீவிரமான சமநிலையின்மையைத் தோற்றுவிக்காமல் நாட்டு வருமானம் அல்லது தனிநபர் வருமானம் என்பதை அதிகரித்தல் என்பது நோக்கமாக இருந்தால் கிடைக்கக்கூடிய மூல வளங்களைச் சரியான முறையில் மதிப்பீடு செய்தல், அலகுகளின் ஒவ்வோர் அலகும் மிகத் திறம்பட்ட முறையில் பயன்படுத்தத் தக்க முறையில் மூல வளங்களைச் சிக்கனமாகப் பயன்படுத்து வதற்கானதொரு திட்டத்தை வகுத்தல், மிக நல்ல முறையிலான ஒருமொத்தமான விளைவுகளைப் பெறும் வண்ணம்மூலவளங்களைப் பலவிதமான வழிகளிலும் பிரித்துப் பயன்படுத்துதல், அதிகரித்த விளைவானது சமுதாயத்தின் எல்லாப் பிரிவினரும் சமமாகப் பிரித்துப் பெற்றுக்கொள்வதை உறுதி செய்வதற்கேற்ற வழி வகைகளைக் கையாளுதல் போன்றவைகளைப் பொருளாதாரத் திட்டமிடுதல் என்பது கொண்டிருக்கும். இத்தகையதொரு செயல்திட்டதை வகுப்பதற்கும் நிறைவேற்றுவதற்கும் ஒரு மையப் பதிலாண்மை (Central agency) தேவைப்படுகிறது. இம் மையப் பதிலாண்மையானது பலவிதமான உற்பத்தி அலகுகளை இணைத்து, மூல வளங்களின் திறமையான பகிர்வுக்கும் வேலைக்கு மான பொறுப்பை ஏற்றுக்கொள்ளத் தகுதியுடையதாக இருக்க வேண்டும். இவ்வாறாக, திட்டமிடுதல் என்பதில் அரசின் தலையீடு உள்ளார்ந்திருக்கிறது. பொருளாதாரம் ஒன்றில் திட்டமிடுதல் என்பது அதிகமானதாக இருந்தால் அதற்கேற்ப மிகவும் பரந்ததும் விரிவானதுமான அரசின் நடவடிக்கைக் வாய்ப்பு இருக்கிறது. இந்த நோக்கில் பார்க்கும்போது, அங்காடிச் சக்திகளின் விளைவு களோடு அரசுத் தலையீட்டின் முறையைப்பயன்படுத்துவதில், அதன் வழியாகச் சமுதாயப் போக்குக்கு மேல்நோக்கிய அழுத் தத்தைக் கொடுப்பதற்கு ஏற்றதொரு வழியைக் கொடுப்பதில் நாட்டு அரசின் மிக முக்கியமான முறைக்கான திட்டம் இருக் கிறது எனக் குறிப்பிடலாம்.

## திட்டமிடுதல் ஏன் மென்மேலும் அதிக அளவுக்குப் புகழ் பெற்றுவருகிறது (Why Planning has Become Increasingly Popular)

கடந்த 30 ஆண்டுகளில் ஏறத்தாழ உலகிலுள்ள எல்லா நாடு களிலும் பொருளாதாரத் திட்டமிடுதல் கையாளப்பட்டுவரு வதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. முதலாவது, முதலாளித்துவமுறை, தடையற்ற தன்முயற்சி என்பதில் உள்ள ஒரு சில அடிப்படைக் குறைகள் ஒரு உண்மையைக் கவனத்திற்குக் கொண்டுவந்தன. அதாவது, தடையற்ற தன்முயற்சிப் பொருளா

தாரமானது கட்டுப்படுத்தப்பட்டு ஒழுங்குபடுத்தப்படாவிட்டால், அது உறுதியான வளர்ச்சிக்கு உறுதுணையாகாது; அல்லது சமுதாய நலத்தை உச்ச அளவுக்கு உயர்த்தாது. அதாவது, மிகச் சிறந்த விளைவுகளைப் பெற வேண்டுமானால், அரசாங்கம் என்ற பதிலாண்மையில் தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரம் திட்டமிடப்பட்டு வழிநடத்தப்பட வேண்டும். இரண்டாவதாக, கடந்த உலகப் பெரும் போர்களின்போது பொருளாதாரத் துறையில் தற்கால அரசுகள் பெற்ற அனுபவம் பொருளாதாரத் திட்டமிடுதலை மிகவும் பிரபலமாக்கியிருக்கிறது. போர்க்காலத்தின் போது பேரளவிலிருக்கக்கூடிய நாட்டு மூலவளங்களைத் திரட்டுவதற்கான தேவை, மக்களின் நுகர்வுகளின்மீதும் அயல்நாட்டு வணிகத்தின்மீதும் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட வேண்டியதன் தேவை, மூலவளங்களைப் பகிர்ந்தளித்து கிடைக்கக்கூடிய மூலவளங்களை மிகச் சிறந்த முறையில் பயன்படுத்துவதை உறுதி செய்வதற்கும் வீணாகின்றவைகளை தடுப்பதற்குமான வழிகளைக் கையாண்டது ஆகியவையெல்லாம் பொருளாதாரத் திட்டமிடும் முறைகளில் அரசுப் பதிலாண்மைகளுக்கு அதிக அளவு அனுபவத்தைக் கற்றுத்தந்தன. எங்கெங்கு மூலவளங்கள் வரையறைக்குட்பட்டவைகளாகவும், அம் மூலவளங்களுக்கான தேவை அதிக அளவினதாகவும் இருக்கின்றதோ அங்கெல்லாம் மூலவளங்களைத் திட்டமிட்டுப் பகிர்ந்தளித்தலும், பயன்படுத்துதலும் இன்றியமையாததாக இருக்கின்றது. போரின்போது போரில் ஈடுபட்டிருந்த நாடுகளின் தொழில்களும், மூலதனச் சொத்துகளும் பேரளவில் அழிக்கப்பட்டன. இத்தகைய அழிவு இந் நாடுகளின் பொருளாதாரங்களைச் சிதறடித்துவிட்டது. எனவே, போர் முடிந்ததும் அவற்றின் பொருளாதாரங்களை மறுநிருமாணம் செய்து புத்துயிர் அளிக்கவேண்டிய சிக்கலை அந் நாடுகள் எதிர்நோக்க நேர்ந்துவிட்டது. பேரிழப்புகளை ஈடுசெய்வதையும், பொருளாதாரத்தைப் புதுப்பிப்பதையும்தான் [illegible] -ல் பிரான்சு நாட்டில் புகுத்திய மோனட் திட்டம் (Monnet plan) மிக முக்கியமான நோக்கமாகக் கொண்டிருந்தது. போலந்து, செக்கோஸ்லோவேக்கியா, ஹங்கேரி போன்ற கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும் முன்னேற்றத்திற்கான திட்டமிட்ட வளர்ச்சித் திட்டங்களைத் தொடங்குவதற்கு இதே நோக்கமும் குறிக்கோளும் காரணமாக இருந்திருக்கின்றன. நாசியின் செர்மனியும், சோவியத் ரசியாவும் போரில் பெற்ற வியத்தகு வெற்றிகள் பொருளாதாரத் திட்டமிடுதல் என்பதில் கவனத்தைக் கவர்ந்த மூன்றாவது முக்கியமான காரணமாகும். நாசி செர்மனியின் பொருளாதாரத் திட்டம் அந்த நாட்டைப் பலமிக்கதொரு நாடாக ஆக்கும் நோக்கத்தைப் பெற்றிருந்தது. 1933ஆம் ஆண்டு

மேத்திங்களில் நாசிக் கட்சி முதல் நான்காண்டுத் திட்டத்தைத் தொடங்கியது. கூலி நிலையைக் மிக குறைந்த அளவில் நிறுத்திப் பரவலான பொதுப் பணிகளை அதிக அளவில் நிறைவேற்றுவதன் மூலம் நாட்டிலிருக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவது அத் திட்டத்தின் நோக்கம். இரண்டாண்டுக் காலத்திற்குள் வேலை பார்ப்பவர்களின் எண்ணிக்கை 11.5மில்லியனிலிருந்து 16.5மில்லியனாக உயர்ந்தது. அதே நேரத்தில் வேலையற்றிருந்தோரின் எண்ணிக்கை 6மில்லியனிலிருந்து 2மில்லியனாகக் குறைந்துவிட்டது. 1936ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் தொடங்கப்பட்ட இரண்டாவது நான்காண்டுத் திட்டம் படைபலத்தைப் பெருக்குதல், தன்னிறைவு பெறுதல் என்ற இரண்டு நோக்கங்களையும் கொண்டிருந்தது. வேளாண்மை விளைவும் தொழில் விளைவும் பெருகின. தொழிலின் விளைவு வேளாண்மை விளைவைக்காட்டிலும் பல மடங்கு அதிகமாகப் பெருகியது. வேலை நிறைவு நிலைக்கும் அதிகமானதொரு நிலையை நாடு பெற்றது. போர்ச் சாதனங்களுக்கான தொழில்கள், சாலைகள், இருப்புப் பாதைகள், பேரளவிலான கோட்டைகள் முதலானவைகளை அமைத்ததும் ஐரோப்பாவில் மிகவும் படைவலிமை பெற்றதொரு நாடாகச் செர்மனியை ஆக்கியது. திட்டமிடுதலின் இறுதியான நோக்கம் படைவலிமையை அதிகப்படுத்துவதாக இருந்தபோதும், பொதுமக்கள் கூட்டுறவு இல்லையென்றிருந்தபோதும் செர்மனியில் திட்டமிடும் முறை மிகத் திறம்பட்டதாக அமைந்திருந்தது. திறமையானமுறையில் அமைக்கப்பட்டு, நிறைவேற்றப்பட்டால் எதையும் சாதிக்க முடியும் என்பதையும் அது தெளிவாகக் காட்டிவிட்டது. இதைப்போல.முதல் உலகப்போர் முடிந்ததும் மிகக் கட்டுப்பாடான முறையில் தீவிரமாகச் சிந்தித்து அமைக்கப்பட்ட சர்வாதிகார வழிகளிலான செயல் திட்டங்கள் சோவியத் ரசியாவில் மிகப் பெரிய அளவிலான முன்னேற்றத்தைத் தோற்றுவித்தன. இதுவும் பொருளாதார முன்னேற்றத்திற்காகத் திட்டமிடுதலின் உள்ளாற்றல்களைப் பற்றி அறிவுக் கண்களைத் திறக்கும் காரணியாக அமைந்தது. நான்காவதாக, இரண்டாம் உலகப் போர் முடிந்த பிறகு பெரும்பாலான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் அவற்றின் காலனி நிலையிலிருந்து விடுபட்டு அரசியலில் தன்னாட்சி நிலையைப் பெற்றன. அவை வெகு வேகமான முன்னேற்றத்தைப் பெறுவதில் பேரார்வம் மிக்கவைகளாக இருந்தன. இவை யாவும் முன்னேற்றமடைவதற்காக அரசின் தலையீட்டை மிக அவசியமாக்கின. மக்களின் கொள்கையில் மாற்றம், சமுதாயத்தைப் பற்றி மக்கள் அதிக அளவுக்குத் தெரிந்துவைத்திருத்தல், செல்வமும் வருமானமும் தவறாகப் பகிர்ந்தளிக்கப்படுவதனால் தோன்றும் சமுதாயத் தீமைகளையும்

பொருளாதாரத் தீமைகளையும் மென்மேலும் அதிக அளவுக்கு மக்கள் அறிந்துகொள்ளல் ஆகியவை யாவும் பொருளாதார வளர்ச்சியை அவசியமாக்கின என்பதோடு, அத்தகைய பொருளாதார வளர்ச்சியானது அதிகரித்த உற்பத்தியைத் தோற்றுவிப்பதோடு பேரளவிலான விளைவை மிகவும் சமமான அளவில் பகிர்ந்தளிக்கக்கூடியதொன்றாகவும் இருக்க வேண்டும் என்பதையும் அவசியமாக்கியிருக்கிறது. எனவே, சம வருவாய் நிலையைப் பெறுவதற்கான நடவடிக்கைகளும் பொருளாதார இயந்திரத்தை ஒழுங்குபடுத்திச் சமுதாய நீதியையும் சமுதாயச் சமநிலையையும் உறுதிசெய்வதற்கான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படுகின்றன. இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்களில் இக் காரணியைப் பற்றி மிக அதிக அளவுக்கு அழுத்தம் கொடுத்திருப்பதானது, சமுதாய நோக்கத்திலும் பொருளாதார இலக்குகளிலும் ஏற்பட்டிருக்கும் மாற்றங்களைக் காட்டுவதாக அமைகின்றது. விரைவான முன்னேற்றத்தைக் கொண்டு வருவதும் எவ்வளவு சிறப்பு மிக்கதோ அந்த அளவுக்குச் சமுதாய நீதியும் சமநிலையும் என்ற கருத்துகளை நடைமுறைக்குக் கொண்டுவருவதும் மிக அவசியமானவையாகும் என்று சிறிதுகூட ஐயமில்லாத வகையில் பொருளாதாரத் திட்டத்தைப் பற்றிய கூற்றுகளில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

### சரிசெய்யும் திட்டமும் முன்னேற்றத் திட்டமும். (Corrective and Development Planning)

தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரமாக உள்ள முன்னேற்றமடைந்த ஒரு பொருளாதாரத்திற்கும், மக்களாட்சி அமைப்பில் இயங்கிக்கொண்டுவரக்கூடிய குறைந்த வருமான நாடுகளுக்கும் இடையே திட்டமிடும் நோக்கத்தில் அடிப்படை வேறுபாடு ஒன்று உள்ளது. முதலில் குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த நாட்டில் திட்டமிடுதல் என்பது தடையற்ற போட்டியினால் விளையக்கூடிய தீமைகளிலிருந்து பொருளாதாரத்தைக் காத்து, நிலையான வளர்ச்சி விகிதத்தைப் பெற உதவி செய்வதற்கு முயல்கிறது. இங்குள்ள முக்கியமான நோக்கம் பொருளாதாரத்தை நிலைபேறுடையதாகச் செய்தல். ஆனால் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் திட்டமிடுதலின் முதன்மை நோக்கம் பொருளாதார வளர்ச்சி வேகத்தை அதிகரித்தல் என்பதாகும். முதலில் குறிப்பிட்ட திட்டமிடுதல் என்பது சரிசெய்யும் வகையைச் (Corrective type) சேர்ந்ததாகும். ஆனால் பின்னர்க் குறிப்பிட்ட திட்டமிடுதல் முன்னேற்ற வகையைச் (Developmental type) சேர்ந்ததாகும். 1930ஐச் சேர்ந்த ஆண்டுகளில் பலவிதமான

தொடர் நடவடிக்கைகளைத் தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரங்கள் மேற்கொண்டன. அந் நடவடிக்கைகள் யாவும் அவற்றின் பொருளாதார அமைப்பில் திட்டமிடுதல், வழி நடத்துதல், வழிகாட்டுதல் போன்றவற்றைக் கொண்டிருந்தன. ஏற்கெனவே நாம் பார்த்திருந்தபடி செர்மனியிலிருந்த நாட்டுச் சோசலிசவாதிகள் (National Socialists) அங்காடியைத் திட்டமிட்டு ஒழுங்குபடுத்தியதன் மூலமாகவும், கூலிகளையும் விலைகளையும் திட்டமிட்டுக் கட்டுப்படுத்தியதன் மூலமாகவும் நாட்டில் உள்ள வேலையின்மை நிலையைப் போக்குவதில் கவனத்தைச் செலுத்தினர்கள். 1936-37-ல் பிரான்சு நாட்டில் மேற்கொள்ளப்பட்ட பிளம் ஆய்வு (Blum experiment) முழு அளவில் வெற்றி பெற்றதாக இல்லாவிட்டாலும்கூடப் பொருளாதாரச் சிக்கலினுல் தோற்றுவிக்கப்பட்டிருக்கும் பொருளாதாரச் தாரச் சமநிலைமையற்ற தன்மையை நேர்செய்யும் நோக்கத்துடன் எதிர்காலத்திற்கான பொருளாதாரத் திட்டமிடல் என்பதையே உண்மையில் குறித்தது. ஆனுல் இந்த வழியில் மேற்கொள்ளப்பட்டவைகளில் மிக முக்கியமான முயற்சி 1933–ல் ரூஸ்வெல்ட் (Roosewelt) காலத்தின்போது ஐக்கிய அமெரிக்க நாட்டில் பயன்படுத்தப்பட்ட நியூ டீல் (New Deal) கொள்கையாகும். பொருளாதாரத்தின் எல்லாவிதமான முக்கியத் துறைகளையும் உள்ளடக்கித் திட்டமிட்ட செயல்களின் மூலமாக நாட்டின் பொருளாதாரத்தை நிலைபேறுடையதாகச் செய்வதையே இத் திட்டத்தின் தொடர் நடவடிக்கைகள் நோக்கமாகக் கொண்டிருந்தன திட்டமிடாத பொருளாதாரத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக ஒரு காலத்திலிருந்த இந்த நாட்டில் இத்தகைய இயல்புடைய சரிசெய்யும் பொருளாதாரத் திட்டம் நிலைத்துவிட்டது. முன்னேற்ற மடைந்த முதலாளித்துவப் பொருளாதாரத்தில் திட்டமிடுதல் என்பதற்கான வாய்ப்பையும் இயல்பையும் காட்டுவதற்கு ஐக்கிய அமெரிக்க நாட்டின் 1946 ஆம் ஆண்டின் வேலைச் சட்டம் (The united states Employment Act of 1946) அமைந்திருக்கிறது. தனியார் தொழில் முயற்சிக்கு வழிகாட்டுவதன் மூலமாகவும், அதனை வழிப்படுத்துவதன் மூலமாகவும் பணவாட்டம், பண வீக்கம் ஆகிய இரண்டின் சக்திகளுக்கும் எதிர்விளைவுகளைத் தோற்றுவிப்பதுதான் இத் திட்டங்களின் அடிப்படை நோக்கமாகும். வருமானத்தை மறுபகிர்வு செய்து நுகர்வு நாட்டத்தை அதிகரிப்பதன் மூலமாகவும், எளிதான கடன் வசதிகளைக் கொடுப்பதன் மூலமாகவும், செலவு நிலையை அதிகரிக்கக் கூடியவைகளான நகர்ப்புற மயம் ஆக்குதல் போன்றவற்றின் மூலமாகவும், வரிவிதத்தலைக் குறைத்தல், வட்டி விகிதத்தைக் குறைத்தல், கூலிகளைக் கட்டுப்

படுத்துதல், விலையை ஆதரிக்கும் வழிகள் போன்றவற்றின் மூல மாக முதலீட்டை அதிகரிக்கச்செய்வதன் மூலமாகவும் பண வாட்டமானது கட்டுப்படுத்தப்படுவதற்கான முயற்சிகள் மேற் கொள்ளப்படுகின்றன. இவற்றிற்கு நேர்மாறான நடவடிக் கைகளை மேற்கொள்வதன் மூலமாகப் பணவீக்க நடவடிக்கைகள் தடைசெய்யப்படுகின்றன. நுகர்வுச் செலவைக் குறைப்பதற்காக நுகர்வின்மீது வரிவிதித்தல், உபரி வரவுசெலவுத் திட்டங்களைப் பெறுவதன் மூலமாக அரசும், பொதுமக்களும் அதிகஅளவில் சேமிப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்தல், வரிவிதித்தல், வட்டிக் கொள்கை, கூலிக் கொள்கை மூலமாகத் தனியார் முதலீட்டை உற்சாகம் இழக்கச் செய்தல் போன்றவைகளை இங்குக் குறிப்பிடலாம். இத்தகைய சரிசெய்யும் திட்டமிடுதலில் சமுதாயத்தின் பொருளாதார வாழ்க்கையில் அளவுக்கு அதிக மாகத் தலையிடுவதிலிருந்து தன்னைத்தானே அரசு தவிர்த்துக் கொண்டு, உறுதியின்மைக்கான சக்திகள் கட்டுப்பாட்டை மீறிச் சென்றுவிடாவண்ணம் தனியார் துறைக்கு உதவி செய்து, அதனை வழிப்படுத்துகிறது என்பதை நாம் நன்கு கவனிக்க வேண்டும்.

இத்தகைய இயல்புடைய திட்டமிடுதல் குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளின் தேவைகளை ஈடுகட்டுவதற்கு ஏற்றதாக இல்லை. அரசின் தலையீடும், திட்டமிடுதலும் பொருளாதார அடிப் படையில் பின்தங்கிய நிலையிலுள்ள நாட்டிற்கு அவசியமானவை என்று குறிப்பிடுவதற்கான பல காரணங்களில் இதுவும் ஒன்றாகும். இதுதவிர, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் ஏழ்மை நாடுகளாக இருக்கின்றன என்ற ஒன்றே பொருளாதாரத் திட்டமிடுதலை மிக அவசியமாக்கியிருக்கிறது. அரசின் தலையீட்டை நாட்டில் உள்ள ஏழ்மை அவசியமாக்கியிருப்பதோடு நேர்மையானதாகவும் ஆக்கி யிருக்கிறது. செல்வம், வருமானம் ஆகியவற்றின் பகிர்வில் உள்ள ஏற்றத்தாழ்வுகளினால் விளைந்துள்ள தீமைகள் வளர்ச்சியடைந்த நாடுகளிலிருப்பதைக் காட்டிலும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அதிக அளவிலான சமுதாயத் தீமைகளைத் தோற்றுவித் திருக்கின்றன. எனவேதான் குறைந்த வளர்ச்சியுடைய நாடு களின் பொருளாதாரத் திட்டமிடுதலில் சமுதாயத் தீமைகளையும், வருமானம் செல்வம் ஆகியவை செறிந்து ஒரு சிலரிடம் குவிவதை யும் தடுப்பவைகளுக்குச் சிறப்பிடம் தரப்படுகின்றது. பொருளா தாரத்தில் பின்தங்கிய நிலைகளில் உள்ள நாடுகளில், போட்டி யுடைய பொருளாதார அமைப்பு செயல்படுவதால் தோன்றக் கூடிய தடையற்ற சக்திகளினால் தோன்றும் பொருளாதார மூலவளங்களின் வீணாதலைத் தடுக்க வேண்டியது மிக அவசியமா கின்றது. தடையற்ற அங்காடிப் பொருளாதாரத்தில் தனிப்பட்ட

வர்களின் முடிவுகளின் அடிப்படையில் முதலீடுகள் மேற்கொள்ளப் படுகின்றன. மேலும், ஒரு காலத்தில் மேற்கொள்ளப்படும் முதலீட்டு அமைப்பு எதிர்காலத்தின் விலை ஒழுக்கத்தை இயக்கத் தக்கதாக இருக்கும். இக் காரணங்களால், விலைகளில் எதிர் காலப் போக்கு எவ்வாறு இருக்குமென்பதைப்பற்றிய சரியான மதிப்பீட்டை அல்லது பலவிதமான முதலீடுகளின் ஆதாய வாய்ப்புகள் எவ்வாறிருக்கும் என்பதைப்பற்றிய சரியான மதிப்பீட்டைப் பெறுதல் முடியாததாகும். இது தவிர, தனிப் பட்ட தொழில் முனைவோர்களின் ஒருங்கிணைக்கப்படாத முதலீட்டு நடவடிக்கைகளிலிருந்து தோன்றும் தவறான முதலீடு களில் சமுதாய இழப்பும் உள்ளார்ந்திருக்கிறது. முதலாவதாக, புதியனவாகவும், விரும்பத்தக்கனவாகவும் உள்ள முதலீட்டு வழி களில் முதலீடு செய்வதிலிருந்து மூலவளங்களைத் திருப்புவதற்குச் சிறிது காலமாகிறது. இரண்டாவதாக, இங்கு விலைமாற்ற மானது சரியான அளவு காட்டும் கருவியாக இல்லாமலிருக்கலாம். முந்திய முதலீட்டு முடிவு தவறானது என்று காட்டக்கூடிய விலை சுட்டுக் கருவியினால் மாற்றப்பட்ட பகிர்ந்தளித்தல் தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரத்தில் அவசியமாகின்றது. ஆனால், விலை மாற்றத்தின் இயல்பேகூட முந்திய முதலீட்டினால் இயக்கப் படுகிறது. எனவே, முந்திய முதலீடு தவறானதாக இருந்தால், விலை களின் மாற்றமானது சரியான முதலீட்டு முடிவுகளை மேற்கொள் வதற்கான சரியான வழிகாட்டியாக இருக்கமுடியாது. சரியான முறையில் இணைந்து செயல்படாத முதலீட்டு முடிவுகளிலிருந்து தோன்றும் இத்தகைய சமுதாய இழப்புகளுக்கான வாய்ப்பைப் பொருளாதாரத் திட்டமிடுதல் குறைக்கின்றது.[1]

## முன்னேற்றத்திற்கான திட்டமிடுதலின் இயல்பு
## (The Nature of Developmental Planning)

எதிர்காலத் தேவைகளையும் வளர்ச்சிக்கான வாய்ப்புகளையும் மதிப்பீடு செய்தல், இருக்கக்கூடிய மூலவளங்களைப்பற்றிச் சரியான முறையில் தெரிந்துகொள்ளுதல் இந் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் முறையில் மூலவளங்களைப் பகிர்ந்தளித்தல் என்பவைகளே முன்னேற்றத்திற்கான திட்டமிடுதலின் அடிப் படைக் காரணிகளாகும். இது ஐந்து முக்கியமான நிலைகளைப் பெற்றிருக்கிறது. முதலாவது: நாட்டு மூலவளங்களின் செலவை மதிப்பிடுவதற்காக அவற்றைப்பற்றிய உசாய்வுகளை மேற் கொள்ளுதலும், மாற்று வழிகளைக் காணுதலும். இரண்டாவது:

[1] Dobb, Maurice *An Essay on Economic Growth and Planning*, Routledge and Kegan Paul, London, 1960, pp. 6 & 7.

இத்தகைய பல விதமான மாற்று வழிகளுக்கிடையே பொதுவான தொரு முடிவை மேற்கொள்ளுதல். மூன்றுவது: செயல் திட்டங்களை வகுத்தல். நான்காவது: திட்டங்களைச் செயல் படுத்துதல். ஐந்தாவது: மாற்றமடையும் நிலைகளுக்கு ஏற்ப அதனை இசைவிப்புச் செய்தல். சூழ்நிலைகள் மாற்றங்களை அவசிய மாக்கும்போது அத்தகைய மாற்றங்களைக் கொண்டுவருவதற்கு ஏற்றவண்ணம் திட்டமானது நெகிழ்ச்சித்தன்மை உடையதாக இருக்கவேண்டும் என்பதை ஐந்தாவது குறிப்பு குறிப்பிடு கின்றது.[1] பொருளாதாரப் பகுத்தாய்வின் மையத்தில் காலம் என்ற காரணியையும் மாற்றம் என்ற சிக்கலையும் பொருளாதார வளர்ச்சிக்கான திட்டமிடுதல் என்பது புகுத்துகிறது என்பதே இத்தகைய திட்ட மிடுதலின் மிக முக்கியமான இயல்பாகும். தற்கால மூலவளங்களின் இருப்பை எதிர்கால முன்னேற்ற வாய்ப்புகளோடு இது இணைக்கிறது. எனவே, எதிர்காலத்தைப் பற்றிய முன்னறிவு, எதிர்காலத்தைப்பற்றிய நுட்பமான நோக்கு ஆகியவை திட்டமிடுதலில் எந்த அளவுக்குக் கொண்டு வரப்படுகின்றன என்பதைப் பொறுத்துத்தான் இத்தகைய திட்டமிடுதலின் வெற்றி அமைந்திருக்கிறது.[2] திட்டமிடுதலின் இத்தகைய பகுதியானது குறுகிய காலத்திற்கெனத் திட்டமிடுதல், நீண்ட காலத்திற்கெனத் திட்டமிடுதல் ஆகிய இருவகைத் திட்ட மிடுதலின் அவசியத்தையும் கோடிட்டுக் காட்டுகிறது. எதிர்கால முன்னேற்றத்தைப்பற்றிய பரவலான அமைப்பு அதற்கான வழிகள் ஆகியவற்றைப்பற்றி நீண்டகாலத் திட்டம் குறிப்பிடுவ தாக இருக்கும்.

நான்காண்டுக் காலம் முதல் ஏழாண்டுக் காலம் வரையிலான குறுகியகாலத் திட்டம் குறிப்பிட்ட அக் காலத்திற்குள் நிறை வேற்றப்பட வேண்டிய இலக்குகளையும் குறிப்பிடுவதாக இருக்கும். ஆண்டுதோறுமான திட்டம் என்பது குறுகிய காலத்திட்டத்தை ஓர் ஆண்டுக் காலத்தைக் கொண்டுள்ள குறுகிய காலங்களுக்கான திட்டமாகப் பகுப்பதாகும். இவ் வோரண்டுத் திட்டங்கள் ஓர் ஆண்டிற்குள் நிறைவேற்றப்பட வேண்டிய திட்டங்களையும், அவற்றிற்கான ஆண்டுதோறுமான வரவுசெலவுத்திட்டங்களையும் மேற்கொண்டிருக்கும்.[3] பொருளாதாரத்திற்குள் கிடைக்கத்தக்க

1 Hanson, A H., *Public Enterprise and Economic Development* Routle dge and Kegan Paul, London, 1959, p. 111.

2 Elliot, John E., Economic Planning Reconsidered, *Quarterly Journal of Economics*, February, 1958, p. 67.

3 *Economic Bulletin for Asia and the Far East*, U. N., December 1951, p. 28.

மூலவளங்களின் அடிப்படையில் பெறக்கூடிய முன்னேற்றத்தின் இயல்பைப்பற்றிய பொதுவானதொரு கருத்தைத் தெரிந்துகொள் வதற்கு நீண்டகாலத் திட்டம் அல்லது எதிர்காலத் தோற்றத் திட்டம் அவசியமாகின்றது முன்னேற்றத்திற்கான வழிகளைப் பற்றிப் பொதுவாகவும், பரவலாகவும் அது தெரிவிக்க வேண்டும். ஆனால், குறிப்பிட்ட கால அளவிற்குள்ளாகப் பலவழிகளிலும் பெறவேண்டிய உண்மையான முன்னேற்றத்தைப்பற்றி உறுதி யாகக் குறிப்பிடுவதற்குக் குறுகிய காலத் திட்டங்கள் மிக அவசிய மானவைகளாகும். குறிப்பட்ட காலத்தில் பெறவேண்டிய இலக்கு களைப்பற்றி உறுதியாகக் குறிப்பிடாவிட்டால் முயற்சிக்கான ஆர்வம் எதுவும் இல்லாமல் போய்விடும். இது தவிர, நாட்டில் கிடைக்கத்தக்க நிதி மூலவளங்கள், உண்மை மூலவளங்கள் இவற்றோடு பொருளாதாரத்தின் முதலீட்டுத் தேவைகள் ஆகிய வற்றிற்கிடையே சரியானதொரு சமநிலையைக் கொண்டுவரு வதற்கும் இது உதவி புரிகின்றது.

பொருளாதாரத்திலிருக்கும் ஒவ்வொரு துறையின் அல்லது அலகின் விளைவும் அதிகரிக்கும் வகையில் பொருளாதாரத்தின் பலவிதமான உற்பத்தி அலகுகளின் பெருக்கத்தைத்தான் பொருளாதார முன்னேற்றம் என்பது குறிக்கிறது உற்பத்தியின் பல வழிகளிலும் அதிக அளவு முதலீடுகளை மேற்கொள்ளுதல், உற்பத்திக்கான பண்டங்களை அதிக அளவில் பயன்படுத்துதல், அதிக வேலைநிலை ஆகியவற்றை அதிகரித்த உற்பத்தி என்பது குறிக்கிறது. இவ்வாறுக விளைவு அதிகரிக்கும்போது. வருமானமும் அதிகரிக்கின்றது. இருப்பினும், பலவிதமான உற்பத்தி அலகுகளும் பலவிதமான அளவுகளில் பெருகிக்கொண்டு செல்லும் என்பதால் (ஒரு சிலவற்றில் குறைந்துகொண்டும செல்லும் என்பதால்) விளைவின் கலவையும் வருமானப் பகிர்வு முறையும் சமுதாயத்தின் பலவிதமான வருமானம் பெறும் பிரிவினர்களிடையே ஒரே மாதிரியாக இல்லாமல் வேறுபட்ட நிலையிலிருக்கிறது. எனவே, உற்பத்தி செய்யப்படும் பலவிதமான பண்டங்கள், பணிகள் ஆகியவற்றிற்கும் இத்தகைய பண்டங்கள், பணிகள் ஆகிய வற்றின் அளிப்புக்கும் இடையே சமநிலையை உறுதி செய்வதே உறுதியான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்குரிய முக்கியமான காரணங்களில் ஒன்றாகும். இதை வேறொரு விதத்திலும் குறிப்பிட முடியும். உள்நாட்டுத் தேவை, உள்நாட்டு விளைவு ஆகியவற்றைப் பொறுத்த மட்டிலும், பலவிதமான தொழில்களிலும் இருக்கும் முதலீட்டின் பகிர்வானது தேவைப் படும் பலவிதமான பண்டங்களுக்கிடையே அதிகரித்த வருமானத் தின் பகிர்வுக்குச் சரிசமமாக இருந்தால்தான் பொருளாதார

முன்னேற்றமானது இசைவான முன்னேற்றம் என்று கருதப்பட முடியும். அப்படி இல்லாவிட்டால் ஒரு சில துறைகளில் உறுதி யின்மை இருக்கும். மனநிறைவு தரத்தக்க தேவைப் பகுத்தாய்வின் அடிப்படையில் பொருளாதாரத்திலிருக்கும் பலவிதமான துறை களுக்குமான திட்டமிடுதல் மேற்கொள்ளப்படுமாஞல் இத்தகைய சூழ்நிலை தவிர்க்கப்பட முடியும்.

பலவிதமான முன்னேற்றத் திட்டங்களுக்கும் முதன்மை இடத்தைக் குறிப்பிடுவது அறிவியல் அடிப்படையிலமைந்த திட்ட மிடுவதற்கான இரண்டாவது தேவையாகும். முன்னேற்றத் திற்கான மூலவளங்களின் தேவையோடு ஒப்பிடும்போது, மூலவளங்கள் கிடைக்கும் அளவு பற்ருக்குறையாக இருக்கின்ற காரணத்தால் இது மிக அவசியமான தொன்ருகிறது. பொருளா தாரத்தில் கிடைக்கக்கூடிய மூலவளங்களின் அடிப்படையில்தான் விளைவின் ஒரு மொத்தமான இலக்கு நிர்ணயிக்கப்பட முடியும். நன்கு சிந்தித்து மூலவளங்களை மிகவும் திறமையான முறையில் பயன்படுத்திஞல். அது பொருளாதாரத்திற்கு அதிக அளவுக்குத் துன்பத்தைக் கொடுக்காமலேயே இலக்குகளைப் பெறுவதற்குத் துணை செய்வதாக அமையும். எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்கு உற்பத்தியைப் பெருக்குவது என்பதுதான் அடிப் படையான மிகப் பெரிய நோக்கம். இருப்பினும், மூலவளங்களின் அளவு குறிப்பிட்ட நிலையிலிருக்கும்போது, ஒரு மொத்தமான பொருளாதார வளர்ச்சிக்குத் துணையாக இருக்கக்கூடிய வளர்ச்சித் திட்டங்களையும். நாட்டின் பாதுகாப்புக்கு முக்கியமானவை களாகவும், நாட்டின் மூலவளங்களின் இருப்புக்கும், நாட்டின் தேவைக்கும் பொருத்தமானவைகளாகவும் உள்ளவைகளுக்கு அதிகமான சிறப்பிடம் கொடுத்துப் பலவிதமான .திட்டங்களுக் கிடையே பேதங்காட்டித் தேர்ந்தெடுக்கும் திட்டங்களையும் தேர்ந்தெடுப்பதோடுகூட, மேற்கண்ட நிலைகளை நிறைவேற்ருத திட்டங்களுக்குக் குறைவான சிறப்பிடம் தருதல் அல்லது முழுமையாக அத் திட்டங்களை விட்டுவிடுதல் என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும் என்பதும் மிக முக்கியமானதாகும். குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் உள்ள பல துறைகளிஞல் குறிப்பிடப்படும் பலவிதமான திட்டங்களுக்கிடையே போட்டி போட்டுக்கொண்டு முதன்மை இடத்தைப் பெற விரும்பும் இயல்பானது இந் நாடுகளில் மிகச் சிறந்த திட்டங்களைத் தேர்ந் தெடுப்பதில் அடிக்கடி காணப்படும் குறையாக இருக்கிறது என்று பேராசிரியர் டின்பெர்கன் (Prof. Tinbergan) குறிப்பிடுகிருர். ஒரு சில வகைகளைச் சேர்ந்த திட்டங்களுக்குமட்டும் கொடுக்கப் படும் தேவையற்ற முதன்மையிடத்தைக் குறைப்பதற்குப் பல

விதமான துறைகளுக்குமிடையே நல்லிணக்கத்தைக் கொண்டு வருவதன் மூலம் நாட்டின் திட்டக்குழு இத்தகைய வேறு பாடுகளைக் குறைப்பதொன்றே வழியாகும். திட்டங்களைத் தேர்ந்தெடுக்கும்போது மூலதனம், நிலம். அந்நியச் செலாவணி போன்ற கிடைத்தற்கரிய மூலவளங்கள் எந்த அளவுக்குக் கிடைக் கின்றன என்பதைக் கருத்தில் கொண்டு திட்டங்களைத் தேர்ந் தெடுக்க வேண்டும் என்று டின்பெர்கன் குறிப்பிடுகிறார். அதோடு இந்நிலையில் கீழ்க்காணும் மூன்று கொள்கைகளையும் கையாண்டால் அது மிகச் சிறப்புடையதாக இருக்கும் என்றும் டின்பெர்கன் குறிப்பிடுகிறார். முதலாவதாக, முதலீட்டுத் திட்டங்களைத் தேர்ந்தெடுத்தல் என்பது மற்ற முடிவுகளிலிருந்து வேறுபடுத்தப் பட்டிருப்பதாக இருக்கக்கூடாது. இரண்டாவதாக, நாட்டின் ஒரு மொத்தமான உற்பத்தித் திட்டத்திற்குப் பொருந்துவதாக முதலீட்டுத் திட்டம் அமைந்திருக்க வேண்டும். மூன்றாவதாக, நாட்டின் பொதுநலத்திற்கு உச்ச அளவு நன்மையைத் தரத்தக்க தான திட்டங்களை உள்ளடக்கியதாக மொத்தத் திட்டம் அமைந் திருக்க வேண்டும் இவற்றைத் தவிர, பொருளாதார அமைப் புக்குள்ளேயே வளர்ச்சிக்கான சக்திகளைத் தோற்றுவிக்க வேண்டும். மேலும் குறிப்பிட்ட திட்டம் அதிகமான சேமிப்புக்கு வகை செய்கிறதா அல்லது குறைவான சேமிப்புக்கு வகைசெய்கிறதா என்ற வினாவிற்குச் சிறப்பிடம் தந்து திட்டங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.[1]

பலவிதமான திட்டங்களுக்கிடையே சிறப்பிடம் கொடுப்பது எவ்வளவு முக்கியமானதோ, அந்த அளவுக்குப் பலவிதமான தொழில்களுக்குமிடையே ஒருமொத்தமான சமநிலையைப் பெறு வதும் முக்கியமானதாகும். தேவையின் மூலமாகவும், அளிப் பின் மூலமாகவும் பொருளாதாரத்தில் உள்ள ஒவ்வோர் உற்பத்தி அலகும், ஒவ்வோர் உற்பத்தித் துறையும் ஒன்றோடொன்று மிக நெருக்கமான தொடர்புடையதாக இருக்கிறது. ஒவ்வொரு தொழிலும் செயல்படுவதற்கு மற்றத் தொழில்களின் பண்டங்கள் தேவைப்படுகின்றன. எனவே, பல தொழில்களும் வளர்ச்சி பெற்றால்தான், ஏதாவது ஒரு தொழிலில் வளர்ச்சி பெருகும். அதே நேரத்தில் குறிப்பிட்ட இத் தொழிலின் வளர்ச்சி மற்றத் தொழில் களின் வளர்ச்சிக்கு உதவி செய்யத்தக்கதாக இருக்கும். தேவைப் பக்கத்திலிருந்து பார்க்கும்போது, மற்றத் தொழில்களின் வளர்ச்சி இல்லாமலிருக்கும்போது குறிப்பிட்டதொரு பண்டத்தின்

[1] Tinbergen, J., *The Design of Development*, Johns Hopkins, Baltimore, 1958, pp. 29—37

அதிகரித்த உற்பத்தியைப் பெறுவது முடியாததாகிறது. அதே நேரத்தில் மற்றத் தொழில்களின் வளர்ச்சி முதலில் குறிப்பிடப்பட்டுள்ள தொழில்களின் பண்டங்களைச் சார்ந்திருக்கிறது. தொழில்கள் இவ்வாறு ஒன்றோடொன்று மிக நெருக்கமான தொடர்புடையவைகளாக இருக்கின்றன. எனவே, ஒரு தொழிலின்மீதான முதலீடு மற்றத் தொழில்களின்மீது எத்தகைய விளைவுகளைப் பெற்றிருக்கும் என்பதைப்பற்றிய முழு அறிவு இருப்பதன் அடிப்படையிலேயே அத்தகைய முதலீட்டைப்பற்றிய திட்டங்கள் அமைக்கப்படுகிறன்றன. இந்த அடிப்படையில் பார்க்கும்போது, 'அறிவியல் அடிப்படையிலான திட்டமிடுதல் என்பது, ஒரே நேரத்தில் (ஒருங்கிணைக்கப்பட்ட) பகுத்தாய்வின் எல்லாவற்றையும் நல்லிணக்கப்படுத்தி, குறிப்பிட்ட உத்தம அளவில் அதனைச் செய்வதேயாகும். எல்லாமே எல்லாவற்றையும் தீர்மானிக்கத்தக்க நிலையிலிருக்கும் ஒரே நிலையிலுள்ள சிக்கலை ஒரு மொத்தமாகத் தீர்ப்பதேயாகும்'.[1] பல தொழில் அல்லது பல விளைவு அட்டவணையில் (Inter industry or inter out put table) உற்பத்தியாளர்கள் எல்லோரும் வரிசையாகக்குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள். நுகர்வோர்கள் அல்லது வாங்குபவர்கள் பத்திகளில் குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள். அத்தகைய அட்டவணையானது பல உற்பத்தி அலகுகளுக்கிடையேயுள்ள உடன் தொடர்புகளைத் தெளிவாகக் காட்டுகின்றது. மேலும் அவ் வட்டவணையானது முதலீடுகளைப் பகிர்ந்தளிப்பதில் உத்தமத் தீர்வைக் கண்டுபிடிப்பதற்குத் திட்டமிடுபவர்களுக்கு உதவுகின்றது, எதிர்காலத் தேவை கிடைக்கத்தக்க மூலவளங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் உற்பத்திக்கான இறுதி இலக்குகள் நிர்ணயிக்கப்பட்டவுடன் எந்த அளவுக்கு முதலீடுகள் அதிகரிக்கப்பட வேண்டும் என்பதைக் கணக்கிடுவது மிகவும் எளிதாகின்றது. மேலும் பல விதமான தொழில்களிலும் பொறிநுட்பக் கெழுக்களின் (Technical coefficients) அல்லது ஒவ்வொரு தொழிலின் உற்பத்திக்கெழுக் (Co efficients of production) அடிப்படையில் எந்த அளவுக்குச் களின் செயல் அளவை (Scale of operation) அதிகரிக்க வேண்டும் என்பதைக் கணக்கிடுவதும் எளிதாகின்றது. ஏற்கெனவே இருக்கக் கூடிய தொழில்களில் உள்ள காரணிகளைப் பயன்படுத்தும் அளவு-விளைவு அளவு நுகர்வுத் தொடர்புகள் (Input-ontput and consumption relations) ஆகியவை நன்கு தெரியுமாதலால் பொருளாதாரத்தின் விரிவான போக்குகளைச் சமப்படுத்துவதற்காக முற்றிலும் புதியதொரு கணக்கீடு செய்யவேண்டியது அவசிய

[1] Frisch, Ragnar, *Planning for India*, Asia Publishing House, Bombay, 1960. p. 6.

மில்லை. அடுத்தடுத்து வரும் மதிப்பீடுகளால் (Approximation) உத்தம முதலீட்டு அமைப்பு காணப்படும்வண்ணம், ஏற்கெனவே இருக்கக்கூடிய தொடர்புகளில் தேவையான மாற்றங்களைப் புகுத்துவதே போதுமானதாகும்.[1] காரணகளைப் பயன்படுத்தும் அளவு விளைவின் அளவு ஆகியவற்றின் அட்டவணையை விரிவு படுத்திப் புதுமைப்படுத்துவதன்மூலம் பொருளாதாரத் திட்டமிடு தலுக்கான இக்கால முறைகள் மென்மேலும் அதிக அளவுக்கு அறிவியல் தன்மை உடையனவாகவும், முறைப்படுத்தப்பட்டன வாகவும் மாறிவருகின்றன. முதலீட்டுத் திட்டத்திற்கு எதிர்காலத் தேவையின் போக்குகளைப்பற்றிய மதிப்பீடு பேரளவிற்குத் தேவைப்படுகின்றது. விளைவுகளுக்கு எதிராக எல்லாவிதமான தேவைகளும் சமநிலைப்படுத்தப்படும் அளவினால் காட்டப்படும் திட்டமிடுதலின் திறமை இத்தகைய எதிர்கால மதிப்பீடுகளை நேரடியாகவே சார்ந்திருக்கிறது. இவ் வழியில் பலதொழில் அட்ட வணைகள் மிகவும் உதவி செய்கின்றன. உண்மையிலேயே பொருளா தார முன்னேற்றத்திற்கான திட்டங்களை வகுப்பதில் இத்தகைய முறையைப் பயன்படுத்தும் அளவானது. திட்டமிடும் நடவடிக்கை யில் நாட்டின் திறமையைக் குறிப்பிடுகிறது.

## ஆட்சி ஆதிக்கக் கொள்கையுடைய திட்டமிடுதலும் மக்களாட்சி முறையில் திட்டமிடுதலும் (Authorisation and Democratic Planning)

மேலே குறிப்பிட்டுள்ள வகையைச் சேர்ந்த திட்டமிடு தலானது பொருளாதார நடவடிக்கைகளில் அதிக அளவுக்கு அரசின் தலையீட்டை உட்கொண்டிருக்கிறது. நாட்டில் உள்ள எல்லாத் துறைகளையும், எல்லாத் தொழில்களையும் சேர்த்துப் பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டத்தைத் தீட்டி, அதனைச் செயல்படுத்துதற்குத் தகுதியுள்ள ஒரே பதிலாண்மை அரசாங்கமே ஆகும். அறிவியல் அடிப்படையில் அமைந்ததா கவும் திறமை மிகுந்ததாகவும் உள்ள திட்டமிடுதல் என்ப தற்குப் பல தொழில் பகுத்தாய்வில் அமைந்துள்ள திட்ட மிடுதல் மிக அவசியமாக இருக்கின்ற காரணத்தால் திட்டமிடுதல் எந்த அளவுக்கு விரிவானதாகவும், ஒழுங்கு படுத்தப்பட்டதாகவும் இருக்கின்றதோ அந்த அளவுக்கு அரசின் பங்கும் அதிகமானதாக இருக்கும். அப்போது திட்டமிடுதல் என்பது மிக இறுக்கமான தாகவும், ஆட்சி ஆதிக்கக் கொள்கையுடையதாகவும் மாறுகிறது. திட்டமிடுதல் மக்களாட்சி முறையிலானதாக இருக்கும்போது

[1] Lange, Oskar, *Essays on Economic Planning*, Asia Publishing House Bombay, 1960, p. 6.

அல்லது நெகிழ்ச்சித் தன்மையுடையதாக இருக்கும்போது திட்டமிடுதல் எந்த அளவுக்குப் பரவலானதாகவும், திறன் மிகுந்ததாகவும், இருக்குமோ அதைக் காட்டிலும் அதிகமான அளவிற்குப் பரவலானதாகவும், திறன் மிகுந்ததாகவும் ஆட்சி ஆதிக்கக் கொள்கையுடைய திட்டமிடுதல் அமைகின்றது. மக்களாட்சி முறைத் திட்டமிடுதலில் திட்டமிடுதல் முறைமைப்படுத்தப்பட்ட துறையிடமே (Official Sector) இருக்கிறது. ஆனால், அரசின் எல்லைக்கு வெளியிலிருந்து மறைமுகமான வழிகளில் திட்டமிடும் நடவடிக்கையை வழிப்படுத்தவும், ஒழுங்குபடுத்தவும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. இத்தகைய திட்டமிடுதலானது தடையற்ற தன்முயற்சி அமைப்பைச் சார்ந்திருக்கிறது. அரசாங்கம் அதன் அரசிறைக் கொள்கையாலும், பணவாக்கக் கொள்கையாலும் தொழில் முயல்வோர்களின் முதலீடு செய்யும் உற்சாகத்தின்மீது பங்காற்றுவதன் மூலமாகப் பொருளாதார முடிவுகளையும், முதலீட்டு முடிவுகளையும் இயக்குவதற்கு மட்டுமே அரசாங்கம் முயற்சிசெய்கிறது. ஆனால், பொருளாதாரம் செயல்படக்கூடியதைக் கட்டுப்படுத்துவதோ, ஒழுங்குபடுத்துவதோ கிடையாது. மொத்தத் தொகை அல்லது முதலீட்டு விதகிம் என்பதற்கும், முதலீடு உள்ளார்ந்திருக்கக்கூடிய பொறிநுட்ப வடிவங்களுக்கும், பொருளியல் துறைகளுக்குமிடையே அத்தகைய பகிர்வுக்கும் இது பொருந்துவதாகும்.[1]

ஆட்சி ஆதிக்கக் கொள்கையுடைய அல்லது சோசலிசத் திட்டமிடுதல் உலகில் உள்ள ஏழ்மை நாடுகளுக்கும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்கும் மிகவும் கவர்ச்சியானதாகத் தென்படுகிறது. இத்தகைய திட்டமிடுதலின் அறிவியல் அடிப்படை இயல்பும், அதன்திறமையுமே இதற்கான காரணங்களாகும். பொருளாதாரத் திட்டமிடுதலின் பலவிதமான நிலைகளிலும் பயன்படுத்தப்படும் முறைகள் தனிப்பட்ட நபர்களின் விருப்பம்போல் நடக்கும் தன்மையைப் பேரளவிற்குக் கட்டுப்படுத்தக்கூடியதாக இருக்கின்றன. இருந்தாலும், இலக்குகள் யாவும் குறித்த காலத்தில் குறிப்பிட்ட விதங்களில் அடையப்படுகின்றன என்ற உண்மையின் காரணமாக, இத்தகைய முறையானது ஏழ்மை நாடுகளிலும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளிலும் மிகவும் பிரபலமாகியிருக்கின்றன. இத்தகைய நாடுகள் அவற்றின் பொருளாதார நிலைகளை உயர்த்திக்கொள்ள வேண்டிய பேரார்வத்தையும், உடனடித் தேவையையும் கொண்டிருக்கின்றன. மேலும், இத்தகைய நாடுகளில் மிகவிரைவான உற்பத்திப் பெருக்

1 Dobb, Maurice, *An Essay on Economic Growth and Planning*, Routledge and Kegan Paul, Londor, 1960, p. 2.

கத்திற்கு மிகுந்த சிறப்பிடம் தரப்படுகிறது. இக் காரணங்களால் இந் நாடுகளில் இத்தகைய திட்டமிடுதல் முறை மிகவும் பிரபலமாகியிருக்கின்றது. மேலும் பொருளாதாரத்தில் தன்னிறைவு நிலையைப் பெறவேண்டும் என்றும் தொழில் பெருக்கத்தைப் பெற வேண்டும் என்றும் இந்நாடுகளில் வலியுறுத்தப்படும் உண்மையின் காரணமாகவும் ஏழ்மை நாடுகளில் ஆட்சி ஆதிக்கக் கொள்கையுடைய திட்டமிடுதல் எளிதாகப் பரவுகிறது. இவை தவிர, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் தேவைப்படும் சேமிப்புகளைத் தானாகவே திரட்டித்தரும் தகுதியை மக்கள் பெற்றிருக்கவில்லை. ஆனால், பொது முதலீட்டுத் தேவைகளுக்கேற்ப உள்நாட்டுச் சேமிப்பைச் சமப்படுத்த வேண்டிய அவசியமும் இருக்கிறது. இத்தகைய சூழ்நிலையில் தேவைப்படும் சேமிப்புகளைத் திரட்டுவதற்கு அரசின் நடவடிக்கைதான் உதவிசெய்யத்தக்கதாக இருக்கிறது. எனவே இந் நாடுகள் திட்டமிடுதலில் ஆட்சி ஆதிக்கக் கொள்கையுடைய முறைகளைக் கையாள விரும்புகின்றன. முதலீட்டு விகிதத்தில் அதிக அளவிலான குறைப்பு குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் விரும்பப்படுவதில்லை. ஆனால் அதே நேரத்தில் பலவிதமான இடையூறுகளின் காரணத்தால், தன்னிச்சையான சேமிப்புகளை அதிக அளவுக்குச் சார்ந்திருப்பதும் இயலவில்லை. இக் காரணங்களால் மென்மேலும் அதிகப்படியான அரசு நடவடிக்கைகளும், ஆட்சி ஆதிக்கக் கொள்கையுடைய திட்டமிடுதலும் இந் நாடுகளில் வரவேற்கப்படுகின்றன.

நிலைமை இவ்வாறிருந்தாலும்கூட உண்மை நிலவரத்தின்படி பார்த்தால், இன்றைய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பயன்படுத்தப்படும் திட்டமிடுதலானது, எல்லா நாடுகளிலும் மிகவும் இறுகலான ஆட்சி ஆதிக்கக் கொள்கையுடைய வகையைச் சேர்ந்ததாக இல்லை. மாறாக, தனியார் முயற்சி அல்லது கலப்பு முயற்சியுடைய பொருளாதாரத்தின் தராதரமான வரையறைக்குட்பட்ட திட்டமிடுதல் என்பதிலிருந்து சர்வாதிபத்திய (Totalitarian) பொருளாதார அமைப்பின், எல்லாவற்றையும் உள்ளடக்கியதான விரிவான திட்டமிடுதல்வரை பரந்து காணப்படுகிறது. வளர்ச்சிபெற்ற நாடுகளுக்குள்ளும், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள்ளும் எந்த விதமான தூய்மையான வகையைச் சேர்ந்த திட்டமிடுவதற்கும் பொருத்தமானதொரு முறையைக் காண்பது மிகவும் கடினமானது என்பதே உண்மை. சோசலிசத் திட்டமிடுதல் முறைக்கு நல்லதொரு எடுத்துக்காட்டாக விளங்கும் ருசிய நாட்டில் கூட, சிறு சிறு தொழிலதிபர்கள் இருக்கின்றார்கள். ருசிய நாட்டிற்கு மாறான நிலையில் உள்ள ஐக்கிய அமெரிக்க நாட்டிலும் பேரளவில் பொதுத்துறை செயல்பட்டுக்கொண்டு

தானிருக்கிறது. இது தவிர, தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரங்களில் அரசின் பொருளாதார நடவடிக்கைகளில் மென்மேலுமான அதிகரிப்பு தோன்றிக்கொண்டேயிருக்கிறது. 19ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்து அரசு நாட்டு வருமானத்தில் 10% அளவுக்கும் குறைவாகவே செலவிட்டுவந்தது. ஆனால் இப்போதிருக்கும் ஐரோப்பிய நாடுகளில் பலவற்றிலும் நாட்டு வருமானத்தின் 20% அளவுக்கும் அதிக அளவிலான செலவுக்கு அரசு பொறுப்பாக இருக்கிறது.

(அ) நல்ல முறையிலான திட்டமிடுதலின் இயல்பும். அரசினது தலையீட்டின் அளவும் குறிப்பிட்ட நாட்டின் பொருளாதார சமுதாயச் சூழ்நிலைகளைச் சார்ந்திருக்கிறது என்று பொதுவாகக் குறிப்பிடப்படுகிறது. முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் எதிர்கால வாய்ப்புகள் தெளிவற்றவைகளாக இருந்தன; புள்ளி விவரங்கள் போதுமான அளவுக்குக் கிடைக்கவில்லை. கிடைக்கக்கூடிய மூலவளங்களின் அளவு சரியாகத் தெரியவில்லை. எனவே, பொருளாதார முன்னேற்றத்திற்கு விரிவான அடிப்படையிலான திட்டமிடுதல் என்பது முடியாததாக இருந்தது. ஆதலால் திட்டமிடுதல் என்பது மிகவும் நெகிழ்ச்சித்தன்மையுடையதாகவும் பொதுவானதாகவும் இருந்தது.

(ஆ) திட்டமிட்ட முன்னேற்றத்தில் தனியார்துறையிலிருந்து தோன்றும் ஆர்வம். முயற்சி, நடவடிக்கைகள் ஆகியவற்றின் அளவையே பேரளவிற்குச் சார்ந்திருக்கிறது அரசின் பங்கு. இந்த நோக்கில் பார்க்கும்போது பிரான்சு நாட்டின் சுட்டிக் காட்டும் வகையைச் சேர்ந்த திட்டமிடுதல் (Planning of the indicative type) சரியானது என்பதோடு மட்டுமல்லாமல் தனியார் தொழில் முயற்சியால் பல காலமாக அமைக்கப்பட்ட பொருளாதாரங்களைப் பெற்றுள்ள வளர்ச்சி பெற்ற நாடுகளுக்கு மிகவும் பொருத்தமானது என்பதும் குறிப்பிடப்படவேண்டும்.

(இ) மக்கள் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க விருப்பம் உடையவர்களாக இருக்கிறார்களா. பொருளாதார நடவடிக்கைகளை அரசிடம் ஒப்படைக்க விரும்புகிறார்களா என்பது போன்ற அரசின் நடவடிக்கைகளுக்கான மக்களின் பொதுவான நோக்கங்களும் நிர்வாகத் திறனும் திட்டமிடுதலின் வகையையும், இயல்பையும் நிர்ணயிக்கின்றன. இறுதியாக, ஒருநாடு அதன் முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் எதிர்நோக்கும் குறிப்பிட்ட வகைச் சிக்கல்களும் பொருளாதாரத் திட்டமிடுதலை இயக்குவனவாக இருக்கின்றன. மூலதனம். அந்நியச் செலாவணி, திறன் மிகுந்த உழைப்பு, போக்குவரத்து வசதி ஆகியவைகளில் பற்றாக்குறை

போன்ற தடைகள் இருப்பதானது அதிகரித்த உற்பத்தி நடவடிக்கைகளைத் தடை செய்பவைகளாகும். அத்தகைய நிலையுள்ள தொரு நாட்டில் திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தின் முதல் நோக்கமானது வளர்ச்சிக்கான இத்தடைகளை நீக்குவதாக இருக்க வேண்டும். சீர்திருத்தும் நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல், சரியான அடிப்படை அமைக்கப்படும்வரை ஒழுங்குபடுத்தப்பட்ட விரிவான திட்டத்தை ஒத்திப்போடுதல் ஆகியவற்றின் மூலம் இத் தடைகளை நீக்க முயலலாம்.

இருப்பினும், ஒருசில நாடுகளில்மக்கள் மக்களாட்சிமுறைக்குச் சிறப்பிடம் தந்திருப்பார்கள். அத்தகைய நாடுகளில் பொருளாதார வளர்ச்சியை விரைவுபடுத்துவதற்கு மிக அடிப்படைத் தேவைகளான பொதுமக்கள் ஒத்துழைப்பு, தானாகவே முன்வந்து முயற்சிகளை மேற்கொள்தல் என்பவை தோற்றுவிக்கப்பட வேண்டுமானால் திட்டமிடுதல் மக்களாட்சி முறையின்பாற்பட்டதாக இருக்கவேண்டும், மேலும் திட்டத்தை வகுப்பதிலும் நிறைவேற்றுவதிலும் சமுதாயம் பெரும்பங்கை மேற்கொள்ளச் செய்யவேண்டும். திட்டமிடுதல் என்பது மக்களுக்காக, மக்களால் மேற்கொள்ளப்படும் ஒரு செயல் என்பதை அவர்கள் உணரும் படியாகவும் செய்ய வேண்டும். அதிக அளவுக்கு மையப்படுத்துதல் என்பது தனியார் முயற்சியை அழிப்பதாக அமைந்துவிடும். குறிப்பாக ஒழுக்கக்கட்டுப்பாடுகளுக்கு உட்படவர்களாகவும், மேற்பார்வையிடும் வேலைக்குப் பழக்கமுள்ளவர்களாகவும் உள்ள தொழிலாளர்கள் இருக்கும் இடங்களில் இத்தகைய மையப் படுத்தும் முயற்சி தனியார் முயற்சியை அழிப்பதாக இருக்கிறது. ஒருசில நாடுகளில் தனிநபர்கள் முயற்சியற்றவர்களாகவும், ஆர்வ மில்லாதவர்களாகவும், தலைமைக்கு அரசாங்கத்தை எதிர்நோக்கி யுள்ளவர்களாகவும் இருப்பார்கள். அத்தகைய நாடுகளில் அவர்களின் பொருளாதாரத் தலைவிதியை நிர்ணயிக்கும் பொறுப்பை அரசு மேற்கொள்ளும்போது, அஃது அவர்களின் முயற்சியின்மையையும், சோம்பியிருக்கும் தன்மையையும் அதிகரித்துவிடுகிறது. எனவே, 'அரசியல் திட்டமிடும் இயந்திர அமைப்பும் தனிப்பட்டவர்களும் உள்ளூர் மக்களும் ஒவ்வொரு நிலையிலும் பங்கு பெறுவதற்கு முழு அளவிலான வாய்ப்பையும் தரத்தக்கதாக இருக்க வேண்டும்............உள்ளூர் மக்களின் அல்லது குறிப்பிட்ட நிலப் பகுதியில் வாழும் மக்களின் முன்மொழிதல்களிலிருந்து தோன்றும் போக்கினால் திட்டங்களைத் தீட்டவும், இலக்குகளை நிர்ணயிக்கவும் வேண்டும்'[1] என்று திட்டமிடுதலைப் பற்றித்

[1] Frankel, Herbet S., United Nations Primer for Economic Development,' *Quarterly Journal of Economics*, August, 1952, p. 311.

ஐக்கிய நாடுகளின் நிபுணர்குழு வலியுறுத்தியுள்ளது. பல விதமான பொது உரிமை நிலைகளிலும், தொழில் கட்டுப்பாட்டு நிலைகளிலும் பொருளாதாரத் திட்டமிடுவதற்கான நல்ல பல வாய்ப்புகள் ஏராளமாக இருக்கின்றன. 'திட்டமிடப்படாத சோசலிசம்' என்பதும், 'திட்டமிடப்பட்ட முதலாளித்துவம்' என்பதும் ஒன்றுக்கொன்று முரண்பாடுடையவைகள் அல்ல என்பதை ஸ்காண்டிநேவிய நாடுகள் (Scandinavian countries). இங்கிலாந்து ஆகியவற்றின் திட்டமிடுதல், நாட்டுடைமையாக்குதலைப் பொறுத்த அண்மைக்கால அனுபவம் தெளிவாகக் காட்டுகிறது. நன்கமைக்கப்பட்டதாகவும், வளர்ச்சி பெற்றதாகவும் உள்ள தனியார் துறைத் தொழில்களோடு பொதுத்துறைத் தொழில்களும் சேர்ந்து செயல்படக்கூடிய 'கலப்புப் பொருளாதாரத்தில்' தனியார் துறையின் இயல்பான வளர்ச்சிக்கும் வாய்ப்பு இருக்கிறது. அரசாங்கத்தின் வழிப்படுத்துதலுக்கும் ஒழுங்குபடுத்துதலுக்கும் வாய்ப்பு இருக்கிறது 1945ஆம் ஆண்டிலிருந்து மிக மேம்பாடடைந்த பல தொழில் வழிகளில் (Inter-indusry lines) பிரான்சில் திட்டமிடுதல் மேற்கொள்ளப்பட்டாலும், திட்டங்களை நிறைவேற்றும் பொறுப்பு பெரும்பாலும் தனியார் தொழில் முயற்சிகளிடமே விடப்பட்டிருக்கிறது. பிரெஞ்சு முறையானது தூய்மையான சுட்டிக்காட்டும் முறையைச் சேர்ந்ததாகும். திட்டங்களை நிறைவேற்றுவதில் ஈடுபட்டுள்ளவர்கள் எல்லோருமே, திட்டங்களைத் தீட்டுவதிலும் ஈடுபட்டவர்களாவர். எனவே இலக்குகளைப் பெறுவதில் அவர்களாகவே முன்வந்து செயல்படுபவர்களாக இருப்பர் என்பதுவே இம் முறையின் இன்றியமையாக் கருத்தாகும். அயல் நாட்டுச் செலுத்துநிலையைத் தொந்தரவு செய்யாமல், மதிப்பீடு செய்யப்பட்ட பொருளாதார வளர்ச்சி விகிதத்தின் அடிப்படையில் தொழில்களோடு கலந்து ஆலோசித்து பொறிநுட்ப இயலால் திட்டங்களைத் தீட்டுதல் என்பதைப் பிரெஞ்சு முறை உட்கொண்டிருக்கிறது. இது செய்து முடிக்கப்பட்டபின், தொழில் அதிபர்களும், தொழிலாளர் கழகங்களும் ஏறத்தாழ 25 நவீனமாக்கும் கமிஷன்களின் (Modernisatian Commissions) மூலமாக அவர்களின் சொந்தத் துறையில் தோன்றும் விளைவுகளைக் கணக்கிடுவதற்கு அழைக்கப்படுகிறார்கள். நிதிக் கொள்கையிலும், அரசிறைக் கொள்கையிலும் பல விதமான தொடர் நடவடிக்கைகளினால் தனியார் துறைக்கு உற்சாக மளிப்பதன் மூலம் இந்த இலக்குகளைப் பெறுவதற்குத் தேவைப்படும் ஊக்கத்தை அரசு மீண்டும் கொடுக்கிறது.[1] எனவே, எங்கெல்லாம் தனியார் துறை மிகவும்

[1] Castle, Barbara, planning: The French Way, *The Hindu*, Madras, October, 20; 1961. The author however adds that though the mere

வலுவுள்ளதாகவும் வளர்ச்சி பெற்றதாகவும் இருக்கிறதோ அங்கெல்லாம் திட்டமிடுதலானது தேவையான அளவுக்கு நல்ல பல வாய்ப்புகளைக் கொடுப்பதன் மூலமாகவும், பொதுத் துறையை நன்கு வரையறை செய்யப்பட்ட எல்லைகளுக்குள் வைத்துக் கொள்வதன் மூலமாகவும் அதிக அளவு நன்மைகளைப் பெற முடியும். இந்த நோக்கில் பார்க்கும்போது பொருளாதாரத் திட்டமிடுதலானது, பொருளாதார வளர்ச்சியை வழிப்படுத்துவதாகவும் ஒழுங்குபடுத்துவதாகவும், இருக்க வேண்டும் என்பதோடு இரண்டு துறைகளின் பங்கினாலும் பொருளாதாரத்தை வளர்ச்சி பெறச் செய்வதாகவும் இருக்க வேண்டும். மேலும், திட்டமிடுதலானது, பொருளாதாரத்தின் பலவிதமான உற்பத்தி அலகுகளுக்கும் இடையே நல்லிணைப்பைத் தோற்றுவித்து ஒழுங்குபடுத்தி வழிப்படுவதற்கானதொரு வழியாகவும் இருக்க வேண்டும்.

திட்டமிடுதல் எவ் வகையைச் சார்ந்ததாக இருந்தாலும் உள்ளடக்கிய முறைகள் பெரும்பாலும் .இரண்டு வகைக்கும் பொதுவானவையே. அறிவியல் சார்ந்த திட்டமிடுதல் என்பது ஒரு சில அமைப்புகளையும் கொள்கைகளையும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. பொருளாதாரம் செயல்படக்கூடிய அரசியல் அமைப்புச் சட்டத்தினால் இவை பாதிக்கப்படுவதில்லை. பருப்பொருள் சார்ந்த உற்பத்தி இலக்குகளைப் பலதொழில்களுக்கும் நிர்ணயிப்பது, பயன்படுத்தப்படும் காரணிகளின் அளவு, விளைவின் அளவு, நுகர்வு ஆகியவற்றில் சம நிலைகளைப் பெற முயல்வது, கிடைத்தற்கரிய மூலவளங்களைப் பயன்படுத்துவதில் உள்ள சிக்கல்களைத் தீர்ப்பது, பருப்பொருள் சார்ந்த மூலவளங்களின் பகிர்வுக்கும் நிதி மூலவளங்களின் பகிர்வுக்குமிடையே சமநிலையைத் தோற்றுவிப்பது, விளைவுக்கும், தேவைக்கும் சம நிலையைத் தோற்றுவிப்பது போன்ற பல பொருளியல் கொள்கைகள் திட்டமிடுதலில் இருக்கின்றன. இக் கொள்கைகள் யாவும் எந்தப் பொருளாதாரத்திற்கும் பொருந்தக் கூடியவைகளே. திட்டங்களுக்கானநிதியாக்கம்,உற்சாகத்தைத்தருதல்.திட்டத்தை வகுப்பதிலும் நிறைவேற்றுவதிலும் பயன்படுத்தப்படும் நிர்வாக முறைகள் ஆகியவற்றில்தான் வேறுபாடுகள் தோன்றுகின்றன. அதாவது நிரூபிக்கப்பட்ட திட்டமிடுதல் முறையைக் கலப்புப் பொருளாதாரம் ஒன்றில் பயன்படுத்துவதற்கான வாய்ப்பு இருக்கிறது. அதைப் போலவே, முற்றிலும் வேறுப்பட்ட

setting of targets by the state gives a stimulus to private Industry; much depends on the mood of the economy. If "The impetus to growth is interrupted, 'indicative' planning proves inadequate.

அமைப்புடைய பொருளாதாரத்தில் பயன்படுத்துவதற்குத் தகுதியான வேறொரு முறையும் இருக்கிறது. இருந்தாலும், திட்டமிடுதல் என்பது கலப்புப் பொருளாதாரத்தில் ஒரு சில அதிகப்படியான சிக்கல்களைத் தோற்றுவிக்கிறது. உற்பத்திச் சாதனங்கள், பகிர்வுச் சாதனங்கள் ஆகிய எல்லாமே அரசின் உடைமையாகவும், அரசினால் கட்டுப்படுத்தப்படத்தக்கனவாகவும், கிடைக்கத்தக்க விளைவுக்கேற்ப நுகர்வுநிலை நிர்ணயிக்கப்படத்தக்கனவாகவும் உள்ளதொரு பொருளாதாரத்தில் திட்டமிடுதல் என்பது மிகவும் எளிதான ஒன்றாகும். எல்லாத் திட்டங்களும் மையப்படுத்தப்பட்டிருப்பதால், பலவிதமான முதலீட்டு முடிவுகளின் விளைவுகள் அதிக அளவுக்குத் துல்லியமாக இருக்கும். எனவே, ஒருமொத்தமான நோக்கங்களின் அடிப்படையில் முதலீட்டுப் பகிர்வுத் திட்டங்களையும், உற்பத்தி இலக்குகளையும் நிர்ணயித்தல் அரசுக்கு மிகவும் எளிமையானதாக இருக்கிறது. மொத்த அமைப்பில் பலவிதமான உற்பத்தி அலகுகளும் மிக எளிதாகப் பொருந்துகின்றன. தேவை, உற்பத்தி ஆகியவற்றிற்கிடையே தோன்றத்தக்க சம நிலைமையின்மைக்கான வாய்ப்பு மிகவும் குறைக்கப்பட்டிருக்கிறது. இதற்கு மாறாக, கலப்புப் பொருளாதாரத்தில் இத்தகைய இறுக்கமான கட்டுப்பாடு இயலக்கூடியதன்று. எந்தெந்த வழிகளில் தனியார் துறை முன்னேறமுடியும் என்று அரசு சுட்டிக்காட்டி, இலக்குகளையும் நிர்ணயிக்கிறது. ஆனால், தேவைப்படும் முயற்சிகளுக்கான உற்சாகத்தைக் கொடுப்பதன்மூலம் அரசு தனியார் துறையைத் தூண்டிவிட மட்டுமே முடியும். திட்டமிடுதலில் வெற்றி பெறுவது தனியார் துறையின் ஒத்துழைக்கும் உணர்வையும், நோக்கத்தையுமே பெரும்பாலும் சார்ந்திருக்கிறது. கலப்புப் பொருளாதாரங்களின் திட்டமிடுதலில் உள்ளபெரும் சிக்கல் இவ் விரு துறைகளையும் நல்லிணக்கம் செய்வதேயாகும். விரும்பப்படும் முன்னேற்றங்களைப் பெறுவதில் கலப்புப் பொருளாதாரத்தில் தனியார் துறையின்மீது அதிக அளவு நம்பிக்கை வைக்கப்படுகின்ற காரணத்தால், தனியார் ஊக்குவித்தல்கள், உற்சாகமூட்டுதல்கள் என்பவைகளே சிறந்த வழிகளாகக் காணப்படுகின்றன. இதற்கு மாறாக, கோட்பாட்டிலும் சரி, உண்மையின் அடிப்படையிலும் சரி, திட்டமிடுதல் என்பது பொது இலக்குகளோடு தனியார் பொருளாதார நடவடிக்கைகள் முரண்பாடுடையவைகளாக இருக்கக் கூடாது என்பதை உறுதி செய்வனவாக இருக்கவேண்டும். இந் நோக்கங்களைப் பெறுவதற்காக, கட்டுப்பாடுகளுக்கும், ஊக்குவித்தல்களுக்குமிடையே சரியானதொரு இசைவிப்பை நிலைநாட்டுவதில் கவனம் செலுத்த வேண்டும். தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரங்களில் கடைப்பிடிக்கும் கொள்கைகள் பெரும்பாலும் மறைமுகமானவை

களாக இருக்கும். இத்தகைய பொருளாதாரங்கள் ஆட்சி ஆதிக்கக் கொள்கையுடைய பொருளாதாரங்களிலிருப்பதைவிட சிறந்த வழிகளைப் பயன்படுத்த வேண்டும். இதுவே தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரத்திலும், ஆட்சி ஆதிக்கக் கொள்கை யுடைய பொருளாதாரத்திலும் திட்டமிடும் முறையில் உள்ள அடிப்படை வேறுபாடாகும். தடையற்ற தன்முயற்சிப் பொருளா தாரத்தில் நிகழ்ச்சிகளைத் தயாரித்தல் மிக விரிவானவைகளாக இருக்கவேண்டும். சுருங்கக் கூறின், தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரத்தில் திட்டமிடுதல் மிகவும் சிக்கலானது என்ப தோடு அச் சிக்கல்களைத் தீர்ப்பதற்குச் சிறந்த திறமை படைத்தவர் களையும் நல்ல மூளையுள்ளவர்களையும் அவசியமாக்குகிறது.

## வெற்றியுடைய திட்டமிடுதலுக்கான நிலைகள்
(Conditions for Successful Planning)

பொருளாதார முன்னேற்றதிற்கான திட்டத்தின் வெற்றி யானது நாட்டிலிருக்கும் நிலைகளையும் சூழ்நிலைகளையும் பொறுத் தமைகின்றது. முதலாவதாக, அரசாங்கம் திறமையும் வலிமையும் மிக்கதாக இருக்க வேண்டும். பொருளாதார அமைப்புகள் நல்ல முறையில் அமைந்திருக்க வேண்டும். திட்டமிடுதல் என்பதற்கு மையப் படுத்தப்பட்ட வழிப்படுத்துதல் மிகவும் அவசியமாகின்ற காரணத்தால், மிகவும் பலவீனமானதும், நிலையற்றதுமானதொரு அரசு பொருளாதார முன்னேற்றத்திற்கான பரவலான நாட்டுத் திட்டம் எதையும் நல்லமுறையில் வகுத்துச் செயல்படுத்த முடியாது. இஃதிவ்வாறிருப்பினும், ஒரு சில குறைந்த வளர்ச்சி யுடைய நாடுகளில் காணப்படும் பொருளாதாரச் சூழ்நிலைகள் ஓரளவுக்கு நடுமையை ஆட்சித் தளர்த்துதலை (Decentralisation) அவசியமாக்குகிறது. இந் நாடுகளில் சில நாடுகள் பெரும் நிலப்பரப்புக்களை கொண்டிருக்கின்றன. பல நிலப்பகுதிகளுக்கு மிடையே மூலவளங்கள் கிடைப்பதில் அதிகவேறுபாடுகள் காணப் படுகின்றன. பல நிலப்பகுதிகளுக்கு மிடையேயுள்ள சிக்கல்களும் வேறுபட்டவைகளாகக் காணப்படுகின்றன. போக்குவரத்து வசதிகள் நல்ல முறையில் வளர்ச்சி பெற்றிருக்கவில்லை. மக்களிடையே உள்ள கல்வித்தரம் மிகக் குறைவான அளவிலிருக் கிறது. உழைப்பு இடப்பெயர்ச்சியற்றதாக இருக்கிறது. இவை யாவும் குறிப்பிட்ட நிலப் பரப்புகளுக்குச் சிறப்பான கவனம் செலுத்துவதை அவசியமாக்குகின்றன. திட்டங்களை வகுப்பதிலும் நிறைவேற்றுவதிலும், பல நிலப்பகுதிகளிலும் உள்ள சிறப்பான சிக்கல்களும் தேவைகளும் கருத்தில் கொள்ளப்படவேண்டும். எனவே, குறிப்பிடப்பட்டிருக்கும் வளர்ச்சித் திட்டமானது பெரிய

தொரு நாட்டில் நடைமுறையில் நிறைவேற்றப்படும்போது வேறுபட்டுவிடுவதற்கான வாய்ப்பு இருக்கிறது. பொது வான திட்ட நோக்கங்கள் பாதிக்கப்படாமலிருக்கும்வரை இத்தகைய வேறுபாடுகளை ஓரளவுக்குப் பொறுத்துக்கொள்வ தோடு தேவையான இசைவிப்புகளையும் செய்தல் வேண்டும். ஆனால், நடுஆட்சி தளர்த்துதல் என்பதுஅதிக அளவுக்குச் செய்யப் படக்கூடாது. ஒத்த கழகங்கள், போட்டியிடும் கழகங்கள் ஆகிய வற்றிடையே திட்டமிடுதல் என்ற செயல் பிலிப்பைன்ஸ் நாட்டில் பகிர்ந்தளிக்கப்பட்டதுபோன்று அளிக்கப்படுமானல் அது திட்டத்தின் நோக்கங்களைப் பெறுவதைப் பாதிக்கும். தனிப்பட்ட பல அமைச்சகங்களிடையே நல்லதொடர்பு இருத்தல் திட்டத்தை நிறைவேற்றுவதற்கான அடிப்படைத் தேவையாகின்றது. அப்படி யில்லாமல், கட்டுப்பாடுகளைத் தளர்த்துதல், நிர்வாகத்தின் பல விதமான பகுதிகளுக்கும் தடையற்ற வாய்ப்பைக் கொடுத்தல் ஆகியவை சிலோனைப்போன்று பலவிதமான அலகுகளுக்கும் மேலோங்க முயல்கின்ற நிலையைத் தோற்றுவித்துவிடலாம். திட் டத்தை நிறைவேற்றும் இறுதியான பொறுப்பு மையப்படுத்தப் பட்டதாகவே இருக்க வேண்டும். பலவிதமான செயல் பதிலாண் மைகளையும், ஓரளவுக்குத் தன்னிச்சையுடன் செயல்படும் கழகங் களையும் வழிப்படுத்தி நல்லவிதமாகத் தொடர்பு ஏற்படுத்தி வைக்கும் அளவுக்கு மைய அரசு வலுமிக்கதொரு அரசாகத் திகழ வேண்டும். முழு நேர அளவுக்குப் பணியாற்றும் அதிகாரி ஒருவரைத் தலைவராகக் கொண்ட குறிப்பிட்டதொரு தொடர்பு படுத்தும் பதிலாண்மையொன்றை ஏற்படுத்த வேண்டும் எனப் பேராசிரியர் ஸ்டோன் (Prof. Stone) பரிந்துரைக்கிறார். 'அத்தகைய அதிகாரி, பொருளாதார முன்னேற்ற நோக்கத்திற்காகத் தலைமைச் செயலாற்றுபவரின் வலதுகரமெனக் கருதப்பட வேண்டும்.

வெற்றியுடைய திட்டமிடுதலுக்கான இரண்டாவது தேவை நன்கு வரையறை செய்யப்பட்ட நோக்கமாகும். அதுதான் திட்டமிடுதலைக் குறிப்பிட்ட நோக்கமுடையதாக ஆக்குகின்றது. இந்த நோக்கங்களை அடைய வேண்டும் என்ற நோக்குடன் நாட்டின் முயற்சிகளை அதிக அளவுக்குச் செறிவுள்ளதாக்குபவை களும் அவைதாம்; அந்த வழியில் மேற்கொள்ளப்படும் பலவிதமான நடவடிக்கைகளுக்கு வழிப்படுத்துதலையும், பொருளையும் கொடுப்ப வைகளும் அவைதாம். சோவியத் ருசியாவில் முதலாளித்துவப் பொருளாதாரங்களின் வெற்றிகளையும் மிஞ்சிச் செல்வதற்காக, மிக விரைவான தொழிற் பெருக்கமும், பொருளாதாரத்தை அமைப்பதும் திட்டமிடுதல் என்பதன் அடிப்படை நோக்கங்

களாகப் பல முறை திரும்பத் திரும்பக் குறிப்பிடப்பட்டுள்ளன. திட்டமிட்ட நடவடிக்கைகளைப் பொருளாதாரப் பக்கத்திலான நாட்டுப் போர்போலக் கருதி மென்மேலும் அதிகரித்துச் செல்லும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. நாசியின் செர்மனியினது பொருளாதாரத் திட்டமிடுதலின் வெற்றிக்கான பெரும்பான்மை யான காரணம் ஒரே நோக்கத்தைப் பெற்றிருந்ததுதான். நாட்டில் உள்ள மூலவளங்கள் அனைத்தையும் திரட்டி, பொருளா தாரத்தைப் பணவாட்டத்தின் தீமைகளிலிருந்து விடுபடச் செய்து, நாட்டைப் படைபலம் மிக்கதாகவும், வெற்றிகொள்ளப்பட முடியாததாகவும் ஆக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்தைக் கொண்டிருந்ததுதான் நாசி செர்மனியின் வெற்றிக்கான காரண மாக அமைந்தது. நாட்டில் பெறத்தக்க நோக்கம் என்று ஒன்று இல்லாவிட்டால் திட்டமிடுதல் என்பதே இல்லை என்றுதான் குறிப்பிட வேண்டும். எந்த அளவுக்கு நோக்கங்கள் உண்மை யானவைகளாகவும், நன்கு வரையறை செய்யப்பட்டவைகளா கவும் இருக்கின்றனவோ அந்த அளவுக்கு அதன் வெற்றிக்கான வாய்ப்பும் அதிகமானதாக இருக்கிறது.

வெற்றியுடைய திட்டமிடுதலுக்குப் பொதுமக்களின் ஒத்துழைப்பு மிக அவசியமானதாகும். திட்டங்களினால் ஏற்படும் பலனகளை எந்தவிதமான தாமதமும் இல்லாமல் பொதுமக்களுக்குக் கிடைக்கும்படியாகச் செய்தல் என்பது மக்களின் உணர்ச்சியையும், ஒத்துழைக்கும் உணர்வையும் தூண்டிவிடும். கிராமப் பகுதியில் வாழும் மக்கள் பொதுவாகக் கடினமாக உழைக்கக்கூடியவர்கள். சாலை அமைத்தல், கிணறுகளைத் தோண்டுதல், அவர்களின் கிராமத்திலிருக்கும் நீர்ப்பாசனக் கண்மாய்களைப் பழுதுபார்த்தல் ஆகியவற்றை அவர்கள் அவற்றால் ஏற்படும் நன்மை கருதித்தாமே மேற்கொள்வர். பொருளாதாரத் திட்டத்தினால் கிடைக்கும் ஆதாயத்தை எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்குச் சமமான நிலையில் பகிர்ந்துகொள்ள முடியுமென்பதை மக்கள் உணர்வது இன்னொரு முக்கியமான தேவையாகும். பொருளா தார முன்னேற்றத்தைக் கொடுப்பதாக உறுதி கூறும் அரசு நடவடிக்கைகள் மக்களின் செல்வம், வருமானம் ஆகியவற்றில் உள்ள வேறுபாடுகளைப் பேரளவிற்குக் குறைப்பதற்கு உறுதி யளிப்பவைகளாக இருந்தால் தொழிலாளர்களிடையே தளராத பேரார்வத்தைத் தூண்டிவிடத்தக்கதொரு வழி அமையும். இந்த நோக்கில் பார்க்கும்போது இந்திய அரசின் கொள்கை களைப்பற்றிய செய்தி வெளியீடுகள் மிகச் சிறந்தவைகளாக இருக்கின்றன. சமுதாய நீதியையும், பொருளாதாரச் சம நிலையையும் தோற்றுவித்தல் என்பதும், பொருளாதார முன்னேற்

றத்தினால் விளையக் கூடிய அதிகரித்த உற்பத்தியை மக்களிடையே சமமாகப் பகிர்ந்தளித்தல் என்பதும் இந்தியாவின் திட்டங்களில் சமுதாய நோக்கங்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது சம வருவாய் நிலையைப் பெறுவதற்கான சமுதாயக் கொள்கைகளை நிறைவேற்றுவதாக இருப்பதுடன் அதிக அளவுக்குப் பொருளாதாரச் சிறப்புத் தன்மையுடையதாகவும் இருக்கிறது. இத்தகைய கொள்கைகளை நடைமுறையில் கையாளும்போது, அது திட்டமிட்ட முன்னேற்றத்திற்கு மக்களின் ஒத்துழைப்பையும் கூட்டுறவையும் உறுதி செய்வதாக அமைகின்றது. 'பொதுவான கொள்கையெனக் குறிப்பிட்டால், பொருளாதார முன்னேற்றத்திற்கான வெற்றியுடையதொரு திட்டம் எனப்படுவது தனிப்பட்டவர்களிடம் பொருளாதாரச் சக்தி குவிவதை அழிப்பதாக-அல்லது குறைந்த அளவு சமப்படுத்துவதாக இருக்க வேண்டும். ஏனென்றால், அத்தகைய பொருளாதாரச் சக்தியின் குவிப்பு திட்டத்தை நிறைவேற்றுவதைத் தடைசெய்துவிடும்'[1]

துல்லியமான புள்ளி விவரங்களின் அடிப்படையில் அமைந்த திட்டத்தைத் திட்டலே திட்டமிடுதலின் திறனை நிர்ணயிக்கின்றது. உண்மையான திட்டத்தை வகுப்பதற்கு மட்டுமல்லாமல், அதனை நிறைவேற்றுவதற்கும் போதுமான அளவுக்குப் புள்ளிவிவரங்கள் தேவைப்படுகின்றன. திட்டமிடும் அதிகாரிக்குக் கிடைக்கக் கூடிய புள்ளிவிவரங்கள் போதுமான அளவில் சரியானதாக இல்லாவிட்டால், திட்டத்தின் முன்னேற்றத்தை அவ்வப்போது சரி பார்த்துக்கொள்வதும், நடப்பு முன்னேற்றங்களுக்கேற்ப மாற்றியமைத்தலும் இயலக்கூடியவைகளாக இருக்கமுடியாது. வளர்ச்சித் திட்டங்களில் முதன்மைச் சிறப்பிடத்தை ஒரு சில திட்டங்களுக்குக் கொடுப்பதற்கும், பலதொழில் ஒத்துழைப்பைக் கொண்டு வருவதற்கும் துல்லியமான புள்ளிவிவரங்கள் தேவைப்படுகின்றன. விலைமாற்றங்கள், வேலை நிலைகள், அயல்நாட்டு வணிக நிலைகள், அயல்நாட்டு வருமானங்கள், அந்நியச் செலாவணித் தேவைகள் ஆகியவற்றைப் பற்றிய புள்ளிவிவரங்கள் யாவும் சரியான வரவு செலவுத் திட்டங்களை வகுப்பதற்கும், திட்டங்களை மதிப்பீடு செய்வதற்கும், இலக்குகளை மாற்றியமைப்பதற்கும் அவசியமானவைகளாகும். சுருங்கக் கூறின் முன்னேற்றத் திட்டத்தை வகுப்பதற்கான அடிப்படையாகப் புள்ளிவிவரங்கள் அமைந்திருக்கின்றன எனலாம். புள்ளிவிவரங்கள் இல்லாவிட்டால் திட்டமிடுதல் என்பது வெறும் ஊகமாக மேற்கொள்ளப்படும் வேலை என்றாகிவிடுகிறது.

1 Lange, Oskar; *Essays on Economic Planning*, Asia Publishing House, Bombay, 1960.p, 22.

ஐக்கிய நாடுகளின் நிபுணர்கள் குறைந்த வளர்ச்சியுடைய நாடு களில் புள்ளிவிவரங்கள் கிடைப்பதில் உள்ள தீவிரமான குறை பாடுகளைப்பற்றிக் கூறுகின்றார்கள். ஒவ்வொரு நாட்டிலும், புள்ளி விவரங்களைச் சேகரித்தல், ஒத்துழைப்பைப் பெறுதல், தரப்படுத் துதல் ஆகிய பணிகளைச் செய்யக்கூடிய மையப் புள்ளிவிவரக் கழகம் (Central Statistical Organisation) அமைக்கப்படவேண்டும் என்று அவர்கள் வலியுறுத்துகிறார்கள், இந்த மையப் புள்ளி விவரக் கழகம் திட்டமிடும் அதிகாரிகளுடன் மிக நெருக்கமான தொடர்பை வைத்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் திட்ட மிடும் நோக்கத்திற்காகப் புள்ளிவிவரங்களுக்கான குறிப்பிட்ட தேவைகளை அவர்கள் அறிந்துகொள்ள முடியும்.[1]

திறன் மிகுந்த திட்டமிடுதலுக்கு நல்ல முறையிலமைந்த நிர்வாக இயந்திர அமைப்பு மிகவும் அடிப்படையான தேவை யாகும். 'பொது நிர்வாகமானது எல்லாவிதமான முன்னேற்றத் திட்டத்தின் வெற்றியையும் நிர்ணயிப்பதாகவும் 'இயக்குவ தாகவும் இருப்பதாலும், விரும்பி மேற்கொள்ளப்படும் சமுதாயக் கட்டுப்பாடுகளுக்கும், சமுதாய மாற்றங்களுக்கும் ஏற்புடையதாக இருப்பதாலும் இது மிகமிக இன்றியமையாததாகும்' என்று, பேராசிரியர் காப் குறிப்பிடுகிறார்.[2] திட்டத்தை வகுப்பதற்கும், நிறைவேற்றுவதற்கும் மாற்றியமைப்பதற்கும் திறமைமிக்கதொரு திட்டப் பதிலாண்மை (Planing Ageney) தேவைப்படுகிறது. அத்தகைய பதிலாண்மை முக்கியமான அரசியல் முடிவுகளையும் நிர்வாக முடிவுகளையும் மேற்கொள்ள வேண்டும். அதன் காரண மாகத் திட்டமிடுதல் என்பதோடு மட்டுமல்லாமல், போதுமான அளவுக்கு நிர்வாகதிறமையையும், அனுபவத்தையும் கொண்டவர் களை உடையதாக அப் பதிலாண்மை அமைந்திருக்கவேண்டும். திட்டமிடுதல் என்பதன் தொடக்க நிலைகளில் மட்டுமல்லாமல், திட்டத்தை நிறைவேற்றும்போது தோன்றக்கூடிய பல்வேறு சிக்கல்களைத் தீர்க்கும் நிலைகளிலும் நல்ல முறையிலான நிர்வாகம் தேவைப்படும். திட்டமிட்டதொரு பொருளாதாரத்தில் நிதி, பணவாக்கம், கடன், மூலதன வெளியீடுகள் அயல்நாட்டு வணிகம் அந்நியச்செலாவணி போன்றவற்றின்மீது கட்டுப்பாடுகள் விதிக் கப்படவேண்டிய. நாட்டிலிருக்கும் நிர்வாகமானது திறமை மிக்கதாகவும், தகுதியுள்ளதாகவும் இருந்தால் ஒழிய, இவை

1 *Economic Bulletin for Asia and the Far East*, U. N. November, 1955, pp. 63-70.

2 Kapp, William K., 'Economic Development, National Planning and Public Administration' *Kyklas*, Vol. XIII, 1960, Fasc. 2, p. 173.

யாவும் மன நிறைவு தரத்தக்க வகையில் செயல்படுத்தப்பட முடியாது. இவை தவிர, தனியார் தொழில்களைத் தொடங்குவதையும் நடத்திவருவதையும் திட்டமிடுதல் கொண்டிருக்கலாம். மேலும், நிலச் சீர்திருத்தம், கம்பெனிச் சட்டம் மற்றும் இவை போன்ற பலவிதமான சமுதாயச் சீர்திருத்தங்களையும், பொருளாதாரச் சீர்திருத்தங்களையும் கொண்டுவருவதற்கான சட்ட நடவடிக்கைகளையும் திட்டமிடுதல் அவசியமாக்கலாம்.

மேலே குறிப்பிட்டுள்ள நிலைகளில் பெரும்பாலானவை இன்றிருக்கும் பெரும்பான்மையான குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் இல்லாமலிருக்கின்றன. இந் நாடுகளில் உள்ள அதிக அளவிலான ஏழ்மையினாலும், மூலவளங்களின் பற்றாக்குறையினாலும் முன்னேற்றத்திற்கான திட்டமிடுதல் என்பதனைச் சிக்கல் மிகுந்ததாக்கியிருக்கின்றன. இந் நாடுகள் பக்குவமடைவதற்கு முன்னதாகவே புதிய சமுதாயக் கொள்கையைப் பெற்றுள்ளன. இந் நாடுகளில் மக்களாட்சி முறையில் அமையப்பெற்ற அரசுகள் செயல்படுகின்றன. மேலும் எல்லோருக்கும் வாக்குரிமை வழங்கப்பெற்றிருக்கிறது. இவை யாவும், மக்களுக்கு அதிக அளவுக்கு அரசியல் உரிமைகளைக் கொடுத்திருக்கின்றன. நல்ல நாட்டுக் குடி மக்களின் பொறுப்புணர்வுகளையும் கடமைகளையும் உணர்வதற்கு முன்பாகவே இந் நாட்டு மக்கள் அரசியலில் உயர்ந்த இடத்தைப் பெற்றுவிட்டார்கள். அதனால் அவர்களின் உரிமைகளுக்கும் கோரிக்கைகளுக்கும் தேவைக்கு அதிகமான அளவுக்குச் சிறப்பிடம் கொடுக்கிறார்கள். வேறுவிதமான அரசியல் அமைப்பில் சேமிப்புகளைத் தோற்றுவிப்பதும், திரட்டுவதும் முடியத்தக்கதாக இருக்கின்றது. அதைப்போல, வேறுவிதமான சமுதாய நோக்கங்களைக் கொண்டுள்ள மக்களின் அரசாங்கத்தாலும் இது முடியத்தக்கதாகும். எனவே, இப்போதிருக்கும் அரசியல் அமைப்பும், மக்களின் சமுதாய நோக்கங்களும் சேமிப்புகளைத் தோற்றுவிப்பதற்கும் திரட்டுவதற்கும் தடைகளாக இருக்கின்றன. எனவே, இப்போதிருக்கும் மக்களாட்சி முறை நீர்மைப்படுத்தப்படத்தக்க போக்கும் காணப்படுகிறது. அதோடு ஒருவிதமான சர்வாதிகார அமைப்புக்கு வழி வகுப்பதாகவும் அல்லது வழிப்படுத்தப்படும் மக்களாட்சி முறை என்பதற்கு வழி வகுப்பதாகவும் மாற்றமடைகின்றது. இத்தகைய நாடுகளில் சிலவற்றில் மக்கள் தொகைச் சிக்கல் மிகவும் தீவிரமான சிக்கலாக இருக்கின்றது. அச் சிக்கல் ஏற்கனவே இருக்கக்கூடிய சமுதாய–பொருளாதாரச் சிக்கலுடன் சேர்க்கப்படக்கூடியதாக அமைந்திருக்கிறது. இச் சிக்கல் தீர்க்கப்பட வேண்டுமானால் அதற்கு மிகவும் திறமை மிக்க நிர்வாகமும், உயர்ந்த தரத்திலான நிர்வாகமும் அவசியம்

தேவைப்படுகின்றது. ஆனால், பெரும்பாலான நாடுகளில் இருக்கக் கூடிய அரசுகள் தகுதியற்றவைகளாகவும், நிர்வாகத் திறமை யற்றவைகளாகவும் உள்ள நிலை காணப்படுகிறது. புள்ளி விவரங் கள் சரியான அளவுக்குக் கிடைக்காதிருத்தல், புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதற்கான மையக் கழகங்கள் இல்லாதிருத்தல், தகுதி வாய்ந்த திட்டமிடுபவர்களின் கிடைப்பருமை ஆகியவை யாவும் திட்டங்களை நல்ல முறையில் வகுப்பதற்கும், நிறைவேற்ற முடியாமல் போவதற்கும், திட்டமிட்ட முன்னேற்றத்தை இலக் குகளாகக் கொண்டுள்ள பல விதமான பதிலாண்மைகளிடையே ஒத்துழைப்பு இல்லாமல் போவதற்கும் காரணங்களாக அமைந் திருக்கின்றன. குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும் பாலானவைகளில் அரசாங்கத்தின் அடிப்படைப் பணிகளைச் செய்வதற்குக்கூட பொது நிர்வாகம் தகுதியற்றதாக இருக்கிறது. இத்தகைய குறையுள்ள இயந்திர அமைப்பை வைத்துக்கொண்டு திட்டமிட்ட முன்னேற்றத்திற்கான முயற்சிகளை மேற்கொள்வது குழப்பமிக்க திட்டமிடுதலையே விளைவிக்கின்றது.

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளுக்குள் திறமை மிகுந்த நிர்வாக இயந்திர அமைப்பை இந்திய நாடு பெற்றிருக்கின்றது. திட்டமிடும் பணியை மேற்கொள்வதில் திறமையற்றிருக்கிறது என்ற நிலைமை இந்தியாவில் இல்லை என்பதை அண்மைக்கால அனுபவங்கள் நன்கு தெளிவுபடுத்தியுள்ளன. இந்தியாவில் உள்ள இயந்திர அமைப்பின் குறைகள் மூன்று பகுதிகளாக இருக்கின்றன.

முதலாவதாக, வரி வசூலுக்காகவும், நீதியை நிலை நிறுத்துவதற்காகவும் மட்டுமே காலனி ஆதிக்கம் இருந்த காலத்தில் அமைக்கப்பட்ட நிர்வாக அமைப்பு இப்போதும் இருந்துவருகிறது. எனவே, நாட்டில் உள்ள நிர்வாக அதிகாரிகள் யாவரும் வரி வசூலிப்பவர்களாகவும், பதிவேடுகளைக் காத்து வைப்பவர்களாகவும், காவல் நிலைய அதிகாரிகளாகவும், நீதிபதி களாகவும்தான் பணி புரிகின்றனர். முன்னேற்ற முயற்சிகளை அமைப்பதும், பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டத்தைச் செயலாற்றுவதும் புதிய அனுபவமாகும். அதிக அளவுக்கு அதிகாரிகள்மயம் ஆக்குதலும், மையமாக்குதலும் போதுமான அளவில் இல்லாத மேற்பார்வையும், குறிப்பிட்ட நடவடிக்கை களுக்காகக் கணக்கு வைத்துக்கொள்வதற்கான வசதிகள் இன்மையும், அதிகார வர்க்கத்தின் பலவிதமான நிலைகளிலும் உள்ள பலவிதமான அலுவல்களைப்பற்றிக் கணக்குகள் வைத்துக் கொள்வதற்கான வசதிகள் இன்மையும் பிரிக்கப்பட்ட பொறுப்பு

களுக்குக் காரணமாக இருந்திருக்கின்றன. இவை யாவும் சேர்ந்து எல்லாவற்றிற்கும் எல்லோரும் பொறுப்பானவர்கள் என்ற நிலைமையைத் தோற்றுவித்திருக்கின்றன.

இரண்டாவதாக, ஏற்கனவேயுள்ள சட்டங்களோடும் விதிகளோடும் பலவிதிகளும் சட்டங்களும் சேர்க்கப்படுகின்றன இதன் விளைவாக நிர்வாக அமைப்பு சிக்கல் நிறைந்ததாக மாறியிருக்கின்றது. இதன் விளைவாகக் காலதாமதம், மனவேதனை போன்றவை தோன்றுகின்றன. நீர்ப்பாசனத்துறை, பொதுப் பணித்துறை போன்ற துறைகளில் அதிகாரிகளாக இருப்பவர்கள் தீர்ந்த முடிவுகளை எடுப்பதற்குத் தேவையற்ற அளவுக்குக் கால தாமதம் ஏற்படுகிறது. இதன் காரணமாக, தீவிரமானவைகளாகவும் தவிர்க்கமுடியாதவைகளாகவும் உள்ள இழப்புகள் தோன்றி. முன்னேற்ற முயற்சிகளைக் கெடுத்துவிடுகின்றன. அண்மையில் மைசூர் அரசாங்கத்தால் மூலவளங்கள், பொருளாதாரம் ஆகியவற்றைப்பற்றித் தெரிந்துகொள்வதற்காக ஒரு குழு அமைக்கப்பட்டது. ஒரு ஃபைல் (File) தலைமைச் செயலகத்தில் முழுமையாகச் செயல்படுத்தப்படுவதற்குச் சராசரியாக 272·2 நாள்களாகின்றன என்ற வியத்தகு உண்மையை இக் குழு கண்டது. இத்தகைய நிர்வாகத் தாமதங்களுக்காகவும், விட்டுப் போதலுக்காகவும் ஆகும் செலவு "போட்டி போட்டுக்கொண்டு நிலைத்து நின்று செயல்படுவதற்குத் தேவைப்படக்கூடிய விரைவாகச் செயல்படும் திறமை ஆகியவை அதிக அளவுக்குத் தேவைப்படக்கூடிய தொழில்உற்பத்திப் பகுதியில் மென்மேலும் அதிக அளவுக்கு அரசு நடவடிக்கைகள் ஊடுருவிச் செல்லும் போக்கு இருக்கின்ற காரணத்தால் கடந்து செல்லக்கூடிய ஒவ்வொரு ஆண்டிலும் அதிகரித்துச்செல்லும் போக்கு காணப்படுகின்றது என்றும், அண்மையில் ரூர்கேலா உருக்காலையில் காணப்பட்ட தடைக்குப் பொறிநுட்பச் சிக்கலில் சிவப்புநாடா முறையும் எந்த அளவுக்குக் காரணமாக இருந்ததென்றும் சென்னையிலிருந்து வெளியாகும் இந்து (Hindu) பத்திரிகை குறிப்பிடுகிறது.[1]

மூன்றாவதாக மனிதக் காரணியைக் குறிப்பிட வேண்டும். நிர்வாக இயந்திரம் பொருளாதார முன்னேற்றம் என்பதைத் தவிரப் பிற காரணங்களுக்காகவே அமைக்கப்பட்டிருக்கிறது என்ற உண்மையானது அரசின் முன்னேற்ற நடவடிக்கைகளிலிருந்து தோன்றக்கூடிய புதிய சிக்கல்களைச் சமாளிப்பதற்கான

1 *The Hindu*, Madras, September 18 and 19, 1962.

திறமையை நிர்வாக இயந்திரம் பெற்றிருக்கவில்லை என்பதோடு, இருக்கக்கூடிய கிராமப்பகுதி மக்களுக்கு நிர்வாக அதிகாரிகள் உதவிசெய்யாத ஒரு போக்கிற்கும் வகை செய்வதாக அமைந்திருக்கிறது. அதிகார வர்க்கத்தின் ஆதரவின்மை, ஈவிரக்கமற்ற தன்மை, கல்வியறிவில்லாத குடியானவர்களிடமும், கிராமப்பகுதி மக்களிடமும் உள்ள உள்ளூர் வளர்ச்சிக்கான கருத்துகளைப்பற்றிய ஈவிரக்கமற்ற தன்மை ஆகியவை யாவும் சராசரியாக இருக்கக்கூடிய அதிகாரிகளிடம் காணப்படும் இயல்புகளாக இருக்கின்றன. இத்தகைய தன்மையானது பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்குக் கிராமப்பகுதி மக்களிடையே ஓரளவுக்கு இருக்கக்கூடிய ஆர்வத்தையும் அழிப்பதாகவே இருக்கின்றது. கிராமச் சமுதாயத்திற்கு உதவவேண்டுமென்ற சிறந்த நோக்கத்துடனும், கடும் உழைப்பையும், கூட்டுறவு முயற்சியையும் கிராமப்பகுதி மக்களிடையே வளர்க்கவேண்டும் என்ற சிறந்த நோக்கத்துடனும் மேற்கொள்ளப்பட்டிருக்கும் கிராமக் கூட்டுறவுச் சங்கங்களைப் பொறுத்த மட்டிலும்கூட இஃது உண்மையாக இருக்கிறது. தங்களது நிர்வாகத்தைப் பொறுத்தமட்டிலுமான விதிகளையும் ஒழுங்கு முறைகளையும் தெரியாதவர்களாகவும், கிராமப்பகுதி மக்களின் சிரமங்களையும் சிக்கல்களையும் தெரிந்துகொள்வதற்குத் தகுதியும் ஆர்வமும் இல்லாதவர்களாகவும் உள்ள அலுவலர்கள் பதிலாளர்கள் (Agents) ஆகியவர்கள் செய்யும் பணிகளினால் கசப்படைந்து சங்கங்களிலிருந்து பேரளவில் உறுப்பினர்கள் வெளியேறுவது இயல்பாக நிகழ்கிறது.

எனவே, மேற்கூறிய காரணங்களால் நிர்வாக இயந்திர அமைப்பைச் சீர்திருத்தி அமைத்தல் என்பதுதான் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் காணப்படும் இன்றியமையாத உடனடித் தேவையாக உள்ளது. இந் நாடுகளில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய தன்மை குறைந்த வளர்ச்சியுடைய நிர்வாகத்தில் பிரதிபலிக்கின்றது. தொழில்களில் மேற்கொள்ளப்படும் முதலீடுகள் தரத்தக்க விளைவுகளைக்காட்டிலும் அதிகமான விளைவுகளை, நிர்வாகச் சீர்திருத்தத்தின்மீது மேற்கொள்ளப்படும் முதலீடு தோற்றுவிக்கும். நல்ல முறையிலும், திறமையான முறையிலும் அமையப்பெற்ற நிர்வாகம், பொது முதலீட்டு முயற்சிகளையும், பொது வணிக நிறுவனங்களையும் நன்முறையில் அமைப்பதற்கும், நிர்வகிப்பதற்கும், சேமிப்புகளை நன்முறையில் திரட்டுவதற்கும், பயன்படுத்துவதற்கும் உதவி செய்யும். மேலும், மக்களின் நோக்கங்களிலும் நல்ல மாற்றங்களை இது தோற்றுவிக்கும். பேராசிரியர் காப் அவர்கள் குறிப்பிட்டதை இவண் நினைவில் கொள்ளுதல் பயனுள்ளதாகும். 'அதிகமாக மேற்

கொள்ளப்படும் முதலீடுகளின் இறுதிநிலைச்சமுதாய உற்பத்தித் திறன் நிர்வாகச் சீர்திருத்தத்தில் மிக அதிகஅளவுக்கு இருக்கும் போதுமான அளவிலான முதலீடுகள், குறைந்த வளர்ச்சியுடைய உலகத்தில் பின்தங்கிய நிலையைக் காட்டக் கூடியதாக இருக்கும். உற்பத்தியில் பயன்படுத்தப்படும் காரணி அளவுக்கும் விளைவு அளவுக்கும் இடையே உள்ளநிலையான விகிதங்கள் பலவற்றையும் உடைத்தெறியலாம்.'[1]

## குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் வளர்ச்சித் திட்டங்கள்

(Development Plans in Underdeveloped Countries)

குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெரும்பாலான நாடுகள் அவற்றின் பொருளாதார வளர்ச்சி விகிதத்தை அதிகரிப்பதற்கான தொரு வழியாகத் திட்டமிடுதல் என்பதைக் கையாளுவதை மேலே குறிப்பிட்டுள்ள குறைகள் கட்டுப்படுத்தவில்லை. இந் நாடு களில் ஒருசில நாடுகள் திட்டமிடுதலில்ஏற்கெனவே பத்தாண்டுகள் அனுபவத்தைப் பெற்றுவிட்டன. மேலும் இந் நாடுகளில் பெரும் பான்மையானவை முதல் திட்டங்களை நிறைவேற்றிக்கொண்டு வரும் நிலைகளில் இருக்கின்றன. அடுத்துவரும் அட்டவணை 19 பொருளாதார முன்னேற்றத்திற்காகத் திட்டமிடுதல் என்ற முயற்சியை மேற்கொண்ட தென்கிழக்காசிய நாடுகளின் பெயர் களையும் அவற்றின் திட்டங்களின் தொடக்கக் காலங்களையும் காட்டுகின்றது.[2]

தென் அமெரிக்க நாடுகளிலும் முன்னேற்றத் திட்டங்கள் பயன்படுத்தப்படுகின்றன. உலகப் பெரும்போர் முடிந்து ஏறத்தாழ இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு கிழக்கு ஐரோப்பாவின் சிறிய நாடுகளான செக்கோஸ்லோவேகியா, போலந்து, ஹங்கேரி, ருமேனியா, பல்கேரியா, யூகோஸ்லேவியா ஆகிய நாடுகள் முறை மைப்படுத்தப்பட்ட அடிப்படையில் 1948 49–ஆம் ஆண்டுகளில் முடிக்கப்பட்ட குறுகியகால மறு அமைப்புத் திட்டங்களைத் தொடங்கின. அதிலிருந்து அந் நாடுகளில் பெரும்பாலானவை ஐந்தாண்டுமுன்னேற்றத்திட்டங்களைக்கடைப் பிடித்துவருகின்றன பல்கேரியாவில் முதல் திட்டமானது 1953ஆம் ஆண்டின் இறுதி வரை நடைபெறுவதாக இருந்தது. ஆனல், முறைமைப்படுத்தப்

1 Kapp, William K., 'Economic Development, National Planning and Public Administration,' *Kyklos*, Vol. XIII 1960, Fasc. p. 200.

2 *Economic Bulletin for Asia and the Far East*, U., N., December 1961.

## அட்டவணை 19
### பலநாடுகளிலும் திட்டம் நடைபெறும் காலம்

| நாடு | திட்டக் காலம் | தலைப்பு |
|---|---|---|
| ஆப்கானிஸ்தானம் | 1956-57—1960-61 | ஐந்தாண்டுத் திட்டம் |
| பர்மா | 1952-53—1959-60 | எட்டாண்டு வளர்ச்சித் திட்டம் |
| ,, | 1961-62—1964-65 | 2-வது நான்காண்டுத் திட்டம் |
| கம்போடியா | 1959—1964 | ஐந்தாண்டுத் திட்டம் |
| சிலோன் | 1947-48—1952-53 | முதல் ஆறாண்டுத் திட்டம் |
| ,, | 1954-55—1959-60 | 2-வது ஆறாண்டுத் திட்டம் |
| ,, | 1957—1968 | பத்தாண்டுத் திட்டம் |
| சீனு (மெயின்லாந்து) | 1953—1957 | முதல் ஐந்தாண்டுத் திட்டம் |
| ,, | 1958—1962 | 2-வது ஐந்தாண்டுத்திட்டம் |
| மலேயக் கூட்டாட்சி | 1959—1960 | ஐந்தாண்டு மூலதனச் செலவுத் திட்டம் |
| ,, | 1961—1965 | 2-வது ஐந்தாண்டுத் திட்டம் |
| இந்தியா | 1951-52—1955-56 | முதல் ஐந்தாண்டுத் திட்டம் |
| ,, | 1956-57—1960-61 | 2-வது ஐந்தாண்டுத் திட்டம் |
| ,, | 1961-62—1965-66 | 3-வது ஐந்தாண்டுத் திட்டம் |
| | 1966-67—1968-69 | 3 ஓராண்டுத் திட்டங்கள் |
| | 1969-70—1973-74 | 4-வது ஐந்தாண்டுத் திட்டம் |
| இந்தோனேசியா | 1959—60 | ஐந்தாண்டு முன்னேற்றத் திட்டம் |
| ,, | 1961—69 | எட்டாண்டுத் திட்டம் |
| ஈரான் | 1955-56—1961-62 | ஏழாண்டுத் திட்டம் |
| ,, | 1962-63—1966-67 | ஐந்தாண்டுத் திட்டம் |
| ஜப்பான் | 1953-54—1959-60 | ஏழாண்டுத் திட்டம் |
| ,, | 1955-56—1961-62 | திருத்தப்பட்ட ஏழாண்டுத் திட்டம் |
| ,, | 1961-62—1970-71 | புதிய நீண்ட காலப் பொருளாதாரத் திட்டம் |
| நேபாளம் | 1956-57—1961-60 | ஐந்தாண்டுத் திட்டம் |
| பாக்கிஸ்தான் | 1955-56—1959-60 | முதல் ஐந்தாண்டுத் திட்டம் |
| ,, | 1960-61—1964-65 | 2-வது ஐந்தாண்டுத்திட்டம் |
| பிலிப்பைன்ஸ் | 1957—61 | ஐந்தாண்டுப் பொருளாதாரச் சமுதாய வளர்ச்சித் திட்டம் |
| ,, | 1959-60—1961-62 | மூன்றாண்டுப் பொருளாதாரச் சமுதாய வளர்ச்சித் திட்டம் |
| தாய்லாந்து | 1961—66 | ஆறாண்டு முன்னேற்றத் திட்டம் |

பட்ட அடிப்படையில் 1952–லேயே நிறைவேற்றப்பட்டு அதே ஆண்டில் இரண்டாம் திட்டம் தொடங்கப்பட்டது இதைத் தொடர்ந்து 1958-ல் மூன்றுண்டுத்திட்டம் தொடங்கப்பட்டது. யூகோஸ்லேவியா ஓராண்டுத் திட்டங்களைப் பயன்படுத்தி வருகிறது.

இரண்டாம் உலகப் பெரும் போர் முடிந்த தொடக்க ஆண்டுகளில், போரினுல் ஏற்பட்ட பேரழிவுகளையும் உள்நாட்டு அரசியல் குழப்பங்களினுல் ஏற்பட்ட பேரழிவுகளையும் சீராக்கி நாடுகளைப் புதுப்பித்து நன்னிலைக்குக் கொண்டுவந்து புது வாழ்வு பெறுதல் என்பதுதான் இந் நாடுகளின் முக்கியமான நோக்கமாக இருந்தது. இவ்வாருக, 1946. 1949 ஆகிய ஆண்டுகளுக்கு இடையே கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் புணரமைப்புத் திட்டங்கள் இருந்தன. உள்நாட்டுப் போரினுல் மிக அதிக அளவுக்கு அழிக்கப்பட்டிருந்த சீனப் பொருளாதாரத்தைச் சீராக்குவதிலேயே 1949-52ஆம் ஆண்டுகளில் சீனு, அதன் முழுக் கவனத்தையும் செலுத்தியது. இந்தியாவைப் பொறுத்தவரையில் திட்டமிடுதல் என்ற எண்ணம் இரண்டாம் உலகப்போரின்போதே தோன்றியிருந்தாலும்கூட, 1947-ல் நாடு பிரிவினை செய்யப்பட்டபோது தோன்றியிருந்த உள்நாட்டுக் குழப்பங்களும். அக்காலத்தில் தோன்றிய பலவிதமான புதிய பொருளாதாரச் சிக்கல்களும் திட்டமிடுதல் என்பது முழு அளவில் தொடங்கப்பெறுவதற்கு முன்னுல் சீராக்கும் முயற்சிகளைக் கையாளவேண்டியதை அவசியமாக்கின. பர்மாவுக்கும், ஒரு சில கிழக்காசிய நாடுகளுக்கும்கூட இது பொருந்துவதாகும். எனவே, ஒழுங்கான முறையில் திட்டமிடுதல் என்பது இந்த நூற்றுண்டின் பிற்பகுதியிலிருந்துதான் தொடங்கியது.

பொருளாதார வளர்ச்சியை விரைவுபடுத்துதல் என்ற நோக்கம் இயல்பாகவே திட்டமிடுதலின் பெருநோக்கமாக இருக்கிறது. ஆனுல், பெரும்பாலானவற்றில் நோக்கங்கள் யாவும் தெளிவுடன் வரையறை செய்யப்படாமலும். தெளிவுடன் புரிந்துகொள்ள முடியாத அளவிலும் இருக்கின்றன. பரவலாகக் குறிப்பிட்டால்,கணியக் குறிக்கோள்கள் (Quantative Objectives), தன்மைக் குறிக்கோள்கள் (Qualitative Objectives) ஆகிய இரண்டையும் வேறுபடுத்திக் காணமுடியும். தன்மைக் குறிக்கோள்கள் எனக் குறிப்பிடப்படுபவை பொதுவானவையாகும்; எல்லைகள் இல்லாதவையாகும். சமதர்ம சமுதாயத்தைத் தோற்றுவித்தல், வருமானப் பகிர்வில் உள்ள ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்தல், தன்னைத்தானே வளர்த்துக்கொள்ளத்தக்க வளர்ச்சிப் பருவத்தை அடைவதற்கான அடிப்படையை நிறுவுதல்,

பொருளாதாரத்தைச் சீராக்கிப் பரவலாக்குதல், அயல் நாட்டுச் செலுத்துநிலையை நன்னிலையில் நிலைநிறுத்துதல் அல்லது வலிமைப்படுத்துதல், இன்னும் இவை போன்ற பல வற்றையும் நோக்கங்களாகக் கொண்டு தன்மைக் குறிக்கோள்கள் காணப்படுகின்றன. நாட்டு வருமான நிலை, தலா வருமான நிலை ஆகியவற்றை அதிகரித்தல், வேலை நிலையை உயர்த்துதல், இன்னும் இவை போன்றவற்றை கணியக் குறிக்கோள்கள் நோக்கங்களாகக் கொண்டிருக்கின்றன. இந் நோக்கங்கள் யாவும் குறுகிய கால அளவிலும், நீண்ட கால அளவிலும் கணக்கியல் அடிப்படையில் அளவிடுவதற்கு ஏற்றவையாகும். ஒரு சில ஆசிய நாடுகளின் திட்டங்களில் மொத்த வருமானம், தனிநபர் வருமானம் ஆகிய இருவகை வருமானங்களிலுமே வருமான அதிகரிப்பு எவ்வளவு இருக்க வேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருக்கும் அளவுகள் அட்டவணை 20-ல் காட்டப்பட்டிருக்கின்றன.

நாடுகள் எல்லாவற்றிலும் திட்டமிடுதல் என்ற முயற்சிகள் மேற்கொள்ளப்படுவதற்கு முன்பிருந்த காலத்திலிருந்த சராசரி அளவுகளைக் காட்டிலும் அதிக அளவுக்கு முதலீட்டு விகிதங்களில் கூர்மையான அதிகரிப்பைத் திட்டமிட்ட முன்னேற்றம் என்பது தோற்றுவித்திருக்கிறது. பெரும்பாலான நாடுகளில் அடுத்தடுத்து வரும் திட்டக் காலத்தில் முதலீட்டு விகிதம் மென்மேலும் அதிகமாக அதிகரித்துவந்திருக்கின்றது. முந்திய அத்தியாத்தில் குறிப்பிட்டதுபோன்று இத்தகைய அதிகரித்த முதலீட்டிற்குப் பொதுத்துறையின் பங்கு நாட்டுக்கு நாடு அதிக அளவுக்கு வேறு பட்டுள்ளது. பொதுத்துறை, தனியார் துறை ஆகிய இரு துறை களுக்குமிடையே உள்ள தராதரமான சிறப்புத் தன்மையில் உள்ள வேறுபாடுகளுக்கு ஏற்ப முதலீட்டின் கலவைகளிலும் வெறு பாடுகள் காணப்படுகின்றன. பொதுவாகச் சோசலிசப் பொருளா தாரங்களில் கனரகத் தொழில்கள்மீதும், மூலதனப் பண்டத் தொழில்கள்மீதும் அதிக அளவுக்குச் சிறப்பிடம் கொடுக்கும் போக்கு காணப்படுகிறது. இவ்வாருக, கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் முதல்முன்னேற்றத் திட்டங்களில் மொத்த முதலீட்டில் 40%-50% வரையிலான பங்கு தொழில்களுக்காகப் பயன்படுத்தப் பட்டன. தொழில்களின்மீதான முதலீடுகளைப் பொறுத்த மட்டிலும் உற்பத்தியாளர்களின் பண்டகளின் தொழில்களில் 80% 90% அளவு வரையிலான முதலீடுகளாக மேற்கொள்ளப்பட்டிருக் கின்றன. போக்குவரத்தும், செய்தித் தொடர்பும் மொத்த முதலீட்டில் 15%-25% வரையிலான அளவையும், வேளாண்மைத் துறை 8%-12% வரையிலான அளவையும் பெற்றிருக்கின்றன. சீனுவின் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் (1953 முதல் 1957 வரை)

அட்டவணை 20

நாட்டு வருமானம், தலா வருமானம் ஆகியவற்றில் திட்டமிடப்பட்ட ஆண்டுதோறுமான அதிகரிப்பு விகிதங்கள்
(Planned Annual Rate of Increase in National and Per Capita Income)

(கூட்டு அதிகரிப்பு விகிதம்)

| நாடு | திட்டக் காலம் | நாட்டு வருமான அதிகரிப்பு விழுக்காடு | தலா வருமான அதிகரிப்பு விழுக்காடு |
|---|---|---|---|
| பர்மா | 1961-62—1964-65 | 5·9 | 3·6 |
| கம்போடியா | 1959-64 | 5·0 | 2·0 |
| சிலோன் | 1957-68 | 5·9 | 2·9 |
| சீனு (தைவான்) | 1957-68 | 7·4 | 3·7 |
| மலேயக் கூட்டாட்சி | 1960-65 | 4·1 | 0.8 |
| இந்தியா | 1961-62—1965-66 | 6·0 | 3·8 |
| இந்தோனேசியா | 1961-69 | 3·7 | 1·4 |
| ஈரான் | 1962-63—1966-67 | 6·0 | 3·5 |
| ஜப்பான் | 1961-62—1970-71 | 7·2 | 6·3 |
| பாக்கிஸ்தான் | 1960-61—1964-65 | 3·7 | 1·8 |
| பிலிப்பைன்ஸ் | 1959-60—1961-62 | 5·9 | 2·8 |
| தாய்லாந்து | 1961-66 | 5·0 | 3·0 |

மூலம் : *Economic Bulletin for Asia and the Far East*, U. N. December, 1961, p. 4, Table. 1.

முதலீட்டின் பகிர்வு கீழ்கண்டவாறு அமைந்திருந்தது. தொழில் 40.9%. பண்பாட்டு வசதிகள், கல்வி வசதிகள், பொதுநல வசதிகள் 18.6%, போக்குவரத்து. செய்தித்தொடர்புகள் 11.7%. வேளாண்மை தண்ணீர் மூலவளங்கள், காடுகள் 8.0%. எதிர்கால முன்னேற்றத்திற்கான வலுவான அடிப்படைகளைத் கனரகத் தொழில்கள் தோற்றுவிக்குமாதலால் இத் தொழில்களுக்கு மிக அதிகமான சிறப்பிடம் கொடுக்கப்பட்டது. சிறு தொழில்களில் சோம்பியிருக்கும் சக்தி

இருந்தமையால் இத் தொழில்களுக்குக் குறைந்த முதலீட்டுச் சிறப்பிடம்தான் கொடுக்கப்பட்டது. மெயின்லாந்து சீனுவின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தற்காலத் தொழில்கள், கைத்தொழில்கள் ஆகியவைகளும் உள்ளிட்ட தொழில் விளைவின் மொத்த அளவை இரண்டு மடங்கு ஆக்க வேண்டும் என்றும், வேளாண்மை உற்பத்தியின் மொத்த மதிப்பை 35%அளவுக்கு அதிகரிக்க வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டது. தொழில் உற்பத்தியின் மொத்த மதிப்புக்கு உற்பத்தியாளர் பண்டங்களின் மொத்த மதிப்பின் விகிதம் 1957-ல் 38%-லிருந்து 1962-ல் 50% அளவுக்கு அதிகரிக்க வேண்டும் என்றும் விரும்பப்பட்டது.

கடந்த சில ஆண்டுகளில் ஒரு சில குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில வருமான வளர்ச்சியில் மிக நல்ல முறையிலான உயர்வு நிலைகள் பெறப்பட்டிருக்கின்றன. அண்மையில் ஆசியாவிலும் தூரக் கிழக்கிலும் உள்ள நாடுகளில் மேற்கொள்ளப்பட்ட திட்டமிட்ட பொருளாதாரத்தைப்பற்றியதொரு ஆய்வு ஐக்கிய நாடுகளின் பொருளாதாரக் குழுவினுல் (Economic Commission of the United Nations) மேற்கொள்ளப்பட்டது பர்மா, கம்போடியா சிலோன், சீனு (தைவான்), மலேசியக் கூட்டாட்சி, இந்தியா, இந்தோனேசியா, ஈரான், ஜப்பான், பாக்கிஸ்தான், பிலிப்பைன்ஸ், தாய்லாந்து ஆகிய நாடுகளுக்குள் திட்டமிட்ட வருமான இலக்குகளைக்காட்டிலும் அதிக அளவு வருமான இலக்குகளைக்காட்டிலும் அதிக அளவில் வருமான நிலையைப் பெறுதலாகிய வெற்றியைப் பெற்ற ஒரே நாடு சப்பான் மட்டும் தான். சப்பான் நாட்டில் 1955-56-லிருந்து 1959-60 வரையுள்ள ஆண்டுகளில் பெறப்பட்ட வருமானத்தின் உண்மையான அதிகரிப்பான 8% அளவு உலகில் மிகவும் வளர்ச்சிபெற்றுள்ள நாடுகளில் சாதிக்கப்பட்டிருக்கும் சாதனைகளுக்குச் சமமானதாக இருக்கின்றது. சப்பான் நாட்டைக் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் குழுவில் சேர்க்கக்கூடாது என்பது நினைவிற் கொள்ளப்படவேண்டியதொரு உண்மையாகும். சப்பான் நாடு ஏற்கனவே தொழில் பெருக்கத்தில் நன்னிலையைப் பெற்றிருந்த காரணத்தால் தான் இவ் வாண்டுகளில் வருமானத்தில் அதிக அளவிலான முன்னேற்றம் காணப்பட்டது. அண்மை ஆண்டுகளில் உற்பத்தித்திறனில் மிகவும் வியத்தகு அளவிலான முன்னேற்றம் காணப்பட்டிருக்கிறது. மிக விரைவான தொழில்நுண்ணியல் முன்னேற்றமும், தொழிலாளர்கள் வேளாண்மைத் துறையி லிருந்து தொழில்துறைக்கு மாறுவதும் உற்பத்தித்திறன் அதிக மாவதற்கு உதவி செய்கின்றன. இயந்திரத் தொழில்களின் முன்னேற்றம் பலவிதமான துணைத் தொழில்களின் பெருக்கத்

திற்கும், வினைமுற்றுப் பண்டங்களான பிளாஸ்டிக் பொருள்கள், ரப்பர் பொருள்கள், பெயிண்டுகள் மற்றும் இவை போன்ற பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் ஆகிய இருவகைத் தொழில்களின் வளர்ச்சிக்கும் இது உதவி செய்திருக்கிறது. ஜப்பானோடு ஒப்பிடும்போது இந் நிலப் பகுதிகளில் உள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளின் வெற்றி மிகவும் குறைவான அளவில் இருந்தது. இருப்பினும் மெயின்லாந்து சீனு, இந்தியா போன்ற ஒரு சில நாடுகள் பெற்ற வெற்றி மன நிறைவைத் தரத்தக்கதாக இருக்கிறது. சீனுவில் 1952–57-ல் நிகரப் பருப் பொருள் சார்ந்த பண்டங்களின் உற்பத்திஆண்டுதோறும்உயர்ந்த அளவான 12% அளவில் அதிகரித்துச் சென்றது இவ் வாண்டுகளில் சீனுவில் காணப்பட்ட வளர்ச்சி விகிதமானது சோவியத் யூனியனின் தொழில் வளர்ச்சியின் தொடக்கக் காலத்தில் பெறப் பட்டவிகிதங்களைக் காட்டிலும் அதிகமானதாக இருந்தது. ஆனுல், சீனுவின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் நுகர்வுப் பண்டங்களின் உற்பத்தியும், வேளாண்மைப் பண்டங் களின் உற்பத்தியும் எதிர்பார்த்த அளவைக் காட்டிலும் குறை வானதாகவே இருந்தன. 1958-ஆம் ஆண்டில் நல்ல மகசூல் இருந்தபோதும் 1959-ல் மிகவும் தீவிரமான உணவுப் பற்றுக் குறையும், மூலப் பொருள்கள் பற்றுக்குறையும் தோன்றின. திட்ட இலக்குகளை மறு மதிப்பீடு செய்ய வேண்டியதையும், 1961-ல் பேரளவிலான உணவும் மூலப் பொருள்களும் இறக்குமதி செய்யப்பட வேண்டியதையும் இப் பற்றுக்குறை அவசிய மாக்கியது. இந்தியாவின் முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் குறிப்பிடப்பட்டிருந்த இலக்கான 12% அளவு நாட்டு வருமான உயர்வுக்கு மாருக 18% அளவு நாட்டு வருமான உயர்வு பெறப் பட்டது. எதிர்பார்த்த அளவுக்கு மிக அதிக அளவில் தோன்றிய வேளாண்மைப் பண்டங்களின் உற்பத்தியால் தான்நாட்டு வருமானம் இவ்வாறு அதிகரித்தது. ஆனுல், இரண்டாம் ஐந் தாண்டுத் திட்டக் காலத்தில் நாட்டு வருமான உயர்வு எதிர்ப் பார்க்கப்பட்ட அளவாகிய 25 விழுக்காட்டு அளவுக்கு உயராமல் 20 விழுக்காட்டு அளவுக்கே உயர்ந்தது. 1955-60 ஆகிய 10ஆண்டுக் காலத்தில் மொத்த நாட்டு விளைவு 42% அளவுக்கு உயர்ந்திருந் தாலும், தனி நபர் வருமானம் 1% அளவுக்கே அதிகரித்தது. பாக்கிஸ்தானிலும், பர்மாவிலும் இருந்த பலவிதமான பாதக மான சூழ்நிலைகள் முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றுவதை அதிகமாகத் தடை செய்தன. பாதகமான பருவ நிலைகளின் காரணமாக வேளாண்மைத்துறைதோல்வி அடைந்தால், பாக்கிஸ் தானின் முதல் திட்டத்தை முழு அளவில் நிறைவேற்ற முடி யாமல் போயிற்று. அதிக உணவு இறக்குமதி, வணிக விலை

முன்னேற்றத் திட்டத்தில் சீரழிவு, அதன் விளைவாக அந்நியச் செலாவணி வருமானத்தில் குறைவு ஆகியவற்றை இது தோற்று வித்தது. மேலும், எதிர்பாராத விதத்தில் முன்னேற்றத்திற் கல்லாத செலவுகளில் அதிகரிப்பையும் விலைகளில் கூர்மையான அதிகரிப்பையும் முக்கியமான அதிகாரிகள், சாதனங்கள், பண்டங் கள் ஆகியவற்றில் பற்றுக் குறையையும் அரசுப் பதிலாண்மை களிடையே ஒத்துழைப்பின்மையையும், நன்கு ஒருங்கிணைக்கப் படாத திட்டமிடுதலையும் இதுதோற்றுவித்தது. மேலும்இலக்குகள் அடைவதையும் இது தடை செய்தது. புறச்சூழ்நிலைகள் எந்த அளவுக்குத் திட்டமிடும் முயற்சியைக் கெடுக்கமுடியும் என்பதை பர்மாவின் அனுபவம் நன்கு காட்டுகிறது. பர்மாவின் எட் டாண்டுத் திட்டத்தில் நாட்டு வருமானம் 7·4% அளவுக்கும், தனி நபர் வருமானம் 6·2% அளவுக்கும் அதிகரிக்க வேண்டும் எனத் திட்ட இலக்குகள் நிர்ணயிக்கப்பட்டன. ஆனல், உண்மையில் நாட்டு வருமானத்திலும் தனிநபர் வருமானத்திலும் பெறப்பட்ட உயர்வுக்கான அளவுகள் முறையே 4·7% ஆகவும், 3·5% ஆகவும் இருந்தன. 1955 ஆண்டு வாக்கிலிருந்த மொத்த உள்நாட்டு உற்பத்தி அளவு, போருக்கு முந்தியிருந்த அளவைக் காட்டிலும் 17%அளவுதான் அதிகமானதாக இருந்தது. ஆனல், தலா வருமான விளைவும், நுகர்வும் போருக்கு முந்தியிருந்த நிலைமையைக் காட்டி லும் முறையே 17% அளவு, 14% அளவு குறைவானவையாக இருந்தன. பர்மாவின் முக்கியமான ஏற்றுமதிப் பண்டமாகிய அரிசிக்கான பன்னாட்டு அங்காடி பர்மாவிற்கும் பாதகமானதாக ஆனதுதான் இதற்கான முக்கியமான காரணமாகும். அரிசி ஏற்று மதியால் கிடைக்கும் என்று திட்டத்தில் மதிப்பீடு செய்யப்பட்டி ருந்த தொகையில் பாதியளவுதான் கிடைத்தது. போக்கு வரத்து, மின்சாரம் போன்ற அடிப்படை வசதிகளுக்குச் சிறப் பிடம் கொடுக்கப்பட்டது. இது பொருளாதாரத்தின் மூலதன விளைவு விகிதத்தை அதிகரித்தது; அதிக அளவிலான பண்டங் களின் இறக்குமதியை அவசியமாக்கியது. மூல வளங்களின் மீதும், அயல்நாட்டுச் செலுத்து நிலையின்மீதும் அதிக அளவி லான சிரமத்தைத் தோற்றுவித்தது. 1955 ஆம் ஆண்டுவாக்கில் எட்டாண்டுத் திட்டம் முற்றிலுமாக நீக்கப்பட்டு, முதல் நான் காண்டுத் திட்டம் (1956-57—1959-60) தொடங்கப்பட்டது. இந்த நான்காண்டுத் திட்டம், 'உறுதியின்மையைக் குறைத்தலை யும், பொருளாதாரத்தின் அடிப்படையை வலுவுள்ள தாக்குதலை யும், வலியுறுத்தியதோடு, அந்நியச் செலாவணி வருமானம், சேமிப்புகள், குறைவான மூலதன விளைவு விகிதம் அல்லது மிக

விரைவாகப் பலன்களைத் தரும் திட்டங்கள் ஆகியவற்றை மிகவும் அவசியமானவைகள் என்றும் வலியுறுத்தியது'.[1]

திட்டமிடுதலில் குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் குறுகிய அளவிலான அனுபவத்தையே பெற்றிருக்கின்றன. எனவே, இதுவரை பெற்றிருக்கும் வெற்றிகளை அடிப்படையாக வைத்து, பொருளாதார, முன்னேற்றத்திற்கான சக்திகளைத் தோற்றுவிப்பதில் திட்டமிடுதல் எந்த அளவுக்குப் பயனைத் தரத்தக்கது என்று மதிப்பிடுவது தவறானதாகும். அரசியல் சிக்கல்களினாலும், பாதகமான புறச்சூழ்நிலைகள், உள்நாட்டில் பணவீக்க நிலை போன்ற பலவற்றாலும் இவற்றில் பெரும்பான்மையான நாடுகள் பாதிக்கப்பட்டிருந்த காரணத்தால் திட்டமிட்ட முயற்சிகளுக்கு இந் நாடுகள் முழு அளவில் கவனம் செலுத்த முடியவில்லை. திட்டமிட்ட முயற்சியில் குறைந்த அளவிலான வெற்றியை இந் நாடுகள் பெற்றிருந்ததற்கு இதுவும் ஒரு காரணமாக இருந்திருக்கிறது. அதே நேரத்தில், இத்தகைய இடர்ப்பாடுகள் இல்லாதிருந்த பிற நாடுகளிலும் திட்டமிடும் முயற்சி திறம்பட்ட வழிகளில் மேற்கொள்ளப்பட்டது என்று சொல்லிவிட முடியாது. நிர்வாகக் குறைகள், புள்ளி விவரங்கள் இல்லாமை, பயிற்சி பெற்ற அதிகாரிகள், அலுவலர்கள் ஆகியோரின்மை ஆகியவையெல்லாம் சேர்ந்து இந் நாடுகளில் சீரான முறையிலில்லாத வழிகளில் திட்டங்களை வகுத்தலையும், அரை மனத்துடன் அத் திட்டங்களை நிறைவேற்றுவதையும் தோற்றுவித்துவிட்டன. ஒரு சிலவற்றில் முதலீட்டு இலக்குகளையும், உற்பத்தி இலக்குகளையும் குறிப்பிடுவதில் தகுதிக்கு அதிகமான அளவுகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. மற்றும் சிலவற்றில், ஒரு சில தொழில்களின்மீது மேற்கொள்ளப்பட்ட அமித முதலீடு பொருளாதாரத்தில் சமநிலைமையற்ற தன்மையைத் தோற்றுவித்திருக்கிறது. ஒருசில நாடுகளில் சமுதாயப் பின்னமைப்புகளில் மேற்கொள்ளப்பட்ட முதலீடு, பொருளாதாரத்தின் கவரும் சக்தியை அதிகமானதாக ஆக்கியிருக்கிறது. பெரும்பாலான நாடுகளில், வளர்ச்சித் திட்டங்களை நிறைவேற்றுவதற்குப் பொறுப்பான பலவிதமான பதிலாண்மைகளுக்கிடையே சரியான முறையில் ஒத்துழைப்பைத் தோற்றுவிப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படவில்லை. தேவையைப் பற்றிய எதிர்கால மதிப்பீடுகளையும், பல தொழில் தொடர்புகள் ஆகியவற்றையும் பற்றிச் சரியான முறையில் கவனத்தைச் செலுத்தாததுதான் திட்டமிடுவதில் உள்ள மிகவும் முக்கியமான குறையாகும். இறுதிப் பகுத்தாய்வின்படி பார்த்

1 *Economic Bulletion in Asia and the Far East*, U. N., December, 1961, p. 23.

தால், திட்டமிடும் முயற்சியில் வெற்றியைப் பெற வேண்டுமானுல் அதற்கு நாடு பொருளாதார முன்னேற்றத்தில் குறிப்பிட்ட தொரு தரத்தைப் பெற்றிருக்க வேண்டும் என்ற உண்மை தெரிய வருகிறது. அடிப்படையான வசதிகளும் நிதி நிலையங்களும் இல்லாமல் பேரளவிலான பணத் தொடர்பற்ற துறையுடனும், திறமையற்ற நிர்வாக இயந்திரத்துடனும் ஒரு நாடு பின் தங்கிய நிலையிலிருக்கும்போது, திட்டமிடுதல் என்பது பொருளா தார முன்னேற்றத்திற்கானதாக இருக்கக் கூடாது என்றும், புணர்வாழ்வளித்தல், புதுப்பித்தல், அமைப்பை மாற்றியமைத்தல் என்பனவற்றிற்கானதாகவே இருக்க வேண்டும் என்றும் குறிப் பிடப்படலாம். பொருளாதாரம் வளர்ச்சி பெறுவதற்கேற்ற நிலையிலான அடிப்படை நிலைகள் நல்ல முறையில் அமைக்கப் பட்டிருந்தால்தான் திட்டமிடுதல் ஆழமாக வேரூன்றி நல்ல பலன்களைத் தரமுடியும்.

# 13. இந்தியாவில் திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றம்

## (Planned Economic Progress in India)

ஏறத்தாழ கடந்த 20 ஆண்டுக் காலமாக இந்தியாவின் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியைப்பற்றிய மதிப்புரையானது சரியானதொரு குறைந்த வளர்ச்சியுடைய நாட்டில் திட்டமிடுதலின் வாய்ப்புகளைப்பற்றித் தெளிவாகக் காட்டுவதற்கு உதவுவதாக இருக்கும். இருபது ஆண்டுகளுக்கும் அதிகமான காலத்தில் தடையற்ற முன்னேற்றத்தை இந்திய நாடு பெற்றிருந்த காரணத்தால் திட்டமிடுதலில் இந்தியாவின் அனுபவம் மிகவும் சிறப்புடையதாகும். 1947-ல் இந்திய நாடு துண்டாடப்பட்டதிலிருந்து அண்மையில் சீனுவுடனும், பாக்கிஸ்தானுடனும் ஏற்பட்ட மோதல்வரை இந்தியா தீவிரமான அரசியல், சமுதாயத் தொந்தரவுகளிலிருந்து விடுபட்டதாக இருந்திருக்கிறது. மேலைநாடுகளில் பெறப்பட்ட பொருளாதார வெற்றிகளின் அடிப்படையில் தீர்மானிக்கப்படும்போது இந்தியாவின் நிருவாக முறை மிகவும் மனநிறைவு தரத்தக்கதாக இல்லாமலிருந்தாலும்கூட, மற்றப் பல குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் காணப்படுவதைக்காட்டிலும் அது மிகச் சிறந்ததாகவே இருக்கிறது. மேலும் பர்மா, மலேயா, சிலோன் போன்ற நாடுகளைப் போலல்லாமல் பேரளவில் ஏற்றுமதி செய்யத்தக்கதொரு நாடாக இந்தியா இல்லை. இந்தியாவின் ஏற்றுமதி வருமானம் அதன் நாட்டு வருமானத்தில் ஏறத்தாழ 6% அளவுக்குத்தான் இருக்கிறது, அதன் காரணமாக, அயல்நாடுகளில் உள்ள தேவைக்காரணிகள் அல்லது உலகச் சந்தைகளில் தோன்றும் ஏற்றத்தாழ்வுகள் இந்திய நாட்டின் வருமானப்போக்கை மிக அதிக அளவுக்குப் பாதிக்கவில்லை. இந்தியாவில் மேற்கொள்ளப்பட்ட பொருளாதாரத் திட்டமிடுதல் அதைப்பற்றிய நல்ல

தொரு ஒத்திகைபோலவே அமைந்திருந்தது. எனவே, இந்திய நாட்டில் வளர்ச்சிச் சக்திகளைத் தோற்றுவிப்பதில் பொருளாதாரத் திட்டமிடுதல் எந்த அளவுக்கு உதவி செய்திருக்கிறது என்பதை ஆராய்வது மிகவும் பொருத்தமானது.

## திட்டமிடுதலின் நோக்கங்கள்
## (Objectives of Planning)

இந்தியாவில் திட்டமிடுதல் மூன்று இன்றியமையா நோக்கங்களைக் கொண்டிருக்கிறது. நாட்டு வருமானத்தில் பேரளவிலான அதிகரிப்பைத் தோற்றுவிப்பது. 1951 — 52 முதல் 1955-56 முடிய இருந்த முதல் திட்டமானது திட்டத்தின் முதல் ஆண்டில் ரூ. 90பில்லியன் இருந்த நாட்டு வருமானத்தை திட்ட முடிவுக் காலத்தில் ரூ. 100பில்லியனாக உயர்த்த வேண்டும்; அதாவது 11% அளவுக்கு உயர்த்த வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டிருந்தது. 1956—57 முதல் 1960—61 முடிய இருந்த இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் 5 ஆண்டுக் காலத்தில் 25% அளவுக்கு நாட்டு வருமானம் அதிகரிக்க வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டிருந்தது. அதைப் போன்று ஆண்டொன்றுக்கு 5% அளவுக்கு அல்லது அதற்கும் அதிகமான விழுக்காட்டு அளவுக்கு நாட்டு வருமானம் உயரவேண்டும் என்று 1961—62 முதல் 1965-66 வரையிலான மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. உணவில் தன்னிறைவு பெறுதல், அதிகரித்த வேளாண்மை உற்பத்தியைப் பெறுதல், உருக்கு, ரசாயனங்கள், எரிபொருள், மின்சாரம் போன்ற அடிப்படைத் தொழில்களில் வளர்ச்சியைப் பெறுதல், இயந்திரத்தை நிர்மாணிக்கும் சக்தியைத் தோற்றுவித்தல் போன்றவற்றைப் பெறுவதை நாட்டு வருமானத்தின் இத்தகைய அதிகரிப்பு கொண்டிருக்கிறது. அதன் வழியாக மென்மேலுமான தொழில் வளர்ச்சிக்கான தேவைகள் நாட்டின் சொந்த மூலவளங்களினாலேயே ஈடுசெய்யப்படும்வண்ணம் உள்ள நிலையைப் பெறுவதையும் இது கொண்டிருக்கிறது. வேலைவாய்ப்புகளைப் பெருக்குவதும், நாட்டிலிருக்கும் மனித சக்தியை உச்ச அளவுக்குப் பயன்படுத்துவதும். இந்தியாவின் அரசியல் சட்டத்தின் 36 முதல் 51ஆவது பிரிவுவரை குறிப்பிடப்பட்டுள்ள அரசின் அறிவிக்கப்பட்ட கொள்கைக்கேற்ப மென்மேலும் அதிகரித்துவரக்கூடிய அளவில் எல்லோருக்கும் சம வாய்ப்பு அளித்தல், வருமானம், செல்வம்ஆகியவற்றில் காணப்படும் வேறுபாடுகளைக் குறைத்தல், பொருளாதாரச் சக்தியைச் சமமாகப் பகிர்ந்தளித்தல் ஆகியவற்றைக் கொடுப்பதைத் திட்டமிட்ட

முன்னேற்ற நோக்கங்களாகக் கொண்டிருக்கிறது. பொருளாதார அமைப்பு செயல்படும்போது, அது சமுதாயத்திற்குத் தீங்கு விளைவிக்கத்தக்க வகையில் ஒரு சிலரிடம் மட்டும் செல்வமும், உற்பத்திச் சக்திகளும் குவிந்துவிடுவதைத் தோற்றுவித்துவிடக் கூடாது. திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தின் இத்தகைய உறுதியான நோக்கம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஏற்கனவே இருக்கக்கூடிய பொருளாதார, சமுதாய நிலையங்களின் அமைப்புகளிலிருந்து நல்ல விளைவுகளைப் பெறுவது மட்டுமல்லாமல் மிகப் பரவலானதாகவும், ஆழமானதாகவும் உள்ள சமுதாய மதிப்புகளைப் பெறுவதற்கு நல்ல முறையில் பங்காற்றும்வண்ணம் இந் நிலையங்களின் அமைப்புகளை வடிவமைப்பதும், மாற்றியமைப்பதும் குறைந்த வளர்ச்சியுடைய நாடொன்றுக்கு இருக்கக்கூடிய சிக்கலாக இருக்கிறது என்று இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் குறிப்பிடுகிறது. அதன்படி சமதர்ம சமுதாய, அமைப்பு என்ற குறிக்கோள் இரண்டாம் திட்டத்தில் குறிப்பிடப்பட்டது. அதில் முன்னேற்ற வழிகளை நிர்ணயிக்கக்கூடிய அடிப்படை ஒப்பளவுக் கருவி தனியார் ஆதாயம் என்பதாக இருக்காமல் சமுதாய நன்மையாக இருக்க வேண்டும் எனக் குறிப்பிடப்பட்டது,

இந்த மூன்று நோக்கங்களும் மிகவும் நெருக்கமாக ஒன்றோடொன்று தொடர்புடையவைகளாக இருக்கின்றன. கிடைக்கத் தக்க இயற்கை மூல வளங்களையும், மனித மூலவளங்களையும் முழு அளவில் பயன்படுத்துவதன்மூலம் வேளாண்மை உற்பத்தியையும், தொழில் உற்பத்தியையும் அதிகரிப்பதன்மூலமாக அதிக அளவிலான வருமான நிலையைப் பெறமுடியும். மக்களின் கூட்டுறவைப் பெறுவதற்கும், அதிகமான தனிப்பட்ட முயற்சிக்கு அவர்களைத் தூண்டுவதற்கும் நல்ல முறையிலான சமுதாயத்தை அமைப்பது மிகவும் அவசியமானதாகும். இவை யாவும் இல்லாவிட்டால் அதிக உற்பத்தி இயலாததாகிவிடும்.

## முதலீட்டு அமைப்பு
### (Pattern of Investment)

முதலிரண்டு குறிக்கோள்களையும் பெறுவதென்பது எந்த அளவுக்குச் சேமிப்புகள் தோற்றுவிக்கப்பட்டுத் திரட்டப்படுகின்றன என்பதையும், எந்த முறையில் சேமிப்புகள் முதலீடு செய்யப்படுகின்றன என்பதையும் பொறுத்துப் பெரும்பாலும் அமைகிறது. இந் நோக்கத்தில் இரண்டு முக்கியமான போக்குகள் காணப்படுகின்றன.

(அ) முன்னேற்ற நடவடிக்கையில் அரசு முக்கியமானதொரு பங்கை ஏற்றுக்கொண்டிருக்கிறது

(ஆ) முதலீட்டின் அமைப்பை அல்லது முதலீட்டின் கலவையைப் பொறுத்தமட்டிலும், பொருளாதார வளர்ச்சியை விரிவுபடுத்துவதற்காகவும், மூலதனச் சாதனம், இயந்திரங்கள் ஆகியவற்றில் நாடு தன்னிறைவு நிலையைப் பெறுவதற்காகவும் கனரகத் தொழில்கள் அல்லது மூலதனப் பண்டத் தொழில்களின் மீது சிறப்பிடம் கொடுக்கப்பட்டது.

தொழில் முன்னேற்றத்தை பெருக்குவதில் அரசாங்கத்திற்கு மிகவும் சிறப்பான பங்கு இருக்கிறது என்று வற்புறுத்துவதாகவும், பொதுத்துறைக்கு அதிகமான பங்கு கொடுக்கப்பட வேண்டும் என்று குறிப்பிடுவதாகவும் இந்தியாவின் 1948ஆம் ஆண்டில் தொழில் கொள்கைத் தீர்மானம் (Industrial Policy Resolution, 1948) அமைந்திருந்தபோதிலும் பொதுத்துறை பெருகவேண்டுமென்பது அவசியமானதென்றோ, விரும்பத்தக்கதென்றோ 1951ஆம் ஆண்டில் திட்டத்தை வகுத்த அதிகாரிகள் கருதவில்லை. இருப்பு, உருக்குத் தொழில்கள், கனரக இரசாயனத் தொழில்கள் கனரக மின்சாரத் தொழில்கள் ஆகியவை போன்ற மிக அடிப்படையாக உள்ள தொழில்களில் அரசின் பங்கு வலியுறுத்தப் பட்டிருக்கிறது. இருந்தாலும் முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் மின்சாரம், போக்குவரத்து போன்ற அடிப்படைப் பணிகளைக் கொடுப்பதிலேயே அரசு செறிந்த கவனம் செலுத்த வேண்டும் என்றும், தொழில் துறையின் வளர்ச்சியானது பெரும்பாலும் தனியார் முயற்சியாலும், தனியார் முதலீட்டாலும் தோற்றுவிக்கப்படவேண்டும் என்றும் கருதப்பட்டது.

ஆனால், இரண்டாம் திட்டத்தில் வலியுறுத்தப்பட்டிருப்பதில் குறிப்பிடத்தக்க மாற்றம் இருக்கிறது. அரசின் தொழில் கொள்கை மாற்றப்பட்டு, திருத்தியமைக்கப்பட்டு 1956ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் திருத்தியமைக்கப்பட்ட அரசின் தொழில்கொள்கை வெளியிடப்பட்டது. சமதர்ம சமுதாய அமைப்பை அடைவது என்பது நாட்டின் குறிக்கோளாக இருக்கின்ற காரணத்தால் அக் கொள்கை கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்பட்டது. ‘அடிப்படையானவைகளாகவும், நாட்டின் பாதுகாப்பிற்கு உதவுபவைகளாகவும் பொதுப்பயன்களைத் தரக்கூடிய இயல்புகளை உடையவைகளாகவும் உள்ள எல்லாத் தொழில்களும் பொதுத் துறையிலேயே இருக்க வேண்டும். மிக முக்கியமானவைகளாகவும், அரசாங்கத்தினால் மட்டுமே முடியத்தக்க அளவுக்குப் பேரளவில் முதலீடு தேவைப்படக்கூடிய

தொழில்களும் பொதுத் துறையிலேயே இருக்க வேண்டும். அதிக அளவில் பரந்த எல்லையில் எதிர்காலத் தொழில் முன்னேற்றத்திற்கான நேரடியான பொறுப்பை அரசாங்கமே மேற்கொள்ளவேண்டும்' இக் கொள்கைக்கேற்பக் கனரகத் தொழில்களிலும், எண்ணெய்வளம் பறித்தலிலும் நிலக்கரித்தொழிலிலும், பொதுத்துறையின் வளர்ச்சி அதிகமாக இருக்க வேண்டுமென இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் குறிப்பிட்டது. தனியார் துறைக்குத் தடை எதுவும் விதிக்கப்படவில்லை. 'அரசிறைக் கொள்கைகளின் மூலமாகவும், லைசென்ஸ் கொள்கையின் மூலமாகவும் குறிப்பிடப்பட்ட இலக்குகளைப் பெறுவதற்காகவும், அதற்கேற்ற வளர்ச்சியை முன்னேற்றுவிப்பதற்காகவும் நேரிடையான பருப்பொருள் சார்ந்த பகிர்வுகளைத் தேவையான அளவு செய்வதன் மூலமாகவும்'[1] தனியார் முடிவுகளை இயக்கத்தக்கதாக அரசின் தொழில்கொள்கை இருக்க வேண்டும் என்று கருதப்பட்டது. மேலும், 'உருக்குத் தொழில் பொறிகளை நிர்மானித்தல், உற்பத்தியாளர்கள் பண்டங்களை உற்பத்தி செய்தல் போன்று நாடு தன்னிறைவு நிலையைப் பெறுவதற்கான தொழில்களாகவும் இப் பண்டங்களை வாங்குவதற்கு வெளிநாட்டு உதவியின் தேவையினை எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்கு விரைவாகக் குறைப்பதற்கு வசதி செய்யக்கூடிய தொழில்களாகவும், ஏற்றுமதி அளவை விரிவாக்குவதற்கு வசதிசெய்யக்கூடிய தொழில்களாகவும்'[2] உள்ளவற்றின் முன்னேற்றத்தில் அரசின் சிறப்புமிகு பங்கு மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் வலியுறுத்திக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பொருளாதார வளர்ச்சியை விரைவுபடுத்துவதில் அடிப்படைத் தொழில்களின் முக்கியத்துவத்தை வலியுறுத்தி மூன்றும் திட்டம் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டிருக்கிறது. 'அடிப்படைத் தொழில்களை முன்னேற்றுவிப்பதிலும், முன்னேற்றத்திற்கான அதிக அளவு உபரியைத் தோற்றுவிக்கும் தொழில்களை முன்னேற்றுவிப்பதிலும் ஈடுபட்டிருக்கும் பொதுத்துறையின் வளர்ச்சியே, பொருளாதாரம் வளரக்கூடிய விகிதத்தை நிர்ணயிக்கும் காரணிகளில் மிக முக்கியமான காரணியாக இருக்கிறது'. அரசின் தொழில் கொள்கைகளில் உள்ள குறைகளைக் கண்டு அவற்றைக் களையும் நோக்கத்துடன் 196?-ல் திரு. ஆர். கே. ஹசாரி (Mr. R. K. Hazari) என்பவரின் கருத்துகளை திட்டச் குழு கேட்டறிந்தது. பின்னர் 22-7-1967-ல் திரு. சுபிமால் டட் (Mr. Subimal Dutt) என்பவரின் தலைமையில் ஓர் ஆய்வுக் குழுவும் அமைக்கப்பட்டது. இக் குழுவின் பரிந்துரைகளையும் கருத்தில் கொண்டு லைசென்சு, தொழில் ஆகியவற்

[1] *Second Five Year Plan.* Planning commision, Government of India, New Delhi, 1956, p. 28.

றிற்கான புதிய கொள்கை 1970-ல் (New Industrial Policy and Industrial Licensing, 1970) வெளியிடப்பட்டது. புதிய கொள்கையின்படி 1956ஆம் ஆண்டுக் கொள்கையில் குறிப்பிட்ட அளவைக்காட்டிலும் பொதுத் துறைப் பங்கைப் பேளரவில் அதிகரிப்பது என்று தீர்மானிக்கப்பட்டுக் செயல் படுத்தப்படுகிறது. கனரகத் தொழில் முன்னேற்றத்தின் மீது அதிகமான சிறப்பிடம் கொடுக்கப்பட்டிருப்பதையும், இதைப்பொறுத்தமட்டிலும் மென்மேலும் அதிகரித்துவரும் பங்கை அரசு மேற்கொண்டுவருவதையும் அட்டவணை 21-ல் கொடுக்கப்பட்டுள்ள முதலீட்டுப் பகிர்வுக்கான எண்கள் தெளிவாகக் காட்டுகின்றன.

பொருளாதாரத்தின் மொத்த முதலீட்டில் பொதுத்துறை முதலீட்டின் பங்கு முதல் திட்டத்தில் 46%-லிருந்து இரண்டாம் திட்டத்தில் 56%-க்கு அதிகரித்திருக்கிறது என்பதையும், மூன்றும் திட்டக் காலத்தில் 61% ஆக அதிகரித்திருக்கிறது என்பதையும், நான்காம் திட்டக் காலத்தில் ஏறத்தாழ இதே அளவில் இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது என்பதையும் அட்டவணை 21-ல் காணலாம். இதை வேறொரு நோக்கிலிருந்து பார்த்தால் அரசின் முதலீடு 1–2 திட்டங்களுக்கிடையே 134% அதிகரித்தது, 2-3 திட்டங்களுக்கிடையே 72% அதிகரித்தது என்றும் கூறலாம். இதற்கிணையான அளவுகள் தனியார் துறையில் முறையே 70% 32% என்றுதான் இருந்தன. பொதுத்துறைச் செலவு பெரும்பாலும் தொழில்களிலும், சுரங்கத் தாதுப்பொருள்களிலுமே செறிந்து மேற்கொள்ளப்பட்டன. இவ் விரண்டு தலைப்புகளிலும் மேற்கொள்ளப்பட்ட செலவு அதிகரிப்பு இரண்டாம் திட்டக் காலத்தில் மிகவும் குறிப்பிடத்தக்கவாறு அதிக அளவிலிருந்தது. முதல் திட்டத்தில் இவற்றிற்காகச் செலவிடப்பட்ட தொகை ரூ. 740 மில்லியனாக இருந்தது. இத் தொகை இரண்டாம் திட்டத்தில் ரூ. 9,000 மில்லியனாக அதாவது 12 மடங்கிற்கும் அதிகமாக அதிகரித்தது. ஆனால், இரண்டாம் திட்டத்திற்கும் மூன்றும் திட்டத்திற்குமிடையே இது ஏறத்தாழ 69% அளவுக்கே உயரும் என எதிர்பார்க்கப்படுகிறது. இவ் விரண்டு இனங்களும் மொத்தச் செலவில் 1951-56ல் 4% அளவையும், இரண்டாம் திட்டக் காலத்தில் 20% அளவையும் பெற்றிருந்தன. மூன்றும் திட்டக் காலத்தில் இவை மொத்தச் செலவில் ஐந்தில் ஒரு பங்கான அதே 20% அளவிலிருந்தது. நான்கு திட்டங்களிலும் மின்சாரத்திற்காகப் பொதுச் செலவின் பங்கு ஏறத்தாழ ஒரே அளவிலிருக்கிறது. இது முதல் திட்டத்தில் 13% ஆகும். இரண்டாம் திட்டத்தில் 10% ஆகும். மூன்றும் திட்டத்தில் 14·6% ஆகும்.

அட்டவணை 21

ஐந்தாண்டுத் திட்டங்களில செலவின் பகிர்வு (Distribution of outlay in the Five-Year Plans)
மில்லியன் ரூபாய்களில்

| | முதல் திட்டம் 1951—56 நிறைவேற்றப் பட்டவை | | இரண்டாம் திட்டம் 1956—61 நிறைவேற்றப் பட்டவை) | | மூன்றும் திட்டம் 1961—66 (நிறைவேற்றப் பட்டவை) | | ஓராண்டுத் திட்டங்கள் 1966—1969 | | நான்காம் திட்டம் 1969—74 (மதிப்பீடு) | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | செலவு | % | செலவு | % | செலவு | % | செலவு | % | செலவு | % |
| பொதுத்துறையில் முதலீடு | 15,600 | 46 | 36,500 | 54 | 63.000 | 61 | | | 136,550 | 60 |
| தனியார் துறையில் முதலீடு | 18.000 | 54 | 31.000 | 46 | 41.000 | 3১ | | | 89,800 | 40 |
| மொத்த முதலீடு | 33,600 | 100 | 67.500 | ·100 | 104,000 | 100 | | | 226,350 | 100 |
| பொதுத் துறையில் செலவு | | | | | | | | | | |
| (அ) வேளாண்மை, சமுதாய வளர்ச்சி | 2,910 | 15 | 5,300 | 11 | 10,890 | 12.7 | 9,670 | 14.6 | 27,280 | 17.2 |
| (ஆ) பெரிய நடுத்தர நீர்ப்பாசன திட்டங்கள் | 3,100 | 16 | 4,200 | 9 | 6,650 | 7.7 | 4,710 | 7.1 | 10,870 | 6 8 |
| (இ) மின்சாரம் | 2.600 | 13 | 4.450 | 10 | 12,520 | 14.6 | 12,130 | 18 3 | 24;480 | 15.4 |
| (ஈ) கிராமத்தில், சிறுதொழில்கள் | 430 | 2 | 1'750 | 4 | 2,360 | 2.8 | 1,260 | 1.9 | 2,930 | 1.8 |
| (உ) தொழில்கள் சுரங்கப் பொருள்கள் | 740 | 4 | 9.000 | 20 | 17,260 | 20.1 | 15,120 | 22.8 | 33,380 | 21.0 |
| (ஊ) போக்கு வரத்து, செய்தித் தொடர்புகள் | 5,230 | 27 | 13,000 | 28 | 21,120 | 24.7 | 12,220 | 18.4 | 32,370 | 20.4 |
| (எ) சமுதாயப் பணிகளும் மற்றவைகளும் | 4.590 | 23 | 8,300 | 18 | 14,920 | 17.4 | 11,160 | 16.9 | 27,710 | 17.4 |
| மொத்தம் | 19,600 | 100 | 46,000 | 100 | 85,730 | 100 | 66 260 | 100 | 159,020 | 10·0 |

மூலம்: *Third Five Year Plan, Fourth Five Year Plan draft outline,* (pp.59-50) *Annual Plan Progress Report 1968-69, Fourth Five Year plan* (p.54)

ஆனால் போக்குவரத்து, செய்தித் தொடர்புக்கான செலவு முதல் இரண்டு திட்டங்களிலும் முறையே 27%, 28% என்றிருந்ததிலிருந்து மூன்றும் திட்டத்திலும், நான்காம் திட்டத்திலும் 20%ஆகக் குறைந்தது. அதைப்போன்று சமுதாயப் பணிகளுக்காகவும், மற்றவைகளுக்காகவும் செலவிடப்பட்ட தொகையின் பங்கு முதல் திட்டத்தில் 18%–லிருந்து இரண்டாம் மூன்றும் திட்டங்களிலும், நான்காம் திட்டத்திலும் 17%ஆகக் குறைந்துவிட்டது. வேளாண்மை, சமுதாய வளர்ச்சி ஆகிய வற்றிற்கான பொதுச் செலவு 1951-56-ல் 15%–லிருந்து 1956-61-ல் 12%ஆகக் குறைந்தும், 1961-66–ல் 15% ஆக அதிகரித்தும் காணப்பட்டன.

இந்தியாவின் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பொதுத் துறை முதலீட்டின் பகிர்வை. பர்மா, சிலோன், மலேயா, இந்தோனேசியா, நேபாளம், பாக்கிஸ்தான், பிலிப்பைன்ஸ், தாய்லாந்து, (தெற்கு) வியட்னும் போன்ற ஆசியாவிலும் தூரக்கிழக்கிலும் உள்ள சில நாடுகளின் பொதுத்துறை முதலீட்டின் பகிர்வோடு ஒப்பிடும்போது, இந்தியாவிலும் பிலிப்பைன்சிலும் மட்டும்தான் முறையே 24%, 22% (மொத்த முதலீட்டில் $\frac{1}{4}$ பங்கிற்கும் குறைவாக) இருப்பதைக் காணமுடிகிறது. தொழில்மீதும், சுரங்கங்களின்மீதுமான அரசாங்க முதலீட்டுச் செலவின் பங்கு 32% என்று சிலோனிலும் 30% என்று இந்தியாவிலும்தான் மிக அதிகமானவைாகளக இருந்தன. ஆனால், பொது முதலீட்டில் வேளாண்மைப் பங்கு, இந்தியாவிலிருந்ததைக் காட்டிலும் மிக அதிக அளவில் சிலோனில் இருந்தது. மேலே குறிப்பிட்டுள்ள வற்றில் பெரும்பாலான நாடுகள் போக்குவரத்திலும் செய்தித் தொடர்பிலும்தான் அதிக அளவு செலவை மேற்கொண்டன பர்மாவிலும், தாய்லாந்திலும் முதலீட்டில் ஏறத்தாழ பாதியளவு இவற்றிற்காக இருந்தது. மற்ற நாடுகளுடன் ஒப்பிடும்போது செய்தித் தொடர்பிலும் போக்குவரத்து வசதியிலும் இந்திய நாடு மிக நல்ல நிலையைப் பெற்றிருக்கிறது என்பதும் குறிப்பிடப்பட வேண்டும். இந் நாடுகளில் பெரும்பாலானவற்றில் அடிப்படைப் பின்னமைப்பு வசதிகளைத் தருவதும், திறமையான வழிகளில் வேளாண்மையை அமைத்தலும் முன்னேற்றத் திட்டம் எதையும் புகுத்துவதற்கான அடிப்படைத் தேவைகளாக இருந்தன.

இந்தியாவின் வளர்ச்சித் திட்டங்களில் கனரகத் தொழில்களின் பெருக்கம் மிகவும் வலியுறுததப்பட்டிருக்கிறது. நுகர்வுப் பண்டங்களைப் பேரளவில் உற்பத்தி செய்வதற்கு இத் தொழில்கள் அவசியமாகும். மேலும் புறச்சிக்கனங்களைக் கொடுக்கக் கூடிய பெரும் மூலங்களாகவும் அவை இருக்கின்றன. அதுமட்டு

மல்லாமல், பொருளாதாரத்தின் வளர்ச்சி உள்ளாற்றல்களைச் செயல்படுத்துபவைகளாகவும் இருக்கின்றன. எனவே, பொது முதலீட்டில் பெரும்பகுதி இத்தகைய கனரகத் தொழில்களின் மீதும் நிர்மாண அமைப்புகளின்மீதும் மேற்கொள்ளப்படுகிறது. இத் தொழில்கள் நல்ல முறையில் வளர்ச்சிபெற்றுவிடுமானால் அது அந்நியச் செலாவணித் தேவையில் பேரளவில் சேமிப்பைத் தோற்றுவிப்பதற்கு உதவும் என்றதொரு குறிப்பும் குறிப்பிடப்பட வேண்டும். அடிப்படைத் தொழில்கள் பொதுவான உற்பத்தித் திறனை அதிகரித்து, பொருளாதார முன்னேற்றத்தை விரைவுபடுத்துபவைகளாகும் என்பது எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மையாகும். வளர்ச்சி நெகிழ்ச்சியானது (Growth elasticity) எல்லாத் தொழில்களுக்கும் சேர்த்துப் பார்த்தால் 1·35 என்றிருப்பதாகவும், போக்குவரத்து, செய்தித் தொடர்புகளுக்கு 1·29 என்றிருப்பதாகவும், மற்றப் பணிகளுக்கு 1·07 என்றிருப்பதாகவும், முதன்மை உற்பத்திக்கு 0·49 என்றிருப்பதாகவும் பேராசிரியர் செனரி மதிப்பிடுகிறார்.[1] எனவே, இந்தியாவில் பொதுத்துறைக்கும், கனரகத் தொழில்களுக்கும் சிறப்பிடம் கொடுத்திருப்பது கொள்கையின் அடிப்படையில் அமைந்ததாக இல்லாமல், நடைமுறைத் தேவையின் அடிப்படையில் அமைந்ததாகக் காணப்படுகிறது. ஆனால், முதலீட்டில் இத்தகைய இயல்புடன் தேவைக்கு அதிகமான அளவில் சிறப்பிடம் கொடுத்திருப்பதானது பொருளாதாரத்தில் சமநிலைமையின்மையைத் தோற்றுவித்துவிடலாம். அது பொருளாதார வளர்ச்சியைப் பாதித்துவிடலாம். வேளாண்மைத்துறை உற்பத்தி குறைந்துவிட்ட காரணத்தால் அண்மை ஆண்டுகளில் சீன நாட்டின் தொழில்வளர்ச்சி பேரளவில் பாதிக்கப்பட்டுவிட்டது. இது முதலீட்டுப் பண்டங்கள் தொழில்கள், மூலதனச் செறிவுள்ள தொழில் நுண்ணியலை நம்பியிருப்பது, வேளாண்மைத் துறையின்மீதான முதலீட்டைத் தராதரமாகக் குறைத்துவிடுவது போன்றவற்றை உட்கொண்டிருக்கும் ஸ்டாலினின் முன்னேற்றப் பொறிநுட்பம் (Stalinist Technique of Development) என்பதை மாற்ற வேண்டிய அவசியத்தைத் தோற்றுவித்திருக்கிறது.

## திட்டமிட்ட முன்னேற்றமும் பொருளாதார வளர்ச்சியும் (Planned Development and Economic Growth)

ஏறத்தாழ இருபதாண்டு காலத்திற்கும் அதிகமாக இந்தியாவில் திட்டமிட்ட முன்னேற்றம் தோன்றிவருகிறது.

[1] Chenery, H. B., 'Patters of Industrial Growth, *The American Economic Review*, September, 1960, pp. 634-35.

தன்னைத்தானே வளர்த்துக் கொள்வதற்கான சக்திகளைத் தோற்று விப்பதில் இது எந்த அளவுக்கு வெற்றிபெற்றிருக்கிறது என் பதை திட்டத்தின் வெற்றி அல்லது தோல்வியானது பொரு ளாதாரத்தின தனித்தனித்துறைகளில் குறுகிய காலத் திட்ட இலக்குகளைப் பெறுவதை வைத்துக்கொண்டு நிர்ணயித்துவிடக் கூடாது. அதற்கு மாறாக, பொருளாதார அமைப்பின் மாற்றங்கள். வருமானத்தை உற்பத்தி செய்யும் முறைகளில் மாற்றங்கள், வருமானப் பகிர்வில் மாற்றங்கள் போன்ற அமைப்பு மாற்றங்கள் எந்த அளவுக்குத் தோன்றியிருக்கின்றன என்பதையும், பயன் படுத்தப்படாதிருக்கும் வளர்ச்சிச் சக்திகள் எந்த அளவுக்குத் தூண்டிவிடப்பட்டுச் செயல்படுத்தப்படுகின்றன என்பதையும் வைத்துக்கொண்டு நிர்ணயிக்கப்பட வேண்டும். பொருளாதார மாற்றம் என்பதைச் சுட்டிக் காட்டுபவை என்று ரோஸ்டோவ் (Rostow) குறிப்பிட்டிருப்பதை இங்கு நினைவில் கொள்வது நல்லது. வழிநடத்திச் செல்லும் துறைகளின் தோற்றம், சேமிப்பு விகிதத்திலும், முதலீட்டு விகிதத்திலும் குறிப்பிடத்தக்க அளவுக்கு அதிகரிப்பு, நிலைய மாற்றங்கள், அமைப்பு மாற்றங்கள், சமுதாய நோக்கங்களிலும், மக்களின் நோக்கங்களிலும் மாற்றங் கள் ஆகியவைதான் பொருளாதார மாற்றத்தைச் சுட்டிக்காட்டு பவையாகும் என்று ரோஸ்டோவ் குறிப்பிட்டிருக்கிறார்.[1] இங்கிலாந்து, செர்மனி, ஐக்கிய அமெரிக்க நாடு போன்ற வளர்ச்சி யடைந்த நாடுகளில் 18ஆம் நூற்றாண்டிலும் 19ஆம் நூற்றாண் டிலும் பொருளாதார முன்னேற்றம் தோன்றிய விதத்தை இக் காரணிகள் நன்கு விளக்கக்கூடியவையாக இருக்கின்றன. ஆனால், இன்றைய குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் அவை வளர்ச்சி பெறக் கூடிய சூழ்நிலைகள் முற்றிலும் மாறுபட்டவையாக இருக் கின்றகாரணத்தால், வளர்ச்சிக்கெனரோஸ்டோவ் குறிப்புட்டுள்ள பலவிதமான நிலைகளின் தராதரமான சிறப்புகள் மறுபரிசீலனை செய்யப்படவேண்டியவைகளாக இருக்கின்றன. இந்தியாவில் இன்றுள்ள பொருளாதார வளர்ச்சி திட்டமிடப்பட்டுள்ளதாக இருக்கிறது. தனியார் துறை முதலீட்டைக் காட்டிலும் பொதுத் துறை முதலீடு அதிகமானதாக இருக்கிறது. பொது முதலீடானது பொருளாதாரப் பின்னமைப்புகளிலும், அடிப்படைத் தொழில் களிலும் செறிந்து காணப்படுகிறது. இத்தகைய நிலைமைகளைக் கொண்டுள்ள இந்தியா அரசு பொருளாதாரத்தில் பொருளாதார வளர்ச்சியைத் தொடங்கிவைப்பதில் 19ஆம் நூற்றாண்டில் தனியார் தொழில் முயல்வோர் எந்த அளவுக்குச் சிறப்பான பங்கை மேற்கொண்டிருந்தார்களோ அதைப்போன்ற சிறப்பான

1 அத்தியாயம் 2-ல் காண்க.

தொரு பங்கை ஆற்ற வேண்டியிருக்கிறது. கடன் கொடுப்பதற்கான நிதியின் புழக்கத்தை உறுதிசெய்வதற்குத் தேவைப்படும் நிலைகள் தடையற்ற தன்முயற்சிப் பொருளாதாரத்தில் எவ்வளவு சிறப்பிடம் பெற்றவையாக இருக்கின்றனவோ அந்த அளவுக்கான சிறப்பிடத்தைத் திட்டமிட்ட பொருளாதாரத்திலும் கலப்புப் பொருளாதாரத்திலும் பெறுகின்றன. ஆனால் திட்டமிட்ட பொருளாதரத்திலும் கலப்புப் பொருளாதாரத்திலும் அவை வேறு வடிவத்தையும் நோக்கத்தையும் பெற்றவையாக இருக்கின்றன. தடையற்ற தன் முயற்சிப் பொருளாதாரங்களின் தொடக்க நிலைகளில் தனிப்பட்ட தொழில் முயல்வோர்களின் தேவைக்கேற்பத் தனிப்பட்ட தொழில் முயல்வோர்களின் முயற்சியாலும் ஆர்வத்தாலும் வங்கி நிலையங்களும், நிதி நிலையங்களும், மூலதன அங்காடியும் இயல்பாகவே தோன்றின. ஆனால், இந்தியா போன்றதொரு நாட்டில் நிதி வசதிகளைக் கொடுப்பது அரசாங்கத்தால் மேற்கொள்ளப்பட வேண்டியிருக்கிறது. அதாவது, சேமிப்பைப் பயன்படுத்துவதில் மட்டுமல்லாமல் சேமிப்பைத் திரட்டுவதிலும், வழிப்படுத்துவதிலும் அரசு மிகச் சிறப்பாகப் பங்காற்றவேண்டியிருக்கிறது. அதே நேரத்தில், போக்குவரத்திலும் செய்தித் தொடர்பிலும், காட்டப்படும் பேரார்வமும், மூலதனப் பண்டத் தொழில்களையும் அடிப்படைத் தொழில்களையும் தொடங்குவதில் காட்டப்படும் மென்மேலும் அதிகரித்துவரும் ஆர்வமும் குறைந்த வளர்ச்சியடையதொரு பொருளாதாரத்தில் தன்னைத் தானே வளர்ச்சியடையச் செய்துகொள்ளத்தக்கதொரு வளர்ச்சிக்குப் பொருளாதாரத்தைத் தொடங்கிவைக்கும் என எதிர்பார்க்கலாம்.

மேற்கண்ட குறிப்புகளிலிருந்து கடந்த இருபதாண்டுக் காலத்தில் தன்னைத்தானே வளர்த்துக்கொள்ளும் வளர்ச்சி நிலையை நோக்கிச் செல்வதில் திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றம் எந்த அளவுக்கு இந்தியாவை அழைத்துக்கொண்டு சென்றிருக்கிறது என்பதற்கு அரசு எந்த அளவைச் சாதித்திருக்கிறது என்பதன் அடிப்படையில்தான் பதில் கொடுக்க முடியும். ரோஸ்டோ அவர்களே குறிப்பிட்டுள்ளபடி, திட்ட யுகத்தின் தோற்றமே மாறுதல் நிலை தோன்றிவிட்டதைக் காட்டுவதாகக் கருதப்படலாம். அரசியலில் தன்னாட்சி நிலையைப் பெற்றது, தடையற்ற தனிநாடாக உலக அரங்கில் மதிப்பைப் பெற்றது, பொருளாதாரத்தைச் சீர்திருத்துவதற்காக மக்கள் எல்லோரிடமும் தோன்றியுள்ள பேரெழுச்சி ஆகியவை எல்லாமே இத்தகைய மாற்றப் போக்கைத் தோற்றுவித்த பொருளாதார

மற்ற சக்திகள் எனக் கருதப்படலாம். தன்னைத்தானே வளர்த்துக் கொள்ளத்தக்கதொரு நிலையை அடையும்வரை இப் போக்கு தொடர்ந்து செல்லும். நன்கு திட்டமிடப்பட்டுச் செயல்படுத்தப் படும் திட்டமிடுதலும், நல்ல வழிகளில் மேற்கொள்ளப்படும் முன்னேற்றமும் இத்தகைய மாற்றக் காலத்தின் அளவைக் குறைத்து, பொருளாதார முன்னேற்றம் தானுகத் தோன்றக் கூடியதாகவும் இயல்பாகத் தோன்றக்கூடியதாகவும் உள்ள அடுத்த நிலைக்குச் செல்வதற்குத் துணை செய்யத்தக்கவைகளாகும். இந்த அடிப்படையில் காணும்போது, திட்டமிடுதலின் வெற்றி அல்லது தோல்வி என்பது கீழ்க்கண்ட மூன்று காரணங்களின் அடிப் படையில் தீர்மானிக்கப்பட வேண்டும்.

(அ) பொருளாதாரத்தில் அதிகப்படியான அளவு சேமிப்புக் கிடைக்கும்வண்ணமும், முதலீட்டு விகிதம் பேரளவிற்கு அதிகரிக்கப்படும்வண்ணமும் தனிநபர் வருமானம் பேரளவிற்கு அதிகரித்திருக்கிறதா இல்லையா என்பதும் முதலாவதாகும்.

(ஆ) பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதகமான அமைப்பில் சமுதாய நோக்கங்கள் மாற்றமடைந்திருக்கின்றனவா? இல்லையா? என்பது இரண்டாவதாகும். அதாவது இதுவரை பெறப்பட்டிருக்கும் வெற்றிகள் மக்களின் உள்ளத்தில் இன்னும் அதிக அளவிலான முன்னேற்றத்தைப் 'பெறவேண்டும் என்ற பேரவாவைத் தோற்றுவித்திருக்கின்றனவா இல்லையா என்ப தாகும்.

(இ) பொருளாதார உள்ளமைப்புகளைக் கொடுப்பதிலும், அடிப்படைத் தொழில்களின் முன்னேற்றத்தைத் தோற்று விப்பதிலும் மேற்கொள்ளப்பட்ட பொது முதலீடு பொருளாதார மேலமைப்புகளை மிக விரைவாகத் தோற்றுவிப்பதில் நல்லமுறை யிலான அடிப்படையைத் தோற்றுவித்திருக்கிறதா இல்லையா என்பது மூன்ருவதாகும்.

10% அளவு முதலீட்டு விகிதத்தைப் பெற்ருல் அது தன்னைத் தானே வளர்த்துக்கொள்ளும் நிலையை அடைவதைக் காட்டக் கூடியதாகும் என்பது ரோஸ்டோவின் கருத்து. ரோஸ்டோவின் இத்தகைய கருத்து மிகவும் குறுகிய கருத்துடன் விளக்கப்படக் கூடாது. இந்த நிலையைக்காட்டிலும் குறைவான முதலீட்டு விகிதத்தைக் கொண்டிருக்கும் பொருளாதாரம் மிக இழிநிலையில் இருந்துகொண்டிருக்கும் என்றும், இந் நிலையை அடைந்தவுடன் எல்லா விதமான முக்கிய மாற்றங்களும் தோன்றிவிடுகின்றன என்றும் கருதுவது நிச்சயம் தவருனதாகும். மென்மேலும் அதிக முதலீட்டு விகிதத்தைப் பெறுவதற்கு உதவி செய்யக்கூடிய

வருமான அதிகரிப்பு விகிதத்தை உறுதி செய்வதற்கு ஏற்ற வண்ணம் அதிகமான விகிதமாக இருக்கிறது என்பதே இக் குறைந்த பட்ச முதலீட்டு விகிதத்தைப் பெறுவதில் உள்ள சிறப்புத்தன்மை யாகும். இப்போதுள்ள வளர்ச்சிபெற்றுள்ள நாடுகளில் எழும்பு நிலைக்கு (தரையிலிருந்து உயரச் செல்லும் நிலைக்கு) முன்பிருந்த காலம்வரை செல்வதற்கான புள்ளி விவரங்கள் கிடைக்காத காரணத்தால், இப்போது குறைந்த முதலீட்டு விகிதத்தைப் பெற்றுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள் எழும்புநிலையைப் பெறவேண்டுமானுல் அவற்றின் முதலீட்டு விகிதம் எந்த அளவுக்கு உயர்த்தப்பட வேண்டும் என்பதைப்பற்றி எந்த விதமான உறுதி யான அறிக்கையும் கொடுப்பது முடியாது. ரோஸ்டோவ் கருத்தை 19ஆம் நூற்றுண்டின் இறுதியிலான அல்லது 4 பத் தாண்டுக்காலங்களில் சுவீடனிலும், கனடாவிலும் இருந்த முதலீட்டுப் புள்ளி விவரங்களின் அடிப்படையில் விளக்குகிருர். இருப்பினும், வளர்ச்சியடைந்த மேலே நாடுகளில் பெறப் பட்டிருக்கும் நாட்டு வருமானத்தில் 10%-12% விகிதத்திற்குச் சமமான அல்லது அதைக் காட்டிலும் அதிகமான விகிதத்தை இப்போதுள்ள ஒரு சில குறைந்த வளர்ச்சியடைந்த நாடுகள் பெற்றிருப்பதை நாம் காண்கிருேம். ஒரு சில தென் அமெரிக்க நாடுகளில் நிகர நாட்டு விளைவின் பங்கு என்ற அளவில் முதலீட்டு விகிதமானது 1950ஐச் சேர்ந்த தொடக்க ஆண்டுகளில் 16%ஐக் காட்டிலும் மிக அதிகமானதாக இருந்தது. 1956-57 முதல் 1959-60 வரை மொத்த முதலீடு பர்மாவில் 18.7%ஆக இருந்தது. 1952-59-ல் சீனுவில் (தைவானில்) இந்த அளவு 22·1%ஆக இருந்தது. 1931-39-ல் சப்பானின் வளர்ச்சி விகிதம் மிக அதிக அளவில் இருந்தபோது இந்த விகிதம் சராசரியாக 16%—20% இருந்தது. உண்மையாகப் பார்த்தால், வருமானத்தை அதிகரிப்பதற்கும், சேமிப்பை உயர்த்து வதற்கும், மூலதனத் திரட்சியை அதிகரிப்பதற்கும் குறிப்பிட்ட அளவிலான முதலீட்டு விகிதம் எந்த அளவுக்கு உதவி செய்யும் என்பது, முதலீட்டின் திறனையும், அதாவது மூலதன—விளைவு விகிதத்தையும், மக்கள் பெருக்க விகிதத்தையும் பொறுத்திருக் கிறது. ஆனுல்,இப்போது வளர்ச்சி பெற்றுள்ள நாடுகள் அவற்றின் தொடக்க நிலைகளில் இருந்தபோது பெற்றிருந்த பொருளாதாரம், பொருளாதாரமற்ற நிலைகளிலிருந்து வேறுபட்டதாக, இப் போதிருக்கும் குறைந்த வருமான நாடுகளிலுள்ள நிலைகள் உள்ளன. இக் காரணத்தால், தன்னைத்தானே வளர்த்துக்கொள்ளும் நிலையை உறுதி செய்வதற்கானதொரு முதலீட்டுநிலைபற்றிய உறுதியான கருத்தினை மேற்கொள்வது கடினமானது. மேலே நாடுகளில் 19ஆம் நூற்றுண்டில் தனியார் தொழில் முயற்சியினுல் பொருளாதார முன்னேற்றம் கொண்டுவரப்பட்டது. ஒருசில

பொறிசெய் பண்டங்களின் அதிகரித்த உற்பத்தியும், தலைமை ஏற்றுச் செல்லத்தக்க ஒரு சில துறைகளின் தோற்றமும் மற்றத் தொழில்களை நிர்மாணிப்பதற்கும் முன்னேற்றுவதற்கும் உதவி செய்தன. ஆனால், குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தின் இயல்பு மாறுபட்டதாக இருக்கிறது. இந் நாடுகளில் மிக அதிகமான தொடக்கநிலை மூலதனச் செலவை உட்கொண்டிருக்கும் சமுதாயப் பின்னமைப்புகளின் மீதும் பொருளாதாரப் பின்னமைப்புகளின் மீதும் கனரகத் தொழில்களின் மீதும் தொடக்க நிலைகளில் முதலீடுகள் மேற்கொள்ளப்பட வேண்டியிருக்கிறது. மேலும், 19ஆம் நூற்றுண்டில் மேலை நாடுகளில் இருந்த மக்கள்பெருக்க விகிதத்தைக்காட்டிலும் மிக அதிக அளவிலான மக்கள்பெருக்க விகிதம் இந் நாடுகளில் நிலவுகின்றது. இக் காரணங்களால் ரோஸ்டோவின் சுட்டிக் காட்டப்பட்ட குறைந்த பட்ச விகிதம் அதிக அளவுக்கு அதிகரிக்கப்பட வேண்டியிருக்கிறது. இப்போதுள்ள குறைந்த வளர்ச்சியுடைய நாடொன்று தன்னைத்தானே வளர்த்துக்கொள்ளத்தக்க தொரு நிலையை அடைவதற்கு நிகர நாட்டு விளைவில் 15%—18% வரையிலான நிகர முதலீட்டு விகிதத்தைப் பெறவேண்டுமெனப் பொதுவாகக் குறிப்பிடலாம்.

இத்தகைய நோக்கிலிருந்து பார்க்கும்போது, கடந்த சில ஆண்டுகளில் இந்தியாவில் பெறப்பட்டிருக்கும் வெற்றியானது மனநிறைவைத் தரத்தக்கதாக இல்லை. 1960—61 விலைகளிலான இந்தியாவின் நாட்டு வருமானம் முதல் திட்டத்தின் தொடக்கத்தில் 102.4 பில்லியன் அளவிலிருந்து 1955—56-ல் ரூ 121.3 பில்லியனாகவும், 1960–61-ல் ரூ. 145·0 பில்லியனாகவும் அதிகரித்தது.[1] 1950–51 முதல் 1960-61 வரையிலான பத்தாண்டுக் காலங்களைக் கொண்டுள்ள இரண்டு ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் நாட்டு வருமானம் 42% அளவுக்கு அதிகரித்தது. ஆனால் இப் பத்தாண்டுகளில் மக்கள்தொகை 21விழுக்காட்டுஅளவுக்கு அதிகரித்திருந்த காரணத்தால் தனிநபர் வருமானத்தில் தோன்றிய முன்னேற்றம் மிகக் குறைவானதாகவே இருந்தது. தனிநபர் வருமானம், 1950–51–ல் ரூ.284–லிருந்து 1855–56–ல் ரூ.1306 ஆகவும், 1960–61–ல் ரூ.330 ஆகவும் அதிகரித்தது. அதாவது, தனிநபர் வருமானம் 16% அளவுக்கே அதிகரித்திருக்கிறது. 1950-60 ஆண்டுகளில் நாட்டுவருமானத்திலும், தனிநபர் வருமானத்திலும், இந்தியாவில் பெறப்பட்டுள்ள ஆண்டுதோறுமான கூட்டு

[1] 1961-62-க்கான நடப்பு விலையிலான நாட்டு வருமானம் ரூ.146·3 பில்லியன் என மதிப்பிடப்பட்டுள்ளது. 1960 61-க்கான மறுபரிசீலனை செய்யப்பட்ட மதிப்பு ரூ. 146·6 பில்லியனாகும்.

அதிகரிப்பு விகிதம் மற்றப் பல குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில் பெறப்பட்டுள்ளதைக் காட்டிலும் மிகக் குறைவாகவே இருக்கிறது.

1950-51 முதல் 1960-61 வரையிலான பத்தாண்டுகளில் இந்தியாவில் பெறப்பட்டுள்ள தனிநபர் வருமான அதிகரிப்பு விகிதம் சப்பானில் பெறப்பட்ட தனிநபர் வருமான அதிகரிப்புக்கு மிகக் குறைவான அளவில் இருக்கிறது. என்பதோடு, பர்மா, பிலிப்பைன்ஸ், தாய்லாந்து போன்ற பிற குறைந்த வளர்ச்சியுடைய நடுகளில் பெறப்பட்ட அளவுகளைக் காட்டிலும்கூடக் குறைவாக இருக்கிறது.

தனிநபர் வருமானம் குறைவாக இருந்ததற்கு ஏற்ப, சேமிப்பு நிலையும், முதலீட்டு நிலையும் அதிக அளவில் அதிகரிக்கத் தவறிவிட்டன. முதல் திட்டத்தில் ஐந்தாண்டுகளின் சேமிப்பு 5% அளவிலிருந்து 7% அளவுக்கே அதிகரித்தது. இரண்டாம் திட்டத்தின் இறுதியில் 8·5% அளவுக்கே இது அதிகரித்தது. இந்த அளவானது எதிர்பார்க்கப்பட்ட அளவைக் காட்டிலும் 3% அளவு குறைவானதாகும். மைய அரசு, மாநில அரசு ஆகியவற்றின் மொத்த வரி வருமானம் நாட்டு வருமானத்தில் 7% அளவாக 1950-51-ல் இருந்தது. இது 1960-61-ல் 9% ஆகவே அதிகரித்தது. இரண்டாம் திட்ட இறுதியில் முதலீடு 11% அளவாக இருக்க வேண்டும் என்ற இலக்கு அடையப்பட்டது என்றாலும் கூட, நாட்டு வருமானத்தில் 3% என்ற அளவுக்குப் பேரளவிலான அயல்நாட்டு உதவி இல்லாவிட்டால் இவ் வெற்றியைப் பெற்றிருக்க முடியாது. முதலீட்டுத் திறனில் சீரழிவும், செல்வம் படைத்த பிரிவினர் பெற்ற அதிகரித்த வருமானத்தில் பெரும் பகுதியைத் திரட்டுவதற்கு அரசு தவறியதும் சேமிப்பு குறைவாக இருந்ததற்கு ஒரு வகையில் காரணங்களாகும். முதல்திட்டத்தின் போது மேற்கொள்ளப்பட்ட முதலீடு எந்த அளவுக்கு வருமான அதிகரிப்பைத் தோற்றுவித்ததோ அந்த அளவைவிடக் குறைவான அளவிலேயே இரண்டாம் திட்டக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட முதலீடு வருமான அதிகரிப்பைத் தோற்றுவித்தது. 1951-56 ஆகிய ஆண்டுகளில் மூலதனம், விளைவு விகிதம் 3:1 என்றிருக்கும் என எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், இவ் வாண்டுகளில் பெறப்பட்ட அதிக அளவிலான வேளாண்மை உற்பத்தியும், இருக்கக்கூடிய சக்தியை மிக நல்ல முறையில் பயன்படுத்தியதும் மூலதன—விளைவு விகிதத்தை 2 : 1 எனக் குறைத்துவிட்டன. இதற்கு மாறாக, இரண்டாம் திட்டத்தில் எதிர்பார்க்கப்பட்ட மூலதன—விளைவு விகிதம் 2·3 : 1 என்றிருந்தபோது, உண்மையாகப்

பெறப்பட்ட விகிதம் அதிகமானதாக இருந்தது (3·3 : 1). இதை வேறொரு நோக்கில் பார்க்கும்போது, முதல் திட்டத்தோடு ஒப்பிடும்போது இரண்டாம் திட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட முதலீடு இரண்டு மடங்காக இருந்தது. முதலீட்டு விகிதம் முதல் திட்டத்தில் நாட்டு வருமானத்தில் 7% அளவிலிருந்து இரண்டாம் திட்டத்தில் 11% அளவாக அதிகரித்தது. ஆனால், நாட்டு வருமானத்தில் பிற்காலத்தில் தோன்றிய அதிகரிப்பு முதல் திட்டக்காலத்தில் தோன்றிய அதிகரிப்பைவிட அதிகமானதாக இருந்தது. முதல் திட்டக்காலத்தில் 18%ஆகவும், இரண்டாம் திட்டக் காலத்தில் 20%ஆகவும் இருந்தது. இது விளைவின் மூலதன விகித அதிகரிப்பின் பெரும் பகுதிக்குக் காரணமாக இருந்தது, இரண்டாம் திட்டக் காலத்தில் கனரகத் தொழில்களுக்கு அதிகமான சிறப்பிடம் கொடுக்கப்பட்டது. இருப்பினும், முதலீட்டுச் செலவில் கழிவுகளும், போக்கின்போது தோன்றிய மூலதனத்தை அதிக அளவில் பயன்படுத்திக்கொள்ளத் தவறியதும் கருத்தில் கொள்ளப் பட்டால்தான் வருமானத்தைத் தோற்றுவிப்பதில் மனநிறைவைத் தராத விளைவுகளை நன்கு புரிந்துகொள்ளமுடியும். செல்வம் ஒருசில செல்வர்களிடமே அதிகரித்தது; வருமானத்தின் பெரும்பகுதி சென்றடைந்தது என்ற நோக்கில் பார்க்கும்போது சேமிப்பின் அளவு ஏமாற்றம் தரத்தக்கதாக இருக்கிறது. வருமானத்தைப் பெறும் குறிப்பிட்ட பிரிவைச் சேர்ந்த அதிக வருமானமுடையவர்களின் சேமிப்பு உள்ளாற்றல் முழு அளவில் பயன்படுத்தப்படத் தவறிவிட்டதா என்றதொரு வினாவும் எழுகிறது. நிலையான வருமானம் பெறக்கூடிய இடைத்தர வகுப்பையும் சேர்த்துப் பொதுமக்களின் நுகர்வுநிலை அதிக அளவுக்கு அதிகரிக்காமலிருந்த போது, ஒரு சில செல்வமிகு பிரிவினர்களிடையே முனைப்பான நுகர்வு இருந்திருக்கின்றதென்பதே உண்மை நிலையாகும். பண வீக்கத்தினால் தோற்றுவிக்கப்பட்ட வருமான மறுபகிர்வினால் செல்வர்கள் அதிக வருமானத்தைப் பெற்றிருக்கிறார்கள். இத்தகைய மக்களின் அதிகரித்த தேவையைக் காட்டுவதாகவே, குளிர்சாதனப் பெட்டிகள் (Refrigerators,) வெப்பநிலையைச் சமப்படுத்தும் கருவிகள் (Air Conditiners), மோட்டார் சாதனங்கள், தரம் மிகுந்த மரச்சாமான்கள், இரும்புச் சாமான்கள் மின்சாரச் சாதனங்கள் மற்றும் இவை போன்றவற்றின் அதிகரித்த உற்பத்தி அமைந்திருக்கிறதே தவிர, பொதுமக்களின் பொதுவான வாழ்க்கைத் தரத்தின் உயர்வைக் காட்டுவதாக இல்லை. சேமிக்கப்பட்டு முதலீடு செய்யப்பட்டிருக்கக் கூடிய மூலவளங்களின் பெரும்பகுதி இவ்வாறு வீணாக்கப்பட்டிருக்கிறது. சுருங்கக் கூறின், இந்தியாவில் முதல் பத்தாண்டுக் காலத்தில்மேற் கொள்ளப்பட்ட திட்டமிட்ட முன்னேற்றமானது

விரைவான பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான நிலையைக் காட்டிலும் மிகமிகக் குறைவான அளவுக்கே சேமிப்பு விடுமுதலை அதிகரித்திருக்கிறது.

திட்டமிட்ட முன்னேற்றம், பொருளாதார வளர்ச்சிக்குச் சாதகமான சமுதாய நோக்கங்களில் மாற்றங்களைக் கொண்டு வந்திருக்கின்றதா என்பது அடுத்துக் கவனிக்கப்பட வேண்டிய வினுவாகும்.

மனித நோக்கங்களிலும், நடவடிக்கைகளிலும், குறிக்கோள் களிலும் தோன்றக்கூடிய மாற்றங்களையும், சமுதாயப் பழக்க வழக்கங்களிலும், வாழ்க்கை முறைகளிலும் தோன்றும் மாற்றங் களையும் பற்றிய பகுத்தாய்வு பொருளாதார இயலின் எல்லைக்கு அப்பாற்பட்டதாகும். இத்தகைய மாற்றங்களைப்பற்றிய எண்ணிக் கையின் அடிப்படையிலான மதிப்பீடு மிகவும் கடினமானதாகும் இருப்பினும். இந்தியாவின் திட்டமிட்ட பொருளாதார முன்னேற் றத்தின் பெரும் நோக்கங்களில் ஒன்முக இவ் வழியில் பெறப்படும் முன்னேற்றம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சமுதாய நலத் திட்டங்களின்மீது பொது முதலீட்டை மேற்கொள்வதன் மூலமாகவும், சமநிலையிலிருக்கக்கூடிய வரிக் கொள்கை, பொதுச் செலவுக் கொள்கை ஆகியவற்றின் மூலமாகவும் இது பெறப்பட வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இக் காரணங் களால் எந்த அளவிற்கு மாற்றங்கள் தோன்றியிருக்கின்றன என்பதையும் அரசாங்கச் செலவுகள் எந்த அளவு இவ் வழிகளில் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன என்பதையும் வைத்துக்கொண்டு மறைமுகமாக மதிப்பிட்டுவிடமுடியும். முன்னேற்றத் திட்டங் களை வெற்றியுடன் நிறைவேற்றுதல் என்பது, குறிப்பாக, சமுதாயத்தின் உடனடியான தேவைகளை நிறைவேற்றத்தக்க திட்டங்களை வெற்றியுடன் நிறைவேற்றுதல் என்பது, பொது மக்களின் ஆதரவையும் கூட்டுறவையும் பெறுவதற்கு மிகவும் உதவக்கூடியதாக இருக்கிறது. முன்னேற்றச் செலவுகள் தெளி வான விளைவுகளை எந்த அளவுக்குக் காட்டத் தவறுகின்றனவோ அந்த அளவுக்கு மக்களின் பேரார்வத்தைத் தூண்டிவிடத் தவறி விடுகின்றன என்று எதிர்மறையிலும் ...தைக் குறிப்பிடமுடியும்.

இந்திய நாடு மிகவும் பரந்ததொரு நாடு. அதனுடைய மக்கள்தொகை மிக அதிகமாக இருக்கிறது. அதுமட்டுமல் லாமல் மக்கள்தொகை மிகவேகமாக அதிகரித்துக்கொண்டும் வருகிறது. எழுத்தறிவு பெற்றவர்களின் எண்ணிக்கை குறைவாக இருக்கிறது. பொதுநலத்தின் தரமும் கல்வியின் தரமும் மிகக் குறைவாக இருக்கின்றன. சமுதாயத்தில் பலவிதமான தடைகள்

காணப்படுகின்றன. அவை மக்களின் பழக்க வழக்கங்கள் பொருளாதார முன்னேற்றத்திற்கு பாதகமானவைகளாகக் காணப்படுகின்றன. பொதுமக்களிடையே ஓர் ஏமாற்ற உணர்ச்சி இருக்கிறது. இக் காரணிகள் எல்லாவற்றின் அடிப் படையிலும் பார்க்கும்போது முதல் இரண்டு திட்டங்களிலும் சமுதாயப் பணிகளுக்காகவும், பொதுநலத் திட்டங்களுக்காகவும் செலவிடப்பட்ட பொதுச்செலவு அளவு போதுமானதாக இல்லை எனக் கருதப்படலாம். முதல் திட்டத்தின் மொத்தச் செலவில் சமுதாயப் பணிகளுக்கான அளவு 23%ஆக இருந்தது. இரண்டாம் திட்டத்தில் இதன் அளவு 18% ஆகவும், மூன்றும் திட்டத்தில் 17.4% ஆகவும் குறைந்தது. 1951-61ஆகிய ஆண்டுகளில் இத் தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட மொத்த உண்மையான செலவு திட்டமிட்ட அளவுக்குக் குறைவாகவே இருந்தது என்பதையும் நினைவில்கொள்ள வேண்டும். 1958–ல் இரண்டாம் திட்டத்தின் மொத்தச் செலவு கிடைக்கத்தக்க மூலவளங்களுக்கேற்பத் திருத்தியமைக்கப்பட்ட இரண்டாம் திட்ட மறுமதிப்பீட்டில் சமுதாயப் பணிகளின்மீதும் போக்குவரத்தின்மீதுமான செலவு குறைக்கப்பட்டது. பத்தாண்டுகளாக மேற்கொள்ளப்பட்ட திட்ட மிட்ட முயற்சிகள். 6 முதல் 11 வயதுவரை உள்ளவர்களில் பள்ளிகளில் சேர்க்கப்பட்ட சிறுவர்களின் எண்ணிக்கைக்கான விழுக்காட்டு அளவை42.6–லிருந்து 61.1ஆக மட்டுமே உயர்த்தியது. 1957-59ல் மேற்கொள்ளப்பட்ட அகில இந்தியக் கல்வி உசாய்வு (All India Educational Survey) நாடுமுழுவதற்குமாகப் பார்க்கும் போது 1957ஆம் ஆண்டில் கிராமப் பகுதியில் வாழும் மக்களில் 27% அளவு மக்களும் நகரப்பகுதிகளில் வாழும் மக்களில் 71% மக்களும், எந்தவிதமான பள்ளிகளிலும் பயிலவில்லை என்பதை சுட்டிக் காட்டியது.[1]

1971-ல் மக்கள் தொகைக் கணக்கின்படி இந்திய நாட்டின் மக்கள்தொகை 547 மில்லியனாக இருக்கிறது. சராசரியாக எதிர் பார்க்கப்படும் வாழ்நாளின் அளவு பிறக்கும் 1000 குழந்தைகளில் 88 குழந்தைகள் அவைகளின் ஓராண்டு நிறைவைப் பெறுவதற்கு முன்பே இறந்துவிடுகின்றன. இத்தகைய நிலைகளையுடைய இந்திய நாட்டில் மருத்துவ மனைகள், மருந்தகங்கள் ஆகியவற்றின் எண்ணிக்கை உயர்ந்திருக்கிறது என்ற நிலையும், படுக்கைகளின் எண்ணிக்கை அதிகரித்திருக்கிறது என்ற நிலையும் இருந்தால் மட்டும் அவை போதாகும். இரண்டாம் திட்டத்தில் பொதுத் துறையில் மேற்கொள்ளப்பட்டுள்ள பேரளவுத் தொழில்கள்

1, Third Five Year Plan, Planning Commission, Government of India, New Delhi, 1961 p. 574.

நடுத்தரத் தொழில்கள் ஆகியவற்றின் செலவில் மூன்றில் ஒரு பங்கிலிருந்து ஐந்தில் ஒரு பங்குவரையில் கல்விக்காகச் செலவிடப்பட்ட தொகை இருந்திருப்பதைப்பற்றிப் பாவர் குறிப்பிடுகிறுர். மேலும் பொதுத்துறையில் மேற்கொள்ளப்பட்டிருக்கும் 3 உருக்காலைகள் ஒவ்வொன்றிலும் செலவிடப்பட்ட தொகையில் ஏறத்தாழ பாதி அளவாகத் தொடக்கநிலைக் கல்விக்கான மொத்தச் செலவு இருந்ததென்ற உண்மையைக் கூறியும் அவர் நமது கவனத்தைக் கவர்கிறுர்.[1]

முதல் திட்டத்தில் இருந்ததைக்காட்டிலும் இரண்டாம் திட்டத்தில் தொடக்கநிலைக் கல்விக்கான செலவு ரூ. 20 மில்லியன் அளவு அதிகரித்தது. முதல் திட்டத்தில் ரூ. 850 மில்லியனிலிருந்து ரூ. 870 மில்லியனுக அதிகரித்தது. பயிற்சி பெற்ற ஆசிரியர்களின் பற்றுக் குறையும், அவர்களின் மிகக் குறைவான வருமானமும் சமுதாயத்தில் அவர்களுக்கு இருந்த தாழ்வான நிலையும், கல்வி வசதிகளைக் கொடுப்பதில் மேற்கொள்ளப்பட்ட அதிதீவிரமான சிக்கன நடவடிக்கைகளும் பொருளாதாரத்தின் மிக முக்கியமான இத்துறை நிராகரிக்கப்பட்டதை ஐயமறத்தெளிவுபடுத்துகின்றன. தொழில் வளர்ச்சியின் தொடக்கநிலைகளில் கல்வித்துறையில் மேற்கொள்ளப்பட்ட முதலீட்டிற்கு மிகுதியான சிறப்பிடம் சப்பானில் கொடுக்கப்பட்டதும், இந்தியாவில் இருந்ததைக் காட்டிலும் தாழ்ந்த நிலையில் தொடங்கி இந்தியாவைவிட மிக உயர்ந்த நிலைக்குச் சீனு சென்றுவிட்டதென்ற உண்மையும் இந்தியாவிற்கு முக்கியமான பாடமாகும்.[2] இந்தியாவில் சமுதாய மறுமலர்ச்சிக்கான திட்டங்கள் மிகவும் தீவிரமான கவனத்திற்குரியவையாக :இருந்தபோதிலும், சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் (Community Development Projeets) மனநிறைவைத் தரத்தக்க வகையில் நிறைவேற்றப்படாததும், நிலச் சீர் திருத்தங்கள் தடைப்பட்டுத் தடைப்பட்டு நிறைவேற்றப்படக் கூடிய தன்மையைப் பெற்றிருப்பதும் சமுதாய மறுமலர்ச்சிக்கான திட்டங்கள் தீவிரமான கவனத்தைப் பெறவில்லை என்பதைச் சுட்டிக் காட்டக்கூடிய மற்றக் காரணிகளாக விளங்குகின்றன.

திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தில் பொது மக்களின் ஒத்துழைப்பானது திட்டத்தின் இலக்குகளை அடை

1 Bauer, P. T., *Indian Economic Policy and Development*, Allen *and* Unwin, London, 1961, pp. 51-52.

2 Nurkse, R. "Reflections on India's Development plan, *Quarterly Journal of Economics* May, 1957, p. 198 and Malenbaum, Wilfred India and China-Contrasts in Development Performance, *The American Economic Review*, June, 1959, p. 297.

வதைப் பொறுத்து அமைகிறது. அதே நேரத்தில் திட்டத்தின் இலக்குகளை அடைவதென்பது திட்டமிடுதலின் திறமையைப் பொறுத்துஅமைகிறது. இங்கும்கூட. இந்தியாவின்திட்டங்கள் நிறைவேற்றப்பட்ட முறையானது பொதுமக்களின் நம்பிக்கையைத் தூண்டிவிடத்தக்கதாகவோ, பொதுமக்களின் ஆதரவைத் திரட்டத்தக்கதாகவோ இல்லை. வேலையற்றிருப்போரின் எண்ணிக்கையைக் குறைக்கமுடியாமல் போனதும், உணவில் தன்னிறைவு நிலையை அடையமுடியாமல் போனதும் மிகவும் குறிப்பிடத்தக்க தோல்விகளாகும். ஒரு சில முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றியதும், ஒரு சில தொழில்களைத் தொடங்கியதும் வேலை வாய்ப்பை அதிகரித்தது என்றாலும்கூட, வேலையற்றிருப்போரின் அளவும் உடனிகழ்வாகப் பெருகிவிட்டது. 1975-76ஆம் ஆண்டு வாக்கில் மொத்த உழைப்பாளரில் வேளாண்மைத்துறை உழைப்பாளர்களின் அளவு 70%-60% அளவுக்குக் குறையும் என்று இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் மதிப்பிட்டது. ஆனால், இது நிறைவேற வேண்டுமானால் சுரங்கங்களிலும், தொழிற்சாலை நிறுவனங்களிலும் பணிபுரிவோரின் எண்ணிக்கை ஏறத்தாழ நான்கு மடங்காக அதிகரிக்கப்படவேண்டும்.[1]

இரண்டாம் திட்டத்தின் தொடக்கத்தில் ஏற்கனவே வேலையற்றிருப்போரின் எண்ணிக்கை 5·3 மில்லியனாக இருக்கும் என மதிப்பிடப்பட்டது. 1956 முதல் 1961ஆம் ஆண்டுவரை தோன்றக்கூடிய உழைப்பாளர்களின் எண்ணிக்கை ஏறத்தாழ 10 மில்லியன் அளவில் இருக்கும் என்றும் மதிப்பிடப்பட்டது. இவ் வைந்தாண்டுக் காலத்தில் மேற்கொள்ளப்படும் வளர்ச்சித் திட்டங்களின்மூலம் புதிதாகத் தோன்றும் 10மில்லியன் நபர்களுக்கும் வேலைவாய்ப்பு அளித்துவிடலாம் என்றும் மதிப்பிடப்பட்டது. ஆனால் உண்மையில் இரண்டாம் திட்டக் காலத்தில் 6·5 மில்லியன் நபர்களுக்கே வேலைவாய்ப்பு அளிக்கப்பட்டது. அதன் காரணமாக இரண்டாம் திட்ட முடிவில் வேலையற்றிருப்போரின் எண்ணிக்கை 9 மில்லியனாக அதிகரிக்க வேண்டும். மக்கள் பெருக்கத்தின் காரணமாக மூன்றாம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மட்டும் உழைப்பாளர்களின் எண்ணிக்கை 17 மில்லியன் அதிகரிக்குமென மதிப்பிடப்பட்டுள்ளது. ஏற்கெனவே வேலையிற்றிருப்பவருடன் இவர்களையும் சேர்த்தால் மூன்றாம்ஐந்தாண்டுத்திட்டக்காலத்தில் கொடுக்கப்பட வேண்டிய மொத்த வேலை வாய்ப்புகளின் எண்ணிக்கை ஏறத்தாழ

[1] *Sceond Five-Year Plan*, Planning Commission, Government of India New Delhi, 1956, p. 14.

26மில்லியனாக இருக்கும். ஆனால் மூன்றாம் திட்டம் 15மில்லியன் நபர்களுக்கே புதிய வேலைவாய்ப்புகளைத் தோற்றுவிக்க முடியும் என்று குறிப்பிடுகிறது. இதைக் கருத்தில் கொண்டு பார்த்தால் இரண்டாம் திட்டத்தின் தொடக்கநிலையில் இருந்ததைவிட மூன்றாம் திட்டத்தின் இறுதிக் காலத்தில் நாட்டில் உள்ள வேலையற்றிருப்போரின் எண்ணிக்கை ஏறத்தாழ 50%–க்கும் அதிகமாக இருக்கும். இச் சிக்கலோடு ஏறத்தாழ 15 முதல் 18மில்லியன் குறைந்த வேலை பார்க்கும் நபர்களின் (Underemployed) சிக்கலும் சேர்க்கப்படவேண்டும். பணிபுரிய முன்வருபவர்களின் அதிகரிப்பு விகிதம், வேலை வாய்ப்பைத் தோற்றுவிக்கும் அதிகரிப்பு விகிதத்தைக் காட்டிலும் அதிகமானதாக இருக்கிறது. இந் நிலை ஏற்கெனவேயுள்ள சம நிலைமையின்மையை (சமத்துவமின்மையை) மேலும் மோசமாக்கும் என்பதோடு, முதலீட்டின் பருமனையும் திறனையும் பாதித்து விடும்.[1] திட்ட அதிகாரிகளும், அரசினரும் இச் சிக்கலின் தீவிரத் தன்மையை நன்கு உணர்ந்தேயிருக்கிறார்கள். ஆனால் இச் சிக்கலின் தீவிரத் தன்மையைக் குறைப்பதற்கு மேற்கொள்ள படும் நடவடிக்கைகள் மன நிறைவைத் தரத்தக்கவையாக இல்லை. நேரிடையான உதவித் தொகைகளைக் கொடுப்பது, மறைமுகமான உதவித் தொகைகளைக் கொடுப்பது, கோட்டா முறையைக் கொண்டுவருவது தொழிற்சாலைப் பண்டங்களைத் தடைசெய்வதன் மூலமாகவும் கைத்தறி, எண்ணெய் பிழிதல் போன்ற சிறு நுகர்வோர் பண்டத் தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் ஆதரிக்கும் திட்டமானது தொழிற்சாலைத் தொழிலை மிகவும் பாதிக்கும் என்றும், ஒருபுறச் சாய்வுள்ள இயல்புகளைத் தோற்றுவித்துவிடும் என்றும் மறைமுக வேலையின்மையை வேளாண்மைத் துறையிலிருந்து குடிசைத் தொழில் துறைகளுக்கு மாற்றுவதற்கே உதவுமென்றும் 1957-ல் பேராசிரியர் நர்க்சு குறிப்பிட்டிருக்கிறார்.[2] வேலை வாய்ப்புகளை நாடு முழுவதிலும் பரவலாக்குவதற்காகப் பின்தங்கிய பகுதிகளுக்குச் சிறப்பிடம் கொடுக்கப்படுகிறது. இது போக்குவரத்து, வீட்டுவசதி, மற்றும் பிற துணை முதலீடுகளை அவசியமாக்கி மொத்த முதலீட்டின் திறனைக் குறைத்துவிடுகிறது. உணவில் தன்னிறைவு நிலையைப் பெறுவதற்குத் தேவையான அளவுக்கு உள்நாட்டு உணவு

1 Balogh, T., Equity and Efficiency: the Problem of Optimal Investment in a Frame work of Underdevelopment, *Oxford Economic Papers*, February, 1962, p.p. 26-27.

2 Nurkse, R., 'Reflections on India's Economic Development Plan, *Quarterly Journal of Economics*, May, 1957, p.p, 194-95.

